

# திருடன் மணியன்பிள்ளை

ஜி. ஆர். இந்துகோபன்

குளச்சல் மு. யூசுப்

மொழிபெயர்ப்பாளர்

குமரி மாவட்டக் கடற்கரை நகரான குளச்சலில் பிறந்த இவருக்குத் தாய்மொழி தமிழ்.

இவரது மொழிபெயர்ப்பில் வெளிவந்த ‘மீஸான் கற்கள்’, ‘மஹ்ஷர் பெருவெளி’, ‘ஒரு தந்தையின் நினைவுக் குறிப்புகள்’, ‘அழியா முத்திரை’, ‘நளினி ஜமீலா’, ‘அடூர் கோபாலகிருஷ்ணன் - இடம் பொருள் கலை’, ‘உலகப் புகழ்பெற்ற மூக்கு’, ‘பால்யகால சகி’, ‘சப்தங்கள்’, ‘பர்ஸா’, ‘சின்ன அரயத்தி’, ‘பாத்துமாவின் ஆடு’, ‘ஆமென்’, ‘ஆனைவாரியும் பொன்குருசும்’ ஆகிய நூல்களைக் காலச்சுவடு பதிப்பகம் வெளியிட்டிருக்கிறது.

அனுபவப் பதிவு, சுயசரிதை, நாவல், சிறுகதைத் தொகுப்பு உள்ளிட்ட, இருபத்தைந்திற்கும் மேற்பட்ட நூல்களை மலையாளத்திலிருந்து தமிழாயாக்கம் செய்துள்ளார்.

செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்திற்காக ‘நாலடியார்’ அற நூலினை மலையாளத்தில் மொழியாக்கம் செய்துள்ளார்.

மின்னஞ்சல் : kulachalsmyoosuf@gmail.com

திருடன் மணியன்பிள்ளை | தன்வரலாறு | ஆசிரியர்: ஜி.ஆர். இந்துகோபன், மலையாளத்திலிருந்து தமிழில்: குளச்சல் மு. யூசுப் | © ஜி.ஆர். இந்துகோபன், கே. மணியன்பிள்ளை | மூன்றாம் பதிப்பு: 2015 | வெளியீடு: காலச்சுவடு பப்ளிகேஷன்ஸ் (பி) லிட்., 669, கே. பி. சாலை, நாகர்கோவில் 629001

tiruTan maNiyanpiLLai | Author: G.R. Indugopan, Translated from Malayalam by: Colachel Mu. Yoosu | © G.R. Indugopan and K. Manianpillai. Originally Published by D.C. Books in Malayalam | Language: Tamil | Third Edition: 2015 | Published by: Kalachuvadu Publications Pvt Ltd, 669 , K B Salai, Nagercoil, 629001

ISBN: 978-93-84641-92-4

இந்தப் புத்தகம் முழுவதும் நிரவிக்கிடப்பவை, என்னுடைய வாழ்க்கையைக் கீறிப்பிளந்து உப்பிட்டு உலர வைத்தெடுத்த வேதனைகள். இதிலுள்ள சதைப்பற்றையும் உப்புச்சுவையையும் யாராவது ருசித்துவிட்டு மொத்தமாகவோ கொஞ்சமாகவோ சமைத்து, வெளிப்படையாகவோ மறைமுகமாகவோ விற்கலாமென்று நினைத்தால், தயவுசெய்து மன்னிக்கவும். அனுமதியில்லாமல் இந்தத் திருடனிடமிருந்து திருட வேண்டாம். அப்படியான முயற்சியில் ஈடுபடுபட்டால், ஏற்கெனவே செய்வதற்கு எதுவுமில்லாமல் நான் வெட்டியாக உட்கார்ந்திருக்கும் இந்தச் சூழலில் தேவையற்ற சட்டச் சிக்கல்களை எதிர்கொள்ள வேண்டியதாகிவிடும். கள்ளனின் நூலைக் களவாடக் கூடாதென்று மீண்டும் தெரிவித்துக்கொள்கிறேன்.

கே. மணியன்பிள்ளை

நான் இந்நூலை எழுதுவதை ஆச்சரியத்துடன் கவனித்துக்கொண்டிருந்த, இதை எழுவதினிடையே இந்த உலகத்தை விட்டுப் பிரிந்துபோன என் தந்தை வாழத்துங்கல் மூன்றாம் படிஞ்ஞுற்றை டி. கோபிநாத பிள்ளை அவர்களின் நினைவுக்கு இந்நூலை சமர்ப்பணம் செய்கிறேன்.

கே. மணியன்பிள்ளையின் மனைவி மெகருன்னிஸாவின் மரணம்தான் இந்தப் புத்தகத்தில் சொல்லப்படுகிற எல்லா சாகசங்களுக்கும் வாழ்க்கைக்கும் அடியோட்டமாக இருக்கும் வேதனையின் நீர்ச்சுழி. அந்தப் பெண்மணியை நான் இந்நேரத்தில் ஆதரவுடன் நினைத்துக்கொள்கிறேன்.

ஜி.ஆர். இந்துகோபன்,
முதுநிலை உதவியாசிரியர்
மலையாள மனோரமா நாளிதழ்

# பொருளடக்கம்

மொழிபெயர்ப்பாளர் முன்னுரை

1. நான்

2. அம்மா

3. கல்யாண வீடு

4. பசி

5. சைக்கிள் வித்தை

6. கொலையுண்ட அப்பா

7. களத்தூர் மீனாட்சி

8. திருநெல்வேலி

9. தற்கொலை முயற்சி

10. தவளக்குழியாரின் திருவசனம்

11. காணாமல் போனேன் . . .

12. கள்ளுக்கடை

13. கடையும் கலாட்டாவும்

14. திருடன்

15. நூற்றுப்பன்னிரெண்டு பவுன் ஐயாயிரம் ரூபாய்

16. அகழ்வோனைக் காத்தருள் புரிந்த காதை

17. கற்புடை தனம் கனல் போன்றது

18. களவுக்கலை

19. வழக்கறிஞர் மணியன்பிள்ளை

20. பரவசத் திருட்டு

21. தொண்ணூற்றாறு பவுன் இருபத்து இரண்டாயிரம் ரூபாய்

22. முதல் திருட்டு

23. இரவுகள்

24. மீண்டும் கள்ள டிரெயின்

25. பெண்கள்

26. குருநாதன் மணியன்பிள்ளை

27. வீடுகட்டுவோர் கவனத்திற்கு . . .

28. டாக்டர்கள் கவனத்திற்கு. . .

29. டாக்டர் பிள்ளை

30. வைக்கம் முகம்மது பஷீரைத் தேடி

31. பரப்பனங்காடி

32. செண்பகச்சுவட்டில் திருடன்

33. கடவுச்சீட்டுத் திருடன்

34. இரட்டைத் திருடன்

35. சாரும் திருடனும்

36. கள்ளன் காசர்கோடு

37. துப்பாக்கி

38. மணவறைத் திருடன்

39. சூரியன்

40. கோட்டயம் கான்

41. மயக்கு சுகு

42. ஓட்டம் பிள்ளை

43. தேங்காய் பாபு

44. மைசூர் (வரலாற்றுச் சுருக்கம்)

45. தொடக்கம்

46. புகையிலை விவசாயம்

47. பணக்காரன்

48. கௌரி

49. ஆபரேஷன் செட்டியார்

50. பருத்திக் குத்தகை

51. சலிம்பாஷாவின் சனிக்கிரகம்

52. வீழ்ந்த நாள்

53. மைசூரின் மிச்சம்

54. சித்தப்பிரமை

55. பெண்கள்

56. மெகருன்னிஸா

57. நாட்குறிப்பில்

58. காபரே

59. சேச்சி

60. ஜானகி

61. உதவாக்கரைப் பணம்

62. காதல் உணர்வுகள்

63. மீண்டும் மாலதி

64. கடத்தல்

65. பத்மினி

66. சிறைச்சாலைகள்

67. முதியவர்

68. வார்டன்

69. சுயபாலின்பம்

70. போலீஸ்

71. அரை போலீஸ்

72. பிளேடு

73. உதவி ஆய்வாளருக்கு விருப்ப ஓய்வு

74. திருடனும் போலீசும் ஒரே வீட்டில்

75. பின்தொடரும் போலீஸ்

76. அமானுஷ்யங்கள்

77. ஆபரேஷன் கிழவன்

78. கள்ள நோட்டு குட்டன்பிள்ளையும் மணிராவும்

79. ஆச்சரியம்

80. கஞ்சா ஆயில்

81. தோளில் விழுந்த கை

82. நடிகர் மணியன்பிள்ளை

83. சேரூர் சி.பி.

84. சென்னை

85. மதம்

86. பெந்தெகொஸ்தே

87. மீண்டும் மைசூருக்கு

88. விதி எழுதும் சுயசரிதை

# முன்னுரை

சாகசங்கள் நிறைந்த இந்த சுயசரிதை மொழியாக்கத்தின்போது அகராதிகளையோ குறிப்புதவி நூல்களையோ அடிக்கடி பார்க்க வேண்டிய தேவை ஏற்படவில்லை. ஏனெனில், இது, கல்விப்புலமோ, கோட்பாட்டு சுயமயக்கங்களோ இல்லாத வாழ்க்கையைப் பேசுகிறது. இதில் தடுமாற்றங்களுக்கான எந்தவித வாய்ப்புகளுமில்லை. விளிம்புநிலை மனித வாழ்க்கைக்குள் மொழிசார்ந்த சிடுக்குகளுக்கு இடம் கிடையாது. கலங்கிப் புரள்கிற காட்டாற்றின் பாய்ச்சல் இதன் தலைமைப் பண்பு.

விளிம்புநிலை மக்கள் மற்றும் சமூகப் போராளிகள் குறித்த அனுபவப் பதிவுகளாக நான் மொழிபெயர்த்து வெளிவந்த ஒரு பாலியல் தொழிலாளியின் சுயசரிதை; ஒரு தந்தையின் நினைவுக் குறிப்புகள்; நக்சலைட் அஜிதாவின் சுயசரிதை; நான் வாழ்ந்தேன் என்பதற்கான சாட்சி; பெண் காவலர் வினயாவின் வாழ்க்கைக் குறிப்புகள்; ஆதிவாசிகளின் வாழ்க்கையைப் பேசும் நாவலான 'சின்ன அரயத்தி' வரிசையில் திருடன் மணியன்பிள்ளையின் சுயசரிதையும் காலச்சுவடு வெளியீடாகத் தமிழில் வெளிவருகிறது.

இதற்குத் துணை நின்ற, இந்நூலின் மலையாள ஆசிரியரும் மலையாள மனோரமா நாளிதழின் முதுநிலை உதவியாசிரியருமான திரு. ஜி.ஆர். இந்துகோபன், மலையாள வாரிக இதழின் உதவி ஆசிரியரான திரு. கீதார்த்தா, மற்றும் காலச்சுவடு தோழியர், பதிப்பாசிரியர் கண்ணன் மற்றும் நண்பர்கள் அனைவருக்கும் நன்றி.

இந்த சுயசரிதையை எழுதி முடித்துக் கடைசியாக ஒருமுறை திருத்திய பிறகு சிலவற்றைச் சரிபார்ப்பதற்காக நண்பர் மணியன்பிள்ளையைத் தொடர்பு கொள்ளும்போதெல்லாம் அவர் தனது கைபேசியை முடக்கிவைத்திருப்பதாகப் பதில் வந்தது. கடைசியில் இதன் ஆசிரியர் இந்துகோபனைத் தொடர்பு கொண்டபோது: மணியன்பிள்ளை மீண்டும் கைது செய்யப்பட்டுச் சிறையில் இருப்பதாகச் சொன்னார். இரண்டு வருடங்களுக்கு முன் நடந்த ஒரு திருட்டில் அவரது விரல்

அடையாளங்கள் இருந்ததாகக் கைது செய்யப்பட்டிருக்கிறார். நண்பர் மணியன்பிள்ளை இதிலிருந்து மீண்டுவந்து, இனிவரும் காலங்களில் அவர் விரும்பிய அமைதியானதொரு வாழ்க்கை அமைய வாழ்த்துக்களுடன்:

நாகர்கோவில் குளச்சல் மு. யூசுப்

5, அக்டோபர் 2013

## 1 - நான்

என்னைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்வதானால், நானாகிய மணியன்பிள்ளை, 1950இல் கொல்லம் இரவிபுரத்தில் பிறந்தேன். கொல்லத்திலிருந்து நாலு கிலோ மீட்டர் தொலைவில் தெற்கே தேசிய நெடுஞ்சாலை, பள்ளிவாசல் சந்திப்பிலிருந்து வலது புறமாக இரண்டு கிலோமீட்டர் நடந்தால் வாழத்துங்கல் ஊர். இங்கே பிரபலமானதும் பழைமையானதுமான கொடுந்தற குடும்பத்தின் கிளையில் பிறந்தேன். வாழத்துங்கல் பகுதியிலுள்ள பெரும்பாலான இடங்களும் இந்தக் கிளையைச் சேர்ந்தவர்களுடைய சொத்துக்கள் என்பதாகச் சொல்லிக் கேள்விப்பட்டிருக்கிறேன். கோடிக்கணக்கான ஆஸ்திக்குச் சொந்தக்காரர்களான உறவினர்களின் முன் என்னுடைய கொடியையும் சின்னத்தையும் நிலைநாட்டியிருந்திருக்கலாம். கொடித்தறவாடு[1] என்ற பெயர்தான் கொடுந்தற என்று மருவியிருக்க வேண்டும். அல்லது கொடுமையான தறவாடாகவும் இருந்திருக்கலாம். இரண்டிலுமே அதிகாரத்தின் கூறுகள் உள்ளன. குடும்பம் வளர்ந்தும் பிரிவுகளாகவும் ஆனபோது அதில் ஒருவன் திருடனாக மாறினான். அவன் தனது பெருமையைத் திருடுவதில் நிலைநாட்டினான்.

ஆறாம் வகுப்பு படிக்கும்போது அப்பாவின் மரணம். படிப்பு நின்றது. அக்கம்பக்கங்களிலுள்ள வயல்களில் வேலை பார்ப்பவர்களுக்குக் கையாளாக மூன்று நான்கு வருடங்கள் வேலை செய்தேன். நாற்று நடுவது; உரம் சுமப்பது; இலை தழைகளைப் பிரித்து உரமாக்குவது போன்ற வேலைகள். இதனிடையே உறவுப்பெண் ஒருத்தியின் தூண்டுதலின்பேரால் மற்றொரு உறவினருடைய குழந்தையின் கழுத்தில் கிடந்த செயினை உருவினேன். மனதின் குற்றவாசனை முதன்முதலாக வெளியே தெரியவந்தது இந்தச் சம்பவத்தில்தான். அவ்வப்போது பழைய கஞ்சி ஊற்றுகிற சொந்தத்திலுள்ள ஒரு அத்தைதான் இதைச் செய்யச் சொன்னவள்.

செயினுடன் சென்றதும் பயந்துபோன அவள் தான் என்னை முதன் முதலாகத் திருடன் என்றாள். '67 -'68களில், பதினேழாவது வயதில், சீட்டு

விளையாட்டு; கூடாநட்புகள். வஞ்சிக்கோயில் உண்டியலிலிருந்து பணத்தைத் திருட முயற்சி செய்து பாக்கெட்டிலிருந்த முப்பது காசை ஆதாரமாக வைத்து உள்ளே போனேன். சப் - ஜெயிலில் வைத்து யாரோ ஒருவர் சொன்னார்: கோர்ட்டில் பதினெட்டு வயது முடிந்துவிட்டதென்று சொல்லிவிடு. இல்லையென்றால் சீர்திருத்தப் பள்ளிக்கு அனுப்பி விடுவார்கள். பிறகு உன் வாழ்க்கையே பாழாகி விடும். இந்த வழக்கில் மூன்றோ நான்கோ மாதத் தண்டனைதான் கிடைக்கும். பிறகு நீ வெளியே வந்துவிடலாம். அப்படியாக, மூன்று மாதங்கள் கொல்லம் சப் - ஜெயிலில். பிறகு, ஏதாவது வேலை செய்து பிழைத்துக்கொள்ளலாம் என்றால், சமூகத்தின் 'குட் புக்'கிலிருந்து வெளியே விழுந்து விட்டேன். ஆகவே, நடக்கவில்லை.

பிறகு, கொல்லம் நகரில் வேலையில்லாமல் திரியும்போது சப் -ஜெயிலில் கூட இருந்த சில ரவுடிகள், தங்களை யோக்கியர்களாகக் காட்டிக்கொள்ள என்னைப் பிடித்துக் கொடுத்தார்கள். திரும்பவும் ஜெயிலுக்கு வந்தேன். உறவினர் ஒருவரைக் கத்தியால் குத்திய வழக்கில் நிரந்தரக் குற்றவாளிகளை அடைக்கும் திருச்சூர், விய்யூர் மத்திய சிறையிலடைபட்டேன். இது இருபதாவது வயதில். இது ஒரு பல்கலைக்கழகம். இங்கிருந்து 'பட்டம்' வாங்கிய பிறகுதான் முறையாகத் திருட ஆரம்பித்தேன். முதலில் எல்லாம் சின்னச்சின்ன வழக்குகள்தான். பிறகு, பிரம்மாண்டமான வழக்குகள். இருநூறுக்கும் அதிகமாக நடந்த திருட்டு முயற்சிகளில் ஐம்பதுக்கும் அதிகமானவை வெற்றிகரமாக முடிந்தன. ஆறேழு முயற்சிகளில் எதிர்பார்த்த தொகை கிடைத்தது. மூன்று நான்கு திருட்டுகளில் ஏறத்தாழ நூறு பவுன் நகைகளும் ரொக்கமும். ஒரே நாளிரவில் மூன்று முயற்சிகள் நடந்து மூன்றிலும் தோல்வியடைந்த அனுபவமும் உண்டு. ஒரு மதில் சுவரில் ஏறிக்குதித்துத் திருடுவதற்கான முயற்சியில் ஈடுபடும்போது ஒருவர் விழித்துக்கொண்டு கூச்சல் போட ஆரம்பித்தார். ஆட்கள் திருடனைப் பிடிக்க ஓடினார்கள். இதிலொரு வீட்டில் நுழைந்து திருடினேன்.

பெரிய தண்டனைகள்: திருவனந்தபுரத்தில் கண்ணுமூலையில் வைத்துப் பிடிபட்டுப் பல்வேறு வழக்குகளில் இரண்டரை வருட காலம் தண்டிக்கப்பட்டேன்; பிறகு பரோலில் வெளியே வந்து தலைமறைவாகி மைசூருக்குச் சென்றேன். 1983இல் மைசூரில் கைதாகும்போது கோடீஸ்வரனாக இருந்தேன். அப்போது ஜனதா கட்சியால் சட்டமன்றத் தொகுதிக்குத் தேர்வு செய்யப்பட்டிருந்த வேட்பாளர் நான். அன்று பிடிபடாமலிருந்தால் திருடர்கள் ஒற்றுமையுடன் வாழும் அரசியல்

அரங்கில் நானுமொரு 'விலைமதிக்க' முடியாத அன்பளிப்பாகி இருப்பேன். அந்தத் தேர்தலில் ஜனதா கட்சிதான் அதிகாரத்திற்கு வந்தது. 'சிறுபான்மை' சமூகம் என்பதால் அமைச்சரவையிலும் வாய்ப்புக் கிடைக்கும் என்று பேசிக்கொண்டார்கள். கைது நடந்த கொஞ்ச நாட்களுக்குப் பிறகு மீண்டும் தலைமறைவானேன். இம்முறை தமிழ்நாட்டின் துவரங்குறிச்சியில் அவதரித்தேன். இங்கே மர வியாபாரியும் கௌரவமுமான ஒரு குடும்பஸ்தன். பயணங்கள் எல்லாம் குடும்ப சமேதராகவே நிகழும். இப்படி, துவரங்குறிச்சியில் இலட்சாதிபதியாக வாழும்போது 1988இல் மீண்டும் கைது. '90இல் ஜாமீனில் வெளியே வந்தேன். மீண்டும் 1995வரையிலும் ஜெயில். இரண்டு வருட நன்னடத்தை ஜாமீனின் பேரில் விடுதலை. பிறகு திருவனந்தபுரத்தில் மகனுடைய பாதுகாப்பில் வாழ்கிறேன். ஒரு கோவிலில் நடந்த திருட்டு வழக்கில் மணியன்பிள்ளையின் விரலடையாளம் இருந்ததைக் காவல்துறை கண்டுபிடித்ததாகச் சொல்லி 2006 நவம்பரில் கைது செய்யப்பட்டு ஒன்பது வழக்குகள் தலையில் கட்டப்பட்டன. அதில் ஒரு சில வழக்குகள் முடிந்து இப்போது வெளியில்தான் இருக்கிறேன். மிச்ச வழக்குகள் நடந்து கொண்டிருக்கின்றன.

என்னுடைய சுயசரிதை, தவறான முன்னுதாரணங்களுக்கு வழிகோலுவதாக ஒருபோதும் அமைந்துவிடக்கூடாது; குற்ற வாசனையுள்ள எந்த இளைஞனும் இதை வாசித்துச் சீரழிந்துவிடக் கூடாது. சில இடங்களில் சாகசங்களையும் துணிச்சல்களையும் பற்றிய விவரணைகள் இருக்கும். இதையெல்லாம் வாசிக்கும்போது உருவாகும் சுவாரஸ்யங்கள் அந்தச் சம்பவங்கள் நடக்கும்போது இருந்ததில்லை. ஒவ்வொரு சூழ்நிலையிலும் செய்து வைத்தவை கொடூரமான தீவினைகள். தீயுடன் விளையாடுவது போன்ற ஆபத்துகள். திசை தவறிப் போகவிருக்கும் ஒரு மனிதனுக்கு இது தற்காலிக வழிகாட்டியாகவும் அமையலாம். இந்தப் புத்தகத்திலும் அபூர்வமாகச் சில நல்லவை சிதறிக் கிடக்கக்கூடும். கவனம் இதில்தான் பதிய வேண்டும். அந்தந்தச் சூழ்நிலைக்கேற்ப, போலீஸ்காரர்கள் நல்லவர்களாகவும் மோசமானவர்களாகவும் இந்தப் புத்தகத்தில் மதிப்பிடப்பட்டிருக்கிறார்கள். எந்தவொரு விஷயத்திலும் நன்மை தீமைகளுண்டு. சமூகத்தின் எந்த ஒரு பிரிவினரையோ தனிநபர்களையோ வேண்டுமென்றே இதில் மோசமாகச் சித்திரிக்க முயற்சி செய்யவில்லை. அது நியாயமுமில்லை.

ஏதாவது காரணத்தால் தூண்டப்பட்டு இதனை முயற்சித்துப் பார்க்க நினைப்பவர்களுக்கு ஒரு வார்த்தை: ஒருவனுடைய பொருளை மற்றொருவன் திருடிய அனுபவத்தை வாசித்துப் பார்ப்பதில் சுவாரஸ்யமிருக்கிறது. பறிகொடுத்த பொருள் நம்முடையதாக இருக்கும்போதுதான் திருடியவன் அயோக்கியனாகத் தெரிகிறான். இல்லாத பட்சத்தில் அவன் சாகசக்காரன். பதினேழு வயதுமுதல் இன்றுவரையிலான என்னுடைய வாழ்க்கை முழுவதுமே பயத்தாலும் பாதுகாப்பின்மையாலும் உழன்றுகொண்டிருக்கிறது. இளமையை என்னால் அனுபவிக்க இயலவில்லை. மனைவியுடன் ஒருபோதுமே மனஅமைதியாகப் படுத்துத் தூங்கியதுமில்லை. குற்றவாளிகளாலும் குற்றவாசனையுள்ளவர்களாலும் நிம்மதியாகத் தூங்க முடியாது. சிறைச்சாலைகளும் போலீசாரின் சித்திரவதைகளும் தந்த வியாதிகள் . . . இப்போதும் நீதிமன்றம் . . . வழக்கு . . . வறுமை . . . நீராலானது நீரால் அழியும். அழிந்தே போகும். இன்றில்லாவிட்டால் நாளையாவது. கணநேர சுகங்களுக்காகக் காலம் முழுவதையும் நரகமாக்கிவிட்ட ஒரு வாழ்க்கை இது. என்னுடைய குழந்தை வளர்கிற, முக்கியமான கட்டங்களில் நான் ஜெயிலில் கிடந்தேன். அவன்மீது அன்பு காட்ட என்னால் இயலாமல் போனது. அவனுக்கு நல்ல கல்வியைப் புகட்டவும் இயலவில்லை. என்னால் சீரழிந்தது, என்னுடைய வாழ்க்கை மட்டுமல்ல. மனைவியின் இளமையான காலகட்டங்களிலும் எனக்கு ஜெயில் வாழ்க்கைதான். அவளுக்குத் துணையாக இருப்பதற்கு மாறாக அவளைப் பாதுகாப்பற்ற சூழலுக்குள் தள்ளினேன். வாழ வழியில்லாமலும் வழக்குகளை எதிர்கொள்வதற்காகவும் வளைகுடா நாட்டில் ஆயா வேலை பார்க்கச் சென்ற என் மனைவி, ஏதோ ஒரு அரபியின் உதைபட்டு இறந்தாள். மொத்தத்தில் எனக்குக் கிடைத்ததென்ன? குரைக்கிறேன்; இருமுகிறேன். அவ்வளவுதான். இந்தப் புத்தகத்தை உங்களால் சுவாரஸ்யமாக வாசிக்க முடியும். காரணம், நீங்கள் சட்டத்தின் கண்களில் பாதுகாப்பாக இருக்கிறீர்கள். ஆகவேதான் சில இடங்களில் உங்களால் சிரிக்கவும் முடிகிறது. என்னுடைய கண்ணீரின் உப்பு கலந்த ஒரு கடல் இந்தப் புத்தகம். செய்து தீர்த்த பாவங்களின் ஆகமொத்த சாரம். ஒரு திருடனை ஊரிலோ வீட்டிலோ யாருமே வேலைக்கு வைத்துக்கொள்ள மாட்டார்கள். மறுவாழ்வு என்பதே கிடையாது. கொல்லம் ஈஸ்ட் போலீஸ் ஸ்டேஷனில் போலீசாரின் எடுபிடியாக, அவர்களது நல்லது கெட்டதுகளில் பங்குவகித்த அந்த ஐந்து வருட காலம்தான் மனஅமைதியுடன் வாழ்ந்த குறுகிய கால அளவு. மனதில் அப்போதுதான் மகிழ்ச்சியிருந்தது. அந்த ஸ்டேஷனில் எல்லாமே நான்தான். சட்ட விரோதச் செயல்களைச் செய்துகொண்டிருந்த நான் சட்டத்திற்கு

ஒத்தாசையாக இருந்தேன். இப்படியான பிராயச்சித்தங்கள் மூலம் மனதைச் சுத்தம் செய்யவும் முயற்சித்ததுண்டு. காவல் நிலையத்தில் திருடனாக இல்லாமல் அரை போலீஸ்காரனாக இருக்கும்போதான அந்தப் பாதுகாப்பும் மதிப்பும் எழுத்தில் விவரிக்க முடியாதவை. எல்லாச் செலவுகளும்போக மூவாயிரம் ரூபாய் கிடைக்கும். உயர் போலீஸ் அதிகாரிகள் கலந்துகொள்ளும் கூட்டங்களில் தேனீர் கொண்டு செல்லும் பாக்கியமும் இந்தத் திருடனுக்குக் கிடைத்தது. இப்படியான ஒரு வாழ்க்கையைத்தான் என் மனைவி எதிர் பார்த்திருந்தாள். ஒவ்வொரு குற்றங்களின் போதும் இதுதான் உங்களுடைய கடைசிக் குற்றமாக இருக்க வேண்டும் என்பாள். இந்த அறிவுரையை அவள் உயிரோடிருந்த காலம்வரை நான் கடைப்பிடிக்கவில்லை. நான் கௌரவமாக வாழ்ந்த இந்த ஐந்து வருடமும் என்னுடனிருந்திருக்க வேண்டிய அவள் உயிருடனில்லை. இறந்து மண்மூடிப்போயிருந்தாலும் அவளது ஆன்மா அப்போது மகிழ்ச்சியடைந்திருக்கும். போலீஸ் ஸ்டேஷன் உதவியாளர் பணியிலிருந்து வந்த பிறகு மீண்டும் வறுமை. மீண்டும் சிறைவாசம்.

இந்த அளவிலான ஈனத் தொழில்செய்து பிழைத்தபோதும் கூட என்மீது பரிவு காட்டிய, வெறுத்தொதுக்கி விடாத நிறைய பேரிருந்தார்கள். இவர்களில் அதிகமும் போலீஸ்காரர்களும் அதிகாரிகளும்தான். இந்தப் புத்தகத்தில் சிலரைப் பற்றிய விமர்சனங்களிருந்தாலும் இவர்களில் பலருக்கு நான் நன்றிக்கடன் பட்டிருக்கிறேன். பிறகு, சட்டமும் நீதிமன்ற நடைமுறைகளும் படித்து, என்னுடைய வழக்குக்கு நானே வக்கீலாக ஆரம்பித்தேன். இதற்கான அருகதை இல்லையென்றாலும் மாண்புமிகு நீதிமன்றம் கருணை காட்டி அனுமதித்தது. இன்று நினைத்துப் பார்க்கும்போது நாற்பது வருட சிறைத் தண்டனையாவது கிடைத்திருக்கக்கூடும். திருந்தி வாழ்வதற்கான பல்வேறு வாய்ப்புகளை நீதிமன்றம் அளித்தது. நீதி பீடத்திலிருந்த சிலர்மீதும் இந்நூலில் விமர்சனங்களுள்ளன. போலீஸ்காரர்களைப் பற்றிச் சொன்னதுதான் இதற்கும் பொருந்தும்.

திருடனின் வாழ்க்கை வெறும் புகை மூட்டம் மட்டும்தான். ஏதாவதொரு வடிவத்தில் இதில் சாகசத்தன்மை இருப்பதாக உற்சாகப்படும் இளைஞர்கள் திரும்பவும் இந்தப் பக்கத்தை எடுத்து வாசித்துப் பார்க்க வேண்டும். இந்தப் புத்தகம் ஒரு போதுமே சமூகத் தீமையாக அமைந்து விடக்கூடாதென்பது எனது பணிவான விருப்பம். நம்பிக்கை மோசடி செய்த நிறைய போலீஸ்காரர்களைப் பற்றியும் பிற மனிதர்களைப் பற்றியும் இதில் சொல்லியிருக்கிறேன். ஆனாலும் ஒரு திருடனுக்கு

அருகதையில்லாத அளவுக்கு நிறையவே அன்பும் ஆதரவும் எனக்குக் கிடைத்தன. தடம் புரண்டுவிடுமென்பது தவறான செயல்களின் இயல்பு. வாழ்க்கை அப்போது கொடிய வலி தருவதாக மாறும்.

---

1. தறவாடு - குடும்பம்

## 2 - அம்மா

அம்மாவைப் பார்க்க வேண்டும். பார்த்தே ஆக வேண்டும். எல்லாரையும் போல் என்னால் எளிதில் முடியாத காரியமிது. பரோலிலிறங்கி தலைமறைவாகத் திரியும் திருடன் என்பதற்காக அம்மாவைப் பார்க்காமல் முடியுமா? கோழிக்கோட்டில் பஸ் ஏறி கொல்லத்தில் வந்திறங்கினேன். இரவில் நீண்ட நேரத்திற்குப் பிறகு ரயில்வே ரோடு வழியாக நடந்து, புத்தன் சந்தை ரயில்வே கேட் பக்கம் வந்தேன். இதுதான் எல்லை. இடது பக்கமாக ஒரு நூறு மீட்டர் நடந்தால் எங்கள் வீடு. அந்த கேட்டும் ஷெட்டும் பல்வேறு சந்தர்ப்பங்களில் மனதிற்கொரு ஆறுதல்போல் தோன்றியதுண்டு. இந்த உலகமே அமைதியாகத் தூங்கிக்கொண்டிருக்கும்போது நான் மட்டும் தூங்காமலிருக்கிறேன். நான் ஏன் இப்படியானேன்? வீட்டிலிருந்து வெளியே வந்து அந்தக் கூடத்தைப் பார்க்கும்போதெல்லாம் நான் தனியாக இல்லையென்பதுபோல் தோன்றும். அந்த ரயில்வே கிராசிங் ஷெட்டில் அமர்ந்திருக்கும் அனைவரும் எனக்குத் தெரிந்தவர்கள்.

எப்போதுமே இரவு நெடுநேரத்திற்குப் பிறகுதான் நான் அவர்கள் முன்வந்து நிற்பேன். தூங்காமலோ அல்லது அரைத் தூக்கத்திலோ யாராவது ஒருவர் அங்கே இருப்பார். தண்டவாளத்தில் கற்கள் நெரியும்போது அவர் திடுக்கிட்டு விழித்துக்கொள்வார். அவரை அறியாமலேயே கைகள் விளக்கைத் தேடும். தண்டவாளத்தின் சிறு அசைவுகள்கூட அவருக்கு ரயில் வருவதைப் போன்ற உணர்வைத்தான் ஏற்படுத்தும். நான் வெளியே நின்று சத்தமாகச் சொல்வேன்.

"எழுந்திருக்க வேண்டாண்ணா, நான் மணியன் தான்."

"ஓ . . . நீதானா?"

சில சமயங்களில் அவர்களில் யாராவது பேச்சுக் கொடுக்கும் மூடிலிருப்பார்கள். பயப்பட வேண்டிய தேவை அவர்களுக்குக் கிடையாது. டியூட்டியிலிருக்கிறார்கள். இந்த நேரத்தில் ஊர்க்காரர்கள் யாரும் வரமாட்டார்கள். இதில் பயப்படுகிற சிலரும் இருந்தார்கள்:

"இந்த ராத்திரி நேரத்தில நீ எங்கூட இருக்கிறதை யாராவது பாத்தா, திருட்டுப் பொருளை நானும் சேந்துப் பங்கு போடுறதா நினைச்சுடப் போறாங்க, போயிடு மணியா, நான் குடிக்கிற கஞ்சியில கரப்பான் பூச்சி விழுந்திடப்போவுது" என்று தமாஷாகச் சொல்வார்கள். ஆனால், நடுச்சாமத்தில் தூங்காமலிருப்பவர்கள் எனும் பரஸ்பரப் புரிதல் சார்ந்து எங்களிடையே நட்பிருந்தது. அதை அவர்கள் வெளிப்படுத்தவும் செய்வார்கள். "இன்னிக்கு எங்கடா வேலை" என்பதுபோன்ற கேணத்தனமான எந்தக் கேள்விகளையும் இதுவரை அவர்கள் கேட்டதில்லை.

என்னுடைய அம்மாவைப் பற்றியல்லவா சொல்ல வந்தேன்? திருடிய பணத்திலிருந்து ஒரு நாலணாவுக்கானப் பொருளைக்கூட என்னுடைய குடும்பம் தின்றதில்லை. எவ்வளவு கஷ்டம் வந்தாலும் சரி, உன் பணம் எனக்குத் தேவையில்லையென்று சொல்லிவிடுவாள். ஆனால், நான் பிடிபட்டு விட்டதாகத் தெரிந்தால் உடனே அழ ஆரம்பித்துவிடுவாள். தீர்வை செலுத்திய ரசீதுடன் என்னை ஜாமீனில் எடுப்பதற்காகப் பல தடவை நீதிமன்றத்திற்கு வந்திருக்கிறாள். உறவினர்களும் நண்பர்களுமெல்லாம் அம்மாவைக் குறை சொல்வார்கள். "இப்படியொரு தறுதலைப் புள்ளைக்காக நீங்க காசை வீணாக்காதீங்க" என்று. "என்ன செய்யிறது? என் வயித்தில வந்துப் பொறந்துட்டானே?" என்று சொல்லிவிட்டு அம்மா கொல்லம் ஆட்சியர் அலுவலக வளாகத்திலுள்ள நீதிமன்றத்திற்கு வருவாள்.

அன்றும் இதுபோல் நீதிமன்றத்திற்கு வந்து நீண்ட நேரமாகக் காத்திருந்தாள். அம்மாவைக் கண்டதும் நான் திட்டினேன்: "நீ எதுக்காக இப்படி என் பின்னாலேயே திரியறே? நான் ஜெயிலுக்கே போறேன். எனக்காக யாருமே சிரமப்பட வேணாம்." வேட்டி முந்தானையால் கண்களைத் துடைத்தபடி நின்றுகொண்டிருந்த அம்மா, ஜாமீனுக்காகக் கூண்டிலேறினாள்.

நீதிபதி கேட்டார்: "இவர் உன்னோட பெற்ற தாய்தான்னு எப்படி நம்பறது?" இயல்பான நடுக்கம் என்னைத் தொற்றிக் கொண்டது. நான் சொன்னேன்: "நிறைய திருடனுங்க டூப்ளிகேட் அம்மாவைக் கூட்டிட்டு வருவானுங்களாக இருக்கலாம். வேற யாரையாவது அப்பா அம்மான்னு சொல்லிக்கிற வழக்கம் எனக்குக் கிடையாது."

திருடன்களை மிகவும் அவமரியாதையாகவும் அற்ப ஜந்துக்களாகவும் கருதுகிற ஒரு நீதிபதி இவர். ஊழல் பேர் வழியும்கூட! கொல்லம்

ஒய்எம்சிஏவில் தங்கியிருந்தார். பணிக்கு வருவதும் போவதுமெல்லாம் காவல்துறை வாகனத்தில்தான். ஆகவே, போலீஸ்காரர்களின் ஒவ்வொரு விஷயத்திற்கும் உறுதுணையாக இருப்பார். போலீஸ்காரர்கள் சொல்வதைத்தான் நம்பவும் செய்வார். அவர்கள் சொல்வதுதான் சட்டம். சாட்சிகளைக் கூட மிகவும் அலட்சியமாகத்தான் நடத்துவார்.

நீதிபதி சொன்னார்: "நிறைய திருடனுங்க இப்படி அம்மா அப்பான்னு சொல்லி வேற யாரையாவது அழைச்சிட்டு வர்றது வழக்கம்தானே?"

நான் சொன்னேன்: "அப்படி பல அப்பன்மாரைக் கூட்டிட்டு வர்ற கதிகேடு எனக்கில்லை. கோர்ட்டு ஒருவேளை அப்படி நினைச்சிருக்கலாம்; அதுக்கு முன் அனுபவம்தான் காரணமாக இருக்க முடியும். அது என் குற்றம் கிடையாது."

நீதிமன்றம் அப்படியே ஸ்தம்பித்து விட்டது. நீதிபதிக்கு அடி விழுந்தது போலாகிவிட்டது. அப்போதுதான் சொன்னதன் முழு அர்த்தமும் எனக்குப் பிடிபட்டது. நீதிபதி அப்பா பெயர் தெரியாதவர் என்ற பொருள் அதில், தொனித்துவிட்டது. நான் அப்படியே நெளிந்து கொடுக்க ஆரம்பித்தேன். "இவ என் அம்மாவா இல்லையாங்குறதைக் கோர்ட்டே விசாரிச்சு முடிவு செய்துக்கலாம்னுதான் சொல்ல வந்தேன்" என்றெல்லாம் புரண்டு பார்த்தேன். ஆனால், நீதிமன்றத்தில் நிலவிய நிசப்தம் விலகவே இல்லை.

நான் சொன்னேன்: "மாண்புமிகு கோர்ட்டாருக்கு இதில ஏதாவது சந்தேகமிருந்தா எனக்கு ஜாமீன் தர வேண்டாம்; சாட்சிகளை விசாரிச்சி என்னோட வழக்கை சீக்கிரமாக முடிச்சுக் கொடுத்துட்டாப் போதும்."

நீதிபதி சொன்னார்: "போலீஸ் எழுதி வச்சிருக்குறதைப் பாத்தா அது அவ்வளவு சுலபமாத் தெரியல."

இதை என்னால் தாங்கிக்கொள்ளவே முடியவில்லை. "கோர்ட்டையும் போலீசையும் கனம் கோர்ட்டார் அவர்கள் ஒண்ணா நினைச்சிருக்கார். இல்லைன்னா போக வர போலீஸ் வேனை ஏற்பாடு செய்திருக்க மாட்டாரில்லையா?" என்றேன்.

ஆங்காங்கே சிரிப்புச் சத்தம் கேட்டது.

பிரதி கோபத்திலிருக்கிறார் என்று சொன்ன நீதிபதி அங்கிருந்த

போலீஸ்காரர்களைப் பார்த்து: "இவரோட கோபத்தைத் தீர்த்துத் திரும்பக் கூட்டிட்டு வாங்க" என்றார்.

என்னுடைய பொறுப்பைத் திரும்பப் பெற்றுக்கொண்ட போலீஸ்காரர்கள் வெஸ்ட் ஸ்டேஷனுக்குக் கொண்டுவந்து முகத்தில் ஆறேழு அடி ஓங்கி அடித்தார்கள். தேவையில்லாமல் வேலை வாங்கிவிட்டாயே என்று சொல்லியே அடித்தார்கள். அவர்களுடைய கோபமெல்லாம் வேலைப் பளுவை அதிகரித்தது தான்.

திரும்பவும் நீதிமன்றத்திற்கு அழைத்து வரப்பட்டபோது முகம் வீங்கியிருந்தது. நீதிபதியின் முகத்தில் மகிழ்ச்சி.

"பிரதியோட கோபதாபமெல்லாம் தீர்ந்துப் போயிருக்கும்னு நம்பறேன்" என்றார் நீதிபதி.

"உங்க அம்மாவோட . . . கணக்குல கொஞ்சம் மிச்சமிருக்குடா" என்றொரு மோசமான வார்த்தையை உரத்தக் குரலில் சொல்லி விட்டேன்.

மீண்டும் நிசப்தம். நீதிமன்ற அவமதிப்பிற்காக மூன்று மாதம் தண்டனை.

வழக்கை அன்று தள்ளி வைத்தாலும் பின்பு அவர் பழி வாங்கியே விட்டார். அந்த வழக்கில், யாருமே கேள்விப்படாத வகையில் பல பிரிவுகளில் சேர்த்து எனக்கு 11 வருட தண்டனை விதித்தார். ஒரு சிறு திருட்டு வழக்கிற்காக நீதிமன்றத்தின் எல்லா அதிகாரங்களையும் பயன்படுத்தி இவ்வளவு பெரிய தண்டனை. பிறகு உயர்நீதிமன்றத்தில் அப்பீல் செய்ததில் ஐந்து வருடங்களாகக் குறைக்கப்பட்டது. மூன்று வருடங்கள் சிறையில் கிடந்துவிட்டு பிறகு, நன்னடத்தை ஜாமீனில் வெளிவந்தேன்.

நீதிமன்றத்தின்மீதான எல்லா மாண்புகளையும் நினைவில் வைத்தேதான் இதையும் சொல்கிறேன். போலீஸ்காரர்களைப் போல், அதிகாரத்தை மிகத் தவறாகப் பயன்படுத்துகிற நீதிமான்களும் நம்மிடையில் இருக்கவே செய்கிறார்கள். நானே கடவுள் என்பதுபோல்தான் அவர்களில் சிலரது அதிகார மமதையுடனான தீர்ப்புகளும் இருக்கின்றன. இதற்குக் குறிப்பிட்ட சில காரணங்களுமுண்டு. இன்றைய காலகட்டத்தில் மிகக் குறைந்த எண்ணிக்கையிலான பெற்றோர்கள் மட்டுமே தங்களுடைய பிள்ளைகள் சட்டம் படிக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள். படித்துவிட்டு வந்த பிறகு தனக்கென அவர்கள் ஒரு முகவரியைக்

கண்டடைவதற்குப் பல வருடங்கள் தேவைப்படுகின்றன. மட்டுமல்ல, நியாயம் சார்ந்து மட்டுமே செயல்படுவது என்பது சட்டத் தொழிலைப் பொறுத்தவரைக்கும் பெரும்பாலும் இயலாத ஒன்று. இங்கே சாட்சியங்கள்தான் முக்கியம். அது உண்மையாக இருக்க வேண்டுமென்கிற அவசியம் கிடையாது. உண்மைகளை மூடிமறைத்துத் தடயங்கள் உருவாக்கப்படுகின்றன. உண்மையைச் சார்ந்து மட்டுமே நான் செயல்படுவேன் என்று உறுதியுடன் சொல்லும் ஒரு ஐந்து வழக்கறிஞர்களையாவது கேரளத்தில் பார்க்க முடியுமா? மட்டுமல்ல, கேரளத்தைப் பொறுத்தவரைக்கும் அரசியல்வாதிகளாக நினைப்பவர்களின் தொட்டில், சட்டக் கல்லூரிகள்தான். எல்லா விதமான அசிங்கங்களில் ஈடுபட்டும் காப்பியடித்தும்தான் இப்படி நிறைய பேர் வெளியே வருகிறார்கள். அரசியல்வாதியாக முடியவில்லையென்றால் வேறு வகையில் குறுக்கு வழிகளைப் பயன்படுத்துவார்கள். இப்படி அரசியல்வாதிகளின் ஆட்களாக இருப்பவர்கள் தான் வழக்கறிஞர்களில் குறிப்பிட்ட எண்ணிக்கையினரும். இவர்களது குணங்கள் ஒருபோதும் மாறப்போவதில்லை. அரசு வழக்கறிஞர் பதவிக்கும், வங்கிகளின், அரசியல் கட்சிகளின் வழக்கறிஞர் பொறுப்புக்கும், நீதிபதி பதவிக்கும் இவர்கள் மல்லுக்கட்டுவார்கள். தங்களுடைய செல்வாக்கால் சட்ட அங்கீகாரம் பெற்றுக்கொடுக்க இயலும் தனியார் சட்டக் கல்லூரிகள் கேரளத்தில் உண்டு. எளிதில் வழக்கறிஞர் பட்டம் கிடைப்பதற்கான ஏற்பாடுகள் கேரளத்திற்கு வெளியிலும் இருக்கின்றன. இப்படியாக, சமூகத்தின் நல்ல ஒரு தலைமுறையைக் கவர இயலாத, மனதில் மாசுபடிந்த கொஞ்சம்பேர் இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். இதில் சில நீதிபதிகளையும் உட்படுத்தலாம். கோட்டும் சூட்டும் அணிந்துவிட்டோம் என்பதற்காக பிறவிக்குணம் போய்விடுமா என்ன?

எந்த ஒரு நல்ல விஷயத்தினுள்ளும் விஷமிருக்கும் என்பதைத்தான் சொல்ல நினைக்கிறேன். சிறு விஷக்கிருமியாக இருந்தாலும் அது நீதித் துறையினுள் இருப்பது பெரும் கேட்டை விளைவிக்கும். இப்படியொரு புனிதமான தொழிலை மேற்கொள்பவர்களில் சிறு சதவிகித அயோக்கியர்களின் கூட்டத்தைச் சேர்ந்தவர்தான் முதலில் சொன்ன அந்த நீதிமானும். திருடுவது குற்றம்தான். ஆனால், இதில் 90 சதவிகிதத் திருட்டுகளும் கண்டுபிடிக்கப்பட்டு விடுகின்றன. கௌரவமாக வரி செலுத்தி வாழுகிற ஒரு பிரஜையைப்போல்தான் நாங்களும். சமூகம் தருகிற எல்லாத் தண்டனைகளையும் பெற்றுக்கொள்கிறோம். மனம் நிறைந்த பொய்மைகளையும் ரகசியங்களையும் ஆபாசங்களையும் சுமந்து திரிபவர்கள் எந்த விதிகர்த்தாக்களாக இருந்தாலும் சரி, அவர்களுக்குப்

பாடம் கற்றுக்கொடுப்பது தேவையான ஒன்று. தீமைகளின் அவதாரமாக உருவெடுத்திருக்கும் திருடன்களால் இந்த விஷயத்தில் ஏதேனும் செய்ய இயலும். முள்ளை முள்ளால் எடுக்க அவனால்தான் முடியும். அதாவது, ஒரு தீமையை மற்றொரு தீமையால் எதிர்கொள்வது. நேர்மையான செயல்பாடாக இதைக் கருத இயலாதுதான். ஆனால், இதில் ஒப்பீடுகள் தேவையற்றவை.

ஆக, இவருக்கு ஒரு பணி கொடுத்தாக வேண்டும். நீதிபதியின் வீட்டிற்குள்போய் ஒளிந்துகொண்டேன். ஒரு தடவையல்ல, பல தடவைகள். ஆனால், அது மிகவும் சிக்கலான ஒரு குடியிருப்புப் பகுதி. பிரச்சினைகளென்று வந்துவிட்டால் தப்பிப்பதற்கு ஒரே ஒரு வழிதான். அதுவும் செக்யூரிட்டியும் பந்தோபஸ்துமாக இருக்கும். ஆகவே, முயற்சியைக் கை விட்டேன். ஆனால், கோபம் மட்டும் தீரவே மாட்டேன் என்கிறது. கோபத்துடன் பாரில் உட்கார்ந்திருக்கும்போது தூறிப்பாக்கரன் வந்தான். கொல்லம் நகரில் சின்னச் சின்னத் திருட்டுகள், அடிதடிகள் போன்ற எல்லா அவலட்சணங்களுமுள்ள பெரிய மனிதன் இவன். புஜபல பராக்கிரமி. இவனுடைய பிடித்தமானப் பொழுதுபோக்கு, மரச்சீனிக்கிழங்கும் மீனும் தின்றுகொண்டே இருப்பது. பாக்கரன் எனும் இவன், தூறி எனும் துணைப்பெயர் பெற்றதற்கான காரணம், இவனது விசித்திரமான குணாதிசயம் தான். பத்துப் பதினைந்து பிளேட்டு மரச்சீனிக்கிழங்கைத் தின்றுவிட்டு, திருடச் செல்கிற வீட்டில் இயற்கை உபாதையைத் தீர்க்கும் அசிங்கமான சுபாவம் இவனிடமிருந்தது. இப்படி, வினோத மனநிலைகளுள்ள பலவகையான திருடன்கள் வாழ்கிறார்கள். திருடிய வீட்டின் குளியலறைக்குள் நுழைந்து நன்றாகக் குளித்து முடித்துப் புத்தாடைகள் அணிந்து சிகையலங்காரம் செய்து முகத்தில் பவுடரிட்டுப் பகட்டாக வெளியே இறங்குவது என்னுடைய வழக்கம். திருட்டுப் பொருட்களுடன் பயணத்தை மேற்கொள்ளும்போது வழியில் யாரும் சந்தேகப்படாமலிருக்கவும் இது உதவியாக இருந்திருக்கிறது. இதை அசிங்கமான வழக்கமாகக் கருத இடமில்லை. ஆகவே, இந்த ஊழல்பேர்வழியை எதிர்கொள்வதற்கு அசிங்கமான வழக்கமுள்ள பாக்கரனைப் பயன்படுத்துவதாக முடிவு செய்தேன்.

பாக்கரனை அழைத்து விஷயங்களைச் சொன்னேன். அந்த நீதிபதியின் மீது அவனுக்கும் கோபமிருந்தது. திருடன்களின் பொது எதிரி அந்த நீதிபதி. என்ன செய்யலாம்? பாக்கரன் சொன்னான்: "உள்ளே போக முடியுமான்னு முயற்சி செய்து பாக்கறேன்; போக முடியாம இருந்தாலும் எதையாவது பண்ணி வெச்சிட்டுத்தான் வருவேன் மாப்ளே. நீ தைரியமா

போ."

"சரி, மாப்ளைக்கு என்ன வேணும் சொல்லு? கிழங்கும் மீனுமா? சரி, ஒரு பத்து பிளேட் கொடுத்துடுப்பா." காசைக் கொடுத்துவிட்டு நான் இறங்கினேன்.

மறுநாள் பாக்கரனைப் பார்த்தேன். "மாப்ளே, பயங்கரமான பந்தோபஸ்துடா! சொல்லிக்கிறதுபோல எந்த வழியும் தென்படல. எப்படியாவது உள்ள நுழைஞ்சாலும் பொருளோடு தப்பிக்கிறதுக்கு முடியாத இடம். இருந்தாலும் பரவாயில்லை; எப்படியும் அவன் நாளைக்கு தண்ணி வாங்கிடுவான். என்ன, வீட்டுக்குள்ள நுழைய முடியலைங்குறது மட்டும்தான். கிணற்றுக்குள்ள இறங்கி நிம்மதியா உட்கார்ந்து சாதிச்சிட்டேன்."

மறுநாள், நாங்கள் இருவரும் நீதிமன்றப் பகுதிகளில் சுற்றித் திரிந்தோம். விடுமுறை முடிந்த அடுத்த நாளென்பதால் வீட்டிலிருந்து நேராக கோர்ட்டுக்கு வந்திருந்தார் நீதிபதி. சோறும் தண்ணீரும் கையோடு கொண்டு வந்திருந்தார். மதியம் சாப்பிட்டார். எங்களுக்குக் குமட்டல் வந்தது. கொஞ்ச நேரத்திற்குப் பிறகு வீட்டிலிருந்து அவருக்கு ஒரு ஃபோன் வந்தது. பிறகு வாந்தியும் தலைவலியும் ஏற்பட்டு இருக்க முடியாமலாகி ஜீப்பை வரவழைத்து அதில் ஏறிப்போய் விட்டார்.

இப்படியான ஒரு பிரச்சினை என்றால் போலீசுக்கு உடனடியாகவே தெரிந்துபோய் விடும். பாக்கரனைத் தூக்கினார்கள். அது நானில்லையென்று சொல்லி எந்தப் பலனுமில்லை. பாக்கரனைத் தவிர யாருக்குமே இந்தப் பழக்கமில்லை. ஆறுமாதத் தண்டனையில் பாக்கரன் உள்ளே போனான். "போயிட்டு வரேன் மாப்ளே" என்று கூலாகச் சொல்லிவிட்டுப் புறப்பட்டான்

பின்பொருமுறை இன்னொரு நீதிபதியுடன் உரச வேண்டிய சூழ்நிலையும் ஏற்பட்டது. அன்றும், அம்மா என்னை ஜாமீனில் எடுப்பதற்காக வந்திருந்தாள். இப்படி அவள் வருவது எனக்கு மிகவும் தர்மசங்கடத்தை ஏற்படுத்துகிற விஷயமாக இருந்தது. எங்காவது வைத்து என்னைப் பிடித்துவிட்டார்கள் என்று அறிந்தால் உடனே தயாராகி நீதிமன்றத்தில் ஆஜர் படுத்துகிற அன்று வந்துவிடுவாள். என் பொருட்டு என்னவெல்லாம் அவமரியாதைகளை அம்மா சகித்திருக்கிறாள். அன்றும் அம்மா வந்து நின்றுகொண்டிருந்தாள்.

நீதிபதி கேட்டார்: "மகன் திருடிட்டு வர்றதெல்லாம் உங்ககிட்டதானே இருக்கும்?" ஒரு நீதிபதிக்கு இப்படிக் கேட்க வேண்டிய எந்தத் தேவையும் கிடையாது. நான் சொன்னேன்: "மாண்புமிகு நீதிமன்றம் இப்படி, ரொம்பவெல்லாம் சிரமப்பட்டு எனக்கு ஜாமீன் தரவேண்டாம். அப்புறம் இன்னொரு விஷயம். பக்கத்து வீட்டுக்காரனோட தாய்க்குப் பைத்தியம் பிடிச்சாப் பாக்குறதுக்கு வேடிக்கையாகத்தானிருக்கும். அவனவன் தாய்க்கோ குடும்பத்துக்கோ சின்னதாக ஒரு தவறு நடந்து போனாத்தான் தெரியும். குடும்பமே வேதனைக்குள்ளாகுற ஒரு நிலைமை உங்களுக்கு இன்னமும் ஏற்படலை."

நீதிபதி சொன்னார்: "ஒழுங்காக நடந்தோம்னா அப்படியான நிலைமைகளெல்லாம் ஏற்படாது."

"அது நீதிமன்றத்தோட தவறான அனுமானம். கௌரவமான ஆட்களுக்கும் இப்படியான ஒரு நிலைமை ஏற்படக்கூடும்" என்றேன் நான்.

"ம் . . . ம் . . . வசனமெல்லாம் வேண்டாம். ஜாமீன் தர்றேன்" என்றார் நீதிபதி.

எனக்காக அன்று நீதிமன்றத்தில் ஆஜரானவர் முன்னாள் நக்சலைட், ஃபிலிப் எம். பிரசாத். சிறையிலிருக்கும்போது உருவான நட்புதான்.

என்னதானிருந்தாலும் ஒரு நீதிபதிக்கு இவ்வளவு அகம்பாவம் கூடாது. இவரது குடும்பத்திற்கு ஒரு சிறு வேதனையை ஏற்படுத்தியே தீருவது என்று முடிவு செய்தேன். அதற்கான வாய்ப்பை எதிர்பார்த்திருந்தேன். பிறகு, வடகரை நீதிபதியாக மாற்றம் கிடைத்துப்போய் விட்ட இவர், மீண்டும், வஞ்சியூருக்கே வந்தார். பேட்டை பகுதியிலிருக்கும் இவரது வீட்டின் ஜன்னல் கம்பிகளை வளைத்து உள்ளே நுழைந்து, சேலை, பாண்ட், வாட்சு, மோதிரம் என கையில் கிடைத்த எல்லாப் பொருட்களையும் சுருட்டிக்கொண்டு வந்துவிட்டேன். மற்றொரு வழக்கில் பிடிபட்டபோது இதுவும் வெளிச்சத்திற்கு வந்தது. இதே நீதிபதியிடம்தான் அவரது வீட்டில் நடந்த திருட்டும் விசாரணைக்கு வந்தது. ஆகவே, வழக்கை அவர் நெய்யாற்றின்கரை நீதிமன்றத்திற்கு மாற்றினார். முன்பு நான் சொன்னதன் பொருளையும் அவர் புரிந்துகொண்டுவிட்டார்: இது தன்னைக் குறிவைத்து செய்திருக்கும் ஒரு வேலைதான். வழக்குகளில் என்னுடைய தரப்பில் நானே வாதாடுவேன் என்பதுவும் அவருக்குத் தெரியும். நான் குறுக்கு விசாரணை செய்கிற முறையையும் வாதியையும்

விசாரணை அதிகாரிகளையும் தண்ணீர் குடிக்க வைக்கிற முறையையும் இவர் அறிந்திருந்தார். ஒரு வழக்கில், மாமாவின்மீதான கோபத்தில் அவரது வீட்டுக்குள் நுழைந்துவிட்டு அத்தை அழைத்ததால் தான் போனேன் என்று நான் சொன்னது அனைவருக்குமே தெரிந்த விஷயம். அத்தையின் இரண்டு வயதில் எடுத்த பழைய ஒரு புகைப்படத்தில் அவரது தொடையிலிருந்த மச்சத்தை ஆதாரமாகச் சொல்லித் தப்பித்து விட்டேன். இந்த வழக்கும் இதே நீதிபதியிடம்தான் விசாரணைக்கு வந்தது.

நான் திருடியவை நீதிபதியின் மனைவியின், மகனின், மகளின் பொருட்கள். அவற்றை அடையாளம் காட்டுவதற்காக அவர்களும் நீதிமன்றத்திற்கு வரவேண்டியதிருக்கும். அதை விடவும் முக்கியமானது, நான் எப்படியான கேள்விகளைக் கேட்டு வைப்பேன் என்று தெரியாது. ஒருவேளை மிகப்பெரிய அவமானமாகி விடவும் கூடும். நீதிபதி ஒழுங்காக நடந்துகொண்ட போதும்கூட வேதனை உருவாகியிருக்கிறது. திருடனின் மனவலியைப்போலவே தனக்கும் ஏற்படக்கூடுமென்று அவர் உணர்ந்துகொண்டார். அவரவர்களுக்கான வேதனைகள் ஏற்படும்போது மட்டுமே தெரியும் என்று நான் சொன்னதை நீதிபதி பலமுறை நினைத்துப் பார்த்திருப்பார். எதுவாயினும் நெய்யாற்றின்கரை நீதிபதியிடம் இவர் மன்றாடியிருக்கலாம். மணியன் குறுக்கு விசாரணை செய்து பிரச்சினைப் பண்ணிடுவான்; தேவையில்லாத அங்க அடையாளங்களைக் கேட்பான்; அவமானப்படுத்துவான். அப்போது அமைதியாகக் கேட்டுக்கொண்டிருக்கும் மக்கள் பிறகும் அப்படி இருக்கமாட்டார்களல்லவா? வழக்கில் திருடனுக்குத் தண்டனை கிடைத்தாலும் அவமானங்கள் மிச்சமிருக்குமே?

நெய்யாற்றின்கரையில் வழக்கை விசாரணைக்கு எடுப்பதற்கு முன், நீதிபதி என்னை அவரது தனியறைக்குள் அழைத்துக் கேட்டார்: "என்ன பிளான் போட்டிருக்கீங்க, மணியன்? வழக்கை விவாதிச்சுடலாம்னா?"

நான் சொன்னேன்: "வேற வழியே இல்லை, நீதிபதி ஐயா. எல்லாமே பொய் வழக்கா இருக்கும்போது நான் வேற என்ன பண்றது."

நீதிபதி சொன்னார்: "உங்கபேர்லே ஆறு வழக்குகள் இருக்கு. பெரிய அளவிலான தண்டனைகள் எதுவும் தர்றதா இல்லை. ஆனால், நீங்க விவாதிக்க வேண்டாம். நான் இதைச் சொல்றதுக்கான காரணம் என்னன்னு உங்களுக்கும் தெரியும்."

எனக்கு விஷயம் புரிந்துவிட்டது. நான் சொன்னேன்: "நீதிமன்றத்தை நான்

முழுமையாக நம்பறேன். மதிக்கிறேன். தேவையில்லாமல் யாருக்கும் எந்த மன வருத்தத்தையும் உருவாக்க விரும்பலை. வழக்கை நான் விவாதிக்க மாட்டேன்."

நீதிமன்றத்தில் என்மீதான எல்லா வழக்குகளிலும் குற்றத்தை ஒப்புக்கொண்டேன். நீதிபதியும் நேர்மையாகவே நடந்துகொண்டார். ஒவ்வொரு வழக்குகளிலும் மூன்றும் நான்கும் மாத சிறுதண்டனைகளை மட்டுமே விதித்தார். எல்லாவற்றையும் ஏக காலத்தில் அனுபவிக்கவும் விசாரணைக்கான காலகட்டத்தைக் குறைவு செய்தும் தந்தபோது ஆக மொத்தம் நான் அனுபவிக்க நேர்ந்தது, வெறும் மூன்றரை மாதத் தண்டனை மட்டும். இந்த இரண்டு வழக்குகளையும் தவிர ஒருபோதுமே நான் நீதி மன்றங்களுடன் உரசலில் ஈடுபட்டதில்லை. நான் பணிவாகச் சொல்லுவதைக் கேட்டு முடிந்தவரையிலும் நல்ல மனதுடன் நடந்துகொள்பவர்கள்தான் கடந்த தலைமுறையிலுள்ள அதிகம்பேர்களும். அருகதையானதை விடவும் அதிகமான தயவும் தாட்சண்யமும் நீதிமன்றங்களிலிருந்து எனக்குக் கிடைத்திருக்கின்றன. இன்றும் நான் நீதிமன்றங்களை நம்புகிறேன்.

என் பொருட்டு அம்மா நிறைய வேதனைகளை அனுபவித்திருக்கிறாள். என் கண் முன்னால் மற்றவர்கள் அவளை வேதனைப்படுத்தியபோதுதான் நான் இதை உணர்ந்துகொண்டேன். திருடனாக மாறிவிட்டதன் கொடிய வேதனையை நான் அனுபவித்தது திருடும்போது ஒரு தடவை அம்மாவைப் பற்றிய நினைவு வந்ததில்தான்.

ஒரு வீட்டினுள் திருடுவதற்காக நுழைந்தேன். சமையல் கட்டின் கம்பியை வளைத்து உள்ளே ஏறினேன். ஒரு கையில் கத்தி, மற்றொரு கையில் டார்ச். எதுவோ அசைவதுபோல் சத்தம் வந்தது. லைட் அடித்துப் பார்த்தேன். வெளிச்சம் பதிந்த இடம் ஒரு மூதாட்டியின் கண்கள். அதில் உலகத்திலுள்ள எல்லாத் தீவினைகளையும் ஒருசேரப் பார்த்துவிட்டது போன்ற பயம் தெரிந்தது. அந்த அம்மா நடுக்கத்துடன் துவண்டுகொண்டிருந்தார். வேதனையின் மெல்லிய சீகாரம் அவரிடமிருந்து வெளிப்பட்டது. பயம் ஒரு வனமிருகம்போல் அவரை வளைத்திருந்தது. எனக்கு என்னவோ போலாகி விட்டது.

நான் மெதுவாகச் சொன்னேன்: "பயப்பட வேண்டாம்மா! நான் போயிடறேன்." வந்த வழியாக வெளியேறி, வீட்டின் மதில் சுவரில் சாய்ந்து நின்று வாய்விட்டு அழுதேன். இந்த அளவுக்கு மற்றவர்கள் பயந்து வெறுக்கிற துஷ்டனாக மாறிவிட்டேனே! இந்த இடத்தில்

என்னுடைய அம்மாவாக இருந்திருந்தால் . . . மதிலில் தலையை முட்டி அழுதேன். பிறகு எல்லாமே தகர்ந்துவிட்டவன்போல் திரும்பி நடந்தேன்.

அம்மா புற்றுநோய் வந்து இறந்துபோனாள். மெடிக்கல் காலேஜ் சிகிச்சையில் இருந்த அம்மாவை இனி இங்கே வைத்திருக்க வேண்டாம்; வீட்டிற்குக் கொண்டுபோய்விடுங்கள் என்று சொல்லிவிட்டார்கள். அதிகம்போனால் ஆறு மாதங்கள்தான். டாக்டர்கள் விதி எழுதிவிட்டார்கள். வீட்டிற்கு வந்த பிறகுதான் அம்மாவுக்கு ஆறுதல். மேலும் ஐந்து வருடங்கள் உயிரோடிருந்தாள். பாட்டுப் பாடியே வலியைச் சுட்டெரித்துக் கொண்டிருந்தாள். எனது குழந்தைப் பருவத்து நினைவுகளில் செத்துக் கிடந்த நிறைய பாடல்களை அம்மா பாடிப்பாடி உயிரூட்டினாள்.

ஒருநாள், பெரிய அக்கா வரும்போது படுத்திருந்தபடியே அம்மா பாடிக்கொண்டிருந்தாள். "என்னதான் முடியலைன்னாலும் பாட்டுக்கெல்லாம் ஒரு குறையுமில்லை." அக்கா கேலி செய்தாள். பிறகு பாட்டுக் கேட்கவில்லை. தான் சொன்னதைக் கேட்டு அம்மா பாட்டை நிறுத்தியிருப்பாளென்று நினைத்து அவள் உள்ளே போனாள். அதற்குள் அம்மாவும் போய்விட்டாள். வாய் திறந்தபடியே இருந்தது. பாதி பாடல் அம்மாவின் உதடுகளில் தங்கியிருந்தது.

# 3 - கல்யாண வீடு

அப்பா இறந்ததுடன் ஊரில் நாங்கள் அனாதைகளானோம். சிறகு முளைக்காத சில பறவைக் குஞ்சுகள். அம்மா முந்திரிக் கம்பெனியில் வேலை செய்துகொண்டு வருகிற குறைந்தக் கூலியை வைத்துப் பசியைப் போக்க முடியவில்லை.

ஊரில் அப்போதெல்லாம் கோவிலுடன் இணைந்துதான் திருமணங்கள் நடக்கும். எல்லாத் திருமணங்களுக்கும் எங்களுக்கும் அழைப்பு வரும். உறவினர்களை அழைக்காமலிருக்க முடியாதல்லவா? அப்பா இறந்த பிறகு அம்மா திருமண வீடுகளுக்கெல்லாம் செல்வதில்லை. இதை ஒரு காரணமாகச் சொன்னாலும் உண்மையில் பிள்ளைகளுக்கு வயிறாற ஒருவேளை உணவு கிடைக்குமல்லவா என்பதுதான் நோக்கம்.

நாங்கள், பெரிய அக்காவின் தலைமையில் போவோம். என்னுடைய உடுப்புகளைத்தான் இளைய சகோதரி அண்ணிந்திருப்பாள். வேறு நல்ல உடுப்புகள் கிடையாது. பட்டன் கழன்றுபோன சட்டையும் நிக்கரும் தான் என்னுடைய வேஷம். முதல் பந்தியிலேயே அடித்துப் பிடித்து நுழைந்து சாப்பிட முயற்சி செய்வோம். ஆனால், ஊரின் சில முக்கியஸ்தர்கள் வாசலில் நின்றிருப்பார்கள். ஆட்களை வடிகட்டித்தான் உள்ளே அனுமதிப்பார்கள்.

இப்படியான ஒரு திருமணத்தில் பையன்களெல்லாம் தங்கள் அப்பாமார்களுடன் சாப்பிடப் போய்க் கொண்டிருந்தார்கள். "வா, அக்கா" என்று சொல்லிவிட்டு நான் உள்ளே போக முயற்சி செய்யும்போது பலமான ஒரு கை என் தோளில் பதிந்தது. பிறகு தனது இடது கையால் அவன் என்னைத் தள்ளி விட்டான். நான் நிலை குலைந்து கீழே விழப்போனேன்.

"விலகி நில்லுங்க, பாவப்பட்டதுங்களுக்கெல்லாம் கடைசியிலே மிச்சமிருந்தாதான் . . ." இளைய சகோதரி அழத் துவங்கிவிட்டாள். அவளுக்குச் சாப்பிட முடியாத துக்கம்; எனக்கோ அவமானப்பட்ட வருத்தம். நான் மனதிற்குள் சொல்லிக்கொண்டேன்: 'எங்களை அழைத்துதான் வந்திருக்கிறோம்; சாப்பிடுவதற்கென்று நாங்களாக

ஒன்றும் வரவில்லை.'

விலகியே நின்றோம். அக்காவின் கையைப் பிடித்துச் சொன்னேன்: "வா அக்கா, வீட்டுக்குப் போயிடலாம்." அவர்களுக்குத் திரும்பிப் போக விருப்பமில்லை. கடைசிப் பந்திக்காக அனாதைகள்போல் காத்து நின்றார்கள். அவமானத்தைக் கருதி வீட்டுக்குத் திரும்பினால் அங்கே பழையதுகூட இருக்காது. நான் மட்டும் திரும்பி நடந்தேன். எங்களைத் தடுத்து நிறுத்தியவனைப் பார்த்து வைத்துக்கொண்டேன்.

அன்றுபட்ட காயம் இன்றுவரைக் குணமாகவில்லை. என்னதான் நெருங்கிய உறவினர் வீட்டுத் திருமணமாக இருந்தாலும் எனக்குள் தயக்கம் ஏற்பட்டு விடும். செத்த வீடுகளுக்கு மட்டும் தயங்காமல் செல்வேன். திருடன் விபச்சாரி என்றெல்லாம் இங்கே பேதம் பார்ப்பதில்லை. யாரும் தடுக்கவும் மாட்டார்கள்.

இந்த ஆள் சைக்கிளில் வேலைக்குப் போவதைப் பார்க்கும்போதெல்லாம் என் மனதில் பகை கொழுந்து விட்டெரியும். என்னை அடித்துத் துவம்சம் செய்த போலீஸ்காரர்கள்மீது பகையில்லை; உறவினர்களிடம் பகையில்லை. என்னவோ தெரியாது; இந்த ஆளைக்கண்டால் மட்டும் கோபம் வந்துவிடும். குழந்தைகளை ஒருபோதும் வேதனைப்படுத்தக்கூடாது; நாம் நினைக்கிறோம்: குழந்தைகள்தானே, மறந்து விடுவார்களென்று. தவறு. குழந்தைப் பருவத்து நினைவுகள் தீராத இரணங்களாகி விடும். வேதனைகளையும் அவமானங்களையும், நான்கைந்து வயதிலிருந்தே குழந்தைகள் மனதில் பாதுகாத்து வைத்திருப்பார்கள். பச்சை மனங்களை ஒருபோதும் புகைய வைத்து விடக்கூடாது.

விதி, மணியன்பிள்ளையின் முன்னால் கொண்டுவந்து சேர்க்காத எதிரிகள் யாரிருக்கிறார்கள்? ஒருநாளிரவு, எனக்கு மிகவும் பிடித்த இடமாகிய காக்கோட்டுமூலையில் ஒரு திருட்டை நடத்திவிட்டு ஒரு லட்சம் வீடு காலனியின் வலது புறமாக நடந்து வந்துகொண்டிருந்தேன். திடீரென்று பார்க்கும்போது வயல்காட்டின் சற்றுத்தொலைவிலுள்ள ஒரு 'விளங்காதவ'ளின் வீட்டிலிருந்து மேற்படியான் இறங்கி வந்துகொண்டிருக்கிறான். நான் எதிர்பார்த்து நின்றிருந்தேன். ஒரு குறுக்கு வழியில் வேலியின் ஓலைக்கீற்றை விலக்கியபடி குனிந்து இறங்கினான். எதிரில், நான்! "சத்தம் வெளியே கேட்டுடக் கூடாது." கையிலிருக்கும் கத்தி நிலவொளியில் மின்னுகிறது.

அவனது கண்களில் பயம் கவிந்தது. நான் கழுகாக மாற ஆரம்பித்திருந்த காலம். "எங்க போயிட்டு வர்றீங்க?" என்று கேட்டேன். "பக்கத்தில ஒரு இடம் வரைக்கும். என்னைத் தெரியலையாடா மணியா? நான் இன்ன வீட்டுல . . . இன்ன நாயர் . . ?"

"எனக்குத் தெரியாது."

"அட! நாமெல்லாம் சொந்தக்காரங்கடா . . ."

நான் சொன்னேன்: "நான் ஒரு திருடன்; திருடனுக்குச் சொந்த பந்தங்கள் கிடையாது. யாருமே இந்தத் திருடன் என்னுடைய சொந்தக்காரன்னு சொல்லிக்கிறதில்லை. இப்ப இருட்டாக இருக்குறதால உங்களுக்கு அப்படித் தெரிஞ்சிருக்கலாம்."

"இல்லடா, நான் உன் அப்பாவோட தம்பி முறையில . . ."

"போடா வாடான்னு கூப்பிடுறதெல்லாம் வீட்டுல வெச்சுக்கணும். சொந்த பந்தங்களெல்லாம் ஊர்ல . . . இப்ப உள்ள நிலைமை அதுவல்ல. பாருங்க, நான் தூரத்தில உள்ள ஒரு வீட்டுலபோய் திருடிட்டு வர்றேன். நீங்க எங்க போயிட்டு வர்றீங்கங்குறதை நீங்களும் சொல்லித்தான் ஆகணும்."

"அது வந்து நான் . . ."

"திருடனுங்க மட்டும் அயோக்கியனா இருந்தா அது நியாயமில்ல. நான் இப்ப சத்தம் போட்டு ஊரைக் கூட்டப் போறேன். கொஞ்சம் பேர் அறியட்டுமே! ஊரில உள்ள எல்லாருமே கௌரவமானவங்களா இருக்குறது சரியில்லை. இந்த இடத்துல நீங்க இப்ப எதுக்கு வந்திருக்கிறீங்க எங்கிறதையும் மக்கள் அறியணும். இந்நேரத்துல திருடனும் விபச்சாரியும் மட்டும்தான் வெளியே வருவாங்க!"

"மணியா, மானத்தை வாங்கிடாதே! நான் இனிமேல் இந்த வழிக்கு வரவே மாட்டேன்" என்று கெஞ்சிக் கேட்டுவிட்டு ஓட்டம் பிடித்தான்.

பணத்திற்கு மட்டுமே இங்கு பாய் விரித்து மரியாதை செய்யப்படுகிறது. ஏழ்மை, குற்றமாகப் பார்க்கப்படுகிறது. வெள்ளை வேட்டிக்குத்தான் கௌரவம். பணம்தான் பிரதானம். அதை அடைந்த வழி எதுவாகவும் இருக்கலாம். இப்படித் தோன்றுவதற்கான காரணம் அன்று வெளியே துரத்தப்பட்ட அனுபவமாக இருக்கலாம். அதன் காரணகர்த்தா அதோ ஓடுகிறான்.

## 4 - பசி

ஆறாம் வகுப்புவரை, அதாவது அப்பா இறப்பது வரை பசியென்றால் என்னவென்றே தெரியாது. நான்கு சகோதரிகளுடன் பிறந்த ஏக ஆண் வாரிசு நான். அப்பாவின் செல்லப்பிள்ளை. அதே சமயம் கொடூரமாக அடிக்கவும் செய்திருக்கிறார். குடிகாரனின் குணமே இதுதான். பாசம், அமாவாசையும் பௌர்ணமியும்போல் தலைகீழாக மாறி வரும். சின்ன ஒரு குறும்புக்காக மோசமாக அடிப்பார். பிறகு உச்சக்கட்ட பாசம் வந்துவிடும். தோளிலேற்றிக்கொண்டு கள்ளுக்கடைக்கு நடப்பார். பிறகு திருவிழாதான். இரண்டு கெட்ட வழக்கங்களுக்கு இது காரணமாக அமைந்தது. ஒன்று: குடியும் சிகரெட்டும். அடிமைப்பட்டு விடவில்லையென்றாலும் இன்றுவரை முழுமையாக ஒழித்துவிட இயலாத மோசமான வழக்கங்கள். மற்றொன்று: மரச்சீனிக்கிழங்கும் மீன்கறியும். அப்போதெல்லாம் அப்பாவிடமிருந்து அடி வாங்க ஆசையாக இருக்கும். அடி கிடைத்தால் கிழங்கும் மீனும் உறுதி. பெரியவர்களுடன் சேர்ந்து கெட்ட வார்த்தைகளுக்கும் கள்ளுக்குமிடையே அமர்ந்திருப்பதில் சிறு உற்சாகமுமிருந்தது. பிற்காலத்தில் அடிபட்டால் வலி தெரியாததற்கும் அடித்தவர்கள்மீது பகையுணர்வு தோன்றாததற்கும் இந்த மனோபாவம்தான் காரணமாக அமைந்திருக்க வேண்டும்.

அப்பாவின் மரணத்திற்குப் பிறகு எங்களைக் கட்டுப்படுத்த யாருமே இல்லை என்ற நிலைமை உருவானது. யாராவது ஏதாவது செய்தால் தட்டிக்கேட்கவும் நாதியில்லை. அப்பா இருந்து, அவர் என்னதான் சரியில்லாதவராக இருந்தாலும் நம்மீது கை நீட்ட வேண்டுமென்றால் ஊரிலுள்ளவர்களுக்குப் பயமிருக்கும். அப்பாவின் மரணம், சிறு குற்றத்திற்காக எனக்குச் சிறைத்தண்டனை கிடைக்குமளவுக்குக் கொண்டுசென்றது. கேட்க நாதியற்றவர்கள் என்று சமூகத்திற்கும் சம்பந்தப்பட்ட நபர்களுக்கும் தோன்றுவதற்கான காரணமும் இதுதான்.

பசி! பற்றியெரியும் பசி. பருவம் அதுதான். பதினான்கு வயது. வளரும் பருவம். தாங்க முடியாத பசி. வீட்டில் பெரும்பாலும் கால் வயிற்றுக்குக்கூட எதுவும் இருக்காது. வயிற்றுக்கில்லாமல் வளர்ந்த

குழந்தைப் பருவமுமல்ல. சமீப காலம்வரை மனம்போல் தின்றுகொழுத்தவன். தின்றவனுக்குத்தான் ருசி தெரியும்.

எதுவும் செய்யாமல் இருந்தால் பசி இன்னும் அதிகமாகும். வெறுமனே கொல்லத்தை நோக்கி நடந்தேன். சின்னக்கடைக்குப் போய்ச் சேரும்போது மத்தியானச் சாப்பாட்டு வேளை. நான்கைந்து கிலோமீட்டர் நடந்ததால் பசி மேலும் அதிகரித்திருந்தது. பத்மா கஃபேயின் எதிரில் வரும்போது நல்ல சைவ உணவின் வாசம். ஓட்டலின் பக்கவாட்டில் ஒரு கேட். சாதாரணமாக அது அடைந்துதான் கிடக்கும். நாய் நுழைந்துவிடாமலிருப்பதற்கான ஏற்பாடு என்பதும் தெரியும். மனித நாய்கள் நுழையலாம். பசியென்பது எல்லா உயிரினங்களுக்கும் பொதுவானதுதான். சுற்று முற்றும் பார்த்தேன். யாராவது பார்க்கிறார்களா? வாழத்துங்கல்காரர்கள் எல்லா இடங்களிலும் இருப்பார்கள். கூடவே கோபமும் வந்தது. பார்க்கட்டும்; எல்லாவனும் பார்க்க வேண்டும். நேராக நடந்தேன். ஒரு பெரிய சிமெண்ட் குழி. சுற்றிலும் நிறைய காகங்கள். என்னைக் கண்டதும் அவை, பறந்தன. தொட்டியின் மேற்பகுதியிலிருந்த ஐந்தாறு இலைகளை விரித்தேன். ஒவ்வொருவரும் ஒரு பிடியையாவது மிச்சம் வைத்திருக்கிறார்கள். உணவை இப்படிப் பாழாக்குபவர்களின் கன்னத்தில் ஓங்கி அறைய வேண்டும் போலிருந்தது. ஒரு இலையை விரித்தபோது அதில் பகுதிச்சோறு மிச்சமிருந்தது. இவன்மீது திடீரென்று மரியாதை உருவானது. மிச்சம் வைப்பதாக இருந்தாலும் இப்படி யாருக்காவது பயன்படுவதுபோல் வைக்க வேண்டும்.

இலையை எடுத்துத் தரையில் விரித்து குத்துக்காலிட்டு உட்கார்ந்தேன். பக்கத்தில் எச்சில். ஈக்கள், கால்களை மொய்த்துக்கொண்டிருந்தன. கையால் ஈக்களை விரட்டியபடியே ஒரு பிடியை அள்ளி வாயில் வைத்தேன். எதுவோ தொண்டையில் சிக்கியதுபோலிருந்தது. கையிலிருந்த சோற்றைப் பார்த்தேன். துப்பல். வாந்தி வந்தது. எதுவுமே சாப்பிட்டிருக்கவில்லையென்பதால் வெறும் பித்தம்தான் வெளிவந்தது. திடீரென்று ஒரு தமிழ்ப் பையன் அங்கே வந்தான்.

"பட்டித் தாயோளி."

எனக்கு என்னுடைய கலி கிளர்ந்தது. என் அளவுதான் இருப்பான். அவனும் என்னைப் போல் கதிகெட்டுப்போய் வந்தவன்தான். அழுக்கடைந்த டிராயர். கொஞ்சம் சோற்றைத் தின்று விட்டேன் . . . அதுவும் விழுங்கக்கூட முடியவில்லை. அதற்காக அவன் கெட்ட வார்த்தைப் பேசி விட்டானே . . . முகத்தைப் பிடித்து உந்தித் தள்ளினேன்.

அவன் தமிழில் கூப்பாடுப் போட்டு அலறினான். எடுத்தேன், ஓட்டம். கிராண்ட் சினிமா கொட்டகையின் ஒருபுறமாகக் குறுகியவழிப் பாதையிருந்தது. பெரிய அளவில் ஆள் சஞ்சாரமெதுவும் இல்லாத பகுதி. அங்கே போய் நின்றிருக்கும்போது மீண்டும் தொண்டையில் கெட்டியாக ஏதோ! திரும்பவும் வாந்தியெடுத்தேன். உள்ளே இருந்து மஞ்சள் நிறத் திரவம் வந்தது. இனி குடல் மட்டும்தான் வெளிவர வேண்டும். உட்கார்ந்து வாய்விட்டு அழுதேன். ஒரு போலீஸ்காரர் அந்த வழியாக வந்தார்: "இங்க என்னடா வேலை? போடா வீட்டுக்கு . . ." அவர் லத்தியை உயர்த்தினார்.

மெல்லத் திரும்பி நடந்தேன். அப்போதும் அழுதுகொண்டுதானிருந்தேன். இன்றுகூட அந்த இடைவழியில் வரும்போது அழுகை வந்துவிடும்.

## 5 - சைக்கிள் வித்தை

வாழத்துங்கலில் முதன்முதலாக சைக்கிள் வித்தை நடந்தது. 1963இல். எனக்கு அப்போது பதிமூன்று வயது. முதன்முதலாக வந்த சைக்கிள் வித்தை மட்டுமல்ல, கடைசியாக வந்ததும் இதுதான். இதன் பிறகு யாருமே இந்த ஊரை சைக்கிள் வித்தைக் காட்டுவதற்காகத் தேர்ந்தெடுக்கவில்லை. எங்கள் ஊரின் பக்கத்து ஊரைச் சேர்ந்த மாஸ்டர் குட்டப்பன்தான் சைக்கிளை வைத்து சாகசம் செய்பவன்.

வாழத்துங்கல் கவர்ன்மெண்ட் பாய்ஸ் ஹை ஸ்கூலின் கிழக்குப் பகுதியில் வித்தை நடந்தது. அந்தப் பகுதியின் அப்போதைய பெயர், தோட்டுவாத்தொடி. நாடக - பாடலாசிரியரும் அறிவுஜீவியுமான வாழத்துங்கல் வி. ஸ்ரீதரன் நாயர் போட்டியை ஆரம்பித்து வைத்தார்.

ஒரு வாரம், அதாவது ஏழு நாட்கள் சைக்கிள்வீரன் சைக்கிளை விட்டு இறங்காமல் தொடர்ந்து ஓட்டிக்கொண்டிருப்பான். சாப்பிடுவதெல்லாமே சைக்கிளில் வைத்துதான். "இவன் தூங்கவே மாட்டானா?" மக்கள் கேட்டார்கள். "தூங்குவான். தூக்கம் வந்தால் மற்றொரு சைக்கிளைக் கொண்டுவரச் சொல்லி இரண்டையும் சேர்த்து வைத்துக் கொஞ்சநேரம் கண் மூடுவான்." மனிதன் தானே? மலஜலமெல்லாம்? இதைக் கேட்க முடியாதல்லவா? ஊரிலுள்ள சண்டியர்கள் கேட்டார்கள்: "ஏண்டா, நீ உண்மையாகவே கீழே இறங்க மாட்டியா?"

"மாட்டேன்." குட்டப்பன் சொன்னான்.

"பொய் சொல்லாதே! ஒரு வாரம்வரை சைக்கிளிலிருந்து இறங்காமலிருக்க யாராலுமே முடியாது."

"என்னால முடியும்." குட்டப்பன் சொன்னான்.

"போட்டியில ஜெயிச்சேன்னா நாங்க பணம் பிரிச்சு பத்து ரூபா தருவோம்; தோற்றுப் போனேன்னு வையி, உன்னை நாங்க பிழிஞ்சே அனுப்பிடுவோம். துணியைப் பிழிவோமே அதுபோல."

குட்டப்பன் நடுங்கிவிட்டான். அவர்கள் இதை ஒரு சவாலாக எடுத்துக்கொள்வார்களென்று அவன் எதிர்பார்க்கவே இல்லை.

குட்டப்பனைக் கண்காணிப்பதை இவர்கள் வழக்கமாக்கினார்கள். நான் வீட்டில் எந்த வேலையுமில்லாமல் இருக்கிறேன். அப்பா இறந்த பிறகு பசி அதிகமாகி விட்டதோ என்றொரு சந்தேகமுமிருந்தது. நல்ல ஆகாரமென்பது கனவாகப்போய் விட்டது. வீட்டில் நயா பைசாவுக்கும் வழி கிடையாது. ஊரிலும் பஞ்சம். காலையிலிருந்து இரவுவரைக்கும் சைக்கிள் வித்தை நடக்குமிடத்தில் அப்படியே உட்கார்ந்திருப்பேன். பசி தெரியாது. குட்டப்பன் சதாகாலமும் சுற்றிக்கொண்டே இருப்பான். ஒன்று ஒன்றொரை மணி நேரத்திற்கொரு தடவை முன் சக்கரத்தை வளைத்து நிறுத்தி ஒரு பத்து நிமிடம் ஓய்வெடுப்பான். அப்போது பார்த்து யாராவது வருவார்கள்.

"டேய், குட்டப்பா . . . படுத்துக் கிடந்து சுகம் அனுபவிக்கவா செய்றே? எழுந்திருந்து சைக்கிளை ஓட்டுடா."

குட்டப்பன் சோர்ந்துபோய் திரும்பவும் ஓட்ட ஆரம்பிப்பான். எனக்கு வருத்தமாக இருக்கும். என்ன மனிதர்களோ? மற்றவர்களின் வேதனையில் இவர்களுக்குத் திருப்தி கிடைக்கிறதா? இடையே வேறு சிலர் வருவார்கள். வேண்டுமென்றே சில நகாஸ் வேலைகள் காட்டுவார்கள். ஐந்து காசோ பத்து காசோ எடுத்து வீசுவார்கள். ஹாண்ட் பாரில் குப்புறக் கவிழ்ந்து மிகவும் சிரமப்பட்டு குட்டப்பன் அந்தக் காசை எடுப்பான். மிகவும் கஷ்டமான வேலை. காசு கிடைக்கும்தான். நாலணா கொடுத்தால் நல்ல சாப்பாடு கிடைக்கிற காலம். நான் சொட்டுத் தண்ணீர் கூட குடிக்காமல். அங்கேயே உட்கார்ந்திருந்தேன். சாயங்காலமானது, இரவானது. கலை நிகழ்ச்சிகள் முடிந்தன. குட்டப்பன் தளர்ந்து போன நிலையில் முன் சக்கரங்களைத் திருப்பி நிறுத்தி வைத்து மூச்சு வாங்க ஓய்வெடுத்தான். கால் மூட்டின் கீழ்ப்பகுதிவரையிலான அழுக்கடைந்த, கிழிந்த ஒரு பாண்ட் மட்டும்தான் குட்டப்பனின் உடை. கால் நரம்புகளெல்லாம் புடைத்து அவனது வாழ்க்கைபோல் குறுக்கு மறுக்காக ஓடி நீலம் பாரித்திருந்தன.

நான் மட்டும்தான் மிச்சம். குந்தியபடியே உட்கார்ந்திருந்தேன்.

குட்டப்பன் கேட்டான்: "நீ மட்டும் எதுக்காக உட்கார்ந்திருக்கே? காலையிலேயே வந்தவனில்லையா நீ? வீட்டுல தேடமாட்டாங்களா?"

"தேடமாட்டாங்க."

"என்னைக் கவனிச்சுக்கிடச் சொல்லி யாராவது உன்னை உட்கார வெச்சிருக்காங்களோ?"

நான் பதில் சொல்லவில்லை. அப்படியே உட்கார்ந்திருந்தேன். குட்டப்பனுக்கு என்மீது சந்தேகம். சைக்கிளிலிருந்து இறங்காமல் என் எதிரில் நின்று சிறுநீர் கழித்துவிட்டு: "ஹோ . . . என்னமா எரிகிறது . . ." என்று சொல்லி அந்த இடத்தை அமுக்கிப் பிடித்தபடி கொஞ்ச நேரம் நின்றான். பிறகு தனக்குத் தானே சொல்லிக்கொண்டான்:

"தேங்கி நின்னு மூத்திரமெல்லாம் கெட்டுப்போயிடுச்சி."

"எனக்கும் கத்துத் தருவீங்களா?" நான் மெதுவாகக் கேட்டேன்.

"கத்துக்கிட்டவனுக்கே வழியைக் காணோம். வேண்டாம், தம்பி! என்னைப் பாத்தியா? தாகம் எடுத்தா தண்ணிக் குடிக்க முடியாது; ஒண்ணுக்குப் போகத் தோணும், முடியாது. ஏதாவது சாப்பிட்டா கொல்லைக்குப் போகணும், முடியாது. கிடைக்கிறது என்னமோ, பிச்சைக் காசு . . ."

இப்படி, வாழ்க்கையின் அவலங்களைச் சொல்லிக்கொண்டிருந்தாலும் சைக்கிளிலிருந்து இறங்குவதற்குப் பயம்தான். தன்னைக் கண்காணிக்க வந்திருக்கும் உளவாளியாகவே இருக்க வேண்டும்; இல்லையென்றால் நடுச்சாமம்வரைக்கும் எதற்காக இங்கே உட்கார்ந்திருக்கப் போகிறான்.

திடீரென்று ரோட்டின் தொலைவில், அந்தப் பகுதியிலுள்ள சில இளந்தாரிப் பையன்கள் கூட்டமாக வந்துகொண்டிருந்தார்கள். இரவுக் காட்சி சினிமா பார்த்துவிட்டு வருகிறார்கள். அதிலொருவன் குரலை உயர்த்திச் சத்தமாகக் கேட்கிறான்:

"டேய், குட்டப்பா, நீ சைக்கிள்லதானே இருக்கே?"

ரோடு, சற்றுத் தொலைவிலிருந்தது.

குட்டப்பனும் சத்தமாகச் சொல்கிறான்:

"சைக்கிள்லதான் இருக்கேன். இதோ சுத்திட்டே இருக்குறேனே . . ."

"ஆங் . . . சுத்திட்டே இருக்கணும். இல்லேன்னா, குத்து நெஞ்சாம் பலகைல விழும்."

யாரோ சொன்னதைக் கேட்டு எல்லாரும் சிரிக்கிறார்கள். இதைக் கேட்டதும் குட்டப்பன் சைக்கிளை வேகமாக மிதிக்க ஆரம்பித்தான். பாவம், குட்டப்பன். இவ்வளவு பயந்தாங்கொள்ளியாக இருக்கிறானே?

"ஆங் . . . திரும்பவும் நாங்க வருவோம்."

"மயிரப்புடுங்கிங்க." குட்டப்பன் சத்தம் கேட்காமல் திட்டினான்.

மேலும் அரை மணி நேரம் கழிந்தது. வேறு வழியே இல்லாத குட்டப்பன் கேட்டான்:

"கொல்லைக்கிருக்கணும். கீழே இறங்கினா யாரிட்டயாவது நீ சொல்லுவியா?"

"மாட்டேன்."

"சத்தியமா?"

"சத்தியமா!"

"சொன்னேன்னு வெச்சிக்க, எங்கதையையே அவனுங்க முடிச்சுடுவானுங்க."

"சொல்லமாட்டேன். இந்த வித்தையை எனக்கும் சொல்லித் தருவீங்களா?"

"உனக்கு சைக்கிள் விடத் தெரியுமா?"

"கொஞ்சம் வித்தையும் காட்டுவேன்."

"அது சரி, அப்படின்னா ஒண்ணு பண்ணு. இந்த சைக்கிள்ல ஏறி சும்மா அப்படி சுத்திட்டே இரு."

நான் வேகமாகச் சென்றேன். அவன் சந்தேகத்துடன் பார்த்துவிட்டு சைக்கிளைத் தந்தான். பாண்டையும் கோமணத்தையும் அவசர அவசரமாக உருவிப் போட்டுவிட்டு நிர்வாணமாக நடந்து பக்கத்திலுள்ள புதர்க்காட்டில் போயிருந்து முக்கத் தொடங்கினான்.

நான் சைக்கிளில் ஏறி மிதிக்க ஆரம்பித்தேன். புதரினுள்ளிருந்து குட்டப்பன் சொன்னான்:

"ஹேண்டில சும்மா வளைக்கவும் திருப்பவும் செய்யாதே, பாலன்ஸ் போயிடும்."

அவன் சொன்ன பிறகும் நான் சிறு சிறு வித்தைகளைச் செய்து பார்த்தேன்.

அரைமணி நேரம் கழிந்திருக்கும். ரோட்டிலிருந்து திரும்பவும் சத்தம் வந்தது.

"குட்டப்பா, தூங்கிட்டியா?"

குட்டப்பன் நடுங்கிவிட்டான். ஒரு கையை மட்டும் உயர்த்திக் காட்டும்படி புதர்க்காட்டிலிருந்து சத்தமாகச் சொன்னான். நான் ஒரு கையை உயர்த்தினேன். குட்டப்பன் அங்கிருந்தே குரல் கொடுத்தான்:

"அப்படியெல்லாம் இறங்கிட மாட்டான், இந்த குட்டப்பன் . . ." சொல்லிவிட்டு திரும்பவும் முக்க ஆரம்பித்தான்.

பையன்கள் குறும்பு செய்வதற்காக வேண்டுமென்றே திரும்ப வந்திருக்கிறார்கள். எதையோ சொல்லி அட்டகாசமாகச் சிரித்தபடியே திரும்பிப் போனார்கள்.

"அவனுங்க போனதும் நான் இறங்கிடுவேன்னு நெனைச்சித் திரும்பவும் வந்திருக்கானுங்க, சின்னக் கழுவேறிக்குப் பொறந்தவனுங்க . . ."

என்னுடைய வேலையை சரியாகச் செய்துவிட்ட தைரியத்தில் கேட்டேன்:

"ஒரு தடவை சைக்கிள்ல லைட்டு போட்டுக்கலாமா?"

"வேண்டாம், வேண்டாம். டைனமா போயிடும்"

"இல்லை, ரெண்டு ரவுண்டுதான். எனக்குத் தெரியும்."

"ரெண்டே ரெண்டு ரவுண்டு மட்டும்." திரும்பவும் முக்குகிற சத்தம் வந்தது. பிறகு அவனிடமிருந்து மகிழ்ச்சியும் கொண்டாட்டமும் வேதனையுமான சத்தங்கள் கலந்து வந்துகொண்டிருந்தன.

நான் சைக்கிளின் டைனமோவை அழுத்தி லைட்டை எரிய விட்டேன். இரண்டாவது சுற்றில், வெளிச்சம் அவன் கழற்றிப்போட்டிருந்த கோமணத்தில் விழுந்தது. வெள்ளை நிறக் கோமணத்தில் இரத்தம்.

ஆறு நாட்கள் நான் குட்டப்பனுடனிருந்தேன். இரவு நேரங்களில் குட்டப்பன் சைக்கிளிலிருந்து செய்வதுபோல் நானும் சிறுநீர் கழிக்கக் கற்றேன். ஹாண்டிலை வளைத்து நிறுத்தி உட்காரக் கற்றேன். கைகளால் பெடலை மிதித்துத் தலைகீழாக நின்று ஓட்ட மட்டும் தெரியவில்லை.

ஆறாவது நாள் மதியம், குட்டப்பன் சொன்னான்:

"நாறப் பசங்க, இவனுங்களுக்கு இதிலெல்லாம் எந்த ஆர்வமும் கிடையாது. இன்னைக்குப் பார்க்க வர்றவங்ககிட்ட, நாளைக்கு சீட்டைக் கழற்றிட்டு குத்தி இருந்து வித்தைக் காட்டப் போறதாகச் சொல்லணும். கடைசி நாள் வித்தை. குண்டியில ஓட்டை விழுந்துடும், விழட்டும். எரப்பாளிங்க."

அப்போதுதான் கோமணத்தின் ஞாபகம் வந்தது:

"லங்கோடுல ரெத்தம் இருந்ததே?"

"எளவெடுத்த மூல முளை; கொல்லைக்குப் போறதெல்லாம் ரெத்தமாவே இருக்கு. சீட்டைக் கழற்றிட்டு செய்யிற வித்தை வேண்டாம்னு அடிக்கடி நினைக்கிறதுதான் . . ."

ஆனால், கடைசி நாளைய அந்த ரத்த விளையாட்டை என்னால் பார்க்க முடியவில்லை. சாயங்காலமானதும் அம்மா வந்தாள். நிறைய திட்டினாள். பொதுவாக இப்படியெல்லாம் திட்டமாட்டாள். நான் அம்மாவுடன் சென்றேன். வழியில் ஆளில்லாத இடங்களில் வைத்து அம்மா தாங்க முடியாமல் அங்கலாய்த்தாள்:

"ஆம்பிளைன்னு சொல்லிக்குறதுக்கு வீட்டுல ஒரே ஒருத்தன் மட்டும்தான். அவனும் இப்படி வாய் பாத்தானாக மாறிட்டானே கடவுளே! அப்பனும் போய்ச் சேந்தாச்சி . . . நீயும் இப்படி குடும்பத்தைப் பற்றி நினைப்பே இல்லாம . . ."

அம்மா முந்தானையால் மூக்கைப் பிழிந்தாள். இத்தனை நாட்களாக வீட்டுக்கு வராமலிருந்ததுதான் காரணமென்று நினைத்துக்கொண்டேன். இதனிடையே குட்டப்பன் குறவன் வாங்கித் தந்த ஒருவேளைச் சோறுதான் வாழத்துங்கலின் மிகப் புராதனக் கிளையிலுள்ள கொடுந்தறக் குடும்பத்து மணியன்பிள்ளையின் பசியை ஆற்றியது. நான் இல்லாமலிருந்தால் அம்மாவுக்கு ஒரு ஆளுக்கான கஞ்சியைக் குறைத்துப் பரிமாறினால்

போதுமே என்றுதான் நினைத்திருந்தேன். இதை மட்டும்தானே என்னால் செய்யவும் முடியும்? இப்போது என் அம்மா என்னைத் தேடிவந்ததில் உள்ளூர மகிழ்ச்சியாகவும் இருந்தது.

இரண்டு நாட்களுக்குப் பிறகு, பசி தாங்க முடியாமல் குட்டப்பனைத் தேடி அவனது வீட்டுக்குச் சென்றேன். வீடு என்றால் சிறு குடிசை. வயிறு வீங்கிய மூன்று நான்கு குழந்தைகள். எலும்பும் தோலுமாக இருந்த அவரது மனைவி. அவள் சிரித்தபோது சிரிக்கிறாளா அழுகிறாளா என்று தெரியவில்லை. எல்லாவற்றிற்கும் சாட்சியான அவனது சைக்கிள் வராந்தாவில் நின்றிருந்தது. அதன் சட்டம் ஒடிந்திருந்தது. மூன்று நாட்களுக்கு முன் நான் ஏறி வித்தைகள் கற்ற சைக்கிள். மெதுவாக அதன் பக்கத்தில் போனேன். எனக்கு வருத்தமாக இருந்தது. இந்த சைக்கிளை நான் கை படாமல் கால் மூட்டால் அசையாமல் நிறுத்தியிருக்கிறேன். சைக்கிளின் பக்கத்தில் இரண்டு மூன்று நிமிடங்கள் அப்படியே நின்றேன். என்னவோ நடப்பதுபோல் குழந்தைகள் வந்து நின்று என்னை வேடிக்கைப் பார்த்தார்கள். எந்தத் துடிப்புமே இல்லாத குழந்தைகள். குட்டப்பன் இறங்கி வந்தான். கை முழுவதும் காயங்கள். கையின் மணிக்கட்டுப் பகுதியில் மட்டை வைத்துக் கட்டப்பட்டிருந்தது. குற்றித் தாடியின் மழிக்கப்பட்ட ஒரு பகுதியில் காயம். அதன்மீது கறுத்த மருந்து, பஞ்சில் வைத்து ஒட்டப்பட்டிருந்தது.

"ஐயோ, ஆசானே, என்ன நடந்தது."

அவன் தாடையில் கையூன்றியபடி வராந்தாவில் அமர்ந்திருந்தான்.

"நீ எதுக்காக வந்தே?"

நான் எதுவுமே சொல்லவில்லை.

"எங்கூட இருக்கறதுக்காகவா?"

நான் பதில் சொல்லவில்லை.

பின்னால் அழுதபடி நின்றிருந்த குட்டப்பனின் மனைவி சாபமிடத் தொடங்கினாள்:

"அவனுங்க கொள்ளையிலதான் போவானுங்க, துரோகிங்க! சைக்கிள் பிரேம்ல உப்பை அள்ளிப் போட்டுட்டுடானுங்க, படுபாவிங்க! அவரு யாருக்கு என்ன கெடுதல் பண்ணாரு?"

குட்டப்பன் தொலைவிலெங்கோ பார்த்தபடி எதுவும் பேசாமல் உட்கார்ந்திருந்தான்.

நான் கேட்டேன்: "யாரு?"

அவன் கை விரித்தான்.

"எதுக்காக?"

அவன் பதில் சொல்லவில்லை. அவனது மனைவிதான் பேசினாள்:

"எல்லாவனுங்களுக்கும் கேலி பண்றதுக்கான ஒரு பிறவி. யாரு சொன்னாலும் எதுக்குக் கூப்பிட்டாலும் கூடவே போயிடும். என்ன வேண்டாத்தனம் பண்ணச் சொன்னாலும் பண்ணி வெச்சுடும். இப்பிடியுமா ஒரு மனுசன் இருப்பான் . . . குழந்தைங்களோட வயிற்றுப் பாட்டுக்கு இனி என்ன செய்வேன்? என் அம்மச்சி வீட்டு மூர்த்தியே . . . உனக்கு ரெண்டு கோழி நேர்ந்திருக்கேன் தாயே . . . உப்பள்ளிப் போட்டவனை ரெத்தம் கக்க எம் முன்னாலே நடக்க வெச்சி காட்டித் தந்துடமாட்டியா . . ." மண்ணையள்ளி தன் தலையின் பின்னால் வீசியெறிந்தாள். பிறகு என்னென்னவோ புலம்பியபடி உள்ளே போனாள்.

"போகட்டும்." நான் சொன்னேன்.

குட்டப்பன் சொன்னான்: "எனக்குக் கொஞ்சம் வாட்ச் ரிப்பேர் தெரியும். பெரிய பிரச்சினை ஒண்ணுமில்லாம சரியாக்கிக் கொடுப்பேன்."

குட்டப்பனின் வாட்ச் ரிப்பேருக்கான சாதனங்களிருக்கும் பெட்டியைச் சுமந்துகொண்டு ஐந்தாறு மாதங்கள் அவனுடன் திரிந்தேன். ஒவ்வொரு வீட்டுக்குள்ளும் ஏறி வாட்ச் ரிப்பேர் செய்யணுமா என்று கேட்கும் வேலை என்னுடையது. நிறைய சொந்தக்காரர்களின் வீடுகளுக்கும் சென்றேன். "குறவனோட பெட்டியை நாயர் பையன் சுமப்பதா?" இதை அவர்களால் ஏற்றுகொள்ளவே முடியவில்லை. பட்டினி கிடக்கும்போது கூப்பிட்டு ஒரு பிடி சோற்றுப் பருக்கைத் தந்ததில்லை; நாலணா காசு தந்து ஏதாவது வாங்கிச் சாப்பிடு என்று சொன்னது கிடையாது. வீட்டிற்கு வந்து அம்மாவிடம் பராதி மட்டும் சொன்னார்கள். நான் சொன்னேன்:

"குறவனோ துலுக்கனோ தோட்டியோ, எவனா இருந்தாலும் எனக்கு ஒண்ணுதான். என்னால பட்டினி கிடந்துச் சாக முடியாது."

எனக்கு இதெல்லாம் அவமானமாகத் தெரியவில்லை. ஒருவித எதிர்ப்பைக் காட்டுவதாக மட்டுமே தோன்றியது. சிலர் கேலி செய்து சிரித்தார்கள். நான் கண்டுகொள்ளவே இல்லை. சொல்லிக்கொள்ளும்படியான வேலைகளெதுவும் கிடைக்காது. இருந்தாலும் பசியைப் போக்கிக்கொள்ள குட்டப்பன் ஏதாவது தருவான். நாங்கள் ஒருநாள் வாழத்துங்கலிலிருந்து தட்டாமலைக்குப் போகும் வழியில் சில உறவினர்கள் குட்டப்பனைத் தடுத்து நிறுத்தினார்கள்:

"டேய் கொறவா, உன் பெட்டியைச் சுமக்குற வேலைக்கு யார் சொல்லிடா நீ இவனை சேத்துக்கிட்டே?" நான் முன்னால் வந்து நின்றேன்.

"எந்த வழியுமில்லாம நான்தான் வந்து சேந்தேன் . . . ஆசான்கிட்ட எதுவும் கேட்க வேண்டாம்."

"ஆசானா . . ?" பெட்டியைப் பிடிங்கிக்கொண்ட ஒருவன் தார் ரோட்டில் அதை ஓங்கி அடித்தான். பூதக்கண்ணாடியும் லென்சுமெல்லாம் உடைந்துச் சின்னாபின்னமாகி ரோட்டில் கிடந்தன.

குட்டப்பன் ஓ . . .வென்று அலறிவிட்டான்.

குட்டப்பனின் வாட்ச் ரிப்பேரிங் அதோடு முடிந்தது. பாவம்!

***

அப்பா இறந்த பிறகு உதவிக்கு யாருமே இல்லாத நிலை; வறுமை. வீடும் பாதுகாப்பாக இல்லை; சமையல்கட்டுக்குக் கதவு கிடையாது; அம்மாவுக்கும் சகோதரிகளுக்கும் காவலாக நான் வாசலருகே படுத்திருப்பேன். தூக்கம் வராது. யாராவது வந்துவிடுவார்களோ? இப்படியிருக்கும்போது தொடர்ந்து இரவு நேரங்களில் வீட்டைச் சுற்றி ஆரவாரமும் கூக்குரலும் கேட்கத் தொடங்கியது. பெண்களிருக்கும் வீடு; எங்களை அவமானப்படுத்தும் ஏற்பாடுகள். ஒருநாள், வெட்டரிவாளுடன் நான் வெளியே குதித்தேன். நான் பாய்ந்து வருவதைக் கண்டதும் ஓடி விட்டார்கள். வெட்டரிவாளுடன் நின்று நான் எகிறிக்கொண்டிருந்தேன். அப்போது மட்டும் கையில் கிடைத்திருந்தால் நிச்சயமாக ஒருத்தனையாவது போட்டிருப்பேன். ஆவேசத்துடன் வீட்டைச் சுற்றி நடந்துகொண்டிருந்தேன். "எந்த நாய்டா அவன்? வாடா பாப்போம்" என்றெல்லாம் அலறிக்கொண்டிருந்தேன். மேற்குப் பக்கமாக நடக்கும்போது சிறு சலசலப்பு தென்பட்டது. நான் அசையாமல் நின்று

கவனித்தேன். வேலியினருகில் ஒருவன் பதுங்கியிருந்தான். சரி, இன்று இவனது கடைசி நாள். வருவதைப் பிறகு பார்த்துக்கொள்ளலாம். வெட்டரி வாளை இறுகப் பற்றிக்கொண்டேன். வெட்டும்போது வயது உறுதியைப் பாதித்து விடக்கூடாது. எல்லா சக்தியையும் வலது கைக்குக் கொண்டுவர வேண்டும். இரண்டாகப் பிளக்க வேண்டும் அவன் தலை. மெதுவாகப் பின்னால் போய் "டேய் நாயே . . ." என்று வெட்டரிவாளை ஓங்கும்போது பரிச்சயமான ஒரு பரிதாபக் குரல்:

"வெட்டிடாதடா மணியா . . . நான் குட்டப்பன்."

எனது சப்த நாடிகளும் ஒரு நொடி தளர்ந்துபோனது. அவன் வாங்கித் தந்த சோறு எலும்பில் கிடந்துக் குத்துகிறது. பிறகு யோசித்தேன்: இவன் யார் எனக்கு? வெறும் ஐந்தாறு மாதப் பழக்கம். தின்ற சோற்றுக்கு வேலை செய்திருக்கிறோம். செய்த போக்கிரித்தனத்திற்கு இவன் சாகத்தான் வேண்டும். என்றால்தான் மற்றவர்களும் பாடம் படிப்பார்கள்.

"நீயாடா . . . நாயே?" என்றபடி ஓங்கி வெட்டினேன். விலகிக்கொண்டான். வெட்டு பின்னால் நின்ற மரத்தில் ஆழமாகப் பதிந்தது. இழுத்தெடுத்த வலது கையை எட்டிப் பிடித்துக்கொண்டான். அடுத்தக் கையால் அடித்தேன். அதையும் பிடித்துக்கொண்டு சொன்னான்:

"உன் ஆசான்னு நினைச்சாவது என்னை மன்னிச்சுடு. எனக்கு எந்த கெட்ட நோக்கமும் கிடையாது; கூச்சல் போட்டா காசு தர்றதா சொன்னானுங்க. அதனாலதான் கூவினேன். எனக்கு வேற எந்தப் பொழைப்புமே இல்ல தம்பீ . . ."

வெட்டரிவாளை அப்படியே விட்டுவிட்டு அந்த மரத்தின் கீழ் உட்கார்ந்துவிட்டேன். குட்டப்பனும் உட்கார்ந்தான்.

"பட்டினி கிடக்குறோம் . . . மூல முளை. சைக்கிள்ல உட்காரவே முடியல. தாங்க முடியாத கஷ்டம். இங்கே வந்து கூச்சலிட்டா தினமும் அஞ்சு ரூபா தர்றோம்னானுங்க."

"சொன்னவன் எவன்?"

"உன் சொந்தக்காரனுங்க."

"ஆள் யாரு?"

"இல்லை, ஒரு கொலை நடக்க நான் காரணமாக இருக்க மாட்டேன்; உங்க குடும்பம் இங்கிருந்து போயிடுறதுக்காகத்தான் இந்த வேலை . . . இங்கிருந்துப் போயிடு, தம்பீ . . . அதுதான் நல்லது."

"உங்களுக்குத் தெரியாதா, இது எங்க வீடுதான்னு?" நான் பரிதாபமாகக் கேட்டேன்.

"தெரியும்." தலையைக் குனிந்தபடி சொன்னான்.

"அப்புறம் . . ?"

அவன் பாக்கெட்டிலிருந்த ஐந்து ரூபாய் நோட்டையெடுத்து விரித்தான். மீண்டும் அதை அப்படியே சுருட்டி பாக்கெட்டில் வைத்துவிட்டுத் திரும்பி நடந்தான். அவன் உடுத்திருந்த வேட்டியின் பின் பகுதியில் துவைத்த பிறகும் போகாத மூல நோயின் இரத்தக் கறை நிலவு வெளிச்சத்தில் தெரிந்தது.

நாங்கள் வீட்டைவிட்டுப் போய் விட்டோம். இன்றும், இதை எழுதுகிற 2007லும் அந்த 82 சென்ட் நிலம்; எங்களைக் காலி செய்ய வைத்த அந்த நிலம், காடும் புதரும் மண்டிப் போய் அப்படியே கிடக்கிறது. பொன்னும் பணமும் மண்ணும் சில அறங்களுடன் கூடியவை. யாரையும் வேதனைப்படுத்திவிடக் கூடாது. மண்ணில் வாழுகிற பாம்பாக இருந்தாலுங்கூட! அதன் வேதனை அங்கேயே படிந்து கிடக்கும். எங்களுடைய வேதனை அங்கே படிந்து கிடக்கிறது. அந்த வலி எப்போது இல்லாமலாகிறதோ அன்றுதான் அதற்கு சாபவிமோசனமும் கிடைக்கும்.

## 6 - கொலையுண்ட அப்பா

என்னுடைய அப்பாவைக் கொலை செய்யும் திட்டத்தை நான்குபேர்களாகச் சேர்ந்து நிறைவேற்றினார்கள். அப்பாவின் உறவினர்களான ஒரு தம்பியும் மருமகனும்தான் இதில் முக்கியமானவர்கள். அந்த இரண்டு பேரும் இன்று உயிருடனில்லை. வாழத்துங்கலில் அவர்களுடைய பிள்ளைகள் மிகப்பெரிய அந்தஸ்துடன் இன்றும் வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள்.

அப்பாவின் பெயர், கறுத்தக் குட்டன்பிள்ளை, ஆறரையடி உயரமிருப்பார். உயரமென்பது பொதுவாகவே ஒரு தலைமுறை இடைவெளிவிட்டுதான் வாய்க்கும். தாத்தா - பேரன் என்கிற வரிசையில். ஆக, எனக்கு அது வாய்க்கவில்லை. மட்டுமல்ல, சின்ன மனிதர்களால்தான் வீடுகளுக்குள் சுலபமாக நுழைந்துவிட இயலும். செய்கிற வேலைக்குத் தோதுவாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் அந்த ஆண்டவனே என்னை இப்படிப் படைத்திருக்கலாம்.

அன்றெல்லாம் வீட்டிலிருப்பதை விடவும் அதிக நேரத்தை அப்பா, இரவிபுரம் 17ஆம் நம்பர் கள்ளுக்கடையில்தான் செலவிட்டார். கங்காதரன் எனும் பிரபலமான ஒரு வைத்தியர் இருந்தார். அவருடைய வைத்திய சாலையின் எதிரில்தான் கள்ளுக்கடை இருந்தது. இன்றைய காலகட்டத்தைப்போல் கள்ளுக்கடைகள் அப்போது சிறியதாக இருக்காது. கள்ளுக் கடைகளென்பது அன்று மிகப்பெரிய கலாச்சாரமாக இருந்தது. ஏராளமான மக்கள் ஒன்று கூடுகிற இடம். அதற்கேற்ப விசாலமாகவுமிருக்கும்.

அப்பா, எப்போதும்போல் ஒருநாள் கள்ளுக்கடைக்குப் போனார். இரவிபுரம் பிரபாத் தியேட்டரில் அன்று அப்பாதான் எல்லாமே! அப்போதெல்லாம் சினிமா தியேட்டர் என்பது அனைத்து மக்களையும் கவருகிற இடம். அங்கே வேலை பார்ப்பவர்களுடன் அறிமுகமிருப்பது கௌரவமான விஷயமாகக் கருதப்பட்டது. மனைவியும் குடும்பமுமாக சினிமாவுக்குப் போகும்போது வாசலில் நின்று டிக்கெட் கிழிப்பவன் இலேசாகச் சிரித்துவிட்டால் மிகப் பெரிய மரியாதையாகக் கருதப்படும்.

ஆகவே, கள்ளுக் கடைக்குள் இருக்கும்போது ஆங்காங்கே இருந்து அப்பாவுக்குக் கள் வரும். போதாக்குறைக்கு அப்பா மிக அழகாகப் பாடுவார். சாஸ்திர ரீதியாக சங்கீதம் பயின்றவர். புராதனமான செட்டிநடைக் கோயிலின் புனருத்தாரண காலத்திலிருந்தே முதல் பஜனை அப்பாவுடையதுதான். கள்ளுக் கடையில் நினைவிழந்து உட்கார்ந்திருந்தாலும் சங்கீதத்தில் எந்தக் குறையுமிருக்காது. இன்றுபோலவே அன்றும் பாடுபவர்களுக்குக் கள்ளுக் கடையில் நல்ல மதிப்பிருந்தது. இந்த வகையிலும் அப்பாவுக்குக் கள் கிடைக்கும். எங்கே இருந்து வருகிறது என்று கேட்க வேண்டிய தேவையே இருக்காது. குடித்தால் மட்டும் போதும்.

அன்றும் ஒரு குப்பி கள் வந்தது. அடுத்த அறையிலிருப்பவர்கள் கொடுத்தனுப்பியதாகச் சொன்னார்கள். அப்பாவைக் கொல்ல வேண்டிய தேவை அவர்களுக்கிருந்தது. களத்தூர் மீனாட்சியெனும் அப்பாவின் சகோதரியின் சொத்துக்கள் முழுவதும் சட்டபூர்வமாக அப்பாவுக்குத்தான் வந்து சேர வேண்டும். அத்தை உயிரோடிருக்கும்போது அப்பாதான் தோப்புகளிலுள்ள இளநீரைப் பறித்துக் கடைக்குப் போடுவார். அப்பாவைக் கொல்வதற்கு விஷம் கொடுத்தவர், ஒரு கம்பவுண்டர். கள்ளில் கலந்து கொடுத்தார்கள். வாந்தியெடுத்துச் செத்துப்போகிற மருந்து. இரவில் வீட்டுக்கு வந்த அப்பா வாந்தியெடுக்க ஆரம்பித்தார். அதிகாலை இரண்டு மணிவரைக்கும் சிகிச்சைசெய்து பார்த்த கங்காதரன் வைத்தியர் வேறு வழியில்லையென்று சொல்லிவிட்டார். மாவட்ட மருத்துவமனைக்குக் கொண்டு போனோம். காலையில் வயிறு கழுவுவதற்காக வைக்கப்பட்டிருந்தார். யாரோ வந்து எங்களிடம் விவரத்தைச் சொல்லி என்னையும் இளைய சகோதரியையும் மட்டும் ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போனார்கள். அப்பா மயங்கிக் கிடந்தார். நான் அவரது நெற்றியைத் தடவினேன். சிரமப்பட்டு கண்களைத் திறந்து பார்த்தவர், தலையணைக்கடியில் இருக்கும் பர்சைக் காட்டினார். எடுத்துத் திறந்து பார்த்தேன். ஒரு ரூபாய் நோட்டும் இரண்டு பத்து பைசா துட்டுகளுமிருந்தன. காப்பி குடித்துவிட்டு வரச்சொன்னார். இரண்டாவது மாடியிலிருந்து கீழே வந்து சாயா குடித்துவிட்டுத் திரும்பி வரும்போது அப்பா பிணமாகக் கிடந்தார். அப்பாவைக் கொண்டுவந்தவர்களுக்குப் பிறகு அவசரம். போஸ்ட்மார்ட்டம் எதுவும் நடக்கவில்லை. அவசர அவசரமாக வண்டியில் அள்ளிப்போட்டார்கள். அப்பா வண்டியில் கிடக்கிறார். பல லட்ச ரூபாய் சொத்துக்கான ஒரேயொரு வாரிசுதாரர்.

பிறகுதான் நரக வேதனைகள் ஆரம்பமாயின. அப்பாவின் அம்மாவுக்கு

உரிமைப்பட்ட சொத்துக்களிலிருந்து சிறு மண் பரல்கூட எங்களுக்குக் கிடைக்கவில்லை. எங்களுக்காகப் பேசவும் யாருமில்லை. நான் அன்று ஐந்தோ ஆறோ படித்துக்கொண்டிருந்தேன். இடிந்து விழ ஆரம்பித்திருந்த வீடு. கதவில்லாத சமையல் கட்டு. இதுதான் அப்பா இறக்கும்போதுள்ள எங்களின் நிலை. நான்கு சகோதரிகள். சிறகு முளைக்காத நான். அம்மா திகைத்துப்போய் நின்றாள். இரவில் வாசல் கதவில்லாத சமையல் கட்டின் சாய்ப்பில்தான் நாங்கள் படுப்போம். ஒரு புறம், வீடு நிறைந்து நிற்கும் வயதுக்கு வந்த இரண்டு சகோதரிகள். மூங்கில் தட்டியால் மறைக்கப்பட்டத் தடுப்பின் பக்கத்தில் நான். எங்களைக் காலிசெய்ய வைப்பதற்கான முயற்சிகள் வேகமாக நடந்துகொண்டிருந்தன. முதலிலெல்லாம் இரவு நேரங்களில் ஆங்காங்கே ஆட்கள் பதுங்கியிருப்பது போல் சத்தம் கேட்கும். நான் குதித்தெழுந்து யாருடா என்று குரல் கொடுத்ததும் முடிந்த அளவுக்கு ஆரவாரத்துடன் ஓடுவார்கள். ரோட்டில் ஓடுவதற்கான வாய்ப்பிருந்தாலும் வீடுகளிருக்கும் வழியாகத்தான் ஓடுவார்கள். என்றால்தானே அவர்கள் இந்தக் குடும்பம் இங்கே இருப்பது பெரிய தொந்தரவாக இருக்கிறதென்று நினைப்பார்கள். கடைசியாக ஓடுபவன் ஏதாவது மோசமான தகவலைச் சொல்லியபடியே ஓடுவான்.

இதில் என்னுடைய பாட்டியின் கணவன்தான் முக்கியமான வில்லன். வீட்டில் கூரைவேய விடமாட்டான். ஒரு இளநீர் பறித்துவிட்டால் அன்று முழுவதும் ரகளைதான். நாங்கள் அங்கிருந்து போய்விட வேண்டும். இதுதான் அவர்களது தேவை. கடைசியாக ஒரு திட்டம் முன்வைக்கப்பட்டது. இந்தச் சொத்தில் தாய்க்கும் பிள்ளைகளுக்கும் எந்தவித உரிமைகளும் இல்லையென்று கையொப்பமிட்டுத் தர வேண்டும். பதிலுக்கு வாரத்தில் மூன்று நாட்கள் ஐந்து யூனிட் அரிசி வீட்டுக்கு வந்து சேர்ந்துவிடும். அம்மாவின் பங்கில் சின்னதாக ஒரு வீடு கட்டித் தரப்படும். வேறு வழியில்லாமல் அம்மா இதற்கு ஒப்புக்கொண்டார். 1500 ரூபாய் செலவில், இரண்டு அறைகளுடன்கூடிய, ஓடிட்ட, வேலைகள் முழுமையடையாத ஒரு வீட்டைக் கட்டித்தந்தார்கள். தரைக்கு சிமெண்ட் போடப்படவில்லை. ஒரு அறைக்கு மட்டும்தான் கதவு. மைனர் காட்ட வேண்டிய சொத்தாக இருந்ததால் அப்பா இதை மட்டும் விற்காமல் விட்டிருந்தார். 94 சென்ட் தோப்பை நூறு ரூபாய்க்கு விற்று, அதை ஒரே வாரத்தில் குடித்துத் தீர்த்தவர் அப்பா.

## 7 - களத்தூர் மீனாட்சி

அப்பாவின் உறவிலுள்ள ஒரு சகோதரி, களத்தூர் மீனாட்சி. இவருடைய மகள் தேவியம்மா. சாட்சாத் அந்த தேவியை விடவும் அழகாக இருப்பாள். கால்வரை நீண்டுக் கிடக்கும் தலைமுடி. மகள் இறந்த பிறகு மீனாட்சியம்மா பக்தியில் மூழ்கி வாழ்ந்து இறந்தார். நெருங்கிய வாரிசுரிமையாக இவரது சொத்துக்கள் அப்பாவுக்குத் தான் வந்துசேர வேண்டும். அப்பாவின் அம்மா பெயர் ஈஸ்வரியம்மா. பாட்டிக்கு ஒரே வாரிசு அப்பாதான். நியாயமாக இந்தச் சொத்துக்கள் அப்பாவுக்குத்தான் வந்துசேர்ந்திருக்க வேண்டும். அப்பா இல்லையென்றால் பாட்டியின் சகோதரி பிள்ளைகளுக்குப் போகும். அப்பா இறந்துபோன கொஞ்ச நாட்களில் களத்தூரம்மாவும் இறந்து போனார். அவரது சொத்துக்களைச் சித்தப்பாக்கள் சேர்ந்து பங்கு போட்டுக்கொண்டார்கள். சில கால்பெட்டிகளும் அங்கிருந்தன. என்னுடைய அக்கா ஒரு பெட்டியைத் திறந்து பார்த்தாள். சிவப்புப் பட்டுத் துணியில் பொதிந்த ஒரு தங்கச் சூலாயுதமும் கொஞ்சம் தங்க நாணயங்களுமிருந்தன. ஒரு சித்தப்பா ஓடி வந்து அவளை விரட்டிவிட்டு பெட்டியை மூடினான். சில முக்கியஸ்தர்கள் வந்தார்கள். இருந்த சின்னச் சின்னச் சச்சரவுகளைப் பேசித் தீர்த்தார்கள். பிரச்சினையை யாரும் அதிக நேரம் நீட்டிக்க விரும்பவில்லை. வேறு சில ஆட்களும் அங்கே நின்றிருந்தார்கள். யாரோ என் காதில் சொன்னதன்படி நான் முன்னால் சென்று: "இது எங்க அப்பாவுக்கும் உரிமைப்பட்டதுதானே . . ? இதில என்னவெல்லாம் இருக்குன்னு நாங்களும் அறியணும்." என்றேன்.

திடீரென்று அங்கே அமைதி படர்ந்தது. பலரது முகங்கள் வெளுறின. ஒரு உறவினர் பரிவுடன் முன் வந்து ஊர்க்காரர்கள் அறியும்படியாகச் சொன்னார்: "எல்லாத்தையும் வீட்டுல கொண்டுவந்த பிறகு உங்களுக்குத் தேவைப்பட்டதை நாங்க தராமலா இருப்போம்?" பிறகு ஒவ்வொரு பெட்டியாக என் தலையிலும் சகோதரிகளின் தலையிலும் ஏற்றி வைத்தார்கள். சுகபோக உறவினர்களால் சுமடு தூக்க முடியுமா? தாத்தாமார்களின் வீட்டுக்கு நானும் சகோதரிகளுமாகச் சேர்ந்து 13 பெட்டிகளைச் சுமந்துகொண்டு வந்து சேர்த்தோம். அண்டா, குண்டா, வார்ப்புருளி, இன்னும் சில சின்னச் சின்னப் பெட்டிகள். அனுபவிக்க

வேண்டியவர்கள் சுமட்டுக்காரர்களாக மாறினோம். விதி செய்த விபரீதம்.

பெட்டிகளில் ஒன்றல்ல, அதிலிருந்து ஒரு சிறு துணுக்குக் கூட எங்களுக்குக் கிடைக்கவில்லை. என்னுடைய வருத்தமெல்லாம் அதிலொரு காலிப்பெட்டிக் கிடைத்திருக்குமென்றால் புத்தகங்கள் வைக்கலாமே என்பதுதான். நான் நன்றாகப் படிப்பவன். வறுமை மட்டும்தான் என்னுடைய போதாமை. கிளாஸ் லீடராக இருந்தும் புத்தகமில்லையென்று பெஞ்சின் மீது ஏறி நிற்பவனின் அவமானம் மிகப் பெரியதாக இருந்தது. ஆகவேதான் ஒரு பழைய பெட்டியாவது . . . யாருமே என்னைக் கவனித்ததாகத் தெரியவில்லை. அவர்களுடைய கண்களில் பேராசை மட்டும்.

பிறகுதான் பசி தீவிரமடைய ஆரம்பித்தது. எங்களைக் காலி செய்ய வைத்த கொஞ்ச நாட்களிலேயே வீட்டுக்கு அனுப்பி வைப்பதாகச் சொல்லியிருந்த அரிசியும் நின்று போனது. அப்பாவும் நானுமாகப் போய் இளநீர் பறிக்கும் தோப்புகளில் எனக்குத் தடைபோடப்பட்டது. எந்த உறவினரும் எங்களுக்காகப் பரிந்து பேச வரவில்லை. ஒரு இளநீரை அவன் குடித்துவிட்டுப்போகட்டுமென்று சொல்ல யாருமே இல்லை. பணமும் அதிகாரமும் இருக்குமிடத்தில் தயவு தாட்சண்யங்களுக்கு இடம் கிடையாதல்லவா?

இரவில் அம்மா எங்களைப் பாட்டுப் பாடித் தூங்க வைப்பாள். பழைய கவிதைகளை நல்ல ராகத்துடன் பாடுவாள். அம்மா நல்ல வசதியான குடும்பத்தில் பிறந்தவள். அப்போது படித்ததுதான் கவிதைகளெல்லாம். சங்ஙம்புழயின் 'வாழைக் குலை'யை அம்மா ராகமாகப் பாடும்போது அம்மாவுக்குத் தெரியாமல் நான் ஏங்கியேங்கி அழுவேன். அம்மா ஒரு தடவை இதைப் பார்த்துவிட்டாள். "டேய், இது வெறும் பாட்டுதானேடா" என்று சொல்லி என்னைத் தேற்றினாள். அந்தப் பாடலில் எங்களுடைய மோசமான நிலைமை சொல்லப்பட்டிருப்பதாகத் தோன்றியதால்தான் நான் அழுதேன்.

அப்பாவின் பேரிலும் சொத்துக்கள் இருந்தன. பல உறவினர்கள், கள்ளுக்குக் காசு கொடுத்து அதைக் கைவசப்படுத்திக்கொண்டார்கள். எங்களைக் காலி செய்ய வைத்த நிலம் இன்று காடு மண்டிக் கிடக்கிறது. ஒரு வீடிருந்தது. அதில் இரண்டு குடும்பங்கள் தங்கியிருந்தன; வாழ்க்கையில்லை. இன்றும் அப்படியே கிடக்கிறது. உழைக்காமல், உபாயமாகக் கை வசப்படுத்திக் கொள்கிற சொத்தும் சரி, பணமும் சரி நிலைக்காது. ஆனால், என்மீது எல்லாருக்குமே பயம்தான்.

என்றாவதொரு நாள் பழிவாங்கி விடுவானோ என்ற பயம். நான் அதற்கெல்லாம் போகவுமில்லை. அது என்னுடைய வேலையுமில்லை. விதியின் வேலை. விதி அதைச் செய்யவும் செய்தது.

முக்கிய வில்லனாக நான் குறிப்பிட்ட அந்த ஆள், எங்களது குடும்பத்திற்குத் துரோகம் செய்து இல்லாமலாக்கிய அவனுடைய விதி, இறுதிக் கட்டத்தில் என்னெதிரில் கொண்டுவந்து சேர்த்ததுடன் நான் பார்ப்பதற்காகவே என் முன்னால் அவனைப் பந்து விளையாடியது.

1999ஆம் வருடம். தண்டனைகளெல்லாம் முடிந்து அப்போது கொல்லம் ஈஸ்ட் போலீஸ் ஸ்டேஷனில் வேலை பார்த்து வந்தேன். ஏஎஸ்ஐ எழுந்து நின்று சொல்லிக்கொண்டிருந்த, ஒரு வழக்கின் பகர்ப்பை நான் பெஞ்சில் உட்கார்ந்து எழுதிக்கொண்டிருந்தேன். பழைய திருடன் எழுத்தராக இருக்கும், இயல்புக்கு மாறான ஒரு விஷயம் அங்கே நடந்துகொண்டிருந்தது. அப்போது அழுக்கடைந்த வேட்டியும் குற்றித்தாடியுமாக ஒரு மனிதர். யார், எதற்காக வந்திருக்கிறார் என்றெல்லாம் நான் கவனிக்கவே இல்லை. ஏஎஸ்ஐ, சொல்வதை நிறுத்திவிட்டு கெட்ட வார்த்தைப் பேச ஆரம்பித்துவிட்டார். நாய்க்குப் பொறந்த . . . பு . . . மவனே, தண்ணித் தெளிச்சு விட்டுருக்காடா? நரைச்சு இவ்வளவு வயசான பிறகும் . . . என்றெல்லாம்.

பெஞ்சில் உட்கார்ந்திருந்த நான் திடீரென்று எழுந்ததும் அவர் என்னைப் பார்த்தார். நானும் அப்போதுதான் பார்க்கிறேன். அந்த சித்தப்பா. மனோரீதியாக அவர் அந்த இடத்திலேயே செத்து விழுந்தார். அவரும் சேர்ந்து திருடனாக்கிய நான் மின்சார விசிறியின் கீழ் போலீசின் இருக்கையில் உட்கார்ந்து எழுதிக்கொண்டிருக்கிறேன். அவர் அங்கேயே அஸ்தமனமாகி விட்டார். பிறகு ஒருபோதுமே அவர் சுய உணர்வுடனிருப்பதை நான் கண்டதில்லை.

உண்மையில் அவர் தவறெதுவும் செய்யவில்லை. மடித்துக் கட்டிய வேட்டியுடன் வராந்தாவில் பெஞ்சில் உட்கார்ந்திருக்கிறார். அவரது அழுக்கடைந்த வேட்டியும் மேல்துண்டும் ஏஎஸ்ஐக்கு சுத்தமாகப் பிடிக்கவில்லை. ஏதாவது பிச்சைக்காரனாக இருப்பானென்று நினைத்திருக்கலாம். இதுவும் தெய்வத்தின் தண்டனைதான். என்னைப் போட்டு மிதித்திருக்கிறார் இந்த மனிதர். ஆனால், நான் எதையுமே மனதில் வைத்திருக்கவில்லை.

நான் சொன்னேன்: "சே . . ! என்ன சார் இது, வயசான ஒரு மனுசனை

போயி . . . இவரு எனக்கு வேண்டப்பட்டவர் சார், எங்க ஊர்க்காரர்."

அவரது முன்னால் வைத்து நான் இப்படிச் சொன்னது ஏஎஸ்ஐக்குப் பிடிக்கவில்லை. அவர் சொன்னார்: "அதெல்லாம் உன் வீட்டுல. நான் ஏதாவது சொல்லும்போது இடையில பேசக் கூடாது."

பிறகு நான் எதுவும் பேசவில்லை. எதிரிகளாகவே இருந்தாலும் சரி ஸ்டேஷனுக்கு வரும்போது நான் மரியாதையுடன் தான் நடந்துகொள்வேன். மற்றொரு சம்பவம்: பாரில் வைத்து நடந்த ஒரு தகராறில் என்னை அடித்துக் கீழே தள்ளிய ஒரு ஆட்டோ டிரைவர், போலீஸ்காரனைக் கெட்ட வார்த்தைப் பேசியதாகக் கொண்டுவந்து ஸ்டேஷனில் உட்கார வைக்கப்பட்டிருந்தான். சில மணி நேரம் அப்படியே உட்கார்ந்திருந்தான். நான் சிஐயின் அறையிலும் எஸ்ஐயின் அறையிலுமாக ஏதாவது வேலைகளைச் செய்துகொண்டிருக்கிறேன். அவன் நினைத்திருக்கலாம், இவன் எப்படியும் நான்கு அடிகளாவது அதிகமாக வாங்கித் தந்துவிடுவானென்று. நான் அவனுக்குச் சாயா வாங்கிக்கொடுத்தேன். யாராவது திட்டினால் போலீஸ்காரர்களால் தாங்கிக்கொள்ளவே முடியாது. இப்படியே விட்டால் பிறகு பொதுமக்கள், போலீஸ்காரர்களை எப்படி மதிப்பார்கள்? ஒரு எஸ்ஐ வந்து ஓங்கி ஒன்று கொடுத்தார். இரண்டாவது தடவை கையை ஓங்கியதும் நான் எட்டி அவரது கையைப் பிடித்துக்கொண்டு "விட்டுடுங்க, சார்" என்றேன்.

எஸ்ஐ எச்சரித்துவிட்டு அனுப்பினார். அவன் சொன்னான்: "தப்பு நடந்து போச்சி. நீங்க இவ்வளவு நல்லவர்னு எனக்குத் தெரியாமப் போச்சி."

எஸ்ஐ என்னைக் கூப்பிட்டார். "உங்கிட்ட யாரு சொன்னா, என் கையைப் பிடிக்கிறதுக்கு? மற்றவங்க பார்த்தா என்ன நினைப்பாங்க? ஒரு திருடன் எஸ்ஐயோட கையை . . ."

"இனிமேல் இப்படி நடந்துக்க மாட்டேன் சார் . . ." இந்த இரண்டு வழக்குகளில் மட்டும்தான் நான் தலையிடவும் செய்தேன்.

எங்கள் குடும்பத்தைக் குட்டிச் சுவராக்கிய அந்த மனிதர் மீது எனக்குப் பகையெதுவும் தோன்றவில்லை. காலம், எல்லாவற்றையும் மரத்துப்போகச் செய்திருந்தது. எஸ்ஐ திட்டுவதைக் கேட்டுதான் அந்த மனிதர் எழுந்தார். பிறகுதான், அவர் புகார் கொடுப்பதற்காக வந்திருக்கிறார் என்று தெரியும். மனைவியுடனும் மகளுடனும் சண்டைபோட்டுவிட்டு பெரும் பணத்தின் நடுவே தனியாக வாழ்கிறார்.

துணைக்கு, குறவர் சமூகத்தைச் சேர்ந்த ஒரு பெண் மட்டும். அவரது பிள்ளைகள் அவ்வப்போது வந்து இவரிடமிருந்து பணத்தைத் திருடிச் சென்று விடுகிறார்களாம். ஒருதடவை பெரிய தொகையை எடுத்துக்கொண்டு போய்விட்டார்களாம். அதற்காகத்தான் புகார் கொடுக்க வந்திருக்கிறார். நான் அப்போதுதான் யோசித்தேன்: இந்த மனிதர் செய்து வைத்த எல்லா அயோக்கியத்தனங்களுமே பணத்துக்காகத்தான். சீட்டு நடத்தி நிறைய சம்பாதிக்கவும் செய்தார். அவரிடமிருக்கும் பணமெல்லாம் அழிந்துபோவது போன்ற எந்தத் தண்டனையையும் கடவுள் கொடுக்கவில்லை. செல்வம் முழுவதும் பாதுகாப்பாக இருக்கும் நிலையில் அதன் அர்த்தமின்மையை மட்டும் காட்டிக் கொடுத்திருக்கிறார். நல்லவர்களான மனைவியும் மக்களும் அவரை விட்டுப் பிரிந்துவிட்டார்கள். கடைசியில் அனாதையாக, பழந்துணிபோல், கசங்கிய காகிதமாகக் கிடந்தது அவருடைய பணம். விதி அத்துடன் நின்றுவிடவில்லை. பிறகு அறிய வந்த தகவல் நம்ப முடியாததாக இருந்தது.

மனநிலை பாதிக்கப்பட்டவராக, பக்கத்திலொரு வீட்டில் கொடியில் போட்டிருந்த அடிப்பாவாடையைத் திருடியிருக்கிறார். அவர்கள் அவரைப் பிடித்து வைத்தார்கள். மனநிலை சரியில்லாமல் செய்திருக்கிறார். உண்மையில் அவருடைய வீழ்ச்சியில் சிறிதளவுகூட எனக்கு மகிழ்ச்சியேற்படவில்லை. மாறாக, பயம் உருவானது. விதி, அதாவது நாமெல்லாம் செய்த, செய்கிற தவறுகளுக்கு தெய்வம் தரும் தண்டனை. அவரது உயிர் பிரிவதற்கு முன் இவ்வளவு சரியாகக் கணக்குத் தீர்க்கப்பட்டிருக்கிறது. பிறகு நீண்ட நாட்கள் அவர் உயிருடனிருக்கவில்லை.

## 8 - திருநெல்வேலி

சிறு வயது. நானும் நண்பன் ராஜனும் திட்டம் போட்டோம். நேராக, தமிழ்நாட்டுக்குப் போய்விட வேண்டும். அங்கே போய் வாழலாம். கொல்லம் ரயில்வே ஸ்டேஷனில், மீட்டர்கேஜ் பாதையில் தமிழ்நாட்டுக்குப் போவதற்காகக் காத்திருக்கும் நூற்றுக்கணக்கான பாண்டிகளைப் பார்த்ததும் தான் இப்படியான ஒரு வாய்ப்பிருப்பது எங்களுக்குத் தெரிய வந்தது. கொல்லம் - திருநெல்வேலி ரயிலில் சுகமானப் பயணம். கொஞ்ச தூரம் சென்றதும் சுரங்கப் பாதைகள், காடுகள், மலைத்தொடரின் மார்பைப் பிளந்தபடியே சென்றது ரயில். செங்கோட்டைக்கு வந்துசேர்ந்தோம். செங்கோட்டை தமிழ் நாட்டிலிருக்கிறது என்று தெரியாது. மட்டுமல்ல, அது தமிழ் நாட்டுடன் சேர்க்கப்பட்டு பத்து வருடங்கள்தானிருக்கும். பெரும்பாலும் மலையாள அடையாளங்கள்தான். வண்டி மீண்டும் புறப்பட்டது. பெரிய நகரமான திருநெல்வேலிக்குப் போய் ஓட்டல்களில் பாத்திரம் கழுவியாவது பிழைத்துக்கொள்ளலாம். ரயில் செங்கோட்டையைக் கடந்தது. ஒரு தமிழன் போலீஸ் வந்தேறினார். நாங்கள் டிக்கெட் எடுக்கவில்லை. ஏராளமாக இருந்த பாண்டிப்பெண்களில் யாருமே டிக்கெட் எடுத்ததாகத் தெரியவில்லை.

"டிக்கெட்டை எடுடா."

நாங்கள் டிக்கெட் எடுக்கவில்லையென்பதை அவர் முதல் பார்வையிலேயே புரிந்துகொண்டார். ஞானக் கண்ணன். அந்த எடுடா சொல்லில் எல்லாமே அடங்கியிருந்தது.

நாங்கள் சொன்னோம்: "டிக்கெட் எடுக்கல."

"இது உங்க அப்பன் வீட்டு வண்டியா?" கூடவே, ஒரு கெட்ட வார்த்தையும்.

நாங்கள் அமைதியாகச் சொன்னோம்: "இங்கே இருக்குற பாண்டிகளெல்லாம் டிக்கெட் எடுத்துட்டா வந்துருக்காங்க."

"ஜெயில்ல பிடிச்சித் தள்ளிடுவேன்" என்றார்.

"சரி, அதைச் செய்யுங்க" என்றோம். அவர் இதில் விழுந்தார்.

"சரி, கையில என்ன வெச்சிருக்கீங்க?"

"ஒண்ணுமே இல்லை" என்றோம்.

அவருக்குக் கோபம் வந்தது. என்னவெல்லாமோ அவர் சொன்னதில் எங்களால் புரிந்துகொள்ள முடிந்தது இதுதான்: அடுத்த ஸ்டேஷனில் இறக்கி விட்டுவிடுவேன். அங்கிருந்து கிழக்குப் பக்கமாகப் போனால் பெரிய காடு. நான் நல்லவனாக இருப்பதால் உங்களை அங்கே இறக்கிவிடுகிறேன். அதற்கு அடுத்த ஸ்டேஷனில் ரொம்ப மோசமான போலீஸ்காரர்கள் வந்து ஏறுவார்கள். அவர்கள் உங்களை பயங்கர காட்டுப்பகுதியிலுள்ள ஏதாவதொரு ஸ்டேஷனில் இறக்கி விட்டுவிடுவார்கள். ஒரு பர்லாங்கிற்குள் பத்து நாற்பது சிங்கங்கள் வாழ்கிற ஒரு கொடுங்காட்டில். டிக்கெட் எடுக்காதவர்களை எல்லாம் தமிழ்நாடு போலீஸ் சிங்கத்திடம் பிடித்துக் கொடுத்துவிடும்.

உண்மையாகவா?

நாங்கள் சுற்றுமுற்றும் பார்த்தோம். அவர் பொய் சொல்லி எங்களை ஏமாற்றுவதாக இருந்தால் பக்கத்திலிருப்பவர்கள் சிரித்திருப்பார்கள். இதையெல்லாம் புரிந்துகொள்வதற்கான அறிவு எங்களுக்கு இருந்தது. ஆனால் யாருமே சிரிக்கவில்லை. பயந்துபோய் உட்கார்ந்திருந்தார்கள். எங்களை மூலையில் போய் நிற்கச் சொல்லிவிட்டு, ஒரு ரூபாய், எட்டணா, நாலணா என்று வசூல் செய்ய ஆரம்பித்தார். எல்லாருமே எங்களைப் போல் டிக்கெட்டில்லாமல்தான் ஏறியிருந்தார்கள். அதனால் தான் பயந்துபோய் சிரிக்காமல் உட்கார்ந்திருந்தார்கள் என்று அப்போது எங்களுக்குத் தெரியவில்லை.

அடுத்த ஸ்டேஷனில் அவர் எங்கள் தோளைப் பிடித்து இறக்கி, மிகப்பெரிய கறார் போலீசாகத் தன்னைக் காட்டிக் கொள்ளுவதுபோல் எங்களை கேட்டின் பின்னால் கொண்டுபோய் வெளியே தள்ளினார். பிறகு கையை உதறிவிட்டு ஏதோ கெட்டவார்த்தையும் சொல்லிவிட்டு சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு வெளியேறினார். நாங்கள் பார்த்துக்கொண்டு நிற்கும் போதே ஒரு ஆட்டோவில் ஏறிப் போய்விட்டார். சரி, நாம் திரும்பவும் அதே ரயிலில் கிளம்பி விடுவோம் என்றிருக்கும் போது

நாங்களிருந்த அதே கோச்சில் மற்றொரு போலீஸ்காரர் ஏறினார். முதல் போலீஸ்காரர் சொன்னதுபோல் பார்ப்பதற்குப் பயங்கரமானவராக இருந்தார். பெரிய மீசை. அப்படியென்றால் அந்தப் பக்கத்தில் பயங்கரமான காடு இருப்பதாகவும் பர்லாங்கிற்கு நாற்பது சிங்கங்கள் வாழ்வதாகவும் சொன்னது உண்மையாகத்தானிருக்கும்.

ராஜன் கேட்டான்: "திருநெல்வேலி இதைவிட பெரிய ஊராக இருக்குமோ?"

எனக்கும் அந்த சந்தேகமிருந்தது: "இருக்குமோ?"

"பெரிய ஓட்டல்களொண்ணும் இந்த ஊரில் கிடையாதா?"

"இருக்குமே."

"அப்புறம் எதுக்குத் தேவையில்லாம சிங்கத்தோட வாயில போய் விழணும்?"

"அதான்."

எங்களுக்கு இங்கிலீஸ் தெரியாதல்லவா? ஒரு ஆளிடம் மலையாளத்தில் கேட்டோம்:

"இது எந்த ஊர்?"

"நெல்லை" என்றார் அவர்.

"டேய், நெல்லையாம்."

எங்களுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. நாங்கள் ஏற்கனவே கேள்விப்பட்டிருந்த ஊர். நெல்லையும் பெரிய நகரம்தான். நாங்கள் உற்சாகத்துடன் நடந்துகொண்டிருந்தோம். காலை நேரம். டிவிஎஸ் என்று ஒரு பிரம்மாண்டமான போர்டு தெரிந்தது. அதன் எதிரில் ரோட்டோரத்தில் இட்லி அவித்துக் குவித்துக் கொண்டிருந்தார்கள். பனி வெயில்போல் அதிலிருந்து ஆவி கிளர்ந்துகொண்டிருந்தது. அடுப்பிலிருந்த பெரிய கொப்பரையில் இட்லி வேகுவதுபோல் வயிறும் வெந்து கொண்டிருந்தது.

கொஞ்ச நேரம் அதன் எதிரில் நின்றோம். பாண்டிகள் வந்து கேட்கும்போது தட்டில் ஒரு இலைத் துண்டை வைத்து அதில் இட்லியை

வைத்து சட்னி ஊற்றிக் கொடுத்தார்கள். நாங்கள் புறப்பட இருக்கும்போது இராவணனைப் போல் தடித்த ஒரு பாண்டிக்காரன் வந்து கேட்டான்:

"மலையாளமா?"

"ஆமா." என்றோம்.

"வேலை தேடி வந்ததாக்குமா?" அவருக்குத் தெரிந்த மலையாளத்தில் கேட்டார்.

எங்களுக்குத் தெரிந்த தமிழில் நாங்களும் பதில் சொன்னோம்: "ஆமா."

"சாப்பிட்டுதா?"

"இல்லை."

"சரி, வா."

அவர் நடந்தார். பின்னால் நாங்களும் நடந்தோம்.

டிவிஎஸ்சின் பக்கத்திலுள்ள குறுக்குச் சாலை வழியாக அவர் நடந்துகொண்டிருந்தார். நிறைய இடைவழிகளினூடே இரண்டு கிலோமீட்டர் தூரம் நடந்து, ஒரு பழைய வீட்டில் போய் ஏறினார். பழையதாக இருந்தாலும் பெரிய வீடு. அங்கே வேறொருவன் - கறுப்பாக இருந்தான். தங்கச் செயின் அணிந்திருந்தான்.

"இரண்டுபேர் கிடைச்சாங்க . . ." எங்களை அழைத்துக் கொண்டு வந்த ஆள் சொன்னான்.

"சரி, சாப்பாடு கொடு."

பாலும் பழமும் இனிப்பான சோறும். நல்ல சுவையாக இருந்தது. நான் மட்டுமே ஆறேழு பழம் தின்றிருப்பேன். வயிறு நிறைந்தது.

தடியன் சொன்னான்: "நாளை காலை முதல் ஓட்டல் வேலை . . ."

"சரி." என்றோம்.

எங்களை உள்ளே அழைத்துக்கொண்டு போனான். ஆஸ்பெடாஸ் ஷீட்டுகளால் பிரிக்கப்பட்டிருந்த பல அறைகள். அதில் வேறு சில

பையன்களும் இருந்தார்கள். என்னை ஒரு அறையில் இருக்கச் சொன்னான். ஏற்கனவே அதில் ஒன்றிரண்டு பேரிருந்தார்கள்.

நான் சொன்னேன்: "எங்க இரண்டுபேருக்கும் ஒரே அறைதான் வேணும்." அவன் எந்தப் பதிலும் சொல்லாமல் ராஜனின் கையைப் பிடித்து எங்கோ அழைத்துக்கொண்டு போனான்.

என் அறையிலிருந்த பையன்கள் பீடி இழுத்தார்கள். என்னுடன் எதுவுமே பேசவில்லை. நானும் பேசவில்லை. அப்படியே படுத்துத் தூங்கிவிட்டேன். பையன்கள் தொந்தரவு செய்யவுமில்லை. எழுந்திருக்கும்போது சாயங்காலமாகி விட்டது. கொஞ்ச நேரம் அறைக்குள் அங்குமிங்குமாக நடந்துகொண்டிருந்தேன். வெளியே போய்விடலாமென்று பார்த்தபோதுதான் தெரிந்தது, அறை பூட்டப்பட்டிருந்தது. நான் தூங்கிக்கொண்டிருந்ததால் பூட்டியிருப்பார்கள்.

இரவானது. கூட இருந்த பையன்களைக் காணோம். சிறிது நேரத்தில் பழைய அந்தத் தடியன் வந்தான். கொஞ்ச நேரம் எதையெல்லாமோ பேசினான். ஓட்டலில் விருப்பம்போல் சாப்பிடலாம். தினமும் மட்டன் கிடைக்கும். ஆட்டிறைச்சி. என்னைப்போல் தடியனாக ஆகலாம். கொஞ்சம் காசும் கிடைக்கும்.

அவன் இதையெல்லாம் சொல்லிவிட்டு என்னைப் பக்கத்தில் பிடித்து உட்கார வைத்து, என் கையைப் பிடித்துத் தன் தொடையில் வைத்தான். எனக்கு நோய் பிடிபட்டது. எல்லாவனுடைய தொடக்கமும் இப்படித்தான் இருக்கும். கதவு வெறுமனே சாத்தப்பட்டுதான் கிடந்தது. நான் அவனைப் பிடித்துத் தள்ளிவிட்டு கதவைத் திறந்து வெளியே ஓடினேன். ஒடுங்கிய பெஞ்சில் உட்கார்ந்திருந்த தடியன் அப்படியே விழுந்துவிட்டான். வெளியிலிறங்கும்போது ராஜன் உள்ளே வந்துகொண்டிருந்தான். என்னைக் காணாமல் அழுது ஒப்பாரி வைத்திருக்கிறான் அவன்.

நான் ராஜனிடம் சொன்னேன்: "டேய், ஓடிடுவோம். இங்கே மற்ற வேலை . . ."

"பிடிங்கடா அவனை . . ." தடியன் பின்னால் ஓடி வந்தான்.

நாங்கள் இறங்கி ஓடினோம். கொஞ்சதூரம்வரை யாரோ பின்னால் ஓடி வருவது போலிருந்தது. பிறகு யாரையும் காணவில்லை.

பாதை தெரியாது. டிவிஎஸ் என்ற மூன்று பெரிய எழுத்துக்கள் நினைவுக்கு வந்தன.

மணி எட்டுதான் ஆகியிருக்கும்.

டிவிஎஸ் எங்கே இருக்கிறதென்று விசாரித்து மீண்டும் ரயில் நிலையத்திற்கு வந்துசேர்ந்தோம். மற்ற வேலை என்றறிந்ததுமே எனக்கு வெறுப்பாகி விட்டது. எப்படியாவது ஊர் போய்ச் சேர்ந்தால் போதும். "டேய், ராஜன், நமக்கு சிப்பிப் பொறுக்கி அவிச்சுத்தின்னோ எவன் தோப்பிலேயாவது போய் கிழங்கு புடிங்கித் தின்னோ பசியைத் தீத்துக்கலாம். இங்கெல்லாம் எதுவும் சரிப்படாது."

கொல்லத்துக்கு மறுநாள்தான் டிரெயின். அதுவும் செங்கோட்டையிலிருந்துதான். செங்கோட்டைக்கும் மறுநாள்தான். அங்கிருந்து அடுத்தநாள் சாயங்கால டிரெயினில் கொல்லத்துக்குப் போய்விடலாம்.

நல்ல பசி. காலையில் தின்றது மத்தியானத்திற்குள் ஜீரணமாகிவிட்டது. ஓடியதும் நடந்ததுமெல்லாம் சேர்ந்து பசியை அதிகமாக்கிவிட்டது. பொழுதை எப்படிக் கழித்தோம் என்றே தெரியவில்லை. செங்கோட்டைக்கு வந்து சேர்ந்தோம். பயங்கரமான பசி. டிராக்கில் ஒரு பன் கிடந்தது. அதே டிராக்கில் தூரத்தில் டிரெயின் வந்துகொண்டிருந்தது. அதிலிருந்து மனிதக் கழிவுகள் விழலாம். யோசிக்க நேரமில்லை. பாய்ந்துபோய் அந்த பன்னை எடுத்தேன். அடுத்த குதிப்பில் ஃபிளாட் பாமில் ஏறிவிட முயற்சி செய்தேன். முடியவில்லை. உயரம் போதாது. என்கதி அவ்வளவுதான். டிரெயின் அப்போது வேகம் குறைந்திருந்தது. நிற்கப்போகிறது. உடம்பில் ஏறுகிற தூரத்தில் அது வேகம் குறையவும், திடீரென்று மேலே இருந்து ஒருவர் என் கையைப் பிடித்துத் தூக்கியெடுத்தார். பிறகு தமிழில் நிறைய திட்டினார். ராஜன் என்ன சொல்வது என்று தெரியாமல் திகைத்துப்போய் நின்றான். நான் பன்னைக் காட்டினேன். அதில் திராட்சையும் செர்ரியுமெல்லாம் இருந்தன. இரண்டாகப் பிய்த்துத் தின்றோம். பன் கிடந்த இடத்தில் அப்போது டிரெயின் எஞ்சின் நின்றுகொண்டிருந்தது.

தண்ணீர் குடித்தோம். குற்றுயிராகக் கிடந்த பசி, பன்மடங்கு வீரியத்துடன் மீண்டும் தாக்கியது. சாயங்காலம் கொல்லத்துக்குப் போகும் டிரெயினில் நான் மயங்கி விழுந்தேன். யாரோ தண்ணீர் தெளித்தார்கள். மயக்கம் தெளியும்போது ராஜனும் மற்ற சிலரும் நின்றுகொண்டிருக்கிறார்கள்.

"வீடு எங்கே?"

"கொல்லத்துல."

ராஜன் சொன்னான்: "இரவிபுரத்துல."

"கொல்லத்துலே?"

"வாழத்துங்கல்." எழுந்து உட்கார்ந்தேன்.

"அப்பாவோட பேரு?"

பொய் சொல்லவே நினைத்தேன். ஆனால், முடியவில்லை. "குட்டப்பன் பிள்ளை."

"சினிமா தியேட்டர் குட்டப்பன்பிள்ளையா?"

"ஆமா."

"அதுசரி."

இவர் எங்கள் வீட்டிலிருந்து மூன்று கிலோமீட்டர் தூரத்தில் தட்டாமலை என்ற ஊரிலுள்ளவர். அங்கே உள்ளவர்கள் பிரபாத் தியேட்டரில்தான் சினிமா பார்க்க வருவார்கள். சாப்பிட வாங்கித் தந்தார்கள். கொல்லத்தில் இறங்கினோம். தப்பிக்கவே விடாத கொடூரமான விதி, ஓட்டலில் எச்சில் துடைத்து வாழவும் விதியில்லையென்பதைப் பிறகுதான் புரிந்துகொண்டேன். இறங்கும்போது சாப்பாடு வாங்கித் தந்தவர் கேட்டார்: "வீட்டில கொண்டு போய் விடட்டுமா?"

"வேண்டாம்:"

"வீட்டில போயி, தட்டாமலையிலுள்ள . . . ஆள்தான் கொண்டுவந்து விட்டாருன்னு சொல்லணும். சரியா?"

"நீங்கதான் போய்ச் சொல்லணும்." மனதுக்குள் சொல்லிக் கொண்டேன்:

ரயில்வே ரோடு வழியாக வாழத்துங்கலுக்கு நடந்தோம். வீட்டிற்குச் சென்றபோது அங்கே விசேஷமாக எதுவுமே இல்லை. எல்லாமே வழக்கம் போல். பழைய கஞ்சி இருக்கும் பானையைத் திறந்துப் பார்த்தபோது

ஐந்தாறு சோற்றுப் பருக்கை தண்ணீரில் கிடந்தது. மீன் சட்டியின் ஓரத்தில் கொஞ்சம் மசாலாவும். எல்லாவற்றையும் சேர்த்துப்போட்டு அள்ளித் தின்றேன். தன் வீட்டுத் தீவனத்தின் சுவையே சுவை.

## 9 - தற்கொலை முயற்சி

தற்கொலை செய்வதாக முடிவு செய்தேன். முடிவு செய்த பிறகு மாறக்கூடாது. விஷம் வாங்குவதற்காக அலைந்து கொண்டிருந்தேன். இரண்டு தடவை ஜெயிலுக்குப் போய் வந்தவன். இரண்டாவது தடவை, சின்னக்கடையில் வெறுமனே நின்றிருந்த என்னை எவனோ சொன்னான் என்று போலீஸ் பிடித்துக்கொண்டு போனது. செத்துவிட வேண்டியதுதான். வாழ்ந்தது போதும்.

சேரூர் வடக்கேதில் இல்லத்து மணியன்பிள்ளை ஊர்க்காரர்களுக்கெல்லாம் இப்போது கள்ளன் மணியன். திருமண வயதில் சகோதரிகள். பாவம் அம்மா. எல்லாருடைய முகத்திலும் கரியள்ளிப் பூசி விட்டேன். ஒரே மகன். சகோதரன். உண்மையில் சீட்டு விளையாடும் காசுக்காகவே முதலில் திருடினேன். தெரியாமல் செய்துவிட்டேன். அறிவுரை சொல்லவும் ஆளில்லை. லாக்கப்பில் போட்டு நான்கு அடி தந்துவிட்டு விட்டிருக்கலாம். ஜெயிலில் தள்ளிவிட்டார்கள். பின்னால் வரவும் ஆளில்லை. முதல் திருட்டு இப்படித்தான் நடந்தது: சீட்டு விளையாடுவதற்கான காசுக்கு என்ன செய்வதென்று நாங்கள் மூன்று நண்பர்கள் யோசித்தோம். ஒருவன் சொன்னான்: "வஞ்சிக் கோயில் உண்டியலிலே பணமிருக்கும்." மூன்றுபேருமாக ஒரு வெட்டரிவாளுடன் சென்று வஞ்சிக்கோயிலுள்ள உண்டியல் பெட்டியை உடைக்க ஆரம்பித்தோம். இரவு மணி பதினொன்று பதினொன்றரைதான் இருக்கும். பதினெட்டு வயது நிரம்பாத மூன்று பையன்கள். திருடுவதற்கான நேரம் கூட தெரியாது. நான் அரிவாளுடன் நின்றுகொண்டிருந்தேன். ஒருத்தன் உண்டியல் பெட்டியை அசையாமல் பிடித்திருந்தான். மற்றொருவன் வெட்டரிவாளால் நெம்பினான். பக்கத்தில் ஒரு மைக் செட் கடையிருந்தது. ஏதோ நிகழ்ச்சி முடிந்து அவர்கள் அப்போதுதான் வந்து படுத்திருக்கிறார்கள்.

அதிலிருந்து இரண்டுபேர், லைட்டைப் போடாமல் மெல்ல எழுந்து பதுங்கி வந்துகொண்டிருப்பதை பார்த்ததும் சொன்னேன்: "டேய், யாரோ வர்றாங்க, ஓடுங்க."

ஓடினோம். எங்களில் ஒருவனுடைய வீடு பக்கத்தில்தான். வீட்டுத் திண்ணையிலேறிப் படுத்துக்கொண்டோம். கொஞ்ச நேரத்தில் தீப்பந்தமும் சூட்டுக்கட்டுமாக பத்துப் பதினைந்து ஆட்கள் வருகிறார்கள். அதிலொருவர்: "மூணு பையனுங்க. நிச்சயம் இவனுங்களாத்தான் இருக்கும்" என்று சொன்னார். வந்தவர்கள் சூட்டையும் தீப்பந்தத்தையும் எங்கள் முகத்திற்கு நேராக நீட்டினார்கள். நாங்கள் தூங்குபவர்களைப்போல் கண்களை மூடிப் படுத்திருந்தோம். "ஓடினதுல வேர்த்திருக்குப் பாருங்க . . . இவனுங்கதான்." கையோடு பிடிபட்டோம். எனது சட்டைப்பையில் முப்பது காசிருந்தது. உண்டியலிலிருந்து எடுத்தக் காசுதான் என்றார்கள் . . . எவ்வளவு சொன்ன பிறகும் ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டார்கள். போலீசைக் கூப்பிடுவதற்கு ஆள் போயிருந்தது. இதற்குள் வாழத்துங்கல் முழுவதுமே விஷயம் தெரிந்து போய்விட்டது. நிறைய பெரிய மனிதர்கள் உறவினர்களாக இருந்தார்கள். தகவலை அறிந்தும்கூட யாருமே வரவில்லை. அம்மா பலரையும் போய்ப் பார்த்தாள். யாரும் அசையவில்லை. கடைசியில் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போனார்கள். ஆதாரம், அந்த முப்பது காசு. முதன்முதலாக உள்ளே போனேன்.

திரும்பி வந்தபோது வீட்டுக்காரர்களுக்கும் ஊர்க்காரர்களுக்கும் நான் தேவையற்றவனாக மாறியிருந்தேன். அவமானத்தின் எரி தீ. தலை தூக்கி நடக்கும் வழக்கத்தை அன்று விட்டவன். இன்றுவரை குனிந்த தலைதான். இனி திருந்தி வாழ வேண்டும். கை வண்டியிழுக்கப் போனேன்; உரம் சுமக்கப் போனேன். எங்கள் வீட்டின் பக்கத்திலுள்ள கோடியாட்ட ராமச்சந்திரன் அண்ணன் சைக்கிள் செயின் கவர் கம்பெனி வைத்திருந்தார். பொருட்களேற்றிய ஒரு கை வண்டி கொல்லத்துக்குப் போனது. நான் எந்த வேலையுமில்லாமல் நிற்கிறேன். வண்டியிழுப்பவன் ஒரு நண்பன். என் நிலைமையைப் பார்த்த அவன் சொன்னான்: "நான் அண்ணன்கிட்ட சொல்றேன்." நான் வீட்டிற்கு வெளியே எதிர்பார்த்து நின்றேன். ராமச்சந்திரன் அண்ணன் தயவு தாட்சண்யமுள்ள மனிதன்தான். உள்ளே ஏறிச்செல்வதற்கு அனுமதிக்கப்படுகிற வீடும்தான். ஆனால், அந்த நிலைமையில் என்னால் உள்ளே போக முடியவில்லை. திருடன் என்று முத்திரைக் குத்தப்பட்டவன். ஒருவனுக்குப் பரிவு தோன்றினால் மற்றொருவன் தடுத்து விடுவான். சமூக இயல்பே இதுதானே? நண்பன் வெளியே வந்து சொன்னான்: "மாப்ளே நீ வேற ஏதாவது வேலைதான் தேடணும். நீ சரியா வரமாட்டேன்னு ஃபேக்டரியில உள்ளவங்க சொல்றாங்க."

அவமானத்துடன் திரும்பி ரயில்வே ரோடு வழியாகக் கொல்லத்துக்கு நடந்தேன். மனம் கொந்தளித்துக் கிடந்தது. சின்னக்கடையில்போய் நின்றேன். அனைத்துக்கும் சாட்சியாக அந்த மணிமேடை நின்றுகொண்டிருந்தது. அதையே பார்த்துக்கொண்டிருந்தேன். மிகப்பெரிய கடிகாரத்திலுள்ள செகண்ட் ஊசி அசைந்து கொண்டிருந்தது. காலம் என்னையும் கொண்டு மெல்ல நகர்கிறது. திடீரென்று எங்கிருந்தோ தெரியாது. சில போலீஸ்காரர்கள் ஓடி வந்து என்னைப் பிடித்துக்கொண்டார்கள். முகத்தில் அறைந்தார்கள். ஏன் எதற்காகவென்றெல்லாம் விளங்கவில்லை. அழுவதற்கொரு காரணம் கிடைத்திருக்கிறது. கையில் விலங்கிட்டு ஓரமாக நிறுத்தியிருந்த வண்டிக்குள் கொண்டுபோய் உட்கார வைத்தார்கள். விலங்கிட்ட கைகளை கூட்டிப் பிடித்தபடியே வண்டிக்குள்ளிருந்து அழுதேன். கை விலங்கின் குளிர் ஆறுதலாக இல்லாமல் முள்ளாகக் குத்தியது. வாழத்துங்கலுக்குப் போகும் தெரிந்தவர்களில் யாரெல்லாமோ என்னைப் பார்க்கிறார்கள். அதில், ஒன்றிரண்டு பேர் நன்றாகத் தெரிந்தவர்கள். குனிந்தபடியே உட்கார்ந்திருந்தேன். சின்னக் கடையில் காக்கி என்ற பெயரில் அறியப்படுகிற பர்ணபாஸ் இடையிடையே ஓடி வந்து என்னை அடிப்பதற்காகக் கை ஓங்கினான். என்ன குற்றம் செய்தேன் என்று புரிந்துவிட்டது. என்னைப் போலீசில் மாட்டிவிட்ட இவன் வீரம் பேசுகிறான்:

"சப் ஜெயில்ல இருக்கும்போதே எனக்கு இவனைத் தெரியும். கோயில் உண்டியல் பணத்தையே திருடிய மகாக் கள்ளன். இத்துனூண்டு இருந்தாலும் ஆள் காந்தாரி மிளகு தான். ஜெயில்லயும் இப்படித்தான் இருப்பான். திருட்டு ராஸ்கல். இங்க வந்து பதுங்கி உட்காந்திருக்கான். நான் பாத்ததால சரியாப்போச்சி. இல்லைன்னா இன்னைக்கு ராத்திரி ஏதாவது பண்ணியிருப்பான் . . ."

போலீஸ்காரர்கள் சொல்கிறார்கள்: "சரி சரி, ஆளைப் பிடிச்சாச்சுல்ல? நீ எடத்தைக் காலி பண்ணு."

சின்னக்கடையின் மாமாப் பயல் இடத்தைக் காலி செய்தான். சின்னக்கடையிலும் பேருந்து நிலையத்திலும் 'பிணந் தூக்கி' வேலைகளில் கை தேர்ந்தவன் இந்த பர்ணபாஸ். இரவு நேரங்களில் வழியோரங்களிலும் பேருந்து நிலையத்திலும் படுத்துத் தூங்குகிற பாவப்பட்ட மனிதர்களின் மடியைத் தடவும் இவனுக்கு பெரும்பாலும் சில்லறைக் காசுகள்தான் கிடைக்கும். அவர்கள் விழித்து சத்தம்போட ஆரம்பித்தால் அடிப்பான். இந்த அளவுக்குக் கீழ்த்தரமான ஒரு கிரிமினல் சொல்லி போலீஸ்

என்னைப் பிடித்தது.

உண்டியல் பணத்தைத் திருடிய குற்றத்திற்காக நான் ஜெயிலிலிருக்கும் போது இவனைப் பார்த்தேன். ஜெயிலுக்குள் சில வேடங்களை அணிய இவன் முயற்சி செய்து பார்த்தான். நான் புதியவன் என்பதால் கொஞ்சம் மிரட்டியும் பார்த்தான். நான் கண்டுகொள்ளவில்லை. கொல்லத்தின் பக்கத்திலுள்ளவன் என்பதால் என்னைக் கூட்டுசேர்த்துக்கொள்ள நினைத்தான். எனக்கோ, இந்த அவமான காலத்தைக் கழித்துவிட்டு எங்காவது போய் நல்லபடியாக வாழ வேண்டுமென்ற எண்ணம். அந்த பர்ணபாஸ்தான் என்னை . . .

மூன்று நாட்கள் லாக்கப்பில் வைத்திருந்தார்கள். குற்றத்தை ஒப்புக்கொள்ள வேண்டுமாம். நான் சொன்னேன்: "ஏதாவது செய்திருந்தால்தானே ஒப்புக்கொள்றதுக்கு? நான் திருட நினைக்கவே இல்லை." அவர்களுக்கு வேண்டியது உண்மையல்ல, ஒரு வழக்கு. மூன்று நாட்களும் எனக்கு வெறும் தண்ணீர் மட்டும் தந்தார்கள். பசியால் தளர்ந்து போனேன். அப்போது என்னைப் பிடித்துக்கொண்டு வந்த போலீஸ்காரன் வந்தான். என்னுடைய பொறுப்பு இவனுக்குத்தான். வழக்கை ஜோடிக்க வேண்டிய பொறுப்பும் இவனுக்குத் தான்.

அவன் கேட்டான்: "உனக்குப் பசிக்குதா?" இதுவொரு நல்ல கேள்வி. காக்கி நிறம் மட்டும்தான் என் கண்ணில்பட்டது. ஆள் தெரியவில்லை. அவ்வளவுக்குப் பசி மயக்கம். "நான் பிரியாணி வாங்கி வரச் சொல்றேன். ஆனா, குற்றத்தை நீ ஒப்புக்கொள்ளணும். இனி செய்ய மாட்டேன்னு மட்டும் நீ கோர்ட்டுல சொன்னாப் போதும். சின்னப்பையன்னு மன்னிச்சு விட்டுடு வாங்க."

விளங்காமப் போறவனே, உதைக்கும்போது சின்னப் பையன்னு நினைச்சா உதைச்சே? கண்ணும் மூக்குமெல்லாம் வீங்கியிருக்கு. ஆனாலும் நம்பினேன். உண்மையாகத்தானிருக்கும். நீதிமன்றத்துக்காவது அனுதாபம் ஏற்படாமலிருக்குமா? விட்டுவிடுவார்களென்று நினைத்து நீதிமன்றத்தில் 'குற்றத்தை' ஒப்புக்கொண்டேன். அவ்வளவுதான் விவரம். திருட முயற்சி செய்தக் குற்றத்திற்காக நான்கு மாதச் சிறைத்தண்டனை விதித்தது நீதிமன்றம். தீர்ப்பைக் கேட்டதும் பின்னால் நின்றுகொண்டிருந்த போலீஸ்காரனின் முகத்தைப் பார்த்தேன். அதில் மிகப்பெரிய ஆத்ம திருப்தி.

அப்படி, இரண்டாவது தடவையாக 1968 அக்டோபம் மாதம் ஜெயிலுக்குப்

போன நான் 1969இல் வெளியே வந்தேன். பதினெட்டு வயதுக்குள் இது இரண்டாவது சிறைவாசம். வெளியே வந்த பிறகு வீட்டைத் தவிர வேறு எங்கு போக முடியும்? மனதிற்குள் அழுதுகொண்டிருந்தேன். அம்மா விரட்டியடிப்பாளோ? வீட்டுக்குச் சென்றபோது அம்மாவும் சகோதரிகளும் கட்டிப்பிடித்து அழுதார்கள். திரும்பவும் ஜெயிலுக்குப் போயிட்டியா என்பதுபோல் ஊர்க்காரர்களின் கிண்டலான பார்வை. இப்படியெல்லாம் அவமானத்துடன் வாழக்கூடாது. இதற்கான ஒரே தீர்வு, மரணம்தான்.

வீட்டுக்குள்ளும் குத்தலான பேச்சுகள் கேட்க ஆரம்பித்தன. செத்துவிட வேண்டும். எந்நேரமும் இதுதான் சிந்தனை. வீட்டிலேயே உட்கார்ந்திருந்தேன். பயம். ரோட்டிலிறங்கினால் போலீஸ்காரர்கள் பிடித்துக்கொண்டு போய்விடுவார்கள் என்பதைப் புரிந்துகொண்டேன். எங்களைப் போன்ற சோட்டா திருடன்கள் ஒரு தடவை பிடிபட்டு விட்டால்போதும். பிறகு வழக்குத் தயாரிக்கும் ஒரு இயந்திரமாகவே மாறிவிடுவார்கள்.

பக்கத்து வீட்டு வாசு அண்ணனுக்கு ஒரு கடிதமெழுதினேன். எங்கே என்றெல்லாம் அதில் சொல்லவில்லை. தேடி வரும்போது என்னுடைய பிணத்தைதான் பார்க்க முடியும். சடலம் கிடந்து அழுகி ஊர்க்காரர்களுக்கு வேலையை வருத்தி வைத்து விடக்கூடாது. அதற்காகவே கடிதம். எனது சகோதரி, வீட்டினருகிலுள்ள சிராவயல் எனுமிடத்தில் வீடு மாறுவதற்கான ஏற்பாடுகளில் இருந்தாள். அங்கே அவள் ஒரு ஓலைக் குடிசைக் கட்டியிருந்தாள். நான் அதன் பின்பக்கக் கதவின் தாழ்ப்பாளைத் திறந்து உள்ளே நுழைந்தேன். வெளியிலிருந்து பார்ப்பவர்களுக்குக் கதவு பூட்டப்பட்டிருப்பதாகவே தோன்றும். இரண்டு மூன்று பாக்கெட் எலி விஷமும் பழமும் வாங்கி வைத்திருந்தேன். இந்த உலகத்திடமிருந்து நான் இதோ விடைபெறப் போகிறேன். பழத்தில் விஷத்தை வைத்து விழுங்கினேன். கொஞ்ச நேரத்தில் வாந்தியெடுக்க ஆரம்பித்தேன்.

இதனிடையே வீட்டுக்கு வந்த வாசு அண்ணன் கடிதத்தை ஏதோ காதல் கடிதம் போல் அக்கறையுடன் பிரித்து வாசிக்க ஆரம்பித்தவர் அப்படியே பதறிப்போய் எங்கள் வீட்டுக்கு ஓடினார். எல்லோருமாகச் சேர்ந்து கூட்டக்கதறல். நிறைய இடங்களில்போய் விசாரித்த இவர்கள் நானிருந்த வீட்டின் முன் வந்தும் பார்த்தார்கள். அரைகுறை மயக்கத்திலும் என்னால் இதை உணர முடிந்தது. வெளியே பூட்டப்பட்டிருந்ததால் திரும்பிப் போய்விட்டார்கள்.

சாயங்கால நேரமானது. குடிசைப் பக்கமாக நடந்துபோய்க்கொண்டிருந்த தட்டாமலை ராஜனின் காதுகளின் பூட்டிக் கிடக்கும் குடிசைக்குள்ளிருந்து ஏதோ சரியில்லாத சத்தம் கேட்டிருக்கிறது. இவன் என்னுடைய நண்பன்தான். ஏதேதோ புலம்பியிருக்கிறேன். மணியனின் குரலைப் போல் இருக்கிறதே? அவன் ஆட்களைத் திரட்டிக்கொண்டு வந்து பூட்டைத் திறந்துப் பார்க்கும்போது மயக்கம் போட்டுக் கிடக்கிறேன். தூக்கியெடுத்து வீட்டில் கொண்டு வந்து கிடத்திவிட்டு என்னுடைய தற்கொலைப் பராக்கிரமத்தை சிலாகிக்கத் தொடங்கினார்கள்:

"அட, உள்ளேயிருந்து வெளியே பூட்டுப் போடுற வித்தை ஆச்சரியமில்லை? இதை அவன் எப்படிச் செய்திருப்பான் தெரியலையே? பயங்கரமான ஆளுதான் . . . இவன் உயிரோட இருந்தா இந்த ஊரையே மிச்சம் வைக்க மாட்டான்." விவாதங்கள் தொடர்ந்துகொண்டிருந்தன. இதெல்லாம் இவனுடைய அடாஸ் வேலைகள்தான். இவன் இதை மட்டுமல்ல, இதற்கு மேலாகவும் செய்வான் என்று யாரோ சொல்கிறார்கள். அம்மாவின், சகோதரிகளின் கதறல்களினிடையே இந்த ஆச்சரியங்களும். எனக்கோ, குடல் வாய்வழியாக வந்துகொண்டிருக்கிறது. சுயநினைவு மெல்ல மங்கிக் கொண்டிருக்கிறது. உடல் கிடையாது; மனம் கிடையாது; மரணத்தை நோக்கி மெல்ல நகர்ந்துகொண்டிருக்கிறேன்.

வீட்டினருகில் கோடியாட்டுக் கிழக்கில், தாந்நோலில் எனும் குடும்பத்தில் ஒரு இங்கிலீஸ் வைத்தியர் இருந்தார். அவர் ஓடி வந்து ஏதோ பேதி மருந்தைப் புகட்டினார். வாந்தியெடுத்து உடலிலுள்ள நீர்ச்சத்தெல்லாம் ஏற்கனவே வற்றிப் போயிருந்தது. "சாகப்போறவனுக்குக் கொஞ்சம் தண்ணியாவது கொடுத்திருக்கக் கூடாதா" என்று கேட்டார். இலேசானச் சூட்டில் நிறைய தண்ணீர் கொடுக்கும்படி சொன்னார். இரண்டு இஞ்செக்ஷன் போட்டார். ஐந்தாறு மாத்திரைகளைத் தின்ன வைத்தார். வயிற்றிலிருந்த மிச்ச விஷமும் வெளியேறியது. இன்னும் அரை மணி நேரமாகியிருந்தால் செத்திருப்பான் என்றும் சொன்னார். அவர் சொன்ன அரை மணி நேரத்திற்குள் வண்டி பிடித்து கொல்லம் ஆஸ்பத்திரிக்குக்கொண்டு போய்ச் சேர்த்திருக்கவும் முடியாது. எப்படியோ இந்த டாக்டர் வந்துசேர்ந்தார். கடவுள் சொன்னார்: "அடேய், மணியா . . . நீ அவ்வளவு சுலபமாவெல்லாம் போயிட முடியாது. நீ காட்ட வேண்டிய வித்தைகள் இன்னும் எவ்வளவோ பாக்கியிருக்கு. எல்லாத்தையும் பார்த்து ரசிக்கலாம்னு நினைச்சா மாட்டேன்னா சொல்றே?" மட்டுமல்ல, இதன் பிறகு தற்கொலை செய்வதற்கான

தைரியத்தை என்னுடைய ரத்தத்திலிருந்தே நீக்கம் செய்துவிட்டார். மறுநாள் எழுந்திருக்கும் போது வாந்தி, பேதியின் உடல் சோர்வு மட்டும்தான். இத்துடன் இந்த முயற்சியைக் கை விட்டேன். இது நமக்குத் தோதுப்படாது என்பது புரிந்துவிட்டது. சரி, தெரிந்த வேலையைச் செய்து பிழைக்கிற வழியைப் பார்ப்போம்.

## 10 - தவளக்குழியாரின் திருவசனம்

தற்கொலை முயற்சியைத் தொடர்ந்து கொஞ்சம் தைரியம் வந்தது. அனுபவிக்க வேண்டியதையெல்லாம் அனுபவித்தாயிற்று. இனியுள்ள அனுபவங்கள் நிச்சயமாக இதைவிட அதிகமாக இருக்காது. கொஞ்சம் குடிப்பழக்கமும் ஆரம்பமான பிறகு, முழுத்தைரியம் வந்தது. சப் ஜெயிலில் அறிமுகமான தவளக்குழி கிருஷ்ணன்குட்டி அண்ணனின் திருவசனங்கள் நினைவுக்கு வந்தன. ஒரு தடவை திருடிப் பிடிபட்டால், பிறகு பெரும்பாலும் திருடாமலேயே திருடனாக்கப்படுவான். உன்னைத் தேவையில்லாத சமூகம் உனக்கும் தேவையில்லை. அதன் விருப்பம் நீ திருந்திவிடக் கூடாது; தொடர்ந்து திருடனாகவே இருக்கவேண்டும் என்பதுதான். இனி நீ திருடினாலும் திருடாமலிருந்தாலும் திருடன்தான். ஆக, சமூகம் உன்னிடம் எதை விரும்புகிறதோ நீ அதுவாக மாறிவிடு. பிறகு, சற்று அமைதியாக இருந்துவிட்டுக் கேட்டான்:

"உன் பேரென்ன?"

"மணியன்."

"மணியன். இனிமேல் நீ திருட்டு மணியன்."

"எனக்குத் திருடத் தெரியலியே அண்ணா."

"அடேய், உண்மையைச் சொல்றதுன்னா எனக்கும்தான் சரியாத் திருடத் தெரியாது . . ."

"சே . . . இவ்வளவு வயசான பிறகும் நீங்க திருடத் தெரியாதுன்னு சொல்றது . . ."

"உண்மைதாண்டா . . . நாமெல்லாம் சரியா நீச்சலடிக்கத் தெரியாம சும்மா கை கால்களைப் போட்டு அலம்பிட்டிருக்கோம் . . . கரை சேர்றது, அதாவது அப்பப்ப ஏதாவது தட்டுப்படுறதெல்லாம் வெறும் அதிர்ஷ்டம்தான் . . . மற்றபடி, எனக்கு சரியாத் திருடத் தெரியும்னா நாலு பேருக்குத் தெரியறது போல திருடனாகி இருப்பனே? இந்தத் தவளக்குழி

ஊருக்கு வெளியே என்னை யாருக்குத் தெரியும் சொல்லு?"

"அப்படீன்னா, திருடத் தெரியாம என்ன பண்றது?"

"ஒண்ணு பண்ணு. ராத்திரி நேரங்கள்ல சும்மா அப்படியே இறங்கி நட! அப்ப எல்லாம் தானாகவே தோணும்."

அப்படியாக நான் இரவு நேரங்களில் வெளியே இறங்கி நடக்க ஆரம்பித்தேன். திறந்து கிடக்கும் ஜன்னல்களைக் கண்டால் தவளக்குழி சொன்னதுபோல் சுவர் தாண்டிக் குதிக்கத் தோன்றும். ஜன்னல் வழியாகப் பார்த்தால், ஆட்கள் தூங்கிக் கிடப்பார்கள். ஜன்னலின் பக்கத்தில் சட்டை தொங்கும். சட்டையின் பாக்கெட் கர்ப்பமாக இருக்கும். சுற்றுமுற்றும் பார்த்தால் வீட்டின் ஒரு புறம் வேலி. வேலிப் படர்ப்பிலிருந்து ஒரு குச்சியை உருவி தேவையற்றதைக் களைந்துவிட்டு உள்ளே விட்டால், சட்டை நம் கையில். ஆபரேஷன் சக்ஸஸ்.

சில நேரங்களில் ஜன்னல் பக்கத்தில் வாட்ச் இருக்கும் . . . குச்சியை வைத்து அதைக் கிளப்பவும் பயிற்சியெடுத்தேன். எப்படியாவது கொஞ்சம் காசு சம்பாதித்து எங்காவதுபோய் நல்லபடியாக வாழ வேண்டும். இனிமேல் நான் திருடன்தான் என்று அப்போது தோன்ற ஆரம்பிக்கவில்லை. இப்படியான நிலைமையில்தான் என் வாழ்க்கையையே புரட்டிப்போட்ட அந்தச் சம்பவம் நிகழ்கிறது.

அந்தி சாயும் நேரம். இரவிபுரம் ஷாப்பில் கொஞ்சம் குடித்துவிட்டு வந்துகொண்டிருக்கிறேன். சிறகு முளைக்கும் வயதுதான். திருடத் துவங்கியிருந்த காலகட்டம். பயிற்சிகள் அப்போதுதான் தொடங்கியிருந்தன.

புத்தன்சந்தையைத் தாண்டி வரும்போது மூன்றுபேர் நின்று பேசிக்கொண்டிருக்கிறார்கள். உறவினர்கள்தான். அவர்களைக் கண்டுகொள்ளாமல், சங்கமம் . . . சங்கமம் . . . திரிவேணி சங்கமம் . . . என்ற பாடலைப் பாடியவாறே ரசனையுடன் நடந்துகொண்டிருக்கிறேன். சினிமா பார்ப்பதே பாட்டுக் கேட்பதற்காகத்தான். பாட்டென்றால் அவ்வளவு ஆர்வம். ரோட்டோரத்தில் நின்று பேசிக்கொண்டிருப்பவர்கள், வாழத்துங்கலின் மூன்று பிரபலங்கள். உண்மையில் நான் அந்தப் பாடலின் கடைசி இரண்டு வரிகளை மீண்டும் பாடி நிறுத்தப்போகும்போதுதான் அவர்கள் காதில் அது விழுந்திருக்கிறது. நான் அந்த மூன்றுபேரையும் கேலி செய்து பாடியதாக நினைத்துவிட்டார்கள். விட்டுவிட முடியுமா?

திருட்டுப்பயல், சரியாக இன்னும் முளைக்கவே இல்லை. திமிரைப் பாரேன்.

"எவண்டா அவன்? ரோட்டுல ஒழுங்கா நடக்க முடியாதாடா?"

"ரோட்டுல ஒழுங்காத்தான் நடந்து போறேன்." நானும் விடவில்லை.

இதைச் சொன்ன விதம் அவர்களுக்குப் பிடிக்கவில்லை. ஊரில் பெரிய பணக்காரனாக இருந்த அதிலொரு அண்ணன் ஓடி வந்து ஓங்கி அறைந்தார். கள்ளுண்ட போதையில் எனக்கு என்ன நடந்ததென்றே ஒருநிமிடம் பிடிபடவில்லை. அடுத்த வினாடி, அப்படியே மல்லாந்து ரோட்டில் விழுந்து கிடக்கிறேன். என் நெஞ்சில் உட்கார்ந்து முகத்திலும் நெஞ்சிலும் சரமாரியாக அடிக்கிறார். அவர் நல்ல ஆரோக்கியமும் திடகாத்திரமுமுள்ளவர். நான் எப்படியெல்லாமோ முயன்றும் அவரை அசைக்க முடியவில்லை. இடுப்பிலிருந்த கத்தியை இடது கையால் உருவி ஒரே குத்து, கையில். ஒரு அலறலுடன் அவர் கீழே விழுந்தார். நான் எழுந்து வீட்டைப் பார்த்து ஒரு ஓட்டம். வீட்டிலுள்ளவர்கள் பதறிப் போனார்கள். "அவன் உன்னைக் கொன்னுடுவாண்டா, எங்கியாவது ஓடிடுடா" என்றார்கள். எங்கே ஓட? கொல்லம் நகரில் தெற்கு வடக்காக அலைந்து திரிந்தேன். ரொம்பப் பயந்து போயிருந்தேன். இந்த அறிகுறிகள் நான் நல்ல ஒரு கிரிமினலாக இன்னும் உருமாறவில்லை என்பதற்கான அடையாளம்தான். இல்லாவிட்டால் ஏன் ஓட வேண்டும்? எதற்காகப் பயப்பட வேண்டும்?

மூன்று நான்கு நாட்கள் கழிந்தன. கொல்லத்தின் அருகிலுள்ள திருமுல்லவாரம் கடற்கரையில் உட்கார்ந்திருந்தேன். விசேஷமான ஒரு கடற்கரை இது. ஆடி மாத வாவுபலியின்போது ஆயிரக்கணக்கான மக்கள் இங்கே கூடுவார்கள். குளிப்பதற்கு வசதியான கடல் பகுதி. பெரிய ஆழமெல்லாம் கிடையாது. கடலில் கொஞ்ச நேரம் அப்படியே மூழ்கிக்கிடக்க வேண்டும். உடல் நன்றாகக் குளிரட்டும். குளிக்கிற விஷயத்தில் எனக்குப் பிடிவாதமிருந்தது. தினமும் மூன்று வேளையாவது குளித்துவிட வேண்டும். வீடுகளுக்குள் நுழைந்தால் முடிந்தவரைக்கும் அங்கிருந்து ஒரு குளியல் போட்டுவிட்டுதான் வெளியே வருவேன். தம்பதிகளின் படுக்கையறைக்குள் நுழைந்து, அங்கே குளியலறையும் இருக்குமென்றால் உடனே எனக்குக் குளித்துவிட வேண்டும். ஷவரிலிருந்து விழுகிற தண்ணீர் என்னுடைய பலவீனம். மழைபெய்வது போன்ற ரசனையான விஷயமிது. ஆனால், தண்ணீர் விழுகிற சத்தம் வெளியில் கேட்டுவிடக் கூடாது. இதற்கான ஒரு வித்தையும்

கைவசமிருந்தது. பாத்ரூமிலிருந்து ஒரு டவலை எடுத்து, ஒரு துளி தண்ணீர்கூட கீழே விழாதபடி நனைத்து அதை ஷவரின்மீது போடுவேன். குறிப்பிட்ட அளவில் தண்ணீர் விழுவதுபோல் ஷவரைத் திறப்பேன். நீர், மழைத்துளிபோல் படர்ந்து விழாதென்றாலும் குழாய் வழியாக ஆகாயத்திலிருந்து விழுவதுபோல் டவலினூடே நழுவிவந்து மிகச் சரியாக உச்சியில் பதியும். இப்படியாகக் குளியல் போடுவதில் வேறு பல நன்மைகளுமிருக்கின்றன. உடலின் வேர்வை நீங்கும். எவ்வளவு பெரிய வேலை நடந்து முடிந்திருக்கிறது. நல்ல புத்துணர்ச்சி கிடைக்கும். தலைமுடியைக் கோதி, பதிய வைக்கலாம். இப்படியான ஒருவனை ரோந்து போலீஸ் சந்தேகிக்குமா? அதிகாலையில் எழுந்து குளித்து, முடி சீவி பவுடரெல்லாம் போட்டுவிட்டு அதோ ஒரு நல்லவன் நடந்து போகிறான். பாருங்களேன், உடம்பிலிருக்கும் ஈரம்கூட இன்னமும் காயவில்லை. இதுநாள்வரை பாத்ரூமிலிருந்து சிறு சத்தம் வெளியே கேட்க நான் அனுமதித்ததில்லை. என்னுடைய நல்ல நேரம், தூங்கிக்கிடக்கும் யாருக்கும் ஒன்றுக்குப் போகவும் தோன்றியதில்லை. கெட்ட நேரம் பார்த்து அப்படி யாருக்காவது தோன்றி பாத்ரூமைத் திறந்தால் எவனோ ஒருவன். நிர்வாணத்துடன் ஓடுவதைத் தவிர வேறு மார்க்கமே இல்லை. நினைத்துப் பார்க்கும்போது அன்று நடத்திய ஆபத்தான சாகசங்கள் வேடிக்கையாகத்தான் இருக்கின்றன.

குளியல் ரசிகனாகிய நான் திருமுல்லவாரம் கடலில் இறங்கினேன். சிலமணி நேரங்கள் கடலிலேயே கிடந்தேன். திரும்பவும் கொல்லத்துக்கு நடந்தேன். இதைத் தவிர வேறு வேலை? வழியில் தாமரைக்குளம் பகுதியில் இளம் வெயிலில் பரந்து விரிந்து கிடக்கிறது கோயில் குளம். குளத்தில் மிதக்கும் சூரியக்கதிர்கள் எனக்கு அழைப்பு விடுக்கின்றன. மீண்டும் குளக்கரையில். ஐந்து காசு கொடுத்தால் குளியலுக்கான எண்ணெயைக் கையில் ஊற்றுவார்கள். அதை வாங்கி தலையில் வைத்துவிட்டு குளத்தைப் பார்த்த குஷியில் ஒரு பாடலை முனகியபடியே நடந்தேன். கத்திக்குத்தும் கலகங்களுமெல்லாம் மனதிலிருந்து தற்போது விலகியிருந்தன. அப்போது, பக்கத்தில் எங்கோ ஒரு ஆபத்து உருவாகிக்கொண்டிருப்பது தெரியாது. எங்கள் ஊரிலுள்ள கிருஷ்ணன்குட்டி எனும் ஒருவர் பக்கத்தில் நின்றிருந்த சுமடு தூக்கும் தொழிலாளர்களிடம் சொன்னார்: "அதோ போறானே, அவன் மகாப் போக்கிரி. பயங்கரமான திருடன். இந்த ஏரியாவுக்குள்ள அவனை அனுமதிச்சீங்கன்னா அப்புறம் இந்த ஏரியாவே இருக்காது. என் வாட்சையும் அவன் திருடிட்டான். அவன் கையில கட்டியிருக்குறது என்னோட வாட்சுதான். அவனைப் பிடிங்க."

அப்போது நான் வாட்சைக் கழற்றி சட்டையில் கட்டி வைக்கப் போனேன். கை வண்டியிழுத்தும் சாணி சுமந்தும் நான் வாங்கிய வாட்சு இது. பிச்சையெடுக்கும் பெருமாளிடமிருந்து பிடுங்கித் தின்னும் எவனாவது வந்து தட்டியெடுத்துவிடக் கூடாதல்லவா? ஆகவே, உடுப்பில் கட்டி குளத்தில் நீந்தும்போது கண்களில் படும்படியாக வைத்துக்கொள்ள வேண்டுமென்பது நோக்கம். ஆனால், திருடனுடைய எல்லாப் பொருளும் -அவனுடைய கோட்டு முதல் கோமணத்துண்டு வரை மற்றவர்களிடமிருந்து அபகரித்ததாகவே இருக்கும் என்பதல்லவா அரிச்சந்திரன்களாகிய அனைவருடைய எண்ணமும்.

நான் குளத்தில் விரால் பாய்ச்சலிட எத்தனிக்கும்போது உடம்பு அசைய மறுக்கிறது. கை வலிக்கிறது. நூறு கிலோ அரிசி மூட்டைகளை தினமும் அநாயாசமாக தூக்கிப்போடும் இரண்டு திடகாத்திரமேனியர் இரண்டு கைகளையும் பிடித்துத் தூக்கி, சுள்ளானாகிய என்னை அந்தரத்தில் நிறுத்தியிருக்கிறார்கள்.

"இது யாரோட வாட்சுடா?" அவர்கள்தான் கேட்கிறார்கள்.

"முதல்லே கையை விடுங்க. இதை நான் காசு கொடுத்து வாங்கினேன்."

அப்போது கிருஷ்ணன்குட்டி அண்ணன் ஓடி வந்தார். எனக்குப் புரிந்துவிட்டது.

பிடிக்குள் அகப்பட்டுவிட்டேன் என்று தெரிந்ததும் கிருஷ்ணன்குட்டிக்கு தைரியம் வந்துவிட்டது. சொல்லிக்கொண்டே ஓடி வருகிறார்: "கவனம், கையில கத்தி வெச்சிருப்பான். என் அண்ணன் ஒருத்தனைக் கத்தியால குத்திட்டு இப்போ தலைமறைவாத் திரியறான்."

கத்தியை விடுவோம். என் கையில் அப்போது ஒரு நகம்வெட்டிகூடக் கிடையாது. கைகளைப் பின்பக்கமாக வைத்து என்னுடைய டவலால் சேர்த்துக்கட்டி பின்னாலிருந்து ஒருவன் தள்ள, நல்ல தடிமனில் புலிநகத்தாலி போல் ஒரு செயின் அணிந்திருந்தேன். அதைப் பிடித்தபடி ஒருவன் முன்னால் நடக்க, இன்னொருவன் அணைத்துப்பிடித்திருக்கிறான்.

"இப்படியெல்லாம் பிடிக்க வேணாம். நான் ஓட மாட்டேன்."

என்னைப் போலீசில் ஒப்படைக்கப் போகிறார்களென்றுதான்

நினைத்தேன். எனக்கும் தலைமறைவாகத் திரிந்து அலுத்துப் போய்விட்டது. கையில் காசுமில்லை. ஆகவே, சிறு ஆறுதலாகவுமிருந்தது. போலீசாரிடமிருந்து செய்யாத குற்றத்திற்காக எவ்வளவு உதை வாங்கியிருக்கிறோம். போதாக் குறைக்கு ஜெயிலில் சக கைதிகளிடமிருந்தும். எனவே, உதைக்குப் பயப்படவில்லை. கார் வந்தது. அந்தத் தொழிலாளர்களுக்கு மகிழ்ச்சி. காரில் சவாரி செய்வதற்கான ஒரு சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. சாதாரண மக்களைப் பொறுத்தவரைக்கும் அன்றெல்லாம் கார் சவாரி என்பது மிகப்பெரிய விஷயம். அதே காரில் திரும்பி வரவும் செய்யலாம். கின்னரர்கள் இருவரும் இருபுறம். நான் நடுவில். கிருஷ்ணன்குட்டி அண்ணன் வெற்றி வீரனாக முன்னால் வீற்றிருந்தான்.

கார், கொல்லம் ஈஸ்ட் போலீஸ் ஸ்டேஷனையும் தாண்டிப் போகும்போதுதான் ஆபத்தை உணர்ந்தேன். வாழத்துங்கலுக்குப் போகிறது. என்னைக் கையோடு பிடித்து நேரடியாகக் கொண்டுபோய் ஒப்படைப்பதிலுள்ள பெருமையே தனிதான். நேராக, குத்துப்பட்டவரின் வீட்டுக்கு முன்னால் கொண்டுவந்து நிறுத்தினார்கள். சொந்தமாக, பஸ், கார் எல்லாமே உள்ள ஒரு பெரிய வீடு. செல்வமும் செல்வாக்கும் இருந்தன. என்னை ஒப்படைப்பதென்பது, அவர்களுக்குச் செய்யும் மிகப் பெரிய சேவை. ஒரு மணி நேரத்திற்குள் ஐந்தாறு பேர்கள் காரிலேறினார்கள். அனைவருமே நெருங்கிய உறவினர்கள். என்னுடைய உறவினரும் ஆசிரியரும் ஆதரவு காட்டுபவருமான வாழத்துங்கல் ஸ்ரீதரன்நாயர் உட்பட. அறிமுகமில்லாத யாருமே கிடையாது. அதுதான் தைரியம். கார் திரும்பிச் சென்றுகொண்டிருந்தது. ஈஸ்ட் ஸ்டேஷனுக்குப் போகுமாக இருக்கலாம். இல்லை, அதையும் தாண்டி சின்னைக்கடையும் தாண்டி கார் போய்க்கொண்டிருந்தது. திரும்பவும் திருமுல்லவாரம் பகுதியை நோக்கி. இப்போதுதானே இங்கிருந்து வந்தேன். குளிப்பாட்ட அழைத்துக்கொண்டு போவதாக இருந்தால் காலையில் நீண்ட நேரம் விசாலமான ஒரு குளியல் போட்டாகிவிட்டது. ரொம்ப வற்புறுத்தினால், பரவாயில்லை. குளித்துவிட வேண்டியதுதானென்று மனம் கேலியாக நினைத்துக்கொண்டது.

கொல்லம் மேற்கில் இறங்கினோம். குத்துப்பட்டவரின் அண்ணனுடைய மனைவியின் ஊர் அது. அங்கே அவர்களுக்கு ஒரு வீடிருந்தது. ஆனால், காலியாகக் கிடந்தது.

என்னை வீட்டுக்குள் ஏற்றினார்கள். டேப்ரிக்கார்டரை சத்தமாக வைத்தார்கள்.

"எதுக்குடா குத்தினே?" எவனோ ஒருவன் கேட்கிறான்.

பின்னாலிருந்து ஒரு அடி விழுந்தது.

பிறகு எங்கிருந்தெல்லாமோ அடி வந்து சகட்டுமேனிக்கு உடம்பில் மோதியது. ஐந்தாறு சுற்றத்தார், சுற்றி நின்று கையில் கிடைத்ததையெல்லாம் எடுத்துச் சாத்துகிறார்கள். கண்களில் மட்டும்தான் அடி விழவில்லை. உடம்பின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் இரத்தம் வடிகிறது. கீழே விழுந்த பிறகும் உதைக்கிறார்கள் உறவினர்கள். உரிமையிருக்கிறது. எந்தத் தவறுமில்லை. ஆனாலும், இவ்வளவு குறுகிய கால அளவினுள் இந்த அளவுக்குப் படு பயங்கரமாக யாரும் உதைத்ததில்லை. போலீஸ்காரர்களைப் பொறுத்தவரைக்கும், உதைக்கும்போது, இப்போது இந்த இடத்தில் செத்து விழுந்துவிடக்கூடாதே என்ற குறைந்தபட்ச பயமிருக்கும். செத்தால் வேலை போய்விடும்! பிறகு யாரைப் போய் உதைக்க? உதைப்பதற்கான சந்தர்ப்பம் மீண்டும் வாய்க்க வேண்டுமென்றால் பயனாளி தீர்க்காயுசுடனிருந்தாக வேண்டும். இவர்களுக்கு, செத்தாலும் பரவாயில்லை. செத்த பிறகு கடலில் தூக்கியெறிந்தால் தற்கொலை செய்துகொண்டதாக ஆகிவிடும். உடலிலுள்ள காயங்கள்? மீன்கள் கொத்தியிருக்கிறது. எந்தப் பிரச்சினையும் வந்துவிடப் போவதில்லை. இன்னொன்றையும் சொல்லியாக வேண்டும். இந்தக் கூட்டத்தின் என்னை உதைக்காமல் விட்டவர் ஸ்ரீதரன் அண்ணன் மட்டும்தான். நான் அப்படியே மூச்சு வாங்க விழுந்துவிட்டேன். புற உடல் மட்டுமல்ல, உள்ளுறுப்புகளும் எரிந்தன. குரல்வளை, மிளகுக் கரைத்து ஊற்றியதுபோல் மூச்சுவிட சிரமப்பட்டது. இரத்த வாந்தியெடுத்து செத்துப்போய் விடுவேனோ என்றும் தோன்றியது. வாய்க்குள் கெட்டியான இரத்தச் சுவை. மூச்சு வாங்கினேன். தண்ணீ . . . தண்ணீ . . . யாரோ ஒரு மொந்தையில் தண்ணீர் தந்தார்கள். ஆவேசத்துடன் கை நீட்டினேன். கை அசைய மறுத்தது. குடித்துதானாக வேண்டும். கலயத்தைச் சிரமப்பட்டு எட்டிப் பிடித்தேன். துளிகூட வாய்க்குள் போயிருக்காது. யாரோ கலையத்தோடு சேர்த்து அறைந்தார்கள். குப்புற விழுந்தேன். முதுகில் திரும்பவும் உதை விழுகிறது. பிறகு நடந்தது எதுவுமே நினைவில் இல்லை.

நினைவு திரும்பும்போது ஏற்கனவே பரிச்சயமான ஒரு இடத்திலிருக்கிறேன். ஈஸ்ட் போலீஸ் ஸ்டேஷன். செத்தக் கொக்கின் இறக்கையைப் பிடித்துத் தூக்குவதுபோல் தூக்கி என்னை வராந்தாவில் வைத்தார்கள்.

யாரோ எஸ்ஐயைக் கூப்பிட்டார்கள். எஸ்ஐ வெளியே வந்தார். நடுங்கிவிட்டேன். மூச்சு விடுகிற ஒரு ஜடம்.

"இவனை இங்க கொண்டு வந்தவங்க யாரெல்லாம்? எல்லாவனையும் தூக்கி உள்ள போடு." என்றார்.

கொஞ்ச நேரத்திற்குப் பிறகு பார்க்கும்போது உள்ளே இருந்தவர்கள் அனைவரும் வெளியே. சாகக் கிடந்த நான் மட்டும் உள்ளே. பணம் மறிமாயம் நிகழ்த்தியிருக்கிறது.

அத்துடன் கொலைமுயற்சிக் குற்றவாளியாக நான். நிரந்தரக் குற்றவாளியொருவன் உருவாகிறான். இனி என்னுடைய பௌதிக உடல் பிரச்சனைக்குரியதாகவோ வேதனை தருவதாகவோ இருக்கப்போவதில்லை. ஆகவே இனி நான், யாருக்கு, எதற்காகப் பயப்பட வேண்டும்?

செய்து வைத்த ஏராளமான குற்றங்களுக்காக நான் பச்சாதாபப் பட்டதுண்டு. ஆனால், இந்தக் கத்திக்குத்து வழக்கில் அப்படியான குற்றவுணர்வு ஏற்படவே இல்லை. என்னுடைய உயிரைப் பாதுகாத்துக்கொள்ளவே அதைச் செய்தேன். எனக்கு நேர்வழி காட்ட வேண்டிய உறவினர்கள் இவ்வளவு குரூரமாக உதைத்ததில் மன வேதனை இருந்தது. திருந்துவதற்காக உதைக்கலாம். அதிலொரு பரிவிருக்கும். ஆகவே, என்னை உதைப்பதற்கான அதிகாரம் அவர்களுக்கிருக்கிறது. இது, செத்துப்போகட்டும் என்று உதைத்தது.

காலம் அனைத்தையும் மாய்த்துவிட்டது. நான் இப்படியெல்லாம் ஆக வேண்டுமென்பது விதி. அதன் நிமித்தங்களிலொன்றுதான் இந்தக் கத்திக் குத்துச் சம்பவம். குத்துப்பட்ட அந்த ஆளுக்கும் என்மீதான பகையுணர்வுகள் மறைந்துபோய் விட்டன என்றுதான் கருதவேண்டியதிருக்கிறது. காலத்தின் விளையாட்டு. குட்டிக்கடையில் இவர் நடத்துகிற ஒரு மெடிக்கல் ஷாப்பில் சில வருடங்களுக்கு முன் நான் ஏதோ மருந்து வாங்கச் சென்றிருந்தேன்.

அந்த அண்ணன் கேட்டார்: "இப்போ எங்க இருக்கே?"

"மகன்கூட இருக்கேன். திருவனந்தபுரத்தில."

நாற்பது வருடங்களுக்குப் பிறகு முதன்முதலாகப் பேசிய வார்த்தைகள்.

அன்று நடந்த சம்பவத்திற்குப் பிறகு, இடையில் அழுக்குப் பிடித்துக் கெட்டிக் கிடந்த எல்லா கோபதாபங்களையும் காலம் கரைத்திருக்கிறது. எதற்கும் யாரும் காரண கர்த்தாக்களில்லை.

அந்த வழக்கில் செய்யாத குற்றத்திற்காக ஒன்றேகால் வருடங்கள் ஜெயிலில் நரக வேதனை அனுபவித்தேன். சப் ஜெயிலில் பத்து மாதங்கள். பிறகு, பிரசித்திப்பெற்ற விய்யூர் ஜெயிலுக்குப் பயணம் புறப்பட்டேன். நிரந்தரக் குற்றவாளிகளை வினியோகிக்கும் விய்யூர் ஜெயில். திருவனந்தபுரம் மத்திய சிறைச்சாலை, பட்டப்படிப்பிற்கான கல்வி நிலையமென்றால் விய்யூரில் முனைவர் பட்டம் பெறலாம்.

இதோ நான் நிரந்தரக் குற்றவாளியாகியிருக்கிறேன். இதுவரை செய்த குற்றங்கள்: அறியா வயதில் கோயில் உண்டியலை உடைக்கும் முயற்சியில் நண்பர்களுக்கு உதவியாக இருந்ததுவும், உயிருக்குப் பயந்த நிலையில் ஒருவரைக் கத்தியால் குத்தியதுவும் தான். இத்துடன் நிரந்தரக் குற்றவாளியாக முத்திரைக் குத்தப்பட்டிருக்கிறேன். சிறிதாக இருந்தாலும் பெரிதாக இருந்தாலும் குற்றம், குற்றம்தான். ஆனால், இவ்வளவு பெரிய தண்டனைக்கு நான் அருகதையுள்ளவனா? என்மீதான வழக்கு: திருட முயற்சி செய்யும்போது ஆட்கள் சுற்றிவளைத்துப் பிடிக்க முயன்றதில் ஒருவரை கத்தியால் குத்திவிட்டுத் தப்பியதாக! கொலை முயற்சி உட்பட பல பிரிவுகளில் வழக்கு. உண்மையில் நடந்ததென்ன? சிறு போதையுடன் ரோட்டில் யாருக்கும் எந்தத் தொந்தரவுமில்லாமல் பாட்டு பாடியபடியே நடந்துகொண்டிருக்கிறேன். ஒருவன் வந்து தாக்கினான். அவனைக் கத்தியால் குத்தினேன். நிரபராதி ஜெயிலுக்குள். சண்டையை உருவாக்கியவன் வெளியில். ஆக, விய்யூர் ஜெயில் என்னை ஒரு பெரிய குற்றவாளியாக உருமாற்றியெடுத்தது.

மத்திய சிறைச்சாலை அதிகாரிகளுக்கு அரசாங்கம் அன்று வானளாவிய அதிகாரங்களை வழங்கியிருந்தது. கைதிகளைக் கொன்றால்கூட எந்தப் பிரச்சனையும் கிடையாது என்பது தான் அப்போதைய நிலை. அவர்களது சர்வாதிகார வரம்பினுள் பதினெட்டு வயதுப் பையனான நான் போய்ச் சிக்குகிறேன். ஜெயிலின் இந்நிலைமைக்கொரு காரணமிருந்தது. 1968 - '69 காலகட்டங்களில் - நான் அங்கே போவதற்கு மூன்று நான்கு வருடங்களுக்கு முன் விய்யூர் சென்ட்ரல் ஜெயிலை அங்கே கைதிகளாக இருந்த திருடன்கள் அனைவரும் சேர்ந்து தங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்தார்கள். இருபத்துநான்கு மணி நேரமாகக் குற்றவாளிகளை லாக்கப் செய்ய முடியவில்லை. திருடன்களெல்லாம் ஓட்டின்மீதேறி உண்ணாவிரதமிருந்தார்கள். மிகமோசமான நடைமுறைகளுக்கும்

உணவுவகைகளுக்குமெதிராக வேறுவழியில்லாமல் அவர்கள் போராட்டத்தில் ஈடுபட்டு விட்டார்கள். மிகப்பெரிய பிரச்சினையாகி விட்டது. நான்கு புறமும் போலீஸ் காவல் நின்றது. பிறகு சம்காரத் தாண்டவம். துலக்க நினைத்தது, பாண்டு பிடித்தது. இதுபோன்ற ஒரு கலகம், 1962 - '63 காலகட்டத்தில் திருவனந்தபுரம் சென்ட்ரல் ஜெயிலிலும் நடந்தது. ஜெயில் 24 மணி நேரம் திருடன்களின் அதிகாரத்தின்கீழ் வந்தது. அதிகாரிகள் அனைவரும் அடித்துத் துரத்தப்பட்டார்கள். கேட்டைப் பூட்டினார்கள். எல்லாமே மிகச் சரியாகத்தான் போய்க்கொண்டிருந்தது. உயரதிகாரிகள் வந்தனர். பிறகு, தலைமை தாங்கியவர்கள் அனைவரும் அடித்துத் துவைத்துப் பிழிந்தெடுத்துக் குற்றுயிராக்கப்பட்டார்கள். இந்தச் சம்பவங்களுக்குப் பிறகுதான் சிறை நிர்வாகத்திற்கென்று ஐஜி நியமிக்கப்படுவதாக உத்தரவிடப்பட்டது. இன்று அது, டிஜிபியாக மாற்றப்பட்டிருக்கிறது.

இந்தக் கலகங்ளுக்குப் பிறகுதான் நடையடி ஆரம்பமானது. ஜெயிலுக்கு வந்த அன்று பகலில் அல்லது இரவில் வந்து துவைத்தெடுப்பார்கள். இதற்காகவென்றே முதல்நாளில் தனிச் சிறையில் அடைப்பார்கள். விளக்குகளையெல்லாம் அணைத்து விடுவார்கள். தொப்பி மட்டும்தான் தெரியும். பிறகு லாக்கப் திறக்கப்படும். யார் என்னவென்றெல்லாம் தெரிவதற்கு முன்பே உதை விழ ஆரம்பித்துவிடும். உதைத்துக் கூழாக்கி விடுவார்கள். உதைத்த அதிகாரி யாரென்று தெரியாமலிருப்பதற்காகப் போர்வையால் மூடியிருப்பார்கள். மனதில் வஞ்சம் வைத்துவிடக் கூடாதல்லவா? சின்னப் பையன், இத்தனூண்டு இருக்கிறானே என்பதுபோன்ற எந்தச் சலுகைகளும் கிடையாது. உறவினர்களது அன்பின் வெளிப்பாட்டால் உடம்பு ஏற்கனவே பழுத்துப் போய்க் கிடந்தது. சிகிச்சைகூடக் கிடையாது. இதுவும் சேர்ந்தபோது தளர்ந்து போனேன். ஆனால், ஒரு நன்மை. ஜெயிலில் உதைபட்டால் மருத்துவ பரிசோதனை நடக்கும். செத்துத் தொலைத்துவிடக் கூடாதல்லவா? என்னைக் கொண்டுவந்த அன்று புதிதாக வந்தவன் நான் மட்டும்தான். ஆகவே, உதை தாராளமாகவே கிடைத்தது. பகிர்ந்துகொள்ள வேறு ஆளில்லை. நான் வந்து ஏறியதும், கேட் கீப்பர், தூரத்திலிருக்கும் ஜெயில் ஆஸ்பத்திரியை நோக்கி, சிறு விரலைக்காட்டினார். ஒருத்தன்தான் என்று. மலபாரில், தனியார் பேருந்தில் பின்னால் நிற்கும் நடத்துனர் முன்னால் நிற்பவனிடம் இத்தனை டிக்கெட் என்று விரலைக் காட்டுவதுபோல். அப்போது எனக்குப் புரியவில்லை. பிறகுதான் தெரிந்தது, ஒருத்தனை இப்போது பிழிந்தெடுத்துக் கொண்டுவருவோம். ஸ்ட்ரெச்சர் தேவைப்படுகிறது என்பதற்கான குறிப்பான்தான் அது.

வழக்கமான அனுஷ்டானங்கள்போல்தான். இரவு நீண்ட நேரமானது முடிய. வி.ஐ.பியான எனக்கு ஸ்ட்ரெச்சர் வந்தது. முதன் முதலாக ஸ்ட்ரெச்சரில் படுத்தேன். சுகமாகத்தான் இருக்கிறது. நாம் எதைப் பற்றியும் கவலைப்பட வேண்டாம். சும்மா, படுத்துக்கொடுத்தால் போதும். இரண்டுபேர் சுமந்துகொண்டு போவார்கள். சில நேரங்களில் திட்டு விழும்.

"அசையாமப் படுடா. இது வெறும் டெஸ்ட் டோஸ்தான்."

டாக்டர் கேட்டார்: "சுரண்டியெடுக்குற அளவுக்குத்தானே இருக்கான்?"

"இது போதாதா . . ." போலீஸ்காரர்கள் சொன்னார்கள்: "இப்பதான் வளந்து வந்துட்டிருக்கான். திருடப் போக வேண்டியது; பிடிக்க வர்றவங்களைக் கண்டந்துண்டமா வெட்ட வேண்டியது. இதுதான் இவனோட பொழுதுபோக்கு."

இந்தச் சம்பவத்திற்கு முன் ஒரு முள்ளைக்கூட நான் கத்தியால் குத்தியெடுத்தது கிடையாது.

என் முந்தைய தலைமுறையிலுள்ள பல திருடன்களும் அப்போது இல்லை. காட்டாக்கடை சதாசிவனைக் காணவே முடியவில்லை. பேர்கேட்ட ஒரு திருடன் இவன். பொய் சொல்லுவதைத் தவிர, பீடிப் பழக்கம்கூட இல்லாத சற்குண போதன். ஆள் வெளியே வந்தால் அரசாங்கம் விளம்பரம் செய்யும். அந்த அளவுக்கு நிபுணத்துவம் வாய்ந்த வில்லன். இப்படியாகப் பேர் பெற்றவர்களில் அம்பாசிடர் பணிக்கரும் ஒருவர்.

அம்பாசிடர் காரில்தான் போக வரச் செய்வார். ஜெயிலிலிருந்து வெளியே வரும்போதும் அழைத்துக்கொண்டு போவதற்கும் அம்பாசிடர் வேண்டும். போதைக்கும் பெண்களுக்கும் அடிமைப்பட்டவர்களில், பணிக்கர் அண்ணன் அம்பாசிடருக்கு அடிமை. பின்புற இருக்கையில் அப்படியே சாய்ந்து உட்கார வேண்டுமென்பதற்காகவே திருடுவார்.

சேர்த்தலை கிருஷ்ணன்: ஆறே முக்கால் அடி உயரம். அதற்கேற்ற உடம்பு. கிருஷ்ணன் கிடந்தால் ஜெயில் அறைக்கே ஒரு நிறைவு வந்து ஐசுவரியமாக இருக்கும். அவரில்லையென்றால் அது ஒரு குறைதான். அக்குளில் ஒரு பேக் வைத்திருப்பார். அப்போதெல்லாம் வால் வைத்தது போல் ஒரே தினுசான பேக்தான் அதிகமாக இருந்தது. யாராவது ஒருவரை

டார்கெட் செய்வார். கூடவே, பதுங்கி நின்றிருப்பார். கடையிலோ ஓட்டலிலோ வைத்து அந்த நபர் தனது பேக்கில் விரல் விடும்போது அது வேறொரு பேக்காக மாறியிருக்கும். அவ்வளவு தூரம் கைக்கடக்கமான வேலை.

இவர்களையெல்லாம் பார்த்தும் அறிந்தும் படிக்க இயலாத, ஏதோ தத்தி விளையாடிக்கொண்டிருந்த மணியன்பிள்ளை பறவைக்கும் இறக்கைகள் முளைத்தன. கழுகின் இறக்கைகள். என்னதான் உயரத்தில் பறந்தாலும் சமூகத்தின் மடிச்சீலையைக் குறிப்புணரும் திறன் படைத்த வன்கழுகு.

வெளியே வந்து மய்யநாடு, முண்டைக்கல், காக்கோட்டு மூலை பகுதிகளில் செங்கோல் செலுத்தி ஆட்சி புரியத் தொடங்கினேன். ஊரிலுள்ள ஜெயனும் என்னுடனிருந்தான். பகல் நேரங்களில் இவன் என்னுடனிருப்பதைப் பார்த்த ஊர் மக்கள் அவனுக்கும் ஞானஸ்னானம் கொடுத்துவிட்டார்கள். திருட்டு ஜெயன். ஜெயன் என்னுடைய உதவியாளன் ஆனான். என்னை முன்னால் உட்கார வைத்து அங்குமிங்குமாக சைக்கிள் மிதிப்பவன் இவன்தான். தோதுவான வீடு எதையாவது பார்த்தால் உடனே சொல்வேன்: "வண்டியை நிறுத்துடா."

இப்படி, மய்யநாடு ஹைஸ்கூலின் எதிரிலுள்ள சிங்கப்பூர்க்காரனின் வீட்டில் நுழைந்தது மற்றொரு மைல் கல்லாக அமைந்தது. புத்தருக்கு ஞானோதயம் பிறந்ததுபோல் எனக்கு அருள் கிடைத்தது இங்கே வைத்துதான். வெளியே நின்று பார்த்தபோது உள்நுழையவே முடியாதென்று தோன்றிய வீடு அது. நல்ல பாதுகாப்பு ஏற்பாடுகளுடன்கூடிய இரண்டு மாடிக்கட்டடம். சுலபமாக உள்ளே நுழைந்து இருப்பதையெல்லாம் அள்ளிக்கட்டிக்கொண்டு வந்தபோதுதான் ஞானம் பிறந்தது. மனிதனால் உருவாக்கப்பட்ட எதனுள்ளும் மற்றொரு மனிதன் நுழைவதற்கான மார்க்கம் இருக்கவே செய்யும். நூறு சதவிகிதக் கவனத்துடன் ஒரு மனிதனால் எப்போதுமே இருந்து விட முடியாது என்பதுபோல். ஆகவே, பாதுகாப்பிற்கும் சிற்சில பலவீனங்கள் இருக்கவே செய்யும். அதைக் கண்டுணர்பவன் உள்நுழைந்து விடலாம். தேவைப்பட்டால் வெள்ளை மாளிகைக்குள் நுழைந்துவிடுமளவுக்குத் தன்னம்பிக்கைத் தளிர்விட்டது. கைவசமிருக்கும் சைக்கிளில் அங்கெல்லாம் போக முடியாது. எனவே, சுற்றியுள்ள எல்லா உள்ளூர் வெள்ளை மாளிகைகளிலும் ஏறியிறங்குவதாக முடிவு செய்தேன்.

1972 - '75 காலகட்டங்களில் நடத்திய திருட்டுகளுக்குக் கணக்கே கிடையாது. அளவில்லாமல் தங்கம் குவிந்தது. அவ்வளவையும் குடித்தும்

மோண்டும் பெண்களுக்குக் கொடுத்தும் ஊர்க்காரர்களுக்கும் நண்பர்களுக்கும் கொடுத்தும் அழித்தேன். எனது வீட்டிலுள்ளவர்கள் வாங்க மறுத்துவிட்டார்கள். என்ன கஷ்டம் வந்தாலும் சரி, உன்னுடைய இந்தப் பணத்தில் சல்லிக்காசுகூட எனக்குத் தேவையில்லையென்று அம்மா சொல்லிவிட்டாள்.

கடைகளில் தங்கத்தைக்கொண்டுபோய் விற்பது குத்து மதிப்பான விலைக்குத்தான். அவர்கள் ஒரு விலையை வைப்பார்கள். பேரத்தில் ஈடுபட மாட்டேன். ஐம்பது பவுன் கொடுத்தால் பன்னிரெண்டு பவுனுக்கான விலையைத் தருவார்கள். இதில் அவர்களுக்குப் பெரிய லாபமிருப்பதாகவும் சொல்லிவிட முடியாது. திருட்டுப் பொருளை வாங்கித் தப்பித்து விடுவதற்கான வாய்ப்பு ஐம்பது சதவிகிதம்தான். பிடிபட்டால் நான் குற்றத்தை ஒப்புக்கொண்டு விடுவேன். திருட்டுக் கொடுத்தவர்கள் ஐம்பது பவுன் போய்விட்டது என்று சொல்வார்கள். எனக்கு அதெல்லாம் தெரியாது. திருடியதை இந்தக் கடையில்தான் விற்றேன் என்று சொல்லிவிடுவேன். என்னையும் அழைத்துக்கொண்டு போலீசார் அந்தக் கடைக்குப் போவார்கள். "எழுபது பவுன் திருட்டுப் போயிருக்கிறது. இவன் உங்கள் கடையில்தான் விற்றிருக்கிறான்" என்று சொல்வார்கள்.

கடைக்காரன் செய்வான்: "சத்தியமாகச் சொல்றேன் சார், ஐம்பது பவுன்தானிருந்தது. இதைவிட அதிகமாக இல்லவே இல்லை."

"அதையெல்லாம் நீ கோர்ட்டுல வந்து சொல்லு . . ." அப்படியென்றால் சார் கைது செய்யப்போகிறார் என்று அர்த்தம். கடையிலிருந்து எஸ்ஐ மெல்ல வெளியே இறங்குவார்.

நான் வண்டியின் பின்னால் நின்றிருப்பேன். கையில் விலங்குடன். பரஸ்பரம் பேச அனுமதிக்க மாட்டார்கள். பேசினால் போலீசாரின் குட்டு வெளிப்பட்டு விடுமல்லவா?

எஸ்ஐ இறங்கும்போது நகைக்கடைக்காரன் சொல்வான்: "சார், எழுபது பவுனுன்னா சரி, எழுபது பவுன் . . . நகையை உருக்கிட்டேன். நீங்க சொல்றதுபோல செய்து தந்துடறேன் . . ."

எஸ்ஐ அடம்பிடிப்பார். அதெல்லாம் நீ கோர்ட்டுல வந்து சொல்லு . . . திருட்டுப் பொருளையும் வாங்கிட்டு . . ."

கடைக்காரனுக்குத் தெளிவாகத் தெரிந்துவிட்டது. லாக்கப்பில் வைத்துவிடுவார். மறுநாள் பத்திரிகையில் படத்துடன் செய்தி வராமலிருக்க வேண்டுமென்றால் பணத்தை இறக்கிவிட வேண்டியதுதான். கடைசியில் கோர்ட்டில் சாட்சி சொல்ல வருவதற்குள் கடைக்காரனுக்கு மூன்று மடங்கு நஷ்டம் ஏற்பட்டிருக்கும். இந்த ரிஸ்கை மனதில்கொண்டுதான் அவர்கள் மிகக் குறைவான பணத்தைத் தருவார்கள்.

பெரும்பாலான எல்லா போலீஸ் அதிகாரிகளின் நரம்புகளிலும் இப்படி அடுத்தவனை ஏமாற்றித் தின்ற இரத்தம் ஓடக்கூடும். அப்படியென்றால் உண்மையான திருடன் யார்? திருடியவனா, திருட்டுப் பொருளை வாங்கியவனா, இவர்களை வைத்துக் காசு பார்க்கும் போலீஸ்காரனா? குளுவெல்லாம் கொடுக்க முடியாது. சுயமாகச் சிந்தித்து முடிவுக்கு வர வேண்டியதுதான்.

அதற்காக, போலீஸ்காரர்கள்தான் இப்படியென்ற முடிவுக்கு வந்துவிட வேண்டாம். இந்த அசிங்கங்கள் இன்று சமூக அமைப்பின் ஒரு பகுதியாக மாறிப்போயிருக்கின்றன. ஆகவேதான், இவர்களுக்கும் இதில் கூச்சநாச்சங்கள் எதுவுமில்லை. ஒரு எஸ்பிவரை இதுபோன்ற ஒரு வழக்கு விசாரணையின் போது என்னை வைத்து பத்திருபது பவுன் அதிகமாக வாங்கியிருக்கிறார். வழக்கு விசாரணையில் மிகத் திறமையான அதிகாரி இவர். குற்றவுணர்ச்சியா அல்லது சந்தோச மிகுதியா தெரியாது, திரும்ப வரும்போது ஒரு கான்ஸ்டபிள் வழியாக எனக்கு நூறு ரூபாய் தந்தார். பிறகு ஒரு எள்ளளவு, எள்ளின் முனையளவு இவர்மீது வெறுப்பு உருவாகுமா? நூறு ரூபாய்க்கான அன்பாக இருந்தாலும் அது அன்புதானே?

தவளக்குழிபோல் ஆரம்பகாலத்தில் எனக்கு உபதேசமருளிய ஒருவர், மம்மது அண்ணன். இரண்டாவது தடவையாக ஜெயிலுக்குப் போய்விட்டு வந்து வீட்டுக்கும் ஊருக்கும் சாபக்கேடாக அலையும்போதுதான் திருட்டு மம்மது அறிமுகமாகிறார். அன்று அவருக்கு நாற்பத்தெட்டு வயதிருக்கும். அவர் நிறையவெல்லாம் திருடிய நபரல்ல. ஆனால், அதிர்ஷ்டக்காரத் திருடன். சிறிதளவே செய்திருந்தாலும் பெருமளவில் அது அவருக்கு உதவியிருக்கிறது. பிள்ளைகளெல்லாம் படித்து உத்தியோகத்தில் இருக்கிறார்கள். நல்ல மரியாதையானவர்கள். என்னுடைய விஷயம் இதற்கு நேரெதிரிடையானது. இம்மட்டில் ராசியற்ற கள்வனுமுண்டோ கொல்? விதி அதுபாட்டுக்கு ஏராளமான பணத்தை என்முன் கொண்டுவந்துக் கொட்டியது. கனவு போல் திடுக்கிட்டு எழுந்தபோது

தட்டிப் பறித்தது. எல்லாமே கானல் நீர்போலானது.

ஒருநாள் காலையில் வீட்டின் அருகிலுள்ள புத்தன்சந்தை சந்திப்பில் ஏமாற்றத்தில் வேகும் மனதுடன் நின்றிருந்த நான், நடக்க ஆரம்பித்தேன். ஒரு இடைவழியிலிருந்து வந்த மம்மது அண்ணன் மெதுவாக என்னைக் கூப்பிட்டார். ஆட்களின் கவனத்திலிருந்து தப்பிப்பதற்காக நாங்கள் இடைவழியில் புகுந்தோம். எங்கள் இரண்டு பேருக்குமே சமூகம் திருடன் பட்டத்தைக் கனிவுடன் வழங்கியிருக்கிறது. ஊரிலுள்ளவர்களுக்கு கள்ளன் மணியன் என்ற சொல் நாவின் வழங்கு மொழியாகப் பழகியிருந்தது. திருட்டு மணியனும் திருட்டு மம்மதும் சேர்ந்து நடப்பதுகூட மக்களுக்குச் செய்திதான். ஒரே ஊர்க்காரர்கள் என்ற அளவில் நாங்கள் பரஸ்பரம் பேசிக்கொள்வதைக்கூட சமூகம் மாபெரும் திட்டமிடலாகக் கருதியது.

மம்மது அண்ணன் சொன்னார்: "எனக்குத் தெரிஞ்சு மருமவனே, இனி அந்த ஆண்டவனே நினைச்சாலும் இந்தப் பேரு மாறப்போறதில்லை. அதனால, வாழுறதுக்காக இனி கொஞ்சம் திருடுறது பெரிய குற்றமாகவெல்லாம் ஆயிடப் போறதில்லை."

நீண்டநாட்களுக்குப் பிறகு என்னிடம் ஒருவர் பரிவாகப் பேசுகிறார். மனதிற்குள் அழுதுகொண்டிருந்த நான் வாய் விட்டழுது விட்டேன்:

"எனக்கு . . . எனக்குத் திருடத் தெரியாது, அண்ணா."

அவருக்கும் அழுகையாக வந்தது. திருட்டுக் குற்றத்திற்காக இரண்டு முறை ஜெயிலில் கிடந்த நான், நிரந்தரக் குற்றவாளியென்று போலீஸ் பட்டியலில் இடம்பெற்றிருப்பவன். போலீசும் சமூகமும் பெரிய டிஸ்கவரி போல் ஒரு திருடனைக் கண்டுபிடித்திருக்கிறது. ஆனால், திருடன் சொல்கிறான், திருடத் தெரியாது என்று. சீட்டு விளையாடுவதற்காக உண்டியல் பெட்டியிலிருந்து சில்லறைக் காசைத் திருவதற்காக எடுத்த வீண் முயற்சி மட்டும்தான் அதுவரையிலான என்னுடைய திருட்டு வரலாறு. மம்மது அண்ணனின் மனம் கரைந்தது.

"மருமவனே, நான் திருடப்போய் ரொம்ப நாளாகுது. திருடுறதை பிள்ளைகள் அறிஞ்சு வருத்தப்படுறாங்க. அதனால தான் இப்பப் போறதில்லை. ஆனா, உனக்காக நான் ஒன்றிரண்டு வேலைக்குக் கூட வர்றேன். எல்லாவனுங்களும் நான் திருடறதை நிறுத்திட்டு நல்லவனாக மாறிட்டேன்னுதான் நினைச்சிருக்கானுங்க. சரி, வா . . ."

இப்படியாக மம்மது அண்ணன் ஒன்றிரண்டு வேலைகளுக்குப் பயிற்சியாளராகக் கூடவே வந்தார். அப்போதெல்லாம் மம்மது அண்ணன் பல கதைகள் சொல்வார். தொடர்ந்து, கொஞ்ச நாட்களாக நாங்கள் பொழுது விடியும் வேளைகளில் தம்புரான்வெளியிலுள்ள நாணுபிள்ளையின் சாயாக்கடையில் சந்தித்தோம். மம்மது அண்ணனின் உம்மா, கொல்லத்தில் வசதியான ஒரு முஸ்லியா*ரின் வீட்டில் வேலை பார்த்து வந்தாள். ஒருநாள் வேலை முடிந்து வரும்போது மதிலில் சில அடையாளங்களை வைத்துவிட்டு வீட்டுக்கு வந்தாள். இரவில் மம்மது அண்ணன் நனைத்த கைத்துண்டால் அந்த அடையாளங்களைப் போகிற போக்கில் அழித்துவிட்டு உள்ளே நுழைந்தார். மறுநாள் முஸ்லியார் வந்து பார்க்கும்போது வீட்டிலுள்ள பொருட்களும் பண்டமுமிருந்த இடம் சூனியமாகக் கிடந்தது.

மய்யநாடு, காக்கோட்டுமூலை பகுதிகள் திருட்டுக்குகந்த இடங்களென்பதைக் கற்றுத் தந்தவர் மம்மது அண்ணன்தான். இந்தப் பகுதியின் போலீஸ்சரகமான கொட்டியம், தொலைவிலிருந்தது. ஆகவே, போலீஸ் தொந்தரவுகள் இருக்காது. வி.ஐ.பிகள் அதிகமாக வாழ்கிற பகுதியென்பதால் இரவு எட்டு மணிக்கே ஊர் அமைதியாகி விடும். அவர்களை விடவும் பெரிய வி.ஐ.பிகள் அவர்கள் வளர்க்கும் நாய்கள். தங்களின் வளாகத்துக்கு வெளியில், அண்டை வீடுகளில் என்ன நடந்தாலும் சரி, நகர்ப்புறத்து மாண்பாளர்கள்போல் மூச்சுகூட விடாது. காதுகளைத் தாழ்த்தி முன் கால்களில் தாடையையும் ஊன்றிக்கொண்டு தெய்வமே என்று படுத்திருக்கும். ஒருநாள் மம்மது அண்ணனிடம் கேட்டேன்:

"அண்ணா, இப்படி ஒரு விதி நமக்கு மட்டும் ஏன் வந்தது?"

"என்ன விதி?"

"திருடனாக மாறினது . . ."

"அடேய், புத்தியுள்ள தலைக்குள்ளதான் திருடன் உருவாக முடியும். பல திறமைகளுள்ள எல்லாவனுங்க வாழ்க்கையும் இப்போ அதோகதியாகத்தான் கிடக்கு. பெரிய பெரிய கலைஞனுங்க எல்லாம் குடிச்சு மோண்டு, பெண்ணுங்க பின்னால திரியறதைப் பாத்துட்டுதானே இருக்கே? மற்றவங்களை விட உனக்கு அதிகமான திறமைகளைத் தரவான்னு ஆண்டவன் கேக்கும்போது நாம வேண்டாம்னு சொல்லியிருக்கணும். ஏன்னா, அதில இப்படியான ஒரு சிக்கலும் இருக்கு.

நம்மோட திறமைகளை நாம காட்டிட்டே இருக்கணும்; மக்களும் நம்மளைத் தூக்கிப்போட்டு மிதிச்சிட்டே இருக்கணும்."

## 11 - காணாமல் போனேன் . . .

வாழத்துங்கல் மக்களிடமிருந்தும் அதன் வரலாற்றிலிருந்தும் தங்களை வேறுபடுத்திக்கொள்ள விரும்பிய மூன்று நபர்கள் சேர்ந்து தலைமறைவாகி விடுவதாக முடிவு செய்தார்கள். தலைமறைவு என்பது வெறுமொரு பம்மாத்து வார்த்தைதான். தலையை மறைத்துக் கொள்ளாமலிருந்தாலும் யாரும் தேடி வந்துவிடப் போவதில்லை. நாங்கள் பத்து நாட்கள் கழிந்து வந்தாலும் சரி, பத்து மணி நேரம் கழிந்து வந்தாலும் சரி, வீட்டிலுள்ளவர்களுக்குக் கணக்கு ஒன்றுதான். இந்த உலகத்தின் கணக்கிலிருந்து கழிக்கப்பட்டு விட்டவர்கள் நாங்கள்.

மற்ற இரண்டு மகாபாவிகள்: பங்களா மணிக் குட்டன் என்று சொல்லப்படும் ஸ்ரீதரன் பிள்ளை. மற்றொருவன் ராஜன். பிற்காலத்தில், பெயிண்டிங் வேலை செய்ததாலும், ஊர் முழுவதும் ராஜன்களால் நிறைந்திருப்பதாலும் பெயிண்டிங் ராஜன் என்ற பெயரில் அறியப்பட்டவன்.

குழுவின் தலைமைப் பொறுப்பு பங்களா மணிக் குட்டனுக்கு. வாழத்துங்கலில் வரலாற்றிலிருந்து இந்த இரண்டு பேரும் இப்போது வெளியேறிவிட்டார்கள். நான் மட்டும்தான் பாக்கி.

எந்த ஊரிலிருந்தாலும் மறக்க முடியாத மாபெரும் மனிதனாக வாழ்ந்தவன் இந்த மணிக்குட்டன். இன்று யோசிக்கும்போதுதான் நினைவுக்கு வருகிறது. பங்களா குடும்பமென்பது வாழத்துங்கலிலுள்ள ஒரு பெரிய குடும்பம். சிறு வயதில் எங்கள் வீட்டின் பக்கத்தில்தான் அவனது குடும்ப வீடுமிருந்தது. குடும்ப ஒழுங்குகளுக்குள் அடைபடாதது அவனது இயல்பு. நக்சல்பாரி அனுதாபியாகவுமிருந்தான்.

என்னுள்ளிருந்த கலாரசனைதான் என்னைத் தலைமறைவாகத் தூண்டியது. அன்று எங்கள் ஊரில் கோயில் திருவிழாவில் கதாகாலட்சேபம் நடக்கும். கொல்லத்தின் ஆன்மாவுடன் இணைந்த கலையென்பது, கதாகாலட்சேபம்தான். கதைகள் கேட்பதில் எங்களுக்கு அலாதியான ஆர்வம். கதைச்சொல்லி யாரென்பதெல்லாம் நினைவில்லை. ஆனால், கோழிக்கோடு முக்கம் கிராமத்தைப் பற்றிய ஒரு வர்ணனை அதிலிருந்தது.

முக்கம் கிராமத்திற்கு வெள்ளி ஒட்டியாணமிட்டதுபோல் தவழ்ந்து கொண்டிருக்கும் நதியென்றெல்லாம் அவர் வர்ணித்ததைக் கேட்டதும் நான் நினைத்துக்கொண்டேன்: "எப்படியாவது அங்கே போக வேண்டும். அந்த அழகான கிராமத்தைப் பார்க்காமல் என்ன வாழ்க்கை?" ராஜனை இதற்காகத்தான் கூட்டுப் பிடித்தேன். விஷயத்தை அறிந்ததும் மணிக்குட்டன் சொன்னான்: "நான் உங்களைக் கூட்டிட்டுப்போறேன்."

நானும் ராஜனும் ஓரளவுக்கு நெருங்கிய உறவினர்கள். என் தாத்தாவுக்கு இரண்டு பெண் மக்கள். பொன்னம்மாவும் கமலாம்மாவும். பொன்னம்மா தலைமையாசிரியராக இருந்தார். அவருடைய ஒரு தம்பிதான் ராஜனின் அப்பாவான ராமச்சந்திரன். ரொம்பவும் கௌரவம் பார்க்கிற ஒரு மனிதர். ஒரு இலையின் அசைவுகூட தன்னைப் பாதித்து விடுமளவுக்கு அப்பாவி மனிதரும். ஆனால், பெரும் ஈகோ. யாராவது கேலி பேசினால்கூட அவரால் தாங்கிக்கொள்ள முடியாது. ஆகவே, இதற்கான சந்தர்ப்பங்கள் உருவாகிவிடாமல் ஒதுங்கியே வாழ்ந்தார். ஒருநாள் ராஜனின் அம்மா என்னவோ கேலி பேசிவிட்டாளாம். அது மனதில் தைத்துவிட்டது. அவரிடம் துப்பாக்கி இருந்தது. கழுத்தில் வைத்தார். டப் . . . ஒரு குண்டு. வேலை முடிந்தது.

இத்துடன் நானும் ராஜனும் ஒரே வண்டியில் பூட்டப் பட்ட இரட்டைக் காளைகள் போலானோம். இரண்டு பேருக்கும் அப்பா கிடையாது. வண்டிக்காரன் இல்லாத காளைகள் மனம் போன போக்கில். இரண்டு வீடுகளிலும் வறுமை. நாங்கள் காயலுக்குப்போய் சிப்பி பொறுக்கி தண்ணீர் விட்டுச் சூடாக்குவோம். நீரை வடித்துவிட்டு வேக வைப்போம். சிப்பியின் வாய்ப்பகுதி திறக்கும். தோட்டை நீக்கினால் நல்ல சதைப் பகுதி. குடலை எல்லாம் ஒதுக்க மாட்டோம். ஏதாவது தென்னையிலேறி, தேங்காய் பறிப்போம். நல்ல சுவையாக இருக்கும். எதிர்காலத்தில் பெரும் கும்மாங் குத்துகளை வாங்குவதற்கேற்ப என்னுடைய குரல்வளைக்கு நல்ல உறுதியைத் தந்தவை, இதுபோன்ற எத்தனையெத்தனையோ சிப்பிகளின் ஆன்மாக்கள்தான்.

மணிக்குட்டனின் குடும்பத்துடனும் சிறு உறவிருந்தது. சற்றுத் தூரத்து உறவுதான். அப்படியாக நாங்கள் மூன்று உறவினர்களும் சேர்ந்து புறப்படுவதாகத் தீர்மானித்தோம். இதில் வயது அதிகமானவன் மணிக்குட்டன்தான். ஆனால், இரண்டுமுறை ஜெயிலுக்குப் போய் வந்ததாலும் நல்ல உதை வாங்குவதற்கான மனஉறுதி வாய்த்திருந்ததால் நானும் மணிக்குட்டனும் சரிநிகர் சமானர்கள். அனுபவங்கள்தானே முதிர்ச்சி? ஆகவேதான், மணிக்குட்டனை நான் பெயர் சொல்லிக்

குறிப்பிடுகிறேன். சில நேரங்களில் அண்ணா என்றும் சில நேரங்களில் அவன் என்றும் தோதுபோல் அழைப்பேன்.

போவதற்குக் காசு வேண்டும். மணிக்குட்டன் சொன்னான்: "நான் கொஞ்சம் பணத்துக்கு ஏற்பாடு செய்றேன். மிச்சத்தை நீங்க பாத்துக்குங்க."

பயணம் தொடங்கியது.

முக்கத்திற்குப்போக கோழிக்கோட்டில் இறங்க வேண்டும். ஆனால், ரயில்வே ஸ்டேஷனில் வைத்து மற்ற இரண்டு பேர்களும் இலட்சியத்திலிருந்து தடம் புரள்கிற முயற்சியை மேற்கொண்டார்கள். மங்கலாபுரத்துக்குப் போகலாமென்று மணிக்குட்டன் சொன்னான். "அங்கே என் மாமா ரயில்வேல வேலை பாக்குறாரு . . ." என்று ராஜனும் ஒத்துப் பாடினான். பெரும்பான்மை பறிபோனாலும் நான் விட்டுக்கொடுக்கவில்லை. கடைசியில் ஒரு முடிவுக்கு வந்துசேர்ந்தோம். முக்கத்தைப் பார்த்த பிறகு நேராக மங்கலாபுரத்துக்குப் போகலாம்.

முக்கத்தைப் பார்த்தோம். பரவாயில்லை. அழகிய நதியையும் பார்த்தோம். அழகுதானா? ஆமாம் என்று மனதிற்குள் சொல்லிக்கொண்டேன்.

நள்ளிரவில் கோழிக்கோடு ரெயில்வே ஸ்டேஷனில் வெஸ்ட்கோஸ்ட் எக்ஸ்பிரஸ் மூச்சு வாங்க வந்து நின்றது. ஜெனரல் கம்பார்ட்மெண்டில் அடியும் உதையும்பட்டு நாங்கள் நின்றபடியே தூங்கினோம். பக்கத்தில் நின்றிருந்தவர்கள்மீது சாய்ந்தோம். திட்டியவர்களுடன் மோதினோம். சவாலில் இரண்டு குழுவினரும் சளைத்தவர்களில்லை. சண்டையென்று வந்தால் யாருமே மங்கலாபுரத்தை அடைய மாட்டோம் என்பதைப் புரிந்துகொண்டு பரஸ்பரம் பணிந்தோம். இருந்தாலும் சொல்லி வைத்தோம்: "மங்கலாபுரம் வரட்டும்டா . . . நாங்க யார்னு காட்டுறோம் . . ." அவர்களும் இதைத்தான் சொன்னார்கள். அங்கே ஏதோ மிகப்பெரிய ஆதரவாளர் கூட்டம் சண்டைக்குத் தயாராக இருப்பதுபோன்ற பயம் இரண்டு குழுவினருக்குமிருந்தது. மங்கலாபுரத்தை அடைந்ததும் இரண்டு குழுவினரும் அவசர அவசரமாக இரண்டு பாதைகளில் பிரிந்தோம்.

நேரம் விடிந்துகொண்டிருந்தது. முகம் கழுவிவிட்டு கொஞ்ச நேரம் உட்கார்ந்து தூங்கியெழுந்து பிறகு போகலாம். மாமா வேலைக்கு வர எப்படியும் எட்டு மணி தாண்டி விடுமல்லவா? ஸ்டேஷனில் சிமெண்ட் பெஞ்சில் உட்கார்ந்தோம். நானும் ராஜனும் தோளோடு தோள் சேர்ந்து

உட்கார்ந்து வாய் பிளந்துத் தூங்கினோம். நாங்கள் உட்கார்ந்திருந்த அதே வரிசையில் பத்துப் பதினெட்டு வயதான ஒரு பெண் அழுக்கடைந்த உடைகளும் சடைபிடித்த தலைமுடியுமாக அலங்கோலமாக உட்கார்ந்திருந்தாள். அன்றெல்லாம் கரியில் ஓடுகிற வண்டிகள் தானே? எஞ்சின் பக்கத்திலுள்ள கம்பார்ட்மெண்டில் உட்கார்ந்து நீண்ட தூரம் பயணம் செய்தால் உடலில் சிறிதளவாவது கரி படிந்துவிடும்தான். ஆனால், இவளோ கரியறைக்குள் பயணம் செய்தவள் போலிருந்தாள்.

கொஞ்சநேரம் கழிந்ததும் மணிக்குட்டன் எங்களைத் தட்டியெழுப்பிச் சொன்னான்: "நான் அவகிட்ட பேசிப் பார்த்தேன். பாவம், அவளுக்கு டீ வாங்கிக் கொடுக்கணுமே?" "அதுக்கென்ன? வாங்கிக்கொடு." என்றோம். பிளாட்ஃபாம் டீக்கடையில் நின்று அவள் டீயை ஆவேசமாகக் குடித்துக்கொண்டிருந்தாள். மணிக்குட்டன் அவளிடம் என்னவெல்லாமோ கேட்கிறான். நாங்கள் திரும்பவும் தோளோடு தோள் சேர்ந்தோம். கிழக்கிலிருந்து இலேசான இளங்காற்று தவழ்ந்து கொண்டிருந்தது. அதன் சுகத்தில் நாங்கள் மெல்ல மயங்கும்போது திரும்பவும் வந்து அவன் தட்டியெழுப்பினான். எரிச்சல் வந்தது.

"சாயா வாங்கிக் குடுத்தாச்சில்லே . . ?

"ஆமா . . ."

"பிறகென்ன?"

"டேய், பாவம்டா, இவளை இப்படியே விட்டுட முடியாது . . ."

"பிறகு . . ?"

"இவளை எவனெல்லாமோ சேர்ந்து ஏமாத்தியிருக்கான்." ஏற்கனவே நாங்கள் முடிவு செய்தது சரியாகவே இருந்தது. கரியள்ளிக் கொட்டுகிற அறைக்குள் போட்டு மூன்று நான்கு நாட்களாக இவளை பல பேர் பயன்படுத்தியிருக்கிறார்கள். எல்லாருமே ரயில்வேயில் வேலை பார்க்கும் கீழ்மட்டப் பணியாளர்கள். உபயோகித்துவிட்டு வெளியே தள்ளியிருக்கிறார்கள். நல்ல குடும்பத்திலுள்ள பெண். பயங்கரமான அந்தச் சூட்டில் தண்ணீர்கூடக் கொடுக்காமல் அந்த நாய்கள் இங்கே கொண்டுவந்துத் தள்ளிவிட்டுப் போய்விட்டன. இப்போது சாகக்கிடக்கிறாள் . . .

"யோசிக்கிறதுக்கு என்ன இருக்கு? எவ்வளவு வண்டி நிக்குது . . ."

"அவ ஏண்டா சாகணும் . . ?"

"அதுக்காக நீ என்ன பண்ணிடப்போறே?"

"நான் நினைச்சால் அவளை சாகவிடாம காப்பாத்த முடியாதா . . ?"

"என்ன பண்ணலாம்னு நினைக்கிறே?"

"நான் அவளை வெச்சிக் காப்பாத்தப் போறேன் . . ."

"திங்கக் கொடுக்கணுமே, என்னா பண்ணுவே?"

"கூலி வேலை செய்வேன்."

"ஒப்பேறாத கேசு . . . ஞாபகமிருக்கட்டும் . . ."

"ஆமா, அவ, ஒப்பேறாத கேசு . . . நாம ரொம்ப யோக்கியம் . . . நீ ராத்திரி வீடுகளுக்குள்ளால நுழைஞ்சி கலெக்டர் உத்தியோகம்ல பாக்குறே."

"அதுவும் சரிதான்." நான் மெல்லப் பின்வாங்கினேன்.

"ஒரு சின்ன உதவி பண்ண முடியுமா?"

"என்ன செய்யணும், அதைச் சொல்லு முதல்லே . . ."

"இவளை முதல்ல குளிக்க வைக்கணும்."

நாங்கள் ரயில்வே ரோடு வழியாக மங்கலாபுரம் ரயில்வே ஸ்டேஷனின் பின்பக்கமாக நடந்தோம். ஒரு கிலோ மீட்டர் தூரம் நடந்திருப்போம். பசுமைப் படர்ந்த தாழ்ந்த பகுதி வந்தது. அதன் நடுவில் கண்ணீர்போல் சுத்தமான ஒரு நீர்த் தடாகம். வெட்கப்படாமல் ஆண்களும் பெண்களுமாகச் சேர்ந்து குளித்துக்கொண்டிருக்கிறார்கள். நிர்வாணமான அக்குளும் மார்பகமும் தெரியும்படியான மெல்லிய துண்டுகளை அவிழ்த்து நனைத்துத் திரும்பவும் கட்டிக்கொள்கிறார்கள். மணிக்குட்டன் தன் சட்டையைக் கழற்றி அவளிடம் கொடுத்தான். அதை அணிந்து அவள் தண்ணீரில் இறங்கி நின்று துணியை அவிழ்த்து அவனிடம் கொடுத்தாள். அவள் குளிக்கும்போது அவன் விலகியிருந்து அழுக்குத் துணிகளை ஒரு

கல்லில் அடித்துத் துவைத்தான். அன்று அவன் செய்த வேலைகளைப் புரிந்துகொள்வதற்கான அறிவு எங்களுக்கில்லை. துவைத்த துணிகளைப் பாறையில் விரித்தான். காலை சூரியனின் கதிர்கள் அந்த இடத்தில் ஏற்கனவே பதிந்திருந்தன. அவள் குளித்து முடித்ததும் அவன் அதை வாங்கி நீரில் அமிழ்த்திப் பிழிந்து கொடுத்தான். அவள் கரையேறும்போது நாங்கள் திரும்பி நின்றோம். ஈரத் துணியை அவள் உடுத்திக்கொண்டாள். அப்போது அவளைப் பார்த்தபோது நினைத்தது போலில்லை. நல்ல அழகாகவே இருந்தாள்.

"ஆஸ்பத்திரிக்குப் போகணும்." அவள் சொன்னாள்.

"ஏன் உடம்புக்கு என்ன . . ?"

"நடக்கும்போது தொடை நல்லா வலிக்குது. ரொம்பவும் முடியல . . ."

அவள் சொல்வதைக் கேட்கப் பரிதாபமாக இருந்தது.

டாக்டரம்மா சொன்னார்: "இன்ஃபெக்ஷன். ரெண்டு நாள் பெட்ல இருக்க வேண்டியதிருக்கும்."

நாங்கள் சொன்னோம்: "அது சரிப்படாது."

"அப்படீன்னா நீங்க கிளம்புங்க."

"அப்ப நீ . . ?"

"ஏற்கனவே சொன்னனே . . . இவளுக்குப் பாதுகாப்புக் கொடுக்கணும். இப்போதைக்கு நீங்க போகலாம். நாங்கள் கையிலிருந்த காசில் கொஞ்சம் வைத்துக்கொண்டு மிச்சத்தை அவனிடம் கொடுத்தோம்.

நான் சொன்னேன்: "நீ திருந்தப்போறதா தெரியல."

மணிக்குட்டன் என்னைப் பரிதாபமாகப் பார்த்தான். இந்த உலகத்திலுள்ள எல்லா சாபங்களையும் ஏற்று வாங்கி அதிகார நிறுவனங்களின் அனைத்துவிதமான அடிஉதைகளையும் பெற்று பழுப்பும் பித்தமுமாக மலம் கழியப்போகும் நீயாடா இதைச் சொல்வது என்று கேட்பது போலிருந்தன எதிர்காலத்தைக் கணிக்கும் திறனுள்ள அவனது கண்கள். இன்றுதான் அதைப் புரிந்துகொள்ள முடிகிறது. அப்போது என்னால் அது இயலவில்லை.

ராஜனும் கேட்டான்: "டேய், இவளை எப்படிடா நம்ப முடியும்?"

மணிக்குட்டன் சொன்னான்: "நான் நம்பவே இல்லையே?"

"பிறகு . . ?"

"அப்படி நினைக்குறது சரியாக இருக்குமா? நான் ஒண்ணும் இவளை விலைக்கு வாங்கலையே? இப்போதைக்கு இவளுக்குப் பாதுகாப்புக் கொடுக்கணும்னு தோணிச்சு. இவ என்னை ஏமாத்திடக்கூடாதுங்குறதில நான் ஏன் பிடிவாதமாக இருக்கணும் . . ?"

நாங்கள் பதிலெதுவும் சொல்லவில்லை.

தனியாளாக மாறியதில் மணிக்குட்டனுக்குப் பதற்றமிருந்தது. அதை அவன் வெளிப்படுத்தாமல் கை உயர்த்திக் காட்டினான்.

திரும்பிப் போகும்போது ராஜன் சொன்னான்: "உண்மையாகவே நாம மோசமானவங்கதான். ஒண்ணா வந்தோம். இப்ப அவனை மட்டும் தனியாக விட்டுட்டோம்."

எனக்குக் கோபம் வந்தது: "மூணு பேர்தானே வந்தோம். அதை நாலாக்கியது நம்ம குற்றமா?"

மங்கலாபுரத்தில் படியில் என்ற இடத்திற்குச் சென்றோம். ராஜனின் மாமாவைப் பல இடங்களில் தேடியலைந்து கடைசியில் கண்டுபிடித்தோம். பாவப்பட்ட அந்த மனிதன் கூலி வேலைப் பார்த்து வந்தார். மங்கலாபுரம் ஹார்பர் இருக்கும் பனம்பூரில் ரயில்வே லைன் போடும் வேலை நடந்துகொண்டிருந்தது. அந்தப் பணியின் பொறுப்பைப் படியிலிலுள்ள ஒருவர் கவனித்து வந்தார். மாமாவுடன் மேஸ்திரியைப் போய்ப் பார்த்தோம். வேலைக்குச் சேர்த்துக் கொண்டார். பெரிய சுரங்கப்பாதை அமைக்கும் வேலை நடந்துகொண்டிருந்தது. முக்கால்வாசி வேலை முடிந்திருந்தது. பெரிய ஆழமான பகுதியிலிருந்து மண்ணையள்ளி வெளியே கொண்டுவர வேண்டும். சேற்று மண்ணைக் குழைத்துத் தற்காலிகப் படிகள் அமைக்கப்பட்டிருந்தன. கையோ காலோ லேசாகத் தவறினால் போதும், நூறுக்கும் அதிகமான அடி பள்ளத்தில் விழுந்து விடுவோம். ஓரங்கள் இடிந்துவிடாமலிருக்க வைக்கப்பட்ட கற்களில் தட்டி உடம்பு சின்னாபின்னமாகச் சிதறிப் போய்விடும். நாங்கள் மொத்தம் 22 கூலிக்காரர்களிருந்தோம். தினமும் நான்கு லோடு மண்ணை

லாரியில் நிரப்ப வேண்டும். சமதளமாக இருந்தால் நாற்பது லோடு மண். நான்கு லோடு எப்போது பூர்த்தியாகிறதோ அப்போது வேலையை முடித்துக் கொள்ளலாம். வெயில் அதிகமாக இருந்தால் வேலை மிகவும் கஷ்டமாக இருக்கும். ஆகவே, அதிகாலையிலேயே வேலையை ஆரம்பித்து விடுவோம். சில நேரங்களில் இரவு முழுவதும் வேலை இருக்கும்.

கழுத்தில் பயங்கரமான வேதனை. சற்று ஓய்வுக் கிடைக்கும்போது எவ்வளவு ஆறுதலாக இருக்கும் தெரியுமா? இருபத்தி ரெண்டு பேரில் மூன்றுபேருக்கு சமையல் வேலை. இது சுழற்சி முறையில் நடக்கும். இரவு கட்டன் காப்பியும் வேகவைத்த கடலையும். சாயங்காலம், ஊற வைத்த அவல்.

மாதச்சம்பளம் நூற்று நாற்பது ரூபாய். எனக்கு அலுத்துப் போய்விட்டது. வேலையை விட்டு விடப்போவதாகச் சொல்லி விட்டேன்: "என் உடம்புலே இவ்வளவு கஷ்டமான வேலைகளைச் செய்றதுக்கான சக்தியில்லை." இப்படியாக மூன்று பேரும் மூன்று பாதைகளில் . . .

நான் திரும்பி வந்துவிட்டேன். ராஜன் ஆறுமாதம்வரை தாக்குப் பிடித்து நின்றான். திரும்பி வந்தபோது அவனது கழுத்தில் புடைத்து நிற்கும் நரம்புகளும் சுமடு தூக்கி உறுதி பெற்ற சதைத் திரட்சிகளுமிருந்தன.

"அவன் என்ன ஆனான்?" நான் கேட்டேன்.

"யாரு, மணிக்குட்டனா . . ? அவன் பாலக்காட்டுல ஒரு குடிசையை வாடகைக்கெடுத்து தங்கியிருக்கான். கூலி வேலைதான். குழந்தைகளுக்குப் பாடமும் எடுக்கிறான்."

காலங்கள் மாறின. திருட்டில் நான் பிஜி முடித்தேன். போலீசின் கையிலிருந்து யூஜிசி அடிப்படையில் குத்துக் கிடைத்தது. ஜெயிலிலும் பெரிய மனிதன்தான். தின்றும் தூங்கியும் நாட்கள் சென்றன. அவ்வப்போது வெளியே வந்து பற்பல ஜாலவித்தைகள் செய்து வாழ்க்கையைக் கழித்துக்கொண்டிருந்த காலம். ஒரு திருவிழாவின்போது மணிக்குட்டனைப் பார்த்தேன். எங்கள் ஊரின் முக்கியமான களரிவாதுக்கல் கோயிலில் அப்போது திருவிழா நடந்துகொண்டிருந்தது. திருவிழா பகுதியில் கடைகள் வைப்பதற்கான இடத்தை நான்தான் ஏலம் பிடித்திருந்தேன். விழாக் குழுவினருக்குக் குறிப்பிட்ட ஒரு தொகையைத் தந்து ஏலம் பிடிக்க வேண்டும். வியாபாரிகளிடமிருந்து வாங்கும்

கப்பத்தில் லாபம் பார்த்துக்கொள்ளலாம். இந்த லாபம், வாடகை பிரிப்பதில் காட்டும் மிடுக்கைப் பொறுத்திருக்கும். வியாபாரிகளும் ஏராளமான இடங்களில் கடை போட்டு ஆடித் திமிர்த்து வருபவர்களாகவே இருப்பார்கள். ஜகஜாலக்கில்லாடிகள். குழு சேர்ந்தே இயங்குவார்கள். சில்லறை அடாவடிகளுக்கெல்லாம் அசைந்து கொடுப்பவர்களில்லை. இந்தத் தடவை தரை வாடகையை ஏலம் எடுத்திருப்பவன் பல தடவை ஜெயிலுக்கெல்லாம்போன ஒருத்தன் என்பதான தகவலை நான் முதலிலேயே பிரச்சாரம் செய்து வைத்திருந்தேன். இப்படியாக, பகலில் தண்டல்காரன். இரவில் பெருங்குடியன்.

அன்று காலையில் நானும் காராளில் ரவியுமாக தண்டலுக்குப் புறப்படவிருக்கும்போது நாங்கள் தங்கியிருந்த அறைக்குள் எதிர்பாராமல் பங்களா மணிக்குட்டன் வந்தான். என் மனதில் மென்மையான எந்த உணர்வுகளுமில்லாத கால கட்டம் அது. தினமும் ஆடுகிற பல வேஷங்கள் . . . வருவது வரட்டுமென்று ஆட்டத்தை மட்டும் தொடர்ந்துகொண்டிருந்தேன். மறுநாள் என்ன வேடம் போடவேண்டியதிருக்கும் என்று எந்த நிச்சயமுமில்லை. இந்த நிலைமையில் யார் வந்தால் என்ன? யார் போனால் என்ன? இருந்தாலும் மணிக்குட்டனை அப்படி உதாசீனம் செய்துவிட முடியாதல்லவா?

"மணிக்குட்டா, நீ எப்படா வந்தே?"

"இன்னைக்குத்தான்."

"இப்ப எங்களுக்கு வேற வேலை இருக்கு. ராத்திரி லேட்டா தான் திரும்பி வருவோம். மறக்காம அப்ப வந்துடு."

"வந்துடறேன்."

"நமக்கு பெரிய அளவுல ஒண்ணு கூடணும்; கூடி வாழ்ந்து ரொம்ப நாளாகுதில்லையா?"

காலையில் சற்று பூசாமல் போவதும் முறையில்லை அல்லவா? நான் பேக்கிலிருந்து இரண்டு ஃபுல் பாட்டில் ஹெர்குலிஸ் ரம்மை எடுத்து வெளியே வைத்தேன். அதிலிருந்து ஒரு ஆஃப் அளவுக்கு மூன்று பேரும் குடித்தோம். மீதி ஒன்றரை குப்பியும் அப்படியே இருந்தது.

நாங்கள் வெளியே வந்தோம்.

"சரி, சாயங்காலம் பாப்போம்." அவன் விடைபெற்றான்.

நாங்கள் அன்று திரும்பி வருவதற்கு இரவு வெகுநேரமாகி விட்டது. நான்கு பாட்டில் அடிப்பதற்கான ஆவேசத்துடன் வேகமாக வந்துகொண்டிருந்தோம். மனதில் மணிக்குட்டனில்லை. யாருமே இல்லை. அறை திறந்து கிடப்பது திடீரென்று கண்ணில் பட்டது.

உள்ளே மணிகுட்டன் ரொம்ப கூலாக உட்கார்ந்திருக்கிறான்.

"ஏன் இவ்வளவு லேட்டாயிடுச்சு?" என்று கேட்டான்.

கீழே ரம் பாட்டில்கள் காலியாகக் கிடந்தன.

"இதிலிருந்ததையெல்லாம் என்ன பண்ணினே?" நான் அலறினேன்.

"குடிச்சேன்."

"அவ்வளவையுமா?"

"ஆமா." என்றான்.

நம்ப முடியாமல் அவனைப் பார்த்தேன். ஒன்றரை ஃபுல் அடித்த ஒரு மனிதன் உணர்விழந்து போயிருக்க வேண்டும். இந்த இரவில் இனி கிடைப்பதற்கான வழியில்லை. கோபம் கொப்பளித்து வந்தது. அவனது பக்கத்தில்போய் சட்டையைப் பிடித்துத் தூக்கியெடுத்து ஒரு குத்துவிட்டேன். அப்படியே தெறித்துப்போய் மூலையில் விழுந்தவன் அமைதியாக எழுந்து, கைகளைத் தட்டி விட்டுக்கொண்டு சொன்னான்:

"ஒரு சொட்டு பிராந்திக்காகவா நீ என்னை அடிச்சே? சரி, குட் பை."

மணிக்குட்டன் இறங்கி நடந்தான். இலேசான தள்ளாட்டம் மட்டும்தான்.

திரும்பவும் ஒரு தடவை இங்கே வந்ததாக ராஜன் சொன்னான். இந்தச் சம்பவத்திற்குப் பிறகு என்னை அவன் பார்க்க வரவே இல்லை. பிறகு, அவன் செத்துப்போன விவரத்தை ராஜன் சொல்லி அறிந்தேன்.

"செத்துப்போயிட்டான். தாமரைச்சேரி அடிவாரத்திலுள்ள ஏதோ ஒரு

சாயாக் கடை மாடியில செத்துக் கிடந்தான். சடலம், இரண்டு நாளா அப்படியே கிடந்திருக்கு."

உறவினர்கள் யாருமே போகவில்லை. அவர்களுடைய பார்வையில்: எதற்காகப் போய்ப் பார்க்க வேண்டும்? எதைத்தான் அவன் மிச்சம் வைத்தான். சொந்தக்காரன் என்று சொல்லிக்கொள்வதற்கான என்ன யோக்கியதை இருக்கிறது? சொத்துப் பத்தா, பிள்ளைக் குட்டிகளா? தொழுநோய் பிடித்த உடலிருந்து அகன்ற விரலை அனுஷ்டானப்படி யாராவது மறைவு செய்வார்களா? அந்த நோயாளிகூட அதை அருவருப்புடன் தானே பார்ப்பான்? அப்போதுகூட அவனுக்கு நாம் தொழுநோயாளி என்பது நினைவிருக்காது. சமூகமும் இப்படியான ஒரு தொழுநோயாளிதான்.

என்னுடைய வாழ்க்கைக் கதையை எழுதுவது தொடர்பாகவும், மணிக்குட்டனைப் பற்றிய என்னுடைய நினைவுகள் சரிதானா என்று உறுதி செய்வதற்காகவும் பெயிண்டிங் ராஜனைப் பார்க்கப் போயிருந்தேன். ஒரு பெரிய வயலோரத்தில் சிறு குடிசையொன்றில் ராஜன் வசித்து வந்தான்.

"மணிக்குட்டன், உண்மையிலேயே எப்படிச் செத்தான் ராஜன் . . ?"

ராஜனுடன் பேசிக்கொண்டிருந்ததிலிருந்து கிடைத்தத் தகவல்கள் இவைதான்: அவளைத்தான் அவன் திருமணம் செய்துகொண்டான். அவளுடன்தான் வாழவும் செய்தான். முதலில் நக்சலைட் அனுதாபியாக இருந்தவன் பிறகு தீவிர நக்சலைட்டாகவே மாறிவிட்டான். பெரும்பாலும் தலைமறைவு வாழ்க்கையே வாழ்ந்தான். அவனுடைய நல்ல குணத்தை அவள் புரிந்திருக்க வேண்டுமென்ற கட்டாயம் எதுவுமில்லையல்லவா? ஒரு நன்மையைச் செய்யும்போது அது அப்படியே திருப்பிக் கிடைக்க வேண்டுமென்ற எதிர்பார்ப்பு மணிக்குட்டனிடம் கிடையவே கிடையாது. மட்டுமல்ல, புரட்சியெல்லாம் நடக்கப்போவதில்லை என்பதைப் புரிந்துகொண்டதுடன் பயங்கரமான குடிப்பழக்கத்திற்கும் அடிமையாகி விட்டான். ஒன்றரை ஃபுல் பாட்டில் குடித்தும் அசையாமலிருந்த மணிக்குட்டனை நானும் பார்த்திருக்கிறேனே . . .

அவள் தனக்கு வாழ்க்கைத் தந்தவனின் கைகளிலிருந்து தெறித்துவிட்டாள். அன்று அவளிருந்த நிலைமை இப்போதும் என் கண்களில் நிற்கிறது. அனாதைமையின் மனித பிம்பம். அவனை உதாசீனம் செய்யுமளவிலான தன்னம்பிக்கை அன்று அவளிடம்

தென்படவே இல்லை. அன்று ஆபத்பாந்தவனாக இருந்த மணிக்குட்டன் பிறகு பிசாசாகத் தெரிந்தான். அவளை மட்டும் ஏன் குற்றம் சொல்ல வேண்டும்? மனிதர்களே இப்படித்தான். அவ்வப்போதைய அவஸ்தைகள்தான் மனிதர்கள். ஆனால், எங்கள் மனங்களிலிருந்து பங்களா மணிக்குட்டன் ஒருபோதுமே மாய்ந்துவிட முடியாது. ஒருபோதுமே! அவளுடைய உடுப்புகளை கல்லில் அவன் துவைத்துப் பிழிந்த அந்தக் காட்சி ஒன்றே போதும், இதற்குச் சான்று!

## 12 - கள்ளுக்கடை

சிறைச்சாலைகள் பல்கலைக்கழகமென்றால் கள்ளுக்கடைகள் பாரல்லல் கல்லூரிகள். இங்கே ஏற்றத்தாழ்வுகளில்லை. ஷாப்புக்கு மூப்பில்லை என்பது சொலவடை. யாரும் வரலாம்; குடிக்கலாம். கௌரவதாரிகள் தலையில் முக்காடிட்டபடி வருகிற ஏற்பாடுகள் இன்றுமிருக்கின்றன. அப்போதெல்லாம் இது மிகவும் அதிகம். மத்தியதர கௌரவதாரிகள் அடுப்பாங்கரை வாசலில் நின்று பணத்தைக் கொடுத்து சமையல்காரனின் கையிலிருந்து வாங்கிக்கொண்டு போவார்கள். ஆளுக்கேற்றபடி சமையல்காரன் குப்பிக்கு நாலணா என்ற விகிதத்தில் அதிகமாக வாங்குவான். வேலையை மெனக்கெடுத்திய கூலியாக! உயர்மட்ட கௌரவதாரிகள், குளிர்காலமாக இருந்தாலும் உத்தரீயத்துண்டை அசைத்து வேர்வையைப் போக்கியபடி வளைவில் நின்றுகொள்வார்கள்.

"என்ன நாயர்வாள்? இந்த மழையிலேயுமா வேர்க்குது?" வழிப்போக்கர் கேட்பார்கள்.

நாயர்வாள் அடிமுட்டாள்போல் சிரித்து வைப்பார்.

காரியத்தை சாதித்துவிட்ட காரியஸ்தன் சாமான்களுடன் சற்றுப் பின்னால் நடப்பார்.

கை நொடிந்த முக்கியஸ்தர்கள் மௌனமாக அமர்ந்து சிறு மனவருத்தத்துடன் குடிப்பார்கள். மைனர் முக்கியஸ்தர்களும் வருவார்கள். முக்கியஸ்தர்களின், முறுக்கு மீசை வைத்த சண்டியர் வாரிசுகள். இவர்களிடம் தாராளமான காசும் ஏராளமான மீசையுமிருக்கும். போதுமான அளவில் பயமுமிருக்கும். அப்போதெல்லாம் ஒரு வழக்கமிருந்தது. கடையை அடங்கலாகப் பிடித்துக்கொள்வது. கடையில் அன்று மொத்தம் எத்தனைக் குப்பி சரக்கிருக்கிறது அல்லது எத்தனை கேன் சரக்கிருக்கிறது என்று கேட்பார்கள். அடங்கலாகப் பேசி உத்தேசமான ஒரு விலையை வைப்பார்கள். சாதாரணமாகக் கிடைப்பதிலிருந்து இரண்டு மடங்குத் தொகை கடைக்காரனுக்குக் கிடைக்கும். எந்த ரிஸ்கும் கிடையாது. வழக்கமான குடியர்கள் வரும்போது முதலாளியும் இருக்க மாட்டான், கணக்குப் பிள்ளையும் இருக்கமாட்டான். சமையல் காரன்

மட்டும்தானிருப்பான்.

"கள்ளில்லையாடா . . ." சண்டியர்கள் மீசையைத் திருகியபடி கேட்பார்கள்.

"அய்யோ, கள்ளில்லையே அங்ஙத்தே . . . சேரூர் வடக்கேதிலுள்ள மணியன்பிள்ளை அடங்கல் பிடிச்சுட்டான்."

"யாரு, அந்தத் திருடனா?"

அப்போது மணியன்பிள்ளையும் சிப்பந்திகளும் இறங்கி வருவார்கள். அடங்கல் வாங்கியதாக அறிந்தால் போதும் இல்லாத சிப்பந்திகள்கூட எங்கிருந்தாவது முளைத்து விடுவார்கள்.

"ஏண்டா, திருடன் அடங்கல் பிடிக்கக் கூடாதா?" நான் கேட்பேன். பீடியைப் பற்றவைத்துவிட்டு தீப்பெட்டியைத் தேவையே இல்லாமல் பின்னால் எறிவேன். அடங்கல் வாங்கியிருக்கிறேனே . . . யாராவது பிடித்துக்கொள்வார்கள்.

உடனே சமையல்காரனிடம்: "உன்னோட கள்ளும் சுண்ணாம்பும்தான். கள்ளன் அடங்கல் பிடிக்காத கள்ளுக் கிடைக்குமான்னு நானும்தான் பாக்குறனே . . ."

"ஆங் . . . போய்ப் பாரு, போ . . . போ . . ."

பக்கத்திலுள்ள கடைக்குப் போகும்போது அங்கும் கடை அடைத்திருக்கும். குத்தகைக்காரர் குடிபோதையில் வெளியே கிடப்பார். அவருக்கு சீக்கிரமாகக் கடையை மூடி, கொஞ்சம் குடித்துவிட்டு நிம்மதியாகப் படுப்பதற்குக் கிடைத்த பொன்னான வாய்ப்பு. ஞாயிற்றுக்கிழமையும் கடைக்கு விடுமுறை கிடையாதல்லவா?

"என்னடா முதலாளியோட சொந்தத்துல எவனாவது மண்டையைப் போட்டுட்டானா?"

"இல்லை, வடக்கேதில மணியன்பிள்ளை அடங்கல் பிடிச்சி கை வண்டியில ஏத்தி பக்கத்தில உள்ள கள்ளுக்கடைக்குக் கொண்டு போயிட்டான்."

இப்படியாக இரண்டு கடையிலுள்ள மொத்தக் கள்ளையும் அடங்கல் பேசி வாங்கி கை வண்டியில் ஏற்றி வைத்துவிட்டு நான் அப்படியே

உட்கார்ந்திருப்பேன்.

கௌரவதாரிகள் வருவார்கள். சில நேரங்களில் இரண்டு மடங்கு விலைக்கு விற்பேன். விலையைக் குறைத்தும் விற்பேன். சில நேரங்களில் இலவசமாகவே கொடுப்பேன். மணியன் பிள்ளையின் விருப்பம்.

கௌரவம் காட்டுபவர்களைத் தோலுரித்துக் காட்டுவதுதான் பிடித்தமானப் பொழுதுபோக்கு. காரியஸ்தர்களுக்கு இங்கே கள் விற்கப்பட மாட்டாது. அவர்களுடைய நாயர் எஜமான்கள் வந்தாக வேண்டும்.

"வாங்கி வீட்டுல கொண்டுபோய் ஒருத்தனும் மறைஞ்சிருந்து அப்படிக் குடிக்க வேண்டாம். அவனுங்களும் வெளிச்சத்துல வந்து மோந்தட்டும்."

கள்ளன் விற்கிற கள்ளைக் குடிக்கப் பிடிக்காதவன், குடிக்கவே வேண்டாம். அது புழுத்தெல்லாம் போகாது. கள்ளனே விடிய விடிய உட்கார்ந்து அவ்வளவையும் குடித்துத் தீர்ப்பான். அல்லது ஓடையில் ஊற்றுவான்.

அன்றுதான் நங்ஙேலி குட்டன்பிள்ளை வந்தார். அப்பாவின் நண்பர். யாரோ சொன்னார்கள். கடை அடங்கல் போய்விட்டது. மூன்றாவது அறையில் மணியன்பிள்ளை இருக்கிறான். அவன்தான் அடங்கல் பிடித்திருக்கிறான். குட்டன்பிள்ளை திரும்பி விடவா வேண்டாமா என்ற யோசனையில் நின்றுகொண்டிருந்தார். அகம்பாவத்தின் உச்சியில் நானிருக்கிறேன். குட்டன் பிள்ளை வந்த விஷயம் முதலில் எனக்குத் தெரியாது. அறிந்ததும் நான் போய்ச் சொன்ன வார்த்தைகள் இதுதான்:

"குட்டனண்ணா, . . . லும் ஷாப்பிலும் மூப்பில்லை. யாரும் வரலாம்."

குட்டன் அண்ணனுக்கு சற்று வருத்தமாகத்தானிருந்தது. இரண்டு குட்டன் பிள்ளைகளும் நெருங்கிய நண்பர்களாக இருந்தவர்கள். என்னுடைய அப்பா கறுத்தக் குட்டன்பிள்ளை இவர் நங்ஙேலி குட்டன்பிள்ளை. இரண்டு குட்டன்பிள்ளைகளுக்கும் நான்கு குப்பி என்று கடைக்காரர்கள் சொல்வார்கள். நான் குழந்தையாக இருக்கும்போதே அப்பா என்னைக் கள்ளுக் கடைக்கு அழைத்து வருவார். ஏதாவது காரணத்திற்காக என்னை அடித்துவிட்டால் அன்று நிச்சயமாகக் கடைக்கு அழைத்து வருவார். அப்போதே எனக்கு குட்டன்பிள்ளையைத் தெரியும். நான் சொன்னேன்: "குட்டனண்ணனைக் கூப்பிட்டுத் தேவையானதைக் கொடு. குட்டனண்ணா, இன்னைக்கு இரண்டு ஷாப்பிலுமாக எவ்வளவு இருக்குமோ அவ்வளவும் இங்கே இருக்கு. குட்டனண்ணனுக்கு

வேணும்னா அவ்வளவையும் குடிக்கலாம்."

குட்டன் அண்ணன் சொன்னார்: "எனக்கு மூப்பிருக்குடா, எனக்கு மூப்பிருக்கு. இன்னைக்கு ஒருநாள் மட்டும் குடிக்காம இருந்தா செத்துப் போயிடுவேனான்னு பாக்குறனே. ஒரு விஷயத்தை மட்டும் நீ ஞாபகம் வெச்சிக்க, உங்க அப்பன்தான் எனக்குக் குடிக்கப் படிச்சுக் கொடுத்தான். பிறகு இன்னைக்கு வரை ஒரு சொட்டாவது நான் குடிக்காம இருந்ததில்லை. உன்னால அது முடங்கும்னா முடங்கிட்டுப் போகுது."

குட்டன் அண்ணன் திரும்பிப்போனார். நான் அப்படியே ஸ்தம்பித்து நின்றேன். இருந்தாலும் தோற்றுவிடக்கூடாதல்லவா? இம்மாதிரியான எதிர்வினைகளெதுவும் நம்மைப் பாதிப்பதாகக் காட்டிக்கொள்ளவும் கூடாது. ஆனால், மனதில் கிடக்கும். கடையை அடங்கல் பிடித்தத் திமிர் எதையும் பிறகு நான் காட்டிக் கொண்டதில்லை.

குடிப்பதற்காகக் கள்ளுக்கடைக்கு வருவது மட்டுமில்லாமல் கொஞ்ச நாட்கள் கடையை நடத்தியுமிருக்கிறேன். பணியிலிருந்து ஓய்வுபெற்ற என்னுடைய எஸ்ஐ அத்தானுக்கு ஒரு ஆசை. கள்ளுக்கடை ஏலம் பிடித்து நடத்த வேண்டும். குடிப்பதற்கென்று தேவையில்லாமல் காசை விரயம் செய்ய வேண்டாமல்லவா? என்னிடம் கேட்டார்: "டேய், சும்மாதானே இருக்கே, நீ கறி வியாபாரத்தைக் கவனிச்சுக்கயேன். குடிக்கவும் செய்யலாம். சாப்பிடவும் கிடைக்கும். தேவையான காசும் கிடைக்கும். எவனாவது காலித்தனம் பண்ணுனா திருப்பிப் பண்ண உனக்குச் சொல்லியா தரணும்? நான் சும்மா பேருக்கு இருந்துக்குவேன். நீதான் நடத்தணும்." மகிழ்ச்சியான விஷயம்.

ஷாப்பில் வைக்கிற கறிக்கூட்டுகள் எனக்கு நல்ல மனப் பாடம். குழந்தைப் பருவத்தில் அப்பாவுடன் கடைக்கு வரும்போதெல்லாம் சமையலறையில் போய் நிற்பதுண்டு. பிறகு, பெரும் பகுதி வாலிபமும் ஷாப்பில்தானே கழிந்தது? ஷாப்பில் வைக்கும் கூட்டுக்கறியில் நிறைய மசாலா சேர்க்க வேண்டும். எல்லாவற்றையும் அம்மியில் வைத்து அரைத்தும் சதைத்தும் எடுக்க வேண்டும். வடக்கன் புளியும் முருங்கைக்காயும் தக்காளியும் பெரிய வெங்காயமும் கலந்து எச்சிலூறுவதுபோல் மீன்கறி வைக்கவும் எனக்குத் தெரியும். ஷாப்பில் வைக்கும் கறியின் சேருமானங்களில் தவறு நிகழ்ந்துவிடக் கூடாது. உப்பும் உறைப்பும் தூக்கலாக இருக்க வேண்டும். சாதாரணமாக வீட்டில் வைப்பதுபோல் இருக்கக்கூடாது. குடிமக்களின் நாக்கு வித்தியாசமானது. குடிக்க ஆரம்பித்துக் கொஞ்ச நேரத்தில் அது மரத்துப்போகும். ஆகவே, உப்பு உறைப்பெல்லாம் சற்று அதிகமாக

இருக்க வேண்டும். சிறு கைப்பிழை நேர்ந்துபோனால் கூட வழக்கமான வாடிக்கையாளனுக்குத் தெரிந்துவிடும். உடனே கூப்பிடுவான்: "டேய், கறியா* . . . வா, இங்கே . . ." பெரும்பாலும் 'க' என்று உச்சரிக்காமல் 'ப' என்றுதான் உச்சரிப்பார்கள். "இந்தக் கறியை நீயே சாப்பிட்டுப் பாரு . . ." என்பார்கள். "இதை எடுத்துட்டுபோ. வேற கொண்டு வா" என்பார்கள். இதற்கெல்லாம் பதில் சொல்லியும் விவாதம் செய்தும் சமாளிக்கவேண்டும்.

ஒருதடவை இதுபோல் எடக்குன்னத்திலிலிருந்து வந்தவர்களுடன் சரமாரியாக அடி நடத்த வேண்டியதாயிற்று. அவர்கள் ஆறேழு பேரிருந்தார்கள். நானும் ஷாப்பில் வேலை பார்ப்பவர்களுமாக ஐந்துபேர். காசு தராமல் போய்விடப் பார்த்தார்கள். குண்டாயிசம். முளையிலேயே கிள்ளியெறிய வேண்டாமா? கடைக்குள்ளும் வெளியேயும் வயலிலும் கட்டிப் பிடித்து உருண்டோம். அடியோடடி. ஒரு பக்கம் மிளகுத் தண்ணீரை மொண்டு ஊற்றுகிறோம்; கறிச்சட்டியைத் தூக்கி தலையில் கவிழ்த்துகிறோம்; சகட்டு மேனிக்கு அடி. எல்லாவனும் வயலும் வரப்பிலுமாகப் பாய்ந்து ஓட்டம் பிடித்தார்கள். சண்டையினிடையே கடையில் குடித்துக்கொண்டிருந்தவர்களில் பலர் ஓடி விட்டார்கள். கையில் குப்பிகளையும் எடுத்துக்கொண்டு ஓடுகிறார்கள். சண்டை முடிந்ததும் திரும்ப வந்துவிடுவார்கள். அலங்கோலமாகக் கிடப்பவற்றை சரிப்படுத்தவும் இந்தக் குடிமகன்கள்தான் உதவுவார்கள். நுகர்வோர் பொதுவாகவே ஷாப்பிலிருக்கும்போது சத்தியவான்களாகவே இருப்பார்கள். கையில் எடுத்துக்கொண்டு ஓடிய குப்பிக்கான கணக்கு வழக்குகளை மறுநாள் கொண்டுவந்து சமர்ப்பித்து விடுவார்கள். என் கை ஒடிந்துவிட்டது. வாட்சைக் காணோம். போலீஸ் கேஸ் எதுவும் ஆகவில்லை. சாராயக்கடைகளில் நடக்கும் அடிதடி வழக்கெதுவும் பலப்படுவதில்லை. கள்ளுண்ட போதையென்பது, கொண்டான் கொடுத்தானுக்குரிய எல்லா கீர்த்திகளையும் கொண்டது. கடை நன்றாக நடந்துகொண்டிருந்தது. விதி, அப்போது அவதாரமெடுத்தது ஏ.கே. ஆன்றனியின் ரூபத்தில். மதுவிலக்குச் சட்டம் அமுல். கடை மூடப்பட்டது. திருடனின் கூட்டுக்கறி வியாபாரம் குளோஸ்.

## 13 - கடையும் கலாட்டாவும்

தட்டாமலை தொட்டாவாடி கடை. அந்தக் கள்ளுக் கடை சரகத்தில் முதிர்ந்த மூன்று ரௌடிகளிருந்தனர். இரண்டு கமர்களும், ஒரு இபுராகீமும். இதில் பெரிய கமர் யார், சின்ன கமர் யார் என்கிற ராஜாங்க விஷயமாக அவர்களினிடையே சதாகாலமும் சண்டை நடக்கும். அதற்கான ஏரியாவை கடை நடத்துபவர்களே ஒதுக்கிக் கொடுத்திருந்தார்கள். அது ஒரு புதர்ப்படர்ப்பு. அந்தப் புதர்ப்படர்ப்பிற்கு ஒருபோதுமே ஈடேற்றமில்லை. எப்போது பார்த்தாலும் சிதைந்துபோய் கிடக்கும். கொஞ்சம் தலை தூக்கலாமென்றால் சண்டையை இவர்கள் நிறுத்த வேண்டாமா? பெரும்பாலான நாட்களிலும் குறிப்பிட்ட நேரங்களில் கமருகளினிடையே அடி நடக்கும். யாருமே கண்டுகொள்ளமாட்டார்கள். இதையும் மீறி எவனாவது தலையிட்டால் கமருகளின் கோபம் தலையிட்டவன்மீது திரும்பும். பத்து நிமிடத்திற்குமேல் இவர்களது சண்டை நீடிக்காது. சமாதானத்திற்கு வருவதுடன் மிகுந்த அன்னியோன்னியமாகி விடுவார்கள். பிறகு ஒரேயொரு நிபந்தனை மட்டும். தங்களுக்கான கள்ளு புதர்க்காட்டுக்கு வர வேண்டும். இது கமர்களுக்கு மட்டுமே உரித்தான ஸ்பெஷல் சர்வீஸ்.

இதில் ஒருவன் கும்பம் கமர் என்ற பெயரிலும் மற்றவன் கக்கா கமர் என்ற பெயரிலும் அறியப்பட்டார்கள். மூன்றாவது ரௌடி, முட்டில் இபுறா என்கிற இபுறாகீம். சிலர் முட்டன் என்று சொல்வார்கள். தங்களுக்கிடையே அடித்துக்கொண்டாலும் பிரச்சினையென்று வந்துவிட்டால் ஒன்றுசேர்ந்துவிடுவார்கள். ஏனென்றால் தங்களுடைய இயலாமையை நன்றாகவே இவர்கள் உணர்ந்திருந்தார்கள். நான் ஜெயிலுக்குப் போய்விட்டு வந்த பிறகு நடந்த அடிதான் 'ஐந்தாண்டு' அடி. பொதுமக்களின் ஒரு நாளென்பது ஷாப்பிலிருக்கும் குடிமக்களைப் பொறுத்தவரைக்கும் ஒரு வருடம். அதாவது தொடர்ந்து ஐந்து நாட்கள் நடந்த சண்டை.

கமருகளினிடையே நடக்கும் தினச்சண்டை பற்றி தெரியாத்தனமாக நான் ஒரு கமெண்ட் அடித்துவிட்டேன். நான் ஆள் உயரமாகவெல்லாம் இருக்கமாட்டனா? ஆகவே, தூக்கிவிடலாமென்று நினைத்துவிட்டார்கள்.

போதாக்குறைக்கு சின்னப் பையன் வேறு. அதிகம் விளையக் கூடாதல்லவா? முதலில் வெறுமனே மிரட்டி வைக்க நினைத்தார்கள். ஒர்ரே குத்து, கும்பம் கமரின் மூக்கைக் குறிப்பார்த்து. புதர்ப் படர்ப்பின் மீதான இவர்களது பாசப்பிணைப்பு அதிகமல்லவா? கிடைத்தக் குத்துடன் கமரின் உடம்பு புதரில்போய் பதிந்தது. அடுத்த கமர் என்னைக் கட்டிப் பிடித்துக்கொண்டான். விழுந்த கமர் எழுந்து வந்து உதைப்பான் என்ற எதிர்பார்ப்பிருந்தது. ஆகவேதான் முதல் அடி வலுவாக விழ வேண்டுமென்று சொல்வது. கும்பம் கமருக்கு கண்கள் தெளிந்தால் அல்லவா எழுந்து வருவான். இதனிடையே கக்கா கமரைத் தலைமீது தூக்கியெடுத்து முன்னால் போட்டுப் பரிமாறினேன். தரையில் கிடக்கிறார்கள் கமர்கள்.

மிகப்பெரிய எதிரியாக நடித்தவர்கள் மறுநாள் ஒன்றுசேர்ந்து கொண்டார்கள். வாழ்வுரிமை, பிரச்சனையாகி விட்டது. முட்டி இபுறா வந்தான். கமர்களைப் போலில்லை இவன். கொஞ்சம் வீரமுமிருந்தது. இபுறா வரும்போது கமர்கள் ஒன்றாகி விடுவது வழக்கம். இவன் ஒரு தடியனும் கூட! இவன் முன்னால் நான் வெறும் பொடியன். நான் வருவதை எதிர்பார்த்து நின்றிருந்தார்கள். இன்றைய காலம் போல் அப்போதெல்லாம் சதி செய்வதில்லை. முட்டன் முன்னாலும் கமருகள் பின்னாலும் நின்று என்னை வழி மறித்தார்கள். நான் சொன்னேன்: "பொறுங்க, சாயங்காலம்வரைக்கும் நேரம் இருக்கே? நான் கொஞ்சம் உள்ள போயிட்டு வந்திடறேன்." முட்டன் வழி விட்டான். இப்போதெல்லாம் ஒரு வார்த்தை பேசினால் போதும். அடுத்த வார்த்தையில் வீச்சரிவாளை உருவிவிடுகிறார்கள். மூன்றாவது வார்த்தைக்குள் வெட்டு விழுந்துவிடும். பிறகு என்ன நடந்துவிடப்போகிறது. இன்று ஆயுதம் வைத்திருப்பவன் ரெளடி என்றாகி விட்டது. இது ரெளடித்தனம் கிடையாது. அசிங்கம். பயம்தான் வாளுருவ வைக்கிறது. வீரம் முஷ்டியைத் தான் உயர்த்தும்.

கள்ளுக் குடிக்கப்போன என்னை முட்டன் தடுக்கவில்லை. குடித்துவிட்டு வந்ததும் சொன்னான்: "குத்துறதா இருந்தா, முன்னறிவிப்பு கொடுத்துட்டுதான் குத்தணும். இப்படியெல்லாம் சும்மா நிக்கிறவனோட மூக்குல குத்தக்கூடாது."

நம்ம நாக்கு தழும்பேறியதல்லவா? நான் சொன்னேன்: "ஞாயம்னா எல்லாத்திலயும் ஞாயமிருக்கணும். ஒருத்தனோட ரெண்டுபேர் சேர்ந்து மோதுறது தப்பு. ஒண்டிக்கொண்டியா நிக்கணும். இதுல சொல்லிட்டெல்லாம் அடிக்கறதுக்கு நேர மிருக்காது."

இந்த இடத்தில் நியாயங்கள் செல்லுபடியாகாது.

பின்னால் நின்றிருந்த கமர்கள் சொன்னார்கள்: "எல்லா நேரமும் இப்படி ஒண்டிக்கொண்டியாதான் மோதணுமுங்குறது நடக்காது. சேர்ந்து வந்தாலும் மோதிப் பாத்துடணும். அதுதான் சாமர்த்தியம்."

"சரி, இப்பப் போட்டுப் பாத்துடுவமா?" நானும் விடவில்லை.

சொல்லி வாய் மூடியிருக்கமாட்டேன். முட்டன் குனிந்து என்னைத் தூக்கிப் புதர்க் காட்டில் எறிந்தான். பக்கத்தில் கடை உபயோகத்திற்காக வாங்கிப்போட்டிருந்த விறகுக்கட்டைகள் கிடந்தன. அதையெடுத்து என்னை அவன் அடித்திருக்கலாம். ஆனால், அன்றெல்லாம் இது வீரத்திற்கான அடையாளங்கள் இல்லை. அரை மணி நேரமாக நாங்கள் கட்டிப்புரண்டு அடித்துக்கொண்டோம். எனக்குத்தான் அதிகமாகக் கிடைத்தது. ஆனால், தோற்கவில்லை. தனது ஆசை நிறைவேறவில்லை என்பதாலும் தான் பெரிய ரௌடி என்பதாலும் இது முட்டன் இபுறாவுக்குப் பேரவமானமாக இருந்தது.

கடைக்காரர்கள் வந்தார்கள்: "சரி, போதும்! மிச்சம் இனி நாளைக்கு . . . பெரிய ஆட்கள் வர்ற நேரம்." அவர்கள் இடையில் வந்து நின்றார்கள்.

சண்டையை நிறுத்தினோம். நான் மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க சொன்னேன்: "நாளைக்கு மட்டுமல்ல . . . நானூறு வருஷங்களா இந்த அடியை நடத்தணும்னா அதுக்கும் நான் ரெடி."

உதை வாங்கியதில் என் முகமெல்லாம் வீங்கிப்போயிருந்தது. கடைக்குள் போய் இரண்டு மூன்று குப்பிக் கள்ளையெடுத்து முகத்தையும் கை கால்களையும் கழுவினேன். அன்று இது ஸ்டைல். கொஞ்சத்தைக் குடித்தேன். இறங்கி நடந்தேன். கணக்கில் எழுதிக்கொள்வார்கள்.

மறுநாளும் வந்தேன். முட்டனுக்கு வயது நாற்பதைக் கடந்திருக்கும். உடல் ஆகிருதி மட்டும்தான். சண்டை விரைவில் முடிவுக்கு வர வேண்டும். மறுநாள் முட்டனுக்குச் சீக்கிரமாகச் சலித்துவிட்டது. நான் வாலிபப் பையனல்லவா? முட்டனின் கையிலிருந்து குதறி விலகினால் போதும், பிறகு நொடியிடைக்குள் இத்தனை என்ற வேகம். முட்டனிடம் வேகமில்லை. பலம்தான். வேகம்தான் விவேகமாக இருந்தது. சமரில் கமர்களும் கலந்துகொண்டார்கள். எனக்கு அநியாயத்திற்கு அடி

கிடைத்தது. நிறைய வாங்கியதில் முகமும் உடம்பும் வீங்கியது. அடி உதைகளின் பெரும்பிரவாகம். முட்டனுக்குக் குறிதவறினால், கமர்கள் அடிப்பார்கள். அல்லது மாறி மாறி அடிப்பார்கள். நான்காம் நாள் சண்டையில் என்னுடைய வயது வெற்றி பெற்றது. அரைமணி நேரம்தான் சண்டை நீடித்தது. பறந்துப் பறந்துத் தாக்கினேன். தாராளமாகக் கிடைத்தது. கடைக்காரன் வந்து போதுமென்றான். சண்டை நின்றது. மத்தியஸ்தர்கள் வந்தார்கள். "மூணுபேர் சேந்து ஒருத்தனை . . ." ரௌடிகளுக்கு இது அவமானமாகப்போய் விட்டது. அவர்களுடைய உடம்பில் தான் காயங்கள் நிறைய. நபர்கள் அதிகமாக இருந்தால் தடயங்களும் அதிகமாக இருக்க வேண்டுமென்பது நியதி. அதுதான் வெற்றியும்கூட. நகங்கள் இருந்தன. கிடைத்த இடத்தைப் பற்றிப் பிடித்து இழுத்தேன். இந்த வகையில் மூன்று பேருக்குமே போதுமான அளவுக்கு இரத்தம் துளிர்த்திருந்தது. சும்மா தகர்த்தெறிந்திருக்கிறேன்.

"எப்படி . . . ராசியாயிடலாமா?" நான் கேட்டேன்: "இங்க ஒரு ரௌடி போதும். மூணுபேர் சேந்து அப்படி ஆளக்கூடாது. இல்லேன்னா நான் சாகணும்."

ஐந்தாம் நாள் சண்டை அப்போதுதான் ஆரம்பமானது. ஒரு அடி தவறுதலாகப்போய் விழுந்த இடம் கக்கா கமரின் விதைப்பை. அது மேலே ஏறிவிட்டது. அலறியபடியே அவன் வழக்கம்போல் புதர்ப்படப்பில் அபயம் புகுந்தான். ஆட்கள் கூடினார்கள். அயிட்டம் இறங்கி வரமாட்டேன் என்கிறது. இதை என்னுடைய வெற்றியின் குறியீடாகப் பார்த்தேன். ஒரு விறகுக்கட்டையை எடுத்துக்கொண்டு அவனுக்குக் காவல் நின்றேன்.

"ஒரு பயலுகளும் இவன் பக்கத்தில நெருங்கப்படாது. வெதைக்கொட்டைத் தலையிலேறி இவன் சாகணும்."

"முப்பதுபேர் சேர்ந்து வந்தாலும் சரிடா . . . எனக்குப் புல்லுக்குச் சமானம்." நான் அலறினேன்.

முட்டன் ஓடி வந்தான். நான் விறகை உயர்த்தியபடி மூன்றடி முன்னால் வந்தேன். முட்டன் அலறினான்:

"நாயே . . . ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகணும்டா. அடிபிடியெல்லாம் முடிஞ்சு போச்சுடா . . ."

நான் விறகைக் கீழே போட்டேன். ஆட்கள் வந்து கூடினார்கள். நான் கமரைத் தூக்கித் தோளிலிட்டு மூன்று நான்கு தடவை துள்ளினேன். கால்களைத் தரையில் அடித்தேன். விதை கீழே இறங்கியது. கொஞ்ச தூரம் ஓடச் சொன்னேன். ஓடினான். வலி மாறுவதுவரையிலும் தன்னுடைய புதர்ப் படப்பில் கிடந்து உருண்டு ஓய்வெடுத்தான். தண்ணீர் குடித்தான். கள்ளைத் தவிர சுத்தமானத் தண்ணீரை நீண்ட நாட்களுக்குப் பிறகு அவன் அப்போதுதான் குடிப்பது போலிருந்தது. வாந்தியெடுத்தான். கொஞ்ச நேரத்தில் எல்லாமே சரியாகிவிட்டது.

பிறகு குடி ஆரம்பமாயிற்று. யாரும் எதுவும் பேசவில்லை. ஆட்கள் என்னை ஆராதனையுடன் பார்க்கிறார்கள். குடி முடிந்த பிறகு முட்டன் எழுந்து கணக்கைத் தீர்க்கிறான்.

"இன்னைக்குள்ள அவனோட கணக்கும் சேர்த்து எவ்வளவு?"

"உபச்சாரமெல்லாம் தேவையில்லை." நான் சத்தமாகச் சொன்னேன்.

ஒரு கெட்ட வார்த்தையுடன் முட்டன் என்னை அப்படியே தூக்கியெடுத்தான்.

"டேய், நாயே! நீ குட்டப்பனோட மவனாடா . . ? நான் நேத்திக்குத்தான் அறிஞ்சேன். இல்லேன்னா கழுவேறிக்குப் பொறந்தவனே . . . கசாப்புக் கத்தியை கொண்டுட்டு வந்திருப்பேன்."

"ஆமா, அப்பத்தானே ஒரு முடிவு தெரியும் . . ." என்றேன்.

பிறகு எப்போதாவதுதான் வருவான். அப்படி வந்தால் நான் பெஞ்சிலிருந்து எழுந்து கீழே உட்கார்ந்துகொள்வேன். இதில் உட்கார் என்றும் சொல்வேன். "வேண்டாம், ஒடிஞ்சுடும். நீதானே பெரிய ரௌடி, நீயே உட்காரு" என்பான்.

ஒருதடவை சொன்னான்: "நீ யார்னே முதல்லே எனக்குத் தெரியாது. நான் உங்கப்பாகூட போட்டிப்போட்டு தண்ணியடிச்சவன்."

"அடிவாங்கிச் செத்துடாதே . . ." என்று சாகும்வரை கெட்ட வார்த்தை சொல்லி என்னைத் திட்டியிருக்கிறான் முட்டன். வயதாகி மூர்க்கத்தனம் குறைந்த பிறகு ஆள் நல்ல சகஜமான மனிதராக மாறியிருந்தான். குடித்த பிறகு சுயநினைவை இழக்க ஆரம்பித்தான். கள்ளிலும் கலப்படம் வந்தது. ஒருநாள், டிரெயின் வந்துகொண்டிருப்பதைப் பார்த்த அவனுக்கு அந்த

வருகை அவ்வளவாகப் பிடிக்கவில்லை போலிருக்கிறது. தண்டவாளத்தில் போய் நின்றான். "இதை நான் இப்ப நிறுத்திக் காட்டுறேன் பாரு . . ." என்று. டிரெயின் நிற்கவில்லை. முட்டன் ஏழு துண்டுகளானான்.

கக்கா கமர், பெரிய அளவில் இறைச்சி வியாபாரம் செய்து, கௌரவமாக வாழ்ந்து வரும் ஒரு பெரிய குடும்பத்தில் பிறந்தவன். இவன் மட்டும் சுத்த விளங்காதவனாகி விட்டான். இன்று இறைச்சி வியாபாரம் மட்டுமல்ல, குடும்பத்திலுள்ள பெரும்பாலானவர்களும் கொல்லத்தில் மிகப்பெரிய வசதி படைத்தவர்களாகி விட்டார்கள். வீட்டிலிருந்தும் கடையிலிருந்தும் காசைத் திருடிக்கொண்டுவந்து ஷாப்பில் கொடுப்பது இவனது வழக்கம். ஒருநாள் இறைச்சி வெட்டும் கத்தியைக் கொண்டுவந்து ஷாப்பில் அடகு வைக்கக் கேட்டான். வேறு இடத்தில் தொழில் செய்துகொண்டிருக்கும் ஆயுதத்தை ஷாப்பில் அடகு வாங்க மாட்டார்கள். அப்படி வாங்கினால் உருப்பட மாட்டோம் என்று சொல்லிவிடுவார்கள். அவன் கத்தியை எடுத்து மேஜையின்மீது குத்தி நிறுத்திவிட்டு பெஞ்சில் உட்கார்ந்து கொண்டான். அன்று கள்ளுக்கான காசை யாரும் கேட்கவில்லை. வயிறு நிறைய கள் கிடைத்தது. இந்த வெட்டுக் கத்திக்குத்தான் கள் கிடைத்திருக்கிறது என்று தெரிந்தபோது மறுநாளும் கத்தியுடன் வந்தான். இப்படியாக அவனுக்கு ரௌடிப் பட்டம் கிடைத்தது. தொட்டதுக்கெல்லாம் அடியும் வாங்குவான். கடைசிக் காலத்தில் அவனைப் பார்க்கும்போது உடலில் இரத்தம் வற்றி வெளுறிப்போய் சீனியின் நிறத்திலிருந்தான். ஒரு காலத்தில் சினிமா நடிகனை விடவும் அழகாக இருந்தவன். அதிலெல்லாம் கவனம் செலுத்த இவனால் முடியவில்லை. கடைசியில் காவல் புரையிலும் பள்ளி சந்திப்பிலுள்ள *காக்காமாரின் கடைகளின் முன்சென்று கள்ளுக் குடிப்பதற்காகக் கையேந்தினான். கடைசியில் கடைத்திண்ணையில் கிடந்துச் செத்தான்.

மற்றொரு கமர் கடைசி காலத்தில், கையில் காசில்லாதபோது வீடுகளில்போய் தேங்காய் பறிக்கணுமா என்று கேட்பான். காலையில் பதினொரு மணியாகியிருக்கும். வீடுகளில் ஆண்கள் யாருமிருக்க மாட்டார்கள். சமையலுக்குத் தேங்காய் இருக்காது. இது பெண்களுக்கு மிகவும் வசதியாக இருந்தது. பறிக்கச் சொல்லுவார்கள். ஓடி வந்து தென்னையில் ஏறுவான். வீட்டுப் பெண்களுக்கு அப்போது ஒரு தேங்காய் தான் தேவையிருக்கும். ஒரு பூ கேட்டால் இவன் பூந்தோட்டத்தையே காலி பண்ணி விடுவான். ஒரு தேங்காயைக் கொடுத்துவிட்டு மிச்சம் தேங்காய்களுடன் கள்ளுக்கடைக்கு ஓடுவான். பிறகு, இரவில்

ஷட்டிலிலிருந்து இறங்கித் தனியாக வருகிற பயணிகளிடம் வழிப்பறி நடத்தினான். திடீரென்று புதரிலிருந்து குதித்து வந்து நிற்பான். இவனைத் தெரியாதவர்கள் பயந்துபோய் கொடுத்து விடுவார்கள். தெரிந்தவர்கள் ஓங்கி ஒன்று கொடுப்பார்கள். அதையும் வாங்கிவிட்டு பேசாமல் நடையைக் கட்டி விடுவான். குடித்துக் குடித்து எலும்பும் தோலுமானான். இப்படியாக கமரின் வழிப்பறி தமாஷாக மாறியது. ஒருநாள் கள் குடித்துவிட்டு பாலத்தில் போய் உட்கார்ந்து ஏதோ ஜாடைகள் காட்டியிருக்கிறான். அப்படியே தலை குப்புற கீழே ஒரு பாறையில் விழுந்து . . . அவனுடைய அத்தியாயமும் முடிந்தது.

நான்காவது நபர் நான் இன்னும் மிச்சமிருக்கிறேன்.

## 14 - திருடன்

நான் ஏன் இப்படியானேன்? இந்தச் சமூகம்தான் என்னை இப்படியாக்கியது என்றெல்லாம் நான் சொல்ல மாட்டேன். எப்படியோ ஆகிவிட்டேன். முதன்முதலாகத் திருடியது வீட்டிலிருந்துதான். காசு வைத்து சீட்டு விளையாடியது தான் முதலில் ஆரம்பித்த மோசமான நடத்தை. பதினைந்து வயதிருக்கும். இழந்த காசைத் திரும்ப எடுக்க வேண்டுமென்றால் மீண்டும் விளையாட வேண்டும். அதற்கு என்ன வழி? காலையில் அம்மாவும் சகோதரிகளும் முந்திரிக் கம்பெனியில் வேலைக்குப் போன பிறகு வீட்டிலிருக்கும் அரிசியைக் கொண்டு போய் விற்பேன். சாயங்காலம் அவர்கள் வேலை முடிந்து வரும்போது வீட்டில் அரிசி இருக்காது. அம்மா, அக்கம் பக்கத்திலுள்ள குறும்புக்காரப் பிள்ளைகளைத் திட்டுவாள். ஏதாவது அம்மா நினைப்பாளா தன்னுடைய மகன்தான் திருடுகிறான் என்று? பிறகுதான் வஞ்சிக் கோயிலில் உண்டியல் திருடுகிற முயற்சி. மக்கள் கையோடு பிடித்தார்கள். முதன் முதலாகப் பிடிபட்டேன்.

எல்லா திருடன்களின் அம்மாவையும்போல் இதில் மிக அதிகமாக வேதனைப்பட்டவள் என் அம்மாதான். நான் படுத்திருக்கும் முன்புற அறையைப் பூட்டிவிட்டுத்தான் அம்மா தூங்குவாள். திருடப்போய் விடக்கூடாதே என்ற எண்ணத்தில். திருடனையே பூட்டி வைக்க முடியுமா? கள்ளச் சாவி போட்டுத் திறந்துவிட்டுப் போய், திருடிவிட்டு அதிகாலையில் வந்துப் படுத்துக்கொள்வேன். காலையில் அம்மா வந்து பார்க்கும்போது மகன் நல்ல தூக்கம்.

பணமென்பது சத்தியத்திற்குக் கட்டுப்பட்ட ஒன்று; செழிப்பின் குறியீடு; பண்பாடில்லாத பொருள். அது எப்போது யார் கையிலிருக்கும்; எவ்வளவு காலமிருக்கும் என்பதெல்லாம் ஏற்கனவே முடிவு செய்யப்பட்ட விஷயங்கள்.

சில தலைமுறைகளில் அவரவர் பண்பாடுகளுக்கேற்ப அது குறிப்பிட்ட காலம்வரை இருக்கும். சிலரிடம் குறிப்பிட்ட மாதங்கள்வரைதானிருக்கும். சிலரிடம் நாட்கணக்கில். அதன் மிகக் குறைவான ஆயுள்

திருடன்களிடம்தான். திருடிய செல்வத்தை என்றாவதொரு நாள் போலீசார் வந்து பிடித்து விடுவார்கள். சரி, தின்று தீர்த்துவிடலாமென்றால் தின்ற உடலையும் விட்டுவைக்க மாட்டார்கள்.

இருந்தாலும் திருடன்கள் ஆடம்பர வாழ்க்கையை நோக்கியே ஓடுவார்கள். தாமரையிலை நீர்போல் இலேசாக அசையும்போது அஸ்தமித்து விடுவதுதான் இந்த சுகபோகங்கள் அனைத்தும். மீண்டும் அடி, உதை, ஜெயில் வாசம். மீண்டும், கணநேரங்களின் பின்னால் ஓட்டம். சில விசேஷப் பிரிவு வாழ்க்கையைத் துவங்கினால் முடித்துக்கொள்ள இயலாது. துயரங்கள் தொடர்ந்துகொண்டே இருக்கும். ஆற்றில் விழுந்த மீன் கரையேறி விட விரும்புமா? அதன் போக்கில் போய்விட வேண்டியதுதான்.

திருடன் யாரையும் நம்பிவிட மாட்டான். யாரையும் பாதுகாக்கவும் அவன் விரும்புவதில்லை. போலீஸ் வந்தால் வீட்டின் பின்வாசல் வழியாக ஓடி விடுவான். அங்கேயே நின்றிருந்தால் வீட்டிலுள்ளவர்களுக்குத் திட்டும் உதையும் குறையும். ஆனால், அவன் அப்படிச் சிந்திப்பதில்லை. வீட்டிலிருப்பவர்கள் என்ன குற்றம் செய்தார்கள்? மிகப்பெரிய குடும்பங்களில் பிறந்த எத்தனையோ வாரிசுகள் வழி தவறிப் போயிருக்கிறார்கள். செய்த குற்றத்திற்காக பத்திரிகைகளில் பெயர் வரும்போது அவனுடைய குடும்பப் பெயரும் அப்பா பெயரும் இருக்கும். அவர்கள் என்ன தவறு செய்தார்கள்? மகனைப் பிடிக்க முடியாமல் தகப்பனைக் கொண்டுபோய் உதைப்பதென்பது எவ்வளவு குரூரமான செயல்? குற்றங்களுக்குப் பொறுப்பு அதைச் செய்தவன் தானே?

சட்டத்திற்குப் புறம்பான, அராஜக வாழ்க்கைமீதான ஒருவகை ஆர்வம்தான் திருடனை முன்னகர்த்திச் செல்கிறது. நாம் யாருக்கெல்லாமோ சவால் விடுகிறோம் எனும் ஒருவகையான சுயத்திருப்தி. திருடனென்பவன் அதிகாரங்கள்மீதான ஒரு சவால். அதன் உன்னத அமைப்பான சட்ட வடிவத்தை அவன் அசைத்துப் பார்க்கிறான். அரசியல்வகைப்பட்ட உன் அமைதிக்கு இதோ நான் பங்கம் விளைவிக்கிறேன் எனும் சவாலை அவன் முன்வைக்கிறான். இதை உணரும்போது திருடனுக்கு உள்ளார்ந்த ஒரு அனுபூதி கிடைக்கிறது.

என்னுடைய இச்சிறு உடலானது ஒரு வீட்டிற்குள் நுழைந்துவிட்டால் பிறகு ஆட்சியதிகாரத்தின் எல்லாக் கட்டமைப்புகளும் ஓடி வருகின்றன. மோப்ப நாய், கை ரேகை நிபுணர்கள், உயரதிகாரிகள், தொழில்நுட்ப

புலனாய்வாளர்கள், மக்கள் திரள், அவர்களை விரட்டியடிக்கும் போலீசார் . . . அதிகாரவர்க்கத்தின் இந்தப் பதற்றம் நமக்குள் தோற்றுவிக்கும் மமதை. நாம் உருவாக்கி வைத்த உற்சவம் கனஜோராக நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதிலிருக்கும் அக மகிழ்ச்சி. இதுதான் ஒரு திருடனின் மனதினுள் செயல்படுகிற அம்சங்கள்.

அந்தராத்மாவின் உள்ளறைகளில் படிந்துள்ள இதுபோன்ற அனுபூதி உணர்வுகள் திருடனிடம் மட்டுமல்ல, அனைவருக்குள்ளும் இருக்கின்றன. இதை அவர்கள் பல்வேறு வடிவங்களில் உணர்கிறார்களென்பது மட்டும்தான் வேறுபாடு. போதை மருந்து, கொலை, பாலியல், மது, பொறாமை, அசூயை என பல்வேறு நிலைகளில் இது செயல்படுகிறது. திருடுவதும் இதிலொன்று. குற்ற வரையறைகளுக்கு உட்படுத்த இயலாத, சில தவறுகளைச் சட்டத்தால் எதுவும் செய்துவிட முடிவதில்லை. திருட்டு போன்ற சிலவற்றை உடனடியாகக் குற்றவரையறைக்குள் கொண்டுவந்துவிட முடியும். ஆகவே, ஒரு திருடன் கிடைத்தால் சமூகத் தவறுகளுக்கான எல்லா உபாதைகளையும் திருடனுக்குக் கொடுத்துவிடலாமென்று போலீசார் நினைப்பதில் ஆச்சரியமில்லை. பணக்காரக் குற்றவாளிகளையோ, கள்ளச் சாராய முதலாளிகளையோ, நட்சத்திர விடுதி விபச்சாரிகளையோ தொட முடியாது. இவர்களையெல்லாம் ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டு நிற்கும் போலீசாரின் உணர்வுகளுக்கு வடிகாலாகப் பயன்படுபவர்கள், ஒருவேளை உணவுக்காக சாராயம் காய்ச்சுபவர்களும் தெருவில் நிற்கும் பாலியல் தொழிலாளர்களும் சின்னச் சின்ன தவறுகள் செய்பவர்களும் தான்.

ஆட்சிப்பீடம் இப்படித்தான் செயல்பட முடியும். உலகம் முழுவதிலுமுள்ள ஆட்சிப்பீடமும் அதிகார வர்க்கமும் இப்படியாகவே நகர்ந்துகொண்டிருக்கின்றன.

மாபெரும் சட்ட மறுப்பாளனாகத் திருடன் அடையாளம் காணப்படுகிறான். ஆனால், தான் எந்த அளவுக்குப் பலவீனமானவன் எனும் விஷயம் அவனுக்கும் போலீசுக்கும் தெரியும். நாங்கள் செயல்படுகிறோம் என்பதைக் காட்டிக்கொள்ள வேண்டிய தேவை அதிகாரப்பீடங்களுக்கிருக்கிறது. இதற்காக அதிகத் தாக்குதலுக்குள்ளாகுபவனும் திருடன்தான். அடிகளையும் உதைகளையும் வாங்கி இரத்த வாந்தியெடுத்து சிறுவயதிலேயே செத்துவிடுவோமென்பது எல்லா திருடன்களுக்கும் தெரியும்.

குட்டி அரசியல் தலைவன், செய்தி ஊடகங்களை முன் நிறுத்தி, போலீசாரிடமிருந்து வாங்கும் ஒவ்வொரு அடியும், மந்திரிப் பதவியை நோக்கியும் பெரும்பாலும் ஊழலெனும் பெருந்திருட்டை நோக்கியும் அவனைக் கொண்டுசெல்கிறது. கோடிக்கணக்கி ல் திருடுவது திறமை சார்ந்த விஷயம். எங்களைப் போன்றவர்களுக்கு உதை மட்டும்தான். திருட்டை நியாயப்படுத்தவில்லை. அது பற்றிய சில சமூக முரண்களைச் சுட்டிக் காட்டினேன். ஜெயிலில் கிடக்கும்போது வேறு வேலை கிடையாதல்லவா? கொசுக்கடியில் தூக்கம் வராமல் புரண்டுகொண்டிருக்கும் போது இப்படியெல்லாம் ஏதாவது தோன்றும். ஒரு திருடன் தத்துவம் பேசும்போது கேலியான மனநிலை உருவாவது இயல்புதான். எல்லோருக்கும் த்ரில்தானே தேவைப்படுகிறது. எனவே, சில திருட்டுக் கதைகளைச் சொல்கிறேன்.

பணத்தைப் பற்றியல்லவா சொல்ல வந்தேன்? அது எந்த வழியாகப் போகும் என்பதும் ஏற்கனவே தீர்மானிக்கப்பட்ட விஷயம். ஆகவே, ஒரு திருடனுக்குச் சேர வேண்டிய பணத்தை உலகில் வேறு எந்தத் திருடனும் அபகரிக்கக்கூடாது என்பது கடவுள் நிச்சயம். இது, இரண்டு திருட்டுகள் மூலம் நான் கற்றுக்கொண்ட பாடம்.

## 15 - நூற்றுப்பன்னிரெண்டு பவுன் ஐயாயிரம் ரூபாய்

இந்தத் திருட்டை வர்க்கலை இடவாவில் ஒரு வீட்டில் நடத்தினேன். பாத்ரூம் கம்பியை வளைத்து உள்ளே நுழைந்தேன். பாத்ரூமையொட்டிய ஒரு அறையில் ஐந்து பெண்கள் தூங்கிக்கிடந்தார்கள். இரண்டு பேர் கட்டிலிலும் மூன்றுபேர் கீழேயும். அன்று அந்த வீட்டில் ஒரு நிக்காஹ் நடந்திருந்தது. இவர்கள் நெருங்கிய உறவினர்களாக இருக்க வேண்டும். அதனால்தான் தங்கியிருக்கிறார்கள். தூக்கிக்கொண்டு போனாலும் தெரியாது போல் ஆழ்ந்த நித்திரை. திருமணமோ சாவோ நிகழ்ந்த வீடுகளில் நுழைவது பாதுகாப்பானது. பகல்நேர வேலைகளின் களைப்பில் எல்லாரும் தன்னை மறந்து தூங்குவார்கள்.

ஆட்கள் குறைவாக இருக்கும் வீடுகளை விடவும் அதிகமாக இருக்கும் வீடுகள்தான் திருடுவதற்கு உகந்த இடம். ஆனால், மக்கள் இதைத் தலைகீழாகப் புரிந்து வைத்திருக்கிறார்கள். ஆட்கள் அதிகமாக இருக்கும் வீடுகளில் சத்தம் கேட்டால் மற்றவர்கள், வேறு அறைகளிலுள்ள யாராவது ஒன்றுக்குப்போக எழுந்திருக்கலாம் என்று நினைத்துக்கொள்வார்கள். எழுந்திருக்காமல் இருப்பதற்கு இப்படி ஏதாவது காரணங்களை மனம் கண்டுபிடித்துவிடும்.

அதேசமயம், கணவனும் மனைவியும் குழந்தைகளும் மட்டுமுள்ள ஒரு சிறு குடும்பமாக இருந்தால் ஒரே அறைக்குள் படுத்திருப்பார்கள். சிறு சத்தம் கேட்டாலும் கூட மனைவி: "ஏனுங்க, ஏதோ சத்தம் கேட்கலை?" என்பாள். உடனே, ஏனுங்க காதுகளைக் கூர்மையாக்குவான். அவர்களைத் தவிர அங்கே வேறு சத்தம் வருவதற்கான வாய்ப்பில்லை. எனவே, சந்தேகமில்லை. திருடன்தான்.

நுழைந்த இந்த வீட்டில் நான் தெற்கு வடக்காக நடக்கிறேன். கவனிக்காமல் யாருடையோ காலையோ மிதித்தும் விட்டேன். எந்த அசைவுமில்லை. பெரும்பாலான எல்லா அறைகளும் திறந்தே கிடக்கின்றன. ஒவ்வொன்றாகச் சோதனையிட்டேன். பெண்களின் கழுத்தில் கிடக்கும் நகைகளைத் தவிர வேறு எந்த இடத்திலும் எதுவுமில்லை.

அணிந்திருக்கும் ஆபரணங்களைக் களவாடுவது நீதியன்று. ஆகவே,

கவனம் தங்கத்தை விட்டு எலெக்ட்ரானிக் பொருட்களின்பால் திரும்பியது. எந்தவொரு முஸ்லிமின் வீட்டில் ஏறினாலும் சரி, மிகக் குறைந்தபட்சம் ஒரு விசிஆராவது கிடைத்துவிடும். விசிஆர் அன்று இருபத்து நான்காயிரம் ரூபாய் விலையிருந்தது. ஆங் . . . இங்கும் ஒன்று இருக்கிறது. பேப்பரில் பொதிந்து எடுத்துக்கொண்டேன். கொஞ்சம் வளைகுடா துணிகளையும் சுருட்டி எடுத்தேன். எல்லாவற்றையும் சேர்த்துப் பொட்டலம் கட்டிவிட்டு சரி, வந்த வழியாகவே திரும்பிவிடலாமென்று முடிவு செய்து பாத்ரூமுக்கு வந்தேன். மனதுக்குள் ஒரு போதாமை. ஒரு பத்து பவுனுக்கான ஆபரணமாவது தேறவில்லையென்றால் திருட்டில் மனநிறைவிருக்காது. விதிக்கவில்லை போலும். பொட்டலத்தை பாத்ரூமின் சிறு ஜன்னலில் கட்டினேன். இறங்கியதுபோல் அவ்வளவு சுலபமாக ஏற முடியவில்லை.

ஜன்னல் உயரமாக இருந்தது. பாத்ரூமின் மூலையில் ஒரு வேஸ்ட் பாஸ்கெட் இருப்பதைப் பார்த்தேன். பிளாஸ்டிக். பலமிருக்காது. சுமையை அது கிரகிப்பதற்குள் துள்ளியேறிவிட வேண்டும். இல்லையென்றால் திருடன் தரையில் கிடப்பான். பாஸ்கெட்டைத் தூக்கினேன். கனமாக இருந்தது. திறந்து பார்த்தேன். பெண்களுடைய வேஸ்ட் பொருட்கள். கழித்தொதுக்கப்பட்ட ப்ரேசியரும் ஜட்டியுமெல்லாமிருந்தன. மேலே சானிட்டரி நாப்கின்கள். ஆனால், புதியதாக இருந்தது. கவரைக் கிழித்துப் போடப்பட்டிருந்தது. எவ்வளவு தான் வசதியுள்ள வீட்டுப் பெண்களாக இருந்தாலும் சரி, இதை ஒரு தடவையாவது உபயோகிக்காமல் தூக்கியெறிய மாட்டார்கள். இதில் ஏதோ சூட்சுமமிருக்கிறது. திருமண வீட்டில் உறவினர்களது ஒரு படையே வந்திருக்குமென்பதால் அவர்களிடமிருந்து எதையோ பாதுகாப்பதற்கான ஏற்பாடு. நான் பாஸ்கெட்டின் அடிப்பகுதியில் கையை விட்டேன். பாஸ்கெட் கனமாக இருந்ததன் காரணம் கையில் தட்டுப்பட்டது. நல்ல அழகான ஒரு பாக்ஸ். பூட்டி வைக்கப்பட்டிருந்தது. கையிலிருந்த கத்தியால் மர்ம ஸ்தானத்தில் தட்டினேன். பூட்டு உடைந்து, மெல்லத் திறந்தது கதவு. உள்ளேயிருந்த ஒரு பொம்மை தலையை வெளியே நீட்டி இருபுறமும் அசைத்து டிங், டாங், டிங், டாங் என்று சிணுங்க ஆரம்பித்தது. பெட்டியை மூடினேன். டிங்டாங்கினுள் மிகவும் விலையுயர்ந்த ஒரு சாதனமிருந்தது. நான் உற்சாகமடைந்தேன். இனி எதற்காக இந்த விசிஆரைப் போய் சுமந்து திரிய வேண்டும். தேவையில்லை. பாதுகாப்பான இடத்தில்போய் பெட்டியைத் திறந்தேன். 112 பவுன் நகைகளும், பயணப்படியாக ஐயாயிரம் ரூபாயும்.

நல்ல தாகம். பக்கத்து வீட்டுத் திண்ணையில் ஒரு மண் கலயமிருந்தது. திருடனின் தேவையை அறிந்து யாரோ வைத்திருப்பதுபோல். நேரம், சரியாக இருந்தால் இப்படி எல்லாமே சிறப்பாக அமைந்துவிடும். ஏற்றுமானூர் ஸ்டீஃபன் சொன்னதுண்டு: "ஏற்றுமானூரப்பனின் விக்கிரகத்தைத் திருடிவிட்டு வெளியே குதித்த இடத்தில் ஒரு யானை நிற்கிறது. அது தும்பிக்கையைத் தூக்கி ஒரு சல்யூட் அடித்தது."

நீரருந்திய நான் வர்க்கலையை நோக்கி நடந்தேன். வண்டிச் செலவுக்கு பணம் வைத்திருந்தார்கள் அல்லவா? அதைச் செழிப்பாகவே செலவு செய்தேன். ஒரு டாக்சி பிடித்து நேராக ஆற்றிங்கலுக்குப் போனேன். அங்கிருந்து கேஎஸ்ஆர்டிசி பஸ்சில். போலீஸ் நாய் மோப்பம் பிடித்து அதிகபட்சம் வர்க்கலை வரை வரும். டாக்சிகாரன் ஆற்றிங்கலில் கொண்டுபோய் விட்டதாகச் சொல்வான். பேருந்துநிலையத்தில் வந்து போலீஸ் வாயைப் பிளந்தபடி நிற்கும்.

சென்ட்ரல் ஜெயில் என்னும் பல்கலைக்கழகத்திலிருந்து இதுபோன்ற பல வித்தைகளும் உத்திகளும் கற்றிருந்தேன். பிற திருடன்களின் சகவாசத்திலிருந்து கிடைத்தவை. இருந்தாலும் நான் அவ்வப்போதைய புரிதல்களுக்கேற்ப, பெரும்பாலும் சொந்த அறிவையே பயன்படுத்துவேன். இப்படியான ஒரு அறிவுதான் துரப்பன் உயிரைப் பாதுகாத்தது.

## **16 -** அகழ்வோனைக் காத்தருள் புரிந்த காதை

திருடனின் புத்தி வக்கிரமானது. அதனால்தானே அவன் இப்படியாகி விட்டான். அறிவெனப்படுவது திறன்படக் கிரகித்தல். இதில் தவறு நேர்ந்துவிடுமெனில் உயிர் பிழைத்துக் கிடப்பதே ஆபத்தாகி விடக்கூடும். கதையைக் கேளுங்கள்.

கொல்லம் ரயில்வே ஸ்டேஷனில் நின்றிருந்தேன். ஏற்கனவே அறிமுகமான ஒருவனைப் பார்த்தேன். ஆள் பார்ப்பதற்கு அப்பிராணியாகத் தெரிந்தான். கஞ்சித் தண்ணி கூட குடித்திருக்க மாட்டான்போல் தோன்றியது. கையிலொரு மாதப் பத்திரிகை மட்டும் வைத்திருந்தான். ஆள் யாரென்று பிடி கிடைத்தது. சென்ட்ரல் ஜெயிலில் அறிமுகமானவன். துரப்பன். மாத இதழினுள் ஒரு அடி நீளத்தில் கம்பி வைத்திருப்பான். ஒருமுனை கூர்மையாகவும் மறுமுனை பரந்ததாகவுமிருக்கும். இந்த ஆயுதத்தை வைத்தே சில நிமிடங்களுக்குள் ஒரு சுவரைத் துளைத்து மறு பக்கம் போய்விடுவான். அப்படியாகப்பட்ட பெருந் துரப்பன் இவன்.

நான்போய் மிரட்டினேன்: "இது என் ஏரியா. நீ எப்படி இங்க வரலாம்?"

அவனவனுக்கென்று தனித்தனி ஏரியாக்கள் இருக்கின்றன. இதில் அன்னியன் வந்து கன்னக்கோல் வைத்தால் போலீஸ் பிடிப்பது என்னை.

அவன் சொன்னான்: "நான் புனலூர்க்காரன்தான். இன்னைக்கு ராத்திரி இங்கே ஒரு வேலை இருக்கு. மாப்ளயும் வர்றியா?"

போனேன். ஒரு ஜவுளிக்கடை. அவனுக்குப் பிடித்த இடம். சுவரைத் துளைத்து உள்ளே ஏறி துணியைப் பொட்டலம் கட்டிக் கடத்துவதுதான் அவனது ஸ்டைல். அவன் துளைபோட, நான் சூழியல் பார்த்தேன். ஒரு டீக்கடை, ஒரு ஸ்டேஷனரி, அடுத்ததாக இந்த ஜவுளிக்கடை. நான் சுற்றிப்பார்த்தபோது ஜவுளிக்கடையின் பக்கவாட்டில் ஒரு வாசல். கண்களை மூடி, மனதை ஒருமுகப்படுத்தி வாசலை அழுத்தமாக ஒருமுறை தடவிப் பார்த்தால் தெரிந்துவிடும். பூட்டா, தாழ்ப்பாளா என்று. இது பூட்டல்ல, தாழ்ப்பாள். இதன் பொருள், உள்ளே ஆளிருக்கிறது.

துரப்பன் அதற்குள் துளையிட்டு முடித்து உள்ளே நுழைகிற முயற்சியில் ஈடுபடுகிறான். நான் சொன்னேன்: "பொறு. கொஞ்சம் கவனிச்சிட்டுப் போனாப் போதும்." அவன் கேலி செய்தான்: "எனக்கா தெரியாது?"

டீக்கடையின் வெளியே ஒரு மண்கலயமிருப்பதைப் பார்த்தேன். ஆட்கள் கை கழுவுவதற்கான தண்ணீர் வைக்கப்பட்டிருந்த கலயம். சங்கிலியால் பிணைக்கப்பட்ட ஒரு தம்ளரும் அதிலிருந்தது. தண்ணீரைக் கொட்டிவிட்டு கலயத்தை எடுத்தேன். சங்கிலியைக் கட்டி வைத்திருந்த ஊன்றுகோலைப் பிடுங்கினேன். ஊன்றுகோலில் கலயத்தைக் கவிழ்த்துத் துளையினுள் மெல்ல விட்டுப் பார்த்தேன். யாரோ அடிப்பதுபோல் சத்தம் கேட்டது. கலயம் சுக்கு நூறாக உடைந்தது. அடுத்த நிமிடம் கரையேறி விட்டோம்.

துரப்பன், கட்டிப்பிடித்து அழுதான். "மாப்ளே, அந்தக் கலயத்தைபோல என் தலையும் இந்நேரம் சின்னாப்பின்னமாகி போயிருக்கும். காப்பாத்திட்டே."

நான் சொன்னேன்: "குட் பை. கூட்டு விவசாயம் நமக்குச் சரிப்படாது."

ஒவ்வொரு திருடன்களும் வெவ்வேறு இயல்புடன் கூடியவர்கள். அவனவன்களின் வித்தை அவனவன்களுக்கே வசப்படும். அப்புறம், திருடனாக இருந்தாலும் எனக்கென்று சில சிறப்பம்சங்கள் உள்ளன. இயன்றவரையிலும் நான் வீட்டிலுள்ளவர்களுக்குச் சிரமம் வைக்காமலிருக்கவே முயற்சி செய்வேன். சில திருடன்கள் போலீஸ் நாய் மோப்பம் பிடித்து வந்துவிடாமலிருக்க அறைக்குள் விசர்ஜனம் செய்து வைப்பார்கள். நாயைத் திசை திருப்புவதற்காக! நாய், திருடனின் ஏதாவதொரு வாசனையை மோப்பம் பிடித்துவிட்டு நேராக வந்து இதை முகர்ந்து பார்க்கும். பிறகு தலையைக் குலுக்கும். அவமானப்பட்டு நிற்கும். இருந்த வாசனையும் போய் விடுமாம். இந்த அனுபவம் இரண்டு தடவை ஏற்படுமென்றால் நாய் இந்த வேலையையே வேண்டாமென்று வைத்து விடுமாம்.

ஒரு வீட்டினுள் ஏறினால் அங்குள்ள மனசாஸ்திரம் தெரிந்துபோய் விடும். மனைவிக்குத் தெரியாமல் சில குறிப்பிட்ட இடங்களில் மதுவை மறைத்து வைத்திருப்பார்கள். பெண்கள் புழங்காத, அவர்கள் தலையிடாத சில மூலைகள் வீட்டிலிருக்கும். இங்குதான் ஆண்களின் தனிப்பட்ட சாதனங்களிருக்கும். புளூ காசெட்டுகள், பாலியல் புத்தகங்கள், மது, கள்ளத் தொடர்புகளைச் சொல்கிற கடிதங்கள் . . . கணவனே உலகமென்று நம்பியிருக்கும் குலமாதர்கள் வஞ்சிக்கப்படுகிற இடத்தைக் கண்டுபிடித்து

அங்கே மதுவிருந்தால் எடுத்து இரண்டு டோஸ் போட்டு திருட்டு மணியன் தன்னை உஷார்ப்படுத்திக்கொள்வான். திருடன் நினைத்தால் அந்தக் குடும்பத்தைக் குலைத்துவிட முடியும். மேலே குறிப்பிட்ட சில பொருட்களை எடுத்துக் கட்டிலின் கீழ் போட்டு வைத்தால் போதும். மறுநாள் மனைவி கூட்டுவதற்காகத் துடைப்பத்தை எடுக்கும்போதே குடும்பக் கலகம் ஆரம்பித்துவிடும். நாங்கள் இதிலெல்லாம் ஈடுபடுபவர்களில்லை.

சரி, கதைக்கு வருவோம். இடவா திருட்டிலிருந்து ஒரு விஷயம் தெளிவாகிவிட்டதல்லவா? திருடனுக்கென்று விதிக்கப்பட்ட பணம் எங்கே இருந்தாலும், அது சானிட்டரி நாப்கினுள்ளிருந்தாலும் அவனிடம் போய்ச் சேர்ந்துவிடும்.

## 17 - கற்புடை தனம் கனல் போன்றது

திருடனல்ல, தேவேந்திரனாகவே இருந்தாலும் கைப்பற்ற முடியாத பணமும் இருக்கிறது. திருடனுக்கு விதிக்கப்படாத கற்புள்ள தனம்.

அது, கொல்லம், மய்யநாடு ஹை ஸ்கூல் கிரவுண்டின் மேற்குப் பகுதியிலுள்ள ஒரு வீடு. இன்று அது இல்லை. இடித்துவிட்டார்கள். இரவில் அங்கே பூபோல் நுழைந்துவிட்டேன். கணவனும் மனைவியும் நல்ல தூக்கம். சில வீடுகளில் நுழைந்து அங்கே மனிதர்கள் தூங்குவதைப் பார்த்தால் நமக்கே குற்றவுணர்ச்சி வந்துவிடும். தூக்கத்தை வைத்தே மனிதர்களின் குணத்தை எடைபோட்டு விடலாம். எவ்வளவு அமைதியாகக் கிடந்துத் தூங்குகிறார்கள்? இவர்கள் நல்ல மனிதர்கள் என்பது தெரிந்துவிடும். குற்றவுணர்ச்சி தோன்றுவதற்கானக் காரணம் இதுதான். சரி, எப்படியோ வந்துவிட்டோம். இனி, கர்மத்தை செய்தே ஆக வேண்டும்.

அலமாரி திறந்து கிடக்கிறது. கவனியுங்கள், அலமாரிகளை எப்போதுமே திறந்து போடுவதுதான் நல்லது. திருடன் உடைத்துத் திறந்து அலங்கோலமாக்கினால் பிறகு இரட்டிப்பு மெனக்கெடு. பண்டமும் பணத்தையும் ஏன் அலமாரிகளில் பாதுகாக்க வேண்டும்? திருடன்கள் கவனம் செலுத்தாத சமையலறை போன்ற சில இடங்களும் இருக்கத்தானே செய்கின்றன? அப்படியே இங்கு நுழைந்தாலும் எதையாவது தின்றுவிட்டுப் போய்விடுவான். திருடன்கள் பொழுதைத் தேவையில்லாமல் விரயம் செய்ய விரும்புபவர்களில்லை. கூடவே, கூர்மதியாளர்களும். க்ளோசட் டாங்க் முதல் குப்பைக் கூடை வரை அவர்கள் கிளறிப் பார்ப்பார்கள். சிறைப் பல்கலையில் நான் படிக்கிற காலத்தில் புரிந்துகொண்ட விஷயங்கள் இவை. திருடன்கள் பொதுவாகவே சமையலறையைச் சோதனையிட மாட்டார்கள். ஆபரணங்களை டப்பாக்களில் வைத்துப் பாதுகாக்கலாம். குறைந்தபட்சம் ஐம்பது டப்பாக்களாவது இல்லாத வீடுகள் கிடையாதல்லவா? ஆக, திருடுவதற்கான வாய்ப்பு, நூற்றுக்கு இரண்டு விகிதமென கம்மியாகி விடுகிறது. இதையும் மீறித் திருட்டுப்போகுமென்றால் திருடன் மிகப் பெரிய அதிர்ஷ்டசாலியாக இருக்க வேண்டும். ஸ்டோர் ரூமிலும்

பாதுகாக்கலாம். சகல விதமான கழிவுகளையும் கூட்டியிடுகிற இடமல்லவா? வந்தவன் அப்படியே அங்கலாய்ப்பிலாழ்ந்து போவான்.

எதுவாக இருந்தாலும் அதிகமான குருட்டுப் புத்தியைப் பிரயோகிக்காமல் இருப்பதுதான் நல்லது. மனித மூளையின் செயல்பாடு கோளாறு பிடித்ததல்லவா? இதே குருட்டுப் புத்தி திருடனின் மனதிலும் உருவாகாதா என்ன? இப்படி உருவானதில் வந்ததுதானே இடவாவில் கிடைத்த 112 சவரன் நகை.

சரி, திருடன் மய்யநாட்டில் ஒரு வீட்டில் நிற்கிறான். திறந்துக் கிடக்கிற அலமாரியின் மேல்தட்டில் ஒரு சூட்கேஸும் இரண்டுமூன்று பேக்குகளும் இருந்தன. நான் உயரம் குறைந்தவன். ஆகவே, அலமாரியின் மேல்தட்டை என்னால் பார்க்க முடியவில்லை. சூட்கேஸை எடுத்துக் கீழே வைத்து அதன்மீது ஏறி நின்றேன். பேக்குகளைத் திறந்து சோதனையிட்டேன். ஒரு புல்லும் கிடையாது. சரி, வேலைக் கூலியாவது கிடைக்குமா என்று தடவினேன். வாட்ச் போன்ற ஏதாவது எலக்ட்ரானிக் பொருட்கள்தான் வேலைக்கூலி. கிடைத்ததை எடுத்துக்கொண்டுப் புறப்பட்டேன்.

வேறு ஏதோ ஒரு வழக்கில் என்னைத் தூக்கினார்கள். ஒன்றிரண்டு சின்ன வழக்குகளைச் சொன்ன இடத்தில் இதுவும் வந்தது. விலைக்கு வாங்கியவர்களிடமிருந்து திருட்டுப் பொருட்கள் திரும்பப் பெறப்பட்டன. இவற்றுடன் நேராக இந்த வீட்டுக்கு வந்தோம். உள் முற்றத்தில் கிடந்த சோபாவில் ஏமான்கள் உட்கார்ந்தார்கள். திருடன் மூலையில் நின்றேன். தம்பதியர் வந்தார்கள். செத்துப் போனவர்களை உயிருடன் பார்ப்பது போல்தான் தூக்கத்தில் பார்த்தவர்களை விழித்திருக்கும்போது பார்ப்பது. இருட்டின் உலகமே வேறுதான். அந்தப் பிரமிப்பில் நான் நிற்கிறேன். சில பெண்கள் பிடிபட்ட பொருட்களுடன் செல்லும்போது முகம் கொடுக்கவே மாட்டார்கள். இதற்குப் பல காரணங்களிருக்கின்றன. படுக்கையறைக்குள் நுழைந்து தன்னை ஒருவன் பார்த்துவிட்டதால் ஏற்பட்ட மனத்தொந்தரவு.

சற்று நேரத்தில் மனைவி டீ கொண்டு வந்தாள். கணவன் டீயை எடுத்து முதலில் மூலையில் நின்றிருந்த திருடனுக்குத் தந்தான். சர்க்கிள் தமாஷாகக் கேட்டார்:

"அது சரி, திருடனுக்கா முதல் மரியாதை?"

வீட்டுக்காரன் புன்சிரிப்புடன் சொன்னான்: "அவருக்குத்தான் சார் முதல்லே கொடுக்க வேண்டியது. ஏன்னா, நான் இன்னைக்கு உயிரோட

இருக்கக் காரணமே அவர்தான்."

திகைப்புடன் பார்த்தோம்.

"இவர் எடுத்துக் கீழே போட்டிருந்த அந்தப் பெட்டியிலதான் அவ்வளவு பணமும் இருந்தது. சிங்கப்பூர்ல எல்லாத்தையும் இழந்துட்டு திரும்பி வந்த நான், ஏதாவது பிசினஸ் பண்ணலாம்னு அத்தான்கிட்ட இருந்து வாங்கின 25000 ரூபாய் அதிலேதான் இருந்தது. மறுநாள் காலையில ஒரு வியாபாரத்துக்குக் கொடுக்குறதுக்கான முன்பணமா இதை வெச்சிருந்தேன். இந்தப் பணம் மட்டும் திருட்டுப் போயிருந்தா நான் தூக்குப் போட்டிருப்பேன். அன்னைக்கு இருந்த மனநிலை அதுதான்."

வாசல் கதவில் சாய்ந்து நின்றிருந்த அவரது மனைவி கண்களைத் துடைத்துக்கொண்டாள். குற்றவுணர்ச்சியில் என் தலை கவிழ்ந்தது. எனக்கு அது கிடைக்காமலிருந்தது நல்லதாகத் தோன்றியது. இதுபோன்ற பாவங்களின் வேதனைபுரண்ட எவ்வளவோ பணம் என் கைகளினூடே கடந்துபோயிருக்கிறது என்பதை இப்போது வேதனையுடன் நினைத்துப் பார்க்கிறேன்.

அவனுக்கென்று விதிக்கப்பட்ட பணத்தை எவனுமே அபகரித்துவிட முடியாது என்னும் தத்துவ சாஸ்திரத்தை நம்புவதானால் ஆறுதல்பட்டுக் கொள்ள இயலும். அந்த சூட்கேஸைத் தூக்கும்போது அதன் பாரத்தை என்னால் உணர்ந்துகொள்ள முடியவில்லை. நேர்மையான பணமாக இருந்ததால்தான் அப்படித் தோன்றியிருக்கிறது. பணத்துக்காக வெறி பிடித்தலையும் மனிதர்களின் பிரதிநிதியாகவே நானிருந்தேன். பணத்தின் மீதேறி நின்றபடி வெறியுடன் அதைத் தேடியிருக்கிறேன். விதிக்கப்பட்டது கிடைக்கும்; போகவேண்டியது போயே தீருமென்பது தெரிகிறதல்லவா?

## 18 - களவுக்கலை

தனியாகச் செய்கிற திருட்டு, கலாபூர்வமாக அமையும். யாருக்குமே தொந்தரவில்லாமலும் தனியாகவும்தான் நான் பெரும்பாலான திருட்டையும் நடத்தியிருக்கிறேன்.

அன்றெல்லாம் மனதில் ஒரு திரில் இருந்தது. வெறுமனே ஏதாவதொரு வீட்டில் போய் திருடுவதல்ல. செய்கிற வேலையில் சிறு ரசனையிருக்க வேண்டும். இதற்கான வாய்ப்புள்ள வீடுகளைத்தான் நான் தேர்வு செய்வேன். திருடியது தொடர்பாக சுவையான நிறைய சம்பவங்கள். நீங்கள் எதையாவது கேள்விப்பட்டிருந்தால் அதெல்லாம் போலீசார் சொல்லி, பத்திரிகைகளில் வந்த சில சம்பவங்கள் மட்டும்தான். திருடன்கள் சொல்கிற சிறு உண்மைகளைப் பற்றிப் பிடித்துக்கொண்டு போலீசின் சாகசங்களும் கற்பனைகளும் கலந்த அரை உண்மையாகவே அது இருக்கும். திருடன் ஒருபோதுமே, "போலீஸ்காரா, உம்முடைய தகவலில் பிழையிருக்கிறது" என்று சொல்லி வாதிடப்போவதில்லையல்லவா? என்னுடைய கோணத்தில் என்னுடைய திருட்டின் வகை மாதிரிகளைப் பற்றி சொல்கிறேன்:

வீட்டைத் தெரிவு செய்வது எப்படி? அதொரு உத்தேசமான குத்துமதிப்பீடுதான். பெரும்பாலும் சரியாகவே இருக்கும். முன்கூட்டியே இந்த வீட்டில் பணம் வைத்திருப்பார்களென்று எந்தவொரு திருடனும் கணித்துச் சொல்லிவிட முடியாதென்பது உண்மைதான். ஆனால், வீடுகளுக்கு லட்சுமி கடாட்சம் என்றொரு அம்சமிருக்கிறது. வீடு சின்னதாக இருக்கலாம்; பெரியதாக இருக்கலாம். அது வேறு விஷயம். ஆனால், திருடனுக்கென்று ஒரு மதிப்பீடிருக்கும். இந்த வீட்டில் பணமிருக்குமென்று தோன்றினால் அது சரியாகப் பலித்துவிடும். இதை அகத் தூண்டுதலென்று சொல்லலாம். குலையாத உறுதியுடன் இலட்சியத்தின்பால் மனதை ஒருமுகப்படுத்தினால் உள்ளே இருப்பது வெளியே தெரியும். அதனால்தான் சில நல்ல திருடன்களுக்கு சித்துவேலை தெரியுமென்று சொல்கிறார்கள். மனதிலிருக்கும் மலினங்களைக் களைந்து சாந்த குணத்துடன் உற்று நோக்கினால் சில விஷயங்களை அவதானிக்க இயலும்; அடைத்து மூடி வைத்திருப்பவை

வெளியே வரும். யோசித்துப் பாருங்களேன்: நீங்கள் அடைத்துப்பூட்டி பத்திரமாகப் பாதுகாக்கும் பொருள் எப்படி திருடனின் பார்வையில் மட்டும் பட்டுவிடுகிறது? நீங்கள் பலநாட்களாக சிந்தித்து முடிவு செய்து தகுந்த இடத்தில் மறைத்து வைத்திருக்கும் பொருளைத் தேடிக் கண்டடைவதற்கானக் காலஅவகாசமெல்லாம் அவனுக்குக் கிடையாதென்பதையும் நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். சாதாரணமாக அரை மணி நேரம் அல்லது முக்கால் மணி நேரத்திற்கதிகமாக ஒரு திருடனால் நிற்க முடியாது.

கால் நூற்றாண்டு கால திருட்டு மற்றும் சிறை வாழ்க்கையினிடையே நான் சந்திக்க நேர்ந்த திருடன்கள் எத்தனையோ ஆயிரங்கள். ஆனால், அதில் நல்ல திருடன்கள் மிகக் குறைவான சதவிகிதம்தான்.

முதலில் வீட்டைக் கண்டுபிடித்து மதில் தாண்டி உள்ளே நுழைந்தாகி விட்டது. பிறகு குறைந்தபட்சம் இரண்டு தடவையாவது வீட்டைச் சுற்றி நடக்க வேண்டும். நடக்கும்போது சத்தம் வரக் கூடாது. வீட்டைச் சுற்றிலும் கான்கிரீட் போடுவது திருடனுக்கு உதவியாக இருக்கும். சத்தம் வெளியே கேட்காது. சிறு மெட்டலோ சல்லிக் கற்களாகவோ இருந்தால், எவ்வளவு கவனமாக நடந்தாலும் நெரிந்து சத்தம் கேட்கும்.

இரண்டு ரவுண்டு நடந்தால் வீட்டின் அமைப்பைப் புரிந்துகொள்ள இயலும். பாதுகாப்பு அறை எந்த இடத்திலிருக்கிறது என்பது தெரிந்துவிடும். பிறகு அந்த அறைக்குள் ஏறுகிற முயற்சி. பெரும்பாலான ஆபரேஷன்களையும் நான் ஜன்னல் கம்பிகளை வளைத்துதான் நடத்தியிருக்கிறேன்.

மரத்தினாலான பழைய ஜன்னல்களாக இருந்தால் தோதுவாக இருக்கும். இற்றுப்போன ஏதாவதொரு பகுதியில் ஈரத் துணியை பத்து நிமிட நேரம் அழுத்தி வைத்திருந்தால் போதும். நீரை உறிந்தெடுத்து ஒரே பிடியில் ஒடிந்து கையில் வந்துவிடும்.

சாதாரணமாக நான் இரவுக்காட்சி சினிமாவுக்குப் போய் விடுவேன். முடிந்து வரும்போது மணி பன்னிரெண்டைக் கடந்துவிடும். பிறகு அப்படியே நடப்பேன். இலக்கில்லாமல் நடப்பேன். ஒவ்வொரு வீடுகளாக நோட்டமிடுவேன். ஏற்கனவே சொன்னதுபோல் லட்சுமி கடாட்சமுள்ள ஒரு வீட்டில் கண்கள் சிக்கி நிற்கும். அங்கே நுழைந்துதானாக வேண்டும். நுழைவேன். பொதுவாகவே, இரண்டு மணி முதல் மூன்றரை மணிவரைதான் திருடன்களின் நேரம். மனிதர்கள் ஆழ்ந்த

நித்திரைக்குள் ஆட்பட்டிருக்கும் நேரமது. அதிலும் தீவிரமாக இருக்கும் இருபது நிமிட நேரத்தில் அவனைத் தூக்கித் தள்ளிப்படுக்க வைத்தால்கூட அறிந்துகொள்ள இயலாது. இதெல்லாம் திருட்டு சாஸ்திரங்கள்.

சரி, தூங்குபவன் ஆழ்ந்த நித்திரைதான் என்பதை எப்படி தீர்மானிப்பது? வழியிருக்கிறது. தூங்குபவனின் உள்ளங்காலில் அழுத்தமாக ஊத வேண்டும். ஆழ்ந்தத் தூக்கமில்லையென்றால் கால் அசையும்.

திருடன்கள் பொதுவாகவே பயந்தாங்கொள்ளிகள். வீட்டிலுள்ளவர்கள் இலேசாக விழித்தாலே அந்த இடத்தில் நிற்க மாட்டார்கள். ஆனால், எனக்கு இந்த வித்தையைக் கற்றுத் தந்த பெருந்திருடன் இந்தக் குருட்டுத் தந்திரத்தைப் பயன்படுத்தி ஒரு வீட்டுக்காரியுடன் பாலியல் உறவு கொண்டதாகச் சொன்னான். இந்த வித்தையில் அவன் நிபுணத்துவம் பெற்றவன் என்பது உண்மையும்தான்.

கட்டிலில் படுத்திருந்த கணவனை எடுத்துக் கீழே பாயில் படுக்க வைத்துவிட்டு கணவன் ஸ்தானத்தை அவன் கைப்பற்றினான். இந்நேரத்தில் 'அது' வழக்கிலில்லாததாக இருந்தாலும் மனைவி அனுமதித்தாள். பிறகு ஆழ்ந்த நித்திரையிலிருந்து விடுபடுவதற்குள் கணவனை மீண்டும் பழைய இடத்திலேயே ஸ்தாபித்தான். வழக்கம்போல் கணவன் அதிகாலையில் மனைவியை சமீபித்தான். அவளுக்கு ஆச்சரியம்: "என்ன இது ஒருநாளுமில்லாத திருநாளா, ரெண்டு வாட்டி?"

அவன் திடுக்கிட்டுப் போனான். தூக்கம் போய் விட்டது. லைட்டைப் போட்டபோது அலமாரி திறந்து கிடக்கிறது, மனைவியின் பதிவிரதம்போல். ஆண்களைப்போல் அசிங்கம் பிடித்த ஜாதி வேறு கிடையாதல்லவா? உலகத்திலுள்ள எல்லாப் பெண்களுடையவும் கற்பை முதலில் கவர்ந்துகொள்பவனாக இருக்கவே அவனுக்கு விருப்பம். ஆனால், அவனுடையவளை மற்றொருவன் பார்த்துவிடவும் கூடாது.

அந்தத் தம்பதியர் சாதாரணமானவர்களில்லை. உத்தியோகத்தைச் சொன்னாலே தெரிந்துபோய்விடும். நீதிபதியாக இருந்த அவரது மனைவியும் இரக்கமில்லாத ஒரு பெண்ணென்றும் ஆகவே, நான் வேண்டுமென்றுதான் அப்படி நடந்துகொண்டேன் என்றும் சொன்னான். பிறகு கணவனுக்கு இந்த ஜென்மத்தில் தூக்கமே வரவில்லையாம். திருடன் சொல்லியோ என்னமோ நீதிமன்றத்திலும் அக்கம்பக்கத்திலும் செய்தி கசிந்துவிட்டது. வேலூருக்கு அழைத்துக்கொண்டுபோய் வயிற்றைக் கழுவியும் அவருக்குத் திருப்தியேற்படவில்லையாம். தாம்பத்தியமே

முறிந்துவிட்டதாம். உண்மையோ பொய்யோ தெரியாது.

வீட்டில் நுழைந்த திருடன் மூன்றரை மணிக்குள் இறங்கிவிட வேண்டும். அதைத் தாண்டுகிற ஒவ்வொரு நிமிடமும் ஆபத்துதான். வீட்டுக்காரர்கள் எழுந்துவிடுவதற்கான வாய்ப்புகள் மிகுதி. குறிப்பாக, நன்றாகப் படிக்கிற பிள்ளைகளோ தொலைதூரங்களில் வேலைக்குப் போக வேண்டியவர்களோ இருந்தால்.

மூன்றரை மணிக்குள் வீட்டிலிருந்து கிளம்பும்போது டிரெஸ்சிங் ரூமுக்குள் சென்று என்னை அழகுபடுத்திவிட்டுத்தான் புறப்படுவேன். ஏற்கனவே கையில் பவுடர் இருக்கும். ஒருவேளை அங்கே கிடைக்காமலுமிருக்கலாம் அல்லவா? பான்டை இன் பண்ணிக்கொள்வேன். திருடிய பொருளை நல்ல பேக்கில் வைத்து, சீர்திருத்திய தாடியும் சிகையலங்காரமுமாக ரோட்டில் நடந்தால் எந்தப் போலீஸ்காரனுக்கும் சந்தேகம் வராது. அப்படியே சந்தேகித்தாலும் விசாரிக்கத் தயங்குவான். ஒருவேளை கௌரவமானவனாக இருந்தால் என்ன செய்வது என்ற தயக்கம். இப்படியான பயணங்களின்போது பெரும்பாலும் எனக்கு வழிகாட்டித் தந்தவர்கள், ரோந்து சுற்றுகிற போலீஸ்காரர்கள்தான். எங்கே போக வேண்டும் என்று கேட்பார்கள்.

பதிலில் தெளிவு வேண்டும். காலையில் புறப்படுகிற ரயில் நேரம், பஸ் நேரம், போகிற இடங்கள் போன்றவற்றைத் தெரிந்து வைத்திருக்க வேண்டும். பிறகு, பேருந்து நிலையத்திற்குப் போக வேண்டிய குறுக்கு வழியை அவர்களே சொல்லிவிடுவார்கள்.

திருடன் உடம்பில் எண்ணெய் தடவிக்கொள்வானா? இல்லை. நான் சென்ட்ரல் ஜெயிலில் சந்தித்த எந்த திருடனுமே இப்படி உடம்பில் எண்ணெயைத் தடவிக்கொண்டு திருடியதாகக் கேள்விப்பட்டதில்லை. ஏற்கனவே சொன்னதுபோல் வேர்வைப் படிந்த சட்டையுமணிந்துகொண்டு நடப்பவன், சாமுத்ரிகா போலீஸ் லட்சணப்படி திருடன். ஆகவே, நான் வேர்வைப் படியாமலிருப்பதற்காக சட்டையைக் கழற்றிக் கொடியில் போடவோ பைக்குள் வைத்துக்கொள்ளவோ செய்வேன்.

கையிலொரு பார்சலும் அதிலொரு சட்டையும் இருப்பதைப் பார்த்தால் உடனே பிடித்து உள்ளே போட்டுவிடுவார்கள். திருட்டை முடித்த பிறகு வேர்வை படிந்த சட்டையை மாற்றி வேறு சட்டையணிந்து நீட்டாகப் போவதற்கான ஏற்பாடுதான் இதுவென்பது போலீசுக்குத் தெரியும்.

திருடன் எப்போதும் போலீஸ் மனோபாவத்தைப் படித்துக்கொண்டே இருக்க வேண்டும்.

## 19 - வழக்கறிஞர் மணியன்பிள்ளை

என்னுடைய வழக்குகளுக்கு நானே வழக்கறிஞர். புதிதாக வந்த நீதிபதிகள் கேட்பார்கள்: "நீ ஏன் வக்கீல் ஏற்பாடு செய்யல? கேஸ்ல ஜெயிக்க வேண்டாமா?" நான் சொல்வேன்: "யுவர் ஹானர், நான் நிரபராதின்னு தெளிவுபடுத்த வேண்டிய தேவை ஏதோ ஒரு வழக்கறிஞரை விடவும் எனக்குத் தானே அதிகம்?"

என்னுடைய வழக்குகள் கொல்லம் நீதிமன்றத்தில் விசாரணைக்கு வருகிற நாட்களில், நீதிபதியாக இருந்த சுரேந்திர நாத பணிக்கர் கோட்டுப்போட்ட ஜூனியர் பையன்களிடம் சொல்வார்: "மதியத்துக்குப் பிறகு மணியன்பிள்ளையோட வழக்கு இருக்கு. சீக்கிரமாக சாப்பிட்டுட்டு வந்தீங்கன்னா வாதாடக் கத்துக்கலாம்." எஸ்ஐயும் சர்க்கிளும் யாரிடமாவது சொல்லியனுப்புவார்கள்: "இன்னார்தான் விசாரணை அதிகாரி; தேவையில்லாம அவரைக் கிறங்க அடிச்சுடாதே."

இதற்கான காரணம் வேறொன்றுமில்லை. கொல்லம் குற்றவியல் தலைமை நீதிமன்றக் கூண்டுக்குள் வேர்த்து விறுவிறுக்க நின்றிருந்த ஒரு விசாரணை அதிகாரியின் நிலைமையைக் கண்டு நீதிபதிக்குப் பரிதாபமாக இருந்தது. அவர்: "மணியன் பிள்ளையை வேணும்னா நான் விடுதலை பண்ணிடறேன். நீங்க போகலாம்" என்றார். வரிஞ்ஞும் ராமச்சந்திரன் நாயர் உட்பட்ட பிரபல வழக்கறிஞர்கள் என்னுடைய வாதத்திலிருந்து பல்வேறு பாயிண்டுகளைப் படித்ததுண்டு. சிலவற்றைத் திருத்தியிருக்கிறார்கள். ஜெயில் லைப்ரரியில் அதிகமாகப் படித்த வாசகர்களில் நானுமொருவன். சொந்தமாக வாதாடும்போது நீதிபதியின் அனுதாபம் கிடைக்கிற லாபமும் இதிலிருந்தது. அப்படியான ஒரு வழக்குதான் கொடுவள்ளி வழக்கு. என்னுடைய மனதில் கெடுதி மட்டுமல்ல, கொஞ்சம் நன்மையுமிருக்கிறது என்பதை எனக்கே உணர்த்திய ஒரு சம்பவமிது.

கொடுவள்ளி வழக்கு: மைசூரில் நான் ராஜாவாக வாழ்ந்த காலத்தில் இரண்டு மாதத்திற்கொரு தடவை ஊருக்கு வந்து அம்மாவைப் பார்ப்பது வழக்கம். திரும்பிப் போகிற வழியில் அநேகமாக ஒரு திருட்டு

நடத்திவிடுவேன். வியாபார அபிவிருத்தி மற்றும் இதர செலவீனங்களுக்காக. முக்கியமாக கோழிக்கோடு பகுதி இதற்கு வசதியானது. பணக்கார முஸ்லிம் வீடுகளில் ஏராளமான வளைகுடா பொருட்கள் இருக்கும். மட்டுமல்ல, முஸ்லிம் வீடுகளில் நாய் இருக்காது. முஸ்லிம் குடும்பங்கள் அதிகம் வாழ்கிற பகுதியாக இருந்தால் அந்தச் சுற்றுவட்டாரத்திலேயே நாய்கள் இருக்காது.

தாமரைச்சேரிக்கு வந்து, பக்கத்திலுள்ள ஓலைக்கொட்டாயில் இரவுக் காட்சி சினிமா பார்த்தேன். இப்படி, பொழுதுபோக்குவதற்காகப் பார்த்த திரைப்படங்களின் பெயர்கள்கூட நினைவில் இல்லை. நான் சீட்டில் உட்கார்ந்திருப்பேன். திரையில் ஏதேதோ சித்திரங்கள் நகர்ந்துகொண்டிருக்கும். அவ்வளவுதான்.

ஒரு பழைய வீட்டில் நுழைந்து எல்லா இடங்களையும் சோதனையிட்டேன். எதுவுமே கிடைக்கவில்லை. கடைசியில் ஒரு பாத்திரத்தில் வைத்திருந்த இரண்டு மூன்று வளையல்கள், ஒரு சிட்டிஸன் வாட்ச் போன்றவை கிடைத்தன. வழக்கில் சிக்கினேன். கோர்ட்டுக்குப் போனேன். நானே வாதாடினேன். வீட்டிலுள்ளவர்கள் ஹஜ் யாத்திரைக்குப்போன அன்றிரவுதான் நான் நுழைந்தேன். ஒரு பதிமூன்று வயதுச்சிறுமியும் அவளுடைய பாட்டியும் மட்டும்தான் அப்போது வீட்டிலிருந்தார்கள்.

வழக்கு விசாரணைக்கு வந்தது. ஹஜ்ஜுக்குச் செல்பவர்கள் எல்லாச் சொத்துக்களையும் கணக்குத் தீர்த்துவிட்டல்லவா போக வேண்டும்? அப்படியென்றால் இந்தத் தங்க நகைகள் மட்டும் எப்படி மிச்சமிருந்தன என்பது என்னுடைய கேள்வி. வாரிசுரிமைப்படிக் கிடைத்ததென்பதால் இது என்னுடையதல்ல என்றாள் வீட்டம்மா. அதைக் கணக்கு தீர்க்க வேண்டிய அவசியமுமில்லையாம்.

சிட்டிஸன் வாட்ச் அந்த வீட்டிலுள்ள சிறுமியுடையது. வாட்சை அவள் நீதிமன்றத்தில் அடையாளம் காட்டினாள். நான் குறுக்கு விசாரணை செய்தேன்:

"இது உன்னோட வாட்சுதான் என்கிறதை உன்னால எப்படி உறுதியாச் சொல்ல முடியும்? ஆதாரம் ஏதாவதிருக்கா?"

"பார்த்தாலே தெரியும்" என்றாள் அந்தச் சிறுமி.

"ஒவ்வொரு வாட்சுக்கும் ஒவ்வொரு நம்பர் இருக்கும் தெரியுமா?"

"தெரியாது."

"பில் இருக்கா?"

"இல்லை."

"சிட்டிஸன் கம்பெனிக்காரன் இதுவரைக்கும் ஒரே ஒரு வாட்ச்தான் தயாரிச்சிருக்கான்னா நினைக்கிறே?" என்ற கேள்வியைக் கேட்டதும் அந்தச் சிறுமி அழுதுவிட்டாள். மனதில் எந்தக் களங்கமுமில்லாத அந்தச் சிறுமி அழுததும் நான் ஐஸ் கட்டிபோல் உருகிப் போனேன். வழக்கு தள்ளி வைக்கப்பட்டது. மீண்டும் ஜெயிலுக்குப்போனேன். அவளுடைய வீட்டில் ஏறி திருடிய, மோசமான மனிதனாகிய நான், செய்ததெல்லாம் போதாதென்று களங்கமில்லாத அவளை வேதனைப்படுத்துகிறேன். அன்றிரவு தூக்கமில்லாமல் விடிந்தது.

நானேதான் வழக்கறிஞர் என்பதால் சிறுமியின் வீட்டு முகவரி நினைவிலிருந்தது. ஜெயிலிலிருந்து அந்த முகவரிக்கு ஒரு கடிதமெழுதினேன்: "மகளே, மாமா இனிமேல் உன்னை கோர்ட்டுக்கு இழுக்க மாட்டேன். மகள் இனிமேல் கோர்ட்டில் வந்து அழ வேண்டியதிருக்காது. அப்படி நடந்துபோனதற்காக இந்த மாமாவை மன்னித்து விடு. உன் வாட்ச் உன்னிடமே வந்து சேர்ந்துவிடும்."

பயந்துபோன வீட்டுக்காரர்கள் கடிதத்தை நீதிமன்றத்தில் ஒப்படைத்துவிட்டார்கள். நீதிமன்றம் அன்பாகக் கண்டித்தது:

"ஜெயிலிலிருந்து கடிதமெழுதுறதுதான் உன்னோட வேலையா? முதல்ல திருடவே இல்லைன்னே, இப்ப திருடினேங்குறே? நீ விளையாடுறதுக்கான இடமா நீதிமன்றம்?"

பதில் சொல்லவில்லை.

"மூணு வழக்குகளிலேயும் உனக்கு ஒன்பது மாதத் தண்டனை விதிக்கப்பட்டிருக்கு. அதை நீ ஏக காலத்தில அனுபவிச்சா போதும். சரி வழக்கு விசாரணை ஆரம்பிச்சு எவ்வளவு நாளாகுது?"

"மூணு மாசத்துக்கும் அதிகமா ஆயிடுச்சி."

"சரி, அப்படீன்னா தண்டனையை விசாரணை காலத்தில கழிச்சதா கணக்கு வெச்சுக்கலாம்."

அதாவது வழக்கின் தண்டனையாக நான் ஒருநாள்கூட ஜெயில்வாசம் அனுபவிக்க வேண்டியதில்லை. நீதிமன்றத்தின் மனசாட்சிமீது மரியாதை தோன்றிய நாள். நான் செய்த நல்ல விஷயத்திற்கு பலன் கிடைத்த நாள்.

அன்றுமுதல் நான் புதியதொரு வாழ்க்கையைத் துவங்குவது பற்றிச் சிந்திக்க ஆரம்பித்தேன். இதை நடைமுறைப்படுத்துவதற்கு நீண்ட காலஅவகாசம் தேவைப்பட்டதென்பது வேறு விஷயம்.

## 20 - பரவசத் திருட்டு

கொல்லம் மய்யநாடு காக்கோட்டுமூலையின் அருகிலுள்ள ஒரு அமெரிக்காகாரனின் வீட்டில் நுழைந்தேன். இன்று நினைக்கும்போது அது மிகப் பெரிய சாகசமாகத் தோன்றுகிறது.

நள்ளிரவு ஒரு மணியளவில் அந்த வீட்டின் எதிரில் வந்தேன். கேட் வழியாகப் பார்க்கும்போது திடுக்கிட்டுப் போய்விட்டேன். எந்த இனத்தைச் சேர்ந்தது என்றே தெரியாத, அல்சேஷனை விடவும் பிரம்மாண்ட சைசில் ஒரு நாய். கேட்டின் முன்புறம் கனகம்பீரத்துடன் அது உட்கார்ந்திருந்தது. இடையிடையே ராஜதோரணையுடன் வலது புறமும் இடதுபுறமும் பார்வையைச் செலுத்தி யாருமில்லை என்பதை உறுதிசெய்துகொண்டிருந்தது. என்னை அது கவனித்துவிட்டதென்பதும் தெரிந்தது. இலேசாக உறுமி வைத்தது. தேவையில்லாமல் குரைக்கிற ஜாதியல்ல. அதனுடைய எல்லைக்குள் கால் வைத்தால் மட்டும்தான் பிரச்சினை பண்ணும். அடுத்தக் காட்சியைக் கண்டதும் முழுவதுமாக நடுங்கிவிட்டேன். பிரம்மாண்டமான மற்றொரு நாய் வந்துகொண்டிருந்தது. இதைப் பார்த்ததும் முதல் நாய் எழுந்து வீட்டின் பின்பக்கமாக நடந்தது. வந்த நாய், இந்த நாயின் இடத்தில் உட்கார்ந்து மெல்லத் தலையசைத்துத் தேடுதல் வேட்டையைத் தொடர்ந்தது. அதாவது, ஒருவன் உட்கார்ந்து தேடும்போது இன்னொருவன் ரோந்திலிருப்பான். பிரமாதமான பயிற்சி. மனிதனை விடுவோம்; ஒரு ஈ எறும்புகூட அந்த தோட்டத்தில் காலெடுத்து வைக்க முடியாத அளவுக்கு டைட் செக்யூரிட்டி. மீறி வைத்தால் உயிருடன் திரும்பிப் போவதில் சிரமங்களிருக்கும்.

திருடனின் பொது மனோபாவம், இப்படிப் பயங்கரமான நாய்களிருக்கும் வீட்டைத் தவிர்த்து விடுவதுதான். ரிஸ்க் அதிகம். பலாப்பழக் கோந்தில் அல்வாவைப் புரட்டி எறிந்து வாயைக் கட்டுகிற கதைகளையெல்லாம் அறிந்திருப்பீர்கள். இந்த வித்தைகளெல்லாம் சோற்றுக்கில்லாமல் கிடக்கும் ஏதாவது தெருநாய்களிடம் செல்லுபடியாகலாம். அந்தஸ்தாக வளர்த்தப்படுகிற இந்த நாய்கள் எஜமான்கள் கொடுத்தால் மட்டும்தான் தின்னும்.

திருட்டு சாஸ்திரத்தில் மற்றொரு விதியுமிருக்கிறது. அதாவது, அடுத்த வீட்டையும் கவனத்தில் கொள்வது. நம்முடைய வீடுகளில் திருடன் நுழைவதற்கான வாய்ப்புகளைக் குறைக்க வேண்டுமானால் பக்கத்து வீட்டுக்காரனும் மனது வைக்க வேண்டும். அண்டை வீட்டானும் நன்றாக இருக்க வேண்டும் என்று சொல்வதற்கானக் காரணங்கள் இதுவெல்லாம்தான். ஒரு வீட்டின் மதில் சுவரைத் துளைக்கவும் கதவை உடைக்கவும் தேவைப்படுகிற உபகரணங்கள் பக்கத்துவீட்டு வளாகத்திலிருந்தே கிடைத்துவிடும். பெரும்பாலான எல்லா வீடுகளிலும் இது போன்ற பொருட்களை போட்டு வைப்பதற்கான ஒரு பகுதியிருக்கும். அதில் பூட்டு இருக்காது; அப்படியே இருந்தாலும் துருப்பிடித்ததாகவே இருக்கும். அதனுள் ஒரு திருடனுக்கு வேண்டிய எல்லா தொழிற்கருவிகளும் கிடைக்கும். பொதுவாகவே, மலையாளி வீடுகளின் புழக்கடையில் தேங்காய் உரிப்பதற்கான ஒரு இரும்புக் கடப்பாரை நட்டு வைக்கப்பட்டிருக்கும். காரியம் முடிந்த பிறகு எதையுமே திரும்பிப் பார்க்கும் வழக்கம் மலையாளிகளிடம் கிடையாதல்லவா? கடைப்பாரை அப்படியே நிற்கும். இருட்டில் தப்பித் தடுமாறி வரும் திருடன்தான் அதில் விழுந்து செத்துப்போகாமல் கவனித்துக்கொள்ள வேண்டும்.

நாய்களின் மனோசாஸ்திரம்: கற்றறிந்த கள்வர்கள் நாய்களின் குண நலன்களையும் ஆய்ந்தறிந்திருப்பர். நாய்கள் பொதுவாகவே மிகவும் பயந்த சுபாவமுள்ளவை. இந்த அளவுக்குப் பயப்படுகிற விலங்கினங்கள் மிகவும் குறைவுதான். செந்நாய் இனத்திலுள்ள இவை, பிறப்பியல் சார்ந்த வீரியமின்மையாலும் காட்டிலுள்ள மற்ற விலங்குகளுடன் போராடுகிற திறனின்மையாலும்தானே காட்டை விட்டு வெளியில் வந்து மனிதர்களோடு கூட்டணி அமைத்துக்கொண்டன.

பலவானான ஒருவனை அண்டியிருப்பவன், பயந்தாங் கொள்ளியாகவும் சுயமிழந்தவனாகவும் சுயநலம் பிடித்தவனாகவும்தானிருப்பான். இதன் ஆகப் பெரிய உதாரணம் நாய்கள். அவற்றின் குணநலன்களைக் கவனித்துப் பாருங்கள்: மனித இனத்தின் அதே சுபாவங்கள்தான். வேறுபட்ட இனமாக இருந்தாலும். காட்டிக் கொடுப்பவை முதல் இராணுவத் தலைமைவரை அதிலிருக்கும். மனிதர்கள்போல் சுகபோகத்திற்காக, மிகவும் அராஜகமான வாழ்க்கையைத்தான் நாய்களும் விரும்புகின்றன. இரவில் ஏதோ கடினமான வேலையில் ஈடுபட்டிருந்ததுபோன்ற ஜாடை காட்டி பகல் நேரத்திலும் தூங்குகிற நாய்களைப் பார்த்திருக்கிறோம் அல்லவா? ஆளரவம் மிக அருகில் கேட்டாலும்கூட ஏதோ பெயரளவில் அசைந்து கொடுக்கிற இந்த

இனத்தை ஓட வைப்பது மிக எளிது. பொதுவான நாயினங்களில் இவைதான் மிகவும் பயப்படுபவை. உடல் ஆகிருதி பிரம்மாண்டமாக இருந்தாலும் மனதால் வெறும் பயந்தாங்கொள்ளிகள். மெல்லப் பதுங்கிச் சென்று ஓங்கி ஒன்று வைத்துவிட்டு ஓ . . .வென்று அலறினால் போதும், பிறகு அந்த இடத்தில் நிற்கவே நிற்காது. மதிலாக இருந்தாலும் சரி தாண்டிக் குதித்து ஓடித் தப்பிவிடும். பெரும்பாலும் திரும்பிக்கூட வராது. நான் பல இடங்களில் இதைச் செய்துப் பார்த்திருக்கிறேன். ஆனால், அதுபோன்ற நாய்களல்ல, இங்கே உலா வருபவை. எந்நேரமும் எச்சரிக்கையுடனிருப்பவை. சொல்லிக்கொடுத்ததை அப்படியே பின்பற்றுகிற ஜாதி. "இந்த வளாகத்தில எவனாவது ஒருத்தன் நேரங்காலம் பார்க்காம வந்து காலை வெச்சான்னா அந்தக் காலை அப்படியே குதறி எடுத்துடு" என்று அவற்றிற்கு உத்திரவிடப்பட்டிருக்கலாம். அதாவது, தரையில் காலை ஊன்றாத பட்சத்தில் அவற்றிற்கு பிரச்சினை எதுவுமில்லை. ஆகவே, இதற்கு ஏதாவது மாற்று வழிகளிருக்கின்றவா என்பதைத்தான் இனி ஆராய வேண்டும்.

நான் பக்கத்து வீட்டிற்கு வந்தேன். மொட்டை மாடியைக் கவனித்தேன். செல்வந்தர்களிடமுள்ள பல கோளாறுகளில் ஒன்று. மொட்டை மாடிகளில் செயர்களைப் போட்டு பந்து மித்ராதிகள் சகிதம் ஜோடியாக உட்கார்ந்து காற்று வாங்குவது. ஆகவே, எச்சரிக்கை தேவை. மாடியில் உறுதியான ஒரு ஏணியிருந்தது. இந்த மொட்டை மாடியிலிருந்து அடுத்த வீட்டு மொட்டை மாடிவரையிலும் நீளம் போதுமானதாக இருக்கலாம். திருடனுக்குத் தேவையான எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தத் திருப்தியுடன் குடும்பத் தலைவன் தூங்கும் குறட்டைச் சத்தம், சைரன்போல் வெளியே கேட்டது. பாவம், சகிகள். எதையெல்லாமோ சகிக்கிறார்கள்.

ஏணியைச் சத்தம் கேட்காமல் தூக்கியெடுத்து நுழைய வேண்டிய வீட்டின் மொட்டை மாடியை நோக்கி நீட்டிப் பார்த்தேன். சிரமப்பட்டுதான் எட்டுகிறது. ரிஸ்க். ஏறும்போது ஏணி சற்று விலகி, திருடன் கீழே விழுந்தால் நாய்களுக்குப் போதும். விழுந்து கால் ஒடிந்தால் ஓடவும் முடியாது. நாயிடமிருந்து கடி வாங்கி அகால மரணமடைய வேண்டியதுதான். இருந்தாலும் இந்தக் குடும்பத்தலைவன் இவ்வளவு பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்ததன் மூலம் பூலோகத்திலுள்ள எல்லாக் கள்ளன்களுக்கும் பிடிவாதமாக அறைகூவல் விடுத்திருக்கிறான். ஆண்மையுள்ள திருடன்கள் எவனாவது இருந்தால் வாங்கடா பார்க்கலாம் என்று. இதை எதிர்கொள்ளாமல் திரும்பிப்போவது ஒரு நல்ல திருடனுக்கு

அழகில்லை. மூழ்காது என்று உறுதியாகத் தெரிந்த டைட்டானிக் மூழ்குவதைப் பார்ப்பதில்தான் சுவாரஸ்யமிருக்கிறது. யாரும் நுழையவே முடியாதென்று உறுதியாகத் தெரிந்த வீட்டினுள் நுழைவதிலிருக்கும் மனத் திருப்தி வேறு எதிலிருக்கிறது?

இப்படியாக, கீழே பிரமாண்டமான நாய்கள் உலா வந்துகொண்டிருக்க நான் மூச்சையடக்கிப் பிடித்தபடி ஒவ்வொரு படிகளாக, சர்க்கஸ் புலி கயிற்றில் நடப்பது போல் மெல்ல ஏணியில் நகர்ந்து கொண்டிருந்தேன். எப்படியோ மறுமுனைக்கு வந்துசேர்ந்தேன் என்று வைத்துக்கொள்ளுங்களேன். மெதுவாக, சாவகாசமாக நின்று மூச்சு வாங்கினேன். அதிலொரு நாய் திடீரென்று மேலே பார்த்தது. நான் கீழே குனிந்துகொண்டேன். பிறகு அது கவனிக்கவில்லை. அதுவும் தன்னம்பிக்கையின் உச்சத்தில் அல்லவா இருக்கிறது? நான் உயிரோடிருக்கிற காலம்வரை இங்கே மற்றொருத்தன் வந்தேறி விடுவானா? அளவுக்கு மீறிய தன்னம்பிக்கையுடனிருப்பவனின் கதி எப்போதுமே இதுதான்.

மாடியின் ஜன்னல் கம்பியை வளைத்தேன். இது எப்போதுமே பெரிய பிரச்சினைக்குரிய விஷயம் கிடையாது. என்னைக் கண்டாலே போதும். கம்பிகளெல்லாம், 'அய்யோ, மணியண்ணா, நம்மளை வளைச்சி கிளைச்சி வெச்சுடாதே' என்று அழ ஆரம்பித்துவிடும். மூடிக்கிடக்கும் கண்ணாடி ஜன்னல்களை உடைக்க வேண்டியதிருக்கும். கண்ணாடி ஜன்னல்களுக்கு சிறிது அகம்பாவமிருக்கும்: 'என்னைத் தொட்டேன்னு வெச்சுக்கோ, நான் அப்படியே உடைஞ்சிச் சிதறி ஊரைக் கூட்டிடுவேன்' என்கிற அகம்பாவம். இதற்கும் ஒரு மருந்து இருக்கிறது. எல்லா திருடன்களுடைய இடுப்பிலும் ஒரு டவல் இருக்கும். அதை நான்காக மடித்து, நனைத்து கண்ணாடியின் மீது வைத்து கூர்மையான ஒரு கல்லால் ஒரு குட்டு வைத்தால் போதும். அகம்பாவம் முழுவதும் அப்படியே ஆவியாகிவிடும். டவலை விலக்கினால் பார்க்கலாம், நான்கு புறமும் கீறிய கண்ணாடி. பிறகு, ஆற அமர உட்கார்ந்து ஒவ்வொரு சில்லாக மெல்ல உருவியெடுத்துக் கொள்ளலாம்.

கம்பியை வளைப்பதுவும் அப்படித்தான். கம்பிக்கென்றும் ஏதாவது மர்மஸ்தானமிருக்கும். அதாவது பலவீனமான பகுதி. அந்த இடத்தில் ஒடிவதற்கான வாய்ப்பு அதிகம். கம்பியை விட இரண்டு மடங்கு கனமான ஒரு தடியோ குழாயோ கல்லோ, கிடைப்பதை எடுத்து கம்பியினிடையே வைத்து அழுத்தம் கொடுத்து ஏந்தினால் போதும். சத்தம் வருகிற, உடைகிற பகுதியின்மீது ஏற்கனவே சொன்னதுபோல் ஈரத் துணியை

அழுத்திப் பிடித்திருக்க வேண்டும். கம்பி, ஒரு வார்த்தைகூட எதிர்த்துப் பேசாது. பெரிய வேலைப்பாடுகள் கொண்ட பலவிதமான எடுப்புகளுடன் கூடிய பயங்கரமான பாதுகாப்புடன் இருப்பதாக வீட்டுக்காரர்கள் தவறாக நினைத்திருக்கும் எந்த ஜன்னல் கம்பிகளையும் இப்படி பூ போல் எடுத்து நீக்கிவிடலாம். இது ஒரு தொழில் நுட்பம். மரத்தால் செய்யப்பட்ட எதையும் இலகுவாக எடுத்து மாற்றிவிடலாம். மரம் ஒரு சாதுவான பொருள். மர்மஸ்தானத்தைத் தொட்டுவிட்டால் அடுத்த நிமிடம் அம்பேல்.

சகலமான வீட்டு உடைமையாளர்களுக்கும் ஒரு அறிவிப்பு:

உங்களுடைய வீடுகளில் இதுவரை திருடன் நுழையவில்லை என்பதற்காக நீங்கள் பலத்த பாதுகாப்பினுள் இருக்கிறீர்கள் என்று அர்த்தமில்லை; திருடன் உங்கள் வீட்டை இன்னும் நோட்டமிடவில்லை, அவ்வளவுதான். உங்கள் வீடு அவனது கவனத்தில்படவில்லை என்பது மட்டும்தான் உங்களுடைய பாதுகாப்பு. மனிதர்களால் உருவாக்கப்பட்ட வீடாக இருக்குமென்றால் திறைமையான ஒரு திருடனுக்கு உள்ளே நுழைவதற்கான வழியுமிருக்கும். நான் இந்த வீட்டினுள் நுழைந்ததிலிருந்தும் நீங்கள் இதைப் புரிந்துகொள்ளலாம்.

வெளிநாடுகளில் வேலைபார்ப்பவர்கள் அதிகம் வாழும் பகுதிகளில் நுழைவது பாதுகாப்பானது. இப்படி, ஒரே வீட்டில் நான் மூன்று முறை நுழைந்த சம்பவமும் நிகழ்ந்திருக்கிறது. வீட்டிலிருப்பவர்கள் புகார் கொடுக்கவில்லை. ஆண்களில்லாத வீடுகளிலுள்ள பெண்கள், திருடன் நுழைந்துவிட்டானென்று புகார் கொடுக்க விரும்புவதில்லை. "ஆமா, திருடன் வர்றான்; அவதான் எவனையாவது வரச்சொல்லியிருப்பா. சும்மா கம்பியை மட்டும் வளைச்சு வெச்சுட்டு திருடன் வந்தானுட்டு நாடக மாடுறா" என்று மற்றவர்கள் சொல்லி விடுவார்கள். ஆகவே, வாய் திறக்க மாட்டார்கள். இதையெல்லாம் மனதில் வைத்தும், பக்கத்து வீட்டுக்காரன் பார்த்தால் திருடன் நுழைந்த எந்த அறிகுறிகளுமில்லாமலும் நுழைய வேண்டும். இது திருடனின் நல்ல மனதின் அடையாளம். ஒரு சேவை மனோபாவம்.

இன்றெல்லாம் மூன்று நான்கு இளைஞர்களாகச் சேர்ந்து வருகிறார்கள்; பயமுறுத்தித் திருடுகிறார்கள்; பெண்களையும் பலவிதமாகத் தொந்தரவு செய்கிறார்கள். எவ்வளவு தைரியமுள்ள திருடனாக இருந்தாலும் சரி வீட்டிலிருப்பவர்கள் பார்த்துவிட்டால் ஓடிவிடத்தான் வேண்டும். அது ஒரு மரியாதை. திருடனாகிவிட்டோம்தான். இருந்தாலும் கொஞ்சம்

மரியாதையுடனும் நடந்துகொள்ளலாமா, வேண்டாமா? கதைக்கு வருவோம்.

வீட்டினுள் காலெடுத்து வைத்ததும் திடுக்கிட்டு விட்டேன். இன்னொரு நாயின் உறுமல் சத்தம். சரி, கதை கந்தல்தான் என்று நினைத்துக்கொண்டேன். இரண்டு நாய்களின் கண்களைக் கடந்து வீட்டுக்குள் வந்தால் இங்கேயும் நாயா? இது என்ன நாய்களின் கோட்டையா? மணியன்பிள்ளையின் சகாப்தம் இங்கே முடிந்தது என்று உறுதியாக நம்பினேன். மெல்ல டார்ச் அடித்துப் பார்த்தேன். மயிரடர்ந்த ஒரு நாய். உடனே கீழே உட்கார்ந்து நெருங்கிய நண்பன்போல் பாசத்துடன் சில சமிக்ஞைகளைக் காட்டி பக்கத்தில் அழைத்தேன். ஆச்சரியம்போல் அது அருகில் வந்தது. உடலை நக்கியது. பிறகு என்னுடைய மனக்கிடக்கையை அறிந்தது போல் முன்னால் நடந்தது. கூடவே நானும் நடந்தேன். ஒவ்வொரு அறைகளாகக் கூட்டிக்கொண்டு போய் காட்டித் தந்தது. புதிதாக வீடு கட்டியவர்கள் விருந்தினர்களை அழைத்துக்கொண்டுபோய் காட்டுவதுபோல்.

ஒரு அறைக்குள் நுழைந்தேன். அய்யோ . . . அங்கே இன்னொரு நாய் முரள்கிற சத்தம். லைட் அடித்துப் பார்த்தபோது குழல்போல் நீளமான, கால்கள் குட்டையான ஒரு நாய். பரட்டை நாய்க்கும் குழல் நாய்க்குமிடையே பரஸ்பரம் சில தகவல் பரிமாற்றங்கள் நடந்தன. நான் அசையாமல் நின்றிருந்தேன். கடைசியில் குழல் நாயும் எங்களுடன் இணைந்துகொண்டது. நாய்கள் முன்னாலும் நான் பின்னாலும் நடந்துகொண்டிருந்தோம். ஒரு அறையின் முன்னால் சென்றதும் இரண்டும் நின்றுவிட்டன. பாம்பு விரலும் கட்டை விரலும் போல். இது எஜமான் - எஜமானியம்மாவின் படுக்கையறை என்பது புரிந்துவிட்டது. அறையைப் பூட்டவில்லை. எதற்காகப் பூட்ட வேண்டும். இப்படியான நான்கு நாய்களிருக்கும்போது பயப்படுவதற்கு என்ன இருக்கிறது?

திருட்டு மங்களகரமாக நடந்தேறியது. விசேஷமாக ஒன்றும் தேறவில்லை. பத்துப் பன்னிரெண்டு சவரன் நகை; சில வெளிநாட்டுச் சாதனங்கள்; எல்லாம் சேர்த்து ஒரு பன்னிரெண்டு கிலோ வரும். ஆனால், நிறைய பிரச்சினைகள் மிச்சமிருந்தன. திரும்பிப் போவது எப்படி? வந்த வழியைப் பார்த்தேன். நிறைவேற வாய்ப்பில்லை. தம் பிடித்து ஒரு விதமான பாலன்சில் இங்கே வந்துசேர்ந்திருக்கிறோம். இனி இவ்வளவு சுமையுடன் வந்த வழியாகப் போக முடியாது. முதல் அடியை எடுத்து வைக்கும்போதே கீழே விழுந்துவிடுவோம். எதுவாயினும் இந்த சாதனங்களுடன்தான் திரும்பிப் போக வேண்டும். அதில் நான்

பிடிவாதமாக இருந்தேன்.

அந்த ஏணி அங்கேயே இருந்தால் சாதனங்களை போட்டு விட்டுத் தப்பி விடவே தோன்றும். ஆகவே, நான் ஏணியை அடுத்த வீட்டில் தள்ளிவிட்டேன். இனி தப்பிக்க வேண்டுமென்றால் வாசலைத் திறந்துதானாக வேண்டும். ஏதோ ஒரு அசட்டுத் தைரியத்தில் ஏணியைத் தூக்கிப் போட்டுவிட்டேன். முட்டாள்தனமான ஒன்றைச் செய்துவிட்டோமே என்றும் தோன்றியது. வயிற்றுப் பசி வேறு. முதலில் ஏதாவது சாப்பிடுவோம். குட்டி நாய்களும் பக்கத்தில் நிற்கின்றன. ஒரு பாத்திரத்தைத் தூக்கிப் பார்த்தேன். அட . . ! என்ன வாசம் . . . அயிலை மீனை முழுவதுமாகப் போட்டு சமைத்தக் குழம்பு, சட்டி நிறைய இருந்தது. ஒன்றை எடுத்து ஒரு பிடி பிடித்தேன். முள்ளைக் கீழே போட்டேன். நாய்கள் தின்றன.

ஒரு யோசனை உதித்தது. வெளியே நிற்கிற அந்த ராட்சஷன்களை இதைக் காட்டி பொறி வைக்க முடியுமா? சரி, பார்க்கலாம். ஆனால், நம்பிக்கையில்லை. எஜமான்கள் கொடுக்கும் ஆகாரத்தை மட்டுமே இந்த நாய்கள் சாப்பிடும். சரி, முயற்சி செய்துதான் பார்ப்போமே! முன்பக்க வாசலை மெல்லத் திறந்து தலையை வெளியே நீட்டினேன். அந்த பயங்கரவாதியின் கண்கள் பளபளத்தன. இலேசாக உறுமுகிறது. 'வெளியே வந்தேன்னா, கொன்னே போடுவேன்' என்பதுபோல். கதவை மூடிவிட்டு மீனை எடுத்துக்கொண்டு வந்தேன். அதிலொன்றை வெளியே போட்டேன். ரோந்து போயிருந்த மற்றொரு நாயும் அப்போது வந்துசேர்ந்தது. இரண்டும் சேர்ந்து வாசலின் பக்கத்தில் வந்தன. மீனை முகர்ந்து பார்த்தன. ஏனோ, சாப்பிடவில்லை. சந்தேகம். மெல்ல நான் பரட்டை நாயைக் கீழே இறக்கிவிட்டேன். அது போய் மீனைக் கவ்வியது. மீன் அதன் வாயில். நான் மெல்லக் கதவைத் திறந்து என்னைக் காண்பித்தேன். நாய்களுக்கு சிறு சிந்தனைத் தடுமாற்றம். ஆள் வீட்டுக்குள் நிற்கிறான். மட்டுமல்ல, வாசனையை முகர இயலாது. மீன் வாசம். அதிகமாக அவற்றை யோசிக்க விடாமல் மீனைப் போட்டேன். 'சும்மா சாப்பிடு, பிரச்சினையொண்ணும் இல்லை, நம்ம ஆள்தான்' என்பதுபோல் பரட்டை நாய் இலேசாக முனகியது. அதிலொன்று மீனை ஒரே வாயில் லபக்கியது. நான் தைரியமாகக் கதவைத் திறந்து, ஒவ்வொரு மீனாகப் போட்டபடியே சமையலறையை நோக்கி நடந்தேன். போட்டுக் கொடுத்ததைத் தின்றபடியே நான்கு நாய்களும் என் பின்னால் வந்தன. சமையலறைக் கதவைத் திறந்து சட்டியை வெளியே எறிந்தேன். நான்கு நாய்களும் வெளியே பாய்ந்தன. அடுத்த நிமிடத்தில் நான்

பொருட்களுடன் எடுத்தேன் ஓட்டம். மதிலைத் தாண்டிக் குதித்தேன். குதித்த பிறகுதான் பிரச்சனையைப் புரிந்துகொண்டிருக்க வேண்டும். நாய்களும் பாய்ந்து வந்தன. நான் அதற்குள் மதிலின் வெளியே வந்திருந்தேன். பின்னாலிருந்து எந்தச் சத்தமுமே கேட்கவில்லை.

விஷயம் இத்துடன் முடிந்துவிடவில்லை. மற்றொரு வழக்கில் பிடிபட்டபோது கிடைத்த உதையில் இந்தத் திருட்டும் வெளிவந்துவிட்டது. நீதிமன்றத்திற்கு அந்த அமெரிக்காக்காரனும் அவரது மனைவியும் வந்தார்கள். திருட்டுப் பொருட்களை அவர்கள் அடையாளம் காட்டினார்கள். என்னை ஆச்சரியப்படுத்துவது போன்ற சம்பவங்கள் இதன் பிறகுதான் நடந்தன. அந்தத் தம்பதியர் நடந்துகொண்ட முறை இன்றும் என்னை ஆச்சரியப்படுத்துகிறது. அந்த மனிதர் என் சட்டைப் பையில் ஐநூறு ரூபாயை வைத்துவிட்டு போலீஸ்காரர்களிடம் இவரை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று சொன்னார்.

பிறகு, என்னை விலக்கி நிறுத்திக் கேட்டார்: "எங்க வீட்டுக்குள்ள ஒருபோதுமே திருடன் நுழைய முடியாதுனு நாங்க உறுதியா நம்பியிருந்தோம். நீங்க ரொம்ப திறைமையான ஆள்தான். பாராட்டுறோம். ஆனா, இரண்டு கேள்விகளுக்கு நீங்க எங்களுக்குப் பதில் சொல்லணும். ஒண்ணு: வீட்டுக்குள்ள எப்படி நுழைஞ்சீங்க? அதுக்கான எந்த அறிகுறிகளுமே தென்படலையே? ரெண்டு: அந்த நாய்களோட கண்களைத் தப்பி உள்ளே வர முடியாது. அந்த அளவுக்கு அதுக்குப் பயிற்சி கொடுத்திருக்கிறோம். அந்த நாய்களை நீங்க என்ன பண்ணுனீங்க?"

வீட்டுக்குள் நுழைந்த விதத்தை நான் விவரித்துச் சொன்னேன். அவர்கள் அதை நம்பவும் செய்தார்கள். இரண்டாவது கேள்விக்கான என்னுடைய பதில் இதுதான்: "நான் அந்த நாய்களை எதுவுமே செய்யவில்லை. பொதுவாகவே நான் மனிதர்களையோ வாயில்லா ஜீவன்களையோ தேவையில்லாம தொந்தரவு செய்யறதில்லை."

அவர்கள் இதை நம்பவே இல்லை. "பொய் சொல்றீங்க" என்று மட்டும் சொன்னார்கள்.

பிறகு வழக்கு விசாரணையின்போது மீண்டும் ஒரு தடவை அவர்களைச் சந்திக்க நேர்ந்தது. இந்த முறை நான் ஆச்சரியப்பட்டுவிட்டேன். அன்று அவர்கள் தந்ததை நாய்களைப் பற்றித் தெரிந்துகொள்வதற்கான லஞ்சமாக நினைத்தேன். இன்று எதற்காக?

அன்றும் என்னை விலக்கி நிறுத்திக் கேட்டார்கள்: "நாங்க பிள்ளைகளை விடவும் அதிகமாக அன்பு காட்டிய நாய்கள். சொல்லுங்க, நீங்க அதுக்கு என்ன கொடுத்தீங்க?"

நான் திடுக்கிட்டு விட்டேன். "இல்லை, சமையல் கட்டிலிருந்த அயிலை மீனை மட்டும்தான் கொடுத்தேன்."

அவர் சொன்னார்: "அந்த நாய்க சாப்பிட்ட கடைசி ஆகாரமே அதுதான். ரெண்டு வாரமாக அதுங்க ரெண்டும் எந்த ஆகாரமும் சாப்பிடாம அப்படியே கிடந்தது. திருட்டு நடந்த மறுநாள் காலையில நான் அந்த நாய்களை நிறையவே திட்டவும் கேலி பண்ணவும் செய்தேன். எப்படியோ பிறகு அந்த ரெண்டும் எதுவுமே சாப்பிடாம ரெண்டு வாரமாக அப்படியே கிடந்து செத்துடுச்சி."

ஆச்சரியமாக இருந்தது. நாய்கள் தற்கொலை பண்ணிக்குமா? வழக்கில் அந்த மனிதர் நீதிமன்றத்தில் வந்து சொன்னார்: "என் வீட்டில எந்தத் திருடனும் நுழையல. இந்தப் பொருட்களெல்லாம் என்னுடையவைதான். நான் இவருக்கு அன்பளிப்பாகக் கொடுத்தேன்."

வழக்கு தள்ளிவைக்கப்பட்டது. இன்றும் என்னை மிகவும் அலட்டுகிற ஒரு வழக்கு இதுதான்.

## 21 - தொண்ணூற்றாறு பவுன் இருபத்து இரண்டாயிரம் ரூபாய்

ஒருநாளிரவு பன்னிரெண்டு மணிக்கு திருவனந்தபுரத்தில் களமிறங்கி நடந்துகொண்டிருந்தேன். கிரைம் பிராஞ்ச் அலுவலகத்தைப் பார்த்தேன். இரண்டு போலீஸ்காரர்கள் காவல் நிற்கிறார்கள். திருடனுக்குள்ளிருக்கும் நிபுணன் தலை தூக்கினான். இரவு ஒன்றரை மணிவரை பொழுதைப் போக்க வேண்டும். அதற்கு இதைவிட பாதுகாப்பான இடம் இருக்கவா போகிறது? பாரா போலீசார் தூங்கி விழுகிறார்கள். இப்படியானவர்களைக் கடந்து செல்வது எளிதான காரியம். இந்தத் தூக்கத்திற்கொரு ஒழுங்கும் கிரமமுமிருக்கும். பத்து வினாடிகள் கண்கள் அடைந்து வரும். அடுத்த பத்து வினாடிக்குள் தலை தாழ்ந்து வந்து தோளில் தட்டும். உடனே, திடுக்கிட்டு விழித்துக்கொள்வார்கள். இதனிடையில் முதல் கட்டமாக மயங்க ஆரம்பிக்கிற இருபது வினாடிகளினுள் ஒரு நொடிப் பொழுதில் சத்தம் வராமல் கட்டடத்திற்குள் ஓடிவிட வேண்டும். அவர்கள் இரண்டு பேரிருந்தால் இரண்டு பேருடைய தூக்கத் தட்டுகளும் சமநிலைக்கு வருகிற சில அபூர்வ கணமொன்றில் கடந்துவிட வேண்டும். அப்படியாகக் கட்டடத்தினுள் நுழைந்தேன்.

ஐந்தாவது மாடியில்தான் கண்காணிப்பாளரின் அலுவலகமிருக்கிறது என்ற விஷயம் எல்லாம் எனக்கு ஏற்கனவே தெரியும். திருடனின் வெறுமொரு ஆர்வம் மட்டும்தான். கண்காணிப்பாளரின் இருக்கையில் கம்பீரமாக அமர்ந்தேன். ஒரு மேஜையைத் திறந்து பார்த்தேன். எஸ்பி ஐயாவின் ஐந்து சிகரெட் இருந்தது. அதிலொன்றை எடுத்துப் பற்றவைத்து ஸ்டைலாக புகைவிட்டேன். அறைக்குள் கொஞ்ச நேரம் எஸ்பியைப்போல் உலாத்தினேன். நல்ல சுவாரஸ்யமாக இருந்தது. அப்படியே நிற்கும்போது பக்கத்திலிருக்கும் சில வீடுகளைப் பார்த்தேன். அதிலொரு வீட்டில் நுழையும்போது பக்கத்து வீட்டில் தொலை பேசி மணியடித்தது. யாருமே எடுப்பதாகத் தெரியவில்லை. புரிந்துவிட்டது. ஆகவே, அங்கே நுழைந்தேன். 96 சவரன் நகையும் 22000 ரூபாயும் கிடைத்தது. தலைமறைவானேன்.

திருடன் நேரந்தவறாமையைக் கடைப்பிடிக்கவில்லையென்றால் சங்கதி சிக்கலாகிவிடும். புல்லிச்சிற எனுமிடத்தில் நடந்த சம்பவம். ஒரு பெரிய

வீடு. ஆபரேஷன் முடியும்போது சற்றுத் தாமதமாகி விட்டது. மணி மூன்றரையைக் கடந்து விட்டது. சமையலறைப் பக்கமாகத் திரும்பிப் போய்விடலாமென்று பார்க்கும்போது லைட் எரிகிறது. வேலைக்காரி எழுந்து வாசலருகில் உட்கார்ந்து தேங்காய் துருவிக் கொண்டிருக்கிறாள். என்னைப் பார்த்ததுமே அலறுவாள். கண்டுகொள்ளாமல் வாசலைத் திறந்து ஓடிவிடலாமென்றால் வழியில் காலை சஞ்சாரிகளும் பால்காரர்களும் வர ஆரம்பித்திருப்பார்கள். என்ன செய்வது? யோசித்தபடி நிற்கும்போது பக்கத்தில் ஒரு அறையில் விளக்கெரிந்தது. நான் ஒரு மூலையில் ஒதுங்கினேன். திடீரென்று ஒரு இளைஞன் நான் நிற்கும் அறைக்குள் வருகிறான். திடகாத்திரன். அறை இருட்டாக இருந்தது. அவன் என்னைக் கவனிக்கவில்லை என்பது உறுதியாகத் தெரிந்தது. ஆனால், என்னை நோக்கியே வந்துகொண்டிருக்கிறான். கஷ்டகாலத்திற்கு நான் நிற்பது சுவிட்ச் போர்டின் கீழ். அவன் லைட்டைப் போடுவதற்காக சுவிட்சை நோக்கிக் கை நீட்டினான். நான் என்னைப் பிடிக்கத்தான் முயற்சி செய்கிறானென்று நினைத்து அவனது நெஞ்சைக் குறிவைத்துப் பலமாகத் தள்ளிவிட்டு ஒரே பாய்ச்சல், வெளியே!

பாய்ந்த கால்கள் தரையில் பதிந்துகூட இருக்காது. அதற்குள் அந்த இளைஞனும் பாய்ந்து வந்து என்னை அள்ளியெடுத்து ஆலிங்கனம் செய்துகொண்டான். பிடியென்று சும்மா சொல்லக் கூடாது, உடும்புப் பிடி. நான் சில அப்பியாசங்களைச் செய்து பார்த்தேன். பிடித்தவனைக் குதறினேன். தெறித்து முன்பக்கமாக வந்தவன் திரும்பவும் அதே வேகத்தில் பின்னால் வந்து மடக்கினான். செத்தாலும் அவன் பிடியை விடமாட்டான் என்பது உறுதியாகத் தெரிந்தது. சத்தம் போடவும் ஆரம்பித்து விட்டான். இனி தப்ப முடியாது. திருட்டினிடையே நான் முதலிலும் கடைசியுமாக உபயோகித்த, காலில் கட்டி வைத்திருந்த கத்தியை எப்படியோ கைக்குக் கொண்டு வந்தேன். கை மூட்டின் கீழ்ப் பகுதியை உபயோகிக்க முடியும். பின்பக்கம் நின்றிருந்தவன்மீது, கையை உயர்த்தி உத்தேசமாக விட்ட ஒரு குத்து, அவனது நெற்றியில்போய்ப் பதிந்தது. இருந்தும் அவன் பிடியை விடவில்லை. அடுத்த குத்து எங்கே விழுந்ததென்றே தெரியவில்லை. குதறித் தள்ளினேன். இம்முறை அலறியபடியே அவன் பிடியை விட்டான். அடுத்த நொடியில் வெளியே பாய்ந்தேன்.

மறுநாள் பயங்கரமான குற்றவுணர்ச்சி தோன்றியது. பையன் உயிரோடிருக்கிறானா என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். ஊரில் மற்றொரு திருடனிருந்தான். நாங்கள் ஒன்றிரெண்டு முறை கூட்டணி

அமைத்துத் தொழில் செய்திருக்கிறோம். பிறகு வேண்டாமென்று வைத்துவிட்டேன். எதுவாயினும் திருடன் திருடன்தான்; நம்ப முடியாது. இரகசியங்களை எப்போதும் தனக்குள்ளேயே வைத்துக்கொள்ள வேண்டும். கூடஇருக்கும் பெண்களிடம்கூடச் சொல்லக் கூடாது. ஆனால், போய் விசாரித்துவிட்டு வருவதற்காக இதை அவனிடம் சொல்ல வேண்டிய தேவையிருந்தது. அவன் விசாரித்துவிட்டு வந்தான்: "பையனுக்குப் பிரச்சினை ஒண்ணும் இல்லை. ஆனால், அவன் கையிலிருந்து நீ தப்பி வந்தது உன்னோட அதிர்ஷ்டம்தான். அவன் மிஸ்டர் ஃபாத்திமா காலேஜ், தெரியுமா? மட்டுமில்ல, அவனோட மாமா கொல்லம் கிரைம் பிராஞ்ச் சர்க்கிள் வேற."

கொஞ்சநாட்களுக்குப் பிறகு வேறொரு திருடன் என்னைக் காட்டிக் கொடுத்தான். விஷயம்: பொம்பளை சமாச்சாரம். அவனுடைய பாதுகாப்பிலிருந்த ஒருத்தியின் வீட்டுக்கு நானும் போவதாக அறிந்துகொண்டான். மட்டுமல்ல, அவளுக்கு இப்போது என்மீதுதான் ஆர்வம் அதிகமாக இருந்தது. என்னுடன் நேரடியாக மோத அவனுக்குத் தைரியமில்லை. என்னைத் தவிர்த்துவிட வேண்டும். அப்படியாக அவன், அந்தப் பெண்ணுடன் கொடுக்கல் வாங்கல் செய்கிற கோபால பிள்ளை எனும் ஒரு ஹெட் கான்ஸ்டபிளிடம் போட்டுக் கொடுத்தான்: "சிஐயோட மருமகனைக் கத்தியால குத்தினானே, அது வேற யாருமில்லை, மணியன்தான் . . ."

போலீஸ்காரனுக்குப் பக்தியைக் காட்டிக்கொள்ள இதைவிட ஒரு நல்ல வாய்ப்புக் கிடைக்கவா போகிறது? ஹெட் உடனடியாகப் போய் தகவலைச் சொல்லிவிட்டார். பகை போகிற போக்கைப் பாருங்களேன். நான் திருடுவதையெல்லாம் நிறுத்திவிட்டு அப்போது கொத்த வேலைக்குப் போய்க்கொண்டிருந்தேன். கணியாபுரம் போலீஸ் ஸ்டேஷன் கட்டுமானப் பணியில் கொத்த வேலை. திருடன் காவல் நிலையம் கட்டுகிறான். போலீஸ் அங்கே வந்து என்னைத் தூக்கியது. அந்த வழக்கில் கிடைத்த உதைபோல் வேறு எங்கிருந்துமே கிடைத்ததில்லை. கிடைப்பதற்கான அருகதையுமிருந்தது. இப்படியெல்லாம் உதைத்த போலீஸ்காரர்கள் மீது எந்தப் பகையுணர்வும் தோன்றியதில்லை. திருடனுக்குப் பகையுணர்வு கிடையாது. வேறு வழியே இல்லாமல்தான் தொந்தரவு செய்கிறான். திட்டமிட்டு வளர்ந்து அபிவிருத்தியடைந்த ஒரு கொடிய குற்றவாளியல்ல திருடன். அன்றாட சுகபோகங்களுக்கு ஏதாவது கிடைக்க வேண்டும்; சாப்பாடு, திரைப்படம், மது, மாது. இவைதான் அவனது இலட்சியம். அதற்கான சின்னச் சின்ன லொடுக்கு வித்தைகள்தான் திருட்டுகள். என்

நகக்கண்ணில் ஊசியேற்றிய போலீஸ்காரர்களும் இருக்கிறார்கள்.

ஆனால், போலீஸ்காரர்களை வெட்டிக் கூறுபோடத் தோன்றிய சந்தர்ப்பங்களுமிருந்தன. ஒரு வழக்கில் சிக்கி கொல்லம் வெஸ்ட் போலீஸ் ஸ்டேஷன் கஸ்டடியிலிருக்கிறேன். இரவில், ஹெட் கான்ஸ்டபிளும் இரண்டு கான்ஸ்டபிள்களுமாக ஒரு பெண்ணைப் பிடித்துக்கொண்டு வந்தார்கள். கொல்லத்திலுள்ள ஏதோ ஒரு பாவப்பட்ட கேசு. மெலிந்து எலும்பும் தோலுமாக இருந்தாள். எந்த நிலைமையில் இந்தத் தொழிலில் இறங்கியிருப்பாளென்பது அவளைப் பார்த்தாலே தெரிந்து போகும். கையை ஊன்றித் தரையில் படுத்திருக்கும் என்னால் லாக்கப்பின் மற்றொரு இடத்தில் நடப்பதை இடைவெளியினூடே பார்க்க முடியும். மூன்று பேரும் அவளை ஒருவர் பின் ஒருவராகப் பயன்படுத்தினார்கள். முதலில் சென்ற போலீஸ்காரன் திருப்தி வராமல் மீண்டும் போனான். அந்த உயிர் கிட்டத்தட்ட செத்துப்போகும் அவஸ்தையில் கிடந்தது. அவளால் எழுந்திருக்கவும் முடியவில்லை. அதுவரை சுகம் அனுபவித்தெழுந்தவன் காலை மடித்து சுகம் தந்த இடத்தில் அடித்தான். அவள் அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்தாள்.

நீதிமன்றத்திற்குக் கொண்டுபோவதற்காக லாக்கப்பிலிருந்துத் தூக்கும்போது வறுத்த இறால் மீன்போலிருந்தது என்னுடல். கை கால் மூட்டுகள் செயல்படவில்லை. 99 நாட்கள் கஸ்டடியிலிருந்தேன். தினமொரு சோற்றுப் பொட்டலம் மட்டும்தான். பொய் சொல்லக்கூடாது. சாப்பிடுகிற நேரம் மட்டும் அவர்கள் சித்திரவதை செய்யவில்லை. அடிபட்ட இடங்களில் நீர் கோர்த்துக் கொசுக் கடித்து உடல் முழுவதுமே ரணமாகியிருந்தது. உயிரிருப்பதான எந்த அறிகுறிகளுமில்லாத நிலையிலிருந்தேன். போலீஸ்காரர்கள் ஒரு பெரிய தார் பீப்பாவைக் கொண்டு வந்தார்கள். அதில் நீர் நிறைத்து பெரிய டெட்டால் குப்பிகளைத் திறந்து ஊற்றினார்கள். இந்த டெட்டால் குப்பிகள் இவர்களுக்கு எங்கிருந்துக் கிடைத்தன? அரசாங்கம் கொடுப்பதல்ல. திருடனை உதைத்து நீரெடுத்த பிறகு போடும் டெட்டால் என்றெல்லாம் கணக்கெழுத முடியாது. இதெல்லாம் இங்குள்ள கள்ளச் சாராய முதலாளிகளும் கறுப்புப் பணக்காரன்களும் செய்கிற சேவைகள். இவர்கள் போலீஸ்காரர்களுக்கும் போலீஸ் ஸ்டேஷனுக்கும் ஏதாவது சேவைகள் செய்யக் காத்திருக்கிறார்கள். சமூகத்திலுள்ள இப்படியான மகாதிருடன்களின் பணத்தில் தான் பாவம், குட்டித் திருடன்களுக்கு டெட்டால் வாங்குகிறார்கள். ஏ . . . பிரபஞ்சமே உன் கதி இதுதானா? என்னைத் தூக்கி வைத்து டெட்டால் ஊற்றினார்கள். திரும்பத் திரும்ப ஐந்தாறு முறை

ஊற்றினார்கள். பிறகு கை கால்களை நிமிர்த்தெடுத்து நன்றாகத் துடைத்து நீதிமன்றத்துக்குக் கொண்டு போனார்கள்.

இந்தக் கதையிலுமிருக்கிறது ஒரு ஆன்டி கிளைமாக்ஸ்: வருடங்களுக்குப் பிறகு ஒரு நாள் மணி பத்துப் பதினொன்றிருக்கலாம். நான் வீட்டிலிருந்து இறங்கிப் பக்கத்திலுள்ள புத்தன் சந்தை சந்திப்பில் நின்றிருந்தேன். ஒரு டீயும் குடித்து சிகரெட்டும் பற்ற வைத்துவிட்டு அப்படியே நிற்கிறேன். மேற்கிலிருந்து ஒரு போலீஸ் ஜீப் வருகிறது. மய்யநாடு ரோட்டில் திரும்பிய ஜீப் திடீரென்று நின்று பின்னோக்கி வந்து பிரேக் போட்டு நின்றது. முன்புற இருக்கையில் உட்கார்ந்திருக்கும் ஆஜானுபாகு ஒருவர் என்னைக் கை காட்டி அழைத்தார். ஆளைக் கண்டதுமே எனக்குப் புரிந்துவிட்டது.

வேட்டி மடிப்பை அவிழ்த்துப் போட்டுவிட்டுப் பக்கத்தில் சென்றேன். "என்னைத் தெரியுதா?" அந்த மனிதர் அமைதியாகக் கேட்டார்.

"ஆமா . . ." என்றேன்.

அவர் சட்டைக் கையைச் சுருட்டி மேலே உயர்த்திக் காட்டினார். நீளமாக ஒரு தழும்பு.

"பாரு, 38 தையல்."

நான் பதில் சொல்லவில்லை.

"எம்பேரு, பாஸ்ட்டின் ஃப்ரான்சிஸ். போலீஸ்ல இருக்கேன். ஐபிஎஸ். ஆந்திரா கேடர்ல."

தலை குனிந்துக் கும்பிட்டேன்.

"பணம் ஏதாவது வேணுமா?" பாக்கெட்டில் கை விட்டார்.

வேண்டாமென்று சைகையால் சொன்னேன்.

"ஏதாவது தேவைப்பட்டால் கேட்கலாம்; எப்ப வேணும்னாலும் என்னை வந்து பாரு."

ஜீப் முன்நோக்கிப் பாய்ந்தது.

## **22 -** முதல் திருட்டு

சிறு வயதில் அப்பாவின் மரணத்தைத் தொடர்ந்து வறுமை உச்சத்துக்கு வந்தது. அப்பாவின் சகோதரி மகளுடைய -அதாவது பாட்டி வீட்டுத் திண்ணையில் போய் உட்கார்ந்து நான் பாடுவேன். கவிஞரும் நல்ல மனிதருமான, வாழத்துங்கல் ஸ்ரீதரன் நாயர்தான் பாட்டியின் மகளுடைய கணவர். வீட்டிலுள்ளவர்கள் சமையல் கட்டில் சாப்பிட்டுக்கொண்டிருப்பார்கள். நானாகவே சமையல்கட்டிற்குப் போக மாட்டேன். அது சரியில்லை. வெட்கமாகவுமிருக்கும். பாட்டுக் கேட்கும்போது அக்கா கூப்பிடுவாள். புளிசேரியும் சோறும் தருவாள். பதிலுக்கு நான் குழந்தைகளுக்கு விளையாட்டுக் காட்டுவேன். அக்கா அந்நேரம் கொஞ்சம் சமையலறை வேலைகளைச் செய்ய முடியும்.

படிப்பு ஆறாம் வகுப்போடு நின்றது. பேப்பர்களைக் கிழித்தெடுத்தும் கடன் வாங்கியும் தைத்துக் கட்டி நோட்டுப் புத்தகங்களாக்கி கொஞ்சநாட்கள் போனேன். எல்லாப் பாடத்தையும் ஒரே நோட்டில்தான் எழுதுவேன். நான்தான் கிளாஸ் லீடர். வாத்தியார் இல்லாத நேரங்களில் வகுப்பில் பேசுபவர்களின் பெயர்களை எழுதி வைத்து வாத்தியார் வந்ததும் ஒப்படைத்து அடி வாங்கிக் கொடுப்பதுதான் லீடரின் வேலை. நோட்டுப் புத்தகங்களும் பாடநூல்களும் இல்லாததால் லீடரை ஒருநாள் பெஞ்சின்மீது ஏறி நிற்க வைத்தார் வாத்தியார். பிள்ளைகளெல்லாம் சிரித்தார்கள். இடைவேளை நேரத்தில் சிலர் கேலி செய்தார்கள். அதிலொருவனுக்கு ஒன்று கொடுத்தேன். பிறகு பள்ளிக்கூடத்துக்கே போகவில்லை.

அப்பா திருமண வீடுகளில்போய் கச்சேரி நடத்துவார். எனக்கும் ஓரளவிலான குரல் வளமிருந்தது. நான் மிக அழகாக படம் வரைவேன் என்று டிராயிங் சார் சொல்வார். எல்லாமே இல்லாமலாகி விட்டதில் வருத்தமிருந்தது. பிறகு மனம் போகிற போக்கில் திரிந்தேன். மற்ற நண்பர்கள் பள்ளிக்கூடத்திற்குப் போவதைப் பார்க்கும்போது வருத்தமாக இருக்கும். படிக்கப் போகாத பையன்களுமிருந்தார்கள். நமக்குத் தோதுவான நண்பர்கள் இவர்கள்தான். அவர்களுடன் திரிந்தேன். அவர்களின் பொழுது போக்கு, சீட்டு விளையாடுவது. பதிமூன்று

வயதான நானும் அவர்களுடன் சீட்டு விளையாடினேன். அன்று பிரபலமாக இருந்த அனார்கலி சீட்டைப் பார்த்தாலே ஆவேசம் உருவாகிற அளவுக்கு சீட்டு விளையாட்டில் போதை ஏற்பட்டிருந்தது. காசு வைத்துதான் விளையாட்டு நடக்கும்; ஒரு காசு. பெரிய விளையாட்டும் நடக்கும்; ஐந்து காசுகள். அதில் சேர்ந்து விளையாடுவதில் தான் ஆர்வம் அதிகம். கிடைத்தால் நிறைய கிடைக்கும். ஆனால், நான் எப்போது விளையாடினாலும் சரி, தோல்விதான் மிஞ்சும். அபூர்வமாக ஒன்றோ இரண்டோ கிடைக்கும். பிறகு தோற்க ஆரம்பித்துவிடுவேன். தோற்றுக்கொண்டே இருப்பேன். அழுகையாக வரும். விளையாட்டுத் தோழர்கள் எங்கள் வீடுகளில் வேலை பார்க்கும் புலையர் மற்றும் குறவர்களின் பிள்ளைகள்தான். எங்கள் வீட்டின் கீழ்ப் பகுதி முழுவதுமே வயற்காடு. அதில் உட்கார்ந்துதான் சீட்டு விளையாடுவோம். குறவர் பிள்ளைகளுடன் தோற்பதால் அவமானம் இரட்டிப்பாகி விடும். நன்றாக விளையாடுவதற்காக எப்படியாவது கொஞ்சம் காசு பார்த்துவிட வேண்டு மென்பதுதான் நோக்கமாக இருந்தது.

அப்படியிருக்கும்போது நான் அக்காவின் குழந்தைக்கு விளையாட்டுக் காட்டிக்கொண்டிருப்பதை அத்தை உறவிலுள்ள ஒரு பெண் பார்த்தாள். அவளிடம் ஒரு நாள் சீட்டு விளையாடுவதற்காக பத்துக் காசு கடன் கேட்டேன். அவள் ஐந்து காசு தந்துவிட்டுச் சொன்னாள்: "அந்தக் குழந்தையோட இடுப்பில கிடக்குற அரைஞாணை எடுத்துட்டு வா. உனக்கு அஞ்சு ரூபா தர்றேன்."

ஐந்து ரூபாயா . . ? அதிர்ந்துபோய் நின்றேன். அதிக நாட்களிலும் இருக்கிற காசு தீர்ந்ததும் விளையாடுகிற இடத்திலிருந்து அவமானத்துடன் எழுந்து போவதுதான் வழக்கம். ஐந்து ரூபாய். இரண்டு நாட்கள் இரவுவரை உட்கார்ந்து விளையாடுவதற்கான பணம். இதையெல்லாம் நான் அவளிடம் சொல்லவில்லை.

மறுநாள் குழந்தையை எடுக்கச் செல்லும்போது மனப் பதற்றத்துடன்தான் சென்றேன். மற்ற நாட்களில் இப்படி இருந்ததில்லை. பெயரளவில் பழைய கஞ்சியைக் குடித்தேன். பிறகு, வழக்கம்போல் குழந்தையைக் கையிலெடுத்தேன். முந்திரித் தோப்பிலெல்லாம் கொண்டுபோய் விளையாட்டுக் காட்டினேன். இதனிடையே சுற்றிலும் கவனித்தேன். ஆள் சஞ்சாரமெதுமில்லை. குழந்தையின் நிக்கரைத் தாழ்த்தி இடுப்பில் கிடந்த அரைஞாணைக் கழற்றியெடுத்தேன். குழந்தையைத் திரும்பக் கொண்டுபோய் ஒப்படைத்துவிட்டு நேராக அத்தை வீட்டுக்கு ஓடினேன்.

பாக்கெட்டிலிருந்து அரைஞாணை எடுத்து அத்தையிடம் கொடுத்தேன். அவள் பயந்துவிட்டாள். ஏதோ ஒரு பேச்சுக்காக அப்படிச் சொல்லிவிட்டாளே தவிர அதை வாங்கிக்கொள்கிற தைரியம் அவளுக்கில்லை: "அய்யய்யோ, நீ அதை கழற்றிட்டே வந்திட்டியா?" என்று பதறிப்போனாள்.

"நீங்கதானே அத்தை கழற்றச் சொன்னீங்க?"

"நானா? நான் அப்படி உங்கிட்ட சொல்லவே இல்லை."

இனி அங்கே நிற்பது சரியில்லை. இதை எப்படியாவது மறைத்தே ஆக வேண்டும். வீட்டில் சாணித்தரைதான். ஒரு சிறு குழி தோண்டி, அதில் வைத்து மூடினேன். நேராகச் சீட்டு விளையாட்டு நடக்குமிடத்திற்குச் சென்றேன். காசில்லை. பார்த்துக்கொண்டு நிற்க மட்டும்தான் முடியும்.

"விளையாடலையா, மணியா?"

புலையர் பையன்கள் கூப்பிடுகிறார்கள்.

"இல்லை."

"ஏன் காசில்லையா?" அவர்கள் சிரித்தார்கள்.

அப்படி நிற்கும்போது தூரத்தில் ஸ்ரீதரன் அண்ணன் வந்துகொண்டிருந்தார். என் வீடிருக்கும் திசையிலிருந்து வந்துகொண்டிருந்தார். வீட்டில் போய் விசாரித்து வருகிறார் என்பது நிச்சயம். புதைத்துவிட்ட இடத்தைக் கண்டுபிடித்து விட்டாரோ என்னமோ? கண்டுபிடித்திருப்பார். அதுதான் இவ்வளவு வேகமாக வந்துகொண்டிருக்கிறார். நான் ஓட்டம் பிடித்தேன். அண்ணன் விரட்டிக்கொண்டு வந்தார். கொஞ்ச நேரத்தில் தளர்ந்து போனேன். என்னைப் பிடித்துக்கொண்டுபோய் வீட்டுத் திண்ணையில் தூணில் கட்டி வைத்துவிட்டு, கத்தியை எடுத்தார். தாழ்ந்து நின்றிருந்த ஒரு தென்னவோலையை வெட்டி, அதிலிருந்த ஈர்க்கிலை செதுக்கித் தள்ளிவிட்டு அதை வைத்து நிறைய அடித்தார். ஈர்க்கிலால் அடித்தால் அதிலுள்ள பிசிறுகள் படுமிடத்தில் தோலுரியும். இருந்தபிறகும் நான் அந்த அத்தையின் பெயரைச் சொல்லவில்லை. அவளை நம்ப முடியாது. ஒப்புக்கொள்ள மாட்டாள். இதுதான் என்னுடைய முதல் திருட்டு. திருந்துபவனாக இருந்தால் இந்த அடியிலேயே திருந்தியிருப்பேன்.

ஆடு ஆன்றணி: அறுபதுகளின் இறுதியில் எங்களூரில் ஆடு ஆன்றணியெனும் ஒரு திருடனிருந்தான். பொதுவாகவே, திருடன்கள் இரவில்தான் திருடுவார்களென்றால் ஆடு, இப்படியான இரவுபகல் பேதம் பார்ப்பதில்லை. காலையிலேயே புறப்பட்டு விடுவான். மேய விட்ட ஆட்டைப்போல் இப்படியே அலைந்து திரிவதால் போலீஸ்காரர்கள் அவனுக்கு ஆடு என்று பெயர் சூட்டினார்கள். ஆடு, கருநாகப்பள்ளி, சின்னக்கடை, பரவூர், வர்க்கலையென்று அலைந்து திரியும். ஆபத்தான திருடனல்ல. அன்றாடம் வயிற்றுக்கு ஏதாவது கிடைக்க வேண்டும். என்னைப் போல் டார்கெட் எதுவும் கிடையாது.

ஒருநாள் என் மாமாவின் ரேஷன்கடை பக்கத்தில் நின்றிருந்தேன். எங்கள் குடும்பத்தைச் சீரழித்தக் கூட்டத்திலுள்ள முக்கியமான ஆள் இவர். நான் முதல் தடவையாக ஜெயிலுக்குப் போய்விட்டு வந்த நாட்கள் அவை. வயது, பத்தொன்பது, இருபதிருக்கும். அப்போது ஆடு மேய்ந்தபடியே வந்துகொண்டிருந்தது. நான் கேட்டேன்:

"டேய், *அச்சாயா, எங்கே போறே?" சப்-ஜெயிலில் உருவான நட்பு.

"ஏற்கனவே நான் நாறிப்போய் கிடக்குறேன். இங்கே எங்கியாவது எதையும் பண்ணி வெச்சுடாதே . . . நேரா போயிடு."

ஆடு சொன்னது: "சும்மாதான் நடந்துட்டிருக்கேன். வேலையொண்ணும் ஒத்து வரலை. பசியில வயிறு வேற எரியுது."

நான் சொன்னேன்: "இங்கயும் அதுதான் நிலைமை."

"இங்கே உனக்கு நிறைய தெரிஞ்சவங்க இருப்பாங்களே, இந்த வாட்சை வெச்சு ஒரு இருபத்தைஞ்சு ரூபா வாங்கித் தருவியா? அப்புறமா திருப்பிடறேன்."

நான் ரேஷன்கடையில் ஏறி மாமாவிடம் கேட்டேன். அவர் அப்போது பணத்தை எண்ணிக்கொண்டிருந்தார். அவர் சொன்னார்: "ஆமா, நான் தந்து நீ இப்ப வாங்குவே."

நான் சொன்னேன்: "அடகுப் பொருளுக்குத்தானே?"

"இறங்கிப்போடா, கடையிலிருந்து . . ." அவர் ஒருகிலோ படிக்கல்லைத் தூக்கி எறிந்தார்.

நான் சொன்னேன்: "சரி, கவனிச்சிக்கிடறேன்."

அன்றிரவு சுற்றித் திரிந்து சின்னக்கடைக்கு வந்தேன். எஸ்எம்பி பாலசில், சிவாஜி கணேசன் நடித்த 'எங்கள் தங்க ராஜா' இரவுக்காட்சி பார்த்துவிட்டு ரயில்வே ரோடு வழியாக நடந்தேன். ஒரு சிறு உளியை ஏற்கனவே தயாராக வைத்திருந்தேன். போளயத்தோடு தாண்டியதும் நல்ல மழை. நனைந்தபடியே நடந்துகொண்டிருந்தேன். காலையில்பட்ட அவமானம் நினைவுக்கு வந்தது. எங்களுக்குப் பிச்சைக்காசைத் தந்து சொத்தையெல்லாம் அபகரித்தெடுத்தவனுக்கு இவ்வளவு அகம்பாவமா? சரி

நேராக மாமாவின் வீட்டில் நுழைந்தேன். சொந்தக்காரரல்லவா? வீட்டின் உட்பகுதிகளெல்லாம் எனக்கு நன்றாகவே தெரியும். சொந்த ஊரில் நடத்திய முதலும் கடைசியுமான திருட்டு அதுதான். அத்தையின் இரண்டு வளையல்கள், ஒரு ரோலக்ஸ் வாட்சு, ஒரு செயின், இரண்டு மோதிரங்கள். அத்தை கழற்றி வைத்திருந்த ஆபரணங்கள். அலமாரியிலிருந்த பணத்தையும் முடிந்தவரைக்கும் அள்ளிக் கட்டினேன். நேராக வீட்டிற்கு வந்தேன். அப்போதும் மழை பெய்துகொண்டிருந்தது. நான் படுப்பது இலவம்பஞ்சு மெத்தையில். ஒரே மகனல்லவா? மகன் சுகமாகப் படுத்துத் தூங்குவதற்காக அம்மா செய்து தந்தது. அட்டையைப் பிடித்து கட்டிலில் கிடத்தி எதற்கு? நான் மெத்தையை உயர்த்தி வேட்டி மடிப்பிலிருந்து பணத்தைச் சொரிந்து தட்டினேன். மெத்தையைத் திரும்பவும் விரித்துப் படுத்துக்கொண்டேன். காலையில் எழுந்துபோய் ஒரு பைண்ட் ஹெர்குலிஸ் ரம் வாங்கி வயலில் போய் உட்கார்ந்துக் குடித்துவிட்டு அப்படியே படுத்துத் தூங்கினேன். ஊர் திமிலோகப் பட்டுக்கொண்டிருந்தது. என்மீதும் சந்தேகம் உருவானது.

அம்மா பார்க்கும்போது மெத்தை நனைந்து கிடக்கிறது. "அடியே அவன் மழையில் நனைஞ்சிட்டு வந்து படுத்துத் தூங்கியிருப்பான். மெத்தையை எடுத்து வெயில்லே போடு."

இரண்டு சகோதரிகளுமாகச் சேர்ந்து மெத்தையைத் தூக்கினார்கள். ரூபாய் நோட்டுகளின் அபிஷேகம். எல்லாமே சின்னச் சின்ன நோட்டுகள். ரேஷன்கடை பணமல்லவா? ஏழைகளின் வேர்வையில் உருவான பணம்.

அம்மாவைக் கூப்பிட்டுக் காட்டினார்கள். அம்மா தலைச் சுற்றிக் கீழே விழுந்துவிட்டாள். சகோதரிகள் கூப்பாடு போட்டார்கள். அம்மாவுக்கு ஏற்கனவே பயமிருந்தது. காலையில் கேள்விப்பட்ட தகவல் இப்போது

உறுதியாகி விட்டது.

நான் அப்போது வீட்டுக்குள் வந்தேன்.

"அய்யோ . . ." என்று அம்மா மெத்தையை உயர்த்திக்காட்டி ஒரே அழுகை.

தினச்செலவுக்கும் காசில்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் நாட்கள். நான் சொன்னேன்: "இதிலிருந்து கொஞ்சம் ரூபாயை எடுத்துக் கொண்டுபோய் நல்ல மீன் வாங்கிட்டு வா. கொஞ்சம் அரிசியும் வாங்கிடு. நாமளும் அனுபவிக்க வேண்டிய பணம்தான் இது . . ."

"சீ . . ." அம்மா சத்தம்போட்டாள்.

பிறகு என்னை பள்ளியெழுப்பிக் கொண்டு போவதற்காக போலீஸ் படை சீக்கிரமாகவே வந்துசேர்ந்தது. ஊருக்குள் நடத்திய முதல் திருட்டு மட்டுமல்ல, திருடிய பணத்தை வீட்டுக்குள் மறைத்து வைக்கும் வேலையும் இந்தச் சம்பவத்துடன் நின்றது.

மானஸ்தர்கள்: சமூகத்தில் கறுப்புப்புள்ளி விழாத நிறைய உன்னதர்களின், மானஸ்தர்களின் முகமூடியில்லாத முகங்களைத் திருடன்களால் பார்க்க முடியும். திருடனைப் பயன்படுத்திக் காரியம் சாதிப்பவர்களும் இருக்கிறார்கள். திருடன்கள் பொதுவாகத் தங்களுக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களைக் கண்டுகொள்ள மாட்டார்கள். திருட்டு நடக்கும்போதான சூழ்நிலைகள் அவர்களுக்கு முக்கியமில்லை. அதனால்தான் அவன் செய்த திருட்டுகளைத் தவிர பிற அனுபவங்கள் வெளிவருவதில்லை. ஒவ்வொரு இரவிலும் ஒவ்வொரு எரிமலையைச் சுமந்துகொண்டுதான் திருடன் திரும்பி வருகிறான். அதை அவன் மனதிற்குள் வைத்தே உடைத்தெறிகிறான். லாவா உருகிய இடத்திலேயே உறைந்துவிடுவதுபோல். அதையெல்லாம் வெளியே சொன்னால் சமூகத்தின் பல பகுதிகளும் சிதறித் தெறிக்கும். அவன் சாகும்போது வெளியே சொல்லாத நிறைய உண்மைகள் மிச்சமிருக்கும். அதையெல்லாம் சொல்வதன் மூலம் அவனுடைய இமேஜுக்கு நல்லதாகவோ கெட்டதாகவோ எந்தப் பாதிப்பும் நிகழப் போவதில்லை. ஆகவே, இதன் நோக்கம் வெளிப்படையாகச் சொல்வது மட்டும்தான்.

குறுக்கு வழிகளைத் தேடியதன் பலனாகத் துயரம் கவிந்த மனமும் சித்திரவதைகள் ஏற்ற உடலும்தான் எனக்கு மிச்சம். வக்கிரமான

அறிவுள்ளவர்கள் வேறு வழிகளில் பணம் சம்பாதிக்கிறார்கள். திருடன் நேரடியாகத் திருடுவதன் மூலம் தனது அறியாமையைக் காட்டுகிறான். இருட்டில் வீட்டுக்குள் நுழைந்து பணத்தைத் திருடிக்கொண்டு ஓடும் முட்டாள்தனம் அறியாமைதானே? இதன் பலன்?

ஒருவேளை யேசுநாதர் மட்டும்தான் திருடனை விட அதிகமான சித்திரவதைகளை அனுபவித்திருப்பார். இவ்வளவு சித்திரவதைகளை அனுபவிக்க நேர்ந்தவன் ஒன்று, மகாத்மாவாக அல்லது திருடனாக இருப்பான். ஆகவேதான் யேசுவின் இருபுறங்களிலும் இரண்டு திருடர்கள் சிலுவையில் அறையப்பட்டிருந்தார்கள். தீமைக் குவியல்களின் இடையிலிருந்து சத்தமாகச் சொல்கிறேன்: வயிற்றுக்கு இல்லாதவனிடமிருந்து ஒருபோதும் நான் திருடியது கிடையாது. அப்படியான யாரையுமே நான் தொந்தரவு செய்ததில்லை. நான் அனுபவித்த சுகபோகங்களின் மிச்சத்தை எதுவுமில்லாதவர்களுக்கு பங்கிட்டுக் கொடுத்து உதவியிருக்கிறேன்.

பணம் திருட்டுப் போனவர்களுக்கு வருத்தமிருக்கும். அது, டாட்டாவாக இருந்தாலும் சரி. 'ஒரு பெரிய வியாபாரம் தொடங்கத் திட்டமிட்டிருந்தேன். ஏற்கனவே பணமுடை. அப்ப பாத்து பாழாப்போன இந்த மணியன் பிள்ளை . . .' என்று டாட்டா சொல்வார். எவ்வளவுதான் பணம் சேர்ந்தாலும் மனிதனுக்குத் தேவைகள் அதிகரித்துக்கொண்டேதான் இருக்கும். இதையெல்லாம் யோசித்துக்கொண்டிருந்தால் திருட முடியாது.

தீமைகளினிடையே சில நன்மைகளையும் என்னால் செய்ய முடிந்தது என்பதுதான் இப்போது நினைத்துப்பார்க்கும்போது கிடைக்கிற ஒரே ஆறுதல். அம்மாவுக்கோ சகோதரிகளுக்கோ எதையும் நான் கொடுத்ததில்லை. அவர்கள் வாங்கவில்லை. ஆனால், இப்படியான பணத்தில் ஊருக்குள் இன்றும் சிலர் மகிழ்ச்சியுடன் வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். இயலாத நிலைமையில் பல குடும்பங்கள் விஷம் குடித்துச் செத்திருக்க வேண்டியது. விஷம் வாங்கித் தயாராக வைத்துவிட்டு வந்து என்னிடம் சொன்ன தாய் - தகப்பன்கள் இருக்கிறார்கள். இன்று ஒரு இரவு மட்டும் பொறுத்துக்கொள்ளுங்கள் என்று சொல்லிவிட்டுப் பொன்னையும் பொருளையும் கொண்டுபோய்க் கொடுத்திருக்கிறேன்.

"டேய் மணியா, தெரியாத்தனமாக வாக்குக் கொடுத்திட்டேண்டா, இத்தனை பவுன் நகைக்கு எங்கடா போவேன் நான் . . ? எல்லா விஷயங்களும் உனக்கும் தெரியுமே . . . அவ உன்னோட

சகோதரிபோலதானேடா . . ." என்றெல்லாம் சொல்வார்கள். "சரி பாக்கலாம்" என்று சொல்லிவிட்டுப் புறப்படுவேன். இதில், ஒரு முஸ்லிம் குடும்பம் மட்டும்தான் இன்றும் என்னைப் பார்க்கும்போது "டேய் மணியா, சாப்பிட்டுப் போடா" என்று சொல்வார்கள். மற்றவர்களெல்லாம் கௌரவமானவர்களாக மாறிவிட்டார்கள். அவர்களுக்கு இன்று என்னைப் பார்ப்பதுகூட அவமானமான விஷயமாக மாறிவிட்டது. பட்டினி கிடக்க நேர்ந்தபோதும் நாம் கொடுத்திருக்கிறோமே என்ற உரிமையில் அவர்கள் வீட்டுத் திண்ணையில் போய் எதையேனும் கேட்டு நான் நின்றதில்லை. என்னதான் சித்திரவதையை அனுபவித்தபோதும் போலீஸ்காரர்கள் உருட்டி எடுத்த போதும் யாரையும் இதுவரை காட்டிக்கொடுத்ததும் இல்லை. மணியன்பிள்ளையிடம் இழப்பதற்கென்று எதுவுமில்லை.

"மொத்தம் நாற்பது பவுன் நகையில இருபத்தஞ்சு பவுன் நகை எங்கேன்னு சொல்லிட்டே, மிச்சம் பதினஞ்சு பவுனை எங்க கொடுத்தே சொல்லு" என்பது போன்ற கேள்விகளுக்கு நான் பதில் சொல்லாமல் இருந்ததால்தான் மிக அதிகமான சித்திரவதைகளை அனுபவித்தேன்.

"என்னை நீங்க கொன்னாலும் சரி, நான் அதைச் சொல்லவே மாட்டேன் சார்" என்று சொல்லிவிடுவேன். பாவம், இன்று அது, வந்த இடமறியாத ஏதாவதொரு பெண்ணின் கழுத்திலும் காதிலும் ஆபரணங்களாகத் தொங்கும். பொருளாதார ரீதியாக இடிந்துபோய் வெறும் கவுரவத்தை மட்டுமே கை வசம் வைத்திருந்த ஒரு குடும்பத்தை சாவிலிருந்து மீட்டெடுத்த ஒரு பொருள் அது. இதைச் சொல்லி அந்தக் குடும்பத்தை, அந்தப் பெண்ணை அவமானத்தீயில் எறியும் வேலையை மணியன்பிள்ளை ஒருபோதும் செய்ததில்லை.

ஒருதடவை இதுபோல், ஒன்பது பவுன் நகைக்கான கணக்கை விழுங்கிவிட்டேன். பொதுவாகவே, பிடிபட்டதும் நான் உண்மைகளைச் சொல்லிவிடுவேன். ஆனால், இதை நான் விலைக்கு விற்கவில்லை. ஊரிலுள்ள ஒரு ஏழைக் குடும்பத்துக்குக் கொடுத்திருந்தேன். அவர்கள் இப்போது மகிழ்ச்சியுடன் கஞ்சியையாவது குடித்து வாழ்ந்து வருகிறார்கள். இதையும் இல்லையென்று ஆக்குவதற்கு உயிர் இருக்கும்வரை நான் சம்மதிக்க மாட்டேன். தெரிந்த போலீஸ்காரர்கள் என்பதால் பிறகு இதைக் கேட்டுத் தொந்தரவு செய்யவில்லை. ஆனால், இந்த ஒன்பது பவுன் நகை சம்பந்தமாக ஒரு உயர் போலீஸ் அதிகாரி இதைச் சொல்லாமல் நீ வெளியே போக முடியாது என்று சொல்லிவிட்டார். தாங்க முடியாத அடியும் உதையும். கடைசியில் சொன்னேன்:

"ஒரு குடும்பம் தற்கொலை செய்ய மணியன்பிள்ளை காரணமாக இருக்கிறதை விடவும் செத்துடறது நல்லது." என்று சொல்லி லாக்கப் கம்பியில் தலையை முட்ட ஆரம்பித்தேன். மண்டை உடைந்து இரத்தம் வந்தது. மூன்றாவது முட்டில் தலையில் பலத்தக் காயம். முகம் முழுவதும் இரத்தம். போலீஸ் அதிகாரிக்கு நடுக்கம் ஏற்பட்டுவிட்டது. திடமும் வீரமுமுள்ள போலீஸ்காரர்கள் யாரும் இப்படி அடிக்க மாட்டார்கள். கேட்பாரில்லாத ஒருவனை இப்படியெல்லாம் சித்திரவதை செய்பவர்கள் தன்னம்பிக்கை அற்றவர்கள்; கோழைகள். ஆகவேதான் இந்த போலீஸ் அதிகாரிக்கு நடுக்கம் ஏற்பட்டது.

கொடுமைக்காரர்களாகிய போலீஸ்காரர்களுக்கு அமைதியாக வாழ்ந்துகொண்டிருக்கும் ஏழைகளின் வாழ்க்கையில் இடிபோல் வந்து விழுவது பெருமையான, மிகவும் பிடித்தமான விஷயம். அதிகாரப்பூர்வமான பேரிடி. இதன்மூலம், அவர்கள் மனதிற்குள் ஏதோ மகிழ்ச்சியை அனுபவிக்கிறார்கள்.

இதுபோன்ற மோசமான அடிஉதைகளை அனுபவிக்க நேரும்போது எனக்குக் கறுத்த அந்தர் நினைவுக்கு வருவான். சென்ட்ரல் ஜெயிலில் வைத்து அறிமுகமான இந்தப் பெருந் திருடன்தான் என்னுடைய தாங்கும் சக்திக்கான ஞானகுரு. ஒருதடவை, திருடிய பொருள் எங்கே என்று அறிந்துகொள்வதற்காக, போலீஸ் கற்ற அத்தனை அடவுகளையும் பிரயோகித்துப் பார்த்தது. அந்தர் முடிவாகச் சொல்லிவிட்டான்: "எல்லாமே இவ்வளவுதான். இனி எங்கிட்டே இருந்து நீங்க எதையுமே அறிய முடியாது."

"அறிய முடியுமான்னு நாங்களும்தான் பாக்கறமே" என்றது போலீஸ். அந்தரை முழுநிர்வாணமாக்கி மறைவுப் பிரதேசங்களைச் சேர்த்து வைத்துத் துணியால் சுற்றினார்கள். சுற்றிச் சுற்றி, அனுமாரின் வால்போலாக்கினார்கள். அதில் எண்ணெய் நனைத்து தீ வைத்தார்கள். நான் பக்கத்தில் நிற்கிறேன். அடுத்தது நீ என்கிறார்கள் போலீஸ்காரர்கள். தொழிலின் தொடக்கக் காலம். நான் நடுக்கத்துடன் நின்றுகொண்டிருக்கிறேன். அந்தர் அசையவே இல்லை. அவன் துணி சுற்றப்பட்ட தன்னுடைய குறியைப் பார்த்துச் சொல்கிறான்: "சரிடா பையா, உங்கூட தானே விளையாடுறாங்க. அதனால நீயே பதில் சொல்லு." அந்தருக்கு எந்தப் பதற்றமுமில்லை. அடி வயிற்றில் தீக்காயம் பட்டதும் அவர்களே வந்து அணைத்துவிட்டார்கள். அதுதான் அவனுடைய மனத்திடம்.

அடியும் உதையும் அதிகமாகும்போது நான் அந்தரை மனதில் தியானிப்பேன். பிறகு இந்த சரீரம் என்னுடையதல்ல. அதை யார் என்ன செய்தாலும் மனம் சஞ்சலமடைவதில்லை. அடி அனைத்தும் உடல் கூட்டுக்குத்தான். இந்த அளவுக்குச் சித்திரவதை அனுபவித்ததில் அடைந்த லாபம் என்னவென்று கேட்டால், எதுவுமில்லைதான். ஆனால், சில பெண்கள் கணவனும் பிள்ளைகளுமாகப் போவதைப் பார்க்கும்போது மனதுக்குத் திருப்தியாக இருக்கும்.

உடல் நகைப்புக்குரியது: நான் வெள்ளந்தியாகச் சிரிக்கும்போது தெரிகிற இந்தப் பற்களும் பொய். என்னுடையதை போலீஸ்காரர்கள் அடித்துப் பிடுங்கி விட்டார்கள். காலிலுள்ள தசைத் திரட்சிக்கும் என் உடம்புக்கும் எந்தவித சம்பந்தமும் கிடையாது. பல்வேறு தடவை உருட்டியதில் விட்டு விலகியது. சரி, அடிபடாத ஏதாவது பகுதியிருக்கிறதா என்று கேட்டுப் பாருங்கள். காற்றடைத்த என்னுடைய பை சொல்லும் இல்லையென்று.

உருட்டல் என்பது மகத்தான ஒரு கர்மம். கேரள போலீசுக்கே உரியதோர் செய்வினை. இன்றும் அவர்கள் இதில் அதீத ஆர்வலர்கள்தான்.

அது எப்படியென்றால், பாதங்களின் இரண்டு பெருவிரல்களையும் சேர்த்துப் பிணைப்பார்கள். நீத்தார் கர்மங்களை நிறைவேற்றுவதுபோல். "இந்த கர்மத்தினை நாங்கள் செய்து முடிக்கும்போது நீ மரணத்துடன் அண்மித்து விடுகிறாய்" என்பதற்கான குறியீடு. சேர்த்துப் பிணைக்கப்படும் போது இரு கால்களும் ஒரு காலாக வசதியாக மாறிவிடுகிறது. பிறகு, அந்தக் காலைப் பக்கத்திலிருக்கும் தூணிலோ ஜன்னல் கம்பியிலோ கட்டுவார்கள். மூட்டின்கீழ் ஒரு துணி வைப்பார்கள். இதைப் பார்க்கும்போது கனிவோடு செய்கிற பணிபோல் தோன்றும். உண்மையில், உருட்டுவதற்குத் தோதுவாக அவர்கள் வசதி செய்துகொள்கிறார்கள்.

பிறகு, ஒன்றரையடி அகலமுள்ள ஒரு பெஞ்சில் நிர்வாணமாக நிமிர்ந்துப் படுக்க வைப்பார்கள். பிறகு, பெஞ்சின் கீழ்ப் பகுதியினூடே கைகளைச் சேர்த்து வைத்து விலங்கு மாட்டுவார்கள். அலறாமலிருப்பதற்காக, உருவியெடுத்த அண்டர் வேரை வாயில் திணிப்பார்கள். இனி, நம்மால் அசைக்க முடிகிற ஒரே அவயம் தலை மட்டும்தான். வலியில் தலையைத் தூக்கி அடித்துக்கொள்ளாமலிருக்க ஒரு போலீஸ்காரன் தலையை அழுத்திப் பிடித்துக்கொள்வான்.

பிறகு, சதைப் பகுதியில் கம்பால் அடிப்பார்கள். அப்போது சதைத்

திரட்சிகள் புடைத்துக்கொண்டு வரும். பிறகு உருட்டுவதற்கான தடியை எடுப்பார்கள். நாங்கள் இதை 'கோபால கிருஷ்ணன்' என்று சொல்வோம். புடைத்துத் தெரியும் திரட்சிகளில் அடித்தோ குத்தியோ பள்ளங்களை உருவாக்குவார்கள். பிறகு, தடியை வைத்து உருட்டி பள்ளங்களை நிரப்புவார்கள். எலும்புக்கும் தசைக்குமான உறவுகள் இத்துடன் முடிவுக்கு வந்துவிடும். மாமிசம் கூழாகிக் கீழ்ப்பகுதியில் தொங்கும்.

மறுநாள் உடைந்த மாமிசத் திரட்சியில் வேதனையுடன் நீர் கோர்த்து நிற்கும். விசாரணை தொடரும். சிதைந்துபோன சதையில் அடித்தபடியே விசாரணை செய்வார்கள். இதிலும் திருப்திவராதவர்கள் திரும்பவும் சிதைந்த சதையின்மீது உருட்ட ஆரம்பிப்பார்கள். கரும்புச் சக்கையை ஐந்தாறு தடவைச் சுருட்டிச் சுருட்டி இயந்திரத்தினுள் திணித்தும் திருப்தி வராத சில கரும்புச்சாறு வியாபாரிகளைத் திருவிழாக் கூட்டங்களில் பார்த்திருப்பீர்கள். இப்படி எத்தனை தடவை மாமிசச் சக்கையின்மீது உருட்டினால் கர்மம் பூர்த்தியாகும் என்பதைப் போலீஸ்காரர்களே முடிவு செய்வார்கள். இதெல்லாம் அவரவர் குரூரத்தைப் பொறுத்த விஷயம். பிறகு லாக்கப்பில் தள்ளுவார்கள்.

இந்த நிலைமையில் காலில் ஒரு கொசு வந்து உட்கார்ந்தால் கூட வலிக்கும். நடக்க முடியாது. உள்ளங்காலில் அடித்ததால் இரத்தம் நீலம் பாரித்துக் கிடக்கும். இதற்காக விசாரணையை முடித்துக்கொள்ளவா முடியும்? இன்னும் ஏதாவது மொந்தையோ பானையோ திருடியதாக ஒப்புக்கொண்டால் எவ்வளவு பெரிய சாதனை? மறுநாள் விசாரணை அறைக்கு இழுத்துக்கொண்டு போவார்கள்.

பிறகு, "சொல்லுடா மணியா . . . அன்னைக்கு ராத்திரி நேரத்தில நீ எங்க இருந்தே? சரி, அப்புறம் வேற எங்கெல்லாம் நுழைஞ்சே . . ?" என்று கேட்பார்கள். உயரதிகாரி செயரில் வீற்றிருப்பார். நான், பூட்சணிந்த அவரது காலடியில், தரையில் குற்றுயிரும் கொலை உயிருமாக! அவர் மெதுவாகக் காலைத் தூக்கிச் சிதைந்த பகுதியை மிதித்து நசுக்குவார். தன்னையறியாமல் சிறுநீர் பிரிந்துகொண்டிருக்கும். அதிகாரியின் கால் வலிக்கும்போது ஒரு கெட்ட வார்த்தைச் சொல்லிவிட்டு அவனை இன்னும் ஒரு தடவைப் படுக்கப்போடுங்க என்பார். திரும்பவும் உருட்டல்.

இந்தக் கர்மங்கள், திருடியதையெல்லாம் ஒப்புக்கொண்டாலும் இல்லையென்றாலும் தொடரும். சொன்னால், இன்னும் இருக்கும் என்ற நினைப்பு. எவ்வளவுதான் சொன்னாலும் திருப்தி ஏற்படாது. எனவே,

அனுபவமுள்ள ஒரு திருடன் முடிந்த வரைக்கும் குறைத்துச் சொல்வதையே விரும்புவான். பதிலுக்கு, கிடைப்பதையெல்லாம் மொத்தமாக வாங்கிக்கொள்வான். ஒப்புக்கொண்டாலும் கொள்ளாமலிருந்தாலும் விசாரணையின் முடிவில் மிச்சமிருப்பது பழந்துணி மூட்டை போல் பிய்ந்து போன திருடனின் உடல்தான். செய்த தவறுக்குத் தண்டனையை அனுபவிப்பதாகக் கேள்விப்பட்டிருப்பீர்களே? ஒரு பிறவியில் செய்த தவறுகளுக்கான தண்டனையை அதே பிறவியில் அனுபவித்துத் தீர்க்கும் ஜென்மம் திருடன் மட்டும்தான்.

திருடனின் அனுபவ முதிர்ச்சிக்கேற்பக் கிடைக்கும் அடி உதையின் அளவு சற்றுக் குறையும். திருடனுக்குத் தெரியும். போலீஸ்காரர்களுக்குத் தேவை வழக்குதான். ஆகவே, மூன்றோ நான்கோ திருட்டுகளை முதலிலேயே அவன் ஒப்புக்கொண்டு விடுவான். இதில் திருப்தியேற்படாதபோதுதான் மேற்சொன்ன கர்மங்கள். ஒரு கட்டத்தில் பரஸ்பரப் புரிதல்கள் உருவாகிவிடும். போலீசாரிடம் மணியன்பிள்ளையின் குணாதிசயங்களைப் பற்றிய குறிப்புகளில் இருக்கும்: உதைத்தால் பிடிவாதம் அதிகமாகி விடும். பிறகு, எதைக் கொடுத்தாலும் சரி அவனிடமிருந்து எந்த வார்த்தையும் பெயராது. அன்பாகக் கேட்டால் முடிந்தவரைக்கும் ஒத்துழைப்பான்.

உண்மையைச் சொன்னாலும் சரி, பொய்யைச் சொன்னாலும் சரி திருடனுக்கு உதையின் கோலாகலம்தான்.

# 23 - இரவுகள்

திருடனின் இரவுகள் ஒருபோதும் பாதுகாப்பானவையாக இருக்க முடியாது. ரோந்துச் சுற்றுகிற, கொல்லம் ஈஸ்ட் ஸ்டேஷனிலுள்ள எந்த போலீஸ்காரன் நினைத்தாலும் என்னை வீட்டில் வந்து தூக்க முடியும். காரணம் தேவையில்லை. கொண்டுபோய் உள்ளே போடுவார்கள். வழக்குகளின் எண்ணிக்கையை அதிகரிப்பதற்கான ஒரு கருவிதான் திருடன். ஆகவே, எல்லாவற்றையும் மறந்து நிம்மதியாகப் படுத்துத் தூங்கவேண்டுமென்று தோன்றினால் பெரும்பாலும் நான் மயானங்களுக்குப் போய்விடுவேன். கொல்லத்தில் போளயத் தோட்டிலுள்ள நகர்மன்ற மயானத்தைதான் மனதுக்குப் பிடித்த இடமாகத் தேர்வு செய்திருந்தேன். வீட்டிலிருந்து ரயில்வே ரோடு வழியாக நடந்தால் மூன்று மூன்றரை கிலோ மீட்டர் தூரம்தானிருக்கும். மனிதர்களைத் தவிர எனக்குப் பேய் பிசாசுகளிடம் பயமில்லையென்பதால் பிரச்சினைகளில்லை. நாய்களைத் தவிர வேறு தொந்தரவிருக்காது. நம்மைப்போல் இவனுமொரு அனாதையென்று அவை கருதியிருக்கும். பரஸ்பரம் சண்டை போட்டுக்கொண்டிருக்கும் நாய்க் கூட்டத்தினூடே மயானத்தை நோக்கி நான் பல தடவை நடந்திருக்கிறேன். மரத்துப்போன மனத்துடன் அவற்றினிடையே படுத்துத் தூங்கியுமிருக்கிறேன். நாய் கடித்துதான் சாக வேண்டுமென்றிருந்தால் அப்படியே நடக்கட்டும். எதையுமே நம்மால் தடுக்க முடியாது. அப்படிச் சாக வேண்டியவனல்ல நான். ஆகவே, நாய்கள் அதன் போக்கில் போய்விடும். மயானத்தில் பிரச்சனைகள் வராமலுமில்லை. ஆனால், திருடன்களையோ விலைமாதர்களையோ சமூக விரோதிகளையோ நான் அங்கே பார்த்ததில்லை. அதற்கான தைரியம் அவர்களிடமும் இல்லாமலிருக்கலாம்.

வழக்கம்போல் ஒருநாள் இரவுக்காட்சி சினிமா பார்த்துவிட்டு போளயத்தோட்டிலுள்ள சுடுகாடு ஜங்ஷனில் வந்ததும் கொஞ்சம் படுத்துத் தூங்க வேண்டும் போலிருந்தது. வேலையாட்களுக்கு ஓய்வெடுப்பதற்காகக் கடல்மண் இறக்கி வைக்கப்பட்டிருந்தது. வாட்ச்மேன் உட்கார்ந்திருக்கும் இடம். நான் அவரைப் பார்த்ததில்லை. அவரது அறையில் நுழைந்து உட்கார்ந்திருக்கிறேன். அதொரு

கவர்ச்சியான உத்தியோகமில்லை என்றாலும் நல்ல உத்தியோகம்தான். மயானக் காவலாளி. கோடீஸ்வரன்கள், துப்புக்கெட்டவர்கள் என அனைவரும் வந்து சேருமிடம். அவனது கட்டைக்குத் தீ வைக்குமிடம். இவ்வளவு புனிதமான இடம் வேறில்லை. மயானங்கள் நந்தவனங்களாக வேண்டும். எரியூட்டப்படுகிற இடம் இவ்வளவு அசுத்தமாக இருக்கவே கூடாது. நகரிலுள்ள குப்பைக்கூளங்கள் குன்றுபோல் குவிந்து கிடந்தன. ஆன்மாவின்மீது நம்பிக்கை கொண்ட தேசத்தில் அது கவுரவமாகவும் அமைதியாகவும் வாழ வேண்டிய சூழல் அமைய வேண்டாமா?

சடலங்களின் நாற்றமிருக்காதா? இருக்கும்தான். சின்னதாக ஒரு குழி தோண்டி அதற்குள்தான் எரிப்பதற்கான விறகுகளைப் போட்டு வைப்பார்கள். கொஞ்சம் விறகுகள்தானிருக்கும். சில சடலங்கள் அவ்வளவு எளிதில் எரிந்தடங்கி விடுவதில்லை. பகுதி எரிந்த சடலங்களை உறவினர்கள் அகன்றதும் தோண்டியெடுத்துப் புதைத்து விடுவார்கள். நாய்கள் அதைத் தோண்டக் கூடும். இல்லையென்றால் தினமும் ஏன் இப்படிச் சுடுகாட்டில் நாய்களின் திருவிழாக் கூட்டம்? எரித்த சடலங்களுக்கும் புதைத்த சடலங்களுக்கும் இடையில் நான் மதில் தாண்டிக் குதிப்பேன். மட்டுமல்ல, யார், யாரை எந்த இடத்தில் புதைத்தார்கள் என்பதற்கான தடயம் என்ன இருக்கிறது? நம்முடைய வீடுகள், நாம் படுத்துத் தூங்குகிற பார்க்குகள் எல்லாமே இதைவிடவும் பெரிய மயானங்களாக இருந்திருக்கவும் வாய்ப்பிருக்கிறது. எத்தனையெத்தனைச் சடலங்கள் புழுத்து விழுந்த பூமியில் நாம் பூஜைகளும் புனஸ்காரங்களும் செய்கிறோம்.

காவலாளி மணல் போட்டு நிரப்பிய இடத்தில் நான் மல்லாந்துப் படுத்திருந்தேன். அன்று ஏனோ தூக்கம் வரவில்லை. நன்றாக தூக்கம் வந்ததால்தான் இங்கே வந்து படுத்தேன். பிரபஞ்சத்தின் ஒவ்வொரு அணுவுக்கும் அதற்கான விதிகளிருக்கும். அதன்படி நான் படுத்திருப்பதற்கும் தூக்கம் வராமலிருப்பதற்கும் ஏதாவது காரணங்களிருக்கும்.

இப்படி யோசித்துக்கொண்டிருக்கும்போது இரண்டுபேர் மதிலைத் தாண்டி வந்து இந்தப் பக்கம் விழுந்தார்கள். நான் சட்டென்று எழுந்து ஒரு அரசியல் தலைவரைப் புதைத்த ஸ்தூபியின் பின்னால் ஒளிந்துகொண்டேன். விழுந்தவர்கள் எழுந்து சூழலை அவதானிப்பவர்கள்போல் மிகுந்தப் பதற்றத்துடன் சுற்றுமுற்றும் பார்த்தார்கள். அதிலொருவன் சிவப்புப் பட்டு உடுத்திருந்தான். உடல் முழுவதும் ருத்திராட்சம் போன்ற மாலைகள். துர்மந்திரவாதியென்பது

முகத்தைப் பார்த்ததுமே தெரிந்துவிட்டது. பையிலிருந்து ஒரு மண்டை ஓட்டை எடுத்து நீளமாக ஏதோ மந்திரம் ஜெபித்தான். பிசாசுகள் கூடாமல் இருப்பதற்கான மந்திரமாக இருக்கலாம். நான் மனதிற்குள் நினைத்துக்கொண்டேன்: இப்படிப்பட்டவர்களைத்தான் விரட்டியடிக்க வேண்டும். நிம்மதியாகப் படுத்துத் தூங்க நினைப்பவர்களுக்கு இவர்களால் பெருந்தொல்லை. மனதுக்குள் நான் மந்திரவாதிக்கு சவால் விடுத்தேன். இதோ மணியன்பிள்ளை பிசாசு. உன்னால் முடிந்தால் ஜெபம் செய்து விரட்டு பார்க்கலாம். நான் மெல்லப் பதுங்கியபடியே ஒரு கல் கிடைக்குமா என்று அங்குமிங்கும் கைகளால் துளாவினேன். எலும்பின் ஒரு மூட்டுப் பகுதி கிடைத்தது. நல்லதுதான். குறிபார்த்து ஒரு எறி வைத்தேன். நான் எதிர்பார்க்கவே இல்லை. விதி இங்கும் விளையாடி விட்டது. குறி தவறி விட்டது. அவன் கையில் வைத்து ஜெபித்துக்கொண்டிருந்த தலைஓடு பட்டென்று கீழே விழுந்தது. கூட நின்றவன் அய்யோ என்று அலறினான். ஆனால், மந்திரவாதி விடவில்லை. இரண்டு நிமிடம் அங்கேயே நின்றிருந்தான். அவனுக்குத் தெரியாதா என்ன? பேயாவது, பிசாசாவது? இந்த நம்பிக்கைதானே, என்னிடம் வாதையிருக்கிறது, குட்டிச்சாத்தானிருக்கிறான், மாடனிருக்கிறான் என்றெல்லாம் சொல்லி மற்றவர்களைப் பயமுறுத்த வைக்கிறது. அவன் பையிலிருந்து ஏதோ ஒரு பொருளை உருவினான். மதிலின் பக்கத்தில் நிற்பதால் தெரு விளக்கின் வெளிச்சம் அதில் இலேசாகப் பதிந்தது. ஒரு சுழல்வாள். பளபளத்தது. பிசாசைப் பிடிக்க சுழல்வாளா? ஏதாவது மந்திரமோ தந்திரமோ போதாதா? ஆள் பரவாயில்லை போலிருக்கிறதே! எதிரிகளுக்கான ஒரு எச்சரிக்கை என்பதுபோல்தான் அவன் வாளைக் காட்டுகிறான். நீ பிசாசில்லையென்ற விஷயம் எனக்குத் தெரியும்டா என்பது போல். பிறகு அதைச் சுருட்டிப் பைக்குள் வைத்துவிட்டு மதிலேறிக் குதித்தான். தொலைவிலெங்கோ ஒரு கார் ஸ்டார்ட்டாகும் சத்தம் கேட்டது.

எனக்குத் தூக்கம் வந்தது. தூரத்தில் எரிந்து தீராத ஏதோ ஒரு சிதையின் கனல். தரையிலிருந்து கிளர்ந்து சூனிய வெளியில் தொங்கும் பச்சை நிற வெளிச்சம். அந்த வெளிச்சத்தைப் பார்த்து முன்பொரு தடவை நான் பயந்ததுண்டு. போய்ப் பார்த்தேன். அது சும்மா அப்படியே மின்மினிப் பூச்சிபோல் எரிந்துகொண்டிருக்கும். பிறகு அணைந்து விடும். நமக்குத் தெரியாத ஏதோ அற்புதமென்றுதான் கருதினேன் பிறகு பலரிடம் இதைப் பற்றி விசாரித்தேன். எரிந்துகொண்டிருக்கும் எலும்புகளில் இருக்கும் பாஸ்பரசின் அம்சம் சூனிய வெளியில் ஒன்றுசேரும்போது பச்சை நிறத்தில் ஜொலிக்குமாம். இதைப் பார்த்து எத்தனை பேர் பயந்து

செத்திருக்கிறான்களோ? இப்படிப் பயந்து செத்தவனின் உடம்பிலிருந்தும் பாஸ்பரஸ் எழுந்து பச்சை ஒளியாக நின்றிருக்கும். இதைப் பார்த்து இன்னொருவன் பயந்திருப்பான். நினைத்துப் பார்த்தால் சிரிக்கத்தான் தோன்றுகிறது. செத்தால் செத்ததுதான். அதற்கு மேல் ஒன்றுமில்லை. சடலத்தைப் பார்த்துப் பயப்படத் தேவையில்லை. அப்படியே பயப்படுவதாக இருந்தால் எல்லா ஜடப் பொருளுக்கும் பயப்பட வேண்டும். ஒரு பெஞ்சைப் பார்த்து; டெஸ்கைப் பார்த்து; புத்தகத்தைப் பார்த்து என்று எல்லாவற்றிற்கும் பயப்படவேண்டும். பயத்தைத் தோற்றுவிப்பது மனம்தான்.

நான் சடலத்தை மிதித்திருக்கிறேன். காக்கோட்டு மூலையிலிருந்து மய்ய நாட்டுக்கு நடக்கும்போது கிடைத்த முதல் அனுபவம். ஆள் சஞ்சாரமற்ற பகுதி. இரவு சஞ்சாரத்துக்கென்று நான் எப்போதுமே ரயில்வே ரோட்டைத்தான் தேர்ந்தெடுப்பேன். இதில் பல்வேறு அனுகூலங்களுள்ளன. ரயில்வே ரோட்டில் போலீஸ் ரோந்திருக்காது. இதுவரையிலான என்னுடைய வாழ்க்கையில் நான் ஒரு போலீஸ்காரனையும் ரயில்வே ரோட்டில் வைத்துப் பார்த்ததில்லை. ஆக மொத்தத்தில் எதிர்கொள்ள வேண்டியவர்கள் ஷெட்டுகளில் காவலிருக்கும் பாவப்பட்ட ரயில்வே ஊழியர்கள் மட்டும்தான். இவர்கள் இரவு பத்துமணிக்குள் ஷெட்டுகளை அடைத்து மூடிவிட்டு உள்ளே அமர்ந்து விடுவார்கள். அல்லது தூங்கிவிடுவார்கள். அப்போதெல்லாம் இரவு வண்டிகள் மிகவும் குறைவு. பத்து மணிக்குப் பிறகு அதிகாலை நான்கரைக்குத்தான் அடுத்த வண்டி. ரயில் காலஅட்டவணைகளை திருடன் என்ற நிலையில் ஒருவன் அறிந்திருக்க வேண்டும். நேரம் மட்டுமல்ல, இரவுகளைப் பற்றியும் அண்டசராசரங்களைப் பற்றியும். தைரியமான சில காவல்காரர்களுமிருந்தார்கள். நேரங்கெட்ட நேரத்தில் என்னைக் கண்டதும் கேட்பார்கள்:

"எங்கடா போயிட்டிருக்கே . . ?"

பலமாதிரியான பதில்களைச் சொல்லியிருக்கிறேன். திருடன்தானே . . ?

"எங்கயோ போறேன். குறிப்பாக ஒரு இடம் கிடையாது."

"சரி, போ . . . போ . . . இங்க எங்கயாவது பிரச்சனை பண்ணிடாதே என்ன . . ."

சில நேரங்களில் கேட்பார்கள்: "எங்கடா போறே . . ?"

"சாகப்போறேன்." பிறகு நிசப்தம்.

"இனி வண்டியெதுவுமில்லை. வீட்டுக்குப் போயி நல்லா தூங்கியெழும்பு. எல்லாக் கோபமும் தீந்திடும். வீட்டுக்குப் போ . . ."

காதில் வாங்கிக்கொள்ளாமல் நான் நடந்துகொண்டே இருப்பேன்.

***

ரயிலில் பயணம் செய்த தூரத்தை விடவும் தண்டவாளம் வழியாக நான் அதிக தூரம் நடந்திருப்பேன். இதற்கு ரயில்வே நிர்வாகத்திற்குக் காசு கொடுக்க வேண்டியதில்லை. ஓரிரு தடவைகள் தவிர ரயிலில் நான் டிக்கெட் எடுக்காமல் பயணம் செய்ததில்லை. திருடப்போனதும் பரோலிலிருந்து தலைமறைவானதுமெல்லாம் ரயிலில்தான். கோட்டயம், செங்கோட்டை, கோழிக்கோடு என்று எந்த ஊருக்கும் டிக்கெட் எடுக்காமல் போனதே கிடையாது. நீங்களெல்லாம் டிக்கெட் எடுக்கவில்லையென்று யார் அழுதார்கள் என்று கேட்பவர்களுக்கான பதில்: சமூக விரோதிதான். இருந்தாலும் கிடைக்கிற சந்தர்ப்பங்களிலாவது சட்டத்தை ஒழுகி நடக்க வேண்டாமா? ஒருவன் கவிஞனாகி விட்டான் என்பதற்காக சதா காலமும் கவிதை எழுதிக்கொண்டேவா திரிய முடியும்? கவிஞனாக இருப்பதைவிட அதிக நேரமும் அவன் சாதாரண மனிதன்தானே? திருடனும் இப்படித்தான்.

2005இல் நடந்த ஒரு நிகழ்ச்சி. 1995இல் ஜெயிலிலிருந்து வந்த பிறகான பத்து வருட காலமிது. பட்டினியின் மதில்மீது வாழ்க்கை நகர்ந்துகொண்டிருந்தது. கிழட்டுச் சிங்கத்தை வெட்கம் கெட்ட கழுதைப் புலிகள் அடித்துக் கொல்லுமாம். வறுமையும் அதுபோல்தான். கொல்லம் ரயில்வே ஸ்டேஷனில் உட்கார்ந்திருக்கிறேன். அறிமுகமான சிலர் என்னைக் கடந்து போய்க்கொண்டிருக்கிறார்கள். திருவனந்தபுரத்திற்குப் போக பதினான்கு ரூபாய் தேவைப்படுகிறது. எந்த வழியுமில்லை. யாரிடமும் எதையேனும் கேட்டு வாங்க இன்றுகூட அவமானமாகத்தான் இருக்கிறது. கேட்காமல்தான் எடுப்பேன். என்னுள் ரயில்வேயின் குழாய்நீர் ததும்பிக் கொண்டிருந்தது. நீராகாரம் மட்டும் அருந்தியே ஒரு மாதம்வரை வாழ முடியுமென்ற விஞ்ஞான உண்மைதான் இதன் அடிப்படை. நான் ஐந்து நாட்களாக ஸ்டேஷன் வேலைக்குப் போகவில்லை. இனி என்ன செய்வது? சாகும்வரை வாழ்ந்துவிட வேண்டியதுதான். முன்பொரு தடவை தற்கொலைக்கு முயன்று அவமானப்பட்டதுதான் மிச்சம். எதிரில் தண்டவாளமிருக்கிறது. கொஞ்சம்

நடந்துபோய் குதித்துவிட்டால் போதும். பயமில்லை. இருந்தாலும், முடியவில்லை.

திருவனந்தபுரத்திற்குச் செல்கிற ஷட்டில் டிரெயின். எதுவுமாகட்டுமென்று ஏறி உட்கார்ந்தேன். என்னுடைய 55 வருட கால வாழ்க்கையில் இதுவரையிலும் எந்த டிடிஆரும் வந்து என்னிடம் டிக்கெட் கேட்டதில்லை. ஒன்றிரெண்டு முறை வந்தபோதுகூட ஏனோ தெரியாது என்னிடம் கேட்கவில்லை. அந்தத் தைரியம்தான் மனதில். ஆனால், தயக்கமாக இருந்தது. பயந்துகொண்டிருந்தேன். ஆனால், பிரச்சினை எதுவுமில்லை. யாரும் வரவில்லை. வண்டி முரிக்கும் புழயைத் தாண்டியது. திடீரென்று கோட்டு போடாமல் ஐடி கார்டை மட்டும் சட்டையில் குத்திக்கொண்டு வந்த ஒரு ஆள் டிக்கெட் கேட்டார். என் நெஞ்சில் மின்சார ஈட்டி பாய்ந்தது.

மனதிற்குள் அழுதபடியே சொன்னேன்:

"டிக்கெட் எடுக்கல."

"சரி, இருநூறு ரூபாய் அபராதம் கட்டு."

"கையில பதிமூணு ரூபா இல்லாமதான் டிக்கெட் எடுக்கல."

"அப்படின்னா ஜெயிலுக்குப் போயிட வேண்டியதுதான்."

நான் சரியென்பதுபோல் தலையசைத்தேன்.

"வேளாவேளைக்குச் சாப்பாடாவது கிடைக்கும்."

"அவ்வளவு திமிராடா?" டிடிஆர் சொன்னார்: "ஒரு பதினாலு நாள் ஜெயில்ல கிடந்தா படிச்சுக்குவே. ஜெயிலுன்னா இவனுங்களுக்கு ஏதோ சொர்க்கம்னு நினைப்பு . . ."

மற்றொரு சந்தர்ப்பமாக இருந்தால் சிரித்திருப்பேன். ஜெயில் வாழ்க்கையைக் கற்றுக்கொடுக்க வந்திருக்கிறார். ஆனால், இப்போது எனக்குக் கோபம் வந்தது.

நான் சொன்னேன்: "சரி, காசில்லை. நீங்க மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கலாம். அதை விட்டுட்டு சும்மா வாடா, போடான்னு கூப்பிடுற வேலையெல்லாம் வெச்சுக்க வேண்டாம்."

"ஓகோ . . . அப்ப உன்னை உள்ள தள்ளிட வேண்டியதுதான்." டிடிஆருக்குக் கோபம். வழக்கமாக எல்லாரும் காலில் விழுவார்கள். சுற்றிலுமிருப்பவர்கள் வேடிக்கையை ரசித்துக்கொண்டிருக்கிறார்கள். ஷூவும் பான்டும் அணிந்த ஒருவர் திடீரென்று: "எக்ஸ்க்யூஸ் மி . . . நான் காசு தர்றேன்." என்றார்.

நான் சொன்னேன்: "உதவிக்கு நன்றி."

டிடிஆர், உங்களைப்போலுள்ள ஆட்கள்தான் இவங்களை நாசமாக்குறீங்க என்று சொல்லிவிட்டு காசை வாங்காமல் நடந்தார். அவர் அந்தப் பக்கம் நகர்ந்திருக்க மாட்டார். காசு தருவதாகச் சொன்ன மனிதர் தன்னுடைய மலைப் பிரசங்கத்தைத் தொடங்கினார்:

"உங்களுக்குத் தெரியுமா? மும்பையில நான் எட்டு நாள் பட்டினியாவே கிடந்திருக்கேன். இன்னைக்கு எனக்குச் சொந்தமாக அங்கே ரெண்டு பிளாட்டிருக்கு . . ."

நான் மனதிற்குள் சொல்லிக்கொண்டேன்: "எட்டு நாள் பட்டினிக்கு எட்டு பிளாட் சொந்தம்னு சொல்லியிருந்தா ஒரு பொருத்தமாவது இருந்திருக்கும்."

அவர் தொடர்ந்தார்: "பொதுவாகவே நாம ஏழ்மையைப் பழகக் கத்துக்கறோம். போராடுறதுக்கான கெப்பாசிட்டி நம்மாட்கள்கிட்ட இல்லேங்குறதுதான் இதிலிருந்து தெரிய வருது."

அந்தக் காலமாக இருந்திருந்தால் இவனைப் பின்தொடர்ந்துபோய் வீட்டைக் கண்டுபிடித்து ஒரு ஆபரேசன் நடத்தியிருப்பேன். இப்படியான சவடால் பேர்வழிகளுக்கு வாழ்க்கையில் சில அடிகள் கிடைத்தாக வேண்டும்.

பத்துப் பதினான்கு நாட்கள் வேளாவேளைக்குச் சாப்பிடுகிற பொன்னான வாய்ப்பை இல்லாமலாக்கிவிட்டு பிரசங்கம் செய்கிறான் துஷ்டன்! நான் சாய்ந்தமர்ந்தேன். கண்களில் இருட்டு படர்ந்துகொண்டிருந்தது. வண்டி, தம்பானூருக்கு வந்துசேர்ந்ததும் யாரோ எழுப்பினார்கள். பெரும்பாலான பயணிகளும் இறங்கிவிட்டார்கள். மற்றவனைக் காணோமே! பேசிப் பேசியே உயிரை விட்டுட்டானோ?

## **24 -** மீண்டும் கள்ள டிரெயின்

ஒரு மாதத்திற்குப் பிறகு வறுமையின் உச்சக் கட்டத்தில் மீண்டுமொரு தடவை டிக்கெட்டில்லாமல் ரயிலேறினேன். இம்முறை மிகுந்த தைரியத்துடன்தான் ஏறினேன். பத்து நாள் ஜெயிலில் கிடந்தால் அதுவரைக்கும் சந்தோசம். சரியாக இந்த முறையும் டிடிஆர் வந்தார். கூடவே இரண்டு ரயில்வே போலீசாரும்.

"டிக்கெட்."

"இல்லை." எந்தத் தயக்கமுமில்லாமல் சொன்னேன்.

"இல்லையா . . ? எழுந்துரு."

அது நியாயம். எழுந்தேன்.

"ஃபைன் வெச்சுருக்கிறியா?"

"இல்லை."

"பிறகு . . ?"

"தேவையில்லாம எதுக்குப் பேசிட்டிருக்கணும், வாங்க ஜெயிலுக்குப் போவோம்."

கேபினிலிருந்தவர்கள் சிரித்துவிட்டார்கள்.

"திமிர்த்தனமான பேச்சு" என்றார் டிடிஆர்.

"இல்லை, கதிகெட்டவனோட பேச்சு." என்றேன்.

"உன் பேரென்ன?" போலீஸ்காரர்கள் டயரியுடன் வந்தார்கள்.

நான் சொன்னேன்: "மணியன்பிள்ளை."

"ஐடி கார்டிருக்கா?"

கைவசமிருந்த, பெந்தகொஸ்தே சகோவுக்குப் படிக்கும் கார்டை எடுத்துக் கொடுத்தேன்.

"ஃபைன் கட்ட வரும்போது தர்றோம். தம்பானூர் போலீஸ் ஸ்டேஷனுக்கு வா."

சிக்கலாகிவிட்டது. பலாப்பழம் விழுந்து முயல் சாகுமென்று நினைத்தேன். முயலும் சாகவில்லை. கையிலிருந்த கத்தியும் பறிபோய்விட்டது.

மற்றொரு வேடிக்கை! ஒரு நாள் கொல்லத்தில் வந்திறங்கும்போது சுமார் முப்பது பேர்கள் பத்துப் பதினைந்து போலீஸ்காரர்கள் புடைசூழ நடந்துகொண்டிருந்தார்கள். செக்கிங் ஸ்குவாடு. இவர்களுக்கும் நான் தேவையில்லை. பயந்துபோய் நிற்பவர்கள் போதும். நான் பொறாமையுடன் பார்த்தேன். கேரளத்தின் சிறைச்சாலைகளில் ஒரு கைதிக்குத் தினப்படிச் செலவு 33 ரூபாய். பத்து நாட்களுக்கு 330 ரூபாய். கூடவே, இலவச மருத்துவ பரிசோதனையும் இன்னபிற வசதிகளும். சற்று முயற்சி செய்து பார்த்தால் காரியம் கை கூடும். 13 ரூபாய்க்காக அரசாங்கம் 330 ரூபாய் செலவு செய்கிறது. நஷ்ட வியாபாரம். இருந்தாலும் மானஸ்தர்களைப் பயமுறுத்த வேண்டுமல்லவா?

ரயிலிலிருக்கும்போது வெளியே இருந்து வீசும் காற்றுத் தடையேதுமில்லாமல், வறண்ட காலப் பாரதப்புழைபோல் வற்றிக் கிடக்கும் அடி வயிற்றுக்குள் போய்க்கொண்டிருந்தது.

தண்டவாளம்: நடுச்சாம நேரம். தண்டவாளத்தினூடே நான் களவுத் தொழில் புரிவதற்கான வீட்டையும் இடத்தையும் தேர்வு செய்ய நடந்துகொண்டிருந்தேன். சில இரவு நேரங்களில் தண்டவாளங்களில் மூன்றோ நான்கோ பேர்களாகச் சேர்ந்து ஏதாவது வேலைசெய்துகொண்டிருப்பார்கள். அப்போது சற்றுப் பதுங்கி, ஏதேனும் புதருக்குள் மறைந்துகொள்வேன். அல்லது திரும்பிப்போய் விடுவேன். மனிதர்கள் கூட்டுசேரும்போது ஆபத்தானவர்களாக மாறிவிடுகிறார்கள். இதிலொரு வேடிக்கை என்னவென்றால் தன்மீது அவனுக்கு நம்பிக்கைக் கிடையாது. கூட நிற்பவன் பெரிய தைரியசாலி என்று பரஸ்பரம் நம்புகிறார்கள். யாருக்கேனும் ஒன்று கிடைத்ததும் மற்றவர்கள் ஓடி விடுவதற்கான காரணமே இதுதான்.

தண்டவாளத்தில் அன்றெல்லாம் மர ஸ்லீப்பர்தான். இப்போதுதான் கான்கிரீட் ஸ்லீப்பர். சிலாப்புகள் இப்போது நெருக்கமாகவும் சற்று உயரமாக உருண்டுமிருக்கின்றன. நடக்கும்போது அவ்வளவு சுகமாக இருக்காது. முன்பெல்லாம் குதித்துக் குதித்து நடக்கும்போது சுவாரஸ்யமாக இருக்கும். காலைத் தூக்கி வைத்ததுமே இலேசாக இடறியது. எதையோ மிதித்துவிட்டேன் போலிருக்கிறது. உதறிவிட்டு அடுத்த காலைத் தூக்கி வைத்தபோதும் இடறியது. தீக்குச்சியை உரசி எரிய வைத்துப் பார்க்கும்போது செத்த உடலின் சதைப் பகுதி. சரி, நாயோ பூனையோ செத்துக் கிடக்கிறது என்றுதான் முதலில் நினைத்தேன். பிறகுதான் தெரிந்தது. பத்து மணி வண்டி அடித்துப் போட்டுவிட்டுப் போயிருக்கிறது. எனக்கு அப்போது செத்துப் போனவனின் தலைவிதிதான் நினைவில் வந்தது. இவனுடைய உடல் இப்படிச் சின்னாபின்னமாகச் சிதறிப்போகுமென்று மட்டுமல்ல, ஒரு திருடனின் காலில் மிதிபடுமென்கிற அளவுக்குக் கோரமாக இருந்திருக்கிறது. இல்லையென்றால், விதி என்னை இங்கே கொண்டுவந்து சேர்த்து, நான் அந்தச் சடலத்தை மிதிக்க வேறு என்ன காரணமிருக்க முடியும்? இந்நேரத்தில் நான் இங்கு வர வேண்டிய தேவை என்ன? காலத்தின் கருதலை இதைவிட அழுத்தமாகச் சொல்ல வேண்டிய மற்றொரு பயங்கர அனுபவம்:

அன்று ரயில்வே ட்ராக்கின் அருகில் சைக்கிள் போகும் பாதையிருந்தது. கொல்லத்திலிருந்து திருவனந்தபுரம் சாக்கை வரை இப்படிப் போக முடியும். அறுபது கிலோமீட்டர் தூரம். பகல் முழுவதும் ஷாப்பில் உட்கார்ந்து குடித்துவிட்டு இரவான தும் பெஞ்சிலோ அக்கம் பக்கங்களிலோ கால் கைகளைப் பரப்பிப் போட்டுத் தூங்குவேன். பத்து மணிக்குக் கடையை மூடும்போது யாராவது எழுப்பி விடுவார்கள். காலையிலேயே சைக்கிளை வாடகைக்கு எடுத்திருப்பேன். 24 மணி நேரத்திற்கு இத்தனை ரூபாயென்று கணக்கு. இரவில் சாக்கைவரை சைக்கிள் மிதிப்பது நல்ல பொழுதுபோக்காக இருந்தது. ஒரே இரவுக்குள் அங்கிருந்து நடந்தும் வந்திருக்கிறேன். ரயில்வே ரோடு அந்த அளவு மனதுக்கு மகிழ்ச்சியூட்டுவதாக இருந்தது.

ஏற்கனவே சொன்னதைத் தவிர வேறு பல அனுகூலங்களும் இதிலிருந்தன. ரயில்வேயில் இரண்டு திசைகள் மட்டுமே இருப்பதால் திசையறிவிருக்கும். வழி தவறாது. வாட்சு இருந்தாலும் இல்லையென்றாலும் இரவில் எனக்கு மிகச் சரியாக நேரம் தெரியும். சூழ்நிலையைக் கிரகித்தால் போதும். கால மாற்றத்திற்கேற்ப

நட்சத்திரங்களின் நகர்தல் நிகழ்ந்துகொண்டிருக்கும். 12 மணிக்குப் பிறகு தென்படும் நட்சத்திரங்களை எனக்கு நன்றாகத் தெரியும். இரவு அதிகரிக்கும் தோறும் அதன் தோற்றம் சிதறுவதுபோல் தோன்றும். இரவு அஸ்தமிக்கப் போகும் அங்கலாய்ப்புபோல். 12 மணிக்குப் பிறகு புதிதாக உதிக்கும் நட்சத்திரங்கள் குறைவாகவே இருக்கும். சில நேரங்களில் சூனியவெளியைக் கண்ணசையாமல் பார்த்துக்கொண்டிருந்தால் சூழல் பிரமைக்குள்ளாகும். இதெல்லாம் சில குறிப்பிட்ட சூழ்நிலைகளில்தான் நிகழும். ஒன்றரை மணி முதல் மூன்று மணிவரையிலான திருடனின் நேரத்துக்குள்தான் அதிகமும் இது நிகழும். இது திருடனின் நேரம்.

இந்நேரங்களைப் பல்வேறு ஆய்வுகளுக்குப் பயன்படுத்திக்கொள்வேன். இது எனக்கான நேரம். இப்படி, வெட்ட வெளியிலிருந்து சில சோதனைகளை நிகழ்த்திப் பார்ப்பேன். இப் பிரமைகள் உருவாவதற்கான காரணமென்று எனக்குத் தோன்றுவது, அண்டசராசரங்களும் அசைவற்றிருக்கும் நேரமென்பதால் இருக்கலாம். சாகரத்தில் மீன்களும் கானகத்தில் புலிகளும் விருட்சாதிகளும் தூங்குகிற நேரம். மரங்கள் தூங்குவதை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? அதன் இலைகள் தங்களுடைய இச்சைக்கேற்ப அசைவதில்லை. காற்றின் வேகத்திற்கேற்பவே அசைகின்றன. ஆனால், இந்நேரத்தில் இலைகளும் அசையாது. வாயு இல்லையென்பதாலா? காற்று நிச்சலனமாகிவிட்டது என்பதாலா? காற்று ஒருபோதும் நிச்சலனம் ஆவதில்லை. அது உறங்குவதில்லை. கடவுளுக்கு பூமியில் ஒரு பிரதி பிம்பம் உண்டென்றால் அது காற்று மட்டும்தான். கண்களை மூடி, மனதை ஒருமுகப்படுத்தப் பழகினால் காற்றின் சலனங்களை நம்மால் உணர இயலும். சூட்சுமக் காற்றைக்கூட இப்படி உணர இயலும். இதுவொரு சுகமான அனுபவம். ஆகவேதான் சொல்கிறேன்: இறையுணர்வை அனுபவிக்க வேண்டியது நம்முள் நாம் ஆழ்ந்துப் பயணிப்பதன் மூலம்தான். இது சுய அனுபவங்களினூடே ஒவ்வொருவரது ஆன்ம அனுபூதியெனும் நிலையில் அமைய வேண்டும். மாறாக, ஆன்மாவுக்குக் கூடமைத்துத் தந்த ஆண்டவனுக்கே கூடமைத்துக் கொடுப்பதன் மூலமல்ல. நம்மை உருவகப்படுத்திய ஆண்டவனுக்கு உருவகம் கொடுத்தல்ல. என்ன செய்வது? மனிதன் பலவீனமானவன். சுயத்தின் மீதான நம்பிக்கைதான் கடவுள். சுயநம்பிக்கை நலிகிறபோது மனத்தை ஒருமுகப்படுத்த இயலாமல் போகிறது. மனிதம் சிதறிப்போகிறது. அதாவது தனிமனிதன் தனக்குள் பலநூறு துண்டுகளாகச் சிதறுகிறான். இவற்றைக் கோர்த்தெடுத்து ஒன்று சேர்த்துகொள்ள இயலவில்லையென்பது தான் நம்முடைய மிகப் பெரிய தோல்வியாக இருக்கிறது. இந்த அளவுக்கு தேவஉபதேசியாகிய

நான் ஏற்கனவே சொன்னதுபோல் சின்னாபின்னமாவதை நீங்கள் வாசிப்பின் போக்கில் புரிந்துகொள்ள முடியும். தன்னம்பிக்கையை இழந்த பிறகுதான் இதெல்லாம் நிகழ்கிறது.

சரி, ட்ராக்கில் நடந்த அந்த இரண்டாவது அனுபவத்திற்கு வருவோம்.

ஒருநாளிரவு கொல்லத்துக்குப்போய் நைட் ஷோ பார்த்தேன். அங்கிருந்து முண்டைக்கல் வழியாக நடந்து எச்அண்ட் சி கம்பெனியின் அருகிலுள்ள ஒரு வீட்டில் நுழைந்து சிறுஅளவிலான ஒரு ஆபரேசனை முடித்துவிட்டு ரயில்வே ரோடு வழியாக வீட்டுக்கு வந்துகொண்டிருந்தேன். இரவிபுரம் ரெயில்வே ஷெட்டைத் தாண்டும்போது எதிரே ஒரு சரக்கு ரயில் வந்துகொண்டிருந்தது. தூரத்தில் வைத்தே நான் கீழே இறங்கி நின்றுவிட்டேன். வண்டி போனதும் தண்டவாளத்திலேறினேன். கொஞ்ச தூரம்தான் நடந்திருப்பேன். எதுவோ காலில் தட்டுப்பட்டது போலிருந்தது. கால் வலித்தது. குனிந்து நின்று காலைத் தடவிவிட்டேன். ஈரம் பட்டிருந்தது. முகர்ந்து பார்த்தபோது துருப்பிடித்த இரும்பின் வாசம். குமட்டியது. தீக்குச்சியை உரசி தீயை தண்டவாளத்தில் தாழ்த்திப் பார்த்தபோது நடுங்கிவிட்டேன். ஒரு பெண். என் கண்களையே பார்க்கிறாள்.

பயந்து நடுங்கிப்போனேன். திரும்பவும் பார்த்தேன். கண்களைத் துருத்தியபடி என்னையே முறைத்துப் பார்க்கிறாள். தலை மட்டும்தானிருந்தது. என் உடம்பு முழுவதும் நடுக்கம் ஏற்பட்டுவிட்டது. இரண்டு ஸ்லீப்பர்களுக்கிடையில் கிடந்த தலை நான் இடறியதில் முன் ஸ்லீப்பரில்போய் தட்டி நின்றது. தீக்குச்சி அணைந்தது. நான் நீண்ட பெருமூச்சொன்றை உதிர்த்து இதயத் துடிப்பை சீராக்கிக்கொள்ள முயன்றேன்; முடியவில்லை. அடுத்தத் தீக்குச்சியை உரசிப் பார்த்தேன். இப்போது அந்தக் கண்கள் பயமுறுத்தவில்லை. அது தன்னுடைய எல்லாத் துயரங்களையும் சொல்வது போலிருந்தது.

உடல் எங்கே? தண்டவாளத்தில் தேடினேன். காணோம். நான்கு அடிகூட வைத்திருக்க மாட்டேன். இரத்தத்தின் சதையின் நெடி. எதிரில் அந்தப் பெண்ணின் உடல் பகுதி. இரத்தப் போக்கு இன்னும் நிற்கவில்லை. தண்டவாளத்தின் வெளியில் உடம்பை வைத்து தண்டவாளத்தில் தலையை வைத்திருக்க வேண்டும். என்னெதிரில் இப்போது கடந்துபோன டிரெயின் தான் கொலையாளி. வேதனையுடனான ஒரு பயம். இது மரணத்தை நேரில் பார்த்ததால் உருவானதல்ல. இந்தப் பயம் வாழ்க்கையின் நரக வேதனைகளைப் பற்றியதாக இருந்தது.

சும்மாவேனும் ஒரு தீக்குச்சியை உரசித் தாழ்த்தினேன். பெண்ணின் இரண்டு கைகளும் தண்டவாளத்தின் அடியிலிருந்தன. தண்டவாளத்தில் கயிறு சிதைந்த அடையாளம். என் நெஞ்சில் திடீரென்று ஒரு மின்னல் வெட்டியது. தண்டவாளத்தின் இருபுறமும் இரண்டுத் துண்டுக்கயிறுகள் அறுந்து கிடந்தன. கடவுளே! கைகள் தண்டவாளத்தில் சேர்த்துக் கட்டப்பட்டிருக்கின்றன. நான் திடுக்கிட்டுத் தலையுயர்த்திச் சுற்றுமுற்றும் பார்த்தேன். மனதினுள் உருவான பயம் சொன்னது. இனிமேல் இங்கே நிற்காதே! இப்போது நினைத்துப் பார்க்கும்போது, பக்கத்தில் புதர்க்காட்டிலிருந்து ஏதோ சத்தம் வந்தது போலவும் தோன்றுகிறது. தண்டவாளத்திலிருந்து இறங்கி ஒரே ஓட்டமாக ஓடினேன்.

காலை நன்றாகத் தேய்த்துக் கழுவிவிட்டு வந்து படுத்தேன். தூக்கம் வரவில்லை. அந்தப் பெண்ணின் கண்கள்தான் நினைவுக்கு வந்துகொண்டிருந்தன. ஒருவழியாக இரவை விடிய வைத்தேன். வேகமாக வெளியில் வந்தேன். ரயில்வே ரோடு வழியாக நேராக ஷெட்டை நோக்கி நடந்தேன். எதிரில் வந்த தெரிந்தவன் ஒருவன் சொன்னான்: "டேய் மணியா, ரயில்வே ஷெட் பக்கத்தில ஒரு பெண் டிரெயின்ல அடிபட்டுக் கிடக்குறா . . ."

என்னுடைய முகத்தில் பெரிய அதிர்ச்சியை அவன் எதிர்பார்த்திருக்க வேண்டும். நான் புதிதாக அறிபவன்போல் நடையில் வேகத்தைக் கூட்டினேன். எதிரே ஆட்கள் வந்துகொண்டிருந்தார்கள். ஆள் யாரென்று தெரியவில்லையாம். நான் மனதுக்குள் சொல்லிக்கொண்டேன்: எனக்குத் தெரியும். அவளுடைய ஊரோ பெயரோ தெரியாது. அவளது வேதனைகள். இரண்டு நொடிக்குள் அவள் தன்னுடைய வேதனைகள் அனைத்தையும் என்னிடம் சொல்லிவிட்டாள். அதை என்னால் புரிந்துகொள்ளவும் முடிந்தது.

ஆட்கள் பரபரப்புடன் ஓடுகிறார்கள். மணி எட்டுக் கழிந்துவிட்டது. காலையில் கொஞ்சம் தூங்கிவிட்டேன். வெளிச்சம் படர்வதுவரை விழித்தே கிடந்தது நினைவிருக்கிறது. மக்கள் மிகுந்த உற்சாகத்திலிருந்தார்கள். எந்த நிகழ்வுகளுமில்லாமல் கடந்துபோன வறட்சியான பல நாட்களுக்குப் பிறகு நடந்த புதிய சம்பவம். அவர்களைப் பொறுத்தவரைக்கும் பேசுவதற்குக் கிடைத்த ஒரு விஷயம். கூட்டத்தினூடே தலையை நுழைத்து நானும் பார்த்தேன். போலீஸ்காரர்கள் ஒன்றிரண்டு பேர்கள்தானிருந்தார்கள். என்னைத் தெரிந்தவர்கள் யாருமில்லை. இருந்தால் ஒருவேளை, "வண்டி ஈஸ்ட் ஸ்டேஷன் வழியாத்தான் போகுது. நீயும் ஏறிக்க; கேசுகளெல்லாம் ரொம்பக் கம்மியா

இருக்கு . . ." என்று சொல்லிவிடுவார்கள்.

அந்தப் பெண்ணைப் பார்த்தேன். உறுப்புகளைத் தண்டவாளத்திற்கு வெளியே ஒன்றுசேர்த்து வைத்திருக்கிறார்கள். நான் மெல்ல மறுபக்கமுள்ள தண்டவாளத்தில் போய்ப் பார்த்தேன். கொஞ்ச தூரத்தில் சிதைந்தக் கயிற்றின் சவுரி அடையாளமிருக்கும். எதையுமே சொல்ல முடியாது. ஒருவேளை இந்தக் கொலைக்குற்றத்தையும் என் தலையில் தூக்கி வைத்துவிடுவார்கள். திருடனின் தலையில் எதை வேண்டுமானாலும் யார் வேண்டுமானாலும் தூக்கிப்போடலாம். திருடன்தானே, செய்திருப்பான் என்று ஊரிலுள்ளவர்களும் முனகி வைப்பார்கள். ஒரு குடிமகனுக்கான எந்த உரிமையும் திருடனுக்குக் கிடையாது. ஒரு மசுருக்கான விலைகூட அவனுக்குக் கிடையாது. இப்படி, சமூகம் இடையிடையே வியப்படையவும் அவ்வப்போது கொஞ்சம் பயப்படவுமான ஒரு ஜன்மம்.

என்னை ஆச்சரியப்படுத்திய ஒரு விஷயம் அந்தப் பெண்ணின் உடலைத் தண்டவாளத்தின் ஒரு பகுதியிலேயே புதைத்துவிட்டார்கள் என்பதுதான். யாராவது அடித்துக் கொன்றுவிட்டுக் கொண்டுவந்து போட்டிருந்தால்? போஸ்ட் மார்ட்டமும் கிடையாது, ஒரு மண்ணாங் கட்டியும் கிடையாது. முதல் நாளிரவில் நான் நடந்து வந்த பாதையில் கிடந்தவள், கணவனுடன் சண்டையாக இருக்கலாம்; வேலை பார்க்கும் வீட்டில் முதலாளிக்குப் பயந்தோடியதாக இருக்கலாம்; வழியில் வைத்து என்னைப்போன்ற எவனாவது குரூரமாகப் பலாத்காரம் செய்து, கொன்று தண்டவாளத்தில் போட்டிருக்கலாம் என்று வைத்துக்கொள்வோம். இப்படியெல்லாம் நடப்பதற்கான வாய்ப்புக்கள் இருக்கிறதுதானே? இதையெல்லாம் விசாரணை செய்ய என்னால் இயலாது. ஒன்றிரெண்டு நண்பர்களிடம் வெறும் யூகம்போல் இதைப் பகிர்ந்துகொள்ள நினைத்தேன். என்ன சொல்வார்கள்? உனக்குத்தானே போலீஸ்காரர்களுடன் பரிச்சயமிருக்கிறது. நீயே அவர்களிடம் போய்ச் சொல் என்பார்கள். ஆகவே, வாய் திறக்கவில்லை. இன்றும் அது புரியாத ஒரு விஷயமாகவே இருக்கிறது.

யார் அவள்? யாருமே அவளைத் தேடியதாகவும் தெரியவில்லை. இன்று அடையாளம் தெரியாத உடல்களை மாவட்ட மருத்துவமனைப் பிணவறையில் பாதுகாப்பாக வைத்து பத்திரிகையில் விளம்பரமெல்லாம் கொடுக்கிறார்களே? உண்மையில் இதற்குப் பின்னணியில் யாராவது இருப்பார்களோ? திடீரென்று நடுக்கத்துடன் நினைத்துப் பார்த்தேன். கடவுளே எவ்வளவு அழகாக இருந்தாள் அந்தப் பெண். உயிரோடிருக்கும்

போது அவள் பின்னால் எத்தனை பேர்கள் வாலையும் ஆட்டிக்கொண்டு திரிந்திருப்பார்கள். அவளை யாருக்குமே தெரியாதா? நான் எனக்குள் கேட்டுக்கொண்டிருந்தபோது யாரோ ஒரு பச்சையோலையைக் கொண்டு வந்து தலையும் உடலும் சேர்த்து வைக்கப்பட்ட அந்த உடலின்மீது போட்டார்கள். டிரெயின்கள் கடந்து போயின. உலகம் யாருக்காகவும் நிற்காது. அது முன் நகர்ந்துகொண்டேதான் இருக்கும். அவளது கதை முடிந்துவிட்டது. யாரோ இன்னொரு ஓலையை வெட்டிக்கொண்டு வந்து பிணத்தின்மீது போர்த்தினார்கள். யாரோ குழி தோண்டினார்கள்; போட்டுப் புதைத்தார்கள். மத்தியானமானது. போலீஸ் ஜீப் புறப்பட்டது. அந்தக் கதையின் புதுமை விலகியது. மக்கள் பிரிந்தார்கள். நான் இன்னும் கொஞ்ச நேரம் நின்றிருந்தேன். மனதிலொரு பொருமல். ஏதோ ஒரு நெருக்கம். பிறகு நானும் பிரிந்தேன் . . .

தண்டனை காலம் முடிந்து, நன்னடத்தை ஜாமீனில் போலீஸ் ஸ்டேஷனில் எடுபிடியாக இருந்த காலம். அப்போதெல்லாம் எத்தனையோ சடலங்களுக்குக் காவல் இருந்திருக்கிறேன். டிரெயினில் அடிபட்டுச் செத்தவர்களின் உடுதுணிகள் காற்றடித்து விலகும். மக்களின் ஆர்வ மிகுதிக்குள் இந்த எண்ணவோட்டமும் செயல்படும், ஆணா, பெண்ணா? எதிர்பாலினமென்று அறியும்போது ஆர்வம் அதிகரிக்கும். இது அவர்களின் குற்றமல்ல, இயற்கையின் வினோதம். மனதினுள் செயல்படும் இவ்வுணர்வுகள் புரிந்துகொள்ள முடியாதவை. போலீஸார் அல்லது உள்ளூரின் முக்கியஸ்தர்கள் யாராவது வந்ததும் பச்சையோலையை வெட்டி உடலை மூடுகிற வேலையைத்தான் முதலில் செய்வார்கள். காக்கையோ நாயோ பிடித்து இழுக்காமலிருக்கவும் மக்களின் வெறித்தப் பார்வையைத் தவிர்க்கவும்.

ஜெயில்வாசம் அனுபவித்ததுடன் தீர்ந்துவிட்டதா இப்படியான வேதனை அனுபவங்கள்? பிறகு போலீஸ்காரர்களுக்குத் துணைபோக வேண்டிய வேலை. துண்டாடப்பட்ட உடலுறுப்புகளை வைத்துக்கொண்டு மிச்ச உறுப்புகளைப் புதருக்குள்ளோ வயலிலோ பள்ளங்களிலோ தேட வேண்டும். ஒருமுறை, ஒரு வண்ணார்ப் பெண்ணின் சடலத்தை நாய்கள் கடித்திழுத்து நாலா புறமும் போட்டிருந்தன. ஒருபுறம் அவளது கணவன் உட்கார்ந்து அழுதுகொண்டிருந்தான். கணவன் மனைவிக்குள் சண்டை. கள்ளுக் குடித்த பிறகு எப்போதும் நடப்பதுதான். இரண்டு மணி நேரம் பயங்கரமான சண்டை நடக்கும். பரஸ்பரம் விட்டுக் கொடுக்கவே மாட்டார்கள். பிடிவாதம். உடனே போய்ச் செத்துவிடுவதாக இரண்டு பேருமே சொல்வார்கள். காலையில் அழுதுக் கட்டிப்பிடித்து முத்தம்

கொடுத்துவிட்டு ஒன்றுசேர்ந்து துணி வெளுக்கப் போவார்கள். அப்படியான பிடிவாதத்தில் நான் சாகப் போகிறேன் என்று சொல்லிவிட்டுக் கிளம்பினான் கட்டியவன். மனைவி பயந்து போய் நிஜமாகவே அவன் சாகப்போய்விட்டதாகவே நினைத்துவிட்டாள். மறுநாள் அழுதுக் கட்டிப் பிடித்துக் கணக்குத் தீர்க்க வேண்டிய மனைவி கண்டந்துண்டமாகக் கிடக்கிறாள். பிடிவாதம் ஒருபோதுமே கூடாது. ஒவ்வொரு நொடியும் அது இரண்டு மடங்காகப் பெருகி வளர்ந்துகொண்டே இருக்கும். ஓரளவு அறிவுள்ளவர்கள் தன் முனைப்பை உடனடியாகக் கை விட்டுவிடுவார்கள். முடியாத பட்சத்தில் வாயை மூடிக்கொண்டு விடுவார்கள். பிறகு பேசவே மாட்டார்கள். ஆண்கள் இப்படிச் செய்வதுதான் நல்லது. பெண்கள் கொஞ்ச நேரம் அழுது ஆர்ப்பாட்டம் செய்துவிட்டு அடங்கிவிடுவார்கள்.

யட்சிகள்: யட்சிகளையும் பார்த்திருக்கிறேன். தென்னம் குழிகளில் நடுச்சாமத்தில் காமுகனுடன் பிணைந்து கிடக்கும் யட்சிகள். ஏதாவது பாடலை முனகியபடியே நேர்வழியை விட்டு ஏதாவது வயலிலோ தோப்பிலோ நடந்துகொண்டிருப்பேன். அவர்கள் தென்னங்குழிகளில் பயந்து போய் உட்கார்ந்திருப்பார்கள். எனக்கென்ன வந்தது?

எதிர்பாராமல் சிலர் எதிரில் வந்துவிடுவார்கள். சில யட்சர்கள். ஒரு தடவை இப்படி வயல் வழியாக நடந்து வரும்போது நல்ல தாகமாக இருந்தது. ஒரு இளநீர் குடிக்கலாம். கத்தியைப் பற்களால் கடித்து விரித்தேன்.

திடீரென்று மெதுவாக ஒரு குரல் கேட்டது. யட்சியல்ல, யட்சன் . . .

"டேய் மணியா, நான்தாண்டா . . . ஒண்ணும் பண்ணிடாதே . . ."

டார்ச் மின்னியது.

நான் கேட்டேன்: "அட . . . நம்ம பூசாரியா?"

அவன் சொன்னான்: "யாருட்டயும் சொல்லிடாதப்பா! மனுஷாளில்லையா . . . சில பலஹீனங்கள் இருக்கத்தானே செய்யும்?" நான் எதுவும் சொல்லவில்லை. ஒரு இளநீரை போற்றிக்கும் கொடுத்தேன். திருடன் கொடுத்ததாக இருந்தாலும் தொண்டைக்குள் இறங்கத்தான் செய்தது. என்னைக் கண்டால் அருவருப்புடன் விலகிப்போகிற உயர்குல மனிதப் பிறவிகள். பிறகு இவர் என்னைப் பற்றிப் பலரிடம் மோசமாகப்

பேசியதாக அறிந்தேன். நான் நினைத்தால் வரச் சொல்லிக் கொஞ்சம் மிரட்டி வைக்க முடியும். பதில் சொல்ல மாட்டார். என்னைப் பற்றி இவர் நல்லதாக எதையாவது சொன்னால் தான் ஆச்சரியப்பட முடியும்.

சில நேரங்களில் தோன்றும். நம்மைப் பற்றி இவர்கள் எதையாவது பேசுகிறார்களென்றால் உண்மையைப் பேசட்டும். தேவையான சம்பவங்களை நான் உருவாக்கிக்கொண்டுதானே இருக்கிறேன். பிறகு எதற்காகப் பொய் சொல்லித் திரிகிறார்கள்? பிறகு தோன்றும் சரி சொல்லிவிட்டுப் போகட்டும்.

## 25 - பெண்கள்

ஏராளமான பெண்கள் என் வாழ்க்கைக்குள் வந்து போயிருக்கிறார்கள். இதில் சில பாலியல் தொழிலாளர்களுமுண்டு. வாழ்க்கைக்குள் என்று சொன்னால் அவர்களுடன் வெறும் உடல்தொடர்பு வைத்திருந்ததாக அர்த்தமில்லை. பெண்களுடனான தொடர்பென்று போகிறபோக்கில் சொல்லாமல் அது உடல்தொடர்பல்ல என்பதைத் தனியாக விளக்க வேண்டியதிருக்கிறது. இது மலையாளிகளின் கோணல் புத்தியின் ஒரு உதாரணமாகிவிட்டது. பெண்ணென்று சொன்னால் உடனே வேறுமாதிரியாக வியாக்கியானம் செய்துகொள்கிறார்கள்.

ஊரிலுள்ள சில கௌரவமானவர்களின் கண்களில் படும்படியாக நான் சைக்கிளின் முன் பகுதியிலும் பின்னாலும் பெண்களை ஏற்றிக்கொண்டு சஞ்சரித்ததுண்டு. சரி, ஒருவன் சைக்கிளில் இரண்டு பெண்களை ஏற்றிக்கொண்டு போனதற்காக இந்த உலகம் இடிந்து விழுந்துவிடவா செய்யும்? சிலரைப் பொறுத்தவரைக்கும் இடிந்து விழுந்தது. அந்த சிலர் வேறு யாருமில்லை. என்னிடம் பகைமைப் பாராட்டுபவர்கள்தான். "இவன் எவளுகளையெல்லாமோ கட்டி இழுத்துட்டு வர்றான்." வேறு சில கவுரவஸ்தர்கள் சொல்வார்கள்: "இவளுங்க எல்லாம் சின்னக்கடையில நிக்கிற சரக்குங்க . . ." இதைக் கேட்டுக்கொண்டு நிற்பவர்கள், "ஓகோ . . . அப்படியா, அது சரி" என்று ஆச்சரியத்துடன் தலையாட்டுவார்கள். திருடன் அந்த இடத்தில் நின்றால் நிச்சயமாக இப்படிக் கேட்பான்: "உங்களுக்கு எப்படிண்ணா தெரியும், இவளுங்க விளங்காத கேசுன்னு?"

"அது வந்து . . . நான் சின்னக்கடையில பார்த்திருக்கேன்."

"சின்னக்கடைக்கு எவ்வளவு பொண்ணுங்க வர்றாளுங்க?"

"இவ ஒருத்தன்கூட ஆட்டோவுல ஏறிபோறதைப் பாத்திருக்கேன்.

"ஆண்கள்கூட ஆட்டோவுல ஏறுற பெண்கள் எல்லாருமே . . ."

"அதெல்லாம் மூஞ்சியைப் பார்த்தாலே தெரிஞ்சுடும்."

இவ்வளவு வயதாகியும்கூட என்னுடனிருக்கும் பெண்களை அடையாளம் கண்டுகொள்ளும் இவர்களது ஆசையையும் பெரிய மனிதர்கள் என்ற நிலையில் இவர்களது ஏமாற்றத்தையும் என்னால் புரிந்துகொள்ள முடியும். உண்மையிலேயே இவர்கள் பெரிய மனிதர்களாக இருந்தால் இதையெல்லாம் கண்டுகொள்ள மாட்டார்கள். உள்கிடக்கையை வெளியில் காட்டிக்கொள்ள இயலாத ஒரு அவஸ்தை இது. தொடர்ந்து கண்காணித்தால் இவர்களது முகமூடிகளைக் கிழித்தெறிந்துவிட முடியும். இதைச் செய்யாமல் விட்டாலும் கண்டுபிடித்ததாக ஒரு திருப்தியாவது கிடைக்கும்தானே?"

ஆட்கள் நிறைந்த வழியெங்கும் பெண்களுடன் சுற்றித் திரிந்து திருப்தியானதும் நேராகக் கோடியாட்டு ஷாப்பிலேறி கள்ளும் கிழங்கும் மீனும் வாங்கிக் கொடுப்பேன். கொஞ்சம் சில்லறையைக் கையில் கொடுத்து சின்னக்கடையில் கொண்டுபோய் விடுவேன். பாவம், இரவு நேரங்களில்தான் இவர்களுக்கு ஏதாவது கிடைக்கும். இவர்களில் சிலரை இன்று சின்னக் கடையில் பார்த்தால் இந்த அன்பைத் திரும்பக் காட்டுவார்கள்.

"மணியண்ணா" என்றோ, அல்லது "டேய், மணியா" என்று கூப்பிட்டுக் கேட்பார்கள்:

"இப்ப நீ என்னடா பண்றே . . ?"

"ஆங் . . . என்ன பண்ண? எப்படியோ ஓடிட்டிருக்கு."

"வா, சாயா குடிக்கலாம்." டீ வாங்கித் தருவார்கள். குடிப்பேன்.

இது களங்கமில்லாத அன்பு. இரண்டு நாட்களாகி இருக்கும். ஒரு சொட்டுத் தண்ணீர் குடித்து. அன்பிற்குமுண்டோ பரத்தைமையும் பதிவிரதமும்?

என்னவெல்லாம் அவஸ்தைகளின் காரணமாக இவர்கள் இந்தத் தொழிலுக்கு வந்து சேர்கிறார்களென்று நான் யோசிப்பதுண்டு. வறுமை, வஞ்சகம் என்றெல்லாம்தான் நானும் நினைத்திருந்தேன். இது மட்டும்தான் காரணமென்று சொல்லிவிட முடியாதென்பதையும் ஒருநாள் புரிந்துகொண்டேன்.

போலீஸ்காரர்களின் கையாளாக நான் ஸ்டேஷனில் வேலை செய்துகொண்டிருக்கும்போது கொல்லத்தின் ஒதுக்குப்புறமுள்ள ஒரு

பெரிய ஓட்டலில் ரெய்டு நடந்தது. பெரும்பாலும் யாராவது தகவல் கொடுத்துதான் ரெய்டு நடக்கும். பிடிபட்டவர்களைப் பார்த்து ஆச்சரியப்பட்டுப் போனேன். நல்ல அழகழகான பெண்கள். மட்டரகமான மேக்கப் அல்ல, விலையுயர்ந்த மேக்கப். விலைக்கேற்ப அழகாக இருந்தார்கள். பெங்களூரில் டாக்டருக்குப் படிக்கிற மூன்று நான்கு மாணவிகள். ஒரு இரவுக்கு ஐயாயிரம் ரூபாயாம். மலையாளிகளல்ல, கன்னடத்துக்காரிகள். இங்கிலீஸ் தெரியாதென்றெல்லாம் சொல்லிப் பார்த்தார்கள். கன்னடம்தான் தெரியுமாம். நான் கர்நாடகத்தில் வாழ்ந்தவனல்லவா? எஸ்ஐ என்னைக் கூப்பிட்டார். அப்படியாக மணியன் பிள்ளை துபாஷியானேன். கேட்க ஆரம்பித்தேன். அவர்களால் சமாளித்து நிற்கமுடியவில்லை. ஆர்ப்பாட்டமாக வாழ அவர்களுக்குப் பணம் தேவை. ஒருத்திக்கு மட்டும் படிப்புச் செலவுக்குத் தேவைப்பட்டது. கல்லூரி அடையாள அட்டையை வாங்கியதும் சொன்னார்கள்: "பத்திரிகைகளில் புகைப்படமோ பெயரோ வந்தால் தற்கொலை செய்துகொள்வோம். வேறு வழியே இல்லை இது நூறு சதவிகிதம் நிச்சயம்." அப்போதிருந்த எஸ்ஐ அபூர்வ குணமுள்ளவர்; கவுரவமான மனிதர்; சாடிஸ்ட் கிடையாது. மரியாதையான ஆள். இறங்கிப் போய்விடச் சொன்னார். மற்ற போலீஸ்காரர்கள் இந்தக் கதைக்கு ஒரு சுவாரஸ்யமான முடிவு கிடைக்குமென்று ஆவலுடன் நின்றிருந்தார்கள்; நிறைவேறவில்லை. அவர்களில் ஒருவர்:

"கஷ்ட காலம்பா! நம்ம பழைய அந்த எஸ்ஐயாக இருந்திருக்கணும், இந்த நாலு பேரையும் 'பாக்காம' விட்டுருக்கவே மாட்டார். அப்படிச் செய்யணும்; அதுதான் சரி. கேஸ் போடாம விடுறோமுங்குறதே எவ்வளவு பெரிய உதவி? இதில இவளுங்க எதையாவது இழந்துடவாப் போறாளுங்க? ஐயாயிரம் ரூபாய்க்குப் பதிலாக ஒரு ராத்திரி . . . அவ்வளவுதான் . . . இந்த மனுசன் வெறும் புண்ணாக்கு. என்ன நான் சொல்லுறது?"

என்னிடம்தான் கேட்டார்.

நான் சொன்னேன்: "ஐயோ ஒரு திருடன், இதில நான் என்ன சொல்றதுக்கு இருக்கு. உங்களுக்குத் தோணறதுபோல நீங்களே நீதியை நிறுவிக்குங்க."

என்னுடைய பதில் அவருக்கு சுத்தமாகப் பிடிக்கவே இல்லை:

"போடா பு . . . மவனே" என்றார்.

***

ஒருதடவை நானொரு வீட்டுக்குள் நுழைந்தேன். கம்பியை வளைத்து உள்ளே நுழைந்தபோதே ஒரு போதாமை. சிரிக்க மாட்டீர்கள் என்றால் சொல்கிறேன். திருடன் என்பவன் ஒரு தியான ஆத்துமாவும்கூட! தன்னுடைய சுவாசக் கட்டுப்பாட்டின் வழியாக இப்பிரபஞ்சத்தின் ஒவ்வொரு மிகச்சிறு துகளையும்கூட அவனால் பகுத்துணர முடியும். ஒரு ஈயின், கொசுவின் ரீங்காரத்தையும் இலையின் அசைவையும் அவனால் அனுபவித்து உணர இயலும். காதுகளைத் தரையில் பதித்து, ஒரு பெரிய வீட்டில் யாராவது சஞ்சரிக்கிறார்களா என்பதைச் சொல்லிவிட முடியும். பூனை தரையில் நடந்தால்கூட உணர முடியும். காதின் ஒரு அடி தூரத்தில் ஒரு கட்டெறும்பு ஊர்ந்தால்கூட! இப்படியான அபார, தியான முகூர்த்த நிலையில் அதன் அசைவுகள் காதில் தட்டுப்படும். ஆனால், இந்த ஆழ்ந்தத் தியான நிலையிலிருந்து விடுபட்டு வெளியே வந்த பிறகு, பக்கத்தில் யானை நடந்துபோனாலும் செவிப் புலனால் உணர இயலாது. திருடுகிற நிலையில் ஒரு திருடனுக்கும் யோகிக்குமிடையே மனதளவில் எந்த வேறுபாடுகளுமிருக்க முடியாது. ரத்னாகரன் என்னும் திருடன் வால்மீகி என்னும் மாமுனிவராக மாறியதில் எனக்கு ஆச்சரியமெதுவும் இல்லை. ஆனால், திருடனின் நோக்கம் மட்டும்தான் மோசமானது. திருட்டினூடே இப்படியான சில ஆய்வுப் பார்வைகளை மேற்கொள்ளும்போது நான் நினைத்துப் பார்ப்பதுண்டு: மணியா, எவ்வளவு விசித்திரமான ஆளாக இருக்கிறாய் நீ? சரி, திருடனுக்குத் தோன்றிய சில மன விசித்திரங்களைப் பற்றி சொல்கிறேன்.

தூக்கம்: தூக்கமென்பது, ஒரு அர்த்தத்தில் உலகளாவிய அதிசயம். திருடன் பார்க்காத தூக்கமா? சிலரது தூக்கம் அவர்களது இயலாமையின் வெளிப்பாடாக அமைந்திருக்கும். அடக்கி ஒடுக்கப்பட்டுக் கிடக்கும் பெண்மையின் வேதனையை படுக்கையறையில் அவர்கள் படுத்திருக்கும் முறையிலிருந்து புரிந்துகொள்ளலாம். கட்டிலின் ஓரத்தில் மிதித்துத் தள்ளப்பட்டுக் கிடக்கும் பெண்கள்; அறை முழுவதும் மதுவின் புளித்த நாற்றத்தில் படுக்க விதிக்கப்பட்ட பெண்கள்; புறக்கணிப்பிற்கு உள்ளாகி பரிவுடனான ஒரு பார்வைக்கு ஏங்குகிற, கணவனால் பரிகசிப்பிற்கு உள்ளான பெண்கள்; தூக்கம் வராமல் ஒவ்வொன்றையும் யோசித்தவாறே இரவு முழுவதையும் அழுது தீர்க்கிற பெண்கள். திருட்டிற்கு மிகவும் பாதகமான அம்சம், தூக்கம் வராமல் இப்படிப் புரண்டு கொண்டிருக்கும் பெண்கள்தான். மோசமான தாம்பத்திய உறவுள்ள வீட்டில் திருடுவது எளிதல்ல. அங்கே ஒரு புல்லுமிருக்காதென்பது வேறு விஷயம்.

தூக்கத்திற்கான அடிப்படை அம்சம் மன அமைதிதான். இதற்கான அடிப்படை, நல்ல தாம்பத்தியம். மனிதர்களின் குணவியல்பை அவர்களது தூக்கத்திலிருந்து அறிந்துகொள்ளலாம். இரவில் எத்தனையோ தூக்கங்களைப் பார்த்திருக்கிறேன். மனிதர்களின் எல்லா அகம்பாவங்களும் அஸ்தமனமாகிற ஒரு அவஸ்தை தான் தூக்கம். எவ்வளவு துஷ்டனாக இருந்தாலும் ஆழ்ந்த தூக்கம்தான் அவனைக் கள்ளம் கபடமற்றவனாகக் காண்பிக்கும். இந்த ஆழ்நிலை தூக்கம் மிகக் குறைவான நேரம்தான் இருக்கும். இதைத் தவிர தூக்கத்தின் மற்ற நேரங்களில், துஷ்டன் துஷ்டனாகவே தெரிவான். காரணம், அவனது நினைவு மனம் துஷ்டத்தனமாகவே இயங்கிக்கொண்டிருக்கும்.

தூங்கிக் கிடப்பவர்களை நான் கவனித்துப் பார்ப்பேன். ஒரு திருடனுக்கு இதெல்லாம் தேவையில்லாத விஷயங்கள் தான். ஆனால், மனிதனின் தூக்கத்தை வைத்து அவனது இயல்புகள் எப்படியிருக்கும் என்று யோசித்துப் பார்ப்பதில் என்னுடைய பொன்னான நேரத்தின் குறிப்பிட்ட பகுதியை நான் இழந்திருக்கிறேன். சில ஆய்வுகளைச் செய்து பார்த்ததுமுண்டு. பிறகு, இந்த வழக்கில் பிடிபட்டு நீதிமன்றத்துக்கு வரும்போது நான் அந்த வாதியின் குணத்தை ஆய்வு செய்வேன். பெரும்பாலும் என்னுடைய பார்வை சரியாக இருந்ததாகவே எனக்குத் தோன்றியிருக்கிறது. சில தோல்விகளுமிருக்கும். மன்னிக்க வேண்டும். எனது ஆய்வு முடிவுகளில் சில:

1. கால்களைத் தொடையிடையே திருகிக்கொண்டு தூங்குபவர்கள் தொந்தரவான நபர்கள்.

2. பாலியல் ஆர்வம் மிகுந்தவர்கள் விலகிய ஆடைகளைக் கூட கவனிக்காமல் தூங்குவார்கள்.

3. பெண்கள் பெரும்பாலும் மல்லாந்துத் தூங்குவதில்லை.

4. ஒருக்களித்துத் தூங்கும் பெண்களிடம் திருடர்கள் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். இவர்கள் எச்சரிக்கையானவர்கள். ஒரு எறும்பின் அசைவிலும் இவர்கள் விழித்துவிடக்கூடும். ஒழுக்கம் பற்றிய புரிதலுள்ளவர்கள். இதன் பொருள் ஒழுக்கமானவர்கள் என்பதல்ல. மறைக்க வேண்டியதையும் கூடாததையும் பற்றிய தெளிவுள்ளவர்கள் என்று சொல்லலாம்.

5. ஆண்கள் எல்லாவற்றையும் மறந்து தூங்குவார்கள். பெண்கள்

எல்லாவற்றையும் நினைத்தபடி தூங்குவார்கள். இதனால்தான் பெண்கள் சீக்கிரமாகப் பயப்படுகிறார்கள். திருடன் புகுந்ததை அறிந்து ஒரு ஆணும் பெண்ணும் ஒரே நேரத்தில் விழித்துக்கொள்கிறார்கள் என்று வையுங்கள். சூழ்நிலையைக் கிரகித்து அவன் அலறுவதற்குள் அவள் அலறி முடித்திருப்பாள். ஆண்களுக்கு எதிர்ப்புத் திறன் அதிகமாக இருக்கும். மனது சீக்கிரமாக இயல்பு நிலைக்குத் திரும்பி விடாது. ஆணை, குழல் விளக்குக்கு உதாரணமாகச் சொல்லலாம். அணைந்தணைந்தாவது எரிந்துவிட்டால் பிறகு உஷார்தான். ஆண்களை விடவும் பெண்களிடம் மின்சாரம் உடனடியாக வேலை செய்கிறது. ஆனால், வால்டேஜ் கம்மியான குழல் விளக்கு. கொஞ்ச நேரம் மின்னும். ஹா . . . என்று அலறுவார்கள். பிறகு அவ்வளவுதான். ஆண்களின் புலன்களில் விளக்கெரிந்து திருடன் என்று அலறுவதற்குள் திருடன் காம்பவுண்ட் சுவரைத் தாண்டியிருப்பான்.

## 26 - குருநாதன் மணியன்பிள்ளை

வேலிவீட்டு சந்திரன். இவனுக்கு ரொம்ப நாளாக ஆசை. என்னுடன் வர வேண்டும். கொஞ்சம் களவு கற்க வேண்டும். மீன் வியாபாரம் செய்து வருகிறான். நான் சொன்னேன்:

"சந்திரா, உனக்கு இப்போ வாழ்றதுக்குப் போதுமான ஒரு தொழில் கைவசமிருக்கு. இதில வந்து சிக்கிட்டேன்னா கரையில போட்ட மீனைப்போல, போட்ட இடத்துல கிடந்து துடிக்கிறதைத் தவிர தப்பிக்க வேற வழி கிடையாது." தொழில் சார்ந்த உவமையைத்தானே பிரயோகிக்க வேண்டும்.

"அண்ணா இந்த உபதேசமெல்லாம் வேண்டாம். என்னையும் கூட்டிட்டுப் போறே" என்றான்.

அப்படியாக அவனுடைய சைக்கிளில் ஏறி இரண்டு பேருமாக ஒரு ஆபரேசனுக்குப் புறப்பட்டோம்.

நான் சொன்னேன்: "டேய், ரெண்டு பேராத் திருடப் போறது ரிஸ்கான விஷயம். தான் மட்டுமல்ல, கூட இருக்குறவன் பிடிபடாமலும் பாதுகாக்கணும்."

"அதொண்ணும் பிரச்சினையில்ல."

நான் சொன்னேன்: "நாம இரவிபுரம் கடற்கரைக்குப் போவோம். கொஞ்சம் மீன் வாங்குவோம்."

"மீன் எதுக்கு?"

"சும்மா பொரிச்சுச் சாப்பிடத்தான்."

"அதுக்கு நான் நாளைக்கு வேற மீன் . . ."

"சொல்றதைச் செய்."

இரவிபுரத்திற்குப் போய்ச் சேரும்போது மணி பதினொன்று. அப்போது கட்டுமரத்தில் கொண்டுவந்தவர்களிடமிருந்து இருபது ரூபாய்க்குச் சாளைமீன் வாங்கினோம். ஒரு நூறு சாளையிருக்கும். திரும்பவும் சுற்றித் திரிந்து காக்கோட்டு மூலைக்கு வந்தோம். இப்போது நடுச்சாமம் கடந்திருக்கும். எங்களைப் பார்த்ததாலுமிருக்கலாம், சில இடங்களில் நாய் குரைக்கும் சத்தம் கேட்டது. இதனிடையே பக்குவமான ஒரு வீட்டைக் கண்டுபிடித்தோம். ஜன்னல் கம்பியை வளைத்து உள்ளே ஏறினோம். ஒரு விசிஆர், டேப்ரிக்கார்டர், சில துணிமணிகள், கொஞ்சம் பொன்னும் பொருளும் போன்றவற்றை அள்ளிக்கட்டி மீன் குட்டைக்குள் வைத்தோம்.

"நான் கையில வெச்சுக்கிறேன். அதில வெச்சா மீன் நாறும்" அவன் சொன்னான்.

நான் கோபத்துடன் சொன்னேன்: "பேசாம வண்டியை எடுடா."

இரண்டு திருப்பங்கள் கடந்து மூன்றாவது திருப்பத்தில் வரும்போது எதிரில் எட்டுப் பத்து பேர்கள். கையில் கம்பும் தடியுமாக!

"எங்கிருந்து வர்றீங்க?"

"இரவிபுரத்திலேருந்து."

"இந்த ரெண்டு மணிக்கா?"

"விக்கிறதுக்கு தினமும் மீன் வாங்கிட்டு நான் இந்த வழியாத்தானே போவேன்?"

ஒருத்தன் குட்டையிலிருந்த மீனை எடுப்பதற்காக முயற்சி செய்தான். நெஞ்சினுள் ஒரு மின்னல் வெட்டு. அடுத்த நிமிடம் நான் தடுத்தேன்:

"ஓணர் கிட்ட நிக்கும்போது எதுக்கு கை போட்டு எடுக்கிறீங்க?" சொல்லிவிட்டு பிளாஸ்டிக் கவரிலிருந்து பத்து நாற்பது சாளையை அள்ளி பாளையில் வைத்தேன்.

அவர்களுக்கு நம்பிக்கை வந்தது.

"வேணாம், வேணாம் . . . கொண்டு போ."

யாரோ சொன்னார்கள்: "இந்த நடுச்சாமத்தில நாங்க கள்ளனைப்

பிடிப்பமா? சாளக் குழம்பு வெப்பமா . . ? வேணாம், கொண்டு போ! சரி வழியில எங்காவது கள்ளனைப் பாத்தா விட்டுடாதீங்க என்ன? கொஞ்ச நாளா இந்தப் பக்கமா திரியறான். ஒன்றிரண்டு தடவை விரட்டினோம், தப்பிச்சுட்டான்."

நான் கேட்டேன்: "நிறைய பேரிருக்கானுங்களா?"

"இல்லை. ஒரே ஒருத்தன்தான்."

நான் மனதிற்குள் சொல்லிக்கொண்டேன்: 'அன்னைக்கு நீங்க விரட்டியதில வந்த கால் சுளுக்கு, இன்னும் சரியாகலை.'

அப்படியாக வணக்கம் சொல்லி விடைபெற்று, சைக்கிளை மிதித்து வந்துவிட்டோம்.

சந்திரனின் சுவாசம் சீரானது. இவ்வளவு நேரமும் அவன் மூச்சு முட்ட நின்றிருந்தான்.

"அண்ணா, இந்த வேலை நமக்குச் சரிப்படாதுண்ணா."

"அதனாலதான் சொன்னேன். அவங்க கையில வெச்சிருக்குற கம்பால ஒண்ணு போட்டாங்கன்னா எப்படியிருக்கும்னு கொஞ்சம் யோசனைப் பண்ணிப் பாரு . . ."

"ஹோ . . . நினைச்சுப் பாக்கவே முடியலை. அண்ணன் மீன் வாங்கி வைக்கச் சொன்னது நல்லதாப் போச்சு. இப்பிடித்தான் நடக்கும்னு உனக்கு ஏற்கனவே தெரியுமா?"

"எது? எவனாவது நம்மை எதிர்பார்த்து நிப்பாங்கன்னா? சரிதான், சில மன ஓட்டங்கள் தோணும். சில நேரங்களில மட்டும். தோண்றதை உடனே செய்துடணும். இது என்னோட அதிர்ஷ்டம் கிடையாது; உன் உடம்பு செய்த புண்ணியம். இல்லேன்னா, ரூபாய்க்கு இத்தனை சாளைங்குறதுபோல உன்னோட பல்லெல்லாம் ரோட்டில உதிர்ந்துக் கிடந்திருக்கும்."

***

ஆனால், சந்திரனுக்கு வாய்த்த அதிர்ஷ்டம், இறயத்து கிருஷ்ணன் என்னும் ஆசாரிப் பையனுக்கு வாய்க்கவில்லை. இவன் ஒரு அலவலாதி. பெண்கள்

குளிப்பதை எட்டிப் பார்ப்பதுதான் இவனுடைய பிரதான பொழுதுபோக்கு. அன்றெல்லாம் பெரும்பாலும் சுற்றிலும் ஓலைக் கீற்றுகளைக்கொண்ட தடுப்புகள்தான் குளியலறையாக இருக்கும். இருட்டிய பிறகு ஒரு சிம்னி விளக்குடன் குளியலறைக்குள் நுழைகிற பெண்களை ஓலைகீற்றின் இடைவெளியினூடே மிகச் சாதாரணமாகப் பார்க்க முடியும்.

நான் சொன்னேன்: "திருடுறது உடல்நலத்துக்குத் தீங்கானது."

"அப்படியெல்லாம் ஒண்ணும் இல்லேண்ணா . . . அதைவிட தீங்கான தொழில், ஓலைக் கீற்றை விலக்கிப் பாக்குறது. நான் செய்யிற தொழில் இதுதானே? இவ்வளவு ரிஸ்க் திருட்டில கிடையாது."

சொல்லிவிட்டு குனிந்து காட்டினான்: "பாரு, இதைவிட அதிகமாக என்னால குனிஞ்சு நிக்க முடியாது. ஒரு பெண்ணோட அப்பன், அரைக்குடம் தண்ணியைத் தூக்கி இடுப்புல தாக்கிட்டான். மவளுக்குக் குளிக்க வென்னீர் கொண்டுவரும்போது ஒருத்தன் குனிஞ்சு நின்னு ஓலைக்கீத்து வழியாக உத்துப் பாத்துட்டிருக்கான். மனுசன் தண்ணிக் குடத்தைத் தூக்கி அப்படியே மொத்திட்டாங்கறேன். உன் வேலையில இந்த அளவுக்கா ரிஸ்க் இருக்கு? ஏதோ இந்த தொழில்மேலுள்ள தணியாத தாகம் காரணமாகத் தொடர்ந்திட்டிருக்கேன். அவ்வளவுதான். இப்ப ஒரு மாற்றம் தேவைப்படுது. அதுக்காகத்தான் . . ."

எதுவாயினும் மாற்றத்தை எதிர்நோக்கிய அவனது ஆர்வம் அன்றோடு ஒழிந்தது. திருடக்கூட இல்லை. ஒரு திருப்பத்தைக் கடக்கும்போது முற்றிலும் எதிர்பாராமல் நைட் பாட்ரோல். உதை வண்டியில். பார்த்ததுதான் தாமதம், சைக்கிளின் பின்னால் உட்கார்ந்திருந்த கிருஷ்ணன் இறங்கி ஓட்டமெடுத்தான். இவன் செய்கிற வேலைக்கான ஒரே பாதுகாப்பு இதுதானே? ஓலைக்கீற்றை விலக்க வேண்டியது; எவனாவது பார்த்தால் ஓட வேண்டியது. திருட்டு அப்படியல்லவே? சிறு தந்திரமும் தேவைப்படும். அது இவனிடம் இல்லவே இல்லை. போலீஸ்காரர்கள் துரத்திப் பிடித்துக் கொண்டு வந்தார்கள். இதனிடையே நான் சில பொய்களைச் சொல்லிச் சமாளித்து நிற்கிறேன். "பக்கத்தில ஒரு அக்கா வீடிருக்கு. அவசரமாக பணம் ஏதாவது தேவைப்பட்டால் தருவாள். அங்கேதான் போயிட்டிருக்கேன்" என்றெல்லாம்.

என் பக்கத்தில் அவனைக் கொண்டுவந்த போலீஸ்காரர் கேட்டதற்கெல்லாம் இவன் தெளிவான பதிலைச் சொல்லிவிட்டான்.

"திருடறதுக்குத்தானேடா போறீங்க . . ? இவன் எல்லாத்தையும் சொல்லிட்டான். உண்மைதானேடா?"

"அடிக்காதீங்க சார் . . . உண்மைதான்." அந்த வாய் பார்த்தான் ஒப்புக்கொண்டான்.

பிறகு அடுத்த நொடியில் விழுந்த உதை அவனுக்கா எனக்கா என்ற விஷயம் சர்ச்சைக்குரியது. எதுவாயினும் போலீஸ்காரர்கள் சும்மாப் பின்னியெடுத்து விட்டார்கள்.

ஸ்டேஷனில் கொண்டுவந்து என்னைக் கட்டத் துவங்கினார்கள். அதாவது உருட்டல். கிருஷ்ணன் பார்த்துக்கொண்டு நிற்கும்போதுதான் சப்பாத்திப் பிரயோகம் நடக்கிறது. எலும்பும் சதையும் அரைகிற, கீர் . . . கீர் . . . சத்தம் அவனுக்கும் கேட்கும். அவனுக்கு சிறுநீர் பிரிந்தது. பிறகு என்னுடைய இரண்டு கைகளையும் பிடித்துத் தூக்கி ஒரு ஓரமாக எறிந்தார்கள். என் இடம் காலியானதும், "அய்யய்யோ, எனக்கு இதுதான் சார் முதல் தடவை . . . கொஞ்சம் மெதுவாப் பண்ணுங்க சார் . . ." என்று அலறியபடியே பெஞ்சிலேறி அட்டென்ஷனில் படுத்துக் கொண்டான். போலீஸ்காரர்களுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. முகத்தில் இரண்டு அறை கொடுத்துவிட்டு எழுப்பிவிட்டார்கள்.

என்னிடம் கேட்டார்கள்: "இவன் சொல்றது நிஜம் தானாடா . . ? இவனுக்கு இது புதுசா?"

நான் உண்மைதான் என்றேன். இது எப்படி நடக்கிறதென்று பார்க்க வந்தான் . . .

கன்னத்தில் பளாரென்று ஒன்றுகூட வைத்துவிட்டு ஓடுடா என்றார்கள். அவன் இறங்கி ஒரே ஓட்டம்.

பிறகு ஒருநாள் பார்த்தபோது சொன்னான்: "அண்ணா அங்கிருந்து எடுத்த ஓட்டம், அஞ்சாறு கிலோமீட்டர் தாண்டி வீட்டுக்கு வந்துதான் நின்னேன். குட் பை." கீற்றகற்றும் தாகத்தைக்கூட நிறுத்திவிட்டானாம்.

"சரி, நீ திருந்திட்டே, நல்ல விஷயம்தான். உன்னோட அடங்காத தாகத்தைத் தணிக்க நினைச்ச என்னோட நிலைமையைப் பாத்தியா?"

கிருஷ்ணன் இப்போது கவுரவமான குடும்பஸ்தனாக வாழுகிறான். அன்று இதுதான் முதல் தடவையென்று அவன் சொன்னபோது

போலீஸ்காரர்களுக்கு விட்டுவிடத் தோன்றியது மிகப்பெரிய விஷயம். இல்லையென்றால் அவனும் ஊர்க்காரர்கள் அறிந்து அவமானப்பட்டு திருடனெனும் முத்திரையுடன் பெயரளவிலாக இருந்திருப்பான்.

***

சிறிது காலமாவது எனக்கொரு திருட்டுக் கூட்டாளியாக இருந்தவன் ஜெயன் மட்டும்தான். ஐந்தாறு பெரிய திருட்டுக்கு என்னுடன் வந்தான். அதில் முக்கியமான ஒன்று, சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் மானேஜர் ஒருவரின் மய்யநாட்டிலுள்ள வீட்டில் நடந்தது. நிறைய வெளிநாட்டுத் துணிவகைகளும் 76 பவுன் நகைகளும் கிடைத்தன.

திருடப் போய்விடாமல் இருப்பதற்காக அம்மா என்னை அறைக்குள் வைத்துப் பூட்டிவிட்டுத் தூங்குகிற காலத்தில் நடந்த திருட்டு.

ஜெயன் சொன்னான்: "அண்ணா, எனக்குக் கொஞ்சம் ஜாலியாக இருக்கணும் . . ."

"புரியலியே . . ."

"ஒரு பெரிய ஓட்டல்லே தங்கணும். கூடவே ஒரு பெண்ணும் வேணும். பெரிய மனுசங்க திங்கிற ஆகாரத்தை நானும் திங்கணும் . . ."

"இதெல்லாம் ரொம்ப நியாயமான ஆசைகள்தாம்பா ஜெயா . . . விஷயத்தை போலீஸ் மோப்பம் பிடிச்சு, உடம்பை இடி தாங்கியா மாத்தினாலும்கூட, சாப்பிட்ட ஆகாரமும் இனிமையான சில நினைவுகளும் மிச்சமிருக்கும் . . ."

"ஓக்கேடா, இரவிபுரம் பிரபாத் தியேட்டர்ல நீ செகண்ட் ஷோவுக்குப் போறே. இண்டெர்வெல் விடும்போது இறங்கி வந்துடு. மிச்சக் கதையை பிறகு வேற யார்கிட்டயாவது கேட்டுத் தெரிஞ்சுக்கலாம். அப்படியே இங்க வந்து ஜன்னலைத் தட்டு. ஜன்னல் தானாகவே திறக்கும். ஏற்கனவே நான் ரெண்டு கம்பியைப் பிடுங்கிதான் வெச்சுருக்கேன். அம்மா காலையில வந்துப் பாக்கும்போது நான் அறைக்குள்ள இருக்க வேணுமில்லையா?"

சைக்கிளில் கிளம்பினோம். மய்யநாட்டுக்குப் போய்ச் சேர வேண்டுமென்றால் வாழத்துங்கலில் இருந்து நான்கைந்து கிலோமீட்டர் நடந்தாலே போதும். பண்பாடும் பணப்புழக்கமும் அதிகமுள்ள பகுதி.

பண்பாடு அதிகமாகிப் போனதால் இரவில் அலைந்து திரிபவர்கள் கிடையாது. இது திருடர்களுக்கு ஏற்றதோர் சூழல்.

இரண்டு மாடி வீடு. மதில் தாண்டினோம். பக்கத்தில் நின்ற தென்னை மரம் வழியாக இரண்டாவது மாடிக்குச் சென்றோம். பல வெண்டிலேட்டர்களைச் சோதனையிட்டபோது ஒன்றில் கொண்டி இல்லையென்று கண்டோம். ஜெயனை வெளியே காவலுக்கு நிறுத்தினேன். கீழே உள்ள கம்பி உறுதி அதிகம். மர்மஸ்தானத்தில் கை வைத்தால் வாழைப்பழத் தோலுரிவது போல் கம்பி அப்படியே வளைந்து கொடுக்கும். ஆனால், இது லோக்கல் கம்பியல்ல! பணமுடையற்ற மனிதன். நல்ல தரமான உருக்கு, பிடிவாதம் செய்தது. நான் ஜெயனிடம் சைகைக் காட்டினேன். சமையல் பகுதியில் தேடு. வேலைக்காரிகள் எங்காவது உலக்கை வைத்திருப்பார்கள். உலக்கை வந்தது. அப்புறம் ஓரிரு நிமிட வேலைதான். தரமான உருக்கு வாய் பிளந்து நின்றது. மணியன் உள்ளே!

ஒரு பிரம்மாண்டமான பெட்டி வரவேற்றது. சிங்கப்பூரையே அதில் வைத்துக் கொண்டுவந்து விடலாம். துணிகளெல்லாம் அதில்தானிருந்தது. எல்லாவற்றையும் அள்ளி வெளியே போட்டோம். வீட்டில் சும்மாதானே இருக்கிறான் சிங்கப்பூர்க்காரன். அடுக்கி வைப்பான். பயணம் செய்யும்போது யாருக்கும் சந்தேகம் வராமலிருக்க ஒரு புது பேக்கையும் வெளியே எடுத்து வைத்தோம்.

கீழேயுள்ள அலமாரியின் சில இடைவெளிகளில் கத்தியை நுழைத்து விரித்தபோது திரு காணிகள் சரஞ்சரமாகக் கழன்று விழுந்தன. அலமாரிக்குள் ஒரு சிறு டிரே. பத்திரங்களை அள்ளி வெளியே போட்டோம். ஒரு பெரிய டப்பா இருந்தது. அது நிறைய தங்கம். அந்த இடத்திலேயே நானொரு ஆனந்தத் தாண்டவமாடினேன். பூனைபோல். தரைக்குக்கூட தெரியாமல். சந்தோஷம் மிகுந்தால் உடனே எனக்கு அதை வெளிப்படுத்தியாக வேண்டும்.

பொருட்களுடன் சைக்கிளைத் திரும்பவும் மிதித்தோம். பெரிய பை. ஆளில்லாத சாலை. பெட்டியிலுள்ள துணியிலிருந்து மனம் மயக்கும் ஃபாரின் சென்ட் வாசம். பாலைமலர் வாசம்போல். நிசப்தமான சூழல் என்பதால்தான் இவ்வளவு வாசம். சில சந்திப்புகளில் ஒன்றிரண்டு பேர்கள் உட்கார்ந்திருக்கிறார்கள். இவர்கள் ஏதாவது வண்டியைக் கண்டதும் தொலைவிலேயே இறங்கி ரோட்டில் நின்று சில ஃபேஷன் ஷோக்கள் காட்டுவார்கள். யாராவது அப்பாவிகள் வந்தால் வழிப்பறி

செய்வார்கள். நாங்கள் ஆட்களைத் தூரத்தில் கண்டதுமே உரத்தக் குரலில் எங்களுக்குள் பேச ஆரம்பித்துவிடுவோம். எதையாவது சொல்லி ஒரு விவாதம். ஆட்களைக் கடந்து போனதும் விவாதம் தானாகவே முடிவுக்கு வரும்.

ஜெயனுக்குத் தங்கத்தை விடவும் சேலையில்தான் அதிகமான ஆர்வமிருந்தது. இதில் இரண்டை அவளுக்குக் கொடுக்க வேண்டும். இரண்டை இவளுக்குக் கொடுக்க வேண்டும். ஓக்கே! நான்கு சேலைகளை அவன் எடுத்தான்.

சுகம் வாங்குவதற்காக நாங்கள் திருவனந்தபுரத்துக்கு வந்தோம். மிச்சமிருந்த துணிகளை பீமா பள்ளியில் ஒரு கடையில் விற்றோம். கடைக்காரனின் பெயரும் அவனது மனைவியின் பெயரும் ஒரே தினுசிலிருக்கும். இரண்டுபேருமே பிறகு கோர்ட் வராந்தாவில் வந்து காத்துக் கிடக்க வேண்டியதாயிற்று என்பது வேறு விஷயம். ஓவர் பிரிட்ஜின் பக்கத்திலுள்ள ஒரு பெரிய லாட்ஜில் தங்கினோம். நான் ராஜப்பனுக்கு ஃபோன் செய்தேன். ராஜப்பன் தட்டான் தராசும் படிக்கற்களுமாக வந்தான். எட்டுப் பவுனை ஐந்துப் பவுனாகக் காட்டுகிற விசேஷ தராசு. பணத்தை ரொக்கமாகக் கைப்பற்றினேன். கொஞ்சம் பணத்தை ஜெயனுக்குக் கொடுத்தேன். ஒன்றிரண்டு மோதிரங்களை எவள் எவளுக்கோ கொடுப்பதற்காக வாங்கினான். நிறைய தேடிப் பார்த்தும் லட்சணமொத்துள்ள யாருமே கிடைக்கவில்லை. நான் சொன்னேன்: "தேவையில்லாம ஏன் தேடணும்? நம்ம ஊரிலேயே இருக்கிறாளே சுந்தரிக்கோதை." ஜெயன் டாக்சியில் நேராக ஊருக்குக் கிளம்பினான். நான் ஒரு கடிதமெழுதிக் கொடுத்தனுப்பினேன்.

இந்தக் கடிதம் கொண்டு வருபவனுடன் உடனே புறப்படவும்.

பி.கு: ஸ்பேராக, ஒரு ஜோடி அடிப்பாவாடையும் ப்ளவுசும் ப்ரேசியரும் எடுக்க மறந்துவிட வேண்டாம். சேலை இங்கே இருக்கிறது.

ஜெயனுக்கு இவள்மீதுதான் ஆர்வம். நான் வாடகைக்கு வீடெடுத்து இவளைத் தங்க வைத்திருக்கிறேன். அதிக ஆட்களுடன் கம்பெனி கொடுப்பவளுமல்ல. சரி, ஏதோ ஆசைப்படுகிறானே என்று விட்டுக் கொடுத்தேன். கொஞ்ச காலமாகவே நான் வைத்துக்கொண்டிருப்பவள். பிறகு, இவள்தான் என்னைக் காட்டிக்கொடுக்கவும் செய்தாள். நான் திருந்தி வாழ நினைத்து எல்லாத் திருட்டுத்தனங்களையும் விட்டு உழைக்க ஆரம்பித்திருந்த காலமது. சித்தாள் வேலைக்கும்

போய்க்கொண்டிருந்தேன். முக்கியமான வேலை பாறை உடைப்பது. வேர்வை சிந்த உழைத்துச் சாப்பிடுவதில் சுவாரஸ்யமிருப்பதாக நினைத்திருந்த காலம். கணியாபுரம் போலீஸ் ஸ்டேஷன் கட்டுமானப் பணி நடந்துகொண்டிருந்தது. அப்போது இங்குதான் வேலை பார்த்துக்கொண்டிருந்தேன். போலீஸ் வந்து தூக்கியது. ஊர்க்காரர்களிடம் இருந்து நான் உதை வாங்கிக் கொடுத்த ஹெட் கான்ஸ்டபிள் கோபாலபிள்ளை, இவளிடம் கூடடைந்து ரகசியத்தைக் கறந்திருக்கிறார். நான் எங்கே இருக்கிறேன் என்பது இவளுக்கும் வேறு ஒன்றிரண்டு பேர்களுக்கும் மட்டுமே தெரியும். திருட்டினிடையே ஒருவரைக் கத்தியால் குத்திய வழக்கில்தான் இந்தக் கைது நடவடிக்கை. இவளை என்னுடைய கஸ்டடிக்குள் கொண்டுவர நான் நிறைய போக்கிரிகளுடன் போராடியிருக்கிறேன். கடைசியில் இவள் என்னை போலீஸ் கஸ்டடியிலாக்கி விட்டாள். *கனகம் மூலம் காமினி மூலம் என்பது திருடனைப் பொறுத்தவரைக்கும் மிகச் சரியான பழமொழி. திருடனின் ரூட்டைச் சரியாகக் கண்டுபிடிக்க போலீஸ்காரர்கள் இது போன்றவர்களைத்தான் கூட்டுப்பிடிப்பார்கள். திருடனையும் கண்டுபிடிக்கலாம். கூடவே . . . ஒரே தோட்டாவில் இரண்டு பறவைகள். ஒரு திருட்டுப் பறவையும் ஒரு கூட்டுப் பறவையும்.

அப்போதெல்லாம் ஜெயன் பெரும்பாலும் பகல் முழுவதும் என்னுடன்தான் இருப்பான். அன்றைய திருட்டில் மிச்சமிருந்த நல்ல பளபளப்பான கல்வைத்த ஒரு மோதிரத்தை மட்டும் அவன் யாருக்கும் கொடுக்கவில்லை. பெரிய பந்தாவுடன் அணிந்து திரிந்தான். இதனிடையே ஜெயனின் உறவினர்களுடன் எனக்கு உரசல் ஏற்பட்டது. நான்தான் அவனைக் கூட்டிக்கொண்டுபோய்க் கெடுக்கிறேன் என்பது அவர்களுடைய குற்றச்சாட்டு.

நான் சொன்னேன்: "என்னை என்ன பண்ணச் சொல்றீங்க? எவ்வளவோ சொல்லிப் பார்த்துட்டேன், கேட்க மாட்டேங்குறான். இனி நீங்க எங்கிட்டே சொல்ல வேணாம்; அவனைக் கட்டி வெச்சி உதையுங்க."

அவர்களைக் குற்றம் சொல்வதற்கில்லை. நானாகவே இருந்தாலும் அப்படித்தான் நினைப்பேன். நமக்கு வேண்டிய ஒரு பையன், ஊரிலுள்ள ஒரு பெரிய திருடனின் கூட்டாளியாக இருக்கிறான் என்றால் . . . பேசாமல் உட்கார்ந்திருக்க முடியுமா? என்னை அடிப்பதற்கு அவர்கள் திட்டம் இடுகிறார்களென்று எனக்குத் தகவல் கிடைத்தது.

மறுநாள் ஷாப்பிலேறியதுமே நிலைமை சரியில்லை என்பதைப்

புரிந்துகொண்டேன். ஷாப்பின் அருகில் நான்கைந்து அறிமுகமில்லாத ஆட்கள். என்னைச் சுட்டிக்காட்டி எதையோ பேசிக்கொள்கிறார்கள். ஜெயனின் சில உறவினர்களும் இருந்தார்கள். நான் அதிகமாகக் குடிக்காமல் வெளியே வந்தேன்.

நான்கு பேர்கள் முன்னால் வந்து என்னைத் தடுத்தார்கள்:

"இனிமேல் நீ ஜெயனைப் பாக்கவோ பேசவோ கூடாது."

"அது சரி, எனக்கு உத்தரவுபோட நீங்க யாரு, ஜனாதிபதியா?"

"நீ அவனைக் கெடுக்க நாங்க அனுமதிக்க மாட்டோம்; உனக்குத் துணையா நீ அவனைக் கூட்டிட்டுத் திரியறே . . ."

நான் சொன்னேன்: "எங்கூட ஒரு நாய் வந்தாலும் திங்கிறதுல ஒரு முள்ளையாவது அதுக்குப் போட்டுக் கொடுப்பேன். அதை நான் கூப்பிடவுமில்ல. கூட்டிட்டுத் திரியவுமில்ல. அதுவா எங்கூட வருது. அதை அடிச்சி விரட்ட என்னால முடியல."

"அப்படி வந்தா நீ கூட்டிட்டுப் போயிடுவியாடா?"

ஒரு அடி கண்ணைக் குறிவைத்து. பிறகு படபடவென்று மூன்று நான்கு அடிகள். நான் தெறித்துப்போய் விழுந்தேன். திரும்பவும் எழுந்து நின்றேன். சட்டையின் மேல் பட்டனைத் தட்டிவிட்டுக்கொண்டேன். கழுத்தில் சுற்றியிருந்த ஒரு பொருளை உருவினேன். கொல்லம் லாரிப் பேட்டையில் வேலை செய்கிற காலத்திலிருந்தே என்னுடனிருப்பது. லாரியிலுள்ள பிரேக் பிரவ்டன். பட்ட இடம் பழுத்துவிடும். நான்கு அடிதான் தேவைப்பட்டது. இடம் சூனியமானது. ஆளுக்கொரு அடியுடன் அலறியடித்தபடியே ஓட்டம் பிடித்தார்கள்.

ஊருக்குள் நடக்கிற சண்டை வீட்டுக்குத் தெரிந்துவிடும். அவர்கள் தலைமறைவாக இருக்கச் சொன்னார்கள். நிர்ப்பந்தத்திற்குப் பணிந்து இரண்டு நாட்கள் தலைமறைவாக இருந்தேன். மூன்றாவது நாள் திரும்பவும் வந்தேன். ஒரு வாரம் கழிந்தது. ஒருநாள் அக்காவின் குழந்தையையும் கையிலெடுத்துக்கொண்டு வீட்டின் முன் நிற்கும்போது தெற்குப் பக்கமிருந்து ஏழெட்டு பேர்கள். பார்த்ததுமே தெரிந்துபோய் விட்டது, அடியாட்கள். என்னைத் தேடித்தான் வருகிறார்கள். இன்று இரண்டிலொன்று நடக்கும். பிரவ்டன் கழுத்தில் இருக்கிறதா என்று

பார்த்தேன். வராந்தாவிலேறி நான்கு பிளேடுத் துண்டுகளை எடுத்து வாயில் வைத்துக்கொண்டேன். பெரும்பாலும் நான் மெடிக்கல் காலேஜில் சேர்க்கப்பட்டு விடுவேன் என்பது மட்டும் நிச்சயம். அன்று ஷாப்பில் வைத்து அடிக்க வந்தவர்களில் முன்னணியில் நின்றவனும் கூடவே வந்தான்.

நான் குழந்தையைக் கையில் கொடுத்துவிட்டு ரோட்டிலிறங்கி அவர்கள் வருகிற திசையைப் பார்த்து முன்நோக்கி நடந்தேன். வீட்டிலுள்ளவர்களின் எதிரில் கிடந்து எதற்கு அடி வாங்கிச் சாக வேண்டும்? எதிரெதிராக வரும்போது ஆட்களைத் திரட்டிக் கொண்டு வந்தவன் சொன்னான்:

"கையில திரச்சி மீன் வால் வெச்சிருப்பான்."

பாவம், தவறாக நினைத்து விட்டான்.

அவர்கள் என்னை நோக்கிச் சரம்போல் பாய்ந்தார்கள். பிறகு நடந்ததெல்லாம் நாடக பாணி நிகழ்வுகள். கையை ஓங்கியவன் சொன்னான்:

"நீ மணியன்தானேடா?"

"ஏன் பாத்தால் தெரியலையா?"

கொல்லம், பதினெட்டரை கம்பெனியிலுள்ள ஒன்றி ரண்டு பேர் அதிலிருந்தார்கள். இடையிடையே சப் ஜெயிலிலும் சின்னக்கடையிலுமெல்லாம் நாங்கள் சந்தித்துக்கொள்வது வழக்கம். கொல்லத்தில் முதன் முதலாக யூனியன் ஆரம்பித்தவர்கள் இவர்கள்தான். நான் முன்பு ஒரு கடையில் இரண்டு மாதம் வேலை பார்த்தேன். சம்பளம் தரவில்லை. இவர்களிடம் போய்ச் சொன்னேன். கடையிலிருந்து இரண்டு வாழைப்பழக் குலைகளை வெட்டியெடுத்தார்கள். பிறகு எதையும் வெட்ட வேண்டிய தேவை இருக்கவில்லை. நான்கு மாதச்சம்பளக் காசை வாங்கித் தந்துவிட்டார்கள். இதில் பகுதி அவர்களுக்குச் சேர வேண்டும். சின்னப்பையன் என்பதால் எடுக்கவில்லை. அதிலுள்ள பெரிய ஆட்களுடனும் எனக்குத் தொடர்பிருந்தது. அதிலுள்ள ஒன்றிரண்டு இளையவர்கள்தான் இவர்கள்.

"ராஜா *காக்கா சொல்லித்தான் நீங்க என்னை அடிக்க வந்தீங்களாடா?"

நான் கேட்டேன்.

"என்ன மாப்ளே . . . இது சும்மா ஒரு சைடு. நானூறு ரூபாயும் தண்ணியும். சாயங்காலப் பொழுதைக் கழிக்கணும்னா கொஞ்சம் பூசணுமே . . . சும்மா கொஞ்சம் மிரட்டி வைக்கணும்னு சொல்லிக் கூப்பிட்டாங்க."

"உன் வீடெங்கே, குடிக்கிறதுக்குக் கொஞ்சம் எலுமிச்சம் பழ ஜூஸ் சொல்லு."

அடியாட்கள் என் வீட்டைப் பார்க்க வந்தார்கள். சகோதரியின் குழந்தையை வாங்கிக் கொஞ்சினார்கள். தூரத்தில் நின்றிருந்தவனை இங்கே கூப்பிட்டார்கள்:

"இவர் திருடுறதுக்கு இனிமேல் உங்க சொந்தக்காரனைக் கூட்டிட்டுப் போக மாட்டார். போதுமா? உங்களோட தேவை இதுதானே?" பிறகு என்னிடம் சொன்னான்: "மாப்ளே இனி அவன் வந்தால், இங்க பாரு . . . பிடிச்சு வெச்சு நிமிண்டி உட்டுடு. இல்லேன்னாலும் உனக்கு எதுக்கு மாப்ளே அவன் . . . அப்புறம், இவரு எங்களோட மாப்ளயாக்கும். இவருக்கு எந்தப் பிரச்சினையும் வந்துடப்புடாது என்ன? சரி, பிரச்சினை காம்ப்ரமைஸ்."

"என்ன சொல்லுறே?" ஜெயனின் உறவினர் கேட்டார்.

"காம்ப்ரமைஸ் . . ."

"மாப்ள கூப்பிட்டால் ஒருவேளை நாங்க நானூறு வாங்காமலேயே இங்க வரவேண்டியதாயிடும். புரியுதா . . . அதுனாலதான் சொல்றோம் . . . ஆமா."

"பணத்தைக் கொடுத்துட்டுப் போ. சரி, அப்ப நாம என்ன முடிவெடுத்தோம்?"

"காம்ப்ரமைஸ்."

பணத்தை வாங்கினார்கள். நானும் அவர்களுடன் புறப்பட்டேன். அன்றைய பொழுது, என்னை அடிக்க ஆட்களை ஏவியவர்களின் செலவில் கழிந்தது.

பிறகு நான் ஜெயனுடன் பெரிய அளவிலான எந்தத் தொடர்புகளும் வைத்துக்கொள்ளவில்லை. விலக்கிவைத்துவிட்டேன். அவன் இன்று

எங்கே இருக்கிறானோ, உயிருடன் இருக்கிறானா என்றுகூடத் தெரியவில்லை.

மய்யநாட்டுத் திருட்டு நடந்து இரண்டு மாதம் கழிந்த பிறகு ஒரு நாள். கொல்லம் - திருவனந்தபுரம் தேசிய நெடுஞ்சாலையில் தட்டாமலை என்னுமிடத்திலிருந்து இரண்டு கிலோ மீட்டர் நடந்தால் எங்கள் ஊருக்கு வந்துவிடலாம். பெரிய அளவில் ஆள் சஞ்சாரமில்லாத பகுதி. ஜெயன் சைக்கிளில் வரும்போது ஒரு பெண் தனியாக வந்துகொண்டிருந்தாள். பகல் நேரம். ஒற்றையடிப்பாதை. அவன் அவளது மார்பைப் பிடித்துவிட்டான். வேலை எதுவுமில்லாத சில வாலிபப் பையன்கள் அங்குமிங்குமாக நின்றிருந்தார்கள். அவர்களுக்கு வேலையை வருத்தி வைத்துவிட்டான். பொறாமையிருக்காதா? வெறுமனே தெற்கு வடக்காக நடந்து, புளகாங்கிதத்தோடு பார்த்துக்கொண்டிருக்கிற புனிதமான ஒரு பகுதியில் எவனோ ஒருத்தன் எந்தச் செலவுமில்லாமல் வந்து கை வைத்தால்? பிறகென்ன? உதை விழாவும் குறுணைக் கஞ்சியும் தான்.

அதோடு அவனுடைய ஜாதகம் முழுவதும் அங்கே அலசப்பட்டது. இவன் திருட்டு மணியனின் ஸ்டெப்னி. கூட நான்கு கிடைத்தது. என்னுடைய பங்காக! ஸ்டேஷனில் ஒப்படைக்கப்பட்டான். மார்பைப் பிடித்தது, செயினைத் திருட முயற்சித்ததாக மாற்றப்பட்டது. பெண்ணின் மானத்தையும் கவனத்தில் கொள்ள வேண்டுமல்லவா? போலீஸ்காரர்கள் பார்த்தார்கள் அருமையான மோதிரம். "இது எங்கிருந்துடா . . ?" ஏதேதோ சொல்லிப் பார்த்தான். உதைத்தார்கள். சொல்லிச் சொல்லி உண்மை வெளிவந்தது. அத்துடன் நானும் விஐபியானேன். போலீஸ் டிப்பார்ட்மெண்ட் எனக்கு ஆள் அனுப்பியது. மய்யநாட்டின் கதையை மக்கள் அறிந்தார்கள். பிரதி பலனாக எங்கள் உடம்பும் அதை உணர்ந்துகொண்டது.

இந்தச் சம்பவமும் சேர்ந்தபோது, திருடன் தனியொரு மனிதனாகவே இயங்க வேண்டும் என்னும் உண்மையை மேலும் வலுப்படுத்தியது. இன்னொருவன் கூட இருந்தால் பிடிபடுவதற்கான வாய்ப்பு இரட்டிப்பாகி விடுகிறது.

***

கழுத்துச் செயினைப் பறிக்க முயற்சி செய்தது உட்பட ஜெயனின் பெயரில் ஐந்து வழக்குகள் பதிவு செய்யப்பட்டன. அதில் மூன்றில் நான் கூட்டுப்பிரதி. இந்நேரம் நான் ஜெயிலில் இருந்தேன். போலீஸ் எல்லா

இடங்களிலும் என்னை வலை வீசித் தேடியது. ஜெயிலில் இருப்பதைக் கடைசியில்தான் அறிந்தது. ஜெயிலுக்குப்போன காரணம் வேறொன்றுமில்லை. எங்காவதுபோய் நிம்மதியாக வாழலாமென்று இடையிலொரு முடிவு செய்தேன். மனைவி மெகருன்னிஸாவையும் ஆறு வயதான மகனையும் அழைத்துக்கொண்டு மைசூர், சுல்தான் பத்தேரி பெங்களூரு, மேட்டுப்பாளையம், ராமேஸ்வரம் போன்ற ஊர்களில் அலைந்தேன். இதனிடையே மைசூரிலிருந்து சுல்தான் பத்தேரிக்கு வந்து கொஞ்ச நாட்கள் தங்கியிருந்தேன். அங்கும் சரியாக வரவில்லை. வேறெங்காவது போக வேண்டும். அதற்குக் கொஞ்சம் காசு வேண்டும். திருவனந்தபுரத்துக்கு ரகசியமாக வந்தேன். மனைவியையும் குழந்தையையும் போத்தன்கோட்டில் மைத்துனனின் வீட்டில் விட்டுவிட்டு திருவனந்தபுரத்தில் வந்திறங்கினேன்.

பொன்னன் என்னும் விற்பனை வரி அதிகாரியின் வீட்டில் நுழைந்தேன். ஒரு சிட்டிஸன் வாட்சு, ஒரு செயின், 1300 ரூபாய். இவ்வளவுதான் தேறியது. அலமாரியைத் திறக்க முடியவில்லை.

பணம் பற்றாது. இன்னொரு ஆபரேஷன் நடத்த வேண்டும். மறுநாளும் இறங்கினேன். கண்ணுமூலையில் சட்டம்பி ஸ்வாமி உருவச் சிலையின் கிழக்குப் புறமிருக்கும் ரோட்டுக்கு வந்தேன். கண்கள் ஒவ்வொரு வீடாக நோட்டமிட்டுக் கொண்டிருந்தன. அன்று மின்சார இலாகா ஊழியர்களின் போராட்டம் நடந்துகொண்டிருந்தது. டிரான்ஸ்பார்மர்களுக்குப் போலீஸ் காவல் நின்றது.

திடீரென்று மூன்று நான்கு போலீஸ்காரர்கள் குதித்து வந்து என் முன்னால் நின்றார்கள். எதிர்பார்க்கவே இல்லை. வேறெதையோ யோசித்தபடி நடந்துகொண்டிருந்தேன். எங்கே போகிறாய் என்று கேட்டார்கள். மெடிக்கல் காலேஜுக்கு என்றேன். எங்கிருந்து வருகிறாய் என்று கேட்டார்கள். உடனடியாக பதில் வரவில்லை; தடுமாறினேன். ஸ்டேஷனுக்குக் கொண்டு வந்துவிட்டார்கள். ரவீந்திரன் பிள்ளை என்னும் தெரிந்த ஒரு போலீஸ்காரர் வந்தார்.

"அட, இது நம்ம மணியன்பிள்ளையில்லே, சரி, ஒண்ணும் யோசிக்க வேண்டியதில்லை. தூக்கி உள்ள போடு." என்றார்.

போர்ட் போலீஸ் ஸ்டேஷனுக்கு மாற்றினார்கள். விசாரணைக்குப் புகழ்பெற்ற இடம். சர்க்கிள் யூஸஃப் சார் உள்ளங்காலில் அடிக்க ஆரம்பித்தார். நான் சொன்னேன்: "அடிக்கவெல்லாம் வேண்டாம்;

உண்மையைச் சொல்லிடுறேன். எழுதிக்குங்க."

***

ஒரே வீட்டில் ஒன்றுக்கு மேற்பட்ட தடவைகள் நுழைவது அநியாயம். ஒரு அதிர்ச்சியிலிருந்து மீண்டு வருகிற நேரத்தில் மற்றொன்று. இது அநீதி. மட்டுமல்ல, திருடனைப் பொறுத்தமட்டிலும் ஆபத்தானதும்கூட! ஏனென்றால் வீட்டுக்காரர்கள் வீட்டின் பாதுகாப்பைக் குறித்து எச்சரிக்கையுடன் இருப்பார்கள். குறிப்பிட்ட இடத்தை வலுப்படுத்தி இருப்பார்கள். போதமற்றுத் தூங்குவதை நிறுத்தி இருப்பார்கள். ஒரு சிறு அசைவு கேட்டாலும் எழுந்துவிடுவார்கள்.

இருந்தும் நான் ஒரே வீட்டில் மூன்று தடவை நுழைந்தேன். அதுவும் இரண்டு வருடத்திற்குள். மூன்று முறையும் வெவ்வேறு நுழைவாயில்கள். முதலில் ஜன்னல் கம்பியை வளைத்து. அன்று அறைக்குள்ளிருந்த பொருட்களை மட்டும் எடுத்தேன். இரும்பு அலமாரி பூட்டப்பட்டிருந்தது. சாதாரணமான முயற்சிகளில் ஈடுபட்டும் அதைத் திறக்க முடியவில்லை. விசேஷமாக எதையேனும் முயற்சித்தால் வீட்டிலுள்ளவர்கள் விழித்துவிடக்கூடும். அன்று தோல்வியுடன்தான் திரும்பினேன்.

இந்த இச்சாபங்கத்தைத் தீர்ப்பதற்கென்றே இன்னொரு முறை நுழைந்தேன். இடையே என்னுடைய நெருங்கிய நண்பனின் வீட்டிற்குச் சென்றிருந்தபோது அவனிடம் சொன்னேன்:

"மாப்ளே, நீ ஒரு நல்ல இரும்பு அலமாரா வாங்கலாமே? பாரு, துணியெல்லாம் குப்பைபோல கிடக்குறதை . . . யாராவது பார்த்தா என்ன நினைக்க மாட்டாங்க?"

"போடா, காசு வேண்டாமா? எவன் கொடுக்குறான், விலையில்லா அலமாரா?"

நான் சொன்னேன்: "முதல் தவணையைமட்டும் கொடுத்து இன்ஸ்டால்மெண்ட்ல வாங்கு."

"மூணு நாலு மாசமாக பயங்கர டைட்டுடா மாப்ளே."

"ஒருமாச இன்ஸ்டால்மெண்டை நான் கொடுக்கறேன். நீ திரும்பத் தர வேண்டியதில்லை."

"அது சரி . . . நான் அலமாரா வாங்குறதுல உனக்கேன் இவ்வளவு ஆர்வம்?"

"ஒரு வித்தைப் படிக்கணும்டா . . ." வெட்கத்துடன் சொன்னேன்.

அவன் அலமாரா வாங்கினான். நான் வித்தைக் கற்கத் துவங்கினேன். அலமாரா தகடாக இருந்தாலும் கனமான இரும்புத் தகடுதான் என்பது புரிந்தது. பிடியைப் பிடித்துத் திறந்தால் எங்காவது தடுப்பிருக்கும். தகடென்பதால் கிடுகிடா சத்தம் கேட்கும். திறப்பது சிரமமான விஷயம். கொஞ்ச நாட்கள் பயிற்சியின் பிறகு அதன் மர்மஸ்தானம் பிடி கிடைத்தது. அதொரு புள்ளி. அந்த இடத்தில் திறந்தால் சத்தம் வராது. பயிற்சிக்குத் தோதுவாக அலமாராவும் எனக்கு ஒத்துழைத்தது.

அதே வீட்டில் திரும்பவும் நுழைந்தேன். இப்போது நுழைவாயில் வாசல் கதவுதான். அலமாராவைப் பூ போல் திறந்தேன். கொஞ்சம் தங்கமும் பணமும் கிடைத்தது. ஆறு மாதத் தவணைக்கான பணத்தை ஏற்கனவே நண்பனுக்குக் கொடுத்திருந்தேன். என்னுடைய பயிற்சியில் அலமாரா மிக மோசமாக வளைந்து போய்விட்டது.

இரண்டாவது தடவை வீட்டைச் சோதனையிட்ட போதுதான் வெண்டி லேட்டர் வழியாக சுலபமாக வீட்டுக்குள் நுழைய முடியும் என்பதைப் புரிந்துகொண்டேன். ஒரேயொரு கொண்டிதானிருந்தது. மெல்லிய ஆக்சில் பிளேடை நுழைத்தால் பூ போல் திறந்து கொடுக்கும். ஒரேயொரு கம்பிதான். அதை இலேசாக வளைத்துக் கம்பியில் லுங்கியைக் கட்டியிறங்கி விடலாம். அதிகம் போனால் பத்து நிமிட வேலை.

மூன்றாவது தடவையாக இப்படி நுழைந்தேன். ஒரு சில சாமான்கள்தான் கிடைத்தன. இருந்தாலும் வீட்டிலுள்ளவர்கள் என்னை ரொம்பவே சபித்திருப்பார்கள் இல்லையா? எப்படி அவர்களால் மனநிம்மதியாகப் படுத்துத் தூங்க முடியும்? திருடன், வித்தியாச, வித்தியாசமாக நுழைகிறான் நுழைகிறான், நுழைந்துகொண்டே இருக்கிறானே?

## 27 - வீடு கட்டுவோர் கவனத்திற்கு . . .

வீடு கட்டும்போதிருக்கும் கவனக்குறைவு முக்கியமான விஷயம். வேலை செய்யும் ஆசாரிக்கு ஒரு திருடனின் மனோபாவமிருக்க வேண்டும். திருடனை எப்படித் தவிர்ப்பதென்ற வித்தையில் அவன் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும். அப்படியான ஆசாரி கிடைக்கவா போகிறான்? ஆனால், வீட்டுக்காரனாவது தேர்ச்சி பெற்றவனாக இருக்க வேண்டும். நிலம் வாங்கும்போது சத்தக்கோலாகலமான இடத்தைத் தேர்வு செய்யக்கூடாது. இரவு முழுவதும் வீட்டின் எதிரிலுள்ள ரோட்டில் வண்டிகள் போய்க்கொண்டே இருக்குமென்றால் நாம் நினைப்போம்: பயப்பட என்ன இருக்கிறது? எந்நேரமும்தான் கலகலப்பாக இருக்கிறதே என்று. திருடன், அவனிடமிருந்து வெளிப்படும் சத்தத்தை மட்டுமே வெறுக்கிறான். வேறு சத்தங்கள் வருமென்றால் அது அவனுக்கு வசதியான விஷயம். ஒரு தேங்காய் விழுகிற சத்தமே அவனுக்குப் போதுமானது. இதை முன்னரே அவதானிக்க இயலுமென்றால் அக்கணத்தில் பின்வாசல் கதவை அவன் ஒரே அடியில் உடைத்திருப்பான். ஐந்து கிலோ எடையுள்ள ஏதாவதொன்று இதற்குப் போதுமானது. காலோ அரையோ அங்குல இரண்டு திருகாணியின் பலத்தில் நின்றுதான் ஒரு வீடு திருடனை எதிர்கொள்கிறது. எனவே, கதவுகளின் பின்னால் இரும்புப் பட்டைகள் பிணைக்கப்பட்டிருக்க வேண்டும். வலுவான ஒரு பட்டை இருக்குமென்றால் வாசல் கதவை உடைத்து இரும்புப்பாளத்தை நீக்கிவிட்டுத்தான் உள்ளே நுழைய இயலும். முன்பின் வாசல் கதவுகளின் கீழ்ப் பகுதிகளில் பெரிய அளவிலான வேலைப்பாடுகள் வராமல் பார்த்துக்கொள்ள வேண்டும். சிறிதாக இருந்தாலே போதும். சிறிதாக இருந்தால் சிரமம் அதிகம். சீவுளி வைத்துச் சீவிய இணைப்புப் பகுதிகள் பலவீனமாக இருக்கக்கூடாது. அந்தப் பகுதிகளில் சாதாரண கனமிருக்க வேண்டும்.

ஆளில்லாத வீட்டில் எதைப் பிணைத்திருந்தாலும் திருடன் நுழைந்துவிடுவான். பெரும்பாலும் இரண்டு மரச்சட்டங்களில் தான் பட்டை பிணைக்கப்பட்டிருக்கும். மரத்தில் செய்து வைத்த எதையும் திருடனால் உடைத்து விட முடியும். பலகையென்பது மரத்தின் ஒரு உறுப்பு. நம்முடைய எலும்புபோல்தான் அதன் பலம். என்றாவதொரு

நாள் மண்ணோடு மண்ணாக மக்கிப்போகிற ஒரு பொருள். இதன் வலு வரையறைக்கு உட்பட்டது. என்னதான் வலுவாக இருந்தாலும் பலம் பிரயோகிக்கும்போது பிய்த்துக்கொண்டு விடும். வாசலுக்கு முன்னால் இரும்புக் கிரில் கதவிருக்கும் வீட்டை திருடன் திரும்பியும் பார்க்க மாட்டான். அப்படியே இரும்புப் பட்டைப் பிணைப்பதாக இருந்தால் இரண்டு சுவர்களில் பிணைக்கப்பட வேண்டும். இப்படியான ஒரு கதவை உதைத்துத் திறந்துவிட இயலாது. இப்போது வீட்டைத் தகர்த்துக் கொள்ளையிடுவது பெரும்பாலும் மூன்று நான்குபேர் சேர்ந்து கதவை உடைத்துதான் என்பதையும் நினைவில்கொள்ள வேண்டியதிருக்கிறது.

***

நானும் குடும்பமும் அப்போது மேட்டுப்பாளையத்தில் வசித்து வந்தோம். மனைவியின் தங்கை பீமாவும் அவளது கணவனும் என்னுடைய பழைய தொடுப்பான கமாலும் அங்குதான் வசித்து வந்தார்கள். எனக்கு வேறு வருமானங்கள் எதுவுமில்லை. அப்படியே இருந்தாலும்கூட இடையே எங்காவது நுழைந்து ஒரு ஆபரேஷன் நடத்தாமலிருந்தால் மனம் சாந்தி அடையாது. லாட்டரிச் சீட்டுக் கிறுக்கன்களைப் போல்தான் திருடன்களும். லாட்டரியில் ஆபத்து ஏதுமில்லை. இதில் இருக்கிறது. இதுதான் வேறுபாடு. எதிர்பார்ப்பின் அடிப்படையில் இரண்டுக்கும் வேறுபாடில்லை. முதல் பரிசுக்குக் கீழுள்ள எதையுமே நாம் கற்பனை செய்வதில்லை. திருட்டிலும் இதுதான் நிலைமை. பொற்குவியலைக் கனவு கண்டு திரியும் பித்தன்தான் திருடன். இந்த உலகத்திலுள்ள மிகப் பெரிய செல்வந்தனின் தங்கமும் பொருளும் தனக்காகவே காத்திருப்பதாக அவன் நினைத்துக்கொண்டிருப்பான். ஒவ்வொரு திருட்டையும் நடத்தி முடிக்கும்போதெல்லாம் அவனுக்கு ஏமாற்றமாகவே இருக்கும். ஆறுதல் பரிசாக சில நேரங்களில் பத்தோ ஐநூறோ கிடைக்கலாம், அவ்வளவுதான். அடுத்த விளம்பரத்தைக் கேட்கும்போது திரும்பவும் லாட்டரிச் சீட்டு வாங்க ஆசைப்படுவது போல், அடுத்தத் திருட்டை எதிர்பார்த்துத் திருடனுக்குள் பதற்றம் ஆரம்பித்துவிடுகிறது.

## 28 - டாக்டர்கள் கவனத்திற்கு . . .

ஒரு ஆபரேஷன் நடத்தும் நோக்கத்துடன் பக்கத்திலுள்ள, பாலக்காட்டில் அவதரித்தேன். டாக்டர்களின் வீடுகளைத் தேடி நடந்தேன். என்னுடைய வாழ்க்கையில் இதுவரை எந்த மருத்துவருமே எனக்கெதிராக வழக்குத் தொடர முன்வந்ததில்லை. குறைந்தபட்சம் அன்றைய ஃபீஸையாவது கன்சல்டிங் ரூமுக்குள் வைக்காத டாக்டர்கள் இருக்கவே முடியாது. எல்லாருக்கும் பரிசு உறுதி என்று விளம்பரங்களில் பார்ப்போம் அல்லவா. அதுபோல்தான் டாக்டர்களின் வீடுகள். மெய் வருத்தக் கூலி உறுதி. பாலக்காட்டில் டாக்டர்கள் குறைவாக இருப்பார்கள் போல் தெரிகிறது. நெடுந்தூரம் அலைந்து திரிந்து கடைசியில் ஒரு வீட்டைக் கண்டுபிடித்தேன். ஆபரேஷன் தொடங்கியது. கம்பியை வளைத்து வைத்தேன். வீட்டில் யாருமில்லை என்பது தெரிந்தது. கார் ஷெட் திறந்து கிடந்தது. கார் இல்லை. ஆகவே, வேலை நிதானமாக நடந்தது. சாப்பிட்டுவிட்டுத் தூங்கி எழுந்து அதிகாலையில் புறப்பட்டால் போதும். வீட்டின் பின்பக்கம்தான் என் நுழைவாயில். உள்ளே தலையை நுழைத்தபோது ஒரு பியட் காரின் சத்தம். அட, கஷ்டகாலமே! மெதுவாகத் திரும்பிவிட்டேன். சாப்பிடவோ, பிரிட்ஜிலிருந்து எதையாவது எடுக்கவோ சமையலறைக்குள் வந்து லைட்டைப் போட்டால் ஜன்னல் கம்பியை வளைத்து வைத்திருப்பது தெரிந்துபோய் விடும். உடனே கூப்பாடு ஆரம்பித்து விடும். வேகமாக பின்புற மதிலைக் கடந்து மெயின் ரோட்டில் குதித்து நின்றேன். எதிரில் நைட் பட்ரோலில் இருக்கும் இரண்டு போலீஸ்காரர்கள். சில நேரங்களில் இப்படித்தான். கஷ்டத்திற்கு மேல் கஷ்டம் வந்து சேரும். தொட்ட எதுவுமே துலங்காது.

நான் கவனிக்காததுபோல் நடந்தேன். போலீஸ்காரர்கள் விடுவார்களா?

"ஸ் . . . ஸ் . . . யாரு, என்ன விஷயம்?"

நான் சொன்னேன்: "இங்க பக்கத்திலொரு இடம்வரை போகணும்."

"எங்கிருந்து வர்றே?"

"கொல்லத்திலேருந்து . . ."

"கொல்லத்திலேருந்து வர்றது இருக்கட்டும், இங்க எதுக்கு வந்தே?"

"பாலக்காட்டுக்கு ஒரு வேலையா வரவேண்டியது இருந்தது."

"சரி, கொல்லத்திலேருந்து பாலக்காட்டுக்கு ஒரு வேலையா வந்தே. இப்ப எங்கே போறே?"

"மேட்டுப்பாளையத்துக்கு. அங்கதான் இப்ப தங்கியிருக்கேன்."

"நல்ல விஷயம்தான். இருக்கட்டும். இப்ப இங்க எதுக்கு வந்தே?"

என்னிடம் பதிலில்லை.

"அப்படின்னா பிரச்சினைதான். சரி, நட, ஸ்டேஷனுக்கு. அங்கே போன பிறகு சொல்லு."

கொஞ்ச தூரம் நடந்தபோது கணக்குப் போட்டேன். என்ன சொல்வது? எப்போது அழைத்தாலும் நுனி நாவின் களிநடம் புரிபவள் கலைமகள். ஊரில் என்னுடைய வீட்டின் பெயர்கூட சரஸ்வதி மந்திரம் என்றுதான். வாணிதேவி, தன்னுடைய அக்காவான மூதேவியை நாவில் குடியமர்த்திவிட்டுப் படுத்துத் தூங்கிவிட்டாள்போல் தெரிகிறது.

மறுநாள் எஸ்ஐ வந்தார்:

"அப்போ, இங்க எதுக்கு வந்தேன்னு உன்னால சொல்ல முடியாது."

சரஸ்வதிதேவி நாவில் உணர்ந்தாள்: அய்யோ, எம் பிள்ளையாண்டான் மணியன் திரும்பவும் உள்ள போயிட்டானா என்று வியாகுலப்பட்டாள்.

"சார், என்னை ஒருத்தன் பஸ் ஸ்டாண்டிலிருந்து ஆசைக்காட்டி அழைச்சிட்டு வந்துட்டான். அங்க பக்கத்திலெங்கோ ஒரு பெண்ணிருக்கறதாச் சொல்லி, நூறு ரூபாயும் வாங்கிட்டு இருட்டுல எங்கியோ போய் ஒளிஞ்சிட்டான்.

"சார், நான் மேட்டுப்பாளையத்தில ஒரு ஒர்க் ஷாப் வெச்சி கௌரவமாக வாழுறவன். என் பொஞ்சாதி அறிஞ்சான்னா பிறகு உயிரோட இருக்குறதுல அர்த்தமே இல்லை சார் . . ."

"ஆங் . . . அதையெல்லாம் கோர்ட்டுல வந்து சொல்லு. இங்கே

கேசெல்லாம் ரொம்பக் கம்மியா இருக்கு . . . பெட்டியடிச்சுட்டுப் போயிடு."

அப்படியாக, சந்தேகப்படும்படியான சூழ்நிலையில் கைது செய்யப்பட்டதாகக் குற்றம் சாட்டி உள்ளே தள்ளினார்கள். என்னைக் கைது செய்த ரோந்து போலீஸ்காரர்கள் சாயங்காலம் வந்தார்கள்.

"ஆங் . . . நாங்களும் அறிஞ்சோம் . . ."

நடுவிரலால் சைகைக் காட்டி சொன்னார்:

"துளைபோட வந்தே, இல்லையா?"

"அந்தப் பக்கம் யாரு, அவ?"

அவர்கள் பரஸ்பரம் கேட்டார்கள்.

"தலப்பாறை ஜானகியா இருக்கும்."

"இதை அங்க வெச்சே சொல்லியிருக்கப்படாதா? இருக்குறக் காசைக் கொண்டு போய் கோர்ட்டுலே கட்டுறியே? எங்ககிட்டே தந்தா வாங்கிக்க மாட்டமா? பாரு, இப்போ தேவையில்லாத மெனக்கெடும் அவமானமும் . . ."

விவரத்தை அறிவித்ததன் பேரில் அக்காவும் தங்கையும் மகனுடன் கோர்ட்டுக்கு வந்தார்கள். வக்கீலுடன்தான் வந்திருந்தார்கள். விஷயங்களை எப்படி அணுகுவதென்று இப்போதெல்லாம் அவர்களுக்கும் தெரியும்.

வழக்கு நடக்கும்போது கோர்ட்டுக்கும் வந்திருந்தார்கள். நீதிபதி ஒரு பெண்மணி. இவர் தனியறையில் உட்கார்ந்திருக்கும்போது இவரது கண்களில் படுகிற இடத்தில் கீழே மரத்தடியில் நீண்ட நேரமாக இரண்டு இளம்பெண்களும் ஒரு சிறுவனும் நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தார். சிறுவன் இடையிடையே கொட்டாவி விடுகிறான். ஒவ்வொரு முறையும் கையைச் சுருட்டி வாயை மறைத்துக்கொள்ளவும் செய்கிறான். கௌரவமான ஏதோ குடும்பத்தைச் சேர்ந்தவர்களாக இருக்குமென்று மேடம் தவறாகக் கருதியிருக்கலாம்.

ஆளனுப்பி என்ன விஷயமென்று கேட்டு வரச் சொன்னார்.

"சந்தேகத்தின் பேரில் பிடிபட்ட ஒரு வழக்கு சம்பந்தமாக வந்தவர்கள்."

சந்தேகக் கேஸ் என்றால் பெரும்பாலும் பொய்க் கேசாகத்தானிருக்கும் என்பது அவருக்குத் தெரியாதா என்ன? சாயங்காலம் விசாரிக்கப் போவதாக வைத்திருந்த வழக்கு முதல் வழக்காக மாறியது. நான் அலட்சியமாக உட்கார்ந்திருக்கும்போது கூப்பிட்டார்கள். 500 ரூபாய் அபராதம் கட்டிவிட்டு வெளியே வந்தேன்.

மனைவி திட்டினாள். நீதிமன்ற வளாகத்திலிருந்து வெளியே வரும்போது அறிமுகமான ஒருவன். நினைவுபடுத்திப் பார்த்த பிறகுதான் தெரிந்தது, நம்ம தூறிப்பாக்கரன்.

"டேய், தூறி?"

திடுக்கிட்ட பாக்கரன் ஓடுவதற்கான நிலையை எடுத்தான். நான் சொன்னேன்:

"டேய் மாப்ளே, நான்தாண்டா மணியன்பிள்ளை."

"மாப்ளே . . ."

நீண்டநாட்களுக்குப் பிறகு சந்தித்த அன்பிருந்தாலுமே அடுத்த நிமிடம் இரண்டுபேருக்குமே அங்கலாய்ப்பாகிவிடும். திருடன்கள் பரஸ்பரம் நம்பமாட்டார்கள்.

"என்னடா மாப்ளே நீ இங்கே? நம்ம தேசம் கொல்லமில்லையா . . ?"

"மாப்ளே, நான் கோயமுத்தூர் உக்கடத்தில ஒரு கல்யாணம் பண்ணிட்டு அங்கயே தங்கியிருக்கேன் . . ."

"நீ . . ?"

"நானேதான் . . . நான் கொடைக்கானல்லே கம்பளி வியாபாரம் . . ."

இரண்டுபேருமே பொய் சொல்லுகிறோமென்று இரண்டுபேருக்குமே தெரியும் . . .

"மாப்ளே, நீ கொல்லத்துக்குப் போறதுண்டா? ஸ்டேஷனுக்கு?"

அடுத்தப் பொய்யைச் சொன்னேன்: "ஆமா, ஊருக்குப் போகும்போதெல்லாம் அங்கயும் போவேன். நாம கௌரவமாக வாழறதை அவங்களும் தெரிஞ்சுக்க வேண்டாமா?"

"மாப்ளே, என்னைப் பற்றி ஏதாவது விசாரிப்பாங்களா?"

"விசாரிக்காம? பழைய திருடனுங்களை அவங்க மறந்துடவா செய்வாங்க? ஏதாவது திருடன் எங்கியாவது தூறி வெச்சா உடனே உன்னைத்தான் தேடுவாங்க . . ."

"சே . . . நான் அந்த அசிங்கம்பிடிச்ச வேலையை எல்லாம் விட்டுட்டேன் மாப்ளே."

"அது எனக்குத் தெரியாதா . . ?"

"நீ என்ன சொல்வே?"

"அவனை இப்போ எங்கயுமே பாக்க முடியலை, செத்துட்டான்னு தோணுதும்பேன்."

அவன் கை தந்தான்.

"ரொம்ப நல்லதாப் போச்சு மாப்ளே. செத்துட்டான்னு தெரிஞ்சாதான் அவனுங்க நம்ம பேரை நீக்குவானுங்க. மாப்ளே இனி ஊருக்குப் போகும்போது இன்னும் ரெண்டு பேரு பாக்கரன் செத்துட்டான்னு சொல்ற மாதிரிப் பாத்துக்க."

"இது நல்ல ஐடியா."

"சாக்காலம், பாலக்காட்டுல, வேண்டாம் கண்ணூர்ல வெச்சு நடந்ததாகவும் முனிசிப்பாலிட்டிக்காரங்க பொதைச்சிட்டதாகவும் சொல்லிடு."

"அதுவும் சரிதான்."

"மாப்ளே . . . சாயா?"

"வேண்டாம் மாப்ளே."

மனைவியையும் குழந்தையையும் வேண்டுமென்றே

அறிமுகப்படுத்தவில்லை. அவர்களுக்குத் தெரியும் திருடன்களின் சந்திப்பென்று. அவர்கள் கொஞ்ச தூரம் நடந்து முன்னால்போய் நின்றார்கள். குழந்தைக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறேன். டாடி என்று ரோட்டில் வைத்துக் கூப்பிடக்கூடாது. அவனும் கூப்பிடமாட்டான்.

"இருந்தாலும் அந்தப் பழைய நீதிபதிக்கு ஒரு நீதி செய்ய முடியாம போயிட்டதே மாப்ளே?"

"அசிங்கம் பண்ணி வைக்கவாவது முடிஞ்சுதே மாப்ளே . . ? பாவம், உனக்கு ஆறு மாசத் தண்டனை . . ."

"இதெல்லாம்தானே நட்பு. அதுக்கான சுவாரஸ்யம் இதுதான்."

"சரி, மாப்ளே . . . எங்கயாவது வெச்சு இதுபோல சந்திக்கலாம்."

தேவையே இல்லை என்று இரண்டு பேர் மனதும் சொல்லியிருக்கும்.

"மாப்ளே, பேரு நீக்குற விஷயம் நினைவிருக்கட்டும்."

"அதை நான் ஏத்துருக்கேன் மாப்ளே."

பின்பொரு முறை, ஊரில் என்னுடைய கூட்டாளியாக இருந்த திருட்டு சூரியனின் பெயரை நான் சொல்லித்தான் ஈஸ்ட் ஸ்டேஷன் பட்டியலிலிருந்து நீக்கினார்கள்.

"அவன் செத்துப்போய் ஒரு வாரமாகுது. இனிமேலாவது அவன் பேரை நீக்கிடுங்க. நீங்களே அவனைப் பிடிச்சு வெச்சிருக்கறது நல்லாயில்லை. அவனோட ஆன்மாவுக்கு அடுத்த ஜென்மத்திலாவது நல்ல பிறவி கிடைக்கட்டும். நீங்க லேட்டாக்கினா அது கிடைக்காமப் போயிடப் போவுது. ஆன்மாவையும் ஸ்டேஷனைச் சுத்தியே அலைஞ்சு திரிய விடாம பேரை நீக்கிடுங்க" என்று தமாஷாகச் சொன்னேன்.

"சரிடா மணியா, இன்னைக்கே அவன் பேரை நீக்கிடுவோம்."

ஒரு வாரத்திற்குப் பிறகும் சூரியனின் ஆன்மா அங்கேயே நின்றது.

"சே, நீங்க லேட்டாக்குனா அப்புறம் அவன் பழையபடியும் திருடனாகப் பிறவியெடுக்க வேண்டிதாயிடும். ஆன்மாவையும் குற்றவாளிப் பட்டியலிலே வெச்சிருந்தா எப்படி . . ? எல்லாப் பிறவியிலேயும்

திருடனாத்தான் வாழணுமா? ஒரு மாற்றம் வேண்டாமா?"

"ஏண்டா, ஒவ்வொரு ஆன்மாவும் இப்படித் திடீர் திடீர்னு புனித ஆன்மாவா மாறிட்டா நாங்க போலீஸ்காரங்க என்னடா பண்றது?"

"நீங்கதான் அடுத்தப் பிறவியில திருடனாப் பொறக்கப் போறீங்களே?"

"எல்லா ஜென்மத்திலயும் ஒரே வேலை கிடைக்காதுடா."

"உறுதியால்லாம் சொல்லிட முடியாது சார். ஒருவேளை கிடைக்கவும் செய்யலாம். இந்த ஜென்மத்தில யூனிஃஃபார்ம் போட்டும், மறுஜென்மத்தில மஃஃடியிலேயும்."

"போடா, கள்ளக் கழுவேறிக்குப் பொறந்தவனே . . ."

"சார், அப்படின்னா . . . கௌரவமான பிரஜையும் வீரனுமாக வாழ்ந்த திருட்டு சூரியனின் கதிமோட்சம் . . ?"

சரி, இதோ பெயரை நீக்கிட்டேன் என்றார்கள். போலீஸ்காரர்களல்லவா! அக்கம் பக்கத்தில் விசாரித்து உறுதி செய்துவிட்டு இரண்டு நாட்களில் சிவப்பு மையால் பெயரைச் சரியாக நீக்கினார்கள். போலீஸ்காரர்கள் அளவுக்குச் சந்தேகப் பேர்வழிகள் யாரிருக்கிறார்கள்? அப்படித்தான் இருக்கவும் முடியும். எங்களைப்போல் வில்லன்கள் இருக்கும்போது வேறென்ன செய்வது?

## 29 - டாக்டர் பிள்ளை

போலீசில் பிடிபடாமல் தப்பி நின்றதற்கான காரணம் தைரியமும் அதிர்ஷ்டமும்தான். ஒருதடவை கோழிக்கோடு வெள்ளயில் பகுதியிலுள்ள ஒரு டாக்டரின் வீட்டில் நுழைந்தேன். டாக்டரென்ற பெயர்ப்பலகையை எங்காவது பார்த்தால் தைரியமாக நுழைந்துவிட வேண்டியதுதான். பெரும்பாலும், வழக்கு வக்காலத்து என்று போக மாட்டார்கள். நிறைய இருப்பதால் வெளியில் சொல்லவும் மாட்டார்கள். மட்டுமல்ல, பணம் முழுவதும் கறுப்பல்லவா? நோயாளியைப் பரிசோதிக்கும் அறையில் கன்சல்டிங் ஐம்பது ரூபாய் என்று எழுதி வைத்திருப்பார்கள். எழுபதுகளின் இறுதியிலுள்ள ஐம்பது ரூபாய். ஏழை நோயாளிகளைப் பிழியும் இவர்களது வீட்டில் கடவுளாகப் பார்த்துதான் எங்களை நுழைய விடுகிறார். (நல்ல மருத்துவர்கள் மன்னிப்பார்களாக!) இப்படியான சிறு அதிர்ச்சியைக்கூட இந்தக் கறுப்புப் பணக்காரர்களுக்குக் கொடுக்காமலிருந்தால் பிறகு திருடனென்று சொல்லிக்கொண்டு திரிவதில் என்ன அர்த்தமிருக்கிறது.

இந்த டாக்டரின் வீட்டினுள் நிறைய பெட்டிகளிருந்தன. எல்லாமே சாம்பிள் மருந்துகள். நாட் ஃபார் சேல் என்றெல்லாம் எழுதியிருந்தது. சில பெட்டிகளின்மீது சிலந்தி வலை படர்ந்திருந்தது. மேலே இருந்த இரண்டு மூன்று பெட்டிகளை மட்டும் உடைத்துப் பார்த்தேன். மருந்துகளினிடையே பணத்தையும் வைத்திருக்கலாமல்லவா? எதுவும் கிடைக்கவில்லை. அடியிலிருந்த தூசும் சிலந்தியும் படர்ந்த பெட்டிகளைத் தொடவில்லை. இந்த மாதிரியான பணப் பேய்கள், தேவையில்லாமலும்கூட பணம் வைத்த இடத்தில் இருக்கிறதா என்று அடிக்கடி பார்த்துக் கொள்ளும். ஆகவே, வலை படர்ந்திருந்தால் அதில் எதுவுமில்லை என்பதைப் புரிந்துகொள்ளலாம். ஆனாலும் இந்த சாம்பிள் மருந்துகளை ஏதாவது ஏழைகளுக்குக் கொடுக்கலாமென்று இவருக்குத் தோன்றவில்லையே பாருங்கள்.

ஒன்றிரண்டு அறைகளில்தான் நுழைந்தேன். இதுபோன்ற கறுப்புப் பணக்காரர்களின் வீட்டில் கடவுள் கிருபையால் நுழைந்தாலும் சில நேரங்களில் சாத்தானின் காவல் வலுவாக இருக்கும். இவர்கள் சாத்தானின்

ஆட்களல்லவா? அன்று சாத்தானுக்கு சக்தி கிடைத்த நாளாக இருக்கலாம். எங்குமே உள்நுழைய முடியவில்லை. மொத்தத்தில் தேறியது ஒரு கேமரா, டேப் ரிக்கார்டர், ரோலக்ஸ் வாட்சு, ஒரு மோதிரம் இவ்வளவுதான். மருந்து வைத்திருந்த ஒரு சிறு அட்டைப்பெட்டியைக் காலி செய்து டேப் ரிக்கார்டரைப் பத்திரமாகக் கட்டி நியூஸ் பேப்பரில் பொதிந்தெடுத்தேன். மோதிரத்தை விரலில் அணிந்துகொண்டேன். ரோலக்ஸ் வாட்சை கையில் கட்டினேன். பணக்காரனின் கொழுத்தக் கையில் கிடந்ததல்லவா? என்னுடைய தேய்ந்த கையில் அணிந்தபோது உள்ளங்கைவரை தாழ்ந்துக் கிடந்தது. டாக்டரின் கேமராவைத் தோளில் போட்டுக்கொண்டேன். கிளம்பவிருக்கும்போதுதான் டாக்டரின் ஸ்டெதஸ்கோப்பைப் பார்த்தேன். ஒரு சுவாரஸ்யத்திற்காக அதையும் எடுத்துக்கொண்டேன். ஏதோ ஒரு கம்பெனியின் காம்பிளிமெண்ட் சீல் வைக்கப்பட்ட வெளிநாட்டு சிகரெட் பாக்கெட்டிருந்தது. பாவப்பட்டவனுக்கு இல்லாத நோயை உருவாக்கிக் கொடுத்தமைக்காகக் கம்பெனிக்காரன் அன்பளித்திருக்கிறான். எடுத்து பாக்கெட்டில் வைத்துக்கொண்டேன்.

ஸ்டைலாக வெளியே வந்தேன். நடக்காவு தாண்டி, கண்ணூர் ரோட்டில் திரும்பி ரயில்வே ஸ்டேஷனுக்கு நடந்துகொண்டிருந்தேன். அதிகாலை மணி மூன்றிருக்கலாம். பின்புறம், இருட்டிலிருந்து ஒரு சத்தம்: "ஸ் . . . ஸ் . . ." திரும்பிப் பார்த்தேன். நூறடி பின்னால் மூன்று போலீஸ்காரர்கள். அவர்கள் விசில் ஊதியதும் ஒரு மறைவிலிருந்து இருநூறடி முன்னால் மூன்று போலீஸ்காரர்கள். நான் இருட்டில் நின்றுகொண்டிருந்தேன். சிக்கலாகி விட்டது. பொதிந்திருந்த காகிதத்தைக் கிழித்தெறிந்து விட்டு ஸ்டெதஸ்கோப்பைத் தோளில் போட்டுக்கொண்டேன். பாக்கெட்டில் கை போட்டு விரல்களால் சிகரெட் பாக்கெட்டை எடுத்து லைட்டரையும் எடுத்தேன். போலீஸ்காரர்கள் பக்கத்தில் வந்து நின்று கவுரவத்துடன் கேட்டார்கள்:

"எங்கே . . ?"

நான் சாவகாசமாக சிகரெட்டைப் பற்ற வைக்கும்வரை அவர்கள் காத்து நின்றார்கள். விலை உயர்ந்த அயிட்டமென்பதை அவர்கள் பார்க்கட்டும்.

"பார்சலில் என்ன . . ?"

"யூனிஃபார்ம்."

இவர்களிடம் லத்திக் கம்பால் தட்டிப்பார்க்கும் ஒரு சுபாவமுண்டு. தட்டிப்

பார்த்தால் குட்டு வெளிப்பட்டு விடும். இடது கையில் பின்புறத்தால் நான் முகம் சொறிந்தேன். அவர்களது பார்வை ஸ்டெதஸ்கோப்பின்மீது பதிந்தது. இத்துடன் பணிவன்பினர்களாக மாறிவிட்டார்கள்.

"நான் . . . டாக்டரோட வீட்டுக்கு வந்தேன். நேற்றைக்கு." நான் நுழைந்த வீட்டிலுள்ள டாக்டரின் பெயரைச் சொன்னேன்.

"காரை எடுத்துட்டு வரலாம்னா இந்நேரத்தில் டாக்டரைச் சிரமப்படுத்த வேண்டாமேன்னு தோணிச்சி. சரி, ரயில்வே ஸ்டேஷன்வரை நடந்துடுவோம்னு முடிவு பண்ணிட்டேன். இல்லேன்னாலும் உடம்புக்கு என்ன எக்சர்சைஸ் இருக்கு? பை த பை . . . சிகரெட் . . ."

சிகரெட்டைப் பொதுவாக நீட்டினேன். மரியாதையுடன் ஆளுக்கொன்று எடுத்து அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக்கொண்டார்கள். உடனே கூப்பிட்டார்கள்: "டேய், வண்டியை எடு. டாக்டரை ரயில்வே ஸ்டேஷன்ல கொண்டு போய் விட்டுடு . . ."

நான் முன்னால் நடந்தேன். முன்னால் நின்ற போலீஸ்காரர்களில் ஒருவர் போய் மறைவாக நிறுத்தியிருந்த வண்டியை எடுத்துக்கொண்டு வந்தார். அப்படி ஸ்டைலாக கோழிக்கோட்டுக்கு வந்துசேர்ந்தேன்.

இதைப் போன்ற உதவி இன்னொரு தடவையும் கிடைத்தது.

## 30 - வைக்கம் முகம்மது பஷீரைத் தேடி

எனக்குப் பிடித்த எழுத்தாளர் வைக்கம் முகம்மது பஷீர். ஜெயிலில் இருக்கும்போது அவரது எல்லா எழுத்துகளையும் உடனடியாக வாசித்து விடுவேன். இப்போதெல்லாம் அவர் ஏன் அதிகம் எழுதுவதில்லை என்று யோசித்தேன். பேப்பூர் சுல்தான் என்றெல்லாம் பத்திரிகைகளில் தவறாமல் இடம் பெறும். அவரைப் பார்க்க வேண்டுமென்ற மிகப் பெரும் ஆசையிருந்தது. ஆனால், பயமாகவும் இருந்தது. நம்முடைய தொழில் திருட்டு என்பதை அறியும்போது இறங்கிப் போகச் சொல்லிவிடுவாரா? இல்லையென்றாலும் நான் யார்? ஆனால், ஆசை மட்டும் அடங்க மாட்டேன் என்கிறது. அறிமுகமாவதற்கு ஏதாவது காரணமிருக்க வேண்டாமா? திருடன் என்று சொன்னதும் அவரிடமிருக்கும் தாமிரப் பத்திரத்தைத் தூக்கி என்மீது எறிந்துவிடுவாரா? பயந்து அலறுவாரா? நானொரு முடிவு செய்தேன். பஷீரிடமே ஒரு ஆபரேஷன் செய்துவிடுவது. ஒரு மைனர் அட்டாக். பேப்பூர் சுல்தானிடமிருந்து விலை மதிக்க முடியாத ஏதாவதொரு பொருளைத் திருடிவிட வேண்டும். பிறகு இன்னொரு தடவைப் போய்ப் பார்க்க வேண்டும். அன்று எனக்குத்தான் முன்னுரிமை கிடைக்கும்.

"என் பெயர் மணியன்பிள்ளை."

அவர் ஆர்வமில்லாமல் பார்ப்பார்.

"சும்மா பார்க்க வந்தேன்."

எத்தனையோ பேர் இப்படி வர்றாங்க போறாங்க என்பது போலிருப்பார்.

"உங்களுக்கு நானொரு அன்பளிப்பு கொண்டு வந்திருக்கேன்."

என்ன என்பதுபோல் பார்ப்பார் பஷீர். பார்சலைக் கொடுப்பேன். திறந்துப் பார்ப்பார். அவரது கண்கள் விரியும்.

இது இங்கிருந்து திருட்டுப்போன பொருளில்லையா? என்பார்.

உடனே நான் சொல்வேன்:

"சுல்தான் மன்னிக்கணும். உங்களைப் பார்க்கணும்னு ரொம்ப நாளாக ஆசை. நேரான வழியில அனுமதி கிடைக்காதுன்னு நினைச்சேன். மேஜிக் பண்றவன் மேஜிக் காட்டி, கவனத்தைத் திருப்புறதுபோல, இது என்னுடைய தொழில். நான் இதன் மூலமாக உங்க கவனத்தைத் திருப்பலாம்னு முடிவு செஞ்சேன்."

அவர் என்னை ஆசீர்வதிப்பார்: "சரி, சரி, உன் தொழில்லே நீ நல்லா வருவே . . ."

ஒருவேளை அவருக்கு இது ஒரு கதைக்கான பிளாட்டாகவும் அமையலாம்.

இப்படியான அழகான யோசனையை செயல்படுத்தி விடலாமென்று கருதினேன்.

கோழிக்கோட்டுக்கு பஸ் ஏறினேன். தவறான பஸ்சிலேறி விட்டேன்.

பேப்பூரில் இறங்கினேன். பகல் நேரத்தில் போய் இடத்தையும் வீட்டையும் பார்த்து வைத்துக்கொள்ள வேண்டும். பஷீரின் வீட்டுக்குப் போக வழி கேட்டேன். வந்த வழியாக ஒரு கிலோமீட்டர் பின்னால் நடக்க வேண்டுமென்று யாரோ சொன்னார்கள். வழி கேட்டபடியே நடந்தேன். எல்லாருக்குமே அவரைத் தெரிந்திருந்தது. கொஞ்ச தூர செம்மண் தடம். வயல் வழியாக ஒரு ரோடு. இரு புறமும் உயர்ந்த தோப்புகள், மண் வேலிகள். சந்துகள். நடந்துகொண்டே இருந்தேன். தூரத்தில் வீடு தெரிந்தது. பெரியவர் தென்படுகிறாரா என்று பார்த்தேன். பார்க்க முடியவில்லை. ஏன் முடியாது. இரவில் தூங்கிக் கிடக்கும்போது பார்க்கலாமே! இரவுவரை சுற்றித் திரிந்தேன். இரவு நீண்ட நேரத்திற்குப் பிறகு திரும்பவும் நடந்தேன். அதே வழியில். வழியெங்கும் தண்ணீர் தேங்கிக் கிடந்தது. முதலில் வரும்போது தண்ணீர் கிடந்ததா? வழி தவறிப்போய் விட்டதா? லேசான சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தபோது தண்ணீரில் ஒரு சாரைப் பாம்பு நீந்திப் போய்க்கொண்டிருந்தது. பஷீரின் வீட்டுத் தோட்டத்தில் நிறைய சாரைப் பாம்புகளும் நல்லப் பாம்புகளும் இருப்பதாக அவர் எதிலோ எழுதியதை ஜெயிலில் இருக்கும்போது வாசித்த நினைவிருந்தது. உண்மையாக இருக்குமென்று தோன்றியது. இதெல்லாம் அவருடைய வீட்டிலுள்ளதாக இருக்கலாம். ஒருவேளை முதலைகூட இருக்கலாம். போகிற பாதை சரியா என்று தெரியவில்லை.

மனதிலொரு பயமும் உருவானது. வேண்டாமென்று முடிவு செய்தேன். பகல் நேரத்தில் வந்து பார்த்துக்கொள்ளலாம். அப்போது இந்தக் கதையையும் சொல்லலாம். பிடித்து போலீசில் ஒப்படைத்து விடுவாரோ? சே . . . மனங்களை நேசிக்கிறவர்கள் ஒருபோதுமே அப்படியெல்லாம் செய்ய மாட்டார்கள்.

திரும்ப ஃபரூக் சுங்கச் சாவடிக்கு வந்தேன். இரண்டு போலீஸ்காரர்கள்.

"எங்க போறே?"

"கோழிக்கோட்டுக்கு."

"கோழிக்கோட்டுக்கா?" போலீஸ்காரர்கள் பரஸ்பரம் பார்த்துக்கொண்டார்கள்.

"எங்கிருந்து வர்றே?"

"பேப்பூருக்குப் போயிட்டு வர்றேன்."

போலீஸ்காரர்கள் டேய் திருடா என்பதுபோல் சிரித்தார்கள். சொன்ன ரூட்டு தவறாகிப் போய் விட்டதோ? நிலைமை சிக்கலாகிவிட்டதென்று தெரிந்தது.

"பேப்பூர்ல யாரைப் பார்க்கப் போயிட்டு வர்றே?" குரலில் இறுக்கம்.

"பஷீர் சாரோட வீட்டுக்குப் போயிட்டு வர்றேன். பேப்பூரிலிருந்து."

அவர்களது குரலில் மரியாதை தொனித்தது:

"அய்யோ சாரே, வழி தவறி வந்துட்டீங்க போலிருக்கே. இப்பிடியே போனீங்கன்னா திரும்பவும் நீங்க பேப்பூருக்குப் போயிடுவீங்க."

"சார் நில்லுங்க. ஏதாவது லாரி வரும்."

லாரிக்காகக் காத்து நின்றிருந்தோம்.

"பெரியவருட்டே பேசிட்டிருந்தா நேரம் போறதே தெரியாது." நான் இந்நேரத்தில் வருவதற்கான காரணத்தை ஒரு போலீஸ்காரர் சொன்னார்.

ஒரு பாண்டி லாரி வந்தது. போலீஸ்காரர்களைக் கண்டதும் நின்றது.

"இவரை ரயில்வே ஸ்டேஷன்ல இறக்கி விட்டுடு."

"அய்யோ சார், வண்டி பாளயத்துக்குப் போகுது."

"ஆங் . . . ரயில்வே ஸ்டேஷன்ல இறக்கி விட்டுட்டுப் போனாப் போதும்."

நான் ஏறினேன். போலீஸ்காரர்கள் வணக்கம் சொல்லி விடைபெற்றார்கள். மனதில் வைக்கம் முகம்மது பஷீரின் நினைவுகளுடன்.

## **31 -** பரப்பனங்காடி

தினத்தொழில் பயிற்சி; முயற்சி திருவினையாக்கும் என்றெல்லாம் சொல்வார்களில்லையா? அபூர்வமாக சிலருக்கு சில சித்திகள் கை வரப்பெறும். எனக்கு மூட நம்பிக்கை கிடையாது. இருந்தாலும் சில நேரங்களில் நம்மை அதிசயத்தில் ஆழ்த்துவது போன்ற சில சம்பவங்கள் நிகழ்வதுண்டு. திருட்டின் போது தங்கத்தை இனம் கண்டறியும் தொழில் நுட்பம் அதில் முக்கியமானது. கையில் தட்டுப்படும் ஆபரணங்கள் சுத்தத் தங்கமா அல்லது முலாம் பூசப்பட்டதா என்பதைக் கண்டறிய முடியாது. எந்தக் கூரிருட்டாக இருந்தாலும் நான் அதைக் கண்டுபிடித்து விடுவேன். நகத்தால் லேசாகச் சுரண்டி நாக்கில் வைத்துப் பார்த்தால் தெரிந்துபோய் விடும். தங்கத்தில் புளிப்பின் ஒரு சுவையிருக்கும். நாக்கில் பட்டதும் உறுதி செய்துவிடலாம். தங்கம்தான். முலாம் பூசப்பட்டதென்றால் வைத்துவிடுவேன். தங்கமும் முலாம் பூசப்பட்டவையும் கலவையாக இருக்குமிடத்திலிருந்து தங்கத்தை மட்டும் தேர்வு செய்து திருடிய அனுபவமும் உண்டு. வீட்டிலுள்ளவர்கள் மறுநாள் எழுந்து ஆச்சரியப்பட்டிருப்பார்கள். ஒரு பாத்திரத்தில் வைக்கப்பட்டிருந்தவற்றில் தங்க நகை மட்டும் திருட்டுப்போயிருக்கிறது. கவரிங் அப்படியே இருக்கிறது. விந்தைதான்.

அதுபோல், ஆழ்ந்த ஈடுபாட்டுடன் கூடிய முயற்சியாக இருந்தால் உடல் பாரம் இலகுவாகி விடும். சுய அனுபவம். ஒருமுகப்பட்ட விசேஷ மனநிலையில்தான் இது உருவாகும்.

பரப்பனங்காடி ரெயில்வே ஸ்டேஷனில் இறங்கி திரூரங்காடியை நோக்கி நடந்துகொண்டிருந்தேன். மணி ஒன்று. இரவென்பதை தனியாகச் சொல்ல வேண்டியதில்லையே? ஆகாயத்தில் விண்மீன்கள். ஒரு பாடலை முனகியபடி பயணித்தேன். செம்மாடு என்ற இடத்திற்கு வந்து சேர்ந்தேன். ஒரு ஆஸ்பத்திரி. மீண்டும் நடந்தேன். ஐஸ்வரியங்கள் நிரம்பிய ஒரு வீடு. தோற்றப் பொலிவில் அல்ல, திருடனின் மனதில். ஏனென்றால், டாக்டர் என்ற பெயர்ப் பலகையிருந்தது. டிஆர். என்று எழுதப்பட்டிருந்தால் அதன் விரிவாக்கம், கொஞ்சம் வந்துட்டுப் போயேண்டா திருடா என்பதுதான். டிங்! காம்பவுண்டுக்குள் திருடன். கிரீம் கலரில் ஒரு ஃபியட் கார் நிற்கிறது.

முதல் மாடியிலுள்ள கம்பிகளை அசைத்துப் பார்த்தேன். திமிர்த்தனத்தோடு நின்று அசைய மறுத்தது. குறுக்குப்பட்டைகள் கனஜோர். வெறும் பாவ்லாதான். இவனுங்க அப்பன் கம்பிகளாக இருந்தாலும் அசைத்துவிட முடியும். ஆனால், ஒரு திருடன் தேவையில்லாமல் சிரமம் எடுக்கக் கூடாது. சுலபமான வழிகளிருக்குமென்றால் அதுதான் நல்லது. என்னை எதிர்பார்த்திருப்பதுபோல் ஒரு மூங்கிலேணி சாய்ந்து நின்றுகொண்டிருந்தது. இரண்டாவது மாடியின் உச்சிவரை எட்டும். கொஞ்சம் யோசித்தபடியே நின்றேன். யாராவது ஏறி மேலே போயிருப்பார்களோ? தேவையில்லாமல் ஒரு போட்டி உருவாகிவிடக்கூடாதல்லவா? யாருமில்லை. ஏறினேன். போய்ச் சேர்ந்த இடம் மேல்மாடியின் அரைச் சுவரில். சரி, இந்த வழியாக முன்னேறுவோம். குளியலறை ஜன்னல்கள்தான் சிறப்பு. அதைத் தேடி நடக்கும்போது, திடீரென்று உடலில் ஒரு இலகுத்தன்மை. காற்று வெளியில் மெல்லத் தவழ்ந்து, பாறைபோல் கடினமான இடத்தில் தரை தட்டினேன். ஆனால், தட்டியது நெஞ்சடிக்க! அப்படியே படுத்து விட்டேன். அசைய முடியவில்லை. மெல்லத் தவழ்ந்துக் கிணற்றடிக்குச் சென்றேன். விதி, தொட்டியில் கொஞ்சம் தண்ணீர் நிரப்பி வைத்திருந்தது. அதையெடுத்து நெஞ்சை நீவி விட்டேன். இடவலமாகத் திரும்பினேன். மூச்சை இழுத்துவிட்டுப் பார்த்தேன். ரொம்ப வலித்தது. மேலே பார்த்தபோது மூச்சே நின்றுவிட்டது. பத்துப் பதினெட்டடி உயரத்திலிருந்து விழுந்திருக்கிறேன். அந்த ஏணியை எள்ளலுடன் பார்த்தேன். விதி, எனக்கென்று வைத்திருந்த ஏணி. என்னை மாட்டி விடுவதே அதன் நோக்கமாக இருந்திருக்கிறது.

திரும்பி நடந்து ஏற்கனவே பார்த்த ஆஸ்பத்திரியில் போய் ஏறினேன்:

"டியூட்டி டாக்டர் இருக்காரா?"

"இல்ல. டியூட்டி நர்ஸிருக்காங்க."

"சரி, போதும்."

"என்ன விஷயம்?"

"நெஞ்சடிக்க விழுந்திட்டேன்."

"இந்நேரத்திலே நீங்க எங்கிருந்து வர்றீங்க?"

மனதுக்குள் பொறி தட்டியது. இதுபோன்ற சந்தர்ப்பங்களில் பதில் உடனடியாக வந்து விழுந்திருக்க வேண்டும். பக்கத்து ரயில்வே ஸ்டேஷனிலுள்ள கேங்மேன் என்று சொல்லலாம். ட்ராக்கில் ஒரு சத்தம் கேட்டு என்னவென்று பார்க்கப் போகும்போது நெஞ்சடிக்க விழுந்து விட்டதாகச் சொல்லலாம். நல்ல பதில்தான். ஆனால், அடியின் வீரியத்தை உணர்த்துவதற்குப் போதுமானதல்ல.

நான் சொன்னேன்: "ட்ரெயின்லேருந்து விழுந்திட்டேன். பொருட்களெல்லாம் வண்டியில இருக்கு. தூக்கத்திலேருந்து எழுந்து ஒண்ணுக்குப் போகும்போது நடந்தது. தூக்கக் கலக்கம். பிரஷரும் சுகருமிருக்கா, நினைவுத் தடுமாறிடுச்சி."

இதொரு பெரிய சம்பவமில்லையா? செக்யூரிட்டியும் மற்றவர்களும் வந்து கூடிவிட்டார்கள்.

"சரியா ஆஸ்பத்திரிக்கு முன்னால வந்து விழுந்திருக்கீங்க, நல்லதாப் போச்சு."

இதில் ஒரு சதவிகித சந்தேகம் மிச்சமிருப்பதுபோல் தோன்றியது.

"முன்னால விழல. கொஞ்சம் தூரம் தள்ளிதான். அரை கிலோ மீட்டர் நடந்து வர்றேன்."

"ஒரு ஃபோன் பண்ணிக்கிறேன். ரெயில்வேக்கும் போலீசுக்கும்."

ரிசப்ஷனிலிருந்த டைரக்டரியை வெறுமனே புரட்டிவிட்டு ஏதோ இரண்டு நம்பர்களைச் சுழற்றினேன். மறுமுனையில் யாரோ இந்த நடுநிசி வேளையில் ஃபோனை எடுத்தார்கள். நான் விஷயத்தைச் சொன்னேன். மறுமுனையில் என்னவோ சொல்கிறார்கள். அவர்கள் என்ன சொன்னால் எனக்கென்ன? சும்மா ஒரு நம்பிக்கைக்காக யாருக்கோ ஃபோன் செய்தது போல் நடித்ததுதானே?

இத்துடன் சந்தேகங்கள் தீர்ந்தன. தாங்க முடியாத வேதனை. நான் சில அடவுகள் காண்பித்தேன். நர்ஸ் உடனே டாக்டரை அழைத்தார்.

"டாக்டர், ஒருத்தர் நம்ம ஆஸ்பத்திரி முன்னாலெ ட்ரெயினிலிருந்து விழுந்துட்டார். நல்ல வலியிருக்கு."

திறமையான நர்ஸ்தான். சூழ்நிலைக்கேற்ப நடிக்கத் தெரிகிறது.

என்னை அவள் ஆறுதல்படுத்தினாள்: "டாக்டர் வீடு பக்கத்திலதானிருக்கு. இப்போ வந்துடுவார்."

பார்க்கச் சகிக்கவில்லை என்றாலும் வேறுபல காரணங்களால் இவளொரு பேரழகி.

சிறிது நேரம் படுத்திருப்பேன். ஒரு ஃபியட் கார் சீறிக்கொண்டு வந்தது. திருட்டு ராஸ்கோல். நான் நுழைந்த வீட்டில் அசையாமல் நின்றிருந்த உருப்படி.

டாக்டர் வருவதைக் கண்டதும் நான் மயக்கம் வருவதுபோல் நடித்தேன். அவர் என்னை கன்ஸல்டிங் ரூமிற்கு அழைத்துச்சென்றார்.

பரிசோதிக்கும்போது மனதால் நான் என் வேதனையைப் பகிர்ந்துகொண்டேன்.

'தேவையில்லாத சாமான்களைத் தேவையில்லாத இடங்களிலே எடுத்து வைக்காதீங்க டாக்டர். நீங்க அப்படியெல்லாம் எந்த ஒத்தாசையும் செய்யாமலிருந்தாலும் நாங்க உள்ளே நுழைஞ்சுக்குவோம். ஏணியை எதுக்காக டாக்டர் இப்படி எடுத்துச் சாய்ச்சு வெச்சீங்க? பெரும்பாலும் நான் என்னோட வேலையை முதல் மாடியில நடத்தி முடிச்சிடுவேனே. தேவையில்லாம எனக்கு ஆசை காட்டிட்டீங்களே?'

டாக்டர் கேட்கிறார்: "இங்க வலியிருக்குதா . . ? இங்க . . ?"

"வெறும் சதைவுதான்னு தோணுது."

இடுப்பில் ஒரு ஊசி போட்டார். வலி நிவாரணி.

மூச்சு விடும்போது வலிப்பதாகச் சொன்னேன்.

ஒண்ணும் பிரச்சனையில்ல. காலையில ஒரு எக்ஸ்ரே எடுத்துடுவோம். ஏதாவது பிரச்சினைனா கூப்பிடுங்க."

டாக்டர் புறப்பட்டார்.

பகலில் எக்ஸ்ரே உட்பட என்னவெல்லாமோ பரிசோதனைகள் நடந்தன. சாயங்காலம் அறுநூற்று அறுபது ரூபாய்க்கான பில் வந்தது. மறுநாள் அடைத்துவிடுவதாகச் சொன்னேன். சரியென்று சொல்லிவிட்டு நர்ஸ்

சென்றுவிட்டார். ஆபரேஷன் கத்தியெல்லாம் தனியாக எதற்கு? பில்லை வைத்தே கீறி விடலாம். மோசமான ஆட்களப்பா!

அன்றிரவு முடிந்து அதிகாலை. நான்கு நோயாளிகள் படுத்திருக்கும் ஒரு வார்டு அது. பக்கத்திலிருந்த ஒருவரின் ஃப்ளாஸ்கைக் கையிலெடுத்துவிட்டு வெளியில் வந்தேன். செக்யூரிட்டி கேட்டார்:

"எங்கே."

"ஒரு நோயாளிக்கு பாத்ரூம் போகணும்னா நாலு மணிக்கு சாயாக் குடிக்கணும் . . ."

"இன்னும் ஒரு மணி நேரத்திலெ கேன்டீன் திறந்திடுமே! டீக்கடைக்கு அரை கிலோ மீட்டர் நடக்கணும்."

"பரவாயில்லை."

தகவலுக்கு நன்றி. டீக்கடைக்கு வந்தேன். வாடிக்கையாளர்கள் யாருமில்லை. புட்டு அவித்து வைத்திருந்தார்கள். நல்ல பசி. இரண்டு குழாய் புட்டு உள்ளே போன பிறகுதான் உண்மையிலேயே நெஞ்சுக்கு இதமாக இருந்தது. அவ்வளவு சூடு. இரண்டு டீயும் குடித்தேன்.

"ஃப்ளாஸ்கில் இரண்டு டீ ஊற்றி வைங்க. நான் ஒண்ணுக்குப் போயிட்டு வந்திடறேன்."

ஒரு ஃப்ளாஸ்க் கூட இல்லாமல் என்ன டீக்கடை நடத்துறான் என்று இனி யாரும் அவனைக் குறை சொல்ல முடியாது. நான் பக்கத்திலுள்ள ரெயில்வே ஸ்டேஷனை நோக்கி நடந்தேன்.

*

பதுங்கிப் பதுங்கி வீட்டிற்குள் நுழையும் திருடனே வீட்டிலுள்ளவர்களை எழுப்பிய சம்பவத்தைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அந்த அதிர்ஷ்டமும் எனக்கு வாய்த்தது. கொல்லம் நகரையடுத்த முண்டைக்கலில் ஒரு வீட்டில் நடந்த சம்பவம். மெதுவாக, சமையலறை ஜன்னலை வளைத்து அதில் கைலியைக் கட்டி உள்ளே விழுந்தேன். திடீரென்று மேல் மாடியில் படுக்கையறையில் வெளிச்சம் தெரிந்தது நினைவுக்கு வந்தது. அங்கே யார் என்ன செய்கிறார்கள் என்றறிய வேண்டும்.

மெதுவாக மாடியிலேறி படுக்கையறைப் பக்கம் வந்தேன். கீழே யாருமில்லை. உள்ளே பார்த்தபோது திடுக்கிட்டு விட்டேன். இரண்டு கால்கள் ஒரு ஸ்டூலின்மீது நிற்கின்றன. இரண்டடி முன் நகர்ந்து பார்த்தேன். ஒரு மனிதன் ஃபேனில் கயிறு கட்டி முடிச்சுப் போடுகிறான். ஒரு நிமிடம் என்ன செய்வதென்று தெரியவில்லை. குதித்து வெளியே வந்தேன். கற்களை எடுத்து தூக்குப்போடவிருக்கும் அறையின் மர ஜன்னலிலும் கீழ் ஜன்னல்களிலும் சரமாரியாக எறிந்தேன். வீட்டினுள் கூப்பாடெழுந்தது. கூடவே வெளிச்சமும். இனி அங்கே நின்றிருப்பது சரியல்ல என்று ஓடினேன்.

அவன் பிழைத்துக்கொண்டானோ இல்லையோ! மாபெரும் எதிர் பார்ப்பு. மறுநாளும் அதற்கு அடுத்த நாளும் அந்த வழியாக நடந்துபார்த்தேன். ஒருநாள் காலையில் கதாநாயகன் பூச்செடிகளுக்குத் தண்ணீர் விட்டுக் கொண்டிருக்கிறான். மனதுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. இன்று அவன் உயிரோடிருக்கிறானோ அல்லது திரும்பவும் அதைச் செய்துவிட்டானோ? தற்கொலை நோயாளிகள் மீண்டும் மீண்டும் முயற்சி செய்துகொண்டே இருப்பார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஒருவேளை முதல் முயற்சியுடன் நிறுத்தவும் கூடும். என்னைப்போல்.

## 32 - செண்பகச்சுவட்டில் திருடன்

திருட்டு முயற்சியினிடையே ஊரே விழித்துக்கொண்டு என்னைப் பின்தொடர்ந்த ஒரு சம்பவமும் உண்டு. திருவனந்தபுரத்திலுள்ள குமாரபுரத்தில் நடந்தது. அங்கே எங்காவது ஒரு ஆபரேஷனுக்கான மார்க்கமிருக்குமா என்று பரிசோதிப்பதற்காக இறங்கினேன். நடுச்சாமம் கடந்திருந்தது. ஒரு இடத்தைத் தேர்வு செய்து வைத்துவிட்டுப் பிறகு திருடச் செல்லும் வழக்கமெல்லாம் நமக்குக் கிடையாது. நேராகச் சென்று இறங்கி விடுவதுதான். பிறகு நிகழ்வதெல்லாம் ஷூட்டிங் ஸ்பாட்டில் மோகன்லால் போன்றவர்களுக்கு நடிப்பு வருவது போல்தான். ஆனால், இதிலொரு ஆபத்துமுண்டு. முதல் நாளிரவு அந்த இடத்திலோ அக்கம் பக்கங்களிலோ என்ன நடந்ததென்று நமக்குத் தெரியாது. என்னைப்போலொருவன் சமீப நாட்களில் அங்கே நுழைந்திருந்தால் மக்கள் எச்சரிக்கையுடன் இருப்பார்கள். இது தெரியாமல் நானும் அங்கே போய் நிற்பேன். சில நேரங்களில் இப்படி நிகழ்ந்தும் இருக்கிறது. இருந்தாலும் அறிவு வரவில்லை. மட்டுமல்ல, இயல்பான குணங்களை அப்படியே பாதுகாப்பதுதான் நல்லது. முதலிலேயே இடத்தைத் தேர்வு செய்வதில் சில நன்மைகளிருப்பதுபோல் தீமைகளுமிருக்கக்கூடும்.

நான் குமாரபுரம் ஹவுசிங் காலனியில் பதுங்கி நிற்பதை உள்ளூரிலுள்ள முக்கியமான மூன்று நான்கு இளந்தாரிப் பையன்கள் பார்த்தார்கள். அங்கே கடந்த சில நாட்களினுள் திருட்டுகள் ஏதாவது நடந்திருக்கக் கூடும். அதிகம் சொல்வானேன்? கண்ணுமூலை பகுதியிலிருந்து, நகர அபிவிருத்தி செயல் தலைவரான அலெக்ஸாண்டர் சாரின் வீட்டின் முன்புறமுள்ள ஜங்ஷனுக்கு வந்து சேர மூன்று நான்கு வழிகளிருக்கின்றன. அதுவும் குமாரபுரம் மெயின் ரோடும் பத்தே நிமிடங்களுக்குள் மக்களால் நிரம்பிவிட்டன.

திருடன், திருடனெனும் கோஷம் திக்கெட்டும் முழங்கியது. முதல் அழைப்பில் என்னுடைய மனதிலும் எங்கே என்ற கேள்விதான் உருவானது. மறுவினாடிதான் உண்மை உறைத்தது. அய்யோ அது நானல்லவா? மனம் உடனே தப்பிப்பதற்கான வழி தேடியது. எல்லா வீடுகளிலும் டப் டப்பென்று லைட்டுகள் எரிய ஆரம்பித்தன. பத்து

நிமிடத்திற்குள் சுமார் ஐம்பது டார்ச்சுகள் ஆங்காங்கே பிரகாசித்தன. ஒவ்வொரு வீட்டைச் சுற்றிலும். வெளிச்சங்கள் ஒன்றுசேர்ந்து ஏதோ விசேஷ வீட்டுக்குப் போவதுபோல் எரிந்துகொண்டிருந்தன. எந்த வழியிலும் தப்பிக்க முடியாது. பிடிபடுவது உறுதி. இன்றுவரை எந்த ஊர்க்காரர்களும் என்னைப் பிடித்ததில்லை. அப்படி நிகழ்ந்திருந்தால் அந்த அத்தியாயத்தையும் சுயசரிதையில் சேர்க்க வேண்டியதாகியிருக்கும். பிடிபடுவதல்ல, பிரச்சினை. லைட் வைத்திருக்கும் ஒவ்வொரு கையும் ஒரு தடவையாவது என்மீது விழும் என்ற பயம்தான். எந்தப் பயந்தாங்கொள்ளியும் கை போடுவான். கிழவனும் குழந்தைகளும்கூட கை போடுவார்கள். அடித்தவர்களின் முகத்தை நினைவு வைத்திருந்து பழி வாங்குவதற்கான கால அவகாசமெல்லாம் திருடனுக்குக் கிடையாதல்லவா? அடி விழுவதைப் பார்த்தால், திசைகள் எட்டல்ல, பதினாயிரக்கணக்கில் இருப்பதுபோல் தோன்றும். ஜெயிலில் சக கைதிகள் இப்படியான கதைகளைச் சொல்லும்போதே நான் தளர்ந்துவிடுவேன். இனி செய்ய முடிந்த ஒரே காரியம் எங்காவது மன அமைதியுடன் பதுங்கியிருந்து விடுவது மட்டும்தான். பிடித்தால் இஞ்சி சிதைப்பது போல் சிதைத்து விடுவார்கள்.

மனதைத் தயார்ப்படுத்திக்கொண்டேன். ஆட்கள் வந்து கூடியதும் நின்ற இடத்திலிருந்து மதில் தாண்டிக் குதித்தேன். அழகாக வெட்டி சீராக்கி வைத்திருந்த ஒரு செண்பக மரம். உயர்ந்து வளர விடாமல் சிறு பருவத்தில் பரிபாலித்து வளர்த்தியதால் தரையோடு சேர்ந்து குடைபோல் படர்ந்திருந்தது. இருபுறமும் இரண்டு முல்லைக்கொடிகள் மரத்தில் படர விடப்பட்டிருந்தன. செண்பக மரம் நிறைய அழகிய மஞ்சள் நிறப்பூக்கள். கூடவே, முல்லைப் பூக்களின் மனம் மயக்கும் வாசம். மூச்சுக் காற்றில்கூட வாசமிருந்தது. நான் அந்த இடத்திலேயே அமர்ந்துக் கண்களை மூடிக்கொண்டேன். இதைத் தவிர வேறெதுவும் செய்வதற்கில்லை. கூட்டம் மதிலின் வெளியே நிற்கிறது. "இங்கதானே பாத்தேன்." "இப்ப காணமே." "அவன் உன்னைப் பாத்தானா?" ஒருவன் பார்த்ததாகச் சொல்கிறான், மற்றொருவன் பார்க்கவில்லை என்கிறான். "அப்படின்னா இங்க எங்கயாவதுதான் இருப்பான். வேற பக்கம் போய்த் தேடுவோம்" என்கிறான் இன்னொருவன். "தேவையில்லாம எதுக்கு விவாதம் பண்ணிட்டிருக்கீங்க" என்று சொல்லிவிடலாம் போலிருந்தது. இடையிடையே கண்களைத் திறந்துப் பார்த்துக்கொண்டேன். மதிலின் மீது செண்பக மரத்தின் உச்சாணியினூடே டார்ச் வெளிச்சம் பாய்கிறது. திடீரென்று நானிருந்த காம்பவுண்டிலுள்ள வீட்டுக்காரன் ஜன்னலைத் திறந்துக் கேட்கிறான்.

"ஆள் பிடிபட்டானா?"

"எங்கயோ ஓடிட்டான்."

"இந்தப் பக்கம் வரல. நாங்க கவனிச்சுட்டுதானிருக்கோம்."

என் முன் ஒரு இருபதடி தூரத்திலுள்ள ஜன்னலைத் திறந்து வைத்தபடி, மதிலின் மறுபக்கம் நிற்பவர்களைப் பார்த்து வசனம் பேசுகிறான். பார்வை கொஞ்சம் தாழ்ந்தால் நான் உட்கார்ந்திருப்பதைப் பார்த்துவிட முடியும்.

"நீங்க அந்த வீட்டுக்குப் பின்னாலிருக்குற ஷெட்ல பாருங்க. சைடுல ஏணியிருக்கு. அதனால டெரஸிலயும் சன்ஷேடிலயும் பாத்துடுங்க."

"அண்ணன் இறங்கி கொஞ்சம் இங்க வாங்க." யாரோ சொல்கிறார்கள்.

"கவனம். ஒருவேளை கதவைத் திறக்கும்போது ஏதாவது . . ."

"நாங்க இவ்வளவு பேர் இருக்குறோமே?"

"நீங்க இறங்கி வாங்க, ஒண்ணும் பிரச்சினையில்ல."

சிலர் கேட்டைத் திறந்து உள்ளே பார்க்கிறார்கள். மரத்தையொட்டி மதிலுக்கு வெளியே நிற்பவர்கள் விலகிவிடக்கூடாதே என்பதுதான் என்னுடைய பிரார்த்தனை. அவர்கள் அங்கிருந்து உத்தரவுகள் பிறப்பித்துக் கொண்டிருக்கும்போது இங்கே கவனிக்கமாட்டார்கள். மிக அருகில் கீழே . . . இல்லை, அதிர்ஷ்டவசமாக அப்படி எதுவும் நிகழவில்லை. பத்துப் பன்னிரெண்டு பேர்கள் சல்லடை போட்டுத் தேடிவிட்டு வெளியே வந்தார்கள்.

"சரி, இந்த காம்பவுண்டுக்குள்ள இல்லை. எதுக்கும் ஒரு மூணுநாலு பேர் இங்கயே நில்லுங்க."

நான் ஒரு இரண்டு இரண்டரை மணி நேரம், அதிலேயே கிடந்தேன். தூக்கம் வந்தவர்களும் மறுநாள் அலுவலகங்களுக்குச் செல்ல வேண்டியவர்களும் தங்களுக்கேற்பட்ட சலிப்பை மற்றவர்களிடம் பகிர்ந்துகொள்ள ஆரம்பித்தனர்.

"அவன் எப்பவோ இடத்தைக் காலி பண்ணிட்டான். பாத்ததாகச் சொல்றதெல்லாம் உண்மையோ பொய்யோ யாருக்குத் தெரியும்."

"இதெல்லாம் என்ன பேச்சுங்கறேன். நாலைஞ்சுபேர் சேர்ந்து பொய் சொல்றாங்களா?" என்று மற்றொருவன்.

நான் மெல்லப் பதுங்கி எழுந்து மூன்று மதில்களில் ஏறிக்குதித்து, வீடுகளின் முன்னால் நடந்துகொண்டிருந்தேன். மணி இரண்டு கடந்திருந்தது . . .

ஏதேதோ காலனிகள் வழியாக நடந்தேன்.

ஒரு வீட்டின் முன்னால் செல்லும்போது வாசல் கதவு தாளிடவில்லையென்று தெரிந்தது. உள்ளே பூஜையறையில் சிவப்பு ஸீரோ வால்ட் வெளிச்சம். எவனோ ஒருத்தன் கதவை மூடாமல் என்னைத் தேடிப் போயிருக்கிறான். சரி, வந்ததுதான் வந்தோம். கிரிக்கெட்டில் ஒருமுறை காட்ச் விட்டு லைஃப் கிடைத்தால் பிறகு அதே பந்தில் ஓடி ரன் அவுட்டாவது மாபெரும் முட்டாள் தனம். ஒரு லைஃப் கிடைத்த நிலையில் இன்றிரவு தப்பித்து விடுவதுதான் நல்லது. மனம் எதையாவது சொல்லிக்கொண்டுதானிருக்கும். நான் மெல்லச் சென்று கதவைத் திறந்தேன். திடீரென்றொரு சத்தம். ஒரு நிமிடம் அப்படியே ஸ்தம்பித்துவிட்டேன். வயதான ஒருவர் செயரிலிருந்து எழுகிறார். நிழல்போல் மெல்ல நடந்து அடுத்த அறைக்குப் போகும்போது சொல்கிறார்: "தாத்தாதான் கதவைத் திறந்து வச்சேன். இன்னைக்கும் ஒரு சண்டை வேண்டாம் . . . திருந்திட்டேன்னா உனக்குத்தான் நல்லது. சரி கதவைச் சாத்து . . . சமையக்கட்டுல சோறு போட்டு வெச்சிருக்கு. சாப்பிட்டுட்டுப் போய்ப்படு . . ."

அந்த முதியவர் இழுத்திழுத்து உள்ளே போனார். ஏதோ ஒரு அசுர வாரிசு இன்னும் வந்து சேரவில்லை போலிருக்கிறது. இனி சமையல்கட்டு கதவைத் திறந்து வெளியே போய்விட வேண்டியதுதான் என்று முடிவு செய்தேன். திடீரென்று சாப்பாட்டு நினைவு வந்தது. பயங்கரமாகப் பசிக்கிறது. அந்த அளவுக்கு உடல் மற்றும் மனோரீதியான கடும் உழைப்பு. மெல்ல சமையல்கட்டுக் கதவைத் திறந்தேன். பரிமாறி வைத்திருந்த சோறும் மீன் கறியும் அவியலும். அவியல் புளிக்க ஆரம்பித்திருந்தது. இப்போது அதுதான் ருசி. இதற்குள் நான் முன்புற வாசல் கதவை உள்ளிருந்துப் பூட்டினேன். இன்னுமொரு திருடன் உள்ளே வர வேண்டாம். ஒரே கூண்டில் இரண்டு சிங்கங்கள் கூடாது. அசுர வாரிசு வந்தால் பெல் அடிப்பான். மூன்றே நிமிடங்களில் சாப்பாட்டை முடித்தேன். கையைக் கழுவித் துடைத்தேன். சாத்தான் விழித்தான்.

திருட வேண்டிய பொருட்களுக்கான பட்டியலிட்டேன். நல்லதொரு டேப் ரிக்கார்டர் எதிரிலிருக்கிறது. அதில் கையை வைத்ததும் ஏப்பம் வந்தது. அவியல் மற்றும் மீன் கறியின் புளித்த வாசம் மூக்கினூடே! முதன்முதலாக அப்போதுதான் நானொரு வீட்டிலேறி சாப்பிடுகிறேன். நன்றி மறப்பது நன்றன்று. திருடனாகி விட்டோம்; நன்றியில்லாத நாயாகவும் ஆகிவிடக் கூடாது. அதை அங்கேயே வைத்துவிட்டு சமையல்கட்டுக் கதவை மூடிவிட்டு ஒரே பாய்ச்சல்.

என்னைத் துரத்தியவர்களைப் பழிவாங்கும் எண்ணத்துடன், கொஞ்ச நாட்களுக்குப் பிறகு, திரும்பவும் பழைய அதே காலனியில் நகர அபிவிருத்தி செயல் தலைவர் அலெக்ஸாண்டர் சாரின் வீட்டிற்கு வந்தேன்.

## **33 -** கடவுச்சீட்டுத் திருடன்

திருடன் ஒருபோதும் மற்றவர்களின் சட்டுவமாக மாறிவிடக் கூடாது. நான் அப்படி ஆகியிருக்கிறேனா என்றால் ஆம் என்பதுதான் பதில். ஆனால், ஒருமுறை மட்டுமே. இத்துடன் நிறுத்திக்கொண்டேன்.

திருட்டில் போலீசுக்கும் பங்கு கொடுத்ததுண்டு. உற்சாக மூட்டிய போலீஸ்காரர்களும் இருக்கிறார்கள். ஆனால், அவர்கள் சொன்னதற்காக நான் திருடியதில்லை.

ஒருநாள், கள்ளுக்கடையில் இருந்து குடித்துக்கொண்டிருக்கிறேன். திடீரென்று ஒரு குப்பிக் கள்ளு என் மேசைக்கு வந்தது. கூடவே, சிப்பி இறைச்சியும் எரால் வறுவலும். நான் ஆர்டர் கொடுக்கவில்லையே என்றேன்.

"நான்தான் ஆர்டர் பண்ணேன்" என்றார் பக்கத்து மேசையிலிருந்த அறிமுகமில்லாத ஒருவர்.

"நான் ஓசியிலெ சாப்பிடறதில்லெ. எனக்கு வேணும்னா நானே ஆர்டர் பண்ணிக்குவேன்" என்றேன்.

எதுவாயினும் வந்துவிட்டதல்லவா? சாப்பிட ஆரம்பித்தேன்.

எழுந்ததும் "காசு நான் கொடுக்குறேன்" என்றார் அவர். தேவையில்லையென்று நான்.

இறங்கி நடக்கும்போது அவரும் என் பின்னால் வந்தார். நான் திரும்பி நின்று கேட்டேன்:

"இல்லே, தெரியாமத்தான் கேட்குறேன், நீங்க யாரு? எதுக்காக என் பின்னால வர்றீங்க? ஏதாவது போலீசோ, ஸ்பெஷல் பிராஞ்சோன்னா சொல்லிடுங்க."

அவர் சிரித்துவிட்டு பக்கத்திலிருந்த திண்டைக் காட்டிச் சொன்னார்:

"தப்பா நினைக்க மாட்டீங்கன்னா இதில உட்கார்ந்து பேசலாம்."

"எனக்கு உட்காரணும்னு தோணல."

"சரி, நின்னுக்கிட்டே விஷயத்தைச் சொல்லிடறேன். நான் இந்த கம்யூனிஸ்ட் கட்சியில உள்ளூர்த் தலைவர். இன்னாரோட சொந்தக்காரன்."

என்னுடைய ஒரு நண்பனின் மாமாதான் இவர். இவரைப் பற்றி என்னிடம் பேசியிருக்கிறான். நான் சொன்னேன்:

"உங்களை எனக்குத் தெரியும். விஷயத்தைச் சொல்லுங்க."

"உனக்குக் கொஞ்சம் காசு கிடைக்குற ஒரு ஏற்பாடுதான்."

"அப்படீன்னா?"

"நான் ஒரு பொருளைச் சொல்லுவேன். அதை அந்த வீட்டிலேருந்து எடுத்துத் தரணும். அந்த வீட்டில அது இருக்குற இடத்தையும் சொல்லிடறேன். உனக்கு இரண்டாயிரம் ரூபா தருவேன்."

இரண்டாயிரம் என்றதும் பரவாயில்லைபோல் தோன்றியது. நானோ மிகுந்த வறுமையிலிருக்கிறேன். முப்பது வருடத்திற்கு முன்புள்ள இரண்டாயிரம் ரூபாய். நான் சரியென்றேன்.

மாமா சொன்னார்: "இது இன்னவருக்காக."

அவர் கட்சியின் மாவட்டப் பொறுப்பிலுள்ள ஒருவர். இன்று கைக் கெட்டாத உயரத்திலிருக்கிறார். சுலபமான வேலைதான். ஒரு வீட்டுக்குள் நுழைந்து, குடும்பத் தலைவரின் பாஸ்போர்ட்டைத் திருட வேண்டும். படுக்கையறை அலமாரியின் கீழ்த்தட்டில் இருக்கிறது. வெள்ளிக்கிழமை அல்லது சனிக்கிழமைக்குள் அதைத் திருடியாக வேண்டும். ஏனென்றால், ஞாயிற்றுக்கிழமை மதிய விமானத்தில் அவர் வளைகுடாவிற்குப் புறப்பட்டு விடுவார்.

நான் கேட்டேன்: "பாஸ்போர்ட் அந்த இடத்திலதான் இருக்குன்னு எப்படி உறுதியாச் சொல்ல முடியும்?"

"அந்தத் தோழர் இவரோட நெருங்கிய நண்பர்தான்."

"இருந்தும் ஏன் இப்படி?"

"அதெல்லாம் தெரியாது. அவர் வெளிநாட்டுக்குப் போகக்கூடாதுன்னு இவர் நினைக்கிறார். தலைவருக்கு அங்கே ஏதோ ஒரு பிசினஸ் இருக்கு. இந்த இரண்டு பேரும் சேர்ந்த ஒரு கூட்டு வியாபாரம்தான். இந்தத் தலைவர் ஒரு ஜெகஜாலக் கில்லாடி. இப்போ இவன் போனா, தலைவரோட பல மோசடிகள் வெளிச்சத்துக்கு வந்துடும். காரணம், இதுவாகத்தான் இருக்கும்."

மாமாவுக்கு இவ்வளவுதான் தெரியும். மட்டுமல்ல, "அதையெல்லாம் நீ எதுக்கு அறியணும்?" என்று கேட்டார்.

வெள்ளிக்கிழமைக்கு இன்னும் மூன்று நான்கு நாட்களிருந்தன. அதுவரையிலான செலவுகளை மாமா ஏற்றிருந்தார். நான் போதையில் இலக்குக் கெட்டுத் திரிந்தேன். கொழுத்தத் தீவனம். மாமா முன்கூட்டியே கள்ளுக்கடையில் பணம் கொடுத்திருந்தார்.

வெள்ளிக்கிழமை. அன்றிரவு அந்த வீட்டில் நுழைந்தேன். பொருளைத் தேடியெடுத்து மாமாவிடம் ஒப்படைத்துவிட்டு இரண்டாயிரம் ரூபாயுடன் இடத்தைக் காலி செய்தேன்.

அவரது பயணம் முடங்கியிருக்கும். பிறகு, யோசித்தேன். இதன் பின்னணியில் என்னென்ன சதி வேலைகள் இருக்கக்கூடுமோ? பாவம், அந்த மனிதருக்கு எவ்வளவு சிக்கல்கள் ஏற்பட்டிருக்குமோ? இது ஒருபோதுமே சரியானதல்ல.

ஒருவாரத்திற்குப் பிறகுதான் தகவல் தெரிந்தது. அவரை வெட்டிக் கொல்வதற்காகக் கட்சிக்காரர்கள் விரட்டியதாகவும் அதிர்ஷ்டவசமாக அவர் தப்பித்துவிட்டதாகவும். இந்தத் தகவலையும் மாமாதான் சொன்னார்.

"மணியா, அன்னைக்கு நாம அப்படி செய்திருக்கவே கூடாது. அவன் அரபு நாட்டுக்குத் தப்பிப்போய் உயிர் பிழைச்சிடக்கூடாது; அதற்குள்ளால போட்டுத் தள்ளிடணும்னு திட்டம் போட்டிருக்காங்க. கொலை பண்ணிட்டு அதுக்கொரு அரசியல் சாயம் பூசிட்டா பிரச்சினை தீர்ந்திடுமில்லையா? அவன் உயிர் பிழைக்கட்டும்னு நான்தான் முன்னறிவிப்பு கொடுத்தேன். ஒருவேளை அன்னைக்கு அவனைப் போட்டுத் தள்ளியிருந்தாங்கன்னா நம்ம மனசாட்சி எவ்வளவு

வேதனைப்பட்டிருக்கும்? சரி, விடு. இனிமேல் இந்த மாதிரியான ஆட்களை நம்பவே கூடாது."

இத்துடன் மற்றவர்களுடைய சட்டுவமாகச் செயல்படுவதை நிறுத்திக்கொண்டேன். பணமும் தங்கமும் தவிர இதுபோல் வேறு எந்தப் பொருளையும் திருடக்கூடாதென்று முடிவு செய்தது இதற்குப் பிறகுதான். ஒரு திருட்டின்போது கிடைத்தப் பையில் பாஸ்போர்ட் இருந்தது. அதிலிருந்த முகவரிக்கே அதை அனுப்பி வைத்துவிட்டேன்.

## 34 - இரட்டைத் திருடன்

திருடன்களுக்கு சட்டப்படி பரோல் கிடையாது. நெருங்கிய உறவினர்களின் மரணமோ, நோயால் அவர்கள் மிகமோசமாகப் பாதிக்கப்பட்டாலோ வெளியே வரலாம். அவ்வளவுதான். திருடனை பரோலில் விட்டால் மீண்டும் திருடுவான். இயன்றவரை அவனை உள்ளே வைத்திருந்து சமூகத்தை நிம்மதியாகத் தூங்கவிடவே சட்டம் விரும்புகிறது. அதுதான் நியாயமும்கூட! திருடனின் மனத்தாங்கல்களுக்கு எந்த முக்கியத்துவமும் இல்லை. சரி இதையெல்லாம் பார்க்கவும் அனுபவிக்கவும் செய்கிற திருடன் திருந்திவிடுவானா? இந்த உலகத்தில் மிகவும் பலவீனமான மனிதப் பிறவி திருடன்தான். கஞ்சா, கள்ளு போன்ற போதைகளில் இருந்துகூட மனிதன் விடுபடுகிறான். திருடன் மட்டும் அதற்கு அடிமையாகி விடுவதற்கான காரணம் என்ன? அவனுக்குள் மட்டும் ஏன் இந்த வக்கிரப் புத்தி மீண்டும் மீண்டும்? ஜென்ம வாசனையைக் கடந்த விதியின் கரங்களும் இதில் செயல்படுகின்றன. இருட்டினூடே திருடிக்கொண்டு நடக்கும்போது நிகழும் சில சம்பவங்கள் அவனை அதிசயத்திலாழ்த்தி விடுகின்றன. இதிலொன்று, திருடுவதற்காக உள்ளே நுழைந்தால் அங்கு ஏற்கனவே ஒருவன் திருடிக்கொண்டிருப்பான். இப்படியான ஒரு அனுபவமும் எனக்கு வாய்த்தது.

ஆற்றிங்கலின் அருகில் கல்லம்பலம் என்னுமிடத்தில் ஒரு வீட்டில் பதுங்கியிருந்தேன். கொஞ்ச நேரமாகவே ஏதோ சத்தம் கேட்டுக்கொண்டிருந்தது. யாரோ தூங்காமலிருக்கிறார்கள் என்பது உறுதி. ஏதோ கருவி தயார் செய்துகொண்டிருப்பது போன்ற சத்தம். வீட்டினுள் விளக்கும் எரிந்துகொண்டிருந்தது. பெருச்சாளியாக இருக்குமா? கொஞ்ச நேரம் அங்கேயே நின்றிருந்தேன். சத்தம் ஓயவில்லை. நான் வீட்டின் வடக்குப் புறம் நிற்கிறேன். இனி, நின்று பலனில்லை. தலையைக் குனிந்தபடி மெல்ல நடந்தேன். சத்தம், வீட்டின் பின்பக்கமிருந்து வந்துகொண்டிருந்தது. பார்த்ததும் திடுக்கிட்டு விட்டேன். மூன்றடி மட்டுமே உயரமுள்ள ஏதோ ஒரு ஜீவன் சமையலறைக் கதவில் என்னமோ செய்துகொண்டிருந்தது. உற்றுப் பார்த்தபோதுதான் பிடிகிடைத்தது. என்னுடைய சக ஊழியன். நான் லேசாகக் கனைத்து விட்டு 'டேய்' என்று

குரல் கொடுத்தேன். அவன் திடுக்கிட்டான். அடுத்த நிமிடம் ஒரு குதி குதித்து, என்ன ஏதென்று அறிந்துகொள்ளாமலேயே காணாமல் போனான். இனி அவன் இந்த ஏரியாவுக்கே வரமாட்டான் என்பது உறுதி. ஆள் அசைவு தெரிந்த வீட்டில் திருடன் திரும்பவும் அன்று வரமாட்டான். சமையலறைக் கதவைக் கிட்டத்தட்ட அவன் கழற்றி வைத்திருந்தான். என்னுடைய குரல் கேட்டு வீட்டிலுள்ளவர்கள் யாராவது விழித்திருப்பார்களா? கொஞ்ச நேரம் நின்று பார்த்தேன். எந்த அசைவுகளுமில்லை. ஏதாவது நாய் குரைத்திருக்கும் என்று நினைத்திருக்கலாம். நான் உள்ளே நுழைந்து, கிடைத்ததை எல்லாம் அள்ளியெடுத்துக்கொண்டு இடம் பெயர்ந்தேன்.

மய்யநாடு வெள்ளமணல் பள்ளிக்கூடத்தின் அருகில் ஒரு வீட்டில் வைத்து இதுபோன்று மற்றொரு அனுபவம் ஏற்பட்டது. அன்று திருடன் வீட்டுக்குள் பொருட்களை எல்லாம் சுருட்டுவதற்கான தயார் நிலையிலிருந்தான். 'யாருடா உள்ளே' என்று குரல் கொடுத்தேன். பொருட்களை அங்கேயே போட்டுவிட்டு வெளியே பாய்ந்தான். அதையெல்லாம் நான் அள்ளிக்கட்டிக்கொண்டேன். இதில் மனசாட்சிக்கெல்லாம் எந்தக் குந்தகமும் ஏற்படுவதில்லை. ஏனென்றால் இது என்னுடைய ஏரியா. என்னைப் போலீஸ் பிடித்தால் இங்கே நடந்த எல்லாத் திருட்டையும் என் முதுகில்தான் ஏற்றுவார்கள். மறுத்தால், உதைபட்டுப் பேதியாவதைத் தவிர எந்தப் பலனும் கிடைக்கப்போவதில்லை.

இப்படிப் பலருக்கும் தண்ணி காட்டும்போது நமக்கும் காட்டாமலா போய்விடுவார்கள்? ஒரு நாள் அரேபியாகாரன் ஒருவனின் வீட்டுக்குள் நுழைந்தேன். நல்லதொரு வேட்டையும் நடத்தினேன். விலையுயர்ந்த பொருட்களை மட்டும் எடுத்து ஒரு பெட்டியில் வைத்தேன். வீட்டின் கிணற்றங்கரை சிமெண்ட் தளத்தில் உட்கார்ந்து சாமான்களை எல்லாம் ஒழுங்குபடுத்திக்கொண்டு இருக்கும்போது 'டேய்' என்றொரு சத்தம். பார்க்கும்போது கேட்டின் வெளிப்புறத்தில் இரண்டுபேர் சைக்கிளில். வேறெதுவும் யோசிப்பதற்கில்லை. பின்பக்க மதில் சுவரேறிக் குதித்து ரோட்டோரப் புதர்க்காட்டில் ஒளிந்துகொண்டேன். ஐந்து நிமிடம் கழிந்திருக்கும். அந்த சைக்கிள் என்னைக் கடந்து சென்றது. பின்னால் உட்கார்ந்திருப்பவன் அந்தப் பெட்டியை மடியில் வைத்திருந்தான். ரொம்ப வருத்தமாக இருந்தது. ஏராளமான பொருட்கள் அதனுள்ளிருந்தன. பறி கொடுத்தவனின் வேதனையை நாமும் அனுபவிக்கவில்லை என்றால் கடவுள் ஒரு சார்புள்ளவராகி

## 35 - சாரும் திருடனும்

திருட்டின் போது பிடிபட்டுப் போலீசுக்குப் போன அனுபவம் ஏற்பட்டதில்லை. அப்படி ஒன்று நடந்திருந்தால் இந்தத் தன்வரலாற்றைச் சொல்வதற்கு ஐம்பத்தெட்டு வயதுவரை நான் உயிரோடு இருந்திருப்பேனா என்பதே சந்தேகம்தான். பொதுமக்களின் கையில் திருடன் சிக்கிக்கொண்டால் பிறகு நிகழ்வது அடி உதையின் கோலாகலம். கேரளத்தில் அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்தது தென்னை மரமல்லவா? ஆனையாக இருந்தாலும் ஆளாக இருந்தாலும் கட்டிப் போடுவதற்கேற்ற ஒரு மரம். பிடித்து அதில் கட்டி வைப்பார்கள். பிறகு போறவனும் வர்றவனும் கையாளுவான். இதிலுள்ள சுவாரஸ்யம், ஊரிலுள்ள பெரிய மனுஷாளும் கோழைகளும் கூட கை போடுவார்கள் என்பதுதான். நிறைய பேர் சுற்றி நின்று தர்ம அடி போடுவதினிடையே அடிப்பவனின் முகரக் கட்டையைத் திருடன் நினைவில் வைத்திருக்க முடியாதென்பதுதான் இவர்களுடைய வீரத்திற்கான அடிப்படைக் காரணி. நினைவில் வைத்தால்தானே பகை போக்கிக்கொள்ள முடியும்? அப்புறம் படக்கூடாத இடமென்று எதையும் கவனிக்க வேண்டிய தேவையில்லை. போலீஸாருக்கு ஆவி பிரிந்துவிடாமல் அடிக்க வேண்டிய கட்டாயமிருக்கிறது. வேலை போய்விடும். வேலையே இல்லாதவர்கள் இதைப் பற்றி கவலைப்பட வேண்டியதில்லை. என்னைப் பிடிக்க, ஊர்க்காரர்கள் போலீசுக்கு ஒத்துழைத்த ஒரு சம்பவமும் நடந்தது.

இருபது வயதிருக்கும் அப்போது. வாழத்துங்கல் எனும் அந்த சிறு பகுதியில் ஆண்கள், பெண்கள், மற்றும் தொடக்கப் பள்ளி என மூன்று அரசுப் பள்ளிக்கூடங்கள் இருந்தன. இதில் இரண்டு இன்று மேனிலைப் பள்ளிகளாகி விட்டன.

ஆண்கள் பள்ளியிலுள்ள ஆசிரியர் ஒருவரை நான் அடித்துவிட்டேன். இவர் மிகச் சிறந்த ஒழுக்கவாதி. மாணவர்களுக்கு இவரைக் கண்டாலே பயம். நல்ல ஆசிரியரும்தான். நான் பள்ளிக்கூட வளாகத்தினூடே நடப்பேன். ஊரிலுள்ள எல்லாரும்தான் அந்த வழியைப் பயன்படுத்துவார்கள். ஒருமுறை இந்த ஆசிரியர் என்னைத் தடுத்து நிறுத்தி எங்கேடா போறே என்று கேட்டார்.

நான் சொன்னேன்: "அந்தப் பக்கமாத்தான் போறேன். என்ன கேள்வி இது?"

"பள்ளிக்கூட காம்பவுண்டுக்குள்ள வழி நடக்குறதுக்கு அனுமதி கிடையாது."

"நல்ல விஷயம். முதல்லே நாலு பக்கமும் மதில் கட்டி கூடவே ஒரு போர்டும் எழுதி வெச்சிடுங்க."

"அதெல்லாம் வசதிபோல செய்துக்கலாம். முதல்லே நீ திரும்பி நட."

அது பள்ளி இடைவேளை நேரம். ஆயிரக்கணக்கான மாணவர்கள் கூடி நின்றிருந்தார்கள்.

"சரி, வந்துட்டனே, இந்த ஒரு தடவை இப்படித்தான் போறேன்."

எனக்குப் பிடிவாதம் அதிகரிப்பதற்கான காரணம், மற்றவர்கள் அப்போதும் அந்த வழியாக போய்க்கொண்டுதான் இருந்தார்கள். என்னை மட்டும் தடுப்பதற்கான காரணம், நான் திருடன் என்பதுதான்.

"திருடன்களும் கொள்ளைக்காரன்களும் வழி நடக்குறதுக்கில்லே ஸ்கூல் காம்பவுண்ட்."

"அப்படின்னா, திருடனும் கொள்ளைக்காரனும் இந்த வழியாக நடக்கக்கூடாதுன்னு போடு எழுதி வைங்க."

இவரைக் கண்டாலே பயப்படுகிற மாணவர்கள் பெருங்குரலில் சிரித்தார்கள்.

"போடா திரும்பி." சார் கோபத்துடன் நெருங்கினார்.

நான் ஒரு அடி கொடுத்துவிட்டுப் பிடித்துத் தள்ளினேன். மாணவர்களுக்குக் குஷி. கூச்சலும் கும்மாளமும். நான் என் போக்கில் நடந்தேன். உண்மையில் அவர்தான் அடியைக் கேட்டு வாங்கிக்கொண்டார். திருடனுக்கு சுய அறிவோ நல்லது கெட்டதோ தெரியுமா? சட்ட விதிகளை பொது மக்களிடம் திணிக்கலாம். நல்லது கெட்டது தெரியாத சட்டத்தை மீறி நடக்கும் என்னிடம் விவரமுள்ள அந்த ஆசிரியர் கொஞ்சம் விவேகத்துடன் நடந்துகொண்டிருக்கலாம்.

போலீஸ் கேசாகி விட்டது. பள்ளிக்கூடத்தில் அத்துமீறி நுழைந்து பாடமெடுத்துக்கொண்டிருந்த ஆசிரியரைத் தாக்கியதாக! பெரிய குற்றம். போதாக் குறைக்கு என்னுடைய குற்றப் பின்னணி போலீசில் பதிவாகி இருக்கிறது. ஒருதடவை ஜெயிலுக்கும் போய் வந்திருக்கிறேன். நான் செய்தது மிகப் பெரிய போக்கிரித்தனம் என்று எல்லோரும் சொன்னார்கள்.

பிரச்சினை சிக்கலாகி விடும்போல் தோன்றியது. என்னுடைய தூரத்து உறவினரின் நண்பரான கொட்டற கோபாலகிருஷ்ணன் எம்.எல்.ஏவைப் போய்ப் பார்த்தேன். நான் திருடனென்பதெல்லாம் அவருக்குத் தெரியாது. தவறுதலாக நிகழ்ந்துவிட்ட சம்பவம் என்றேன். "கொஞ்ச நாட்கள் தலைமறைவாக இரு. அதற்குள் பேசி சமரசம் செய்ய முயற்சி செய்வோம்" என்றார்.

முன்பு, எங்கள் ஊரிலிருந்த தூரத்து உறவுப்பெண் ஒருத்தியின் வீட்டில் தங்கியிருந்தேன். நான் அவளுடைய முன் ஆள். அவளுக்கும் மிகுந்த மகிழ்ச்சி. தங்க வைப்பதற்குப் போதுமான காரணம் கிடைத்திருக்கிறது அல்லவா? ஊர்வசி சாபம் உபகாரம். ஐந்தாறு நாட்களுக்குப் பிறகு யோசித்தேன். "சே! எதுக்குத் தலைமறைவா இருக்கணும்? போலீஸ் பிடிச்சா என்ன செய்துடும்? ஒருவேளை நான்கைந்து உதை விழும். அவ்வளவுதானே? பார்க்கலாம்."

அவளிடம் விடைபெற்று ஊருக்கு வந்தேன். ஐந்தாறு நாட்கள் சென்றன. சமரசத்திற்கான முயற்சிகள். இன்று பிரணவம் தியேட்டர் இருக்கும் இடத்திலிருந்த கொல்லம் ஆர்ய விலாஸ் லாட்ஜில், எம்.எல்.ஏவின் முன்னிலையில் சமரசப் பேச்சுவார்த்தை நடந்தது.

முதல் நாள் நான் புத்தன் சந்தை ஜங்ஷனுக்கு வந்தபோது ஒரு செய்தியுமில்லாமல் சலித்துப்போயிருந்த ஊர்க்காரனொருவன் குதூகலத்துடன் சொன்னான்: "டேய், மணியா, ரெண்டு போலீஸ்காரங்க, உன்னைப் பிடிக்கிறதுக்காக களரி வாதுக்கல் ஸ்கூல் பக்கம் போயிருக்காங்க. அடி வாங்கின அந்த சாரோட ஏற்பாடல்ல! உன் திமிரை அடக்கணும்னு வேற சிலர் செய்த வேலை. நாளை சமரசம் பேசுறதுக்குள்ளால நீ உள்ளே போயிடுவே."

அதையும்தான் பாத்திடுவோமே! நான் சைக்கிளில் ஏறி போலீஸ்காரர்களைப் பின்தொடர்ந்தேன். அன்றைய வயதும் அறிவீனமும் தந்த பலத்தில்.

களறிவாதுக்கல் கோயிலின் முன் இரண்டு போலீஸ்காரர்கள். எனக்கு அறிமுகமானவர்கள்தான். சாக்கோவும் சந்திரன்பிள்ளையும்.

யாரோ இரகசியமாகச் சொல்லியிருக்கிறார்கள். "அதோ வர்றானே, அந்தத் திமிர் பிடிச்சவன்தான்."

"ஸ்கூலுக்குள்ளே பூந்து அழிச்சாட்டியம் பண்ணிட்டு திமிர்லே நடக்குறியாடா" என்று கேட்டபடியே சைக்கிளை போலீஸ் பாணியில் ஸ்டாண்ட் போட்டு விட்டு ஓடி வந்தார்கள்.

நான் இடுப்பிலிருந்த கத்தியை உருவிக் காட்டினேன்.

அவர்கள் அப்படியே நின்று விடுவார்களென்று எதிர்பார்த்தேன். சந்திரன்பிள்ளை சார் முன்னால் வந்தார். கத்தியால் லேசாகக் கீறி வைத்தேன். போதாதா? திருடன் போலீசைக் குத்திவிட்டான். கஷ்ட காலத்தில் திமிர் வேலை செய்திருக்கிறது. சந்திரன்பிள்ளை சாரும் சாக்கோ சாரும் கூச்சலிட்டார்கள்: "போலீஸ்காரனையே குத்திட்டான் பாத்தீங்களா? இவனைப் பிடிச்சுக் கொடுக்க ஊர்ல ஆளில்லையா?"

யாரும் அசையவில்லை. சம்பவம் சிக்கலாகிவிட்டதை நான் உணரவே இல்லை. ஓடித் தப்பித்துக்கொள்ளவும் விருப்பம் இல்லை. வருவது வரட்டும் என்று நின்றேன். பத்தே நிமிடத்தில் கொல்லம் ஈஸ்ட் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து கன கம்பீரமான ஒரு உதை வாகனம் வந்தது. எஸ்ஏயும் ரிசர்வ் போலீஸாரும் அடங்கிய பத்துப் பன்னிரெண்டு பேர்கள். இவர்களைக் கண்டதும் ஊர்க்காரர்களுக்கு உற்சாகம் பீறிட்டது. யாரோ கட்டுவதற்குக் கயிறு கொண்டுவந்து கொடுத்தார்கள். நான் கத்தியை மடக்கிவிட்டு வண்டியில் ஏறினேன். இதையறிந்த என்னுடைய நண்பன் காராளில் ரவி, கொட்டற கோபாலகிருஷ்ணனுடன் வந்து காவல் நிலையத்தில் காத்திருந்தான். ஆனால், உதை வாகனம் அங்கே போகவில்லை. ஒன்று ஒன்றரை மணி நேரமாக அது ஆஸ்ராமம் மைதானத்தையே சுற்றி வந்தது. ரிசர்வ் போலீஸாரின் கைகளுக்கு என்னுடம்பில் பயிற்சி கிடைத்தது.

பழுத்துலைந்த சிங்கன் வாழைப்பழம்போலானது என்னுடம்பு. உள்ளே உலைந்தும் வெளியே பச்சை நிறமும். வண்டி ஸ்டேஷனின்முன் வந்து நின்றதும் என்னைக் கைத்தாங்கலாகப் பிடித்து இறக்கினார்கள். நான் நின்று ஆடிக்கொண்டிருக்கிறேன். சும்மா சொல்லக்கூடாது. காலின் அடிப்பாகத்தை அவர்கள் விட்டு வைத்திருந்தார்கள். அதைத் தரையில்

ஊன்ற முடிந்தது. பாக்கி உடம்பு முழுவதும் பாம்புக் கடியேற்றதுபோல் நீலம் பாரித்திருந்தது.

கொட்டற எம்எல்ஏ கேட்டார்: "உன்னை அவங்க அடிச்சாங்களா?"

நான் சொன்னேன்: "சே . . . சே . . ." இதைச் சொல்வதற்கு நான் பட்டபாடு. நெஞ்சுக் கூட்டிக்குள்ளிருந்து ஏதோ ஒன்று மேல் நோக்கி வருவதுபோலிருந்தது.

மறுநாள் காலை பத்து மணிக்குப் பேச்சு வார்த்தை. பள்ளிக்கூடத்திலிருந்து ஆசிரியர்களும் மற்றவர்களும் வந்தார்கள். ஸ்கூலில் அசெம்பிளி நேரத்தில் திண்டில் ஏறி நின்று மன்னிப்புக் கேட்க வேண்டும். நான் சொன்னேன்: அது நான் படித்தப் பள்ளிக்கூடம். என்னுடைய ஊர். மன்னிப்பெல்லாம் கேட்க முடியாது. அவர் வேண்டுமென்றால் நான் கொடுத்ததற்குப் பல மடங்காகத் திருப்பித் தரட்டும். நான் பெற்றுக்கொள்கிறேன். அது முடியாதென்று அவர். மாணவர்கள் முன் தன்னுடைய சுயமரியாதை திருப்பப் பெற வேண்டும். போலீஸ்காரர்கள் என்னைப் பயமுறுத்திப் பார்த்தார்கள்.

நான் முடிவாகச் சொல்லிவிட்டேன்: "மாட்டேன்னா மாட்டேன்தான். ஒருவேளை அடிச்சுக் கொல்வீங்களா இருக்கலாம், பரவாயில்லை. செத்துட்டுப்போறேன். ஆனா, ஒண்ணு, பொறுமைக்கும் ஒரு எல்லை இருக்கு. ஏற்கனவே நிறைய வாங்கிட்டேன். இதுக்கு மேலயும் என்னை அடிச்சா, சார்."

ஆசிரியரின் முகம் வெளிறியது. அவர் உடனே பிளேட்டை மாற்றினார்:

"இனிமேல் பள்ளிக்கூடத்திற்குள் ஏற மாட்டேன்னும் மாணவர்களையோ ஆசிரியர்களையோ தொந்தரவு செய்யமாட்டேன்னும் எழுதி வாங்கணும்."

நான் யாரையும் தொந்தரவு செய்ய விரும்பவுமில்லை. ஸ்கூலுக்குள்ள ஏறவுமில்லை. கொஞ்சம் சுற்றி நடக்க வேண்டும், அவ்வளவுதான். எழுதிக் கொடுத்தேன். பிரச்சினை தீர்ந்தது. கொஞ்ச நாட்கள்தான். எல்லாரும் அந்த வழியாக நடந்தார்கள். நானும் நடந்தேன். பிறகு, அந்த ஆசிரியர் என்னைக் கண்டதாகப் பாவிக்கவே இல்லை.

## 36 - கள்ளன் காசர்கோடு

ஒரேயொரு தடவைதான் காசர்கோடு மாவட்டத்துக்குத் திருடுவதற்கு என்று போயிருக்கிறேன். அதுவும் ஒருவனுக்கு உதவி செய்வதற்காக! இவனுக்குக் கிணறு தோண்டுகிற தொழில். எல்லாவற்றையும் இழந்துபோய் நிற்பவன். என்னிடம் வந்து சொன்னான். எனக்கு ஒரு உதவி செய்யணும். இப்படியே போனால் தூக்குப்போட்டு சாவுறதத் தவிர வேற எந்த வழியுமில்லை. அந்த அளவுக்குக் கடன்காரன்களின் தொந்தரவு. எனக்காக ஏதாவதொண்ணு செய்து தரணும். வீடுகளை நான் காட்டித் தர்றேன். நான் கிணறு வேலைக்குப் போன வீடுகள்.

நான் சொன்னேன்: "நான் வர்றேன். ஆனால், கியாரண்டி சொல்ல முடியாது. ஏதாவது படியலாம்; படியாமலுமிருக்கலாம்."

"எனக்கு உன்னைத் தெரியாதா மாப்ளே? நம்பிக்கையோட முயற்சி செய்."

அப்படியாக அவனுடன் காசர்கோட்டுக்குப் புறப்பட்டேன். மூன்று நாட்கள் அங்கே இருந்தேன். பாவம், ஆயிரம் ரூபாய்வரை அவன் எனக்காகச் செலவிட்டிருப்பான். இரண்டு இரவுகளாக மூன்று வீடுகளில் தப்பிப் பார்த்தேன். கஷ்ட காலத்தின் உச்சியிலிருந்த அவனுடைய ராசிதான் இதிலும். எந்த வீட்டிலும் எதுவும் சிக்கவில்லை. வீடுகளுக்கிடையில் மிகுந்த தூரமிருந்தது. மேடும் பள்ளமும். ஒரு வீட்டிலிருந்தால் தொலைவில் பள்ளத்திலிருக்கும் இன்னொரு வீட்டில் நடப்பதையெல்லாம் பார்க்கலாம். மூன்றாவது வீட்டில் நுழைந்தபோது வீட்டுக்காரர்கள் விழித்துக்கொண்டார்கள். கூட வந்தவன் வெளியே காவல் நின்றிருந்தான். இரண்டுபேரும் ஓட ஆரம்பித்தோம். ஏதேதோ தோட்டங்களைக் கடந்து ஓடி ஒரு பாறையில் தளர்ந்து போய் உட்கார்ந்தோம். அவன் மேலும் கீழுமாக மூச்சு வாங்கிக்கொண்டிருந்தான். முன்பரிச்சயமின்மையும் வேதனை யும். பாவம், உட்கார்ந்து அழ ஆரம்பித்தான்.

நான் சொன்னேன்: "நான் ஊருக்குப் போறேன். நாளைக்கே."

"நீ போ, என் கஷ்டமெதுவும் இந்த ஜென்மத்தில் தீரப்போறதில்லை"

என்றான். நான் பதில் சொல்லவில்லை.

வானம் நிறைய நட்சத்திரங்கள் மின்னிக்கொண்டிருந்தன. ஆயிரமாயிரம் நட்சத்திரங்கள்.

"அடுத்த வாரம் வட்டிக்காரன் வருவான். அடுத்ததாக அவன் செய்யப்போறது ஆட்கள் முன்னால வெச்சி பொஞ்சாதியோட மடியைப் பிடிக்கிறதுதான்."

"நீ செத்துப்போனா ஒருவேளை அப்படி நடக்காதுன்னா நீ சாவுறதுதான் நல்லது. நான் வேற என்ன சொல்றதுக்கு. வேணுமுன்னா ஒரு இரண்டு நாள்கூட முயற்சி செய்து பாப்போம். ஆனா, இங்கே வேண்டாம். வேறேதாவது ஊர்ல."

"வேண்டாம் . . . சாவணும்கிறதுதான் என்னோட விதி. அவளைக் கொன்னுட்டு நானும் சாவேன். விஷம் வாங்கி வெச்சிருக்கேன். இது துரதிர்ஷ்டம் பிடிச்ச என்னோட கடைசி முயற்சி."

திடீரென்று அந்தச் சத்தம் வந்தது. "எந்த நாய்க்குப் பொறந்தவன்டா பாறைமேல உக்காந்திட்டிருக்குறவன்?"

நாங்கள் இரண்டு பேரும் அந்த இடத்திற்குப் புதியவர்கள். நான் எழுந்து இருட்டில் பார்த்தேன். இரண்டு மூன்று தடியன்கள்.

"இது, மோசமான ஏரியா. சீக்கிரம் போயிடுவோம்."

நான் சொன்னேன்: "இல்லை, கொஞ்ச நேரம் உக்காந்த பிறகுதான் போக முடியும்."

இருட்டில் தெரிந்த ஒரு டார்ச் வெளிச்சம் கையில் வைத்திருக்கும் பிச்சுவாக் கத்தியைக் காட்டி எங்களைப் பயமுறுத்தியது. நாங்கள் அளவு கடந்த விரக்தியுடன் தளர்ந்து உட்கார்ந்திருக்கிறோம். குத்திக் கொன்றாலும் அந்த இடத்தை விட்டு எழப்போவதில்லை.

தடியன் ஒருவன் பக்கத்தில் வந்தான். கூடவே இன்னும் இருவர். கையில் கட்டைக் கம்பும் பிச்சுவாக்கத்தியும்.

"யாருடா நீங்க? எதுக்காக இங்கே வந்தீங்க? இது எந்த இடம்னு தெரியுமாடா நாய்களே?"

நான் சொன்னேன்: "எந்த இடமாகவும் இருந்துட்டுப் போகட்டும். கொஞ்ச நேரம் இங்கே உக்காந்திருக்கோம். களைப்பைப் போக்கிட்டு எழுந்திருச்சுப் போயிடுவோம். உங்களுக்கு எங்களால எந்தத் தொந்தரவும் ஏற்படாது."

"எங்கே போயிட்டு வர்றீங்க?"

"திருடுறதுக்கு. வீட்டுக்காரங்க துரத்தினாங்க. ஓடி வர்றோம்."

"அப்படீன்னா, வந்ததுபோல ஓடுங்க."

"கொஞ்ச நேரம் உட்காந்திட்டு . . . களைப்பு மாறினதும் போயிடுவோம். இல்லை, எங்களைக் கொல்லணும்னா அதைச் செய்யுங்க."

இரண்டு மூன்று முறை நான் இருமினேன். பச்சைத் தடியை அடுப்பில் வைத்தது போல் புகைந்த இருமல். அவர்களின் டார்ச் வெளிச்சத்தில் அப்படியே நெஞ்சைத் தடவி விட்டுக்கொண்டு சொன்னேன்:

"இதில திருடன் நான்தான். இவனோட கஷ்ட காலம் காரணமாக தெரியாத ஒரு ஊருக்குள்ளே வந்துட்டோம். எதுவுமே நடக்கலை. நாளை இவன் ஏதாவது முந்திரி மரத்தில தூக்குப்போட்டுச் சாவாங்கிறது நூறு சதவீதம் நடக்கப் போகுது. உங்களுக்கு விருப்பமிருந்தா இவனுக்கு ஒரு வேலை போட்டுக்கொடுங்க. நீங்களும் அவ்வளவு சரியில்லாதவங்கதான்னு தெரியும். எந்த வேலையாக இருந்தாலும் பரவாயில்லை."

எந்தப் பதிலும் வரவில்லை. நிசப்தம். நான் தொடர்ந்தேன்:

"குரல்வளை பிதுங்கிப்போன நிலைமையில இருந்து சொல்றோம்; எந்தக் கதியும் இல்லாதவங்க நாங்க."

தங்களுக்குள் எதுவோ பேசிக்கொண்டார்கள். "நம்பலாமா?"

"இரண்டுல ஒண்ணுன்னுப் புறப்புட்டு வந்தவன். செத்தாலும் உங்களைக் காட்டிக் கொடுக்க மாட்டான்."

"சரி, வா."

அவர்களுடன் நடந்தோம். முந்திரித் தோட்டங்கள். குழந்தைப் பருவத்தில் சுவாசித்த முந்திரிப் பழ வாசம். பாறைக்கூட்டத்தின் மறுபுறமிருந்து

வெள்ளைப்புகை வானத்தை நோக்கி உயர்ந்தெழுந்தது. நிலவு உதிப்பதுபோல். ஏழெட்டுப் பாத்திரங்களில் சாராயம் தயாராகிக்கொண்டிருந்தது.

எங்களுக்கும் ஊற்றித் தந்தார்கள். நல்ல அயிட்டம். முந்திரிப்பழத்தின் வாசம் சர்வ நாடிகளிலும் கிளர்ந்தெழுந்தது. அப்படியே மயங்கினோம். தட்டியெழுப்பினார்கள். இன்னமும் விடியவில்லை. தீயை அணைத்து, சுற்றுப்புறங்கள் முழுவதையும் கூட்டி சுத்தம் செய்திருந்தார்கள்.

நான் போகிறேன்; இனி அவனுடைய பொறுப்பு உங்களுக்கு என்று சொல்லிவிட்டு "இனி நீயாச்சு உன் பாடாச்சி" என்றபடி கை கொடுத்துவிட்டுப் பிரிந்தேன். பத்துப் பன்னிரெண்டு வருடங்கள் கழிந்த பிறகு ஒருநாள், திருமுக்கில் வந்த என்னை கள்ளுக்கடை அழைத்தது. பாக்கெட்டைத் தடவிப் பார்த்தேன். எட்டணா பாக்கியிருக்கிறது. மனதிற்குள் என்னைச் சபித்துக்கொண்டேன். சாப்பிட்டு மூன்று நாட்களாகின்றன. இந்த நிலைமையில் நீராகார ஆசை வேறு. தாகத்தால் தொண்டை வறண்டது. எந்த வீட்டிலும் போய் தண்ணீர் கேட்க முடியாது. அது ஒரு வகை யாசகம். "சாப்பிடுறியா" என்று கேட்பார்கள். அவமானம். தெரிந்த ஒரு கடையிலேறி இரண்டு தம்ளர் தண்ணீர் குடித்தேன். எட்டணாவுக்கும் வேர்க்கடலை வாங்கி, கொறித்தபடியே நடந்தேன். குளிர்ந்த நீரும் வேர்க்கடலையும் வயிற்றில் ஊசிபோல் குத்தியது. திடீரென்று ஒரு கார் பக்கத்தில் வந்து சடன் பிரேக்கிட்டு நின்றது.

அவன்தான். முந்திரி மரத்தில் தூக்கிட்டு சாகவிருந்தவன். கள்ளச் சாராயம் காய்ச்சுபவர்களிடம் நான் ஒப்படைத்துவிட்டு வந்தவன். புதிய கார். மாருதியல்ல, இன்னும் கொஞ்சம் உசத்தியான ஏதோ ஒன்று. தங்கக் கைக்கெடிகாரம். சட்டைக்குள்ளிருந்து வெளியே தலை காட்டும் கனத்த செயின். காரில் முகம் துடைப்பதற்கான டிஸ்யூ பேப்பர். பக்கத்தில் அவள். கடன்காரன் இவளுடைய இடுப்புச் சேலையை அவிழ்த்துவிடுவானென்று பயந்துதான் சாகப் போனான். முன்பு, முந்திரி ஆலையில் கைலியும் ஜாக்கெட்டும் அணிந்து பெருத்த மார்பை மறைக்க சிரமப்படும் ஒரு டவலும் அணிந்து நடந்தவள். இப்போது, வளவளப்பான சேலை. என் முகத்தைப் பார்ப்பதைத் தவிர்ப்பதற்காக, ரோட்டின் எதிர்த்திசையை இப்போதுதான் புதிதாகப் பார்ப்பதுபோல் பார்த்துக்கொண்டிருந்தாள்.

"நீ இப்போ . . ?"

"நான் பெரும்பாலும் காசர்கோட்டிலதான் மாப்ளே, பிசினஸ் அங்கதானே?

அவ்வப்போது வருவேன். ஒரு வீடும் வெச்சேன். அவசரமாகப் போகணும்."

"எங்கே?"

"சொல்றனே! நிறைய பேசவேண்டியதிருக்கு. நான் வர்றேன். மாப்ளையை எங்க பாக்கலாம்?"

"நான் ஊர்லதான் இருப்பேன்."

"நான் வர்றேன் அங்கே."

"எப்போ?"

"சாயங்காலம் வர்றேன்."

"எத்தனை மணிக்குன்னு சொல்லு."

"சாயங்காலம் . . . நீ அங்கதானே இருப்பே?"

"எங்கேயும் போகமாட்டேன். வந்துடுவேல்லே"

"என்ன மாப்ளே? உன்ன மறந்துட முடியுமா?"

சாயங்காலம் எரியும் வயிற்றுடன் மரத்தடியில் காத்திருந்தேன். ஸ்மால் அடிக்க சிலர் கூப்பிட்டார்கள். போயிருக்க வேண்டும். சாப்பிடுவதற்கு மரச்சீனியும் மீனுமாவது கிடைத்திருக்கும். எரியும் வயிற்றைக் கொஞ்சம் தணித்திருக்கலாம். அந்த நேரத்தில் அவன் வந்துவிட்டால்? புதிய வீடு எங்கே என்று ஏன் அவன் சொல்லவில்லை? இரவு மணி ஒன்பதாகியது. பத்தாகியது. எனக்குக் கோபமும் வருத்தமும் சேர்ந்து வந்தது. ஏமாற்றமும். பத்தோ ஐநூறோ தருவான் என்று எதிர்பார்த்து வெட்கமில்லாமல் நான் இப்படி . . . பதினொரு மணியானதும் ஜங்ஷனில் ஆள் நடமாட்டம் இல்லாமலானது. நான் மட்டும் தனியாக! இனி எனக்கு அழலாம். குனிந்தபடியே உட்கார்ந்து அழுதுகொண்டிருந்தேன். பசி அடங்கியிருந்தது. சோர்வு மட்டும் மிச்சம்.

கொஞ்ச நேரத்திற்குப் பிறகு சைக்கிளில் யாரோ வந்தார்கள்.

"மணியனாடா? என்னடா தனியா?"

"சே . . . ஒண்ணுமில்லேண்ணா."

திருடன் அகாலவேளைகளில் தனியாக இருக்கக்கூடாது. வாய்விட்டழுதபடியே வீட்டிற்குத் திரும்பினேன். யாராவது பார்த்தால் தண்ணி அடித்திருப்பதாகச் சொல்வார்கள். சொல்லட்டும். எங்கள் குடும்ப வீடு சகோதரிக்கு. திண்ணையில் படுத்துக்கொள்ளலாம். திருடன் வேறெங்கும் படுக்கக்கூடாது. தேவையில்லாத பிரச்சினைகள் ஏற்படும்.

தூக்கம் வரவில்லை. நெஞ்சில் பாறாங்கல்லைத் தூக்கி வைத்திருப்பது போலிருந்தது. பசி மட்டுமல்ல காரணம். மீண்டும் அழுதேன். கண்ணீரும் வற்றியிருந்தது. தொண்டை வறண்டது. கிணற்றங்கரைக்குச் சென்று ஒரு தொட்டித் தண்ணீரை இறைத்துக் குடித்தேன்.

## 37 - துப்பாக்கி

ஒரு இடவப்பாதி மாதம். பயங்கரமான இடியும் மின்னலும். கோழிக்கோடு ரயில்வே ஸ்டேஷன். கால்களைத் தூக்கி வைத்துக் கூனிக்குறுகி பெஞ்சில் உட்கார்ந்திருந்தேன். நல்ல மழை. இம்மாதிரியான நேரங்களில் ரயில்வே ஸ்டேஷனில் உட்கார்ந்திருக்கலாம். போலீஸ்காரன் வந்து லத்தியால் தட்டும்போது, "போன டிரெயின்ல வந்தேன். வெளியே போக முடியல, மழை" என்று சொல்லிவிட்டால் போதும். காலைவரையில்கூட உட்கார்ந்திருக்கலாம். ஒரு பழைய டிக்கெட்டிருந்தால் போதும். வாய், "டிரெயின்லே வந்தேன்" என்று சொல்லும் போதே கை, பாக்கெட்டிலிருந்து டிக்கட்டை எடுப்பதாகப் பாவிக்க வேண்டும். அதை அவர் கவனிக்க வேண்டும். வாங்கிப்பார்ப்பதற்கான வாய்ப்பெல்லாம் பத்து சதவிகிதம்தான். பார்த்துவிட்டால்? பார்த்துவிட்டால் என்ன? உங்கள் தலையெழுத்துபடி நடக்கும்.

பயங்கரமான ஒரு இடி முழங்கியது. இயற்கையே உருவாக்கித் தரும் இவ்வகை காலமாற்றங்களையும் பேரிரைச்சல்களையும் திருடன் ஏன் பயன்படுத்திக்கொள்ளக் கூடாது? ஒரு கலைஞன் என்ற நிலையில் இத்தனை காலமும் ஏதாவதொரு புதுமையைக் குறித்து நாம் சிந்தித்திருக்கிறோமா? வெறுமொரு நாலாந்தரத் திருடனாக மட்டுமே வாழ்ந்து தீர்த்தால் போதுமா? மனச்சாட்சி பேசியது.

சரிதான். மனமென்பது அசாதாரணமான ஒன்று. அதன் அழைப்பிற்கு நாம் செவி மடுக்கவே வேண்டும்.

என்ன செய்யலாம்?

மெதுவாக நடைப்பாதையில் நடந்தேன். பாதை முடிந்ததும் டிராக்கை நோக்கி நடந்தேன். உடல் முழுவதும் நனைந்துகொண்டிருந்தது. தண்டவாளத்தில் ஒரு பெரிய ஆணி கிடந்தது. தண்டவாளத்தின் இரும்புப் பிணைப்பிலிருந்து விழுந்திருக்கலாம். கண்ணூர் பகுதிக்குச் செல்லும் ஒரு குட்ஸ் நிற்கிறது. ஆணியின் கூர்ப்பகுதியைத் தண்டவாளத்தில் படும்படியாகக் கட்டி வைத்தேன். பார்சல் சாக்கு நூல் தாராளமாகக் கிடைத்தது. குட்ஸ் சென்றது. ஆணி தெறித்து விழுந்தது. ஆகா,

வெற்றியடைவோம் என்று எதிர்பார்க்கவே இல்லை. சும்மா ஒரு டெஸ்ட்தான். முனைப் பகுதி கூர்மையடைந்து நல்லதொரு உளியாக மாறியிருந்தது. அதைக் கையிலெடுத்துக் கொண்டு தண்டவாளத்தினூடே நடந்தேன். ஆள் நடமாட்டமில்லாத இடத்தை அடைந்ததும் அதை தண்டவாளத்தில் உரசி சாட்சாத் உளியாகவே ஆக்கினேன். ஆயுதத்துடன் நடந்து மலாப்பரம்பை அடைந்ததும் நின்றேன். பத்திரிகைக்காரர்கள் வசிக்கும் காலனி. நான் நனைந்துக் குதிர்ந்திருந்தேன். கொஞ்ச நேரம் கழிந்தது. சுப வேளை. மணி இரண்டு. நல்ல இடியும் மின்னலும். ஒரு வீட்டின் கதவுப் பாளியை உளியால் நான்கு புறமும் செதுக்கிக் கச்சிதமாக எடுத்து நீக்கினேன். முதல் முயற்சியாக சமையலறைப் பகுதியினூடே நுழைந்தேன். ஹாய்! சட்டை, வேட்டி, பைஜாமாவெல்லாம் விரித்துப் போடப்பட்டிருந்தது. நான் உடுப்புகளைக் கழற்றினேன். அண்டர்வேர்வரை உருவிப்போட்டேன். பைஜாமாவை அணிந்து கொண்டேன். நான் இதுவரை பைஜாமா அணிந்ததில்லை. ஒரு சட்டையும் போட்டுக்கொண்டேன். தலைமுடியைக் கோதி விட்டுக்கொண்டேன். இன்றைய முகூர்த்தம் வெகு சிரேஷ்டம். எல்லாவற்றிலும் ஒரு முன்னேற்றமும் அதிர்ஷ்டமும் தெரிகிறது. கூடவே புதுமையும். உற்சாகத்துடன் சமையலறைப் பகுதியை நோக்கி நடக்கத் தொடங்கிய நான் திடுக்கிட்டேன். யாரோ என் கையை எட்டிப்பிடித்தார்கள். அந்தத் திகைப்பின் அனுபவத்தை கை இப்போதும் உணருகிறது. என் கை மிகவும் குளிர்ந்திருந்ததால் தீ போலிருந்தது பிடித்தக் கையின் சூடு.

"எவ்வளவு நேரமாக் காத்திருக்கிறது?" மெதுவானக் குரலில் சொன்னாள்: "சாவியை வெச்சிப் பூட்டைத் திறக்குறதுக்கு இவ்வளவு கஷ்டமா? கிர் . . . கிர்ருன்னு எவ்வளவு நேரமாக் கேக்குது சத்தம்?"

என் கையைப் பிடித்தபடி முன்னால் நடந்தாள். எனக்குப் புரிந்தது. செட்டப் கேசுதான். சமையலறைக் கதவை உள்ளிருந்தும் வெளியிலிருந்தும் திறக்கலாம். சாவியைக் கொடுத்தால் வாடிக்கையாளர்கள், யாருக்கும் தெரியாமல் பின்பகுதி வழியாக எந்நேரம் வேண்டுமானாலும் உள்ளே நுழையலாம்.

ஒரு அறைக்குள் நுழைய இருக்கும்போது சொன்னாள்:

"அங்க ஷீலாக்காவும் இன்னொருத்தரும் இருக்காங்க."

அப்படியென்றால் சமையலறைக்கு பல திறவுகோல்களுண்டு.

நான் சொன்னேன்: "செருப்பை வெளியில விட்டுட்டேன். இங்கயே இரு. எடுத்துட்டு வந்திடறேன்."

வெளியே வந்தேன். கோபமும் வருத்தமும். மிகத் திறமையாகப் பத்தே நிமிடத்தில் கதவைப் பெயர்த்துக்கொண்டு உள்ளே வந்தவனுடைய கதி. சை . . .

ஒரு கத்தி, பிளேடு, சைக்கிள் செயின் ஆகியவற்றுடன் நான் நடந்திருக்கிறேன். ஆயுதமென்பது காயம்குளம் வாள்போல். பாதுகாப்புக்கு நல்லதுதான். நமது வழி முள்ளும் புதர்ப் படர்ப்புகளும் விஷ ஜந்துக்களும் நிறைந்ததென்பதால் பயன்பட்டுமிருக்கிறது. ஆனால், மனக் கட்டுப்பாடு வேண்டும். கள்ளுக்கடைகளில் தகராறு வரும்போது தூக்கிக்காட்டி அலறலாம். ஆனால், இது கோழைத்தனம். தொட்டதற்கெல்லாம் கத்தியை உருவுபவனை மனோரீதியாக எளிதில் கீழ்ப்படுத்தி விடலாம். அப்பாவிகளை மிரட்ட உதவும். திருட்டுவால் முளைத்த ஆரம்பக் கட்டங்களில் என்னிடம் பயங்கரமான ஒரு வாளிருந்தது. ஆட்டோ ஓட்டும் காலம். அதை ஆட்டோவின் பின்புறம் வைத்து சாக்குத் துணியால் மூடியிருப்பேன். இரவிபுரம் கள்ளுக்கடையில் வைத்துதான் இதைச் செய்யும் கொல்லனை சந்தித்தேன். ரெயில்வே ஸ்டேஷன் போர்ட்டர் ஒருவன் நல்ல உருக்குத் துண்டுகள் கொண்டு வந்து தந்தான். அதனுடன் கொல்லனைப் போய்ப் பார்த்தேன். எங்கள் வீட்டின் அருகாமையிலுள்ள ஒரு கொல்லன்தான். என் அப்பாவையெல்லாம் தெரியும். அவனது கையில் காசில்லாத ஒரு கட்டத்தை எதிர்பார்த்திருந்தேன். ஒரு கிளாஸ் குடித்துவிட்டு அவன் எழவிருக்கும்போது நான் ஒரு குப்பிக்கள்ளு கொண்டு வந்து வைத்தேன். அது தீர்ந்ததும் மீண்டும் ஒரு குப்பி. பிறகு, நாங்கள் சேர்ந்து ஒன்றாக நடந்துகொண்டிருக்கும்போது சொன்னேன்: "கொல்லா, எனக்கொரு ஆசை. ஒரு நல்ல வாள் செய்து தரணும்."

"யாரையாவது கொன்னுட்டு கொல்லன் பேரைச் சொல்லவா?"

நான் சொன்னேன்: "கொல்லங்கிற பேரே கொலைக் கருவி செய்றவன் என்கிறதாலதான் . . ."

"போ, தம்பி."

நான் சொன்னேன்: "யாரையும் கொல்றதுக்கோ திங்கிறதுக்கோ இல்லை. சும்மா ஒரு பம்மாத்துக்கு."

"உன்னோட அப்பன் குட்டன்பிள்ளைமேல சத்தியம் செய்து தருவியா? யாரையும் வெட்டமாட்டேன்னு?"

சத்தியம் செய்தேன்.

"சரி, இருபது ரூபா ஆகும். பத்து ரூபா அட்வான்ஸ்."

உடனே கொடுத்தேன். ரூபாயை வாங்கிய கொல்லன் திரும்பவும் கள்ளுக்கடையை நோக்கி நடந்தான்.

உருக்கு கொடுத்தேன். இரண்டடியில் உறுதியான பிடியெல்லாம் வைத்த நல்லதொரு ஆயுதம். இரவு நேரங்களில் எந்தத் தேவையுமில்லாமல் வாளுடன் வயற்காடுகளில் திரிவேன். பொருத்தமான எதிரிகள் யாருமில்லையென்று திரும்பவும் கொண்டு வந்து வைப்பேன். நண்பர்கள் சிலரிடமும் அதைக் காட்டினேன். நீ ஒரு வாள் வெச்சிருக்குறே? இதில பெருமைப்பட என்ன இருக்கு? என்பதுபோல் அவர்கள் கண்டுகொள்ளவே இல்லை. அதற்கொரு எலக்ட்ரோ பிளேட்டிங் கொடுக்கலாமென்று நான் முடிவு செய்வதற்கானக் காரணமே இதுதான். பத்து முப்பத்தைந்து வருடங்களுக்கு முன்பு நடந்த விஷயம். நூற்றைம்பது ரூபாய் ஆகும். நூற்று நாற்பதில் ஒதுங்கியது. பிறகு அதை உருவினால்போதும், அந்த பகுதியே நடுங்கியது. சிறு வெளிச்சம் இருக்குமென்றால் அதை உள்வாங்கிக்கொண்டு வாள் சும்மா தகதகக்கும். ஆனால், இதில் எனக்கு மட்டுமே தெரிந்த, உள்ளார்ந்ததொரு ரகசியமிருந்தது. எலெக்ட்ரோ பிளேட்டிங் செய்தால் வாளின் கூர்மை சுத்தமாக இல்லாமல் போய்விடும். இதை வைத்து யாரையும் கொல்ல முடியாது. வெட்டிய இடம் சதையுமே தவிர வெட்டுப் படாது. கொல்லனுக்குக் கொடுத்த வாக்கையும் மீற வேண்டியதில்லை. அதன் ரகசியத்தையும் அழகையும் ஆராதிக்கத் தெரியாத ஏதோ ஒரு புறம்போக்கு அதைத் திருடிவிட்டது. வீட்டிற்கு வந்து சாக்குத் துணியை நீக்கியபோது வாளிருந்த இடம் சூன்யம். தெரிந்த திருடனாகத்தான் இருக்க வேண்டும்.

ஆயுதத்தை வித்தை தெரியாமல் பிரயோகிக்கக் கூடாது. கத்தியை வீசுவதாக இருந்தாலும் அதன் கட்டுப்பாடு நம் கைகளில் இருக்க வேண்டும். ஒருவனைக் காயப்படுத்தியே ஆக வேண்டுமென்றால் ஒழிய அதைச் செய்யக்கூடாது. கையிலிருந்து புறப்பட்ட கல்போன்றது ஆயுத விளையாட்டு. ஜெயிலில் இதற்கு நிறைய உதாரணங்கள் நிகழ்வதுண்டு. வெறுமனே கத்தியை வீசினான் ஒருவன். எதிரில் நின்றவன் முன்னால்

வர, குரல்வளை அறுபட்டுவிட்டது. மனதாலும் செயலாலும் நல்லதையே நினைக்கும் எத்தனைபேர் ஒரு நிமிட மதிமயக்கத்தில் ஜெயிலே கதியென்று கிடக்கிறார்கள்? காய்கறி நறுக்கிய கத்தியைக்கூட வேலை முடிந்ததும் அதற்கான இடத்தில் பாதுகாப்பாக வைத்துவிட வேண்டும். துப்பாக்கியும் அதுபோல்தான். துப்பாக்கிகளை எடுத்து நான் பரிசோதனை செய்திருக்கிறேன். வேடிக்கையாக! அப்படியும் இப்படியுமாகத் திருப்பிப் பார்ப்பதைத் தவிர, டிரிக்கரின் பக்கத்தில்கூட விரலைக் கொண்டு செல்லமாட்டேன். இரண்டு வீடுகளில் அலமாராவைத் திறந்தபோது அதில் துப்பாக்கி இருப்பதைப் பார்த்திருக்கிறேன்.

ஈஸ்ட் ஸ்டேஷன் சேமிப்பறையில் ஏராளமான துப்பாக்கிகள் இருந்தன. போலீஸ் அதிகாரிகள் பலருடைய துப்பாக்கிகளை நான் சுத்தம் செய்திருக்கிறேன். கால நீட்டிப்பு செய்யாத, தேர்தல் காலங்களில் ஒப்படைக்கிற துப்பாக்கிகளை அதன் இடத்தில் கொண்டுபோய் வைக்க போலீசார் என்னிடம் தருவதுண்டு.

அருகதையிருப்பதை மட்டுமே கையாள வேண்டுமென்று சொல்வது உண்மைதான். திருடனுக்குச் சிறு கத்தியொன்றே தாராளம். பாதுகாப்புத் தேவைகளுக்கும் தொழிற்கருவியாகவும் அதைப் பயன்படுத்தலாம். பிரயோகிக்கத் தெரியாதவன் கையில் ஆயுதமெடுத்தால் . . . ஒரு சம்பவத்தைச் சொல்கிறேனே!

கொல்லம், வடக்கேவிளையில் ஒரு வீட்டில் நண்பகல் நேரத்தில் திருடன் நுழைந்துவிட்டான். முந்திரி வியாபாரியின் வீடு. வீட்டில் வேலைக்காரி மட்டுமே இருந்தாள். அலமாராவிலிருந்து தங்க நகைகளும் பணமும் கிடைத்தன. மொத்தமே ஒரு பாக்கெட் கொள்ளளவுதான் வரும். அலமாராவின் ரகசிய அறை கண்ணில்பட திருடன் அதையும் திறந்தான். உள்ளேயிருந்த பார்சலை எடுத்துப் பிரித்தான். ஒரு நல்ல இனம் துப்பாக்கி. ஆசாமி ஏதேதோ கனவுகளில் மிதந்திருக்க வேண்டும். எல்லாவற்றையும் வாரிச்சுருட்டிக் கொண்டு அமைதியாகக் கிளம்பினான். எதிரில் வேலைக்காரி. துப்பாக்கியால் வெறுமனே குறிதான் வைத்தான். அம்மாளு தரையில். திருடன் மனதிற்குள் அட்டகாசமாகச் சிரித்திருப்பான். ஒரு மணி நேரம்கூட ஆகியிருக்காது. சின்னக்கடை, குறுக்குச்சந்தில் ஒரு சம்பவம். எஸ்ஐ ஒருவரும் போலீஸ்காரரும் இவனைப் பார்க்கிறார்கள்.

"நில்லுடா அங்கே, நீ திருடிட்டு வர்றதா அறிஞ்சோம். மரியாதையா சரண்டராயிடு."

நல்லதொரு திருடனென்றால் ஓடியிருக்க வேண்டும். இவன் அனுபவசாலியும் கூட! ஆனால், இவனோ, இடுப்பிலிருந்து துப்பாக்கியை உருவினான்.

"தெரிஞ்சவர்னு எல்லாம் பாக்கமாட்டேன். சுட்டுப்புடுவேன் சுட்டு. ஆமா."

எஸ்ஐ மிக அமைதியாக அவனை நோக்கி நடந்தார். ஆசாமி மிரண்டு போனான். "சுட்டுப்புடுவேன்னா, சுட்டுப்புடுவேன் சொல்லிட்டேன்." கொஞ்சம் மனிதாபிமானமுள்ள திருடனும்கூட. என்ன இருந்தாலும் நம்ம ஏமானல்லவா, காலுக்குக் கீழே சுடுவோம் என்ற எண்ணத்துடன் சினிமாவில் பார்த்தது போல் மூட்டுப்போட்டு நின்று குறிபார்த்தபடியே "கிட்ட வந்தா சுட்டே புடுவேன்." என்றபடி ஐந்தாறு தடவைச் சுட்டான். அடுத்த காட்சியில் எஸ்ஐ நெருங்கிச்சென்று எட்டி ஒரு உதை. மூஞ்சியைப் பிடித்தொரு பிடி. அப்படியே தூக்கி ஜீப்பிலெறிந்தார்.

ஜீப்பில் வைத்து உதைக்கும்போது அவன் அப்பாவியாகச் சொல்கிறான்:

"சார், படாத இடத்துல பட்டுடக்கூடாதுனு நினைச்சி நான் கால்லதான் சுட்டேன். இதை ஞாபகத்தில வெச்சுட்டு அடியுங்க."

ஜீப்பில் சிரிப்புச் சத்தம்.

அடி நின்றது. வண்டி ஈஸ்ட் ஸ்டேஷனை நெருங்கும்போது பின்னாலிருந்த திருடன் தொட்டு அழைக்கிறான்: "அது ஏன் சார், துப்பாக்கி வெடிக்கமாட்டேனுடுச்சி?"

சார் கெட்ட வார்த்தைச் சொல்லித் திட்டிவிட்டுச் சொன்னார்: "அடேய், அவனவன் சுமக்குற அளவுக்குத்தான் தூக்கணும். துப்பாக்கி லாக் ஆகுங்கிற விஷயம் உனக்குத் தெரியுமா? லாக்கை நீக்கணும்னா அது உரிமையாளனாலதான் முடியும்."

"ஓ, அப்படி ஒண்ணு இருக்கா?" திருடனின் சந்தேகம் தீர்ந்தது.

விஷப்பரீட்சை: திருடினால் மட்டும் போதாது; அதை விற்கவும் வேண்டும். இதற்கென சிலர் தேவை. திருட்டுப்பொருள் என்று தெரிந்தே கொள்முதல் செய்ய வேண்டும். விஷப் பரீட்சை. தவிர்க்க முடியாமல் குற்றத்தை நாம் ஒப்புக்கொள்கிற கட்டத்தில் திருட்டுப் பொருட்களை மீட்க வேண்டியது வரும். அப்போது கொள் முதலாளிகளும் சிக்குவார்கள். தங்கக் கடைகளில் விற்பதைத் தவிர நான் தனிப்பட்டவர்களிடம் பொய்

சொல்லி அதிகமாக விற்றதில்லை. அது துரோகம். ஆனால், விஷப்பரீட்சை என்று தெரிந்தே என்னிடம் பொருட்கள் வாங்கும் இரண்டு பேர் ஊரிலிருந்தார்கள். பூக்குஞ்ஞும், மின்சார வாரியத்தில் வேலை பார்க்கும் ஒரு அதிகாரியும்.

என்னை வைத்து இவர்கள் இரண்டுபேரும் நிறைய சம்பாதித்தார்கள். இவர்கள் வைப்பதுதான் விலை. நான் பேரம் பேசுவதில்லை. நகைகளை அள்ளி வைத்துவிட்டு இத்தனை ரூபாய் என்று சொல்வேன். அதுக்கெல்லாம் வராது. இன்னும் வைக்கணும் என்பார்கள். நான் சொல்லும் விலையைவிட நான்கு மடங்கு அதிக விலைமதிப்புண்டு என்பது எனக்கும் தெரியும். இருந்தாலும், பணம் உடனடியாக தேவை. ஆகவே. நான் கொசுறுப் போட்டுக் கொடுப்பேன். நகைகள் எதுவும் கைவசமில்லை என்றாலும் அடுத்த ஆபரேஷனின் தருவதாகச் சொல்லிக் கடன் வாங்க முடியும். சில நேரங்களில் முன்னமேகூட சொல்லி வைப்பார்கள்:

"டேய், மணியா, ஒரு நல்ல விசிபி வேணும்டா?"

"ஏற்கனவே ரெண்டு விசிபி தந்திருக்கிறனே?"

"ஒண்ணுகூட வேணும்டா, எம்மருமவளுக்கு."

"சரி, பாக்கலாம். ஒரு அம்பது ரூபா எடுங்க. இருநூறு அடிச்சிட்டு கொஞ்சம் உக்காந்து யோசிக்கட்டும்."

ஒருநாளிரவு இப்படியான சிந்தனைக்குப் பிறகு திரும்பி வரும்போது போலீஸ்:

"டேய், மணியா, எங்கடா கிளம்பிற்றே?"

"கொஞ்சம் அடிக்கலாம்னு போறேன் . . ."

"அடிச்சி முடிச்சதும் யாரை அடிச்சு மாத்தப்போறே?"

"அப்படில்லாம் எதுவுமில்லை சார்."

"சரி, நீ வண்டியில ஏறு."

வக்கத்துப்போன இந்த போலீஸ்காரர்களால் மனுஷன் பிழைக்க

வழியில்லாமலாகி விட்டது. சுதந்திரமாக வெளியிலிறங்கி நடக்க முடியவில்லை. உடனே பிடித்து உள்ளே போட்டு விடுகிறார்கள். கேசெதுவும் இல்லையென்றால் பிரிவு நூற்றொன்பதோ நாற்பத்தேழோ போடுவார்கள். பழைய திருடன். சந்தேகப்படும்படியான சூழ்நிலையில் பிடிபட்டான் என்பதுதான் இந்தப் பிரிவு. ஒருமுறை திருட்டு வழக்கில் பிடிபட்டால், பிறகு அவன் தப்பித்துக்கொள்வதற்கான வாய்ப்பு மிகக் குறைவு. உள்ளே தள்ளிக்கொண்டே இருப்பார்கள்.

பிடிபட்டதும், கண்டுபிடிக்கப்படாத திருட்டுகளைத் தலையில் கட்டும் முயற்சிகள் நடக்கும். எஸ்ஐ, உதை மன்னர்களாகிய ஹெட் அல்லது போலீஸ்காரர்களுக்கு நம்மைப் போட்டுக்கொடுப்பார்கள். புலிக்கூண்டில் முயல் குட்டியைப்போல்.

"எதுக்குடா, எலிபோல பதுங்கியிருந்தே?"

"அது பகல் நேரமில்லையா ஏமானே?"

"அதுக்காக?"

"நாங்க புலியாகிறது இரவு நேரங்கள்லதானே?"

"சரி, புலி வேலைகள்லே ஒரு அஞ்சாறு சொல்லு. கேசு சுத்தமா இல்லை."

"அப்படில்லாம் எதுவுமில்லை ஏமானே . . . அமைதியாக வாழ்ந்திட்டிருக்கேன்."

"அமைதியா வாழணும்னா மடியில கனமா பணம் இருக்கணுமேடா?"

"ஒண்ணுமில்ல ஏமானே, ரொம்பக் கஷ்டம், பட்டினி."

"சத்தியமா?"

"கடவுள்மேல சத்தியமா ஏமானே."

"நீ கிராம ஃபோன் பாத்திருக்கியாடா?"

"பாத்திருக்கேன் ஏமானே."

"அது பாடுன்னா பாடுமா?"

"பாடாது ஏமானே?"

"ஏன் பாடாது?"

"கீ கொடுக்கணும்."

"கெட்டிக்காரன். அப்போ அது பாடணும்னா கீ கொடுக்கணும். பிளேட்டு வெக்கணும். அப்ப பாடுமா?"

"பாடாது."

"நான் பிளேட்டை வெச்சேன். நீ பாடல." காதைப் பிடித்துத் திருகியபடியே சொல்வார்: "சரி, ஊசியை எடுத்துப் பொருத்துறேன், பாடுவியா?"

"பாடுவேன் ஏமானே."

"பாடுடா."

"பாட்டொண்ணும் இல்லை ஏமானே."

"பாட வெக்கிறேண்டா உன்னை."

"கேஸ் இல்லேங்கிறதுக்காக தேவையில்லாம உதைக்காதீங்க ஏமானே. ஒரு பேப்பரும் பேனாவும் எடுங்க. அப்படியே, ஒரு பாக்கெட் சிகரெட்டும் டீயும் சொல்லிட்டு ஏமான் போய்த் தூங்கிட்டுக் காலையில வாங்க. பாட வெக்கப் போறாராம், பாட"

"கெட்டிக்கார பயவுள்ளடா நீயி." உதை மன்னனுக்கு உச்சி குளிரும்.

முடிந்தவரைக்கும் வாரிய அதிகாரியின் பெயரையும் பூக்குஞ்ஞின் பெயரையும் தவிர்த்து விடுவேன். ரெகுலர் கஸ்டமர்ஸ் ஆச்சே! இவர்கள் மிகவும் நம்பிக்கைக்குரியவர்கள் என்பது என் எண்ணம். என்மீது மிகுந்த அன்பு காட்டுபவர்கள். இப்படியானவர்களை மணியன் தலை போகும் நிலையிலும் காட்டிக்கொடுக்க மாட்டான்.

ஜெயிலில் கிடக்கும்போது யோசித்தேன். இவர்களை மட்டும் ஏன் எவ்வளவு உதை வாங்கிய பிறகும் காட்டிக்கொடுக்கவில்லை. என்னை வைத்து எவ்வளவு லாபம் பார்த்திருக்கிறார்கள். இவர்கள் காட்டும் பரிவுகள் வெறும் வார்த்தைகள் மட்டும்தானா? பரீட்சித்துப்

பார்த்துவிடுவோமே!

கைதிகளுக்கு அப்போது அரசாங்கம் இரண்டு அஞ்சலட்டைகள் தரும். சர்வீஸ் ஸ்டாம்புகள் ஒட்டி, ஐஜிஎஸ். (இந்தியா கவர்ன்மென்ட் சர்வீஸ்) என்ற முத்திரையுடன் அழகாக இருக்கும். மத்திய சிறைச்சாலை முத்திரை மட்டுமில்லை என்றால் கிடைப்பவர்கள் நான்கடி உயரலாம். ஆனால், இதில் கைதிக்கான எண்ணும் இடம் பெறும். மின்வாரிய நபருக்கும் பூக்குஞ்ஞிக்கும் கடிதமெழுதினேன். ஒரு ஐந்து ரூபாய் தேவைப்படுகிறது. ஜெயில் முகவரிக்கு மணியார்டர் அனுப்பவும். ஐந்து ரூபாய் இருந்தால் அன்று 20 கட்டு காஜா பீடி வாங்கலாம். இவ்வளவு பீடிகளைக் கைவசம் வைத்திருப்பவன் ஜெயிலில் மன்னன். இங்கே, பணப் பரிவர்த்தனை கிடையாது. பண்டமாற்று. பீடிப்புகைதான் ஆகப் பெரிய ஆன்ம அனுபூதி. ஜெயிலுக்குள் கடத்திக்கொண்டு வந்தால் அதை விற்றே வாழ்ந்து விடலாம். மூன்று பீடி கொடுத்தால் சக கைதி ஐம்பது மில்லி எண்ணை தருவான். அவனுக்கான ரேஷன். பீடியை இழுத்த திருப்தியுடன் எண்ணெய் புரட்டாமல் குளிப்பான். எனக்கு எண்ணெய் வேண்டும். இரவிப்புரம் கடற்கரையின் ஒரு கிலோ மீட்டர் தொலைவில் நாங்கள் வசித்து வந்ததால் சாப்பாட்டில் கவுச்சி வாசமிருக்க வேண்டும். சிறு வயதில் பழகியது. ஐந்து பீடிக்கு ஒரு மீன் குழம்பு கிடைக்கும். அதிலுள்ள குழம்பைக் கூட தொடாமல் அவன் பீடியை இழுப்பான். எட்டு பீடி கொடுத்தால் 71 கிராம் ஆட்டுக் கறியோ அதே அளவு உருளைக் கிழங்கோ 20 கிராம் மசால் கூட்டோ கிடைக்கும்.

கஞ்சா பீடி வைத்திருப்பவன் மன்னாதி மன்னன். கான்டீனில் நிற்கும் கைதிக்கு அரை பீடி கொடுத்தால் ரகசியமாக ஒரு கிலோ ஆட்டுக்கறி கொண்டுவந்து தருவான். நான் அடைக்கப்பட்டிருந்த ஏ பிளாக்கில் 170 கைதிகளிருந்தார்கள். இப்படியாக, 12 பிளாக்குகளுக்கும் சேர்த்து தொட்டியில் எடைபோட்டு வைப்பார்கள். இதை வினியோகம் செய்பவன் நல்ல கைப்பக்குவமுள்ளவன் என்றால் இரண்டு மூன்று கிலோ மிச்சம் பிடிக்கலாம். இதுதான் கஞ்சா பீடியாக உருமாற்றமடையும். அப்படியே உட்கார்ந்திருக்கும்போது எண்ணெய் வடியும் இறைச்சியுடன் வருவான்.

"மணியா, கறி கொண்டாந்திருக்கேன்." ரகசியமாகச் சொல்வான்.

"உன்னோட கறியா?"

நான் பெரிய பந்தாவுடன் நக்கலடிப்பேன். ஏனென்றால் பொருள் என் மடியிலிருக்கிறது:

"நான் மாமிசம் தின்கிறத நிறுத்திட்டேன்."

"எண்ணெயில வறுத்தது. டப்பாவில போட்டு வெச்சு எப்போ வேணும்னாலும் திங்கலாம்."

"சரி, டப்பா அந்த மூலையில இருக்கு. நல்லா தொடைச்சிட்டு அதில வையி."

இப்படியெல்லாம் தின்ற கறிகள்தான் காரணமாக இருக்க வேண்டும், இவ்வளவு உதைகள் வாங்கியும் நான் இன்னும் உயிரோடிருப்பதற்கு.

ஜெயில் கான்டீனில் மிக அபூர்வமாகவே நான் காசு கொடுத்து பொருட்கள் வாங்கியிருக்கிறேன். 120 மில்லி பால் கிடைக்கும். பெரும்பாலானவர்களும் மூன்றோ நான்கோ பீடிகளுக்கு அதை விற்று விடுவார்கள். தாக்குப் பிடிக்க முடியாமல் பீடிகள் கடன் வாங்கிவிட்டால், பிறகு ஒரு மாதமோ ஒன்றரை மாதமோ கழித்துதான் கடனைத் தீர்க்க இயலும். கேள்வியோ பதிலோ எதுவுமிருக்காது. மிகச் சரியாக கடனைத் தீர்த்திருப்பார்கள். உள்ளே இருக்கும்போது மனசாட்சி பெருமளவில் வேலை செய்யும். சமூகம் ஒதுக்கித் தள்ளியவர்களின் ஒன்றிணைவு. மதில் சுற்றினுள் இவர்கள் விசால ஹ்ருதயஸ்தர்கள். வெளியே வந்ததும் அது சுருங்கிவிடும்.

அப்படியாக, கரண்ட் ஆபீசில் வேலை செய்பவனுக்குக் கடிதமெழுதி விட்டுக் காத்திருந்தேன். ஒரு மாதம் கழிந்த பிறகும் பதில் வரவில்லை. தபால்காரர் பட்டுவாடா செய்யாமலிருக்க மாட்டார். அரசு முத்திரை இருப்பதால் தேடிப் பிடித்துக் கொடுத்துவிடுவார். மட்டுமல்ல, வாழத்துங்கல் தபால் அலுவலக போஸ்ட் மாஸ்டர் ஓமனா என்னுடைய கடிதத்தைத் திருப்பியனுப்ப மாட்டார். மனசாட்சியுள்ள ஒரு பெண்மணி. "நம்ம திருட்டு மணியனோட கடிதம். சீக்கிரமாகக் கொண்டுபோய்க் கொடு" என்று தபால்காரரை அனுப்பி வைப்பதுடன் பட்டுவாடா செய்ததை உறுதிப்படுத்தவும் செய்வார்.

அப்படியென்றால் கரண்டுகாரன்தான் கடிதத்தை விழுங்கிவிட்டான்.

தொள்ளாயிரம் ரூபாய்க்குமதிகமாகச் சம்பளம் வாங்கும் அவனிடம் ஐந்து ரூபாய் தருவதற்கில்லை.

நான் ஸ்டேஷனிலிருந்து நேராக அவனைப்போய் பார்த்தேன்.

"மணியனோட நரம்புகள்ல ஓடுறது, நீ வேலை செய்யிறதை விடவும் பெரிய கம்பிகள். ஒரு அஞ்சு ரூபா கேட்டும் தர்றதுக்கு உங்கிட்டே இல்லை, அப்படித்தானே? உன்னை நான் ஒருநாள் என் பக்கத்தில கொண்டு வருவேன். அப்போ, இதைவிட நூறு மடங்கு செலவாகும், கவனமா இரு."

கடிதம் கைக்கு வரவே இல்லை என்றெல்லாம் சொல்லிப் பார்த்தான். நான் தபால் நிலையத்தில் விசாரித்தேன். ஒரு நிரபராதி தண்டிக்கப்படக் கூடாதல்லவா? இதில் கவனம் தேவை.

தபால்காரர் சொன்னார்: "அப்படியா சொன்னான். இந்தக் கையாலதானடா அவன்கிட்ட கொடுத்தேன்."

நான் சொன்னேன்: "இதை அவன்கிட்ட கேட்க வேணாம்."

"உம், அஞ்சு ரூபா அனுப்பித்தர்றதுக்கு அவனால முடியல."

"அதுசரி, போஸ்ட் மேனுக்கு இதெப்படி தெரியும்?"

அவர் பதுங்கினார்: "போஸ்ட் கார்டுதானேடா? மட்டுமில்ல, நீ எழுதியது. உன்னோட விஷயங்களை நான் அறியக்கூடாதா?"

"அறிய வேண்டாம். நான் மேலிடத்துக்கு எழுதுவேன்."

திரும்பிச் செல்கிற வழியில் பூக்குஞ்ஞி ஓடிவந்தான்.

"மணியா, கடிதம் கிடைச்சுடா. ஆனா, போஸ்ட் ஆஃபீசில போய்ச் சொல்றதுக்குக் கொஞ்சம் தயக்கமா இருந்தது, அதுதான் . . ."

"தயக்கமெல்லாம் தானாத் தீந்திடும். தீர்த்திடறேன். சரி, ஒரு நூறு ரூபா இருக்குமா?"

உடனடியாகப் பணத்தை எடுத்துத் தந்தான்.

"உன்னை விட்டுருக்கேன்" என்றபடி கள்ளுக்கடையை நோக்கி நடந்தேன்.

மனிதர்களுக்கே இயல்பான பயமாக இருக்கலாம். பூக்குஞ்ஞை விட்டுவிடுவதாக முடிவு செய்தேன்.

பிறகு, ஒரு வீட்டில் நுழைந்து ஆபரேஷன் நடத்தியதில் கிடைத்த ஆபரணங்களுடன் நேராக பூக்குஞ்ஞைத் தேடிச் சென்றேன். சிலவற்றை எடுத்து வைத்தேன். எல்லாவற்றையும் கொடுத்துவிட மாட்டேன். பிடிபடும்போது கையில் கொஞ்ச மாவது இருக்க வேண்டும். நம்பிக்கைக்குரியவர்களின் விஷயத்தை உறுதி சொல்ல முடியாது. திருட்டுப் பொருளில் ஒரு பகுதிக் கிடைக்காமலிருந்தாலும் போலீஸ் அதிகமாகக் கண்டுகொள்ள மாட்டார்கள்.

பூக்குஞ்ஞி சொன்னான்: "மூன்றரை பவன் இருக்கும். மூணு பவுனுக்கான இன்னைக்குள்ள விலையைக் கொடுத்திடறேன் . . ."

மனதிற்குள் நினைத்துக்கொண்டேன்: "அடேய், பூக்குஞ்ஞி."

தங்கத்தை உள்ளங்கையில் வைத்தே எடையைத் தீர்மானிக்கும் திறனை இதற்குள் நான் கை வரப்பெற்றிருந்தேன். எந்த ராத்திரி வேளையிலும் பாட்டரியில் சார்ஜ் பார்ப்பதுபோல், அசலா போலியா என்பதையும் என்னால் தெரிந்துகொள்ள முடியும். கொண்டுவந்துக் கொடுப்பதற்கு முன், இதை மதிப்பீடு செய்திருந்தேன். கிட்டத்தட்ட பத்தரை பவுன் இருக்கும். இதைத்தான் பூக்குஞ்ஞி மூன்றரை என்கிறான். நூறு ரூபாய் தந்ததில் ஏற்பட்ட மயக்கம். எவ்வளவு உதை வாங்கி நான் இவனைப் பாதுகாத்தேன். இவ்வளவுதான் மனசாட்சி. நான் ஜெயிலில் கிடக்கும்போது ஐந்து ரூபாய் அனுப்பாத கரண்டை விடவும் இவன் பெரிய வில்லன்.

இரண்டு பேரையும் தண்டித்தாக வேண்டும்.

எனக்கு அவசரமாகப் பணம் தேவைப்பட்டது. பேரம் பேச நேரமில்லை. வழக்கமான வாடிக்கையாளர்களை விட்டு, புதிதாக வேறு யாரையும் அணுகவும் முடியாது. இவ்வளவு காலமாக என்னை ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்களே? துளிர்க்கும் கண்ணீருடன் வாங்கிய பணத்தில் சிறிதளவைச் சாராயக்கடையில் கொடுத்து மெய்மறக்கக் குடித்தேன். பணம் போகும் வருத்தத்தை விடவும் ஏமாற்றுகிறார்களே என்ற வருத்தம்தான் அதிகமாக இருந்தது. எந்தப் போதைக்கும் இதுபோன்ற வேதனைகளை இல்லாமல் செய்ய முடியாது. இரவு பன்னிரெண்டு மணியிருக்கும். கண் திறந்தது. ரெயில்வே ரோடு வழியாகக் கொல்லத்துக்கு நடந்தேன். டவுணில் போளயத்தோடு எனுமிடத்தை அடையும்போது தலைப்பாரம் முற்றிலுமாக விலகியிருந்தது. வானம் ஒளிர்கிறது. நல்ல நிலவு வெளிச்சம். நிறைய நட்சத்திரங்கள். உற்சாகம்

தோன்றியது. எதிரில் தெரிந்த வீட்டில் நுழைந்தேன். "மணியன் வந்துட்டான்" என்றபடி ஜன்னல் கம்பிகள் வளைந்துகொடுத்தன.

உள்ளே, ஒரு பெரிய மனிதர் பெரிய மீசையும் தொப்பை வயிறுமாகத் தூங்கிக் கிடந்தார். இவருடன் ஒப்பிடப் பொருத்தமானவன், பகாசுரனா, கும்பகர்ணனா, பீமனா? என்ற சந்தேகம் தலைதூக்கியது. அவரது பக்கத்தில் நிற்கும்போது நான் வெறுமொரு கரு. அய்யா அணிந்திருந்த ஒரு சங்கிலிவட மாலை மேஜையில் கிடந்தது. கையில் எடுத்தேன். நல்ல எடை. அணிந்து பார்த்தேன். தொப்புளையும் தாண்டி கீழே விழுந்தது. எப்படிப் பார்த்தாலும் பத்திருபது பவுன் தேறும். பேராசை கூடாது. திரும்பி நடந்தேன்.

பூக்குஞ்ஞிக்குப் போதும். இனி, வாரிய அதிகாரிக்கு வேண்டாமா? அவனது ஞாபகார்த்தமாக அங்கேயே ரெயில்வே கேட்டினருகிலுள்ள குறும்பேலி கோயா முதலாளியின் இல்லத்தில் நுழைந்தேன். சரி கரண்டுகாரனுக்கும் தேறியாகி விட்டது. ஐந்து ரூபாய் அனுப்பி வைக்க ரொம்பவே பயப்பட்டவர்கள் அல்லவா? இந்த வழக்கில் பிடிபட்டால் இதையெல்லாம் உங்கள் தலையில் கட்டுவேன்.

நினைத்ததுபோல், முதலாளி வீட்டில் திருடியதற்காகப் பிடிபட்டேன். உதை நெருங்கியபோது சொன்னேன்:

"தேவையில்லாம கையை அழுக்காக்கிக்க வேண்டாம். எழுதித் தந்திடறேன்."

அப்படியாக, முதலாளி வீட்டு மூன்று பவுனை, கரண்டுகாரன் தலையிலும் பகாசுரன் வீட்டு தங்கச் செயினை பூக்குஞ்ஞி முதுகிலும் வைத்தேன். என் வேலை முடிந்தது. இனி, போலீஸ்காரர்கள் பார்த்துக்கொள்வார்கள்.

பூக்குஞ்ஞின் உறவினர்கள் வந்து என் காலைப் பிடித்தார்கள். பூக்குஞ்ஞி தலைமறைவாகியிருந்தான். நான் நீதிமன்றத்திற்கு வரும்போதெல்லாம் கொஞ்சம் செலவு செய்தார்கள். கடைசியில் அதை அப்படியே விட்டேன்.

கரண்டுகாரனை போலீஸ் தேடிச் சென்றது. இந்தக் கதையை மற்றொரிடத்தில் சொல்கிறேன். இருந்தாலும் இந்த வழக்குதான் மனித மனங்களின் மற்றொரு பகுதியை அறிந்துகொள்ள உதவியது.

இடமாறுதலில் ஈஸ்ட் ஸ்டேஷனுக்கு வந்த என்னுடன் படித்த சிவசங்கரன்

எனும் போலீஸ்காரன் ரகசியமாக என்னிடம் சொன்னான்: "அதோ வர்றானே, அவனை நினைவிருக்கா? நம்ம கூட படிச்சவன்தான். நான் சொன்னதா இதை நீ அவன்கிட்ட கேட்க வேண்டாம். ஒருவேளை அவனுக்குப் பிடிக்காம இருக்கலாம்."

"நீ சொல்லாம இருந்தாலும் நான் கேட்க மாட்டேன்."

அன்று வாழத்துங்கலில், ஐந்தாறு மைல் சுற்றளவினுள் ஒரு சிறுவர் பள்ளிக்கூடம் மட்டும்தானிருந்தது. அதில் படிக்கும் பல மாணவர்கள் தொலைவிலிருந்து வருபவர்கள். அப்படி வந்தவன்தான் இந்த போலீஸ்காரனும்.

நான் காவல் நிலையத்துக்கு வந்தும் போய்க்கொண்டும் இருந்தேன். ஒரு ஒன்றரை வருடம் இப்படியே கழிந்தது.

மின்சார வாரிய அதிகாரி நம்பிக்கை மோசடி செய்தானென்று சிக்கவைத்தேன் அல்லவா? அந்தத் திருட்டுப் பொருட்களை மீட்பதற்காக என்னையும் போலீஸ் ஜீப்பில் கொண்டுபோனார்கள். நான்கு போலீஸ்காரர்களும் ஒரு எஸ்ஐயும் ஜீப்பிலிருந்தார்கள். திருட்டுப்பொருளைப் பற்றி முதலில் விசாரிக்கும்போது திருடனைக் காட்ட மாட்டார்கள். இரண்டு பேர்களுடைய வாக்குமூலங்களும் முரண்பட்டிருந்தால் வழக்கில் அதிகமான சாட்சிகள் உருவாவதுடன் வழக்கும் நீளும். எனவே, போலீசாரின் தந்திரம் இது.

பொருளை மீட்பதற்காக ஒரு வீட்டிற்குச் சென்றோம். நான் சற்றுத் தொலைவில் ஜீப்பிலிருந்தேன். என்னுடன் பள்ளித்தோழனான போலீஸ்காரன்.

அவன் சொன்னான்: "டேய் மணியா, நாம ஒண்ணாப் படிச்சவங்க . . . உனக்கு நினைவிருக்காதுன்னு நினைக்கிறேன்."

நான் பதிலே சொல்லவில்லை.

"அப்பல்லாம் ரொம்ப நல்லாப் பாடுவே. நீ பாடுற பாட்டுல இரண்டு வரி இப்பவும் எனக்கு நினைவிருக்கு." சொல்லிவிட்டு பாடிக்காட்டினான்.

"இதிலுள்ள மிச்சம் பாடல் உனக்கு நினைவிருக்கா?"

நான் சொன்னேன்: "சார், உங்களுக்கு அதையெல்லாம் நினைவுப்படுத்திப்

பாக்குறதுல சுவாரஸ்யமிருக்கலாம். ஏன்னா, நீங்க படிச்சு இப்ப அரசாங்க வேலை பாக்குறீங்க. எனக்கு நினைவுகள் எல்லாமே வேதனை தர்றதா இருக்கு. அதையெல்லாம் நினைவுப்படுத்தாதீங்க."

"என்னை நீ இப்ப சார்னு கூப்பிடவேண்டாம். இங்க நாம இரண்டு பேர் மட்டும்தானே இருக்கோம்."

"இல்லை, சார் எப்பவுமே சார்தான். இனி, தெக்கே தூக்கிட்டுப் போகும் போதும், கொள்ளி வைக்கும்போதும், செத்து ஆத்மாவா மிச்சமிருக்கும்போதும் எல்லார் நினைவுகளிலயும் நான் திருடன்தான்."

கொஞ்ச நேரம் அவன் எதுவுமே பேசவில்லை. பிறகு மெதுவாகச் சொன்னான்:

"அந்த மின்சார வாரிய அதிகாரி எனக்கு ஒரு முறையில உறவுக்காரர். என் மனைவியோட . . ."

நான் போலீஸ்காரன் முகத்தை ஏறெடுத்துப் பார்த்தேன். அவன் அமைதியாகப் பார்வையை விலக்கியபடி சொன்னான்:

"அவரைச் சிக்க வெச்சுடாதே. விட்டுடு. உன் பணத்தை அவர் நிறைய தின்னுட்டாருங்கிறதும் நியாய உணர்வில்லாத மனுஷன்தாங்கிறதும் உண்மைதான். இருந்தாலும் . . ."

தூரத்தில் போலீஸ்காரர்கள் வந்துகொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்தபடியே நான் சொன்னேன்: "மணியன்பிள்ளை வளைப்பானே தவிர, எதையும் ஒடிக்க மாட்டான்."

## 38 - மணவறைத் திருடன்

எனக்குத் தெரிந்த கில்லாடித் திருடன்களில் மலபார்க்காரன் மணவறைத் திருடன் விசித்திரமானவன்.

இவன் திருமண வீடுகளைத்தான் குறிவைப்பான். முகல்லாவிலிருந்து ஆட்கள் வரும்போது கூட்டத்திலொருவனாக இவனும் வந்துவிடுவான். பெண்வீட்டிலுள்ளவன் என்று முகல்லா ஆட்களும் முகல்லா ஆள் என்று பெண் வீட்டுக்காரர்களும் நினைத்துக்கொள்வார்கள். மட்டுமல்ல, இவன் கலந்துகொள்வது, ஏனோதானோ திருமணங்களுமல்ல! சமூகத்தின் கொம்பன்மாருடைய இல்லத் திருமணங்கள். இங்கு யாரை யாருக்குத் தெரியும்? மட்டுமல்ல, அதிக நேரம் இங்கெல்லாம் நிற்கவும்மாட்டான். யாருக்கும் தெரியாமல் காணாமல் போவான்.

காணாமல் போகும் திருடன் நேராக மணவறைத் திருடனாக உருமாறி விடுவான். அதாவது மணவறைப் பகுதியில் சுற்றித்திரிந்து திடீரென்று அறைக்குள் நுழைந்து அடுத்த நொடியில் கட்டிலின் கீழ். பிறகு நிம்மதியாகப் படுத்துத் தூங்குவான். பிரியாணியின், படுக்கையிலிருந்து வீசும் முல்லைப் பூக்களின் கலவையான கம, கம வாசத்துடன்.

மலபார் முஸ்லிம்களின் மணவறை அலங்காரம் அற்புதமாக இருக்கும். தரையில் படுமளவுக்கு முல்லைப்பூக்களால் கட்டிலை அலங்கரித்திருப்பார்கள். பெட்ஷீட் தரையில் பதிந்துக் கிடக்கும். மணவறையை ஒப்பனை செய்த பிறகு ஓரளவு இங்கிதம் தெரிந்த யாரும் பிறகு அந்தப் பக்கம் போக மாட்டார்கள். இங்கிதக்குறைவினர் உள்ளே போவதாக இருந்தாலும் மலர்ப்படுதாவைத் தூக்கி, கட்டிலின் கீழ் யாராவது இருக்கிறார்களா என்றா பார்க்கப் போகிறார்கள்? இந்த மனவியல்பு தந்த தைரியத்தில் மணவறைத் திருடன் தூங்குவான். படுக்கையறைக்குள் யாரோ ஒளிந்திருக்கிறார்களென்று இதுவரை இவன் பிடிபட்டதுமில்லை. இரவு வெகு நேரத்திற்குப் பிறகுதான் மணமக்களின் உலகத்தில் ஆளரவம் கேட்கும். மணவறைத் திருடன் ஒரு கலாரசிகனும்கூட! அதனால்தானே இப்படிப்பட்ட திருட்டைத் தேர்வு செய்திருக்கிறான். விளக்கு அணைந்து ஸீரோ வால்ட்டின் சிவப்பு

வெளிச்சம் அறைக்குள் படரும். காட்சி துவங்கும். மணவறைத் திருடன் கட்டிலின் கீழிருந்து மெல்ல நகர்ந்து தலையை நீட்டி, பார்ப்பதற்குத் தோதுவாகப் படுத்துக்கொள்வான். என்ன, கீழிருந்து மேலாகப் பார்ப்பதால் காட்சிகள் தலைகீழாகத் தெரியும் அவ்வளவுதான். இதற்குமொரு அழகிருப்பதாகச் சொல்வான்.

முதலிரவு அல்லவா? சிறிதளவிலான போராட்டங்கள் நடக்கவே செய்யும். இன்று போல் பெரிய அளவில் நாகரிக முதிர்ச்சிகளில்லாத காலம். அறியா வயதிலுள்ள பெண்களாக வேறு இருப்பார்களா? ஓரளவுத் தயார்ப்படுத்துவதற்குள் பையன் தளர்ந்துபோய் விடுவான். உடை மாற்றுவதற்கு முன் மணமகள் நகைகளைக் கழற்றி மேஜையின்மீது வைப்பாள். திருடனின் கண்களில் பொன்னிறம் படரும். முதல் காட்சி முடிவுறும். பகலில் திருமணச் சடங்குகளும் இரவில் அது சார்ந்த நிகழ்வுகளும் முடிந்து, தூக்கிக்கொண்டு போனாலும் தெரியாதவர்களாக மணமக்கள் தூங்குவார்கள். இரண்டு மணியாகும்போது மொத்த வீடும் தூங்கும். மணவறைத் திருடன் கிடைத்ததை அள்ளிச் சுருட்டிவிட்டு மெல்லக் கதவைத் திறந்து நடையைக் கட்டுவான். ஒரு குண்டும் வெடிக்காமலேயே இரண்டு பறவைகள். இப்படியாக பல வீடுகளில் இவன் நுழைந்து அட்டகாசம் செய்திருக்கிறான். திருடன் கட்டிலின்கீழ்தான் இருந்திருக்கிறான் என்பது தெரிந்து யாரும் வெளியே சொல்வதில்லை. ஸ்டேஷனில் சென்று விஷயத்தை ரகசியமாகச் சொன்னவர்களும் புகார் எழுதிக்கொடுக்கத் தயாராக இல்லை.

என்னை மணவறைத் திருடனின் ரசிகனாக்கியது இதுகூட இல்லை. ஒரு முறை பெரிய பணக்காரனொருவனின் வீட்டில் நுழைந்து, கட்டிலின்கீழ் பதுங்கியிருந்து ரசித்துக்கொண்டிருந்தான். காட்சி முடிந்தது. இருவரும் தூங்கிவிட்டார்கள். நியாயமாக இவன் மேஜையிலிருந்த ஆபரணங்களைத் திருடிவிட்டு இடத்தைக் காலி செய்திருக்க வேண்டும். ஆனால், இவனது பார்வை, பெண்ணின் இடுப்பை விட்டகல மறுக்கிறது. தவறான பார்வை அல்ல. இடுப்பிலொரு அரைஞாண் கிடந்தது. பல தலைமுறைகளாகப் பேணிப் பாதுகாத்து வரும் பழைய மாடல் அரைஞாண். ஒரு பன்னிரெண்டு பவுன் தேறும். அதை விட்டுப் போக அவனுக்கு விருப்பமில்லை. அப்போது பையனின் வயிற்றிலிருந்து ஒரு முழக்கம். இரண்டு மூன்று நாட்களாக தொடர்ந்து பிரியாணி சாப்பிட்டான் அல்லவா?

பாத்ரூம் வெளியே இருந்தது. பையன் எழுந்து போனான். பெண் நல்ல தூக்கம். வேலையை முடித்துவிட்டு மீண்டும் வந்து படுத்தான்.

திருடனுக்குப் போகவும் முடியாத, போகாமலும் முடியாத அவஸ்தை. மனம், அழகான அந்தப் பெண்ணின் அரையில் கிடக்கும் ஞாணில் சிக்கிக் கிடந்தது. நேரம் போய்க்கொண்டிருந்தது. பதற்றத்துடன் பத்து நிமிடங்கள் கழிந்தன. விழித்துக்கொண்ட பையன் மனைவியைக் கட்டித் தழுவி முத்தமிட்டான். வயிற்றுக்குள் குடைச்சல். திரும்பவும் வெளியே போனான். நல்ல தருணம். கட்டிலில் ஏறிய திருடன், பையன் விட்ட இடத்திலிருந்து தொடர்ந்தான். நேரடியாக அரைஞாணில் கை வைப்பது அறிவுடைமையன்று. அரைஞாணை உருவிய பிறகும் தட்டிக் கொடுத்துத் தூங்கப் பண்ணினான். திருடனின் கைவினை இத்துடன் நின்றுவிடவில்லை. அரைஞாணில் பிணைத்திருந்தக் கறுப்புச் சரடைப் பிரித்தெடுத்து இருந்த இடத்தில் ஸ்தாபித்தான். தொடர்ச்சி விடுபட்டு விடக்கூடாதென்பதால் தட்டுவதையும் தடவுவதையும் தொடர்ந்தான். ஆள் பக்கத்தில் படுத்திருப்பதாகத் தெரிய வேண்டுமே? முதலிரவு என்பதால் கள்வனுக்கும் கணவனுக்கும் இடையிலான தொடுஉணர்வின் வேறுபாட்டை அவளால் புரிந்துகொள்ள முடியாது. கீழே குளோசட்டில் தண்ணீர் விழும் சத்தம் கேட்டதும் திருடன் மெல்ல எழுந்து மேஜைமீதிருந்த மற்ற நகைகளுடன் அரைஞாணையும் பார்வையில் தெரியும்படியாக வைத்தான்.

பையன் வந்து போர்வையை விலக்கினான். அரைஞாண் இல்லை. கறுப்புக் கயிறு மட்டும். "நான் களற்றச்சொன்னபோது கூடாதுன்னுட்டியே கள்ளீ . . ?"

கீழே கிடந்த திருடன் திடுக்கிட்டான்.

நீங்கதானே கழற்றினீங்கனு சொல்லித் தொலைச்சுடுவாளோ?

எதையோ முனகி வைத்தாள். நேற்றிரவுவரை எந்தத் தொந்தரவுமில்லாமல் நிம்மதியாகப் படுத்துத் தூங்கியவள் அல்லவா? இனி சாகும் வரைக்குமான இந்தத் தொந்தரவை சகிக்கப் பழகிக்கொள்ள வேண்டுமே. அவள் விட்டுப் போன தூக்கத்தைப் பிடிக்கும் முயற்சியைத் தொடர்ந்தாள்.

"இப்பதான் நீ அழகாயிருக்கே . . ." என்றான் அவன்.

"ஆமா, அதை நீ சொல்லித்தான் தெரிஞ்சுக்கணும்" கட்டிலின் அடியிலிருந்த திருடன் மனதிற்குள் சொல்லிக்கொண்டான்: "ஒண்ணுலே படுத்துத் தூங்கு. அல்லது எழுந்திருச்சி கக்கூசுக்கு ஓடு." பத்து நிமிடம்

கழிந்தது. அவனிடமிருந்து எருமை மாடுபோல் குறட்டைச் சத்தம் கேட்டது.

நகைகளுடன் கீழே வந்தான். வாசல் கதவு திறந்தே கிடந்தது. பையன் அடைக்க மறந்திருப்பான். அல்லது அடுத்த ரவுண்ட் போவதற்கு வசதியாகத் திறந்து வைத்திருப்பான்.

கதையைக் கேட்டதும் உண்மையாகவே திடுக்கிட்டு விட்டேன். நான் ஒரு அறைக்குள் நுழைந்தால் மிகுந்தக் கவனத்துடன் முடிந்தவரைக்கும் ஆட்களை உசுப்பி விடாமல் வேலையை முடித்துவிட்டு இடத்தைக் காலி செய்து விடுவேன். உண்மையாகவே இது கலைதான். தொட்டுக் கும்பிட்டேன். அவன் மிகுந்தப் பக்குவத்தோடு சிரித்தான். ஜெயிலுக்கு வரும்போது அவனது வயது ஐம்பதுக்கும் அதிகம். இம்முறை அவன் ஜெயிலுக்கு வந்த கதை இதை விடவும் சுவாரஸ்யமானது.

கட்டிலில் இருப்பவர்களுக்குத் தெரியாமல் கீழே ஒருவன் இருப்பதுபோல் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு மேலே ஒருவன் இருக்கிறான் அல்லவா? என்றாவது ஒரு நாள் இதற்கான தண்டனையை அவன் கொடுத்தே தீருவான்.

ஒருநாளிரவு. முதல் காட்சியைப் பார்த்தபடி திருடன் படுத்திருந்தான். கட்டிலில் பெரும் போர் ஒன்று நிகழ்ந்துகொண்டிருந்தது. பையனின் குடும்பம் கசாப்புத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள். நகரில் அவர்களுக்கு சில கடைகளும் இருந்தன. ஆறேழு ஆண் வாரிசுகளுள்ள குடும்பம். ஒவ்வொருவனும் தின்றுக் கொழுத்து எருமை மாடு போலிருப்பார்கள். அதிலொருவன்தான் மேலே இருக்கிறான். அவளும் இதுபோன்ற குடும்பப் பின்னணி உள்ளவளாகவே தெரிந்தாள். கல்யாணக் குணங்களுள்ள பெண் போல் தெரியவில்லை.

புதிய கட்டில்தான். ஆனாலும், திருடன் பயந்துபோயிருந்தான். முதலிரவின்போது கட்டில் ஒடிந்து விழுந்த சம்பவங்கள் நிகழ்ந்ததுண்டு. ஆனால், ஒடிந்தக் கட்டிலின்கீழ் திருடனொருவன் நசுங்கிச் செத்தான் என்பது பெரும்பாலும் புதிய செய்தியாகவே இருக்கும். காட்சி தொடங்கியதும் பயம் விலகியது. பிறகு எதிர்பார்ப்பு மட்டும்தான்.

புதியதொரு கோணத்தை முயற்சிப்பதினிடையே பையனின் பார்வை வலப்புறம் சென்றது. எதிரில் பெரிய நிலைக்கண்ணாடி. கண்ணாடியில் தன்னைப் பார்க்க இயலாத கோணத்தில் திருடன் தரையில்

படுத்திருந்தான். தரையிலிருந்து மூன்றடி உயரத்திலிருந்தது கண்ணாடி. கட்டிலில் படுத்திருப்பவர்களுக்குக் கண்ணாடி வழியாகத் தரை தெரியும். ஸீரோ வால்ட் வெளிச்சத்தில் கட்டில் ஒரு ஆமையைப் போல் பையனுக்குத் தெரிந்தது. கட்டிலின்கீழ் ஒரு தலை நீண்டிருக்கிறது. பையன் திடுக்கிட்டான். இது என்ன?

காட்சி ரத்தானது. அவன் அவளிடம் எதையோ சைகைக் காட்டியதும் திருடன் தலையை மெல்ல உள்ளே இழுத்தான். பெண் உள்ளாடைகள் உட்பட ஒவ்வொன்றாக எடுத்து அணிந்துகொண்டாள். அவளது முகத்தில் படிந்திருந்த போர்த் தடையங்களைத் துடைத்துவிட்ட பையனும் உடைகளை அணிந்தான். "என்ன? என்ன விஷயம்?" அவள் கேட்கிறாள். அவளுக்கு ஆவேசம் தீரவில்லையோ? திருடன் மனதிற்குள் சொல்லிக்கொண்டான். அவள் வெளியே போனாள். பையன் எழுந்து நின்று, ஸலீம் காக்கா, அஸீஸ் காக்கா என்று கூப்பிட ஆரம்பித்ததும் எதுவோ சரியில்லைபோல் திருடனுக்குத் தோன்றியது. பெண்ணிடம் ஏதாவது பிரச்சினையா? ராத்திரியே விவாகரத்து ஆகிவிடுமா? அடுத்தக் கட்டமாக இரும்பு உலக்கைகள்போல் கட்டிலின்கீழ் நுழைந்த கைகள் திருடனின் மென்னியைப் பிடித்தன.

மணவறைத் திருடன் சொன்னான்: "அதையெல்லாம் நினைவுப் படுத்தாதே மணியா. ஒண்ணுக்கிருக்கிற இடத்தில இப்பவும் வேதனையிருக்கு. ஒருத்தன் அதைப் பிடிச்சுக் கசக்கி விட்டுட்டான். அந்த ஒரு இடமாவது சேதாரமில்லாம தப்பிடும்னு நினைச்சேன். இதைவிட அவனுங்க என்னைக் கொன்னுக் கறி போட்டிருக்கலாம்."

"இப்படியான ஒரு நல்ல காட்சிதான் கடைசிக் காட்சியாவும் இருக்கும்னு நான் நினைச்சுக்கூட பார்க்கல தம்பீ . . ." இந்த இடத்திலும் மணவறைத் திருடனின் மகத்துவத்தைப் புரிந்துகொள்ள என்னால் இயலவில்லை.

நான் கேட்டேன்:

"அந்தப் பெண்ணைத் தடவும்போது மனசுக்குள்ளே எதுவும் தோணலையா?"

"தோணாம இருக்குமா?"

"இல்லை, பையன் கக்கூஸ் போயிட்டு வர்றதுக்குள்ளால . . . அதுக்கான கால அவகாசம் இருந்ததே?"

"இருந்தது . . ."

"அப்புறம் . . ?"

"என்ன தோணிச்சு தெரியுமா? படுத்துக்கிடக்கிறவள் என் மகள்னு."

நான் திகைத்துவிட்டேன். அவன் தொடர்ந்தான்: "என் மகளை நான் தட்டிக் கொடுத்துத் தூங்க வெச்சிருக்கேன். அவள் பெரியவளான பிறகும்கூட! அவளைத் தொட்ட உடனே எனக்கு என்ன ஆயிடப்போகுது?" நான் மன்னிப்புக் கேட்பதுபோல் திருடனின் வாயைப் பொத்தினேன்.

அவன் கோபப்படவில்லை.

"நிறைய பார்த்து ரசிச்சிருக்கேன். மோசமான எண்ணம் ஏற்பட்டுமிருக்கு. ஆனால், அன்னிக்கு நான் அந்தப் பெண்ணுடம்பைத் தொடும்போது எனக்கு என் மகளோட நினைவுதான் வந்தது. அதுதான் நியாயமும்கூட! திருடனுக்குத் தேவை, நகைகள். அதைத்தான் அவன் எடுத்துக்கணும். மிச்சமிருக்குற புனிதங்கள் அப்படியே பாதுகாக்கப்படணும்.

அந்தப் பாவச் செயல் தொழிலோட ஒரு பகுதியா மாறிப் போச்சு. சுமக்க முடியாத பாவங்களை நாம தினமும் செய்யிறோம். அவங்க தனிமைக்குள்ளே தலையிடாம ஒதுங்கிடறதுதான் என்னோட விருப்பமும். அது முழுமையா என்னால் முடியாம இருக்கலாம். ஆனால் . . ."

ஒரு திருடனெனும் நிலையில் எனக்கு சுயபச்சாதாபம் ஏற்பட்டது அப்போதுதான். ஒருவேளை, பகுத்தறிவின் முதல் ஒளி. அது எரிந்தடங்க நீண்ட காலம் தேவைப்பட்டிருக்கலாம். ஆனால், குற்றம் என்றொரு உணர்வை அதனால் ஏற்படுத்த முடிந்தது. அவனது காலில் விழுந்து நான் செய்த பாவங்களைச் சொல்லி மன்றாட வேண்டும்போலிருந்தது. ஆனால், அந்த அளவிலான பெரிய மனதொன்றும் இல்லாதவன் நான்.

நான் பாயில் போய் விழுந்தேன். மணவறைத் திருடன் சோகம் நிறைந்த இனிமையான ஒரு மாப்பிளைப் பாடலை அழகாகப் பாடினான். இதையும் கேட்டபோது எனக்கு அழுகை வந்தது. இருட்டு.

தலையில் குளிர்ச்சியான ஒரு தொடு உணர்வு. அவன் என் தலையைத் தடவுகிறான். பூக்கோயா. நான் அடக்க முடியாமல் கேவி அழுதேன். "சே . . . என்ன இது?" அவன் பாட்டை நிறுத்திவிட்டு கேலி செய்ய

## 39 - சூரியன்

பெரும் மனவுறுதி வாய்க்கப்பெற்ற சூரியனை, வெறுமொரு திருடனென்று சொல்லிவிட முடியாது. தவிர்க்க இயலாத பணத்தேவை ஏற்படும்போது மட்டுமே திருடுவான். என்னைப்போல் முழுநேர களவுத் தொழிலாளியல்ல. கள்ளிறக்கும் தொழிலாளி.

வாழத்துங்கல் எனும் சிறுகிராமத்தில் சூரியனைப் போல் ஒருவன் வாழ்வானெனில் என்னுடைய தொடர்பில்லாமலா? வாளேறாம்காவு எனும் அவனுடைய சொந்த ஊரில் வசித்து வந்தான். இன்றும் கொல்லம் மாவட்டத்திலுள்ள மிகப் பெரிய காடுகளில் ஒன்று வாளேறாம்காவுதான். அப்போதெல்லாம் அந்த அடர்ந்த காட்டின் நான்கு புறமும் திறந்தே கிடக்கும். அதன் கிழக்குப் பகுதி நல்ல மணற்பாங்கான வெட்டவெளி. தோண்டினால் சீனிபோன்று வெள்ளை வெளேரென்ற நிறத்தில் மணல் கிடைக்கும். அங்குள்ள கோயிலின் அருகில் சில வகையான கொடிகள் வளர்ந்து கிடந்தன. மூன்றுமாடிக் கட்டடம் அளவு உயரத்தில் மிகப் பெரிய தொட்டில்போல் அவை, கூட்டமாக ஓங்கி வளரும். அதனுள் ஒருவன் சுகமாகப் படுத்துத் தூங்கலாம். சூரியனின் வாசஸ்தலம் இதுதான். ஊருக்குள் போலீஸ் வலை போட்டுத் தேடிப்பார்த்தும் சூரியனின் நிழலைக்கூட நெருங்க முடியவில்லை. அவன் செடிக்குவியலில் நிம்மதியாகப் படுத்துத் தூங்குவான். இதை அறிந்திருக்கும் மிகச் சுருக்கமான நபர்களில் நானுமொருவன்.

கொல்லத்தின் அருகில் கொட்டியம் எனும் ஊரில், சூரியனும் நானும் சேர்ந்து ஒரு கூட்டுத் தொழிலில் ஈடுபட்டோம். அங்கே ஒரு வீட்டில் தங்கத்தில் செய்த ஒரு சீப்பு வாழைப்பழமிருப்பதாகத் தகவல் கிடைத்தது. நானும் சூரியனுமிருந்த லாக்கப்பில் எதிர்பாராமல் ஒரு பையன் வந்தான். ஏதோ ஒரு சிறு வழக்கு. எங்களுடன் பேசியதிலிருந்து நாங்கள் திருடன்கள் என்பதை அவன் அறிந்துகொண்டான். அப்படியாக அவன்தான் இந்த வீட்டைப் பற்றித் தகவல் சொன்னான். பொருள் எந்த இடத்தில் இருக்கிறது என்பதையும் சொன்னான். திருடன்களுக்குத் தகவல் கிடைப்பது இப்படியெல்லாம்தான். உறவினர்கள் மூலமும் தகவல் கிடைக்கும். வீட்டிற்குள் நுழையும் திருடன் பொருள் இருக்குமிடத்தை

மிகச் சரியாகக் கணித்து திருடிக்கொண்டு போவதற்கான காரணம் இதுதான். அப்படியாக நாங்கள் அதைத் திருடிவிடுவதென்று தீர்மானித்தோம். ஒரு நாளிரவு என்னைத் தேடி சூரியன் வந்தான். கூடவே, அசோகன் என்பவனும்.

"எதுக்கு மாப்ளே, மூணாவதொருத்தன்.?"

சூரியன் சொன்னான்: "ஒண்ணும் பிரச்சினையில்லை மாப்ளே. சைக்கிள் ஓட்டறதுக்கு ஒரு ஆள்."

அப்படியாக அசோகன் சைக்கிள் மிதிக்க மூன்றுபேருமாக அந்த வீட்டினருகில் சென்றோம். வீட்டில் நுழைவதற்கான வழியை சூரியன் கண்டுபிடித்தான். உள்ளே நுழைந்தோம். இனி, வீட்டுக்காரர்களிடமிருந்து சாவியை எடுத்துத் தங்கப்பழத்தைத் திருடிவிட்டு வெளியேற வேண்டும். நாங்கள் சமையலறை வழியாக உள்ளே நுழைந்திருந்தோம். அன்றெல்லாம் ஒவ்வொரு அறையையும் தனித் தனியாகப் பூட்டுவது வழக்கமில்லை. ஸ்டோர் ரூமின் பக்கத்தில் வேலைக்காரி தூங்கிக்கிடந்தாள்.

சத்தம் வராமல் உள்ளே நுழைந்தோம். அதிர்ஷ்டம்தான். படுக்கையறை வாசல் வெறுமனே சாத்தப்பட்டிருந்தது. தலைமாட்டின் பக்கத்திலுள்ள அலமாராவின் கீழ்த்தட்டில்தான் தங்கப்பழம் இருந்தது. பல இடங்களில் தேடியும் சாவி கிடைக்கவில்லை. தம்பதியரின் தலைகளை மெல்ல உயர்த்தி தலையணையின் அடியிலும் பார்த்தாகி விட்டது. இனி, அலமாராவை உடைப்பதைத் தவிர வேறு வழியில்லை.

அதற்கான கருவி இல்லை. திரும்பிப் பார்த்தேன். சூரியனையும் அசோகனையும் காணோம். பல்லி கவுளியடிப்பதுபோல் விரலால் மெதுவாக ஒரு சிக்னல் கொடுத்தேன். பதில் சிக்னல் உடனே கிடைத்திருக்க வேண்டும். எந்த அசைவுமில்லை. ஏதாவது பிரச்சினையோ? மெதுவாக சமையலறைப் பகுதிக்குச் சென்றபோது அங்கே, வேலைக்காரியின் வாயை அமுக்கிப் பிடித்தபடி அவளது உடையை அவிழ்க்கிறான் அசோகன்.

எனக்குப் பயங்கரமானக் கோபம் வந்தது. "தா. . . களே, இதுக்காகவாடா நீங்க வந்தீங்க?"

வீட்டிற்குள் யாரோ திடுக்கிட்டு எழும் சத்தம் கேட்டது. மூன்று பேரும்

ஓடிவிட்டோம். போகும் வழியில் சூரியன் ஏமாற்றத்துடன் சொன்னான்: "மாப்ளே, அவளும் ஒரு தங்க ஆப்பிள்தானேடா?"

நான் சொன்னேன்: "குட் பை, நமக்கிடையிலான கூட்டு வியாபாரம் சரிப்பட்டு வராது."

சூரியனைப்போல் மனத்திடமுள்ளவர்களை நான் அபூர்வமாகவே பார்த்திருக்கிறேன். மனசாட்சியிலும் இவனை அடிக்க ஆளில்லை. கள்ளிறக்கி ஊரில் பிரபலமான கள்ளுக்கடைக்குக் கொடுப்பான். கடை முதலாளிக்கும் இவனுக்கும் பகை இருந்து வந்தது. காரணம் சரியாகத் தெரியவில்லை. சூரியனின் அப்பா கள்ளிறக்கும் காலத்தில் இந்த முதலாளி கள்ளுக்கடையில் கறி வியாபாரம் செய்பவனின் கையாளாக இருந்தவன். பூர்வீகம் தெரியுமென்பதாலும் இருக்கலாம், முதலாளியின் உத்தரவுகள் எதுவும் சூரியனுக்குப் பிடிப்பதில்லை. கள்ளிறக்குபவன் தினசரி இவ்வளவு கள்ளு கொடுக்க வேண்டுமென்ற ஒரு கணக்கிருந்தது. ஒரு தென்னையிலிருந்து எவ்வளவு கள்ளு கிடைக்குமென்ற உத்தேசம் முதலாளிக்குத் தெரியும். இதற்கான ஆறுமாதப் பணத்தை முதலாளி முன்பே கொடுத்து விடுவான். ஆகவே, கள்ளு மிகச்சரியாகக் கடைக்கு வந்து சேர்ந்துவிட வேண்டும். சூரியன் யாருக்கும் பயப்படுபவனில்லை. கிடைப்பதைக் கொண்டுபோய்க் கொடுப்பான். சில நேரங்களில் தனது விருப்பம்போல் கொடுப்பான். பகைக்கான காரணம் இதுவும்தான்.

ஒருநாள் கள்ளுக்கடையில் நுழைந்த சூரியன் அங்கிருந்தவர்களை சகட்டுமேனிக்கு அடித்து, கடையையும் மதிலையும் இடித்து நிரப்பாக்கி விட்டான். தனியொருவனாக நின்று.

அந்தக் கடையின் நிரந்தர ரவுடிகளில் நானுமொருவன். ஒருமுறை, கடையில் வேலை பார்க்கும் ராகவன் என்பவனுடன் மோதினேன். தள்ளுமுள்ளில் என் சட்டைக் கிழிந்தது. எனக்குக் கோபம் வந்தது. பாட்டிலை அடித்து உடைத்தேன். ராகவன் ஓட்டம் பிடித்தான். குடித்துக்கொண்டிருந்தவர்களையும் விரட்டினேன்: "ஒரு பு . . . மவனுகளும் இங்கே கள்ளுக் குடிக்கக் கூடாது. ஓடுங்கடா, இறங்கி." எல்லோரும் கடையை விட்டிறங்கினார்கள்.

கடைக்காரன் தகவல் சொல்லி போலீஸ் வந்தது. எனக்குத் தெரிந்த ஒரு ஹெட்டும் இரண்டு பீசியும். நான் சொன்னேன்: "நான் கள்ளுக்குடிக்க வந்தவன். எனக்கு ஏற்பட்ட நஷ்டத்தைத் தீத்துட்டு பிறகு வியாபாரம் செய்தாப் போதும்." பாட்டிலுடன் நான் ரோட்டில் இறங்கினேன்.

இரவிபுரம் - தங்கசேரி ரோட்டில் போக்குவரத்துத் தடைப்பட்டது.

கடையின் பொறுப்பாளர் வேர்த்து விறுவிறுக்க நின்று கெஞ்சிக்கொண்டிருந்தான். "உன்னோட முதலாளி வரட்டும்டா. மிச்ச வியாபாரத்தை அவர் வந்த பிறகு பாத்துக்கலாம்" என்று நான். எவனாவது தொட்டால் கையில் கிடைப்பவனையெல்லாம் குத்திக் கிழிப்பேன் எனும் விஷயம் அவனுக்குத் தெரியும். முதலாளியின் ஒரு மைத்துனன் வக்கீல் என்பதால் நீதிமன்றத்தில் நான் காட்டும் பராக்கிரமங்கள் முதலாளிக்கும் தெரியும். யாரோ போய் முதலாளியின் நண்பரான முகுந்தன் சித்தப்பாவை அழைத்துக்கொண்டு வந்தார்கள். அவர் வந்து என்னைத் திட்டினார். நான் மெல்லப் பணிந்து கொடுத்தேன். அன்றும் சரி, இன்றும் சரி, ஊரில் வயதில் மூத்தவர்களிடம் நானாக அவமரியாதையுடன் நடந்துகொள்வதில்லை. நியாயமான விஷயங்கள் என்றால் ஏற்றுக்கொள்வேன்.

நான் சொன்னேன்: "அப்படீன்னா என் சட்டையைக் கிழிச்சவன் வந்து எனக்கு ரெண்டு குப்பிக் கள்ளு தரணும்."

பிடிவாத வயதல்லவா? கள்ளுக்குப்பிகளுடன் வெற்றியாளனாக வாழத்துங்கலுக்கு வந்தேன்.

சம்பவத்தை அறிந்த முதலாளி என்னை அழைத்து வர ஆளனுப்பினார். சூரியன் பிரச்சினை அவரை ரொம்பவும் அலட்டிக்கொண்டிருந்த நேரம் அது.

"கள்ள சூரியன் உன் கம்பெனிதானே? நீ எது கேட்டாலும் தருவேன். அவனைச் சரிப்படுத்தியெடுக்கணும். நீ கூப்பிட்டா அவன் எங்க வேணும்னாலும் வருவான். அவனை நல்லாக் குடிக்க வெச்சு வாளேறாம் காட்டுல படுக்க வெச்சி கையையும் காலையும் கட்டிப்போட்டுட்டு எனக்குத் தகவல் சொல்லு. பாக்கியை நான் கவனிச்சுக்குறேன்."

'யோசிக்கிறேன் முதலாளி' என்று சொல்லிவிட்டு வந்தேன். சும்மா சொல்லிவிட்டு வந்தேனே தவிர நான் யாரையும் எப்போதுமே காட்டிக் கொடுத்ததில்லை. சூரியனையா காட்டிக்கொடுப்பேன்? அவனுடைய வீரத்தைப் புரிந்துகொண்டிருப்பவர்கள்; ஓரளவாவது மனசாட்சியுள்ளவர்கள் யாரும் இதைச் செய்ய முன்வர மாட்டார்கள்.

எங்கள் வீட்டினருகிலுள்ள ஒரு வீட்டில் திருட்டு நடந்தது. வாழத்துங்கல்

காரர்கள் பரஸ்பரம் உறவினர்களாகவே இருப்பார்கள். வளையல், வாட்சு என்று எதுவெல்லாமோ திருட்டுப் போயிருந்தது. வீட்டுக்காரன் பிடிவாதமாக நிற்கிறான். "எனக்குத் தெரியும். இது மணியன்தான். அவனைத் தவிர இந்த வீட்டுக்குள்ள ஏறி எவனும் இதைச் செய்திருக்க முடியாது." நானோ ஊருக்குள் திருடுகிற வேலையை ஒருபோதும் செய்வதில்லை.

எந்த வேலையும் இல்லாமல் வீட்டிலிருந்த என்னை போலீஸ் வந்து தூக்கிக்கொண்டு நேராகத் திருட்டு நடந்த வீட்டுக்குப்போனது. திருடனின் காலடித் தடயங்களை வீட்டுக்காரர் பாதுகாத்து வைத்திருந்தார். போனதும் "இவனோட காலடித் தடம்தான். சந்தேகமே இல்லை" என்றார். மூன்று ஓடுகளை வைத்து மூடி ஏதோ பொக்கிஷம்போல் அதைப் பாதுகாப்பாக வைத்திருந்தார். போலீசார் என் கால் தடத்தைப் பதிய வைத்து அதைப் பரிசோதித்தார்கள். "நான் சொல்லலே? அது இவனோட கால் தடமேதான்." எல்லோரும் இதை ஆமோதித்தனர். சாதாரண உயரமுள்ளவர்களின் கால்தடங்களில் பெரிய அளவிலான வித்தியாசங்கள் இருக்காது. தொண்ணூறு சதவிகிதத் திருடன்களும் அவர்களது தொழில் வசதியைக் கருதி மெலிந்த உடல் ஆகிருதியுள்ளவர்களாகவே இருப்பார்கள். ஆறடி உயரமுள்ள திருடன்கள் அபூர்வம். ஆகவே, கால் தடங்களும் கிட்டத்தட்ட சம அளவிலானதாகவே இருக்கும். எளிதாகக் கிடைக்கும் ஏக தடயத்தை வைத்து வீட்டுக்காரர்களும் துப்பறியும் நிபுணர்களாகி விடுவார்கள். தடயங்களில் சிறு வேறுபாடுகளிருந்தாலும் அவை பரிசீலிக்கப்படுவதில்லை. ஆக, கள்ளன் மணியன் உள்ளே! நானோ ஊருக்குள் திருடுவதில்லையென்று கடும் விரதம் மேற்கொண்டவன். என்னைக் காணும்போதெல்லாம் மனத் தொந்தரவுக்கு உள்ளாகும் பகல் யோக்கியர்கள் இருக்கிறார்கள். இரவில் தன்னிச்சைப்படி நடக்கும் ஒரு திருடன், தன்னை முகமூடியில்லாமல் காண நேரிடுமென்பதால் ஏற்படுகிற மன அவஸ்தை இது. 'ஊருக்குள் திருட மாட்டேன் என்று சொல்வதெல்லாம் வெறும் தந்திரம் மட்டும்தான். திருடன் என்றால் அவன் எங்கும் திருடுவான். அவனுடைய ஜென்ம வாசனை அது.' அவர்கள் புதியதொரு சித்தாந்தத்தை உருவாக்கினார்கள்.

நான் ஈஸ்ட் ஸ்டேஷன் லாக்கப்பில் ஓய்வெடுத்துக்கொண்டிருந்தேன். போலீசாரின் அறிமுக உபசரிப்பெல்லாம் முடிந்தது. இனி, இரவு ரோந்துப் பணி முடிந்து ஏமான்கள் வருவார்கள். போதுமான அளவுக்கு எரிபொருள் நிரப்பி, கண் மூக்குத் தெரியாமல் வருவார்கள். பிறகுதான் பிரதான உபசரிப்பு நடக்கும். பத்து மாடிக் கட்டடத்திலிருந்து விழுந்த அலுமினியக்

குடம்போலாகும் என்னுடம்பு.

எதிர்பார்த்து இருக்கும்போது லாக்கப்பின் வெளியே பரிச்சயமுள்ள ஒரு அலறல் சத்தம்.

"திருடுனவன் கிடைக்கலைனா கிடைக்கிறவன் திருடனா? மணியனைப் பிடிச்சி உள்ள போட்டது யாரு? வெளியே விடுங்க அவனை."

இரவில் காவல் நிலையத்தில் போலீசார் குறைவாகவே இருப்பார்கள். அவர்கள் திடுக்கிட்டார்கள். இந்த நேரத்தில் அதுவும் போலீஸ் ஸ்டேஷனுக்கே வந்து வீர வசனம் பேசுபவன் யார்?

பார்த்தபோது சூரியன்.

"என்னடா?" போலீஸ்காரர்கள் கோபத்துடன் கேட்டார்கள்.

"மணியனை வெளியே விடுங்க. உங்களுக்குத் திருடியவன்தானே வேணும். அது நான்தான். இதுதான் அங்கே இருந்து திருடிய பொருட்கள்."

சூரியன் கையை விரித்துக் காட்டினான். அதில் வளையலும் வாட்சுமிருந்தது.

ஒரு திருடனின் தைரியத்தின், மனசாட்சியின்முன் அவர்கள் ஒரு நிமிடம் தங்களை அல்பமானவர்களாக உணர்ந்திருப்பார்கள்.

போலீஸ்காரர்களிடையே விவாதமெழுந்தது: "அவன் சொல்றதிலயும் நியாயமிருக்கு. இந்த ஸ்குவாடுகாரங்க பண்ற வேலையிருக்கே? கண்ணுல படுறவன பிடிச்சுக் கொண்டு வந்து உதைக்கிறானுங்க."

தாராளமாக படியளக்கப்பெறும் ஸ்குவாடு போலீஸ்காரர்கள் மீதான மற்ற போலீஸ்காரர்களின் பொறாமை வெளிவருகிறது.

இத்துடன் மணியன் வெளியே, சூரியன் உள்ளே.

"டேய், மணியா நான் உன் வீட்டு முன் எதிர் வழியாத்தான் போனேன். அதை சரியா நான் கவனிக்கத் தவறிட்டேன். உன் ஏரியாவுக்குள்ள வந்திருக்கவே கூடாது."

இந்தச் சூரியனைத்தான் முதலாளி காட்டிக்கொடுக்க வேண்டுமென்று

சொல்கிறார்.

நேராக வாளேறாம் காட்டுக்குப் போனேன். கொடிப் படர்ப்பினுள் மூன்றாவது மாடியில் சூரியன் ஓய்வெடுத்துக்கொண்டிருந்தான். விழுதுகளைப் பற்றிப் பிடித்து நானும் ஏறினேன். மாடனும் மறுதாவும் தெய்வங்களும் காவலிருக்க மேலே இரண்டு திருடன்களின் சங்கமம்.

விஷயத்தைச் சொன்னேன்.

"நீ அவனுங்க சொன்னதுபோல செய்திட்டதா போய்ச் சொல்லு மாப்ளே. கையிலேயும் காலிலேயும் செடியைப் பிணைச்சுட்டு நான் அப்படியே மயக்கம் வந்ததுபோல படுத்துக்குறேன்."

நான் சொன்னேன்: "வேண்டாம் மாப்ளே."

ஒருவேளை இது நடந்தால், முதலாளி ஆட்களின் தலைவிதியைப் பற்றிய நிச்சயம் எனக்கு உண்டு. சூரியன், பாளை சீவும் அரிவாளைச் சுழற்றினால் எத்தனை பேர்களின் உயிரடங்கும் என்ற எண்ணிக்கையைப் பற்றிதான் யோசிக்க வேண்டும்.

ஆனால், முதலாளியின் ஆட்கள் சும்மா விடவில்லை. ஒருநாள் சூரியனை அவர்கள் பழி வாங்கியே விட்டார்கள்.

ஐந்தாறுபேர்களாகச் சேர்ந்து, நிராயுதபாணியான சூரியனை வீச்சரிவாளும் பாளைக் கத்தியுமாக வழிப்பாதையில் வளைத்துப் பிடித்துத் தாக்கினார்கள். இடது கையை வெட்டியும், உடல் முழுவதையும் குத்திக் கிழித்தும் வெறியடங்காதவர்களாக வயிற்றைக் கிழித்தார்கள். குடல் வெளியே வந்தது. அப்படியே சாகட்டுமென்று விட்டுவிட்டார்கள்.

கூட்டம் கூடியது. துடித்துச் சாகவிருந்த தருணத்திலும் சூரியனுக்குத் தன்னுணர்விருந்தது. வெட்டுப்பட்டு வெளியே கிடந்த குடலை தன் வலது கையால் எடுத்து உள்ளே வைக்க முயன்றான். முடியவில்லை.

ரத்தத்தில் மூழ்கிய சூரியன் கண்களை உயர்த்திப் பார்த்தபோது ஆட்கள் நிற்கிறார்கள்.

அவன் அலறினான்: "எனக்கு ஒரு டவல் தர்றதுக்கு ஒரு தா . . . களுமில்லையாடா இந்த ஊர்ல . . ."

தன்னுடைய மனத்திடத்தால் மட்டும் சூரியன் பிழைத்துக்கொண்டான். இடது கை அசைவற்றுப்போனது. சட்டையைச் சுருட்டிப் பிடித்து வைத்திருப்பதுபோலானது சூரியனின் வயிறு. கொஞ்சம் நிமிர்ந்து நின்றால் தெறித்து விடும்போல் தோன்றும். உள்ளே அள்ளி வைத்துத் தைக்கப்பட்டிருந்தது குடல்.

பிழைக்க வேறு வழியில்லாத சூரியன் பிறகு சாராயம் காய்ச்சத் தொடங்கினான். நான், ஈஸ்ட் ஸ்டேஷன் உதவியாளனாக இருந்த காலத்தில் வழக்கெதுவும் பதிவு செய்யாமல் பலமுறை சூரியனை விட்டிருக்கிறார்கள். சட்டையை உயர்த்திக் காட்டி அவன் யாசித்தால் மனச்சாட்சியுள்ள எந்த போலீஸ்காரனும் விட்டுவிடவே செய்வான். ஆனால், சூரியன் யாசிக்கமாட்டான்.

ஒருமுறை சூரியன் சொன்னான்: "மாப்ளே, ஒரு துப்பாக்கி தேவைப்படுது."

"எதுக்கு?"

"சில பேர் இருக்கானுங்க. கொஞ்ச நாட்களுக்கு முன்னால வரைக்கும் என் எதிரில வர்றதுக்கூட பயந்தவனுங்க. எந்தக் காரணமுமில்லாம இப்போ வந்து உரசிப்பாக்குறானுங்க."

நான் சொன்னேன்: "கண்டிப்பா வேணும்னா, முயற்சி செய்றேன்."

"கண்டிப்பா வேணும்."

"நிலம்பூருக்குப் போனா கிடைக்கும்."

அதுவரைக்கும் சூரியன் காத்திருக்கவில்லை. விஷம் குடித்துத் தற்கொலை செய்துகொண்டான்.

பாளை சீவும் லாவகத்துடன் கள்ளிறக்கும் தொழிலாளர்களுட்பட ஒரு கும்பல் ஆட்கள் சுற்றி நின்று வெட்டித் தீர்த்தும் மனத்திடத்தால் மட்டுமே உயிர்ப் பிழைத்த சூரியன் கடைசியில் விஷம் குடித்து மாண்டான். என்னால் இதை நம்பவே முடியவில்லை. அவனது நிழலைத் தொடவும் பயந்தவர்கள் இரண்டு கால்களில் நடக்கும் வெறுமொரு உயிர்ப் பிணமாக மாறியவனை உரசிப் பார்க்க ஆரம்பித்ததன் மனவலியாகக்கூட இருக்கலாம். சூரியன் செத்துவிட்டான். ஆனால், வாழத்துங்கல் ஊரில் அவனது மனத்திடம் சாகாது.

## 40 - கோட்டயம் கான்

கோட்டயம் கான் எனும் ஒரு பெரிய திருடனிருந்தான். குழுவாகச் சேர்ந்துதான் திருடுவான். திருவனந்தபுரம் ராஜன், ஆலப்புழை ராமச்சந்திரன் போன்றவர்கள் உட்பட பல்வேறு மாவட்டங்களைச் சேர்ந்த ஒரு குழு. கான், ஒருமுறை ஒரு வீட்டிலிருந்து நூற்றொரு பவுன் தங்கத்தைத் திருடினான். கானைப் பிடிப்பதென்பது சவாலான விஷயம். என்னைப் போன்றவர்கள் ஒயிட் லகான் கோழிபோல். பிடிப்பதற்காகக் கையை நீட்டினால் போதும். அப்படியே உட்கார்ந்து விடுவோம். இந்த இடத்தில் திருடியவன் நீதானே, அந்த இடத்தில் திருடியவன் நீதானே என்று கேட்டால் உடனே, "எத்தனை கேஸ் வேணும்னாலும் போட்டுக்குங்க. கோர்ட்டுல கொஞ்ச நேரம் மெனக்கெட வேண்டியதிருக்கும். அவ்வளவுதான். நீங்க திறமையான போலீஸ்காரர்களாயிடலாம். எனக்கென்ன வந்துடப்போகுது" என்பேன். மறுநாள் பத்திரிகையில், பிரபல திருடன் மணியன்பிள்ளை போலீஸ் பிடியில். ஒரு வீட்டில் திருடுவதற்காகப் பதுங்கி நின்ற இவனைப் போலீஸ் கைது செய்தது என்று செய்தி வரும். கடைசியாக என்னைக் கைது செய்தபோதும் பதுங்கியிருந்ததாகவே செய்தி வந்திருந்தது. சாதாரண உடையில் இரண்டு போலீஸ்காரர்கள் வந்து என்னை அழைத்துக்கொண்டு போனதை ஊரிலுள்ள அனைவரும் பார்த்தார்கள். இல்லாத கேசை எல்லாம் என் தலையில் கட்டி வைக்கட்டும். யார் வேண்டாம் என்றார்கள். ஏன்தான் இப்படித் தேவையில்லாத பொய்களை எல்லாம் சொல்கிறார்களோ? அதுவும் பெரிய அதிகாரிகள். பொய்களுக்கும் ஒரு அறம் வேண்டாமா? வழியில் நடந்து போகிற திருடன்களைப் பிடித்து உள்ளே போட்டுவிட்டு பதுங்கியிருந்தபோது பிடித்ததாக பத்திரிகைக்குச் செய்தி கொடுத்துப் பெயர் வாங்கும் ஒரு எஸ்ஐ கொல்லத்தில் இருந்தார். இவருடைய பொழுதுபோக்கே இதுதான்.

இவருக்கும் ஒரு ஆபரேசன் செய்தேன். புலன்விசாரணை அதிகாரியான இவரை நீதிமன்றத்தில் நான் குறுக்கு விசாரணை செய்தேன்.

"பதுங்கியிருந்த நிலையில் குற்றவாளி பிடிபட்டதாகச் சொன்னீர்கள். தாங்கள் பிடிக்கும் பெரும்பாலான குற்றவாளிகளும் பதுங்கியிருப்பது

வழக்கம். சரி, பதுங்கியிருப்பது எப்படி என்று சொல்ல முடியுமா?"

கூண்டினுள் பதுங்கிக்கொண்டு அதன் அழிகளினூடே பார்த்து செய்முறை விளக்கம் சொன்னார் எஸ்ஐ.

"இப்படி இருப்பவர்களை மட்டும்தான் நீங்கள் பிடிப்பீர்களா?"

"இல்லை. பதுங்கியிருத்தலுக்கு இன்னும் பல முறைகளுண்டு."

"அது என்னென்ன முறைகளென்றும் மணியன் பிள்ளை இதில் எந்த முறையில் பதுங்கியிருக்கும்போது தாங்கள் பிடித்தீர்களென்றும் விவரிக்க வேண்டும்."

பதுங்கியிருத்தலின் வகைமைகளை விவரிக்கத் தயாரானார் எஸ்ஐ.

நீதிபதி சொன்னார்: "மிஸ்டர் ஆ..்ஃபீஸர், நிறுத்துங்க. வெட்கமா இல்லையா உங்களுக்கு?"

வழக்கில் எனக்குக் குறைந்தபட்சத் தண்டனை விதித்துவிட்டு அவரைப் போகச் சொன்ன நீதிபதி, மேலும் கால தாமதம் செய்யாமல் சாப்பிடக் கிளம்பினார்.

போலீசார் என்னிடம் சொல்வதுண்டு: நீ எல்லாக் குற்றங்களையும் ஒப்புக்கொண்டால் சாட்சியங்களுக்கு நாங்கள் எங்கே போவோம்? நான் சொல்வேன். அதைத்தான் நானும் சொன்னேன். நான் திருடவில்லை என்று.

திருடன் சொல்வதை நம்ப முடியாதல்லவா? உடம்பைப் பதம் பார்க்க முயற்சி செய்வார்கள்.

"உங்களுக்கு சாட்சிகள்தானே வேணும்? ஏதாவதொரு நகைக்கடையைக் காட்டுறேன். அங்கிருந்து எடுத்துக்குங்க. கோர்ட்டுல அதை நான் மீட்டுக் கொடுத்துக்கிறேன்."

"வேண்டாம். நீ நம்மளைக் கூண்டுல ஏற்றி விட்டு உன் வேலையைக் காட்டிடுவே. எங்களுக்கு பேப்பர்ல நல்ல ஒரு செய்தி மட்டும் வந்தாப்போதும். பிறகு உள்ளே இருக்குறதும் வெளியே வர்றதுமெல்லாம் உன்னோட தலையெழுத்துபோல நடக்கட்டும்."

எனக்கு எந்த நகைக்கடைக்காரர்கள் மீதும் பகையில்லை. திருட்டுப் பொருளை வாங்கவில்லை என்பதற்காக திருடன்கள் யார்மீதும் பகைப் பாராட்டுவதில்லை. நியாயமாக வியாபாரம் செய்யும் யாருமே திருட்டுப் பொருள் வாங்கமாட்டார்கள்.

முன்பெல்லாம், சில போலீஸ்காரர்கள் ஓரளவு சுமாரான நகைக் கடைகளிலேறி அரைப் பவுனில் ஒரு நகை வேண்டும். மகளுக்குத் தேவைப்படுகிறது. கடனாகத்தான். பணம் பின்னால தந்திடறேன், என்று கேட்பார்கள்.

இதில் தவறாக நினைக்க என்ன இருக்கிறது? ஆனால், இந்த ஜென்மத்தில் கிடைக்கிற கடனல்ல என்பது மட்டும் வெள்ளிடைமலை. சில சிறு கடைக்காரர்கள் பயந்துபோய்க் கொடுத்துவிடுவார்கள். மறுப்பவர்களை போலீசார் கவனித்துக்கொள்வார்கள்.

என்னிடமும் சொல்லியிருக்கிறார்கள்: "டேய், இந்த நகைக்கடையில இத்தனை பவுன் விற்றிருக்கறதாகச் சொல்லிவிடு. அரைப்பவுன் தர்றதுக்கு இல்லைன்னு சொன்ன தா. . .ளி மவன்கிட்ட இருக்குதான்னுப் பார்க்கணும்."

கொல்லம் எஸ்ஐயாக இருந்த அசோகன்சார் நினைவுக்கு வருகிறார். மய்ய நாட்டுக்காரர். பல்வேறு வழக்குகளின்பேரில் என்னைப் பிடித்தார். 48 பவுன் திரும்ப எடுக்க வேண்டும். பலருக்குக் கொடுத்ததையும் கை மாறிப்போனதையும் திரும்பக் கண்டுபிடித்த பிறகும் மூன்று பவுன் பற்றாக்குறை. ஒரு ஏஎஸ்ஐயும் இரண்டு போலீஸ்காரர்களும் சேர்ந்து என்னிடம் சொன்னார்கள்:

"கொல்லம் சரஸ்வதி ஜூவல்லரியில் பத்து பவுன் விற்றதாகச் சொல்லு."

"மாட்டேன். நான் அங்கே விற்கலை."

"விற்ற இடத்தை இதுவரை நீ சரியாத்தான் சொல்லியிருக்கே இல்லையா?"

"நீங்க வற்புறுத்தியதால் பொய் சொல்லியுமிருக்கேன். ஆனால், நிச்சயமாக திருப்பிக் கொடுக்கறதுக்கான வாய்ப்பு அதிலிருக்கும்."

"திருடுறதை, குடிச்சும் பெண்ணுப் பிடிச்சும் தீக்குற நீ பெரிய சத்தியவான்தான். அதைக் கண்டுபிடிக்கிறதுக்காக நாங்க கிடந்து கஷ்டப்படணும். திருடுற நீ மட்டும் அனுபவிச்சா போதுமாடா? நாங்க

இங்கே ஊ . . . வா உட்காந்திருக்கோம்."

"உங்களுக்கும் அனுபவிக்கணும்னா அடுத்த முறை நான் திருடப் போகும்போது கூட வாங்க."

கையை முஷ்டிச் சுருட்டிக்கொண்டு வந்தார்கள்: "தா . . . ஒர்ரே அடியில உன்னை இல்லாமப் பண்ணிடுவோம். இனி ஏதாவது கேஸ் வரட்டும். அப்பக் காட்டுறோம்டா உனக்கு தண்ணி."

"காட்டுங்க. எனக்கும் தெரியும் காட்டுறதுக்கு."

பிறகு, இவர்கள் எஸ்ஐயிடம் போய் நின்றார்கள்: "ஒரு இருபது பவுனை சரஸ்வதி ஜுவல்லரியில கொடுத்ததாக இவனைச் சொல்லவெச்சா ஒண்ணோ இரண்டோ இவனுக்கும்போக மிச்சத்தை எடுத்துக்கலாம். அதில ஒரு பத்து சவரன் சாருக்கு." அசோகன் சார் புதிதாக வந்தவரென்பதால் ஒரு ஐடியா போட்டுப் பார்த்தார்கள். இவர்களது பாச்சா என்னிடம் பலிக்காததால் எஸ்ஐயை வைத்து முயற்சி செய்து பார்த்தார்கள். அசோகன் சார் நல்ல ஒரு அதிகாரி. அவர் குதறி விழுந்தார்.

"இனிமேல், நான் இங்க இருக்கிறதுவரைக்கும் எவனாவது தகிடுதத்தம் பண்ணி மற்றவங்க கையிலிருந்து ஏதாவது பிடுங்கலாம்னு நினைச்சா ஒருத்தனையும் விட்டு வைக்க மாட்டேன், சொல்லிட்டேன்."

வெளிப்பார்வைக்காவது அந்த இடம் கொஞ்சநாட்கள் சுத்தம்போல் தெரிந்தது.

சரி, கானின் கதைக்கு வருவோம். 101 பவுன் தங்கம் திருடிய கான், நீண்ட நாட்களாகப் பிடிபடாமலிருந்தான். கடைசியில் வர்க்கலை சிவகிரி விழாவின்போது ஏதாவது தட்டுப்படுமா என்று பார்க்க வந்தபோது பிடிபட்டான். பணத்தைச் செலவு செய்யும் விஷயத்தில் எல்லாத் திருடன்களுமே பலவீனர்கள்தான். பிடிபடுவதற்குள் கையிலிருப்பதை அனுபவித்து விட வேண்டுமென்றே ஆசைப்படுவார்கள். நான் இதில் மாறுபட்டவன். மிச்சம் பிடித்துச் சேர்த்து வைத்து ஏதாவது தொழில் செய்து பிழைக்க வேண்டுமென்பதில்தான் ஆர்வமிருந்தது. கிடைத்த பொருட்களுடன் கான் நேராக சென்னை மெயிலில் ஏறி விடுவான். கிடைக்கும் ஏதாவதொரு நடிகையிடம் அதைக் கொடுப்பான். அழகோ பணத்தைப் பார்த்து விழவோ செய்கிற ஏதாவதொரு நடிகையல்ல கானின் விருப்பம். அவனுக்கென்று தனிப்பட்ட சில ஆர்வங்களிருந்தன.

இதனுடன் ஒத்துப்போகிறவர்களை மட்டுமே விரும்புவான். அப்போது மலையாளத்தில் செக்ஸ்பாமாக இருந்த ஒரு தம்புராட்டி நடிகையைத் தேடி கான் சென்றான். ஒரு இரவுக்கு ஏழெட்டு பவுன் தங்கம். நான் அப்போது விய்யூர் சென்ட்ரல் ஜெயிலிலிருந்தேன். வழக்கில் பிடிபட்டு தண்டனை விதிக்கப்பட்ட கானை இங்கே கொண்டு வந்தார்கள். ஜெயிலில் பல கைதிகளுக்கும் அப்பீல் ரைட்டராக நானிருந்திருக்கிறேன். கைதிகளின் வழக்குகளை ஜெயிலிலிருந்தே விலையில்லா அப்பீல் கொடுப்பதற்கான விண்ணப்பம் அது. கானுக்கும் எழுதிக் கொடுத்திருக்கிறேன். நான் வெளியில் வந்த தொண்ணூற்றைந்தில்தான் கானும் வெளியே வந்தான். அடுத்த வருடம் விசேஷப் பிரிவு அதிகாரியின் கருணையால் பாஸ்போர்ட் பெற்று அரபுநாட்டிற்குச் சென்றான். திருடன்களுக்கு வெளிநாட்டிற்குச் செல்வதற்கான பாஸ்போர்ட் கிடைப்பது எளிதான விஷயமல்ல. இதற்கான சட்டத் தடங்கல்கள் பெரிதாக ஒன்றுமில்லை. ஆனால், பிழைத்துப்போவதை பெரும்பாலும் விரும்பமாட்டார்கள். திருடியும் உதை வாங்கியும் இங்கேயே கிடக்க வேண்டும். இந்த நடிகையைப் பற்றியும் குற்றப்பத்திரிகையில் குறிப்பிடப்பட்டிருந்தது. சாட்சிப் பட்டியலிலும் பெயர் இருந்தது. நீதிமன்றத்தில் குற்றத்தை ஒப்புக்கொண்டான் கான். வழக்கை விவாதித்திருந்தால் தன்னுடைய எல்லா 'அங்க' வஸ்திரங்களுடன் சாட்சியும் கூண்டிலேறி நிற்க வேண்டியது வரும். இதன் மூலம் தெரிய வருகிற நீதி போதனையாவது: நட்சத்திரமாக இருந்தாலும் வெறும் சத்திரமாக இருந்தாலும் தன்னை மேவ வருபவனிடமிருந்து பணமாக மட்டுமே பெற்றுக்கொள்ள வேண்டும் என்பது. பண பரிவர்த்தனைகளை நிரூபிக்க இயலாது. தங்க ஆபரணமென்பது தெளிவான ஆதாரம்.

கானைப்போன்ற தனித்தன்மையுள்ள திருடன்களைப் பற்றிய பிரஸ்தாபனையில் கோளியூர் தங்கப்பனைக் குறிப்பிடாமல் முடியாது. பால்பொடித் திருடன் என்ற பெயரில் அறியப்படுபவன். திருவனந்தபுரம் அட்டகுளங்கரை சப் ஜெயிலில் நீண்ட காலம் எல்லாமாக இருந்தவன். ஆறடி உயரம். தொப்பை வயிறு. பால்பொடி மட்டுமே திருடுவான். மதியக் கஞ்சியூற்றும் எல்லா பள்ளிக்கூடங்களிலும் நுழைவான். அப்போதெல்லாம் படிக்கும் குழந்தைகளுக்கான பால்பொடி, டப்பாக்களில் தான் வரும். சமையலறை, ஸ்டோர் ரூம் அல்லது, தலைமையாசிரியரின் அறை, இவற்றில் ஏதாவதொரு இடத்தில் பால்பொடி இருக்கும். பள்ளிக்கூடங்களில் பெரிய பந்தோபஸ்துக்கள் இருக்காது. பால்பொடி எங்கே திருட்டுப் போனாலும் போலீஸ் உடனே கோழியூரை அழைக்கும். இதற்காக அவர்கள் சிரமப்படத் தேவையில்லை.

கோழியூரை அவர்கள் ஒரு பிபி நம்பரில் அழைத்தாலே போதும். கோழி பறந்து வந்து நிற்கும். நீ பால்பொடி திருடினியா என்று கேட்டால்: "என்ன கேள்வி இது ஏமானே? வேற பால்பொடி திருடன் இருக்கவா செய்றான்?" என்று பதில் சொல்வான்.

ஜெயிலில் மேஸ்திரிபோல் திரிவான். அவனைப் பூட்டி வைக்க வேண்டிய தேவையுமில்லை. வெளியே விட்டாலும் போகமாட்டான். சில இனம் கறிக்கோழிகள் போல் துரத்தியடித்தாலும் மெல்லப் பதுங்கியபடி திரும்பி வருவான். வழக்கு எதுவுமில்லையென்றாலும் ஜெயிலின் முன்னாலேயே சுற்றித் திரிவான். ஜெயிலில் சிறு வேலைகள் செய்து கொடுப்பான். இப்படியாக கோழியூர் உள்ளே இருக்கிறானா வெளியே இருக்கிறானா என்பது யாருக்கும் தெரியாத ஒரு நிலைமை உருவானது.

## 41 - மயக்கு சுகு

கொஞ்ச நாட்களாக பகல் நேரங்களில், தன்வரலாறு எழுதும் இந்தப் பணியில் மூழ்கியிருந்தேன். காலை பத்து மணிக்கு அம்பலமுக்கு ஜங்ஷனில் நின்று என் வரலாற்றாசிரியரான பத்திரிகையாளரை அழைப்பேன். மோட்டார் சைக்கிளில் அவர் ஐந்தே நிமிடங்களில் வந்து சேர்வார். வீட்டிற்குச் செல்வோம். ஐந்து மணிக்கு வேலை முடியும். சில நேரங்களில் வேலைக்குச் செல்லும் அவருடன் நானும் சென்று தம்பானூரில் இறங்குவேன். ரெயில்வே ஸ்டேஷன் வழியாக மேம்பாலங்கள் கடந்து, பவர் ஹவுஸ் ரோட்டில் இறங்குவேன். அங்கிருந்து நடந்து கிழக்கே கோட்டைக்கு வந்தால் வலியதுறை பஸ் கிடைக்கும். இதுதான் வழக்கம்.

அன்று மேம்பாலத்திலிருந்து இறங்கி பவர் ஹவுஸ் ரோட்டுக்கு வரும்போது பின்னால் ஒரு குரல்: "வாழத்துங்கல் மணியன்பிள்ளை."

திரும்பிப் பார்த்தேன். மயக்கு சுகு. சில்க் ஜிப்பா, அகலமான கரையுள்ள வேட்டி, வயதான பிறகும் அழகு குறையவில்லை. முகத்தின் சுருக்கம் மேக்கப்பினுள் மறைந்து கிடந்தது. சொல்லப்போனால் முன்பை விடவும் அழகாக இருந்தான். நான் நினைத்துக்கொண்டேன். இதோ நிற்பவனும் இந்த வரலாற்றிலொரு அத்தியாயம். சுகுவின் நினைவு ஏனோ முன்பு வரவில்லை.

நகத்துக்கிடையில் திருட்டு என்றொரு சொல் வழக்கிலுண்டு. இதைக் கேட்ட பிறகுதான் சுகுவிற்கு இப்படியான ஒரு யோசனைத் தோன்றியிருக்க வேண்டும். அதாவது யாரோ சுகுவுக்கென்றே உருவாக்கிய சொலவடை.

நகத்துக்கிடையில் திருட்டை நிகழ்த்தும் சுகு, சீமான் குடும்பத்தில் பிறந்தவன். மூத்த சகோதரி ஐஏஎஸ் அதிகாரி. இவனும் ஏர்ஃபோர்ஸ் அதிகாரியாகப் பணியில் சேர்ந்தவன்தான். ஆனால், இவனுக்கானக் குணத்தைப் படைத்தபோது கடவுளுக்கு சில கைப் பிழைகள் நேர்ந்துவிட்டன. வக்கிரமும் வஞ்சகப் புத்தியும் தலா ஒரு ஸ்பூன் தூக்கலாகி விட்டன. இந்நிலையில் ராணுவ முகாமினுள் கிடந்தால் தூக்கம்

வருமா? என்னெவெல்லாமோ தகிடுதத்தங்கள் செய்து ராணுவத்திலிருந்து வெளியேறினான். முதலில் கொஞ்ச நாட்கள் மெடிக்கல் ரெப்பாக பணியாற்றினான். நிலைக்கவில்லை. சொகுசான பயணம்; சுகானுபவ வாழ்க்கை. சுகுவின் ஆகப்பெரிய நோக்கம் இதுதான். ஆரம்பத்திலெல்லாம் பெரிய அளவிலான ஏமாற்று வேலைகள் செய்து இலட்சியத்தைப் போற்றி வந்தான். பிறகு திருட்டையும் பயணங்களையும் வேறுபடுத்திப் பார்க்காமல் இரண்டையும் ஏக காலத்தில் மேற்கொள்வதுதான் புத்திசாலித்தனம் என்று முடிவு செய்து அதற்கான திட்டமிடல்களில் ஈடுபட்டான்.

சுகுவிற்கு பதினான்கு மொழிகள் தெரியும். ஏழெட்டு மொழிகளில் எழுதவும் வாசிக்கவும் செய்வான். ஜெர்மன், பிரஞ்சு நாடுகளைச் சேர்ந்தவர்கள் ஜெயிலுக்கு வருகை தரும்போது மொழிபெயர்ப்பாளராகப் பணியாற்றுபவன் சுகுதான். எங்களுக்கிடையிலான அறிமுகமும் இங்கே வைத்துதான்.

சுகுவின் ஆபரேஷன் முறையியல்: கோட்டும் சூட்டும் டையுமாக ரெயிலில் குளிர்சாதன வசதியுள்ள பெட்டியில் ஏறுவான். கேரளத்தில் வியாபாரம் செய்து பணத்துடன் திரும்பும் ரெட்டியார்களும் மார்வாடிகளும் தான் இவனது இலக்கு. சூட்கேஸ் நிரம்ப பணம் கொண்டு செல்பவர்களை இனம் கண்டுபிடிக்கும் விசேஷமானதொரு தொழில்நுட்பத் திறனை கடவுள் இவனுக்குக் கொடுத்திருந்தார்.

சுகு இப்போது ஆந்திராக்காரன் ஒருவனின் பக்கத்தில் இருப்பதாக வையுங்கள். சுகு முதலில் இங்கிலீசில் பேச ஆரம்பிப்பான். எதிராளி பெப்பெப்பே என்பான். பேசுவதில் ஆர்வமில்லாதவன் போலிருப்பான். சுகு உடனே கேட்பான்: தெலுங்கு? அவன் ஆமாம் என்பான். கேரளத்திலிருந்து தன்னந்தனியாகச் செல்லும் பயணத்தில் சலிப்படைந்து போயிருப்பவனுக்குப் பேச்சுத் துணைக்கொரு ஆள். சந்தேகத்துடன் பேச ஆரம்பிப்பவன் பிறகு, சுகுவின் வலையில் விழுவான்.

சுகு மெல்ல எழுந்து சூட்கேசைத் திறந்து மது பாட்டிலை வெளியே எடுப்பான். நல்ல தரமான ஸ்காட்ச். தெலுங்கன் விழாமலிருப்பானா? இருந்தாலும் அவனது மனதில் ரயில்வேயின் விளம்பரங்கள் ஓடுகின்றன. 'அறிமுகமில்லாத நபர்கள் தருவதை வாங்கிச் சாப்பிடாதீர்கள்' சூட்கேஸ் நிறைய பணம் வேறிருக்கிறது. தெலுங்கனின் சந்தேகம் தீரவில்லை.

சுகு சொல்வான்: "தம்ளர் ஒண்ணுதானிருக்கு."

தெலுங்கன்: "இல்லை, எனக்கு வேண்டாம்."

சுகு: "தப்பா நினைக்க மாட்டீங்கன்னா பகிர்ந்துக்கலாம்"

"நான் இந்நேரம் சாப்பிடற வழக்கமில்லை."

"நானும்தான்" என்றபடியே சுகு தம்ளரை நிரப்பி நீட்டுவான்.

"பரவாயில்லை, நீங்க சாப்பிடுங்க. ஓகே."

தெலுங்கன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே சுகு அதனை உதட்டில் படாமல் வாயில் ஊற்றுகிறான். அவனிடம் மிச்சமிருந்த சிறு சந்தேகம், இப்போது குற்றவுணர்ச்சியாக உருமாறுகிறது: "சே . . . தவறாக நினைத்திருக்கக் கூடாது." மெல்ல அடுத்தத் தம்ளரை நிறைத்த சுகு மீண்டும் நீட்டுகிறான்.

"வேண்டாம், பரவாயில்லை."

"இன்னொருத்தர் உபயோகிச்ச தம்ளருன்னு பார்க்கிறீங்க இல்லையா?"

"சே . . . சே . . . அப்படில்லாம் இல்லை" என்றபடியே தெலுங்கன் அதை வாங்கிக் குடிக்கிறான்.

"ஃபஸ்ட் கிளாஸ் அயிட்டம்தான். ஒண்ணும் பிரச்சினையில்லை."

தெலுங்கனின் மனதில்: "இன்னும் ஒரேயொரு பெக்தான். அதிகமாக் குடிக்கக் கூடாது. கையில பணமிருக்கு."

சுகு மீண்டும் ஊற்றிக் குடிக்கிறான். இதனிடையே சுகுவின் இடது கை பாக்கெட்டினுள் நுழைவதும் அதிலிருக்கும் ஒரு கேப்ஸ்யூல் உடைபட்டு மருந்து இடது கை சுட்டு விரல் நகத்தினுள் நுழைவதுமெல்லாம் தெலுங்கனுக்குத் தெரியாது. அடுத்த ரவுண்டில் அவனது எதிரில் வைத்தே தம்ளரில் ஊற்றுகிறான். இம்முறை தம்ளரில் விழும் ஸ்காட்ச் இடது கை நகத்தை ஒரு வினாடி தொட்டபடி விழுகிறது. தம்ளர் நிரம்புகிறது. பேசியபடியே அவன் அதைக் காலி செய்கிறான். சுந்தரத் தெலுங்கு சற்றுத் தடுமாறுகிறது. தெலுங்கன் முழுவதுமாகக் குழைகிறான். பத்தே நிமிடத்தில் ஆள் ஃப்ளாட். அடுத்த ஸ்டேஷனில் தெலுங்கனின் சூட்கேசுடன் சுகு இறங்குகிறான். பிறகு, சுகுவின் உலகம்.

சுகு, இப்படியான ஒரு கொண்டாட்டத்துக்குச் செல்லும் வழியில் கொல்லம் ரெயில்வே ஸ்டேஷனில் வைத்து சந்தித்தேன். நான் கையில் காசில்லாமல் சிரமத்தில் இருக்கிறேன். அப்போது, கூலிங் கிளாஸ் அணிந்து ஏசி கோச்சிலிருந்து இறங்கி வந்து சிகரெட் பற்ற வைத்த ஒருவன் என்னைக் கண்டதும் பிள்ளை என்றழைத்தான்.

நான் பார்த்ததும் கையிலிருந்த சிகரெட்டை மரியாதை நிமித்தம் தரையில் போட்டு மிதித்தான். நான் பக்கத்தில் சென்றதும் "எங்க போறே?" என்றான்.

"எங்க போறதுன்னு தெரியாம நிக்கிறேன்." என்றேன்.

"நான் கொச்சிக்குப் போறேன், வர்றியா?"

"வேண்டாம். நான் ஏதாச்சும் கம்பியைக் கிம்பியை வளைச்சுப் பொழைச்சுக்கிறேன்."

"ஆபரேஷனுக்கில்லைண்ணா. கொஞ்சம் காசு கிடைச்சிருக்கு. தோதுவான ஒரு கம்பெனி இல்லையேன்னு நினைச்சிட்டிருந்தேன். சும்மா வா."

"அப்படீன்னா வர்றேன்."

டிக்கெட்டில்லாமல் ஏசி கோச்சில் நான்.

காயம்குளத்தை நெருங்கும்போது டிடிஆர். ஏறினார். சுகு இங்கிலீசில் என்னவெல்லாமோ சொல்கிறான். பாக்கெட்டிலிருந்து ஒரு நூறு ரூபாய் நோட்டையெடுத்து டிடிஆரின் பாக்கெட்டில் வைத்தான்.

பிரச்சினை தீர்ந்தது.

"டிடிஆருட்டே நீ என்ன சொன்னே?"

"நான் டாக்டர் சுதாகரன். போலீஸ் சர்ஜன். கொச்சியில ஒரு தீவிரவாதி கஸ்டம்ஸ்காரங்க சுட்டு இறந்துட்டான். லீவை கேன்சல் பண்ணிட்டு உடனடியா புறப்படணும்னு அரசு உத்தரவு. நீ என்னோட உதவியாளர். தலையை வெட்டவும் கொள்ளவுமெல்லாம் ஆள் வேணும்னுட்டு அவசரமாக ஏற்பாடு செய்தது." சொல்லி முடிப்பதற்குள் நூறு ரூபாய் நோட்டையும் நீட்டியபடி டிடிஆர் வந்து நின்றார்: "வேண்டாம் சார், எரணாகுளம்வரைக்கும் சீட் காலியிருக்கு. அரசாங்க விஷயமில்லையா, மனசு கேட்கலை."

"ஓ . . . கே, தாங்க்ஸ்."

சுகு காசை வாங்கி பாக்கெட்டில் வைத்தான்.

எரணாகுளம் சௌத் ரயில்வே ஸ்டேஷனின் அருகிலுள்ள ஒரு பெரிய ஓட்டல் அறையில் தங்கினோம். இதனிடையில் சுகு ஏதோ யோசனையில் ஆழ்ந்தான். நான் உள்ளே குடித்துக்கொண்டிருக்கும்போது சுகு பால்கனிக்குப் போவதும் வருவதுமாக இருந்தான். இதனிடையே வந்து சொன்னான்: "ஒரு நிமிஷத்தில வந்திடறேன், அடுத்த ரூமில் தங்கியிருக்கிறவங்க ரூமைப் பூட்டிட்டு வெளியே போயிருக்காங்க." பத்து நிமிடம் கழிந்த பிறகு வந்து அடுத்த அறையிலிருந்து திருடிய ஏதேதோ பொருட்களையும் பணத்தையும் அவனோட சூட்கேசில் நிறைத்தான்.

"இனி இங்க இருந்தா சரிப்படாது, வா போயிடலாம்."

உடனடியாக இடம் மாறுதல் நிகழ்ந்தது. நகரின் மற்றொரு மூலையில் வேறொரு பெரிய ஓட்டல். அங்குள்ள பார் ரெஸ்டாரண்டில் நுழைந்ததும் ஒரு வெயிட்டர் மற்றவர்கள் கவனிக்காதபடி தனது கையை மெல்ல உயர்த்தி நான் இங்கே இருக்கிறேன் என்பதுபோல் சுகுவிற்கு சைகை காட்டினான்.

சுகு என்னிடம் மெதுவாகச் சொன்னான்: "அவன் சசி, பேட்டைக்காரன். சில்லறை திருட்டுகள் செய்த ஒரு பழைய திருடன். இங்குள்ள யாருக்கும் இது தெரியாது. என்னோட சூட்கேசை நீ உன் பொறுப்பில பாதுகாப்பா வெச்சிக்க. தேவைப்படுற பணத்தை எடுத்துச் செலவுப் பண்ணிக்க. அதிகமாக் குடிச்சிட வேண்டாம். குடிச்சு முடிஞ்சதும், கௌண்டரிலிருந்து ஒரு ஃபுல் வாங்கிட்டு நேரா ஓட்டலுக்கு வந்து டாக்டர் ஸ்யாம்குமாரோட ரூம் எதுன்னு கேளு. அது வேற யாருமில்லை, நான்தான். அங்கதான் இருப்பேன்."

நான் ஒரு இடத்தில் உட்கார்ந்து ஆர்டர் செய்தேன். சுகு மெல்ல எழுந்து மற்றொரு இருக்கையில்போய் அமர்ந்தான். அங்கிருந்து எழுந்து மற்றொன்றில் போய் அமர்ந்தான். இருப்புக்கொள்ளாதவனாக இப்படி இரண்டு மூன்று இருக்கைகள் மாறினான். எல்லாம் மூன்றாம்தரமான இருக்கைகளாகவே இருந்தன. எனக்குப் புரிந்து விட்டது. சசி பரிமாறும் வரிசையைத் தேடுகிறான். இதில் சசியின் பங்கு என்னவாக இருக்கும் என்பதை அறிவதில்தான் எனக்கு ஆர்வம். சுகு உட்கார்ந்த எதிலும் வந்து சசி ஆர்டர் எடுக்கவில்லை. மூன்றாவது வரிசையில், மூலையில்

வெளிச்சம் குறைந்த ஓரிடத்தில் ஒரு பெரிய மனிதன் மது அருந்திக் கொண்டிருந்தான். கையிலொரு சூட்கேசுமிருந்தது. அதன் அடுத்த வரிசையில் இரண்டு பேர் உட்கார்ந்திருந்தார்கள். பிரச்சினை இதுதான். அவர்கள் எழுந்து போனார்கள். மற்றொரு வெயிட்டர் வந்து அந்த இடத்தைச் சுத்தம் செய்தான். சுகு மெல்ல அந்தப் பெரிய மனிதரின் பக்கத்தில்போய் உட்கார்ந்தான். சசி சென்று பவ்யமாக ஆர்டர் கேட்டான். அவர்கள் பேசிக்கொண்டது என் காதில் விழவில்லை. நடந்த சம்பாஷணையைப் பிறகு சுகுதான் சொன்னான்.

"ஸ்காட்சில என்ன இருக்கு? சரி, பிளாக் லேபிள் ரெண்டு பெக் கொண்டு வா."

"சார், ரெண்டு பெக்கோட விலை . . ."

சுகுவிற்கு உடனே கோபம் வருகிறது.

"ஆர்டர் செய்ததைப் போய்க் கொண்டு வாடா. ஸ்காட்சைப் புதுசாப் பார்க்கிறவன் இல்லை நானு. உன்னோட மேனேஜர் எங்கே?"

"சாரி சார்."

சசி பின்வாங்கினான். எதிரில் இருப்பவரிடம் சுகு, சாரி என்றான்.

"இவனுகளோட தகுதிதான் நமக்கும்னு நினைச்சிட்டானுங்க."

அவர் பதில் சொல்லவில்லை. பேசுவதில் அவருக்கு ஆர்வமில்லை. சுகுவும் ஆர்வமிருப்பதுபோல் காட்டவில்லை. போதையிலாழ்ந்த அவரது தலை குழைந்து தாழ்ந்தது. சுகு மயக்க மருந்தை தம்ளரில் தூவினான். இப்போது அவரது தலை டெஸ்கில் சாயவும் விளக்கின் வெளிச்சம் குறைந்தது. நான் திரும்பிப் பார்த்தேன். சசி ஸ்விட்ச் பக்கத்தில் நிற்கிறான். கொஞ்ச நேரத்தில் சூட்கேசுடன் சுகு வெளியேறினான். ஐந்து நிமிடம் கழிந்து நான் மெல்ல வெளியே வந்து ஒரு ஆட்டோவிலேறி சுகு தங்கியிருந்த ஓட்டலுக்குச் சென்றேன். சுகு குளித்து முடித்துச் சந்தனம் சார்த்தி சுந்தரனாக நிற்கிறான்.

"எதிர்பார்த்த அளவுக்கொண்ணும் தேறலண்ணா. பத்தாயிரம் ரூபாய் மதிக்கிற அளவுக்கு ஒரு அத்துப்போன செயினும் கொஞ்சம் அண்டர்வேரும் உடுப்புகளும் ஐநூறு ரூபாயுமிருந்தது."

"போதாதா?" நான் கேட்டேன்.

"இது வெறும் வேலைக்கூலி மட்டும்தான். ஒரு அஞ்சு மடங்காவது கிடைச்சாத்தான் ஒரு வாரமாவது இங்க பிடிச்சி நிற்க முடியும். என் செலவுகளைப் பற்றி உனக்குத் தெரியாது. நாளைக்கு ஒரு செலவிருக்கு. நீயே நேர்ல பாரு."

அன்றிரவு குடித்துக்கொண்டிருக்கும்போது சசி வந்தான். கம்பெனிக்கு அவனையும் அழைத்தான் சுகு. சசி ஏற்கனவே நிறைய குடித்திருக்கிறான்.

"எனக்கு எதுக்கண்ணா? எனக்குத்தான் அது எவ்வளவு வேணும்னாலும் கிடைக்குமே. விழுந்த ஒப்பனரை எடுக்கறதுபோல கொஞ்சம் கீழே குனிஞ்சேன்னா ரெண்டு பெக் காக்டெய்ல் உள்ள போயிடும். அது சரி இன்னிக்கு யாரைக் கூப்பிட்டிருக்கே, அதைச் சொல்லு. நமக்கு லாஸ்ட் ரவுண்டு போதும்."

"யாரையும் கூப்பிடல."

"இது பொய்."

"நான் பொய் சொல்லுவேனா?"

"அப்படியில்லை . . ." என்றபடி என்னைப் பார்த்துச் சொன்னான்: "பொய் அப்பிடீங்குற விஷயமே கிடையாது. எங்களுக்கிடையில பத்துப் பதினைஞ்சு வருஷ நட்பு. இன்னைக்குவரைக்கும் பொய்யிங்குறது ம் . . . ஹூம்."

"தெரியுதில்லே, அப்புறம் கேட்குறே? இதோ இந்த அறுந்தச் செயினும் ஐநூறு ரூபாயுமிருந்தது. இந்தா உனக்கு முன்னூறு."

"போதாது அண்ணா." என்றான் சசி.

"பிறகு?"

"அந்த ஐநூறையும் கொடு. உனக்குதான் ஐயாயிரம் கிடைக்குதே?"

சுகு கொடுத்தான்.

"நன்றி. இவர் யார் அண்ணா?" என்னைப் பற்றித்தான் கேட்கிறான்.

"உனக்கு அறிமுகப்படுத்துற ஆளில்லை. கொஞ்சம் டீசென்டான ஆள்."

"எனக்குத் தெரியும். டிடிஆர்தானே?"

சுகு பதில் சொல்லவில்லை.

"டிடிஆர்களைப் பாத்தாலே நான் கண்டுப்பிடிச்சிடுவேன்."

"சரி சரி, நீ போ." சசி போய் விட்டான்.

மறுநாள் என்னிடம் செயினை விற்று வரச் சொன்னான். ஆறாயிரத்திற்குப் போனது. செயினை விற்று விட்டுத் திரும்பி வரும்போது சுகு ஏதோ ஒரு பாட்டை முனகிக்கொண்டிருந்தான். அறைக்குள் சென்ட் வாசனை.

பணத்தை நீட்டினேன். அவன் சொன்னான்:

"ஐயாயிரத்தை அந்த மேஜையில வெச்சிட்டு மீதியை உன் பாக்கெட்டில வையி. திரும்பிப் போகும்போது தேவைப்படும். ஐயாயிரத்தையும் நானே எடுக்குறதப் பார்த்து தவறாக நினைச்சுக்காதே. பணமெல்லாம் எப்படி ஆவியாப் போகுங்குறதை நீயே பாரு. கூடவே, அதிர்ஷ்டமிருந்தா, ஆயுள் காலம் முழுவதும் நினைவிருக்குறதுபோல ஒரு அனுபவமும் வாய்க்கலாம். இப்போ ஒரு பார்ட்டி வரும். அந்த ஜன்னல் வழியாப் பாரு."

அரைமணி நேரம் பார்த்திருப்பேன். ஒரு ஃபியட் கார் வந்து நின்றது. செக்யூரிட்டி ஓடி வந்து சாவியை வாங்கினான். டிரைவர் சீட்டிலிருந்து கூலிங் கிளாஸ் அணிந்த ஒரு அழகி கையில் வானிட்டி பேக்குடன் இறங்கினாள். முகத்தைத் தெளிவாகப் பார்க்க முடியவில்லை. சேலையின் முன்பின் பாகங்களினூடே ஒரு செழுமையை உணர முடிந்தது.

"இவதான் நீ சொன்ன அதிர்ஷ்டமா?" என்று கேட்டேன்.

"ஆமா" என்றான்.

"முகத்தைப் பார்க்க முடியலியே"

"இங்க வரும்போது பார்த்துக்க."

இரண்டு நிமிடத்தில் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. கூடவே,

மானேஜரும். அவள் கண்ணாடியைக் கழற்றினாள். திடுக்கிட்டு விட்டேன். இவளா? புகழ்பெற்ற ஒரு துணை நடிகை. அங்கலாவண்யங்களைக் காட்டுவதிலும். எனக்கு சினிமா மோகம் இல்லையென்றாலும் கிளர்ச்சியேற்பட்டது.

அறைக்குள் நுழைந்தாள். சுகு அந்த ஐயாயிரத்தையும் எடுத்து நீட்டினான். வாங்கி பேக்கினுள் வைத்தாள். இந்த ஐயாயிரம் ரூபாய் என்பது 1980 இன் மதிப்பீடு.

"சுகமா இருக்கீங்களா டாக்டர்?"

"இல்லையே, அதுக்காகத்தானே வந்திருக்கேன்."

"டாக்டர் ஷ்யாம் கூப்பிடுறாருன்னதும் ஷூட்டிங் ஸ்பாட்ல இருந்த நான் உடனே வந்தேன். நாலு மணிக்கு உதயாவுக்குப் போன பிறகுதான் இனி அடுத்த ஷாட்."

"அதுக்கு இன்னும் நேரமிருக்கே."

"இல்லை. வேற ஒரு இடத்துக்கும் போகணும்."

"இதுபோலுள்ள இடமா?"

"சீ . . . ஷாப்பிங் போகணும். டாக்டர் மனசு வெச்சு, முக்கால் மணி நேரம். அதுக்கும் அதிகமாக இருக்க முடியாது. விட்டுடணும்."

"அரை மணி நேரத்தில விட்டுடறேன். ஆனா, இந்தத் தடவை நீ கொஞ்சம் மனசு வெக்கணும். வெளியில நிக்கிறவரு என்னோட நெருங்கிய நண்பர். பெரிய பிசினஸ் மேன். இதைவிட பத்து மடங்கு தர்றதுக்கு அவரால முடியும்."

அவள் பயங்கரமான ஆள்தான்.

"அப்படீன்னா, டாக்டர் ஒண்ணு பண்ணுங்க. பத்து மடங்கெல்லாம் வேண்டாம். ரெண்டு மடங்கு போதும். அரை மணி நேரத்தை அவருக்கு ஒதுக்கிடறேன். என்ன சொல்றீங்க?"

சுகுவுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை.

"அதுனாலதான் சொல்றேன். இப்ப சரிப்படாது. நமக்கிடையில இது முதல் தடவையில்லை. டாக்டர் ஷ்யாம் டீசென்டான ஆளுங்குற விஷயம் எனக்குத் தெரியும். நீங்க கூப்பிட்டா நாளைக்கே வேணும்னாலும் நான் வர்றேன். பத்து ரூபாங்குறதுல மாற்றமில்லை. புதிய படத்தில நான்தான் ஹீரோயின்."

"அந்தப் படம் ஓடவே கூடாது. ஓடினா நீ இன்னும் ரேட்டைக் கூட்டுவே."

அவள் மெல்லச் சிரித்தாள்.

"நான் ஒரு ரெண்டாயிரம் அதிகமாத் தர்றேன். அவருக்கும் ஒரு கம்பெனி . . ."

"பிளீஸ், டாக்டர். நம்ம ரெண்டு பேருக்கிடையில விரிசல் வரக் கூடாதுன்னு விரும்பறேன்?"

"பிளீஸ்."

"அதுதான் முடியாதுன்னட்டனே?"

"ஓ, கே."

சுகு மெல்ல வெளியில் வந்து சொன்னான்: "நான் தாழிடறதுபோல நடிப்பேன். ஆனா, தாழிட மாட்டேன். கையில கத்தியிருக்குதானே? என் டோஸ் முடிஞ்சதும் நீ உள்ளே வந்துடு. கூத்தச்சி. சும்மா விடக்கூடாது அவளை. கத்தியைக் கழுத்தில வச்சி, காரியத்தை முடிச்சுடு."

சுகு உள்ளே போனான். இடுப்பில் கத்தியிருப்பதை நான் உறுதிப்படுத்திக் கொண்டேன்.

காட்சி தொடங்கியது. நான் வெளியே நின்றிருந்தேன். கதவை இலேசாகத் திறந்து வைத்திருந்தேன். ஒரு சிறு வராந்தாவிற்குப் பின்னால் அவர்களிருந்தார்கள். அவளது தலையை ஒரு வளைவு மறைத்திருந்தது. என்னை அவளால் பார்க்க முடியாது. காட்சி ரொம்ப சொதப்பலாக இருந்தது. எல்லாமே அவள்தான். வெறும் மாமிசத் திரட்சி மட்டும்தான். சினிமாவில் ஜாக்கெட்டெல்லாம் அணிந்த இவளது ஏதோ ஒரு ஓரப்பகுதி வெளியில் தெரிந்ததைக் கற்பனை செய்துதான் கிளர்ச்சி பெற வேண்டும்.

ரூம் பாய் வந்தான். நல்ல திடகாத்திர மேனியன். நான் பார்ப்பதைக்

கண்டதும், "ஒளிஞ்சிருந்து என்ன பாக்குறே?" என்றபடி கோபத்துடன் வந்தான். நான் சொன்னேன்: "ஸ் . . . ஸ் . . . அங்க பாரு." கையிலிருந்த ட்ரேயை உடனே கீழே வைத்தான். அவனது கண்கள் விரிவடைந்து கொண்டிருந்தது. நான் விலகிப்போய் நின்று ஒரு சிகரெட் பற்ற வைத்துவிட்டு மீண்டும் வந்து "சரி, சரி, போதும் போ" என்றேன்.

வாழ்க்கையில் ஒருபோதுமே மறக்க முடியாத நினைவுகளுமாய், கனவுலக சஞ்சாரிபோல் அவன் நகர்ந்துகொண்டிருந்தான்.

எனக்குப் பெரிய அளவில் ஆர்வமில்லை. கதவை மூடினேன். சிகரெட் தீர்ந்தது. இரண்டு நிமிடத்தில் அவள் எதுவும் சொல்லாமல் இறங்கி நடந்தாள்.

வாசலைத் திறந்துவிட்டு வெளியே வந்த சுகு: "நீ என்ன பண்ணிட்டிருந்தே?"

"வேண்டாம் மாப்ளே, அவ போகட்டும்."

"என்னாச்சி உனக்கு?"

"மூடில்லை."

இதை மற்றவர்களோடு பகிர்ந்துகொள்வதை நான் விரும்புவதில்லை. எவளாவது ஒருத்தியைக் கீப்பாக வைத்துக்கொள்வதும் காசு தீர்ந்தால் அனுப்பிவிடுவதும்தான் எனது வழக்கம். அதுகூட ஓரளவு புரிதலுள்ளவளாக இருந்தால் மட்டுமே!

முன்பு, ஜெயிலில் நடந்த ஒரு சம்பவம்தான் இதற்கான காரணம். கிருஷ்ணன்குட்டி என்ற திருடன் ஜெயிலுக்கு வந்தான். கால்களை அகட்டி வைத்து நடப்பான். ஜெயில் அதிகாரிகள் எதைக் கேட்டாலும் பதில் சொல்ல மாட்டான். இடுப்பு அசைந்து வேலை செய்யும்போது தாங்க முடியாத வேதனையால் அலறுவான். சிறுநீர் கழிப்பதற்கு நீண்ட நேரமெடுத்துக் கொள்வான். அவ்வளவு வேதனை. டாக்டரிடம் அழைத்துக்கொண்டு போனோம். இரண்டு போலீஸ்காரர்களும் நானும். டாக்டர் வேட்டியை அவிழ்க்கச் சொன்னார். அய்யோ வேண்டாம் ஏமானே என்று சொல்லிக் கதற ஆரம்பித்து விட்டான். பலவந்தமாக வேட்டியை அவிழ்த்தோம். உள்ளாடை ஏதுமில்லை. அந்த இடம் பழுத்து வீங்கியிருந்தது.

டாக்டர் திட்ட ஆரம்பித்தார்: "பரோல் கிடைச்சா போதும், கண்ட ரெண்டு ரூபா கேசுங்களை ஏறி மேய்ஞ்சுட்டு நேரா ஜெயிலுக்கு வந்துடறது. மற்றவங்களைத் தொந்தரவு பண்றதுக்கு."

டாக்டர் கையுறையை அணிந்தார்.

"அய்யோ . . . அய்யோ வேண்டாம் சார்" என்று கூப்பாடுப் போட்டான் கிருஷ்ணன்குட்டி.

டாக்டர் என்னிடம் சொன்னார்: "அவனோட கையையும் கெட்டியாப் பிடிச்சுக்க."

போலீசார் மேலும் இன்னும் இரண்டு கைதிகளை அழைத்துக்கொண்டு வந்தார்கள். அவர்கள் கால்களைப் பிடித்துக்கொண்டார்கள். பால் கறப்பதுபோல் பழுப்பு கறந்தார் டாக்டர். அவன் ஜெயிலே கிடுகிடுக்கு மளவுக்கு அலறினான்.

டாக்டர் கெட்ட வார்த்தையால் திட்டிவிட்டுச் சொன்னார்: "எல்லாவனுங்ககிட்டேயும் போய்ச் சொல்லு. அவனுங்களுக்கும் இதொரு பாடமா இருக்கட்டும்."

இதன் பிறகு தவறான ஏதாவது ஆர்வம் ஏற்பட்டால் கிருஷ்ணன் குட்டியும் அவனது நடையும் ஞாபகத்திற்கு வந்துவிடும். எந்த நடிகையாக இருந்தாலும் நான் வேண்டாமென்று சொல்வதற்கான காரணம் இதுதான்.

தம்பானூர் ரெயில்வே மேம்பாலம். சுகுவுக்கு நினைவுபடுத்தினேன்: "நம்ம பழைய சினிமா நடிகையோட எபிஸோடெல்லாம் நினைவிருக்கா?"

சுகு சிரித்தான். ஏதோ ரெயில் வருவதாக அனௌன்ஸ்மென்ட். சுகு அதை ஒரு நிமிடம் கவனித்துக் கேட்டுவிட்டுச் சொன்னான்: "எல்லாமே நினைவிருக்கு. பார்ல திருடின அந்தச் சம்பவம்தானே?"

"நான் அதை இப்பதான் நினைச்சுப் பார்த்தேன்."

"அன்னிக்கு அவனோட சூட்கேசைத் திருடிட்டு பார்லேருந்து வரும்போது என் சூட்கேசை யார்கிட்ட கொடுத்தேன்?"

"எங்கிட்டதான்."

"எந்தப் பொறுப்புமில்லாத மணியன்பிள்ளை. அந்த சூட்கேசை எடுத்திட்டு ஓடியிருக்கலாம். நான் தேடி வரப்போறதில்லைங்குறதும் அதில கொஞ்சம் பணமிருக்குங்கிறதும் பிள்ளைக்குத் தெரியும்தானே?"

நான் சிரித்தேன்.

"மணியன் பிள்ளையைப்போல அபூர்வமா சிலர் மட்டும்தான் மனசாட்சியோடு இருக்குறதை நான் பார்த்திருக்கேன்."

"இப்பவும் வேலை . . ?"

"அதே வேஷம்தான். அப்படியே தொடர்ந்திட்டிருக்கு."

சிறிது யோசனைக்குப் பிறகு சொன்னான்: "ஆனா, பழைய பிக்கப் இப்ப இல்லை. குதிரை கழுதையா மாறிட்டிருக்கு. ஏதோ பழைய ஞாபகத்தில இன்னும் சினைச்சிட்டிருக்கு. கூடிய சீக்கிரம் கனைக்கத் தொடங்கும். ஆங் . . . போறதுவரைக்கும் போகட்டும்."

இவ்வளவு நேரமும் சாய்ந்த இடத்தில் நின்று அசையாமல் பேசிக்கொண்டிருந்தான். ரெயிலிலிருந்து ஆட்கள் இறங்கிவரத் தொடங்கினார்கள். மற்றொரு ரெயிலை பற்றிய அனௌன்ஸ்மென்ட் கேட்டது.

"நம்ம வண்டி."

சுகு மெல்ல அசைந்தான். திடீரென்று பாலன்ஸ் கிடைக்காதவன்போல் மதிலைப் பற்றினான். கையை நீட்டி சாய்த்து வைத்திருந்த ஒரு க்ரச்சசை எடுத்தான். அது கண்ணில்படாத இடத்தில் படியின் கீழ் நான் நின்றுகொண்டிருந்தேன். க்ரச்சசை எடுத்து இடது கக்கத்தில் வைத்தான். பிறகு வசதியாக நின்று வேட்டியை மடித்துக்கட்டினான். நான் திடுக்கிட்டேன். சுகுவின் இடது கால் மூட்டின் கீழ் எதுவுமில்லை.

"சுகு, என்ன இது . . ?" நான் அதிர்ச்சியுடன் கேட்டேன்.

நான் சூட்கேசைப் பற்றி சொல்றதுக்கான காரணம் இதுதான். எல்லாவனும் மணியன்பிள்ளையாகணும்னு இல்லையே."

"புரியலை."

"கர்நாடகாவில வெச்சு நடந்தது." கிரச்சஸில் ஊன்றி நின்று பாலன்ஸ் பார்த்துவிட்டுச் சொன்னான்: "திருடியதைப் பங்கு போட்டுட்டிருந்தோம். அதிகமா வேணும்னா கேட்டிருக்கலாம். பணத்தைச் சும்மாவே நான் கொடுத்திருக்கேன். பிள்ளைக்குத் தெரியுமே! இருந்த பிறகும் பணத்துக்காக."

"விஷயத்தைச் சொல்லு."

"ஒருத்தனை மயங்க வெச்சு அவன் கழுத்தில கிடந்த பத்து சவரன் செயினை உருவியெடுத்தேன். அவனோட தோல்பையை எடுத்து, செயினை அதில வெச்சேன். செயின் உருவுறதை யாரும் பார்க்காம மறைக்கிறதுக்கு இந்தப் பக்கம் ஒரு ஆள் வேணுமே? அதுக்காக ஒரு நண்பனும்கூட இருந்தான். அடுத்த ஸ்டாப்பில இறங்கணும். நகத்துக்கிடையில மிச்சமிருக்குற மருந்துப் பொடியை அடுத்த ஸ்டாப் வர்றதுக்குள்ள கழுவிடலாம்னு குழாய் பக்கம் லேசாக் குனிஞ்சதுதான் தெரியும். பிடிச்சு ஒரு தள்ளு. ஓடுற ரெயில்லேருந்து நான் வெளியே விழுந்தேன். எழுந்திருக்கும்போது இந்தக் கால் இல்லை.

வாளெடுக்குறவன் வாளால அழிவான். இதெல்லாம் நமக்குத் தெரியாத விஷயங்களா பிள்ளை. இருந்தாலும் ஓடிட்டே இருக்கோம். முட்டி நிக்கிறதுவரைக்கும் ஓட வேண்டியதுதான். பிள்ளையைப் பார்த்ததில உண்மையிலேயே ரொம்ப சந்தோசம்."

நாங்கள் கை கொடுத்துப் பிரிந்தோம்.

திரும்பி மூன்றோ நான்கோ எட்டு வைத்ததும் பின்னாலிருந்து அழைத்தான்:

"பிள்ளை . . ."

மேம்பாலத்திலிருந்து இறங்கி வரும் மக்கள் பிரவாகத்தினிடையே கரைந்து போய்க்கொண்டிருந்த சுகு சத்தமாகச் சொன்னான்: "என்னைத் தள்ளிவிட்டவன் யாருன்னு தெரியாதில்லையா? சசி . . . பார்ல வேலை பார்த்தானே அந்தச் சதிகாரன் . . ."

## 42 - ஓட்டம் பிள்ளை

ஒரு திருடனின் வசிப்பிடத்தில் மற்றொரு திருடன் வந்து ஆளாவதா? பொதுவாக இது சாத்தியமில்லை. மணியன் பிள்ளை திருடனாக வாழும் காலத்தில் வெளியே இருந்து எந்தத் திருடனும் வாழத்துங்கலில் வந்து பெரிய ஆளானதில்லை. சூரியனும் ஜெயனும்தான் நான் அறிந்தவரைக்கும் எங்கள் ஏரியாவிலுள்ள திருடன்கள். இவர்களில் யாருமே ஊருக்குத் தலைவேதனையாக இருந்ததில்லை. அய்யோ... கள்ளன் மணியன் வந்துடுவான், கள்ளன் சூரியன் வந்துடுவான் என்று வாழத்துங்கலில் யாரும் தூங்காமலிருந்தது கிடையாது. சூரியன் என் வீட்டின் அருகினூடே போய்த் திருடிய ஒரு சம்பவம் நிகழ்ந்ததுண்டு என்றாலும் பெரிய அளவில் எதுவுமில்லை. ஊருக்கொரு வெளிப்படையான திருடனிருப்பது பெரும்பாலும் நல்லதுதான்.

வாழ வழியில்லாத கௌரவமான பல வீடுகளின் முன், நான் மூட்டோடு பிடுங்கிய மரச்சீனிக் கிழங்கைக்கொண்டு வந்து வைத்திருக்கிறேன். குடிப்பதற்காக நாங்கள் கள்ளும் கோழியும் கொண்டு வருவோம். சாப்பிடுவதற்கு மரச்சீனிக் கிழங்கைத் தவிர வேறு உணவு கிடையாது. அன்றும் இன்றும் மரச்சீனிக் கிழங்கும் மீனும் என்னுடைய பலவீனமாக மாறிவிட்டது. அதன் சுவையை அறிந்தவன் நான். ஆகவே, ஏதாவது தோப்பிலிருந்து பறித்தக் கிழங்கில் மிச்சமிருந்தால் அதை வீணாக்க மாட்டேன். மரச்சீனிக் கிழங்குடன் இரண்டு ரூபாய்க்கான சாளை மீனுமிருந்தால் ஒரு குடும்பத்திற்கு நல்ல போஷாக்கான ஆகாரம் கிடைத்துவிடும். குழந்தைகள் அழாமல் கிடந்து உறங்கும். ஒரு வீட்டின் வறுமையை அங்குள்ள குழந்தைகளை வைத்து அறிந்துகொள்ள முடியும். சமச்சீரான உணவில்லையென்றால் குழந்தைகளின் முகம் வெளிறி வயிறு உப்பிப் போயிருக்கும். போதுமான தாய்ப்பால் இல்லாததால் இரவு முழுவதும் அழுதுகொண்டிருக்கும். தாய், தகப்பனைத் திட்டுவாள். அவன் அதைக் காதில் வாங்கிக்கொள்ள மாட்டான். அன்று கிடைத்ததையும் கடன் வாங்கியதையும் சேர்த்துக் குடித்து விட்டு நான்கு கால்களையும் பரப்பிக்கொண்டு தூங்குவான். ஓலைப் பாயில் குழந்தைகளும் தாயும் படுப்பதற்கும் இடம் போதாமலிருக்கும். போதையிலும் நினைவிலும் சிரத்தையே இல்லாத மனித வர்க்கம் ஆண்தான்.

கொஞ்சம் வளர்ந்தக் குழந்தைகளாக இருந்தால் வயிறு பசிக்கும்போது பிடிவாதம் காட்டும். தாய், அப்போதும் தகப்பனைத் திட்டுவாள். குழந்தைகளும் தாயும் சேர்ந்து சத்தமிடும்போது அவனது தூக்கம் கெடும். இயலாமையின் காரணமாக அவள் எதையேனும் சொல்லி வைப்பாள். இல்லாத காசை எப்படியாவது தேற்றி, தண்ணியடிப்பது எதையும் கண்டுகொள்ளாமல் இப்படி தன்னுணர்வு கெட்டுத் தூங்குவதற்காகத்தான். சிந்தித்துப் பார்த்தால் ஒன்றுமே பிடிபடாது. சிந்திக்காமலிருந்தால் பிடிபட வேண்டிய தேவையுமில்லை என்ற நிலையில்தான் குடி தினம்தோறும் அதிகரிக்கிறது. நிம்மதியாகக் கிடந்துத் தூங்கவும் அனுமதிக்காத மனைவியின் முதுகில் நான்கு உதை. பசியால் அழுவது குழந்தையல்லவா? அதற்கும் நான்கு. அழுதழுது ஏங்கியேங்கிக் கிடந்து தூங்கும்.

இப்படியாக எத்தனையெத்தனை அழுகுரல்களை இரவில் கேட்டிருக்கிறேன். பக்கத்திலொரு தோட்டத்தில் சிங்கப்பூர் வெள்ளை மரச்சீனிக்கிழங்கு விளைந்து கிடந்தது. எந்தக் காரணத்தாலும் அதை அவர்கள் பிடுங்கப் போவதில்லை. ஏனென்றால், பெரும்பாலான ஏழைகளும் தங்களுடைய வறுமையை மறைக்கவே முயற்சிக்கிறார்கள். அதிலிருந்து அவர்களல்ல, வேறு யார் பிடுங்கினாலும் அவமானம் அந்த வீட்டிலுள்ளவர்களுக்குத்தான். ஆகவே, யாராவது அதைப் பிடுங்கினால் உடனே ஒரு சண்டை உருவாகிவிடும். நான் எந்தக் காரணம் கொண்டும் ஏழைகள் வீட்டிலுள்ள மரச்சீனையைப் பிடுங்குவதில்லை. பதிலுக்கு அழுகைக்குரல் கேட்கும் வீடுகளைக் கவனித்து வைத்து கொஞ்சம் தொலைவிலுள்ள மரச்சீனித் தோட்டங்களிலிருந்து கிழங்கைப் பிடுங்கி சமையலறைப் பகுதியிலோ வேறு ஏதாவது மறைவிலோ வைப்பேன். வீட்டுக்காரர்கள் எழுந்திருக்கத் தாமதமானாலும் பக்கத்து வீட்டுக்காரர்கள் கண்டுவிடக்கூடாது. இதுபோல் பலமுறை வாழையிலையில் பார்சல் செய்த சிக்கன் கறியை வீடுகளில் கொண்டுபோய் வைத்திருக்கிறேன். செய்த சில நன்மைகளைப் பற்றிய மன மகிழ்ச்சி அப்போது உருவாகும். அன்று பசியால் அழுத குழந்தைகள் இன்று தொழிலாளர்களாகவும் அரசு ஊழியர்களாகவும் செல்வதைப் பார்க்கும்போது ஆச்சரியம் தோன்றும்.

இன் செய்த சர்ட்டும் சம்பளக் கணக்கும் பேசியபடியே திருவனந்தபுரம் ட்ரெயினில் இவர்கள் செல்வதைப் பார்க்கும்போது தமாஷாக இருக்கும். ட்ரெயினில் இதுபோன்றவர்களைக் கவனித்துப் பார்ப்பது நல்ல விஷயம். பிஎஸ்சி எழுதி ஒரு வேலையும் கிடைத்துவிட்டால் பிறகு, இவர்களது உலகமே தனிதான். இவர்களது விவாதம் மனிதர்களைப் பற்றியதாக

இருக்காது. சம்பளமும் இன்க்ரிமெண்டும் டிஏவும்தான். டிரெயினில் பிற பயணிகளுக்கு சவால் விடுவதுபோலிருக்கும் இவர் களது சம்பாஷணை. எங்களோட சுகவாழ்க்கையைக் கவனிச்சீங்களாடா என்பதுபோல். ஏழ்மையைப் பற்றிய நினைவே இல்லாத இவர்களது பாவனையைப் பார்க்கும்போது எனக்குத் தகப்பனின் கையிலிருந்து அடி வாங்கி அழுத குழந்தைகளின் நினைவு வரும். இரவில் வெளியே வந்த இவர்களுடைய தாய், திருடன் கொண்டுவந்து வைத்த கறியை ஊட்டியிருப்பாள். அந்தத் திருடனைக் கண்டால் இன்று இவர்களுக்கு ஏளனமாக இருக்கும். நெரிசலோ வேறு காரணங்களுக்காகவோ திருடன் ஒரு மூலையில் கூனிக்குறுகி அமர்ந்திருக்கும் போதுதான் இவர்களது சம்பளப் புலம்பல் நடக்கும். வாழ்க்கை நிலைகளை நினைத்தால் சிரிக்காமலிருக்க முடியுமா? சம்பளப் புலம்பல் முடிந்ததும் ஒருவேளை சொல்லக்கூடும்: "அதோ இருக்கிறானே அவனைத் தெரியுமா? ஒரு பேர்கேட்ட திருடன். பெரிய வில்லன். எங்க ஊர்க்காரன்தான்."

ஊருக்கொரு திருடனிருப்பதால் விளையும் நன்மைகள் ரசகரமானவை. நான் வாழத்துங்கல் காராளில் மாதவன்பிள்ளையின் டீக்கடையில் இருந்தேன். ரோட்டில் அப்போது சிவன்பிள்ளை போய்க்கொண்டிருந்தார். இவனைப் போல் ஜெயிலிலிருந்துத் தப்பிப்பவனை நான் கேள்விப்பட்டதே இல்லை. சிறு வாய்ப்புக் கிடைத்தால் போதும். உடனே ஜெயிலிருந்து தப்பித்துவிடுவான். ஒருமுறை, தண்டனை காலம் முடிந்து மறுநாள் விடுதலையாக இருந்தான். ஆகவே, அவனை அதிகமாகக் கண்காணிக்கவில்லை. ஆனால், அவன் அன்றைக்கே ஜெயிலிருந்து தப்பித்து விட்டான். ஜெயிலிருந்து தப்பித்தால் ஆறுமாதத் தண்டனை கிடைக்கும். கூடவே, உதையும். வார்டன்மார் மூக்கில் விரல்வைத்து விட்டார்கள். இப்படியான ஒரு மனோபாவம் அவர்களை அதிசயிக்க வைத்தது. அவர்கள் பரிதாபமாகக் கேட்டார்கள்: "சிவன்பிள்ளை உனக்கு ஒரு நாள்கூட காத்திருக்கக் கூடாதாடா?" சிவன்பிள்ளையின் பதில் அதை விடவும் ஆச்சரியமாக இருந்தது: "இருபத்து நாலு மணி நேரத்தோட அருமை தெரியாமப் பேசுறீங்க."

இப்படியாக, தப்பிப்பதில் கிடைக்கும் திரில் அனுபவத்திற்காகவே ஜெயிலுக்கு வரும் சிவன்பிள்ளை, புத்தன்சந்தை கேட்டினருகிலுள்ள ரோட்டில் கையிலொரு காக்கிப்பையுடன் நடந்துகொண்டிருக்கிறான். பெரிய பக்திமான். ஜெயிலிலுள்ள கோயிலில் விழுந்தடித்து சாமி கும்பிடுவான். ஒரு தடவையோ என்னமோ திருட்டுக் குற்றத்திற்காக ஜெயிலுக்கு வந்தவன்தான். தப்பித்துப் பிடிபட்டு மீண்டும் தப்பித்துப்

பிடிபட்டு என்று நீண்டகாலம் ஜெயிலில் கிடந்தான்.

நான் கூப்பிட்டேன்: "சிவன்பிள்ளை." சிவன் பிள்ளை திடுக்கிட்டான்.

"இங்கிருந்து ஒரு மூணு கிலோமீட்டர் சுற்றளவில் என்னுடைய பகுதி."

"இல்லை, நான் இப்படியே நடந்து பரலூருக்குப் போயிடுவேன். இங்க எங்கயுமே நிக்கமாட்டேன்."

சைக்கிளில் ஏற்றி என்னுடைய எல்லையைக் கடத்திவிட்டேன். போலீஸ் பிடித்தால் இரண்டு பேரும் உள்ளே. கூட்டுத் தொழிலுக்கு என்று நினைத்துவிடுவார்கள். போலீஸ் நினைத்தால் திருடன் உள்ளே போய்விட வேண்டியதுதான். சலாம் போட்டுவிட்டுப் போனார் ஓட்டம் பிள்ளை.

## **43 -** தேங்காய் பாபு

நாங்கள் ஐந்தாறுபேராக சீட்டு விளையாடிக் கொண்டிருந்தோம். சீட்டு கையில் ஏறமாட்டேன் என்கிறது. வெறுமையாக அப்படியே உட்கார்ந்திருந்தேன். அப்போது, தலைமீது ஒரு குரல் கேட்கிறது: "சாயா குடிக்க ஏதாவது தாங்க." நான் தலையுயர்த்திப் பார்த்தேன். இவனா? "டேய், சங்கரா, எப்போதிருந்து இந்த வேலை? திருடற வேலையிலிருந்து நின்னுட்டியா?"

அவன் திடுக்கிட்டு ஓடவா வேண்டாமா என்று யோசித்தான். நான் மற்றவர்களிடம் சொன்னேன்: "இவனைக் கவனிச்சி வெச்சுக்குங்க. இன்னிக்கு இவன விட்டுடலாம். இனி இங்கே கண்டா உடனே தூக்கிடுங்க." கீழே கிடந்த காசை எடுத்துக் கொடுத்தேன். "நேரா ரோட்டுக்குப் போய் அப்படியே வண்டியைக் கட்டிடு." அவன் கும்பிட்டுவிட்டுச் சென்றான். அப்படியாக, வாழத்துங்கல்காரர்களுக்கு மற்றொரு திருடனைப் பார்க்கும் அதிர்ஷ்டமும் வாய்த்தது.

மூன்றாவதொரு சம்பவம் நான் புத்தன்சந்தை ரெயில்வே கேட்டில் நிற்கும்போது நடந்தது. கேட்கீப்பர் இந்திரசேனன் என் நண்பன். அவனுடன் பேசிக்கொண்டிருக்கும்போது ஏற்கனவே தெரிந்த ஒரு முகம் அக்கம் பக்கம் பார்க்காமல் நேராக, ரெயில்வே ரோட்டில் நடந்து போகிறது. நான் கை தட்டி அழைத்தேன்.

"ஹலோ, ஒரு நிமிஷம் வந்துட்டுப்போங்க. என்னை ஞாபகமிருக்கா?"

"இல்லை."

"நல்லாப் பாருங்க. ஞாபகம் வருதான்னு."

என்னைக் கூர்ந்துப் பார்த்தான். விய்யூர் ஜெயிலில் ஏ பிளாக் வெல்ஃபேர் கமிட்டியில் நான் உறுப்பினராக இருந்தேன். கைதிகள் தங்கள் குறைகளை என்னிடம் சொல்ல வேண்டும். நான் போய் அதிகாரிகளிடம் சொல்வேன். இப்படி, ஸ்டார் கைதியாக இருந்த என்னைத் தெரியாது என்று சொன்னவன், சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு என் கைகளைப் பற்றியபடி

சொன்னான்:

"பார்த்ததுமே புரிஞ்சிடுச்சி. தப்பா நினைச்சுக்க வேண்டாம். இதுதான் உங்க ஊர்னு தெரியாம வந்துட்டேன். இப்பப் போயிடறேன்."

நான் என்னுடைய ஏரியாவை விளக்கிச் சொன்னேன். ஒவ்வொரு மூலையாகச் சென்று விளக்குத் தூண்களில் சிறுநீர் பெய்து நாய்கள் எல்லைகளை வரையறுப்பதுபோல்.

"சரி, அப்ப நான் வர்றேன்."

"வரவே வேண்டாம். அப்படியே போயிடு." நான் சிரித்தபடி சொன்னேன்.

இதெல்லாம் அல்பக் கேசுகள். ஆனால், பயங்கரமான ஒருத்தனைப் பிறகுதான் பார்த்தேன். தேங்காய் பாபு. கேரளத்தில் மிகச் சிலரே உள்ள வங்கிக் கொள்ளையர்களில் முன்னிலை வகிப்பவன் இந்தத் தேங்காய் பாபு. கனரா வங்கியின் தட்டாமலை கிளையைக் கொள்ளை கொள்வதின் பொருட்டு, அதன் அண்மைப் பிரதேசமாகிய வாழத்துங்கலில் முகாமிட்டிருந்தான். அங்குள்ள ஒரு லட்சம் வீடு காலனிப் பகுதியான காஞ்சிரங்காட்டு வயலில் ஒரு நண்பனுடன் தங்கியிருந்தான். அந்த ஏரியா நம்முடைய பிரிவின்கீழ் வராது. ஊர்க்காரர்களுக்கு அவனால் எந்தத் தொந்தரவுமில்லை. ஆள் நல்ல தரமானவனும்கூட. வங்கிகளைப் பிடிக்குமென்பதைத் தவிர புகைபிடிக்க மாட்டான். வேறு மாதிரியான எந்தக் குணக்கேடுகளும் கிடையாது. எந்த அலம்பலுமில்லாத அமைதி விரும்பி. ஏற்றுமானூரப்பனைத் திருடிய ஸ்டீஃபனின் மற்றொரு வகைமாதிரி. ஸ்டீஃபன் செஸ் விளையாடுவான். எனக்கு செஸ் விளையாட கற்றுத் தந்தவன் ஸ்டீஃபன்தான். நன்றாக விளையாடுவான். ஜெயிலில் ஸ்டீஃபனுடன் விளையாட வரிசை கட்டி நிற்பார்கள். திண்ணையில்தான் விளையாட்டு நடக்கும். செல்லுக்குள் யாரையும் அனுமதிக்க மாட்டான். நான் வந்தால் போர்டை மடித்துவிட்டு "வா, உள்ளே உட்காரலாம்" என்பான். அந்த அளவுக்கு நட்பு. பாபுவுக்கு கேளிக்கைகளுமில்லை, சிரிப்புமில்லை. குணத்துக்குப் பொருந்தாத ஒரு பெயரை போலீஸ்காரர்கள் இவனுக்குச் சூட்டியிருந்தார்கள். தேங்காய் பாபு.

கொல்லம் ஈஸ்ட் போலீஸ் ஸ்டேஷனில் நான் நிலைய சேவகனாக இருந்த காலம். பிடிபட்ட பொருட்களை நீதிமன்றத்திற்குக் கொண்டு போகும் போலீஸ்காரர்களுடன் நானும் செல்வேன். அதையெல்லாம் எடுக்கவும்

ஒழுங்குபடுத்தவும் பதவியில்லாத ஒருவன் வேண்டாமா? நீதிமன்றத்தில் போலீஸ் கஸ்டடியிலிருந்தான் பாபு. என்னைக் கண்டதும் பக்கத்தில் வந்து ஒரு முகவரியை நீட்டினான். "ஜாமீன்ல இறங்கணும். இவரைப் போய்ப் பார்த்தால் பத்தாயிரம் ரூபாய் தருவார்." சில சும்மா குமாஸ்தாக்கள் கழுகுகள்போல் பாபுவைச் சுற்றி நிற்பதைக் கண்டேன். இவர்களுக்கு வக்கீல்கள் இருக்க மாட்டார்கள். கொஞ்ச காலம் வக்கீல் குமாஸ்தாக்களாகவோ நீதிமன்ற ஊழியர்களாகவோ இருந்து நீதிமன்ற நடவடிக்கைகளைப் பற்றி நன்கு அறிந்திருப்பார்கள். ஐநூறோ ஆயிரமோ கொடுத்தால் ஜாமீன்தாரர்களை ஏற்பாடு செய்து கொடுப்பார்கள். உடனடியாக இவர்களுக்குப் பணம் கொடுக்க வேண்டும். இதற்காகவே பாபு என் உதவியை நாடுகிறான்.

நான் சொன்னேன்: "இதற்கெல்லாம் நான் இல்லை. சாயாவோ வேற ஏதாவது பொருட்களோ வேணும்னா சொல்லு, வாங்கித் தர்றேன்."

நான் வாங்கிக் கொடுத்தால் போலீஸ்காரர்கள் எதுவும் சொல்ல மாட்டார்கள். மற்றபடி இதை அனுமதிக்க மாட்டார்கள். உணவில் விஷம் கலந்திருந்து பிரதிக்கு ஏதாவது நிகழ்ந்தால் போலீஸ்காரர்களின் வேலைக்கு உலை வைத்தது போலாகி விடும். அவன் தேவையில்லை என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான்.

பின்பொரு நாள், நான் ஸ்டேஷனுக்கு போய்க்கொண்டிருந்தேன். வீட்டிலிருந்து நூறு மீட்டர் நடந்தால் ரெயில்வே கிராசிங். அங்கிருந்து இருநூறு மீட்டர் நடந்தால் புத்தன்சந்தை ஜங்ஷன் பஸ் ஸ்டாப். எதிரில் ஒருவன். எங்கேயோ பார்த்த ஞாபகம். கூர்ந்து பார்த்தேன். மொட்டைத் தலையில் கர்சீப் கட்டியிருந்தான். ஆள் யாரென்று பிடிபட்டதும் கூப்பிட்டேன்: "ஸ் . . . ஸ் . . . கொஞ்சம் நில்லு."

அவன் உடனே நின்று பாக்கெட்டிலிருந்து சில இருபது ரூபாய் ஐம்பது ரூபாய் நோட்டுகளை எடுத்து நீட்டினான்.

நான் கேட்டேன்: "என்ன இது?"

"நான் உன்னைப் பார்த்துட்டுத்தான் பார்க்காததுபோல போறேன். என்னை இங்க பார்த்ததை யார்கிட்டயும் சொல்லிடாதே."

"வழியில போறவன் பேரையெல்லாம் போலீஸ் ஸ்டேஷனில போய்ச் சொல்றது என் வேலையில்லை. எனக்கு அங்கே வேறு நிறைய

வேலைகளிருக்கு. அதைச் செய்துதான் நான் உயிர் வாழுறேன். மற்றவங்கள காட்டிக்கொடுத்தல்ல."

"அது எனக்கும் தெரியும். இதில முன்னூறு ரூபாயிருக்கு. என்னுடைய ஒரு அன்புக்காக."

நான் சொன்னேன்: "காட்டிக்கொடுக்கறவனா இருந்தா பணம் வாங்கினாலும் காட்டிக்கொடுப்பான். இன்னிக்கில்லேன்னா என்னிக்காவதொரு நாள். இதை ஞாபகத்தில வெச்சுக்க" என்று சொல்லிவிட்டு அதிலிருந்து நூறு ரூபாய் எடுத்தேன்:

"நானும் அன்புக்காக இதை எடுத்துக்குறேன். லஞ்சமாக இல்லை. என் கையில காசில்லைங்குறதுனால. ஆனா, ஊருக்குள்ள எந்தத் தொந்தரவும் பண்ணிடாதே."

"என்னுடைய வேலை என்னங்குறது மாப்ளைக்குத் தெரியாதா?"

அப்போதைக்குப் பிரிந்தோம். பிறகுதான் அறிந்தேன்.

பாபுவின் நண்பனொருவன் எங்கள் ஊரின் ரெயில்வே கேட்டின் மேற்குப் பகுதியிலுள்ள ஐம்பது சென்ட் காலனியில் வசித்து வந்தான். அவனது பாதுகாப்பில் தங்கியிருந்து ஒரு ஆபரேஷனுக்குத் தயாராகிக் கொண்டிருந்தான் பாபு. புத்தன் சந்தையிலிருந்து மூன்று கிலோ மீட்டர் வடக்கிலுள்ள தட்டாமலை கனரா வங்கிதான் இலக்கு. இவனது ஆபரேஷன், கியாஸ் கட்டர் உதவியுடன் நடக்கும். எனது ஆயுதம் பாக்கெட் கத்தியென்றால் இவனுடையது கியாஸ் கட்டர். இது இல்லையென்றால் கையிழந்தவன் போலாகி விடுவான். பாபுவின் மிகப் பெரிய எதிரி கோத்ரெஜ் கம்பெனிதான். அவர்களது லாக்கர்களையும் இரும்புக் கதவுகளையும்தான் பாபு கியாஸ் கட்டர் உதவியுடன் எதிர்கொள்ள வேண்டும். ஆனால், கியாசுக்கு அப்போது பெரும் பஞ்சம். கஷ்ட காலமாக, ஆபரேஷனுக்கு சாதகமான நாட்களில் கியாஸ் கிடைக்கவில்லை. திருடனுக்கு ஏற்படுகிற இச்சாபங்கம் தீவிரமானது. பிறகு அவன் அந்தப் பக்கமே போக மாட்டான். அப்படியாக பாபு அதிலிருந்துப் பின் வாங்கி புதிய மேய்ச்சல் களத்தைத் தேட ஆரம்பித்தான்.

## 44 - மைசூர் (வரலாற்றுச் சுருக்கம்)

1981, கர்நாடகா. மிகச் சரியாக கால் நூற்றாண்டுகளுக்கு முன் . . .

மைசூரில் நஞ்சன்கோடு தாலுக்கில் எடயாளம் (ஹெடியாள) கிராமம். சலிம் பாஷா என்றொரு இளைஞன் இந்தக் கிராமத்தின் சமீப கால விவாதப் புருஷன். முப்பத்தி ரெண்டு வயதுதானிருக்கும். மூன்று வருடங்களுக்கு முன் மனைவியும் கைக்குழந்தையுமாக கதியற்றுப்போய் வந்திறங்கியவன். மலையாளம் பேசுபவன்.

இன்று அவன் கிராமத்தில் கண்கண்ட தெய்வம். 117 ஏக்கர் நிலத்தை குத்தகைக்கு எடுத்து புகையிலை விவசாயம் செய்து வருபவன். நூற்றுக்கணக்கான ஏக்கரில் விளையும் புகையிலையை வாங்கிச் சேகரிக்கிறான். அனைத்தையும் கல்கத்தாவிலுள்ள ஐடிசி சிகரெட் கம்பெனி கொள்முதல் செய்கிறது. ஆறு மாதத்திற்கொருமுறை கம்பெனி பெட்டிக் கணக்கிலான விலையில்லா வில்ஸ் சிகரெட் அனுப்பிக் கொடுக்கும். ஆண்டு முழுவதும் புகைப்பது அந்த சிகரெட்தான்.

மெலிந்த உயரம் குறைந்த இளைஞன். பணியாட்களுடன் சேர்ந்து எந்த வேலையும் செய்வான். கழிந்த சீஸனில் 36 லட்சம் ரூபாய்க்கான புகையிலையை சலிம் பாஷா ஏற்றுமதி செய்திருக்கிறான். புகையிலையை விவசாயிகளிடமிருந்து வாங்கி சேகரிக்கவும் ஏற்றுமதி செய்வதற்குமான அனுமதி அவனுக்கிருக்கிறது.

பாஷாவின் நிலத்தில் வேலைக்குச் செல்வதற்குக் கூலியாட்கள் போட்டி போடுவார்கள். மற்ற ஜமீன்கள் கொடுப்பதை விடவும் அதிகமாகக் கூலி கொடுப்பான். தேவைக்கு முன்பணம் கேட்டாலும் கிடைக்கும். விடுமுறை கிடைக்கும். ஓய்வெடுக்கும் போது ஒரு பங்கு, விலையில்லா பொரியும் அதற்கான வெல்லமும். வேறெங்கும் இதைக் கேள்விப்படவும் முடியாது. வேலை செய்யும்போது பிற இடங்களில் அனுபவிப்பதுபோன்ற மேஸ்திரிகளின் ஆதிக்கமில்லை. உதாரணத்திற்கொரு சம்பவம்: குழந்தைக்கு உடல்நிலை சரியில்லை என்பதால் சற்றுச் சீக்கிரமாகப் போக அனுமதி கேட்கிறாள் ஒரு பெண். எல்லா இடங்களிலும் நடப்பதுபோல் அவளைத் திட்டிய மேஸ்திரி அடுத்த நொடியில் அடிபட்டுக் கீழே

விழுகிறான். பின்னால் சலிம்பாஷா. கூடவே, கண்டிப்புடனான ஒரு தாக்கீது: வேலை பார்ப்பவர்களைக் குறிப்பாக, பெண்களை மரியாதையுடன் நடத்த வேண்டும்.

வேலை செய்யும் பெண்களுக்கு ஆச்சரியம். உடல் மற்றும் மனரீதியான எல்லா அக்கிரமங்களையும் சகித்துக்கொண்டுதான் அவர்கள் வேலை பார்த்து வருகிறார்கள். சலிம் பாஷா அவர்களுக்குத் தெய்வமாகத் தோன்றுவதற்கு வேறு காரணங்கள் வேண்டியதில்லை. வேலை பார்ப்பவர்களின் உற்சாகம் லாபத்தை அதிகரித்தது. வெறும் பத்தாயிரம் ரூபாய் செலவில் ஒன்றரை லட்சம் ரூபாய் லாபமென்ற அளவில் வியாபாரம் வளர்ந்தது. சலிம் பாஷாவின் எல்லாச் செயல்பாடுகளுக்கும் மேற் பார்வையாளனாக எம்ஏ படித்த முகம்மது யூஸஃப் எனும் இளைஞனிருந்தான். அதே ஊரைச் சேர்ந்தவன். அவன் தொடுவதெல்லாம் பொன்னாக மாறியது.

நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக சலிம் பாஷா வளர்ந்துகொண்டிருந்தான். நஞ்சன்கோடிலுள்ள எஸ்.ஆர். சுந்தர்ராஜ் கௌடாவின் பெட்ரோல் பம்ப் விலைக்குப் போவதாக அறிந்த பாஷா அதை வாங்குவதற்குத் தயாரானான். ஐம்பது லட்சத்திற்கு இரண்டு பேர் உத்தரவாதமும் இருபத்தைந்து லட்சம் ரொக்கமாகவும் கொடுக்க வேண்டும். பம்பை தன் பெயரில் மாற்றுவதற்கான பத்திரங்களும் பணமும் தயார். ஒப்பந்தப் பத்திரங்கள் கை மாறின.

சலிம் பாஷா எனும் சுல்தான் புதிய சாம்ராஜ்யங்களைக் கட்டியெழுப்பினான். இரண்டு ஓட்டல்களும் இரண்டு மெஸ்களும் லாபகரமாக நடந்துகொண்டிருந்தன. ஒரு சூப்பர் மார்க்கெட்டிற்கான பணிகள் வேறு. மைசூரிலிருந்து வரவழைத்த ஆட்கள் இதற்கான அலுமினியம் ஃபேப்ரி கேஷனைச் செய்து வந்தார்கள். குஜராத் வியாபாரிகளுக்கு பத்து லட்சம் ரூபாய் முன்பணம் கொடுக்கப்பட்டிருந்தது. வருடமொன்றுக்கு முப்பது லட்சம் ரூபாய்க்கான பொருட்கள் அனுப்பி வைக்கப்பட வேண்டுமென்பது ஒப்பந்தம். பாஷாவின் கையில் கோடிகள் புரண்டுகொண்டிருந்தன.

இதனிடையே கர்நாடகாவில் சட்டசபைக்கான பொதுத்தேர்தல் வந்தது. கர்நாடகாவின் ஆளும் கட்சியான காங்கிரஸ் அரசுமீது மக்களுக்கு வெறுப்புத் தோன்ற ஆரம்பித்திருந்தது. ஹெக்டேவின் தலைமையிலான ஜனதா கட்சி வலுப்பெற்று வந்தது. குத்தகை முதலாளிகள் காங்கிரஸ் பக்கமிருந்தனர். இந்நிலையில் இதோ, ஒரு மக்களின் முதலாளி.

அவர்களுக்கான ஒரு வேட்பாளர் தேவை. கிராம அமைப்பின் தீர்மானம்தான் இங்கே முக்கியம். இருபத்தேழாயிரம் வாக்காளர்கள் மட்டுமே உள்ள சிறு தொகுதி இது. பஞ்சாயத்து முடிவின்படியே எதுவும் நடக்கும். அவர்கள் முடிவு செய்தார்கள். இம்முறை ஜனதா கட்சி வேட்பாளரைத் தேர்வு செய்யலாம். வேட்பாளர் வேறு யாருமல்ல, சலிம் பாஷாதான். அங்குள்ள ஜமாஅத் செகரட்டரியும் புகையிலை விவசாயத்தில் முதலிடத்திலுள்ள மணிச்செட்டியும் பாஷாவைப் பார்ப்பதற்காக வந்தனர். சலிம் பாஷா அங்கே பிறந்து வளர்ந்ததற்கான சான்று தேவை. அதுவும் ஏற்பாடு செய்யப்பட்டுவிட்டது. வேட்பு மனுத்தாக்கல் செய்வதற்கான அனைத்திலும் சலிம் பாஷா கையெழுத்திட்டு வைத்திருந்தான். இனி தாக்கல் செய்ய வேண்டியதுதான் பாக்கி. எடயாளத்தின் மிகப் பெரும் நிலக்கிழாரான படகர்புரம் சௌக்காரும் இதை அறிந்தார்.

சலிம் பாஷா பிறப்பால் இந்து. ஆகவே, அவர்களுடைய ஓட்டுகளும் கிடைக்கும். ஐம்பது சதவிகித முஸ்லிம் மக்களின் ஓட்டுகளும் கிடைக்கும். பஞ்சாயத்தின் ஆதரவுமிருக்கிறது. வெற்றி உறுதி செய்யப்பட்டு விட்ட ஒன்று. சௌக்காரின் மகன் லிங்கராஜ் சலிம் பாஷாவின் நண்பன். சலிம் பாஷா, லிங்கராஜுவுடன்போய் சௌக்காரைப் பார்த்தான். சௌக்கார் காங்கிரஸ்காரர். இவருடைய ஆள்தான் இங்கே வெற்றி பெற வேண்டும். ஆகவே, காங்கிரஸ் வேட்பாளராகப் போட்டியிடும்படி சௌக்கார் சொன்னார். சலிம் பாஷா அன்பாக மறுத்தான். தனது அணுகுமுறையை மாற்றிய சௌக்கார், தன்னுடன் பெங்களூருவிற்கு வரும்படி அழைத்தார். காங்கிரஸ் கொடி பறக்கும் கார் வந்தது. அதில் முதலமைச்சர் குண்டுராவைச் சந்திக்க பெங்களூருவில் அவரது பண்ணையில்லத்திற்குப் புறப்பட்டான் சலிம் பாஷா.

சலிம் பாஷாவை, சௌக்கார் அறிமுகம் செய்து வைத்தார். குண்டுராவ் சொன்னார்: "இந்தியாவுக்கு சுதந்திரம் பெற்றுத் தந்த காங்கிரஸ் பேரியக்கம், மிகப் பெரிய அரசியல் பாரம்பரியமுள்ள கட்சி. எங்களோடு தாங்களும் கை கோர்க்க வேண்டும்."

பாஷா சொன்னான்: "மக்களுக்கான எந்த விஷயத்திலும் நான் பங்குபெற ஆர்வமாகவே இருக்கேன். ஆனா, நாமினேஷன்ல கையொப்பமிட்டுக் கொடுத்துட்டனே." குண்டுராவ் கேட்டார்: "சரி, வெற்றியடைஞ்ச பிறகு, எங்களுக்கு ஒரு எம்எல்ஏவோட தேவை ஏற்பட்டால் உதவி செய்ய முடியுமா?"

"சந்தேகமில்லாமல்."

"சௌக்காருடைய விருப்பங்களை நிறைவேற்ற முடியுமா?"

"கண்டிப்பாக." சலிம்பாஷா ஒப்புக்கொண்டான்.

"சரி, நம்பலாமா?" குண்டுராவ் சௌக்காரைப் பார்த்துக் கேட்டார். சௌக்கார் தன் மகனைப் பார்த்தார். லிங்கராஜ் சொன்னான்:

"சலிம்பாஷா சொன்ன சொல் தவற மாட்டார். இது உறுதி."

குண்டுராவிற்குத் திருப்தி. அவரது அடர்ந்தப் புருவங்கள் விரிந்தன. புன்சிரிப்புடன் சொன்னார்: "அடுத்த வருடம் இந்தத் தேதியில் இங்க வாங்க. நான் இருப்பேன்."

சலிம்பாஷா மாண்புமிகு முதல்வருடன் விமான நிலையத்துக்குச் சென்றான். ஒரு ராணுவ முகாம். ஹெலிகாப்டர் வந்தது. முதலும் கடைசியுமாக சலிம்பாஷா அந்தப் பறக்கும் வாகனத்தில் ஏறினான். ஒன்றேகால் மணிநேரம் பறந்தான். முன்புற இருக்கையில் பைலட். பின்னால் குண்டுராவும், சலிம்பாஷாவும், உருது பேசும் இரண்டு அழகிய இளம் யுவதிகளும், குண்டுராவின் பிஏவும். அங்கிருந்து காரில் குன்னூர் ஐபிக்கு. அங்கே விதவிதமான உணவுவகைகள். சலிம்பாஷா அதுவரைப் பார்த்திராத உணவுகள். "கொஞ்சம் ரெஸ்டெடுங்க. ஒரு மணி நேரத்தில வந்துடறேன்" என்றார் குண்டுராவ். "நான் அந்த நேரத்தில ஊட்டியைச் சுற்றிப் பார்த்திடுறேன்" என்றான் சலிம்பாஷா. "அதைப் பின்னால பாத்துக்கலாமே" என்றார் முதல்வர். யுவதிகள் சிரித்தார்கள். "சரி, உங்க விருப்பம்போல செய்யுங்க" என்றார் அவர்.

ஒன்றரை மணி நேரத்திற்குப் பிறகு குண்டுராவ் வந்து தான் அவசரமாக டெல்லிக்குப் போகவிருப்பதாகச் சொல்லிவிட்டு, எல்லாம் சௌக்கார் சொல்வதுபோல் கேட்க வேண்டும் என்றார். சரியென்றான் சலிம்பாஷா. காரில் திரும்பக் கொண்டுபோய்விடச் சொன்னபோது, வேண்டாம் பஸ் ஸ்டாண்டில் விட்டால் போதுமென்று சொல்லிவிட்டு குன்னூரிலிருந்துத் திரும்பினான்.

காங்கிரஸ்காரரான படகர்புரம் சௌக்கார், சலிம்பாஷாவை குண்டுராவுவைப் பார்க்க அழைத்துப்போன விஷயத்தை மணிச்செட்டி அறிந்தார். அவருக்குப் பிடிவாதம் வலுத்தது. "அவன் குண்டுராவுவைப்

பார்க்க அழைச்சிட்டுப் போனானா? அப்படின்னா நமக்கு உடனே ஹெக்டேவைப் பார்க்கணும். பெங்களூருக்குப் போவோம்" என்றார். மணிக்கு ஹெக்டேவைத் தெரியும். வியாபாரப் பிரமுகர் என்பதால் கட்சியிலுள்ள பிற முக்கியஸ்தர்களுடனும் நல்ல தொடர்பிருந்தது.

அவர்கள் பெங்களூருவில் மகாவீர் லாட்ஜில் தங்கினார்கள். ஹெக்டேவின் வீடு எஸ்வந்த்புரயிலிருக்கிறது. அவரைப் பார்ப்பதற்கு நிறைய பேர் காத்து நின்றிருந்தார்கள். நஞ்சன்கோடு மணி, வேட்பாளருடன் வந்திருப்பதாகச் சொல்லச் சொன்னார். ஒன்றிரண்டு பேரை அழைத்த பிறகு, இவர்கள் அழைக்கப்பட்டார்கள். முதலில் வந்தவர்களுக்கு முன்னுரிமை என்ற முறை வைத்து அழைக்கப்படவில்லை. தகுதியை முன் வைத்து அழைக்கிறார்கள். தகுதி குறைந்த நிறைய பேர் இன்னும் காத்திருக்கிறார்கள்.

ஹெக்டே சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்தார். கையில்லாத ஒரு பனியன். இளம் மஞ்சள் நிறத்தில் வேட்டியுடுத்திருந்தார். அவர்கள் உள்ளே நுழையும்போது ஒருவர் பணத்தை மேஜைக்குள் தள்ளுகிறார். அவ்வளவும் நூறு ரூபாய் கட்டுகள். தேர்தல் நிதியாக இருக்கலாம். சலிம்பாஷா மனதிற்குள் நினைத்துக்கொண்டான். என்னுடைய சுயரூபத்தில் வராமல் வேட்பாளராக வந்தது உங்கள் அதிர்ஷ்டம்.

மணி அறிமுகம் செய்து வைத்தார்: "இவர்தான் நம்முடைய வேட்பாளர். முஸ்லிம். பிரச்சாரத்திற்கு வரணும்."

"தேதியெல்லாம் முடிவு செய்துட்டுக் கூப்பிடுங்க. அந்த வழியாக வரும்போது வர்றேன். செகரட்டரிகிட்ட கேட்டு வெச்சுக்குங்க."

சலிம்பாஷாவிடம் கேட்டார்: "கர்நாடகாதானா?"

"இல்லை, மலையாளம்."

மணி திருத்தினார்: "பூர்வீகம்தான் கேரளா. நஞ்சன்கோடு பகுதியில நிறைய மலையாளிகள் வாழுறாங்க."

"தெரியும்." ஹெக்டே சொன்னார்.

சலிம்பாஷாவிடம் ஹெக்டே ஒரே ஒரு வார்த்தைதான் பேசினார். புறப்படும்போது இரண்டு பேர்களிடமும் பொதுவாக "வெற்றி பெறணும். பெற்றே ஆகணும்" என்றார். சந்திப்பு கால் மணி நேரம்தான் நீடித்தது.

இருக்கச் சொன்னார். அவர்கள் இருக்கவில்லை.

இப்படியாக சலிம்பாஷா ஜனதா கட்சி வேட்பாளரானான். மறுநாள் வேட்பு மனுத்தாக்கல் செய்ய வேண்டும். ஜனதா கட்சி ஆட்சிக்கு வந்தால் சிறுபான்மை இனத்தைச் சேர்ந்த சலிம்பாஷாவிற்கு அமைச்சராகும் வாய்ப்பிருப்பதாக மக்கள் பேசிக்கொண்டார்கள்.

அன்றொரு நாள் சலிம்பாஷா வீட்டிலிருந்து இறங்கினான். திடீரென்று பின்னாலிருந்து ஒரு குரல் கேட்டது: "மணியன்பிள்ளை." தன்னையறியாமல் திரும்பிப் பார்த்தான் சலிம்பாஷா.

இந்தப் பார்வையில் மணியன்பிள்ளையாகிய நான் சலிம்பாஷா என்ற பெயரில் கட்டியெழுப்பிய வியாபார சாம்ராஜ்யம் தகர்ந்து விழுந்தது. ஒரு ஜீப்பில் யாரோ ஆறுபேர்கள். கறுப்புக் கைலியும் சட்டையுமணிந்த அய்யப்ப பக்தர்கள். கூர்ந்துப் பார்த்தபோதுதான் யாரென்பது புரிந்தது. திருவனந்தபுரம் மியூசியம் எஸ்ஐயாக பின்பு பதவி உயர்வு பெற்ற ராதா கிருஷ்ணன்பிள்ளை, பூஜப்புரை சிஐ நந்தகுமாரன், தலைமைக் காவலராக ஓய்வு பெற்ற அப்புக்குட்டன்பிள்ளை போன்ற ஏற்கனவே அறிமுகமானவர்கள்.

சலிம்பாஷாவின் எல்லாக் கிரீடங்களும் தரையில் விழுந்துடைந்தன. மிச்சமானது வெறும் மணியன்பிள்ளை மட்டும். இங்கே சலிம்பாஷா கண்கண்ட தெய்வம். ஊரிலோ, மணியன்பிள்ளை திருடன். கேரளத்தின் பிரபல திருடர்கள் பட்டியலில் முதலிடத்தை வகிப்பவன். என்ன சொல்வதென்று ஒரு நிமிடம் எதுவும் புரியவில்லை.

சிஐயை விலக்கி நிறுத்திச் சொன்னேன்: "ஒரு பத்து நாள் அவகாசம் தருவீங்களா? நானே வந்து ஆஜராயிடுறேன். மணியன்பிள்ளை சொன்ன வார்த்தை தவற மாட்டான். என் கையில இப்போ மூணு லட்ச ரூபாய் ரெடி கேஷ் இருக்கு."

தேர்தலுக்கு இன்னும் பதினொரு நாட்களிருக்கின்றன. ஆய்வுகள் முடிந்து வேட்பு மனுத்தாக்கல் ஏற்கப்படும். தன்னை சலிம்பாஷாவாக அரசியல் சட்டம் அங்கீகரிக்கும். பிறகு, மணியன்பிள்ளையை நிரூபிப்பது அவ்வளவு எளிதான காரியமல்ல. அதற்குள் அரசியல் செல்வாக்கைப் பயன்படுத்திக்கொள்ளலாம் என்று திட்டமிட்டேன். சிஐ நந்தகுமாரன் உடன்பட மறுத்துவிட்டார்:

"மூணு லட்சமல்ல, நீ முப்பது லட்சம் தர்றதாச் சொன்னாலும் நடக்காது மணியன்பிள்ளை. இப்போ நீ கூட வந்தே ஆகணும்."

போலீஸ் ஜீப்பில் என் மனைவியின் சகோதரனுமிருந்தான். போலீஸ் தேடி வருவதற்கான காரணம் இவன்தான். எடயாளத்தில் கொஞ்ச நாட்கள் என்னுடனிருந்துவிட்டு ஊருக்குத் திரும்பியவனை போலீஸ் தூக்கிவிட்டது.

சலிம்பாஷாவாக இருக்கும்போது இரண்டு மாதத்திற்கொரு முறை ஊருக்குச் சென்று அம்மாவைப் பார்ப்பேன். இதில் மனைவிக்கொரு ஆதங்கம். "நீங்க ஊருக்குப் போய் உங்களோட சொந்த பந்தங்களை மட்டும் பார்த்தாப் போதுமா? என் சொந்தக்காரங்களையும் பார்த்துட்டு வாங்க."

முதலில் வேண்டாமென்று சொல்லிச் சமாளித்து வந்தேன். நிர்ப்பந்தம் அதிகமாகவே ஒரு பலவீன நிமிடத்தில் ஏற்றேன். அதுதான் வினை. வள்ளக்கடவு, சுலைமான் தெருவுக்கு வந்ததும் மனைவியின் சொந்தபந்தங்களும் அயலார்களும் வந்து வளைத்துக்கொண்டனர்.

பிரபல திருடனென்ற விஷயம் அவர்களுக்கும் தெரியும். மூன்று நான்கு வருடங்களாக பெண்ணைப் பற்றிய எந்தத் தகவலுமில்லை. அவளை மும்பையில் எங்காவது கொண்டுபோய் விற்றிருப்பான் என்று முடிவு செய்திருந்தார்கள். அவளை எங்களிடம் காட்டாமல் சுலைமான் தெருவை விட்டு நீ அசைய முடியாதென்று சொல்லிவிட்டார்கள். கடைசியில் மனைவியின் உம்மாவிடம் சொன்னேன்:

"என்னை நீங்கள் பிடித்து வைத்திருக்கும் ஒவ்வொரு நிமிடமும் உங்கள் மகளின் வாழ்க்கைதான் தகர்ந்துகொண்டிருக்கிறது. அவள் என்னுடன் சந்தோசமாக வாழ்ந்துகொண்டிருக்கிறாள். நம்புங்கள்."

மக்கள் ஏற்பார்களா? அதற்கென்ன ஆதாரம்? திருடிய பணத்தின்மீது கட்டியெழுப்பிய சாம்ராஜ்யத்தைப் பற்றி வாய் திறக்க முடியுமா?

கடைசியில் அவர்களுடன் ஒரு உடன்பாடு செய்துகொண்டேன்:

"மச்சினன்பிள்ளையைக் கூட அனுப்புங்க. அவன் வந்துப் பார்க்கட்டும். தன்னுடைய சகோதரி எப்படி வாழ்கிறாளென்கிறதை."

மக்கள் ஒருவழியாக உடன்பட்டார்கள். மச்சினனுடன் எடயாளத்துக்கு

வந்தேன். அவன் கண் பிதுங்கி நின்றான். எடயாளம் சுல்த்தானாக செங்கோல் செலுத்தி ஆட்சி செய்துகொண்டிருக்கிறார் மச்சான். சகோதரி ராஜபோகத்துடன் வாழ்கிறாள். சொந்த வீடு. நிறைய வேலைக்காரிகள். மச்சானைத் தொழுது நிற்காதவர் யாருமில்லை. மச்சினன்பிள்ளைக்கு செட்டப் மிகவும் பிடித்துப்போனது. எவ்வளவு சொல்லியும் ஊருக்குத் திரும்பாமல் அங்கேயே இருந்துவிட்டான்.

கொஞ்ச நாட்களுக்குப் பிறகு ஊருக்குப் போக வேண்டும்போலிருந்தது. உம்மாவைப் பார்க்க வேண்டும். மச்சானின் சாம்ராஜ்யத்தைப் பற்றி ஊரில் பிரஸ்தாபிக்க வேண்டும். எனக்கு அப்போதே புரிந்துவிட்டது. இது, சிக்கலை உருவாக்குமென்று.

ஊரிலோ பிரச்சினை மிகவும் முற்றிப்போயிருந்தது. மணியன்பிள்ளை ஒரு பெண்ணைக் கொண்டு போய்விட்டான். அவளை என்ன செய்தான் என்றோ யாரிடம் விற்றான் என்றோ தெரியாத நிலையில் சகோதரியைத் தேடிச் சென்ற மச்சினனையும் காணோம். யாரோ போலீசுக்குத் தகவல் கொடுத்தார்கள். பையனோ மணியன்பிள்ளையோ வந்தால் உடனே போலீசுக்குத் தகவல் சொல்லும்படி அவர்கள் அயலார்களிடம் சொல்லி வைத்திருந்தார்கள். நான் ஏற்கனவே இதைப் பற்றி யோசித்ததுண்டு. ஆகவே, ஊருக்குப் போகும் மச்சினனிடம் சொன்னேன்:

"காலையில அஞ்சு மணிக்கு நீ திருவனந்தபுரத்தில இறங்குவே. போனதும் முதல் வேலையா சிட்டியில இருக்குற மச்சான் வீட்டுக்குப் போயி என்னோட ஃபோன் நம்பரை அவர்கிட்ட கொடுத்துடு. ஏதாவது காரணத்துக்காக உன்னை போலீஸ் பிடிக்கிறதா இருந்தா உடனே எனக்கு ஃபோன் பண்ணித் தகவல் கொடுக்கச் சொல்லு. நான் தப்பிச்சுக்குறேன்."

***

ஊருக்குப்போனதும் நான் சொன்னதையெல்லாம் அவன் மறந்துவிட்டான். மச்சான் சுல்த்தானாக வாழ்வதைப் பற்றி உம்மாவிடமும் சகோதரியிடமும் சொல்கிற ஆர்வம். சிட்டியிலுள்ள மச்சானிடம் சொல்ல மறந்துவிட்டான்.

சிஐயும் போலீசும் பின்னால் நின்று மணியன்பிள்ளை என்று கூப்பிட்ட பிறகுதான் எல்லாமே தெரிய வந்தது.

போலீசாரிடம் ஒரேஒரு நிபந்தனையை மட்டுமே முன் வைத்தேன்.

மச்சினனை வெளியே விடுங்கள். மனைவியும் குழந்தையும் ஊருக்கு வர வேண்டுமென்பதால் அவர்களுக்குத் துணையாக. இன்னொன்று: நான் திருடனென்பதை இங்குள்ள மக்கள் அறிவதற்கு இடம் தரக்கூடாது. போலீசார் இதை ஏற்றார்கள்.

சலிம்பாஷா என்ற சுல்த்தான் அஸ்தமித்தான். வெறுமொரு திருடனாக மணியன்பிள்ளை போலீஸ் ஜீப்பில் அந்த மலைப்பகுதியிலிருந்து இறங்கினான். 1983இல் மணியன்பிள்ளையின் பேரிலுள்ள 98 லட்சம் ரூபாய் மதிப்புள்ள சொத்துக்களை போலீசார் கைப்பற்றினார்கள். இது, கிளார்க் உத்தியோகம் பார்க்கும் ஒருவனுக்குச் சம்பளமாகக் கையில் ஐநூறு ரூபாய்கூட கிடைக்காத காலம் என்பதை நினைவில் வைத்திருங்கள். கணக்கில் இல்லாததும் வெளியிலிருந்து வரவேண்டியதுமான தொகை மட்டுமே ஒரு கோடியைத் தாண்டும். எல்லா சாம்ராஜ்யங்களையும் உதறிவிட்டு வெறும் கையோடு போலீஸ் என்னைக் கேரளத்திற்குக்கொண்டு வந்தது.

## **45 -** தொடக்கம்

1978இன் இறுதிக் கட்டம். நானும் மனைவியும் கைக்குழந்தையுடன் ஊரைவிட்டுப் போய்விடுவதென்று முடிவு செய்தோம். இடவாவில் திருடிய 92 சவரன் ஆபரணங்களும் 22,000 ரூபாயும் கையிருப்பு. நீண்ட நாட்களாக ஆசைப்பட்ட விஷயம். நல்லதொரு திருட்டை நடத்தி, அதை முதலீடாக வைத்து ஏதாவது வியாபாரம் செய்துப் பிழைக்க வேண்டும். திருட்டும் ஜெயில் வாழ்க்கைவும் அலுத்துப்போய்விட்டது. ஊரைவிட்டு எங்காவது போய் உழைத்து நிம்மதியாக வாழ வேண்டுமென்பதுதான் மனைவியின் விருப்பமும். அப்படியாக எல்லாவற்றையும் மூட்டைக் கட்டிப் புறப்பட்டோம். அப்போது தெரியாது, இது, கோடீஸ்வரனாகப் போகும் ஒரு பயணமென்று.

ஊரிலுள்ள ஒரு நண்பன் பெங்களூருவில் தங்கியிருந்தான். அவனைப் போய்ப் பார்த்து அங்கேயே ஒரு வேலையைத் தேடிக்கொள்ள வேண்டும். யாரிடமும் சொல்லிக்கொள்ளாமல் புறப்பட்டோம். கையிலுள்ள பையில் திருட்டுப் பொருள் பாதுகாப்பாக இருந்தது. கண்ணூரில் பாவ்லிக்குப் போனால் அங்கிருந்து பெங்களூரு பஸ் கிடைக்குமென்று யாரோ சொன்னார்கள். பாவ்லியை அடையும்போது மணி ஐந்து. ஆனால், அதற்குள் இருட்டத் தொடங்கியிருந்தது. பாவ்லி பாலத்தின் ஒருபுறம் கேரளா, மறுபுறம் கர்நாடகா. கர்நாடகா எல்லையில் ஒரு சோதனைச் சாவடியிருந்தது. அடுத்த பஸ் ஆறரை மணிக்கு. பனி மழை பெய்துகொண்டிருந்தது. குழந்தைக்குக் குளிர் தாங்கவில்லை. நன்றாகப் போர்த்திவிட்டேன். பக்கத்திலொரு சாயாக்கடை இருந்தது. உள்ளே அமர்ந்திருக்கவும் வசதியிருந்தது. எங்களைப்போல் மற்றொரு குடும்பமும் பஸ்சுக்காக காத்து நின்றிருந்தது. குளிர் அதிகமானதும் அவர்கள் சாயாக்கடையில் ஒதுங்கினார்கள். கணவனும் கர்ப்பிணியான மனைவியும். முஸ்லிம் தம்பதியர்.

முதலில் சாயா கிடைத்ததும் நான் அந்தப் பெண்ணுக்குக் கொடுக்கும்படி மனைவியிடம் சொன்னேன். அவள் வாங்க மறுத்தாள். வற்புறுத்தியபோது கணவன் வாங்கிக்கொள்ளும்படி சொன்னான். அவனுக்கும் சாயா

கொடுத்தேன். அவர்களுக்குமான காசை நானே கொடுத்தேன். அவன் எங்களைப் பற்றி விசாரித்தான். நான் ஒரு பெரிய பொய்யைச் சொல்லி வைத்தேன்: "நான் இந்து, என் மனைவி முஸ்லிம். குழந்தைக்கு சுன்னத் செய்தது சொந்தக்காரங்களுக்கிடையில பெரிய பிரச்சினையாயிடுச்சி. ஊரில இருக்க முடியாத நிலைமையில ஊர்விட்டுப் போறோம்."

அவன் தன்னைப் பற்றி சொன்னான்: "பேரு குஞ்ஞுமுகம்மது, சொந்த ஊரு மானந்தவாடி. நஞ்சன்கோடு பக்கத்திலுள்ள எச்டி கோட்டையில எடயாளம் ஊர்ல வியாபாரம் செய்றேன்." அதிகமாக எதுவும் பேச முடியவில்லை. அருகிலுள்ள மலையிலிருந்து சுழன்றடித்து வந்த ஊதல் காற்று சுற்றி நின்றுக் குளிர் சொரிந்தது.

"ஏன் இன்னும் பஸ் வரல்ல?" நான் உரத்தக் குரலில் கேட்டேன்.

இதற்கானப் பதிலைக் கடைக்காரன் சொன்னான்: "இனி வராது. வர்றதா இருந்தா சாயங்காலம் அஞ்சரைக்கே வந்திருக்கணும். வந்து சாயாவெல்லாம் குடிச்சிட்டு ஆறரை மணிக்குதான் புறப்படுவானுங்க. பனிப்பொழிவு அதிகமா இருந்தா வரமாட்டானுங்க. கேட்க யாரிருக்கா?"

மாட்டிக்கிட்டமோ? எனக்கு வருத்தமாக இருந்தது.

"பயப்பட வேண்டாம்." குஞ்ஞுமுகம்மது சொன்னான்: "பக்கத்தில ஒரு சின்ன லாட்ஜ் இருக்கு. இந்த பஸ் இதுக்கு முன்னாடியும் எங்களை இப்படி ஏமாற்றியிருக்கு."

விடுதியில் அறை வாடகைக்கு எடுத்தோம். ஒன்பது மணியானதும் குஞ்ஞுமுகம்மதுவும் மனைவியும் நாங்களிருந்த அறைக்கு வந்தார்கள். "நீங்களும் கூட வர்றதா இருந்தா ஒரு சினிமாவுக்குப் போகலாம்னு இருக்கோம். பக்கத்தில ஒரு சின்ன தியேட்டர் இருக்கு." முதலில் நான் தயங்கினேன். பையில் பணமும் நகையுமிருக்கிறது. என்னென்னவோ காரணங்கள் சொல்லி மறுத்துப் பார்த்தேன். அவன் விடுவதாக இல்லை. பையைக் கட்டிலின்கீழ் வைத்துவிட்டுப் புறப்பட்டோம். மனைவி பயத்துடன் என் முகத்தைப் பார்த்தாள். பாதுகாப்பில்லாத அறை. நான் பரவாயில்லையென்று கண் ஜாடைக் காட்டினேன். விதித்ததாக இருந்தால் நிற்கும். இல்லையென்றால் போகும். பணத்திற்கான யோக்கியதை அவ்வளவுதான். தான் யாருடைய கை வசமிருக்க வேண்டுமென்பதை அதுவே முடிவு செய்யும். என்னை நல்லவனாக்குவதா தீயவனாக்குவதா குடிக்கவைத்துக் கொல்வதா திறமையானவனாக்குவதா என்று அது

ஏற்கனவே முடிவு செய்திருக்கும். சினிமா பார்த்தோம். ஏதோ ஒரு கன்னட சினிமா. என்ன மொழியோ? நான் திகைப்புடன் பார்த்துக்கொண்டிருந்தேன். அப்போது எனக்குத் தெரியாது, இனி, பல வருடங்கள் நான் இந்த மொழியைப் பேசியே வாழப்போகிறேன் என்ற விஷயம்.

தங்கள் அறைக்குப் போகும்போது குஞ்ஞுமுகம்மது சொன்னான்: "நாங்க அதிகாலையில கிளம்பிடுவோம். அந்த நேரத்தில உங்களை எழுப்பினா என்னைக் குத்திக் கொன்னுடலாம்போல தோணும். அந்த அளவுக்கு சுகமான குளிரடிக்குது. நாங்க போற பஸ் அதிகாலையில இருக்கு. நேர்வழியா போறது" என்று சொல்லிவிட்டு, துண்டுக் காகிதத்தில் தன் முகவரியை எழுதித் தந்தான்.

"இதுதான் என் முகவரி. பெங்களூருக்குப் போறதா சொன்னீங்க. அங்கே எதுவும் சரியாகாமலோ வேற வழியோ இல்லேன்னா எடயாளத்துக்கு வந்துடுங்க. நாங்க அங்கதான் இருப்போம்."

அவனது நடவடிக்கைகள் அனைத்தும் நடக்கப்போவதை முன்பே உணர்ந்தது போலிருந்தது. நம்மை எடயாளத்திற்கு அழைத்துச் செல்வதற்கு விதி அனுப்பி வைத்த ஆள்தான் இந்த குஞ்ஞுமுகம்மது அண்ணன்.

நாங்கள் பெங்களூருவை அடைந்தோம். நண்பன் மகாபுரத்திலிருந்தான். குடும்பத்துடன் வரவிருப்பதாக அவனிடம் நான் சொல்லவில்லை. அதற்கான காலஅவகாசமில்லை. மனைவியையும் குழந்தையையும் லாட்ஜில் விட்டுவிட்டு சொன்ன இடத்திற்கு நண்பனைத் தேடிச் சென்றபோது பெரும் பிரச்சினை. நண்பனின் பேரைச் சொன்னதும் கன்னடத்தில் ஒருவர் உட்காரச் சொன்னார். கொஞ்ச நேரத்தில் ஆட்கள் வந்து கூடிவிட்டனர். ஏதோ பிரச்சினை. என்னை அடிப்பதற்குச் சிலர் தயாராயினர். ஒருவன் தடியைத் தூக்கிக்கொண்டு பாய்ந்து வந்தான். யாரோ தடுத்தார்கள். நான் பயந்துபோயிருந்தேன். தெரியாத ஊரில், லாட்ஜில் மனைவியும் குழந்தையும். எனக்கு ஏதாவது ஆனால் . . ?

இதனிடையே சிலர் எதையெதையோ கேட்கிறார்கள். புரிந்தால் அல்லவா பதில் சொல்ல முடியும்? நான் நண்பனின் பேரைச் சொன்னேன். ஃபிரண்ட் என்றெல்லாம் ஏதேதோ சொல்கிறேன். அவனுடைய பெயர் காதில் விழும்போதெல்லாம் அவர்களுக்குக் கோபம் வருகிறது. இதனிடையே மலையாளத்தில் ஒரு குரல்.

அந்த மலையாளி என்னை விலக்கி நிறுத்தி விசாரித்தான். நான் உண்மையைச் சொன்னேன். அவன் அவர்களிடம் எதையோ சொன்னான். அடிப்பதற்காகத் தடியை ஓங்கியவன் மலையாளியை ஏதோ சொல்கிறான். அவர்களிடையே பிரச்சினையாகி விட்டது. யாரோ தலையிட்டுத் தீர்த்து வைத்தார்கள்.

அவன் சொன்னான்: "மலையாளிங்க மற்றவங்களை வாழ விட மாட்டானுங்க. அவனைப் பார்த்தா சொல்லிடு. இந்தப் பஞ்சாயத்துக்குள்ள காலெடுத்து வெச்சான்னா காலிருக்காதுன்னு. மற்றதை வெட்டியே போட்டுருவானுங்க. பிச்சைக்காரனா வர்றது; எவன் காலைக்கீலயாவது பிடிச்சி கடையிலோ மாட்டுத் தொழுவிலோ வேலைக்குச் சேர்றது. அப்புறம், முதல் வேலையா அந்த வீட்டிலுள்ள பெண்ணை வழி கெடுக்கிறது. இல்லைன்னா, கூட்டிட்டு ஓடுறது. பிச்சைக்கார நாய்ங்க."

"இதெல்லாம் தெரியாமதான் நான் வந்துட்டேன்" என்று எவ்வளவு சொல்லியும் அவர்கள் கேட்பதாக இல்லை.

மலையாளி சொன்னான்: "தடியைத் தூக்கிட்டு நிக்கிறவர்தான் பெண்ணோட தகப்பன். இவர் மகளைத்தான் இழுத்துட்டுப்போயிருக்கான். கட்டிக்கிடவா மும்பையில கொண்டுபோய் விக்கவான்னு யாருக்குத் தெரியும். இவருக்கு கூட்டிட்டுப் போனவன் இல்லேன்னா அவனோட கூட்டாளி கிடைச்சாலும் போதும்போலிருக்கு, போட்டுத்தள்ளுவேன்னு நிக்கிறாரு. அது நியாயமில்லைன்னு சொன்னதுக்குத்தான் மலையாளிங்க அத்தனை பயலுகளும் இப்படித்தான்னும் நானும் அந்தக் கூட்டத்தில ஒருத்தன்னும் சொல்லிக் குதிக்கிறாரு. தம்பி, உடம்பைக் கெடுத்துக்காம சீக்கிரமாக இடத்தைக் காலி பண்ணிடு."

பெண்ணைக் கடத்திக்கொண்டுபோன பிரச்சினை. என்னை அவர்கள் விட்டதே பெரிய விஷயம்தான். பிடித்து உதைத்து, போலீசில் ஒப்படைக்காதிருந்தது அதிர்ஷ்டம்.

உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு பெங்களூருவுக்குத் திரும்பினேன். பயந்துபோயிருந்தேன். முதலில் சற்று மன அமைதி வேண்டும்.

ஒருநாள் முழுவதும் குடும்பத்துடன் பெங்களூருவைச் சுற்றினேன். மறுநாள் மைசூருக்கு வந்தோம். இனி, எச்டி கோட்டைக்குப் போக வேண்டும். ஒரு மலையாளி சொன்னான்: "பேகூர், குண்டல்பேட்டை,

காட்பேகூர் போற எல்லா பஸ்சும் எச்டி கோட்டையில நிற்கும்." சொல்லிவிட்டு: "ஒரு சாப்பாடு வாங்கித் தருவீங்களா?" என்றான்.

நான் அவனது முகத்தைப் பார்த்தேன்.

"நானும் உங்களைப்போல வேலை தேடி வந்தவன்தான். சொந்த ஊரு புல்பள்ளி. காட்பேகூர் ஆற்றை நீந்திக் கடந்தா, புல்பள்ளிக்கு வந்துடலாம். திரும்பிப் போறேன். ஏதாவது சாப்பிட்டாதான் நீந்த முடியும்."

"சரி." காசு கொடுத்தேன்.

மனம் நீறியது. என்னுடைய நிலையும் இதுபோலாகி விடுமா?

மதியம் பன்னிரெண்டு மணிக்கு எடயாளம் கிராமத்தில் பஸ் நின்றது. கேரளா ஓட்டல் என்றொரு பெயர்ப்பலகை தெரிந்தது. ஓரளவு நல்ல ஓட்டல். இரண்டு சாயா சொன்னேன். கை நீட்டி அதை வாங்கும்போது நான் நினைத்துப் பார்க்கவில்லை, இந்த ஓட்டலின் முதலாளியாக நான் மாறுவேன் என்று.

பையையும் கைக்குழந்தையையும் பார்த்த முதலாளி கேட்டார்:

"நீங்க மலையாளியா, எந்த ஊரு?"

இவரது பெயர் இப்ராஹீம்குட்டி. தலச்சேரிக்காரர். நான் குஞ்ஞுமுகம்மது அண்ணனின் முகவரியை நீட்டினேன்.

"அட, நம்ம குஞ்ஞுமுகம்மது . . ."

"சுப்பையா." சர்வரை அழைத்தார். இந்த முகவரியைக் கொண்டுபோய் குஞ்ஞுமுகம்மதுகிட்ட கொடுத்து, ஆள் இங்க நிக்கிறதா சொல்லு."

சாயா குடித்துத் தீருவதற்குள் குஞ்ஞுமுகம்மது அண்ணன் ஓடோடி வந்தார். வந்ததுமே குழந்தையை வாங்கிக்கொண்டார்.

"நான் நேற்று ராத்திரிகூட நம்ம பீவிகிட்ட[2] சொன்னேன். அவர் இப்போ என்ன நிலைமையில இருக்காரோன்னு. அவ, எனக்கு என்னவோ அவர் இங்கே வருவார்னுதான் தோணுதுன்னு சொன்னா."

குஞ்ஞுமுகம்மதுவுடனான நட்பு விவரிக்க முடியாத ஒன்று.

லட்சக்கணக்கில் வருமானம் வரும்போதுகூட அவர் என்னிடம் எதையுமே கேட்டதில்லை. நானாகக் கொடுத்ததுமில்லை. கொடுத்தால் வாங்கவும் மாட்டார். அவ்வளவு நல்ல ஒரு முஸ்லிம். நோன்பும் தூய்மையும் சிறந்த குணங்களுமுள்ள ஒருவர். அவரது மனைவி அலிமாவின் பிரசவத்தின்போது என் மனைவிதான் துணையாக இருந்தாள்.

ஒரு அறையை எங்களுக்காக ஒதுக்கித் தந்துவிட்டுச் சொன்னார்: "உள்ளதுல பங்கும், ஒரு ஓலைக்கீற்றும்தான் கிடைக்கும். வெட்கப்பட வேண்டாம். நாங்களும், உங்களைப்போல பலரும் இப்படி வந்தவங்கதான்."

சிறு சமையலறை போக மிச்சமிருந்த ஒரு அறையில் அவர்களும், இன்னொரு அறையில் நாங்களும்.

ஓட்டல்காரர் இப்ராஹீம் அண்ணன், இவரை விடவும் பெரிய தீனியத்[3] உள்ள மனிதராக இருந்தார். ஒரு வேலைக்காரனைப்போல் நின்றுகொண்டிருந்தார். இதைப் பார்க்கும்போது எனக்குத் திகைப்பாக இருந்தது.

"மகனே, நம்மைச் சோதிக்கிறதுக்காக அல்லாஹு இப்படிப் பலரையும் அனுப்பி வைப்பான். நமக்குக் கைப்பிழை நேர்ந்துடலாம். படைச்சவன் நமக்கு மன்னிப்பருள்வான். ஆனால், எத்தீம்களைப்[4]ு புறக்கணிக்கிறவங்களை அல்லாஹு ஒருபோதும் மன்னிக்க மாட்டான். உங்களை நான் எத்தீமா நினைக்கிறேன்."

ஜமாஅத்திற்குச் சொந்தமான பள்ளி வளாகத்தினுள் ஒரு வீடும் சிறு கடையும் வாடகைக்கு எடுத்துத் தந்தார். இரண்டாயிரம் ரூபாய் முன்பணம். முன்னூறு ரூபாய் வாடகை. அன்று இது ஓரளவு பெரிய தொகைதான். பிறகு, சமாளிக்க முடியுமென்றான பிறகு இன்னும் சற்று பெரிய வீட்டை ஒத்திக்கு எடுத்தேன். இந்த வீட்டையும் கடையையும் கடைசிவரை வைத்திருந்தேன். என்னுடைய நெருங்கிய பணியாளர்களின் தங்குமிடமாகவும் அலுவலக அறையாகவும் அதை மாற்றினேன். வாடகைக்கு வீடு பார்த்துத் தந்த இப்ராஹீம் அண்ணனே வீட்டு சாமான்களுக்கான பட்டியலையும் தயாரித்தார். மைசூருக்குப் போய் மண்ணெண்ணெய் ஸ்டவ் வாங்கி வந்தார். ஏதாவது வியாபாரம் தொடங்குவது பற்றி நான் யோசித்தேன்.

இந்தச் சமயங்களில் வேலையில்லாமலிருந்தேன். காலையில்

ஜங்ஷனுக்குப் போவேன். நஞ்சன்கோடு பஸ், பத்து மணிக்கு எடயாளத்தில் வந்து நிற்கும். டிரைவர் ஒரு மலையாளப்பத்திரிகை வாங்கிக்கொண்டு வருவார். பத்திரிகைக்கான காசும் ஒரு சாயாவும் அவருக்கு. பஸ் நேராக எச்டி கோட்டைக்குப் போகும். அதொரு தாலுகா தலைநகர். எடயாளத்தில் தேவைப்பட்டால்தான் நிறுத்துவார்கள். பஸ்சைப் பார்க்கும்போதுதான் எனக்கு எச்டி கோட்டைக்குப்போய் அங்கிருந்து மைசூருக்குப் போகலாம் போல் தோன்றும். டிரைவரிடம் கொஞ்ச நேரம் நிற்கும்படி சொல்வேன். டிரைவருக்கு இரண்டு ரூபாய் கொடுத்தால் போதும், வீட்டில்போய் குளித்து முடித்துத் திரும்பி வரும்போதும் பஸ் காத்து நிற்கும். பன்னிரெண்டு மணிக்கு ஒரு ஆளைப் பார்க்க வேண்டும் என்பதால் பத்து மணிக்கு வந்த பஸ்சை இரண்டு மணி நேரம் நிறுத்தி வைத்ததுமுண்டு. டிரைவரிடம் விஷயத்தை ரகசியமாகச் சொன்னேன். அவர் பஸ் எஞ்சினை ஆஃப் பண்ணி வைத்தார். பிரேக் டவுணும் எஞ்சின் ட்ரபுளும். இடையிடையே வந்து எதையாவது தட்டிப் பார்ப்பார். நான் வந்தேன். கொஞ்சம் சாமான்களும் ஏற்றப்பட்டது. ஆச்சரியமான முறையில் வண்டி ஓட ஆரம்பித்துவிட்டது. பத்து ரூபாய் கொடுத்தேன். அரசு பஸ்களை சில நேரங்களில் இதுபோல் டாக்சியாகவும் இங்கே மாற்ற முடியும். அனைத்து ஊழல்களுமுள்ள ஒரு போக்குவரத்துக்கழகம். காசு கொடுத்தால் ஒருவேளைதான் டிக்கெட் கிடைக்கும். சில நேரங்களில் கிடைப்பது, போகுமிடத்துடன் எந்தத் தொடர்புமில்லாத டிக்கெட்டாக இருக்கும்.

என்ன வியாபாரம் செய்வது? இதுதான் யோசனை. இதனிடையில் மைசூருக்குப்போய் 26 பவுன் நகைகளை விற்றேன். அந்தப் பணமும் கையில் இருக்கிறது. இங்கே புகையிலைத் தோட்டங்களில் வேலை செய்யும் தொழிலாளர்கள்தான் அதிகம். தமிழர் மற்றும் ஆந்திராக்காரர்கள். சீஸன் காலங்களில் இவர்களை வண்டிகளில் அடைத்துக்கொண்டு வருவார்கள். ஐந்து கிலோமீட்டர் சுற்றளவிலுள்ள தோட்டங்களில் வேலை செய்பவர்களும் ஊர்க்காரர்களும் எடயாளத்திலுள்ள கடைகளைத்தான் நம்பியிருந்தார்கள். எனக்கு இதுபோல் ஆட்கள் கூடுமிடத்திலுள்ள வியாபாரம்தான் பரிச்சயம். தற்போது இங்கே சாயாக்கடை முதல் சிறு ஜவுளிக்கடைவரை இருக்கிறது. அப்படியாக, சேமியா பாயசம் வியாபாரம் தொடங்கலாமென்று முடிவு செய்யப்பட்டது. பெரிய அளவில் நஷ்டம் ஏற்படுவதற்கான வாய்ப்பில்லை. சர்க்கரையும் சேமியாவும் மட்டும் போதும். வியாபாரத்தை தினமும் சாயங்காலம் ஆரம்பித்தால் போதும். சீக்கிரமாக விற்றுப்போகவும் செய்யும். வேலை முடிந்து வரும் தொழிலாளர்கள்

ஆளுக்கொரு தம்ளர் பாயசம் வாங்கிக் குடிப்பார்கள்.

குஞ்ஞுமுகம்மது அண்ணனின் பெட்டிக்கடையோரத்தில் வியாபாரத்தைத் தொடங்கினேன். அவர் தந்த ஒரு பெஞ்சுதான் இதற்கான மொத்தத் தளவாடம்.

தொடக்கம் கனஜோராக இருந்தது. நாடோடி சர்க்கஸ் கலைஞர்கள் அந்த இடத்தில் கூடாரம் அமைத்து சர்க்கஸ் நடத்தினார்கள். கிராமத்தில் நடக்கிற முதல் கலை நிகழ்ச்சி இதுதான். ஏராளமான மக்கள் ஜங்ஷனுக்கு வர ஆரம்பித்தார்கள். மிளகாய் பஜ்ஜி, பக்கடா, பருப்புவடையென்று பலகாரங்களும் இருந்தன. வீட்டில் மனைவியின் தயாரிப்பு. அவளைப் பொறுத்தவரை, கடினமாக உழைக்கவும் தயாராக இருந்தாள். மன அமைதியுடன் வாழலாம் அல்லவா? பகலில் நேரமிருந்தது. குஞ்ஞுமுகம்மது அண்ணனின் தேவையில்லாமல் கிடந்த சைக்கிளை எடுத்து மண்ணெண்ணெய் வியாபாரம் ஆரம்பித்தேன்.

டப்பாவை சைக்கிளில் கட்டிக் கொண்டுபோய் மண்ணெண்ணெய்... மண்ணெண்ணெய் . . . என்று கூவிக்கொண்டே நடப்பேன். பிளாக்கில் வாங்குகிற மண்ணெண்ணெய். ஊர் முழுவதும் சுற்றுவேன். தெரியாத பாதைகள், பார்க்காத இடங்கள் எல்லாம் சைக்கிள் மிதித்தேன். மண்ணெண்ணெய் கிடைப்பது அரிதான காலம். சட்ட விரோதமான வியாபாரம்தான். பாயச வியாபாரமும் பரவாயில்லாமல் நடந்தது.

பாயசத்தை அவர்கள் ஹீர் என்று சொல்வார்கள். ஆகவே, என் பெயர் ஹீர்பாய் ஆனது. முஸ்லிமென்று சொல்லிக்கொள்வதால் என் பெயர் சலிம். இந்தப் பெயரில்தான் என்னை நான் அறிமுகம் செய்வது வழக்கம். பழைய முகத்தை மறைக்கவும் பெயரை மாற்றியாக வேண்டியதிருந்தது. நானொரு திருடன்; போலீஸ் என்னைத் தேடிக்கொண்டிருக்கிறது என்ற எண்ணம் விலகிக்கொண்டிருந்தது. உழைத்து வாழ்வதில் சுகமிருந்தது. மட்டுமல்ல, தாழ்ந்த சமூகத்தைச் சேர்ந்தவர்கள் என்னை உயர்வாக நினைத்தனர்.

கேரளத்தின் தோட்டிகள்போல் இங்கே சக்கிலியர் என்றொரு பிரிவிருந்தது. எல்லாக்கடைகளிலும் இங்கே இரட்டைக்குவளைதான். தாழ்ந்த சமூகத்தினர் தொட்ட தம்ளரில் மற்றவர்கள் பாயசம் குடிக்கமாட்டார்கள். குடிக்கவே வேண்டாம். என்னுடைய பாயசத் தம்ளருக்கு சாதிகள் கிடையாது. ஆகவே, இந்த சமூக மக்கள் என்னை மிகுந்த மரியாதையுடனும் அன்புடனும் நடத்தினார்கள். மற்றவர்கள்

குடிக்கிற தம்ளரில் பாயசம் குடிப்பதை இவர்கள் பெரிய விஷயமாக நினைத்தனர். சிலருக்கு இதில் மன ஆதங்கமிருந்தது. ஆனால், பெரும்பான்மை சாதாரண மக்களுக்கும் இதுவொரு பிரச்சினையாகவே தோன்றவில்லை. சாதிப் பிரிவினைகளெல்லாம் தங்களின் தேவைகளுக்காக சில பணக்காரன்களால்தான் போற்றப்படுகிறது.

தம்ளரை அவர்களே கழுவி வைத்து விடுவதுதான் வழக்கம். எனக்கு இதில் சம்மதமில்லை: "உங்க காசு வேணும்; நீங்க தொட்ட கிளாஸ் வேண்டாம்னு சொல்றது சரியில்லை." நானும் மனைவியும் தம்ளர்களைக் கழுவி வைப்போம்.

ஒருநாள், மலையாளிகளான சில ஒப்பந்ததாரர்கள் வந்தார்கள். கேரள சமையல்போல் மதிய உணவு தயார் செய்து தர முடியுமா? குறைந்தது பத்து பேராவது சாப்பிட வருவதாக இருந்தால் முடியும் என்றேன். பரப்பனங்காடி முகம்மதுவும் அவனது கடை வேலையாள் ஜலீலும் அங்கே காய்கறி வியாபாரம் செய்பவரும் உட்பட சிலர் இப்படியான ஒரு வேண்டுகோளை ஏற்கனவே முன்வைத்திருந்தார்கள். இப்ராஹீம் அண்ணனின் கடையிலுள்ள பரோட்டாவையும் ஆப்பத்தையும்தான் இவர்கள் மதியமும் சாப்பிடுகிறார்கள். வேறு வழியில்லை. எல்லோரும் சேர்ந்து தங்கள் சிரமத்தைச் சொன்னால் எப்போதாவது ஒருநாள், இப்ராஹீம் அண்ணன் சாப்பாடு தயார் செய்வார். அவ்வளவுதான். பள்ளிவாசல் காரியங்களும் குர்ஆன் ஓதுவதும்தான் அவருடைய மனதிற்கு நிறைவு தருகிற விஷயங்கள்.

"ஒரு மெஸ் ஆரம்பிக்கலாம்னு நினைக்கிறேன்." அவர் தவறாக நினைத்துவிடக்கூடாது என்பதற்காகக் கேட்டேன்.

"ரொம்ப சந்தோஷம். இனி யாரும் என்னை வந்து தொந்தரவு பண்ண மாட்டாங்க."

குஞ்ஞுமுகம்மது அண்ணன் பக்கத்தில் காலியாகக் கிடந்த மூன்று நான்கு அறைகளை வாடகைக்கு எடுத்தார். எல்லா அறைகளையும் ஒன்றாகச் சேர்த்து ஒரு பெயர்ப்பலகை வைக்கப்பட்டது. 'கேரளா மெஸ் ஹவுஸ்' அப்போது மிகவும் அதிகமாக பருத்தி கொள்முதல் செய்வது, வரலட்சுமி கம்பெனிதான். பருத்தியைக் கொண்டுபோக அவர்களது பஸ்கள் வர ஆரம்பித்தன. அதைப் பக்குவம் செய்வதற்கு ஏராளமான பெண் வேலையாட்களும் வந்தார்கள். தினமும் நூற்றைம்பதுக்கும் அதிகமான சாப்பாடு தயார்செய்ய வேண்டியதிருந்தது. வேலைக்கு ஆட்களை

வைத்தேன். பெயர்ப்பலகையை நானே கையால் எழுதினேன். இவ்வளவு பெரிய பெயர்ப்பலகை வழக்கமில்லையென்பதால் எழுதுவதை வேடிக்கைப் பார்க்க ஆட்கள் கூடினார்கள். தூக்கி வைப்பதற்கு பத்துப் பன்னிரெண்டு ஆண் - பெண் பருத்தித் தொழிலாளர்கள் உதவி செய்தார்கள்.

எடயாளத்தின் மற்றொரு பெரிய சந்திப்பு பார்வதிபுரம். இங்கே சில கிட்டங்கிகளிருந்தன. பருத்தியைத் தண்ணீர்படாமல் பாதுகாத்து வைக்குமிடம். வேலைக்காரர்களில் சிலர் இங்கும் தங்கியிருந்தார்கள். இதனிடையில், சாப்பிட வருபவர்களில் மெட்ராஸ்காரன் கணேஷ் அறிமுகமானான். இவன் இங்குள்ள பருத்தி ஏஜென்டுகளில் முக்கியமானவன். தமிழ்நாட்டில் சொந்தமாக எஸ்டேட்டுகளும் பங்களாக்களுமுள்ள பெரிய பணக்காரன். நாற்பது வயதுதானிருக்கும். இவனுக்கு பெரிய அளவில் வேலையிருக்காது. கல்லாவினருகில் செயரில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருப்பான். நாங்கள் நெருங்கிய நண்பர்களானோம். கணேஷ் கேட்டான்: "தமிழ்நாட்டு உணவுகள் சமைக்கத் தெரியுமா?"

"தெரியாது" என்றேன்.

"உங்க உணவு வகையிலிருந்து பெரிய வித்தியாசமெல்லாம் கிடையாது. என் நூற்றைம்பது வேலையாட்களுக்கு உணவு தயாரிக்க முடியுமா? தேவையான பாத்திரங்களும் இரண்டு மூன்று ஆட்களையும் விட்டுத் தர்றேன். சும்மா மேற்பார்வை பார்த்து ஓரளவு நல்லா சமைச்சுத் தந்தாப் போதும்."

சரி, அதையும் ஆரம்பித்தாகி விட்டது. தமிழுக்கும் மலையாளத்துக்கும் தனித்தனி ஓட்டல்கள்.

பாயச வியாபாரத்தை நிறுத்தினேன். பலவகை பலகாரங்கள் தயாரித்துக் கண்ணாடிப்பெட்டியை நிறைத்தேன். நீண்ட காலமாகச் சாப்பிடாதவர்கள்போல் ஆர்வத்துடன் சாப்பிட்டார்கள் தொழிலாளர்கள். இவர்கள் இவ்வளவு காலமும் எதைச் சாப்பிட்டு வாழ்ந்தார்கள் என்பதுதான் ஆச்சரியம். அங்குள்ள ஒரு காய்கறிக் கடையிலிருந்துதான் கொள்முதல் செய்வேன். எனக்காகவே அவனது ஜீப் மூன்று நாட்களுக்கொருமுறை மைசூருக்குப் போய் வரும். நாமே நேரடியாகக் கொள்முதல் செய்தால் என்னவென்றுத் தோன்றியது. அப்படியாக வாரத்திற்கு இரண்டு மூன்று முறை காய்கறி வாங்குவதற்காக லாரியில்

ஆளனுப்பினேன்.

கேரளா ஓட்டல் இப்ராஹீம் அண்ணன் சொன்னார்: "உங்கிட்ட ஒரு விஷயம் பேசணும். நான் கடையை மூடப் போறேன். வயசாயிட்டது. பெரிய அளவிலான வியாபாரமும் இல்லை. கொஞ்சம் பரோட்டாவும் மாட்டுக்கறியும் காலையில வெக்கிறேன். சில சமயங்கள்லே இரண்டு நாட்களுக்கானதை சேர்த்தே வெச்சுடறேன். வேற வழியில்லாம சாப்பிடுறாங்க. எனக்குப் பயந்துதான் நீ காலைலே எதுவும் வெக்கிறதில்லைங்குறதும் எனக்குத் தெரியும். நீ இந்தக் கடையையும் எடுத்து நடத்து. பள்ளிவாசல் இடம். அவங்களுக்கு ஐயாயிரம் ரூபாய் கொடுத்து இடத்தை நீ ஒற்றிக்கு எடுத்துக்கலாம்."

அப்படியாக, கேரள ஓட்டலையும் ஏற்றெடுத்தேன். கமால், பாஷா, சின்னப்பையன் ஆகியோர் மானேஜர்கள். கமால் வீட்டின் பக்கத்திலுள்ளவன். தலைமை மேலாளர் என்று சொல்லலாம். தீருகிற பொருட்களை வாங்குவது, மொத்த வியாபாரத்தின் லாபத்தைக் கண்காணிப்பது போன்ற அனைத்தும் இவன் வழியாகவே நடக்கும். ஒவ்வொரு நாள் சாயங்காலமும் லாபத்தைப் பெற்றுக்கொள்வதும் ஒட்டுமொத்தமான கண்காணிப்பும் மட்டும்தான் என்னுடைய பொறுப்பு. இரண்டோ மூன்றோ பேர்களிடம் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு இவர்களை மட்டும் கண்காணிப்பது என்பதுதான் என்னுடைய நிர்வாக முறை. ஆகவே, தாராளமான லாபமும் நிறைய ஓய்வும் கிடைத்தன.

இக்காலகட்டத்தில்தான் டிஒய்எஸ்பியின் நட்பு கிடைத்தது. டாக்டர் ஹக்கீம்பாஷா அறிமுகம் செய்து வைத்தார்: "இவர்தான் சலிம்பாஷா, எடயாளத்தின் அண்மைக்கால ஆச்சரியம். தொட்டதெல்லாம் துலங்கும்." போலீஸ்காரர்களின் பலவீனத்தை அறிந்திருக்காத திருடன் இருப்பானா? அவரது மனோபாவத்தை அறிந்து நான் செயல்பட்டேன். தனிமையில் சமத்துவம். வெளியில் அசமத்துவம் காட்டி மரியாதையுடன் சற்று விலகி நிற்க வேண்டும். இது போதும் அவர்களுக்கு. கூடவே, எந்த இடத்திலும் ஓசியில் முன்னுரிமை அளிக்க வேண்டும். எந்த அளவிற்கு ஓசியைப் பேணுகிறோமோ அந்த அளவில் நட்பும் வலுப்பெறும்.

கேரள போலீசைப் பொறுத்தவரை இவர் ஓரளவு பரவாயில்லை. இங்கிருந்து சில கிலோ மீட்டர்கள் தொலைவில் பீர்பால் டாம். திரைப்படப் படப்பிடிப்புகள் நிகழுமிடம். ஒரு ஐபியும் இருக்கிறது. எங்களுடைய கூடுகை இங்கேதான். பெரும்பாலான நாட்களிலும் டிஒய்எஸ்பி சார் வந்துவிடுவார்.

அணைக்கட்டில் முப்பது நாற்பது கிலோ எடையுள்ள மிகப் பெரிய மீன்கள் கிடைக்கும். நாங்கள் அங்கு போனதும் பகுதி மீனைச் சிப்பந்திகள் சமைக்க ஆரம்பித்து விடுவார்கள். மீதியைப் பார்சல் செய்து வீட்டுக்குக் கொண்டு வருவோம். மீனின் விலை மிக அதிகமாக இருக்கும். கருவாடு கிடைக்கும். மைசூருக்குப் போகும்போது நான் மதுப் பாட்டில்கள் வாங்கி வருவேன். சில வழக்குகளுக்குப் போய்விட்டு வரும்போது சார் விலை உயர்ந்தப் பாட்டில்களுடன் வருவார். பிறகு, உற்சாகத்தின் உச்சிக்கே போய்விடுவார். என்னை வானளாவப் புகழ்வார்: "என்னோட டிப்பார்ட்மென்டில மட்டும் உன்னைப்போல ஒரு நண்பனிருந்தா . . ." என்பார். நானும் அவரது டிப்பார்ட்மென்டுடன் அணுக்கத் தொடர்புள்ள ஒருவன் தான் என்கிற விஷயம் சாருக்குத் தெரியாது.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் முகம்மது யூஸஃப் அறிமுகமாகிறான். இருபத்து நான்கு வயதுதானிருக்கும். எம்ஏ முடித்து அரசு வேலைக்கான பரிட்சையும் எழுதியிருக்கிறான். அங்குள்ள ஒரு பணக்காரக் குடும்பத்தின் ஏக வாரிசு. ஒன்றிரண்டு சகோதரிகளும் திருமணமாகிப் போய்விட்டார்கள்.

தொடர்ந்து வியாபாரத்தைக் கவனிக்க அவனது வாப்பாவின் உடல் நிலை இடம் கொடுக்கவில்லை. யூஸஃபிற்கு அரசாங்க உத்தியோகம் போதும். இதனால் அவர்களுடைய மூன்று நான்கு கிட்டங்கிகள் மூடிக் கிடந்தன. குஞ்ஞுமுகம்மது அண்ணனின் பெட்டிக்கடையின் முன்னால் கிடக்கும் பெஞ்சில் உட்கார்ந்திருப்பான். அமைதியான ஆள். மிகுந்த புத்தி சாதுரியமுள்ளவன். நான் பாயசம் வியாபாரம் செய்யும்போதே தெரியும். ஒரு பயணத்தின்போது நேரடியாக அறிமுகமானோம். ஓட்டல் வியாபாரங்கள் சூடுபிடித்தபோது நெருக்கம் மேலும் அதிகரித்தது. வெள்ளிக் கிழமை ஜும்ஆவிற்கு வந்து விடுவான். வேறு நட்புகள் எவையும் கிடையாது.

காய்கறியும் மளிகைப் பொருட்களும் பிறகு, சொந்தமாகவே கொள்முதல் செய்தேன். மைசூக்கு போன் செய்து சொன்னால், பொருட்களுடன் லாரி எடயாளத்திற்கு வந்துவிடும். அப்போது யூஸஃப் அங்கிருந்தால் கணக்குகளைக் கொஞ்சம் சரி பார்த்துச் சொல்லும்படி வேண்டிக்கொள்வேன். செய்து தருவான். இப்படி, மேம்போக்கான நட்புறவு மட்டும்தான் முதலிலிருந்தது.

ஒருநாள் மைசூரிலிருந்து நான் திரும்பி வரும்போது பஸ்சில் யூஸஃபுமிருந்தான். எம்ஏ சான்றிதழ் சம்பந்தமாக போய்விட்டுத் திரும்பி

வருகிறான். ஒரே இருக்கையில் அமர்ந்திருந்தோம். அன்றுதான் யூஸஃப்புடன் நெருக்கமாகப் பழகுகிறேன். என்னுடைய நடவடிக்கைகள் அவனுக்குப் பிடித்திருந்தன. பின்பொரு நாள் கேட்டேன்: "யூஸஃப் கடை கணக்குகளையெல்லாம் கொஞ்சம் பார்க்க முடியுமா? தினமும் சாயங்காலம் கொஞ்ச நேரம். யூஸஃப்புக்கும் டைம் பாஸ் ஆகும். எனக்கு அது மிகப்பெரிய உதவியாக இருக்கும். இத்துடன் கணக்குகள் ஒழுங்கு முறைக்குள் வந்தன. பொருட்களை லாபப்படுத்துவது, வியாபார அபிவிருத்திபோன்ற விஷயங்களில் அவ்வப்போது உளப்பூர்வமான சில அறிவுரைகளும் சொல்வான்.

ஒருநாள்: "புகையிலை விவசாயம் செய்து பார்க்கிறீங்களா? என் கொடவுனை விட்டுத் தர்றேன். அத்தாகிட்ட நான் சொல்லிக்கிறேன்." என்றான்.

"ஏன் நீயே தொடங்கலாமே?"

"எனக்கு வேலைக் கிடைச்சா தூக்கிப்போட்டுட்டுப் போயிடுவேன். அதனால்தான். மணிச்செட்டியும் உதவியா இருப்பார். அவரும் புகையிலை விவசாயிதான். நல்ல மனுஷன்" என்றான் யூஸஃப்.

---


2. மனைவி.
3. இறைப்பற்று.
4. அனாதை.

## 46 - புகையிலை விவசாயம்

கொஞ்சம் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்தேன். யூஸஃபின் மேற்பார்வையில் விவசாயம் தொடங்கியது. கிட்டத்தட்ட இரண்டு மீட்டர் அகலத்தில் பாத்தி கட்டப்பட்டது. நூறு மீட்டர் நீளத்தில் நடவாகும். இரண்டு தடங்களினிடையில் இருப்பவர்களை மறு பக்கமிருந்துப் பார்க்க இயலாது. தடம் அந்த அளவு உயரமாக இருக்கும். பாத்தி காய்ந்திருக்க வேண்டும். தண்ணீரை வடிப்பதற்கு பெண்களை ஏற்பாடு செய்ய வேண்டும். மணிச்செட்டியின் புல்லட்டில் அமர்ந்து கண்காணித்துக் கொண்டிருந்தோம். தேவையான அறிவுரைகளை மணி சொல்லிக்கொண்டிருந்தார். தடத்தில் அழகான ஒரு பெண் களைப்பறித்துக்கொண்டிருந்தாள்.

மணி சொன்னார்: "புகையிலை நடும்போது வேறெதையும் நட்டுடாதே. பிறகு, என்னைப்போல ஆயிடுவே. இப்படியொரு தடத்திலதான் நான் முதன்முதலாக சாந்தியை சந்திச்சேன். நாங்க பலமுறை அதில கிடந்து உருண்டிருக்கோம். அப்போதெல்லாம் இதுபோல நிறைய பெண்கள் ஒண்ணும் வேலைக்குக் கிடைக்கமாட்டாங்க. மட்டுமில்ல, நான் இங்கே பிழைக்க வந்தவன். நிலைச்சு நிக்கிறதே சிரமமான விஷயம். இந்த நிலைமையில சாந்தி எனக்கொரு போதையாகவே மாறிட்டா. உடல்கட்டு அப்படியிருக்கும். அறுபது கிலோ எடையுள்ள ஒரு காந்தம். பக்கத்தில போனாலே இழுத்துடும். அவ்வளவு கவர்ச்சியா இருப்பா.

முடிவு, வயிற்றிலானதுதான். ஒண்ணும் பிரச்சினையில்லை ஒண்ணும் பிரச்சினையில்லைன்னுதான் கடைசிவரைக்கும் சொன்னா. ஆனா, விஷயம் இப்படியானதும் அவளோட விதமே மாறிடுச்சி. கல்யாணம் பண்ணியே ஆகணும்னு நின்னுட்டா. எனக்கோ மனைவியும் குழந்தையும் இருக்காங்க. காடாறு மாசம் நாடாறு மாசம்னு வாழ்ந்திட்டிருக்கேன். இங்கே சீஸன் முடிஞ்சா ஊருக்குப் போயிடுவேன். அவ, கிராம சபையில சொல்லுவேன்னுட்டா. என்னோட விவசாயமெல்லாம் முக்கால் பருவத்தில ஆயிடுச்சு. இதையெல்லாம் விட்டுட்டுப் போனா நாண்டுக் கிட்டுச் சாக வேண்டியதுதான். மட்டுமல்ல, சந்தன மரம் கடத்துற ஒரு கும்பல்லே நானுமிருக்கேன். அவங்ககிட்ட இருந்து கொஞ்சம் பணமும்

கடனா வாங்கியிருந்தேன். இன்னும் தடி இறக்கி முடியலை. ஆகப் பிரச்சினை. இதில, சின்ன வீட்டிலொரு குழந்தை வேற. எல்லாமே விதி. தமிழ்நாட்டில பிறந்து கர்நாடகாவில வாழுற நான் ஆந்திராக்காரியை வெச்சிருக்கேன்."

சாந்தியைப் பார்க்க வேண்டுமென்று எனக்கு அப்போதே தோன்றியது. பிறகு பலமுறை, மணியுடன் அவனது வீட்டிற்குப் போயிருக்கிறேன். பாறையில் உட்கார்ந்துதான் குடிப்போம். சிறு அடுப்பும் விறகுமாக சாந்தியும் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொள்வாள். கால் மூட்டிற்கும் மேலாக சேலையை உயர்த்தி வைத்து எங்களுக்கு அப்பளம் சுட்டுத் தருவாள். நான் சொன்னேன்: "மணி நீ விழுந்ததில் ஆச்சரியமில்லை." கடைஞ்செடுத்த கட்டைதான். மணி மெலிந்த உடல் ஆகிருதியுள்ளவன்.

ஒன்றரை வயதிருக்கும்போது குழந்தை இறந்துபோனது. குழந்தையின்மீது மணி மிகுந்தப் பாசம் வைத்திருந்தான். விவசாயத்தில் அவனது கவனம் குறைந்தது. நானும் யூஸஃபும்தான் இக்காலகட்டங்களில் அவனுக்கு உதவியாக இருந்தோம். குடியும் அதிகரித்தது. நடக்கும்போது காட்டும் சிறு அலட்டலைத் தவிர பெரிய அளவில் இதற்கெல்லாம் சாந்தி அலட்டிக்கொள்ளவில்லை.

அங்கே அன்சார் என்றொருவன் இருந்தான். அண்ணன் தம்பிகள் அவர்கள் மூன்று நான்கு பேரிருந்தார்கள். அதிலொருவன் காட்டிலாகாவில் வேலை பார்த்து வந்தான். இதுவும் சேர்ந்தபோது அவர்கள் காடு மேடென்று பார்க்காமல் சுற்றித் திரிந்தார்கள். சூதாட்டம், குடி, ஏதாவது பெண் விவசாயக் கூலியைப் பணம் தருவதாகச் சொல்லித் தூக்கிச்செல்வது இதுதான் இவர்களது பொழுதுபோக்கு. பெரிய மனிதர்களிடமும் பணக்காரன்களிடமும் மட்டும் உரசிக்கொள்ள மாட்டார்கள். அப்படியே வந்தாலும் விலகிக்கொள்வார்கள். மணியின் வீட்டினருகிலுள்ள ஒரு குன்றுப்பகுதியில் தான் இவர்களுடைய வீடுமிருந்தது.

ஒருநாள், குழந்தை இறந்து போன வருத்தத்திலிருந்த மணி எங்கோ போயிருந்து ஃபுல் பாட்டில் மதுவையும் குடித்துத் தீர்த்தான். அதிகாலையில் வீட்டிற்கு வரும்போது சாந்தியும் அன்சாரும் ஒரே பாயில். ஒரு வாசல் மட்டுமே உள்ள வீடு அது. அன்சாருக்கு மணியைக் கடந்துதான் போக வேண்டும். மணி ஸ்தம்பித்து நின்றுவிட்டான். மூன்றாவது நாள் சாந்தி மண்ணெண்ணெய் ஊற்றித் தீக்குளித்துத் தற்கொலை செய்துகொண்டாள். மணி எரித்துக்கொன்றதாக மக்கள்

பேசிக்கொண்டார்கள். இது இயல்புதான். அவளுக்கு வேறு மார்க்கமில்லை. இனி ஆந்திராவுக்கும் போக முடியாது. கனவு காணவும் இயலாததொரு நல்ல வாழ்க்கை சீரழிந்துவிட்டதன் வருத்தமுமிருக்கும். என்ன செய்ய முடியும். காமம் செய்த கோலம்.

மணி மிச்சமிருந்த வியாபாரத்தை என்னிடம் ஒப்படைத்துவிட்டு அதன் வழி முறைகளையும் சொல்லித் தந்தான்: "நான் திருப்பூருக்கே போறேன்."

மேலும் சில நாள் தங்கியிருந்து வரவேண்டிய பணத்தையெல்லாம் பெற்றுக்கொண்டான். செய்து வந்த பருத்தி வியாபாரத்தையும் புகையிலை வியாபாரத்தையும் நிறுத்தினான். அதன் ஆட்களை எனக்கு அறிமுகம் செய்து வைத்தான்: "வியாபாரத்தை இனி என் பிரதர் கவனிப்பான்."

ஒரு வாரத்திற்குப் பிறகு மணிக்குத் தேவையான பொருட்களுடன் நாங்கள் ஜீப்பில் புறப்பட்டோம். இனி திரும்பி வரப் போவதில்லை. கடைசியாக, நன்றாக ஒருமுறை குடிக்க வேண்டும். மைசூருக்குச் சென்றோம். நான் திரும்பி தனியாகத்தான் வரவேண்டும். ஒரு பெரிய ஓட்டலில் நுழைந்தோம். மது அருந்திக்கொண்டிருக்கும்போது மணி சொன்னான்: "நான் உன்னை என்னோட கூடப் பிறந்த சகோதரன்னு சொல்லித்தான் எல்லாருக்கும் அறிமுகம் செய்து வைத்தேன்."

"நானும் அதைக் கேட்டேன். இவ்வளவு அன்பு காட்டுறதுக்கு நான் என்ன செய்திருக்கேன்?"

"சலிம், உன் பின்னால நிறைய ரகசியங்கள் புதைஞ்சிருக்கு. நீ போறதும் வர்றதுமெல்லாமே யாருக்கும் தெரியாம நடக்குது. யார்கிட்டேயும் நீ சொல்றதுமில்லே. ஒண்ணுல, நீ ஒரு பெரிய திருடன் . . ."

போதை முழுவதும் அப்படியே இறங்கிவிட்டது. திகைப்புடன் அவனையே பார்த்தேன். திரும்பவும் சொன்னான்:

"ஒண்ணுல, நீ ஒரு பெரிய திருடன், இல்லேன்னா ஒரு போலீஸ் அதிகாரி."

மனதை ஆசுவாசப்படுத்திவிட்டுச் சொன்னேன்: "புலம்பாம இரு. கதியற்றுப் போய் வந்தேறிய ஒருத்தன் நான். நீ கூர்மையான அறிவும் நல்ல மனசுமுள்ள ஒருத்தன்கிறதைப் புரிஞ்சுகிட்டேன்."

நாங்கள் பிரியும் வேளையில்தான் மணி தன்னுடைய இந்த சந்தேகத்தை என்னிடம் கேட்டான். கடை எடுக்கவும் பள்ளிவாசல் கமிட்டிக்குப் பணம்

கொடுக்கவும் வியாபாரத்தை விரிவுப்படுத்தவும் நகையை விற்பதென்று முடிவு செய்து பலமுறை யாரிடமும் சொல்லாமல் போயிருக்கிறேன். இதனிடையே யாரும் அறியாமல் ஊருக்கும் போயிருக்கிறேன். போகிற போக்கில் சில திருட்டுகளும் நடத்தியிருக்கிறேன். பிறகு மணி எதுவுமே கேட்கவில்லை. பில்லுக்கான பணத்தையும் அவன்தான் கொடுத்தான். கை கொடுத்து விட்டுப் பிரிந்தோம். மணி என்னுடைய வாழ்க்கையிலிருந்து இதோ ஒரேயடியாக இறங்கிச் செல்கிறான். நானும் கூடிய சீக்கிரம் இந்தக் கிராமத்தை விட்டுப் போய்விட வேண்டியதுதான் என்பதை அப்போது உணரவில்லை.

## 47 - பணக்காரன்

முதல் அறுவடை நன்றாக இருந்தது. கல்கத்தாவிலுள்ள ஐடிசி சிகரெட் கம்பனிதான் இதைக் கொள்முதல் செய்யும். விவசாயத்திற்கான வித்தையும் அவர்களே அனுப்பி வைத்து விடுவார்கள். லைசன்ஸ் இருந்தால்தான் நேரடியாக ஏற்றுமதி செய்ய முடியும். இல்லையென்றால் லைசன்ஸ் வைத்திருப்பவர்கள் மூலம் விற்கலாம். இதில் நல்ல ஒரு சதவிகிதம் கமிஷன் கொடுக்க வேண்டும். செட்டியார் என்ற ஒருவர்தான் அங்குள்ள மிகப் பெரிய ஏற்றுமதியாளர். அவர், புகையிலையை நானே எடுத்துக் கொள்கிறேன் என்றார். தைரியமாக நான் இதில் ஈடுபடுவதற்கான காரணமும் இதுதான். அறுவடை முடிந்து புகையிலையைப் பாடம் செய்து தரம் பிரித்த பிறகு நானும் யூஸஃபும் செட்டியார் வீட்டிற்குச் சென்றோம். விசாலமான தோப்பு. நாங்கள் வீட்டின் வெளியே நின்றுகொண்டிருந்தோம். குழந்தையுடன் வந்த ஒரு பெண்மணி எங்களைப் பார்த்தாள். அவருடைய மனைவி. யூஸஃபை இந்தப் பெண்மணிக்குத் தெரியும். என்னை நானே அறிமுகம் செய்துவிட்டு, செட்டியாரிடம் சொன்னால் போதும், தெரியும் என்றேன்.

அந்தப் பெண் உள்ளே போய்விட்டு வந்து, "கக்கூசுல இருக்கார்" என்று சொல்லிவிட்டுப் போனவள்தான். ஒரு முக்கால் மணி நேரம் அங்கேயே நின்றிருந்தோம். உட்காரவும் கூடச் சொல்லவில்லை. இதனிடையே பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்புவதற்காக வெளியே வந்தாள். பதினாறு கிலோமீட்டர் தொலைவிலுள்ள நஞ்சன்கோடிற்கு அனுப்பி குழந்தைகளை ஆங்கிலம் படிக்க வைக்கிறார். கொஞ்ச நேரத்திற்குப் பிறகு எங்கோ போவதற்காக உடுத்தொதுங்கி வெளியே வந்தார் செட்டியார்.

யூஸஃப் உருதுவில் விஷயங்களைச் சொன்னான். இங்குள்ள எல்லா வியாபாரிகளுக்கும் உருது தெரியும். அவர் ஏதோ பதில் சொல்லிவிட்டு எங்களைக் கடந்து போனார்.

யூஸஃப் சொன்னான்: "செட்டியார் ஏமாத்திட்டார். அவருக்கு வேண்டாமாம்."

"இனி என்ன பண்றது?"

"ஒண்ணும் பண்றதுக்கில்லை. கம்பெனிக்கு நேரடியா அனுப்புறதுன்னா லைசன்ஸ் வேணும்."

செட்டியாரின் பின்னால் சென்று யூஸஃப் கெஞ்சினான். கடைசியில் அரைமனதுடன் ஒப்புக்கொண்டார்.

"இந்த ஒரு தடவை மட்டும் வாங்கிக்கிறேன்."

எங்களுக்கு இதுவே போதுமானதாக இருந்தது. சந்தை நிலவரப்படி எடுத்துக்கொள்வதாகச் சொன்னதும் ஊரிலுள்ளவர்கள் சொல்வதுபோல் செட்டியார் கண்ணில் இரத்தவோட்டமில்லாத ஆளொன்றுமில்லை என்று நினைத்துக்கொண்டோம். 14 பண்டல் சரக்கிருந்தது. ஏறத்தாழ 600 டன் வரும். கம்பெனி எஞ்சினீயர் ஒவ்வொன்றிலும் கையைக் குத்தி நுழைத்து இலையை எடுத்துப் பரிசோதித்தார். பொன்னிறத்திலான புள்ளி விழாத இலைகள். ஃபஸ்ட் கிரேடு என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால், 14 பண்டலையும் அவர் தேர்ட் கிரேடு என்று சொல்லிவிட்டார். செயரில் பக்கத்தில்தான் உட்கார்ந்திருந்தார் செட்டியார். நாங்கள் அவரிடம் முறையிட்டோம்: "இது பெரிய அநீதி." என்றோம். செட்டியார் கை விரித்தார்: "நானென்ன சொல்றது? கம்பெனிக்காரங்களில்லையா?"

மானேஜரும் செட்டியாரும் சேர்ந்து எங்களை மோசம் செய்துவிட்டார்களென்பதைப் புரிந்துகொண்டோம். மூன்றாம் தரமென்று சொல்லிவிட்டால் விலை மிகவும் குறையும். எங்களுக்கு மிகப் பெரிய இழப்பேற்பட்டது. நான் மனதிற்குள் கருதி வைத்தேன்:

"செட்டியாரே, கண்டிப்பாக உமக்கொரு ஆபரேஷன் பண்ணணும்."

நான் சொன்னேன்: "அடுத்த சீஸன்ல நமக்கு லைசன்ஸ் கிடைச்சிருக்கணும். இனி, இவர் நம்மை ஏமாத்துறதுக்கு அனுமதிக்கக்கூடாது."

யூஸஃப் சொன்னான்: "அது அவ்வளவு சுலபமான விஷயமில்லை."

"ஏதாவது வழியைக் கண்டு பிடி."

"ஃபீல்ட் ஆஃபீசருக்கு முதல்லே நம்பிக்கை வரணும். அதுக்கு நாம இந்தப் பகுதியில குறிப்பிட்ட அளவு புகையிலையை உற்பத்தி பண்றவங்களாக இருக்கணும்."

"இவ்வளவுதானே? ஆஃபீசரை எப்படியாவது வளைச்சிப் போட முயற்சி

பண்ணு. அடுத்தத் தடவை இந்தப் பகுதியில மிக அதிகமாகப் புகையிலை உற்பத்தி பண்றவங்க நாமதான்."

திரும்பி வரும்போது யூஸஃப் எதையோ யோசித்தபடி வந்துகொண்டிருந்தான். கொஞ்ச தூரம் நடந்ததும் பின்னாலிருந்து அழைத்தான்: "சலிம்பாய்."

நான் நின்றதும் கேட்டான்: "நான் துரோகம் பண்ணிட்டதா உங்களுக்குத் தோணுதா? செட்டியாரும் நானும் சேர்ந்து ஒரு அட்ஜஸ்ட்மென்ட்?"

நான் இல்லையென்றேன்.

"ஏன் அப்படி."

"ஏனோ தெரியலை, அப்படித் தோணலை. இனி ஒருவேளை அப்படித் தோண்றதா இருந்தாலும் என் தம்பி இப்படிப் பண்ணிட்டான். அவ்வளவுதான். அதுக்காக, உன்னை வெறுக்கவோ குற்றம் சொல்லவோ மாட்டேன்."

யூஸஃப் எதுவும் சொல்லாமல் என் கைகளைப் பற்றினான்.

அவனது கையை இறுகப் பிடித்தபடி சொன்னேன்: "பணமுங்கிறது இப்படித்தான். ஒரு வழியா வரும்; மற்றொரு வழியாப் போகும். இதையெல்லாம் தடுக்க முடியாது. விதிபோல நடக்கட்டும்."

யூஸஃப் விவசாயிகளிடம் போய் சொன்னான்: "அடுத்த சீஸன்ல நீங்க அறுக்கிற புகையிலையை எனக்குத் தாங்க. நான் வாங்கிக்கிறேன்."

"வழக்கமாச் செட்டியாருக்குக் கொடுக்கறத எப்படித் தர முடியும்?" என்றார்கள் விவசாயிகள்.

"உங்களுக்கும் லாபமிருக்கு. மார்க்கெட் விலையைவிட நான் அம்பது காசு அதிகமாத் தர்றேன். ஒரு ரூபாய்தான் விலையாக இருந்தாலும் அம்பது காசு அதிகமா தர்றேன். அப்புறம் கிரேட் பிரிக்கிறதுல ஏமாத்த மாட்டேன். வியாபாரத்தில நேர்மை இருக்கும். நான் இங்கேயே பிறந்து வளர்ந்தவன்."

இனி ஆபரேஷன் செட்டியாருக்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். இதற்கான முழுப் பொறுப்பும் என்னுடையது.

செட்டியார் நேரடியாக விவசாயம் செய்யும் நிலத்தில் புகையிலையைப் பாடம் செய்ய மொத்தம் ஐந்து போர்மாக்களுண்டு. போர்மா என்றால் புகையிலையைப் பாடம் வைக்கும் அறை. என் வீட்டில் சில பழுது பார்ப்பு வேலைகள் நடந்தபோது மனைவியையும் குழந்தையையும் குஞ்ஞு முகம்மது அண்ணனின் வீட்டில் தங்க வைத்துவிட்டு நான் இதற்குள் எட்டு நாட்கள் தனியாகவே இருந்திருக்கிறேன். அது ஒரு நல்ல அனுபவம்.

அறைகளுக்கு ஒரேயொரு கதவுதான். கிட்டத்தட்ட முப்பதடி அகலமும் உயரமுமுள்ள அறைகள். ஒரு ஆள் நுழையுமளவிலான, நான்கடி அகலமுள்ள இரும்புக் குழாய்கள் பல இடங்களில் வைக்கப்பட்டிருக்கும். குழாயின் ஒரு பகுதி, சுவரைத் துளைத்துக்கொண்டு வெளியே நீண்டிருக்கும். அங்கே நான்கடி உயரத்தில் அடுப்பு இருக்கும். இதில் விறகுகளை அடுக்கித் தீ வைப்பார்கள். வெளியில் எரியும் தீயில் குழாய்கள் பழுக்கத் தொடங்கும். அறைக்குள் பெரிய பெரிய மூங்கில் கம்புகளில் புகையிலைகள் கோர்த்து வைக்கப்பட்டிருக்கும். நூறு முதல் ஐநூறுவரை புகையிலைகள் ஒரு தட்டிலிருக்கும். அரை முதல் ஒரு அடிவரை வாழையிலைபோல் விரிந்தப் புகையிலைகள், மெல்ல சுருள ஆரம்பிக்கும். இரண்டு நாட்கள் இப்படி இரவு பகலாகத் தீ மூட்டிக்கொண்டே இருக்க வேண்டும். உள்ளே சூட்டின் அளவைத் தெரிந்துகொள்ள ஒரு கருவி இருக்கும். வெளியிலிருந்து தீ மூட்டுபவன் ஒரு கயிற்றால் இதை இழுத்தெடுத்து இடையிடையே பரிசோதித்துப் பார்ப்பான். வெப்பம் கூடவோ குறையவோ செய்தால் புகையிலை பாழாகி விடும். ஆகவே, கண்ணும் கருத்துமாகச் செய்ய வேண்டிய வேலை இது. இதற்கு நல்ல அனுபவம் தேவை.

இரண்டு நாட்களாகச் சூடேற்கும் பச்சையிலைகள் பல நிறங்களில் மாறும். பொன்னிறத்திற்கு மாறுவது முதல் தரம். இலேசான மஞ்சளும் சிறு கறுப்புப் புள்ளிகளும் விழுந்தது இரண்டாம் தரம். பெரிய அளவில் கறுப்புப் புள்ளிகள் விழுந்தது மூன்றாம் தரம். பெரும்பாலும் நாம் வெற்றிலைக்குச் சேர்த்துக்கொள்வது இந்தப் புகையிலைதான். கரிந்து போனது நாலாம் தரம். இது கழிவு. சார்மினார் போன்ற சிகரெட் வகைகள் நல்லப் பக்குவம் வந்த புகையிலையில் தயாரிக்கப்படுபவை. அதிகம் சூடேற்கும் புகையிலையில் நிகோடின் அளவு மற்றவையிலிருந்து குறைவாக இருக்குமென்று சொல்வார்கள். ஆனால், இழுக்கும்போது சற்றுக் கடினமாக இருக்கும்.

குத்தகைக்கு எடுத்த நிலத்தில் விவசாயம் தொடங்கியது. கணேஷின் உதவியுடன் பார்வதிபுரத்திலுள்ள பெண் தொழிலாளர்களைப் பணியில்

அமர்த்தினோம். மிகத் திறமையான ஊழியர்களை கணேஷ் விட்டுத் தந்தான். நான் இவர்களை அக்கா என்றுதான் அழைப்பேன். என்னை இவர்கள், முதலாளி என்ற பொருளில் ஸாய்வர் அல்லது சௌக்கார் என்று அழைப்பார்கள். நான் இதை அனுமதிப்பதில்லை. சலிம்பாய் என்று அழைத்தால் போதும் என்பேன். ஆனால், எவ்வளவுதான் சொன்ன பிறகும் பெரும்பாலான பெண்களும் இதற்குத் தயாராக இல்லை. அவர்களுக்கு இதெல்லாம் மிகப் பெரிய ஆச்சரியங்களாக இருந்தன. நான் இதையெல்லாம் வெறும் பம்மாத்திற்காகச் சொல்லவுமில்லை. நான் யாரென்று எனக்கல்லவா தெரியும். இந்த நினைவு எனக்குள் எப்போதுமே இருந்து வந்தது. உழைத்துப் பிழைப்பவர்கள் போற்றுதலுக்குரியவர்கள். இவர்களுக்கு வேலை கொடுப்பதென்பது என்னுடைய பாவக்கறைகளை ஓரளவுக்காவது போக்கிப் புண்ணியம் சேர்க்க உதவும்.

நான் ஏற்கனவே ஒரு விஷயத்தை முடிவு செய்து வைத்திருந்தேன். எக்காரணத்தை முன்னிட்டும் எவ்வளவு தூண்டுதல்கள் ஏற்பட்டாலும் பெண் தொழிலாளர்களை உடல்ரீதியாக அணுகுவதில்லை என்று. பதினான்கு முதல் அறுபது வயதுவரையிலான பெண்கள் அங்கே வேலை செய்தார்கள். எல்லாருமே எனக்கு அக்காதான். உழைக்கும் பெண்கள் என்பதால் நல்ல உடல்கட்டுள்ளவர்கள். தொய்வுகள் கரைந்து, கவிழ்த்து வைத்த குடம்போல் பின்புறப் பகுதிகள் இயற்கை அழகுடனிருக்கும். குனிந்து நிமிர்ந்து வேலை செய்யும் வேளைகளில் அவர்களது உடம்பிலிருந்து நான் பார்வையைத் தவிர்த்துக்கொள்வேன். இதனால் அவர்களுக்கு சுதந்திரமாக வேலை செய்ய முடிந்தது. மனக்குரங்கின் சேஷ்டைகளை இனம் கண்டு, மறு வினாடியில் நேர் செய்து விடுவேன். "நீ பார்க்காத பெண்களா?" மனதிலுள்ள நல்லவன் அல்லாதவனிடம் கேட்பான்: "அப்போதைக்கு உன்னுள் தீ தணியலாம். ஆனால், மீண்டும் புகையும். இதிலேயே உன்னை நீ பொசுக்கிக்கொள்வாய்."

என் மனைவி சொல்வாள்: "மாமிசத்தோட கூடுதல் குறைவுகளைத் தவிர என் உடம்பில இல்லாத வேறெதையாவது மற்ற உடம்புகள்ல உங்களால பார்க்க முடியுதா? புறத் தோற்றங்கள்ல வெறும் காமம் மட்டும்தான் இருக்கும். நேசம்கிறது மனசிலுள்ளது. நான் உடன்படுவேனாங்குற சந்தேகத்தை வெச்சு நீங்க விலகிப்போறதா இருந்தா என்மீதான எந்த உரிமையையும் நீங்க விட்டுக்கொடுக்கத் தேவையில்லை."

என்னை மனிதனாக்கிய அந்தப் பெண்ணின் சொற்களை வேதமாகக் கருதியே நான் வாழ்ந்துகொண்டிருக்கிறேன். பெண்ணைத் தோளில் சுமக்கலாம். தலையில் வைக்கக் கூடாது. தலையிலிருக்கும்போது

அவளால் அன்பு காட்ட முடியாமல் போகிறது. அப்போது ஆகாயம் மட்டுமே அவளுக்குத் தெரிகிறது. வேறு பிடிமானங்கள் இல்லாமல் போகிறது. ஒரு திருடன் உபதேசியாகிறானென்று நினைக்க வேண்டாம். திருடுவான் என்பதற்காக அவன் சதாகாலமும் பொய் சொல்லித் திரிய வேண்டுமென்றில்லை. திருடனைப்போல் வேறு யாராலும் உண்மை பேச முடியாது. அதற்கான சுதந்திரத்தையும் இந்தச் சமூகம்தான் அவர்களுக்குத் வழங்கியிருக்கிறது. பாக்கைத் திருடினால் கமுகு மரத்தின் உரிமையாளன் போலீசில் பிடித்துக் கொடுப்பான். இத்துடன் அவன் திருடனாகவும், போலீசாரின் வழக்குத் தயாரிக்கும் இயந்திரமாகவும் மாற்றம் பெறுகிறான். யாரும் அவனை வேலைக்குச் சேர்த்துக்கொள்ள மாட்டார்கள். உயிர் வாழ வேறு வழியில்லை, திருடுவதைத் தவிர. ஒவ்வொரு முறையும் ஊடகங்களில் புகைப்படத்துடன் பெயர் வெளியாகும். சமூகமும் குடும்பமும் வெறுத்த பிறகு, கட்டற்ற சுதந்திரம்தான். இதன் சுகத்தை அனுபவித்துதான் உணர முடியும். குறிப்பாக, தங்களைப் பெரிய மனிதர்களாகக் காட்டிக்கொள்ளப் படாதபாடு படும் பகல் திருடர்களைக் கொண்டது நம் சமூகம். ஆனால், நானுட்பட இந்தச் சுதந்திரத்தைத் தவறாகவே பயன்படுத்துகிறோம். சரிவரப் பயன்படுத்துவதாக இருந்தால் திருடன்களென்று சமூக ஒப்புதல் பெற்ற ஒரே காரணத்தால் நிறைய சாதிக்க இயலும்.

நானொரு முதலாளியல்லவா? ஒரு வார்த்தைக்காகவும் ஓரப் பார்வைக்காகவும் அவர்கள் காட்டாத சேஷ்டைகளில்லை. சில நல்ல பெண்களைத் தவிர. இது அவர்களுடைய குற்றமுமல்ல. சமூகக் கட்டமைப் பின் மொத்த மனோபாவத்தில் இவர்களுக்கான பகுதி இது. வேலையில் மற்றவர்களுக்குக் கிடைக்காத சலுகை, ஊதியத்தில் சலுகை. இதில் உடல் சார்ந்த அனுகூலங்கள் கணக்கில் வரவில்லை.

பொறுமையிழந்த ஒருத்தி கேட்டாள்: "ஏன் சௌக்கார், உடம்புக்கு ஏதாவது . . ?"

நான் புரியாததுபோல் நடித்தேன்: "என்னது?"

"இல்லை, இவ்வளவு அழகழகான பெண்களிருந்தும் . . ."

நான் சொன்னேன்: "லெக்ஷ்மி, சின்ன வயசுல நான் அதிகமும் ஓட்டல்ல சாப்பிட்டவன். இப்போ, பூராவும் வீட்டுச் சாப்பாடுதான். தீவனம் எல்லாமே ஒரே மாதிரிதான். இருந்தாலும் மனசுக்கும் உடம்புக்கும் வீட்டுச் சாப்பாடுதான் நல்லது. இதை நீ மற்றவங்ககிட்டேயும் சொல்லிடு."

புனிதனாவதற்காக நடிக்கவில்லை. மனிதர்களுக்கே உரிய பலவீனங்கள் இருக்கவே செய்கின்றன. சிலதையாவது கடந்துபோக முடிந்தால் பெரிய விஷயம்தானே? அறிமுகப்படுத்தும்போதே ஏஜென்ட் சொல்வான்:

"சார், அதோ அந்த நீலச் சேலை இருக்கே, நல்ல ரகம். மலைப்பாம்புக் கணக்கா சும்மா நெளிஞ்சு கொடுக்கும். அந்த மூணாவதும் நாலாவதுமா போறதுங்க புதுசு, நல்ல நாட்டுக்கட்டை. முதலாளிங்களுக்கு மட்டும் வளைஞ்சு கொடுக்கும். பின்னால வர்ற ரெண்டும் புதுசு. கொஞ்சம் திமிர்க்கும். முதலாளிங்க பிடிச்சணைக்கலாம். நின்னு கொடுக்கும்.

கடைசி வரிசையில அரண்டுபோய் நிக்கிற நாலு பேர்கிட்டயும் முயற்சி பண்ணாம இருக்குறது நல்லது. நல்ல குடும்பத்தில உள்ளவங்க. பிழைக்க வேறு வழியில்லாத நிலைமையில வேலைக்கு வந்திருக்காங்க. முதலாளியோட ஆட்கள் கிட்டேயும் சொல்லிடுங்க, அவங்களைத் தொந்தரவு செய்ய வேண்டாம்னு. சொன்னதுக்காகவே அதிகமாகத் தொந்தரவுப் பண்ணுவானுங்க. அப்படி ஏதாவது நடந்தா நான் எல்லாரையும் அழைச்சிட்டுப் போயிடுவேன். சலிம் சார் ரொம்ப நல்லவருன்னு கணேஷ் சார் சொன்னாருங்குறதுக்காக மட்டும்தான் கூப்பிட்டுட்டு வந்திருக்கேன். என்னதான் இருந்தாலும் முதலாளி. அப்படியே நெருங்கினாலும் பலப் பிரயோகம் நடக்காமப் பாத்துக்குங்க. பிறகு, ஏதாவது மலையுச்சியிலேருந்து குதிச்சுடுவாளுங்க."

நான் சொன்னேன்: "யாரா இருந்தாலும் எனக்குத் தேவையில்லை. எல்லாத் தேவதைகளோடும் புரண்டு எழும்புனவன் நான்."

மனக்குரங்கு அசையவே இல்லையென்றால் அது பொய். நான் விஸ்வாமித்திர மகாமுனிவருமில்லை. மனதைக் கட்டுப்படுத்தவும் நல்ல வழியில் வாழவும் முயற்சி செய்த வெறுமொரு திருடன். இதனிடையில்தான் கௌரி வருகிறாள்.

## **48 -** கௌரி

ஆந்திராவிலிருந்து வந்த தொழிலாளர்களில் ஒருத்தி. எக்காரணத்தை முன்னிட்டும் நெருங்க வேண்டாமென்ற பட்டியலில் இடம் பெற்றவள். பத்துப் பெண்கள் நிற்குமிடத்தைக் கடந்துபோக நேர்ந்தால், இலேசாகக் கவனித்துப் புன்னகை தூவிவிட்டுச் சென்று விடுவது என் வழக்கம். ஆனால், கௌரி அங்கே நின்றால் கண்கள் சிக்கிக்கொள்ளும். இருபது வயதிருக்கும். மலர்ந்த உதடுகளும் அழகான மூக்கும். செழுமையிலும் சிக்கென்ற உடல்கட்டு கொண்டவள். அவளது வசீகரக் கண்களின் முன் எந்த சினிமா நடிகையும் தோற்றுப் போவாள். அழகின் எல்லாக் குணங்களுமுள்ளவள். கடவுள்மீது கோபம் வருகிற அழகு. கோமேதகத்தைக் குப்பையில் வீசிய இரசனை கெட்ட கடவுள். அழகுடன் எந்தத் தொலைதொடர்பும் இல்லாதவர்கள் சகல சௌபாக்கியத்துடனும் பிறக்கிறார்கள். இவ்வளவு அழகும் ஏதாவதொரு குடிகாரனிடம் வந்து சேரும். அடியும் உதையும் வாங்கி அது இல்லாமல் போகும். காண்பவர்களெல்லாம் வாய்ப்பை உருவாக்கி உரசிப் பார்ப்பார்கள். என்றாவதொரு நாள் தன்னுடைய தனித்துவத்தை அவள் இழந்துவிட நேரிடும். இந்த அபூர்வ இராகத்தை நல்ல பாடகனொருவன் ஆலாபனை செய்தே ஆக வேண்டும். இப்படியான சிந்தனை மனதில் உருக்கொண்ட பிறகு பார்க்கும்போதெல்லாம் மனதிற்குள் அவள் கிளுகிளுப்பைத் தூண்டினாள்.

என்னுடைய அலுவலகத்தைச் சுத்தம் செய்ய அனுப்பி வைக்கப்படுபவள் கௌரிதான். அலுவலக அறையைச் சுத்தம் செய்வதென்பது கற்புநிலையைக் கத்தி முனையில் நிறுத்தும் ஏற்பாடு. கூட்டத்திலிருந்து வழி தவறி நிற்கும் பெண்மானுக்குக் கொடிய விலங்குகளால் ஏற்படும் கதிதான் இங்கேயும்.

ஒருநாள் ஏஜென்ட் என்னைப் பார்ப்பதற்காக அலுவலகத்திற்கு வந்தான். நான் ஐம்பது ரூபாய் கொடுத்தேன். பரவசப்பட்ட நிலையில் அவன் சொன்னான்: "கௌரியை ஸாய்வர் பார்த்திருக்கீங்களா?"

"ஆங் . . . பார்த்திருக்கேன்." நான் சிரத்தையில்லாததுபோல் சொன்னேன்.

"அதில்லை, சரியா ஒருதடவைப் பார்க்கணும். 'கமலஹாசனாகவே இருந்தாலும் என் அனுமதியில்லாம உடம்பைத் தொட்டா, தொட்ட உடம்பில கத்தியை ஏத்திடுவேன்'னு சொன்னவ, இப்போ சாரோட ஆஃபீசை நான்தான் கூட்டுவேன்னு சொல்றா. உங்களை அவ தெய்வமா நினைக்கிறா. கத்தியை இடுப்பில சொருகிட்டு நடக்கிறவ இதைச் சொல்றான்னா பார்த்துக்குங்க. ஸாய்வரை அந்த அளவுக்குப் பெண்கள் உயர்வா நினைக்கிறாங்க."

என்னோட உயர்வு எனக்குத் தெரியாதா? நான் சரி என்று சொல்லி அவனை அனுப்பி வைத்தேன்.

அலுவலகத்தில் கௌரியின் அருகாமை என்னை மிகுந்தத் தொந்தரவுக்கு உள்ளாக்கியது. சில நேரங்களில் எதையாவது சொல்லியபடி நெருங்குவாள்: "நான் இங்கே வர்றதுல மற்றவளுகளுக்குப் பொறாமை. ஸாய்வருக்கு சாயா வரும்போது எனக்கும் சேர்த்து வந்திடும்கிறதுதான் அதுக்குக் காரணம்னு நான் சொல்லிடுவேன்." சுற்றுப்புறங்களைச் சுத்தம் செய்வது, சாயா கொண்டு வருவது போன்ற வேலைகளைச் செய்தபடியே அவள் இரண்டு மணி நேரத்தையாவது இங்கே செலவிடுவாள். தனிப்பட்ட முறையில் எனக்கு இது சிரமமாக இல்லை. ஆனால், நாம் இயல்பாகப் பார்க்கும்போது கண்ணில் படுவது அவளது இளமைத் திமிர்ப்புகளாக இருக்கும். பிடிங்கிக்கொண்டு ஓடப்பார்க்கும் மனத்திற்குக் கண்கள் ஒத்துழைக்க மறுக்கும். அப்போது ஏதோ வெற்றிப் பெருமிதத்துடன் அவள் ஏறிட்டுப் பார்த்துச் சிரிப்பாள்.

ஒருநாள், காலையில் அலுவலகத்தில் யாருமில்லை. இலேசாகத் தலை சுற்றுவதுபோலிருந்தது. படுத்தேன். இரண்டு நிமிடம் கண்களை மூடிவிட்டுப் பார்க்கும்போது அறைக்குள் கௌரி. கூஜாவிலிருக்கும் தண்ணீரையும் இராமிச்சம் வேரையும் மாற்றிவிட்டு புதியதாக நிரப்புகிறாள். கவனம் முழுவதும் இங்குதான். குனிந்து நிற்கும் அவள் முன்பின் சாய்ந்துவிடாமலிருக்கக் கனதன நிதம்பங்கள் சமன்படுத்துவது போலிருந்தது. நான் எழுந்திருக்கும்போது வாசலில் நின்றிருந்த அவளது சுவாசக்காற்று என் மூக்கை ஸ்பரிசித்தது. பலவீனமான அந்த நிமிடத்தில் எல்லாமே மறந்துபோய்விட்டது. அவளது கையைப் பற்றி, துடிக்கும் கன்னத்திலொரு முத்தமும் பதித்து, அப்படியே உடல் முழுவதுமாய் ஏறு தழுவி நிற்கையில், கொல்லம் மைலக்காடு ஏற்றத்தில் ஏறியிறங்கும் உணர்வு. கனதனமிரண்டும் தைத்து அப்புறம் உருவுவதுபோல் மார்பு வலித்தது. சற்று இழுத்தணைத்தபோது ஒரு சத்தம். திடுக்கிட்டேன். அவள் கையில் வைத்திருந்த கூஜா விழுந்துடைந்திருந்தது. இரண்டு பேர்மீதும்

தண்ணீர். திடீரென்று மனதிலொரு மின்னல். அத்துடன் எல்லாமே சாந்தமாயின. எப்படி நிகழ்ந்ததென்று இன்றும் புரியவில்லை. மனதை அந்த அளவிற்குக் கட்டுப்படுத்தியதன் விளைவாகவும் இருக்கலாம். என் மனைவியின் மன வலிமையின் விளைவாகவும் இருக்கலாம். அல்லது, ஒரு அரக்கனை மனிதனாக்கும் கடவுளின் சோதனையில் நான் பெற்ற வெற்றியாகவும் இருக்கலாம்.

கௌரியின் கைகளைச் சேர்த்துப் பிடித்தபடி சொன்னேன்: "ஏதோ தெரியாம நடந்துப் போச்சு. தவறுதான்."

என்ன நடக்கிறதென்றே புரியாமல் அவள் திகைப்புடன் பார்த்தாள்.

நான் கேட்டேன்: "குளிச்சி எத்தனை நாளிருக்கும்?"

முதலில் அவள் பதில் சொல்லவில்லை. அதிர்ச்சியிலிருந்து விடுபடாமலிருந்தாள்.

மீண்டும் கேட்டேன்.

"அமாவாசை பௌர்ணமி, தோறும்" என்றாள்.

"ம்ஹும், தினமும் குளிக்கணும்."

அவளுடம்பில் அதிகமான நெடி வீசியதை அப்போதுதான் உணர முடிந்தது. வாயிலிருந்து புகையிலை சேர்த்த வெற்றிலை பாக்கின் எரிகிற நெடி. காம உணர்வின்போது தூண்டுதலை அதிகரிக்க உதவுவதை நாற்றமாக உணர்கிறேன்.

"ஆணாப் பொறந்தவன் தொட்ட மறுநாள்தான் இங்குள்ளவங்க குளிப்பாங்க."

"இல்லை, தினமும் குளிச்சுடணும். புகையிலை சேர்த்து வெற்றிலை போடாதே. வாழ்க்கைச் சீரழிஞ்சு போயிடாமக் கவனிச்சுக்க. ஒருவேளை உன்னால அது முடியும். ஒருவேளைதான். எப்பவும் மற்ற பெண்களோட சேர்ந்தே இரு. சீரழிஞ்சுபோன ஒரு சகோதரனுடைய வார்த்தைகளா இதை நீ நினைச்சுக்க."

கௌரிக்குப் புரிந்ததோ என்னமோ? ஆனால், கண்கள் நிறைந்தன. வருத்தமோ அல்லது கோபமோ கூட இதற்குக் காரணமாக இருக்கலாம்.

கௌரியைப் பிறகு நான் தூரத்தில்தான் பார்த்திருக்கிறேன். அவளை நெருங்காமல் கவனித்துக்கொண்டேன். மறுநாள் முதல் வயதான ஒரு பெண்மணிதான் சுத்தம் செய்ய வந்தாள். இவள் குளிக்கிறாளா, புகையிலை சேர்த்து வெற்றிலைப் போடுகிறாளா என்றெல்லாம் நான் பார்க்கப் போகவில்லை.

நான் மனிதக் கடவுளாகி விட்டேனா என்றால் இல்லை. மனத்தின் அடியாழத்தில் கிடக்கும் காமத்தை வேருடன் பிடுங்கியெறிய வேண்டும். நாம் அதனை மேலோட்டமாகக் கத்திரித்துவிட்டு ஞானம் பிறந்ததாகவும், காம, குரோத, மோக ஆதிக்கங்களிலிருந்து விடுபட்டதாகவும் கர்வம் கொள்கிறோம். அது மீண்டும் இலை விடுகிறது. மனத்தில் அடியாழத்தில் இறங்கி, பூண்டோடு அதனைப் பிடுங்கிப் போடுவதுதான் ஞானம். கையால் இதனைக் கத்திரித்து விட இயலாது. கோடாரி வேண்டும். எல்லாமே போய்விட்டது. எப்படிப் போனதென்று தெரியவில்லை. இப்போதும் என் பார்வையில் பெண்கள் படுகிறார்கள். அது, அங்க லாவண்யங்களில் செல்லவில்லை. கண்களும் மனமும் திரும்பிச் செல்லும் திசையறிவைப் பெற்றிருக்கிறது, இது ஒரு தொடர் பயிற்சி. காமத்தின் எதிர்த்திசையை நோக்கித் தப்பித்து விடுவதற்கான தீவிர மோகம். ஆனால், எல்லாவற்றிற்குமே என் மனைவியின் மரணம் தேவைப்பட்டிருக்கிறது. வெறும் முப்பத்து மூன்று வயதில் காலன் அவளைக் கொண்டுசென்ற பின்பு. அதைப் பிறகு சொல்கிறேன்.

காம வலை: மேலும் ஒருமுறை நான் காமத்தின் மோகவலையில் அகப்பட்டேன். மைசூரில் வைத்து. இம்முறை தீவினை செய்தது போதை. போதையிலாழ்ந்த மனம் தூக்குக்கயிறையும் மலர்ச்சரமாய் எண்ணி மாரில் சூடிக்கொள்ளத் தூண்டும். நண்பர் டிஒய்எஸ்பி. ஸ்காட்ச் கொண்டு வந்தார். குடித்துவிட்டு மதியத்திற்குப் பிறகு வீட்டிற்கு வந்தேன். ஊரிலிருந்து வந்த மனைவியின் தங்கை அப்போது எங்களுடன்தான் இருந்தாள். பதினைந்து வயதுதானிருக்கும். வயதுக்கு மீறிய வனப்பு. குழந்தையை இவள்தான் கவனித்துக்கொள்வாள். நான் வரும்போது உடல் வளங்கள் தெரிய, குழந்தையின் அருகில் பாய் விரித்துச் சுருண்டுப் படுத்திருந்தாள். உள்ளில் உறையும் சாத்தான் இரத்த அழுத்தத்தை அதிகரித்தான்.

நான் கேட்டேன்: "கதவைத் திறந்து போட்டுட்டாடி தூங்குவே?"

எழுந்து தலைமுடியைக் கட்டுவதற்காக அவள் கையைத் தூக்கும்போது பார்வை மார்மீது பதிந்தது. நான் அதுவரை அப்படிப் பார்த்ததில்லை. போதை மூளையைக் குடைந்தது. நான் கேட்டேன்: "அக்கா என்ன

பண்றா?"

"தையலுக்குப் போயிருக்கா. சாயங்காலமாகும் வர்றதுக்கு."

"சரி, படுத்துக்க" என்று சொல்லிவிட்டு நான் அறைக்குள் சென்றேன்.

அவள் குழந்தையின் அருகில் மீண்டும் சுருண்டுகொண்டாள். நான் பக்கத்தில் வந்துப் படுத்தேன். அவள் துள்ளியெழ முயன்றாள். நான் சொன்னேன்:

"ப்ளீஸ், ஒரு தடவை . . ."

அவள் சொன்னாள்: "நான் உங்க தங்கச்சி. நாலஞ்சு சகோதரிங்ககூடப் பிறந்த, உங்க ஒரு தங்கச்சி இடத்திலிருக்கிறவ நான். இதுக்கு மேல உங்க விருப்பம்."

கீழ்மையின் அதலப் பாதாளத்திலிருந்து உடனடியாக மீண்டேன்.

"மன்னிச்சுக்க, இனி இப்படி நடக்காது."

"பரவாயில்லை" என்று சொல்லிவிட்டு, "நான் இதை அக்காகிட்ட சொல்ல மாட்டேன். அவ வாழ்க்கைப் பாழாயிடக்கூடாது" என்றாள்.

நான் சொன்னேன்: "நீ சொல்லாம இருந்தாலும் நான் சொல்லுவேன். தப்பு பண்ணினா சொல்லியே ஆகணும்."

அன்றே சொல்ல வேண்டுமென்று நினைத்தேன்; சொல்லவில்லை. மறுநாளும் சொல்லவில்லை. பெரும் குற்றவுணர்ச்சி. இரண்டு வாரங்களுக்குப் பிறகுதான் சொல்ல முடிந்தது. இடையிடையே அவள் கேட்பதுண்டு: "என்ன உற்சாகமில்லாம இருக்கீங்க?" ஒன்றுமில்லையென்று சொல்லிவிடுவேன்.

இரண்டு வாரங்களுக்குப் பிறகு சொன்னேன்: "நான் ஒரு தப்பு பண்ணிட்டேன். முதன்முறையா." அவள் வெகு இயல்பாகச் சொன்னாள்: "அதை அவ அன்னிக்கே சொல்லிட்டா. நீங்களாகவே திருத்திடவும் செய்திட்டீங்க. இனி என்ன?"

எனக்கு அவளது காலில் விழுந்து கும்பிடத் தோன்றியது. நான் சொன்னேன்:

"இனி அவளுக்கோ உனக்கோ ஏதாவது சந்தேகமிருந்தா . . ."

"என்ன சந்தேகம்?"

"இல்லை, ஒருவேளை இனிமேலும் நான் குடிச்சிட்டு வந்து . . ?"

"உங்களுக்கே நம்பிக்கையில்லையா?"

"முழு நம்பிக்கையிருக்கு."

"உங்க மனவுறுதி எனக்குத் தெரியும். அவ எங்கேயும் போகப்போறதில்லை. உங்கமேல ரொம்ப மரியாதை வெச்சிருக்கா அவ. இந்தச் சம்பவத்துக்குப் பிறகு அது அதிகமானதே தவிர குறையலை. தவறான எண்ணம் உருவானது தப்பில்லை. ஆனா, அதைத் திருத்திட்டீங்கங்குறது பெரிய விஷயம்."

## 49 - ஆபரேஷன் செட்டியார்

அந்த சீஸனில் இரண்டு மடங்கு பெண்களை வைத்து வேலை முன்பை விடவும் ஜரூராக நடந்துகொண்டிருந்தது. அரசிச்செட்டியார் திகைத்து நின்றார். இவன் என்ன செய்யப் போகிறான்? இப்படியொரு சவாலை அவர் எதிர்பார்க்கவே இல்லை. அவரும் என்னைப்போல் சூனியத்திலிருந்து வந்தவர்தான். தலைச்சுமடாக அரிசி வியாபாரம் செய்து பிறகு, பெண்களைக் கூலிக்கு அமர்த்தி சுமக்க வைத்து வளர்ந்தவர். இப்படியாக இருபத்தைந்து வருடங்களில் பல கட்டடங்களுக்கும் தோட்டங்களுக்கும் போர்மாக்களுக்கும் கோடவுன்களுக்கும் சொந்தக்காரரானவர். இதோ இன்னொருவன் ராக்கெட் வேகத்தில் முன்னேறுகிறான். உண்மையென்னவென்றால் இதில் எதையுமே நான் செய்யவில்லை. எல்லாமே யூஸஃப்தான்.

செட்டியார் என்னிடம் காட்டியதற்கு நானும் பதில் சொல்லியே ஆக வேண்டும். அடுத்த சீஸனில் செட்டியார் விழ வேண்டும். என்றால்தான் ஃபீல்ட் ஆஃபீஸர் என்னுடன் நிற்பார். அவருக்குத் தங்குவதற்கான வசதிகள் செய்துகொடுக்க வேண்டும். இத்தனை டன் கொள்ளளவுள்ள கோடவுனும், இத்தனை ஏக்கர் நிலமும், அதில் விவசாயமும் நடப்பதாக அவர் லோக்கல் சர்டிஃபிகேட் கொடுக்க வேண்டும். என்றால்தான் கம்பெனிக்காரர்கள் நம்புவார்கள். செட்டியார் விழுந்ததாக அறிந்தால் மறுநாள் லைசன்ஸ் கிடைத்துவிடும். இது உறுதி.

செட்டியாருக்கு எத்தனை போர்மாக்கள் இருக்கிறதென்று விசாரித்ததில், ஐந்து போர்மாக்களும் பல வருட அனுபவமுள்ள தொழிலாளர்களும் இருப்பதாகத் தெரிய வந்தது. வெப்பத்தில் சிறு வித்தியாசம் வந்தாலும் லட்சக்கணக்கில் இழப்பேற்படும். செட்டியார் தருவதில் இரு மடங்கு கூலி தருவதாகச் சொல்லி மூன்று போர்மாக்களிலுள்ள வேலையாட்களை மணி எங்களிடம் அழைத்து வந்தான். செட்டியார் அங்கலாய்ப்பிலானார். மிச்சமிருந்த இரண்டு போர்மாக்களிலுள்ள, பணத்தில் விழாதவர்களை மதுவில் விழ வைப்பதாக முடிவு செய்தோம். என்னுடைய நோக்கம், இவர்களை என் பக்கத்தில் கொண்டு வருவது மட்டுமல்ல. செட்டியாருக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டும். இதில் அவர் விழ வேண்டும். எங்கோ

போய்விட்டு வருவதுபோல் நானும் மணியும் செட்டியாரின் போர்மாவின் முன் வண்டியை நிறுத்தினோம். கைவசம், நல்ல முதல் தரமான பிராண்டியிருந்தது. பட்டை அடிப்பவர்கள், சாயம் கலந்ததைக் கண்டால் விடுவார்களா?

அங்கிருந்த தொழிலாளியிடம் "ஒரு தம்ளர் வேணுமே." என்றேன். ஸாய்வருக்கு இல்லாத தம்ளரா? இரண்டு தம்ளர்களை எடுத்துத் தந்துவிட்டு அவன் வெப்பத்தை அளவிடுவதில் கவனமானான். ஆனால், மனம் பிராண்டியில் மூழ்கியிருந்தது. நான் கேட்டேன்: "குடிக்கிறப் பழக்கமுண்டா?" அவன் தலையாட்டிவிட்டு பக்கத்திலிருந்த மொந்தையை எடுத்துக்கொண்டு வந்தான். அரை பாட்டிலை அதில் ஊற்றிக் கொஞ்சம் தண்ணீர் கலந்தேன். டபக்கென்று அதை வாயில் கவிழ்த்தான். இனி ஒரு போர்மாதான் பாக்கி. மூன்று நான்கு மணி நேரம் விழிப்புடனிருந்து மிகக் கவனமாகக் கண்காணிக்க வேண்டிய பணி. இனி அது சிரமம். இந்த இரண்டு போர்மாக்களிலும் சேர்த்து ஒரே இரவில் செட்டியாருக்கு ஏற்பட்ட நஷ்டம் நான்கு லட்சம் ரூபாய். எடயாளத்திலிருந்த காலத்தில் நான் தெரிந்து செய்த ஒரே போக்கிரித்தனம் இதுதான். இதற்கான காரண மும் செட்டியார்தான். அந்த சீஸனில் சலிம்பாஷாவின் கொடி உயரத்தில் பறந்தது. இதைக் கீழே இறக்க நம்முடைய போலீசாரால் மட்டுமே முடிந்தது. கொடியை மட்டுமா, கொடி மரத்தையும் அல்லவா பிடுங்கியெறிந்து விட்டார்கள்?

சிக்கல்கள் களையப்பட்டு விட்டன. லைசன்ஸ் கிடைக்க வேண்டுமென்றால் இனி, கம்பெனி ஆளைப் பிடிக்க வேண்டும். ஃபீல்ட் ஆஃபீசர்களை நான் குத்தகை முதலாளிகளின் ஆட்கள் என்று தவறாக நினைத்திருந்தேன். அதில் ஒருவன் பெண் பலவீனன். இவனுக்காக, நான் ஒப்பந்தக்காரனை அழைத்துச் சொன்னேன்.

"இதில் ஈடுபடுபவளாகவோ முழு விருப்பம் உள்ளவளாகவோ இருக்க வேண்டும். யாரையும் நிர்பந்தம் செய்யக்கூடாது" என்றேன்.

நான் தூரத்தில் நின்று பார்த்துக்கொண்டிருந்தேன். கடையில் கறிக்கோழி தேர்வு செய்பவன்போல் அவன் ஒரு பெண்ணைச் சுட்டிக்காட்டுகிறான். இத்துடன் ஃபீல்ட் ஆஃபீஸரின் அறிக்கை எங்களுக்குச் சாதகமாகிறது. இப்படி இரண்டு முறை நடந்தது.

## 50 - பருத்திக் குத்தகை

புகையிலை, பருத்தியின் சீஸன் முடிந்ததும் கிராமம் மெல்ல நிச்சலனமாகத் தொடங்கும். அதுவரை சேர்த்தப் பணத்தை வைத்துதான் பஞ்சக் காலத்தைச் சமாளிக்க வேண்டும். பிறகு, தின்சி வியாபாரம் நடக்கும். அதாவது ஒருவகை பண்டமாற்று முறை. காலம் தவறி விளைகிற பருத்தியைச் சேகரித்து விற்பார்கள். ஒரு கிலோ பருத்தி கொடுத்து, பீடி, எண்ணெய், சோப் என்று வாங்குவார்கள். மண்ணெண்ணெய் கிடைக்காத காலம். நாற்பது கிலோ மீட்டர் தூரத்திலிருந்து பத்து கிலோ எடையுள்ள மூன்று டப்பாக்களைக் கட்டிக் கொண்டுவந்து நான் மண்ணெண்ணெய் வியாபாரம் செய்திருக்கிறேன். அங்கே இதை சீமயெண்ணெய் என்று சொல்வார்கள். டப்பாவின் அடியில் ஓட்டைப் போட்டு அதில் சைக்கிள் டியூபை ஒட்டி வைத்து அதன் வழியாக மண்ணெண்ணெயை ஊற்றி விற்பேன். மற்ற நேரங்களில் டியூபைக் கட்டி வைத்து விடுவேன். பிளாக்கில் அப்போதே லிட்டருக்கு முப்பது நாற்பது ரூபாய் விலை இருந்தது.

யூஸஃபிடம் கேட்டேன்: "யூஸஃப், மண்ணெண்ணெய்க்கு பயங்கரத் தட்டுப்பாடு போலிருக்கே?"

அவன் சொன்னான்: "மூணு புரத்திலுமே தட்டுப்பாடுதான்."

பார்வதிபுரம், படகர்புரம், கணேஷ்புரம் ஆகிய கூட்டி வைத்த அடுப்புபோலிருக்கும் மூன்று ஊர்கள் சந்திக்கும் தாழ்வாரக் கிராமம்தான் நடுவில் அமைந்துள்ள எடயாளம். இந்த மூன்று கிராமங்களிலும் வாழ்பவர்கள் எல்லாத் தேவைகளுக்கும் எடயாளத்துக்குதான் வரவேண்டும்.

நான் சொன்னேன்: "மண்ணெண்ணெய் வியாபாரம் பண்றதுக்கு இந்த உலகத்தில எவனாவது ஒருத்தன் லைசன்ஸ் கொடுத்துத்தானே ஆகணும்?"

யூஸஃப் சொன்னான்: "கொடுக்குறான். ஆனா, பெருந்தொகை லஞ்சமும் கொடுக்கணும்."

"கொடுக்கணும்."

"கொடுத்துடுவோம்." யூஸஃப் பணத்துடன் மைசூருக்குப் போனான். எங்கெல்லாமோ போய் யார் யாரையோ பார்த்துப் பணத்தை அள்ளி வீசி, இரண்டே வாரத்தில் லைசன்சுடன் வந்தான். ஆயிரம் லிட்டர் மண்ணெண்ணெய் இருப்பு வைத்துக்கொள்ளவும் விற்பனை செய்வதற்குமான லைசன்ஸ். இது மட்டுமிருந்தால் போதும் எத்தனை ஆயிரம் லிட்டர்களும் விற்கலாம்.

யூஸஃபிடம் சொன்னேன்: "யூஸஃப், நம்ம செலவுகள் போக மண்ணெண்ணெயில் மிகக் குறைவான லாபம் போதும். மக்களின் அத்தியாவசியப் பொருள். அவர்களைப் பிழிய வேண்டாம்."

ஆயிரம் லிட்டரென்பது இரண்டு நாட்களுக்குக்கூட வராது. மாதமொன்றிற்கு மூவாயிரம் லிட்டருக்கான லைசன்ஸ் வழங்கப்பட்டிருந்தது. நூற்றுக்கணக்கான டின்கள் பிளாக்கில் வந்துகொண்டிருந்தன. இதையெல்லாம் ஏஜென்ட்கள் பார்த்துக்கொள்வார்கள். என்னுடைய விலை மற்ற கறுப்புச் சந்தைக்காரர்கள் விற்பதிலிருந்து மிகக் குறைவாகவே இருந்தது. மக்களுடன் நெருக்கமாவதற்கு இது மிக உதவியாகவும் இருந்தது. எங்களிடமிருந்து வாங்கி பிளாக்கில் விற்பனை செய்ய ஆரம்பித்த சிலரை மிரட்டி வைத்தோம். ஒரு சிலருக்கு உதையும் விழுந்தது.

தின்சி வியாபாரமும் பரவாயில்லை. மண்ணெண்ணெய்க்குப் பதில் கேழ்வரகு, பருத்தி போன்றவை கிடைக்கும். தரையில் தோண்டப்பட்ட பெரிய பள்ளங்களில் கேழ்வரகைச் சேமித்து வைப்பார்கள். இப்படிப் பாதுகாக்கப்படும் கேழ்வரகு இரண்டு வருடங்கள் வரைக்கும் கெட்டுப் போகாமலிருக்கும். விவசாயம் செய்யும் பெரும்பாலான வீடுகளிலும் நெற்குதிர்கள் போன்ற இப்படியான பள்ளங்களிருக்கும். நான்கடி அகலத்தில் தோண்ட ஆரம்பிக்கும் இந்தச் சுரங்கம் இரண்டரை மூன்றடி ஆழத்திற்கு வரும்போது அகலம் இன்னும் அதிகமாகும். ஆள் உயரத்துக்கு வரும்போது பன்னிரெண்டடி அகலமுள்ளதாக இருக்கும்.

சிறு ஏணியை வைத்து இதனுள் இறங்குவார்கள். கட்டைப் பிடித்துக் கிடக்கும் ஒருவகை விசேஷ மண்வளமுள்ள பூமி இது. ஆகவேதான் தானியம் கெட்டுப்போகாமலிருக்கிறது. இதில் தண்ணீரை ஊற்றினால் சிறிது நேரம் அப்படியே நிற்கும். பிறகு, சர்ரென்று உள்ளே இழுத்துக்கொள்ளும். சுரங்கத்தின் வாய்ப்பகுதியை கல்லோ அல்லது

தார்ப்பாளோ வைத்து மூடுவார்கள். நான் பிடிபட்டதும் பணத்தையும் தங்கத்தையும் ஒளித்து வைப்பதற்காகத் தோண்டப்பட்ட சுரங்கம் என்று நினைத்த கேரளா போலீசார் கம்பியால் இதைக் குத்திப் பார்த்தார்கள். ஏணியில் டார்ச் லைட்டுடன் உள்ளே இறங்கி சோதனை செய்தார்கள். என்னுடைய போர்மாக்களும் இதுபோன்ற சோதனைக்குள்ளானது. கேரளத்திற்கு என்னைக் கொண்டு வந்ததும் இது செய்தியாகப் பரவியது. ஜெயில்வரைக்கும் இந்தத் தகவல் எட்டியிருந்தது. பயங்கரமான ஆள்தான். பிடிபடும்போது பாதாள அறைக்குள் தங்கி இருந்திருக்கிறான். இது ராகி சேமிக்கும் அறையென்று ஊர்க்காரர்கள் எவ்வளவோ சொன்ன பிறகும் போலீசார் நம்பாமல் தீவட்டிக் கொண்டுவரச் சொல்லி ஊரிலுள்ளவர்களை அதில் இறங்க வைத்தார்கள். முதலில் இறங்குவதற்குப் பயம். பிறகு அவர்களே இறங்கிப் பரிசோதனை செய்தார்கள்.

இதனிடையே, யூஸஃபுடன் ஒருநாள் இங்குள்ள இயற்கை அழகுகளைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டேன். பிறகு, நான் மட்டும் தனியாகச் சென்றேன். பரந்து விரிந்த அமைதியான இடங்கள். தங்குத் தடைகளற்ற சுதந்திரம். தனிமை. உரக்கக் கூச்சலெழுப்பினேன். பாடினேன். அட்டகாசக் குரல் கேட்டு, தாழ்வாரங்களிலுள்ள அடர்ந்த மரங்களில் குலைத்துக் கிடந்தப் பூக்கள் உதிர்ந்தன. அடுத்தடுத்த மலைகளிலும் அது எதிரொலித்தது. கிளிகளும் வண்ணத்துப் பூச்சிகளும் அணில்களும் சுதந்திரத்தைப் போதித்தன. கேரள போலீஸ் இல்லாத இடம். மணியன்பிள்ளை இங்கே தனியன். சொந்தபந்தங்கள் ஏதுமில்லா ஏகாந்தம். பரமானந்த சுகத்தின் அனுபூதி நிலை.

அடுத்த சீஸனில் எடயாளத்தின் பருத்திக் குத்தகையும் என் கைவசம் வந்திருந்தது. இதற்கு, புகையிலைபோல் பெரிய போட்டிகளெதுவுமில்லை. முதலில் நான்கு லோடுகள் ஏற்றுமதியான பருத்தி அடுத்த சீஸனில் பத்தொன்பது லோடு. ஏற்கனவே நான்கும் ஐந்தும் லோடுகள் அனுப்பிக்கொண்டிருந்த சிறு வியாபாரிகள் வியாபாரத்தை நிறுத்திக்கொள்ள வேண்டிய நிலை. இத்துடன் எனக்கு அங்கிருந்த மரியாதையில் மிகப்பெரிய மாற்றம் நிகழ்ந்தது.

நான் வந்தால் கொச்சி சமஸ்தான மன்னர் வருவது போலாயிற்று மக்களுக்கு. மக்கள் தொடர்பைப் பாதுகாப்பதன் பொருட்டு போகும் வழியில் ஏதாவது கடையில் ஏறி சாயா குடிப்பதுபோன்ற சில பம்மாத்துகளும் நிகழ்த்துவேன். அவர்கள் விஐபிகளுக்கான விசேஷ தம்ளரை எடுப்பார்கள். அதெல்லாம் தேவையில்லை. எல்லாரையும்

போல்தான் நானும்; சில்வர் தம்ளரே போதும் என்பேன். அவன் அதை இரண்டு நிமிடம் கழுவிக் கழுவி வெளுக்க வைப்பான். சாயாவை வைத்துவிட்டுப் பண்ணையாள் போல் கை கட்டி நிற்பான். அங்கே நிற்கும் எல்லாருமே இப்படித்தான். பம்மாத்தின் அடுத்த இலக்கம், பக்கத்தில் நிற்கும் குழந்தைக்கு ஐந்து ரூபாய் கொடுப்பது. தெய்வத்தைச் சந்தித்து முறையிட்டு நின்றால் எதை வேண்டுமானாலும் சாதிக்கலாம் என்ற நிலைமை வந்தது. வேலை வேண்டுமா, முன்பணம் வேண்டுமா ஓக்கே . . . ஓக்கே! உண்மையில் இவர்கள் இப்படித் தொழுது நிற்பதைப் பார்த்தால் மனதிற்குள் எங்கோ வலிக்கும். இந்தக் கடவுள் கேரளா போலீசின் கையில் கிடைத்தால் என்ன நடக்குமென்று இவர்களுக்குத் தெரியாது. இந்த எண்ணம் எப்போதுமே மனதிலிருக்கும்.

"என்னைக் கண்டதும் இப்படித் தொழுது வணங்கி நிக்காதீங்க. வேலையைப் பாருங்க. என்னை எதுக்காக தொழுறீங்க? நீங்க உழைக்கிறீங்க. உங்களால நான் வாழறேன்" என்பேன்.

இந்தப் புரட்சியெல்லாம் இங்கு விலைபோகவே செய்யாது. அவர்களுக்குப் பக்தி முக்கியம்.

ஒருநாள், புகையிலை வியாபாரியான மணிச்செட்டி வந்து தன்னுடைய 111 ஏக்கர் காட்டைக் குத்தகைக்கு விடப்போவதாக யூஸஃப்பிடம் சொன்னான். யூஸஃப் நினைத்தால் நடக்கும். மணிக்குக் குடும்பம் சம்பந்தப்பட்ட ஏதோ பிரச்சினை இருந்தது. நிலத்தை அங்குள்ள வியாபாரிகளுக்குக் கொடுத்தால் பிறகு திரும்பக் கிடைப்பது சிரமமாகி விடும். சலிம்பாஷா நேர்மையானவன்.

யூஸஃப் வந்து சொன்னான்: "நல்ல சான்ஸ், விட்டுட வேண்டாம்."

"அப்படின்னா வாங்கிடு" என்றேன். இப்படித்தான் மணிச்செட்டியுடனான நட்பு உருவாகிறது.

"பணம் வேணுமே?" என்று சொல்லிவிட்டு யூஸஃப் கணக்குப் போட்டான்:

"அக்கா கையில ஒரு ஐம்பதாயிரம் இருக்கும்."

வாரம்தோறும் வீட்டிற்கு வந்து யூஸஃப் கணக்கை ஒப்படைத்து விடுவான். ஓட்டல், மெஸ், காய்கறிக்கடை ஆகியவற்றின் கணக்குகள் மனைவியிடம்தான். நான் அந்தப் பணத்தில் கை வைக்கமாட்டேன்.

ஸ்மால் அடிப்பதற்கான காசு மட்டும் கிடைக்கும். தொழிலாளர்களின் வீட்டிற்குத் தேவையான அன்பளிப்புப் பொருட்கள் மொத்தமாக வாங்கி வைக்கப்பட்டிருக்கும்.

பிறகு, அங்கிருந்தும் இங்கிருந்துமாக வாங்கி யூஸஃப்தான் காரியத்தைச் சாதித்தான். மூன்று வருடக் குத்தகை. நான் ஐந்து வருடம் வேண்டுமென்று கேட்டேன். மணி எதற்கும் தயாராகவே இருந்தான்.

யூஸஃபிற்கு எவ்வளவு வேண்டுமானாலும் எடுத்திருக்கலாம். ஐந்து லட்சத்திற்கும் அதிகமான மாத வருமானம் வரும்போதுகூட அவன் ஏழாயிரம் ரூபாய்தான் எடுப்பான். ஆயிரம் ரூபாய்கூட அவன் எடுக்காத மாதங்களுமுண்டு. யூஸஃபிற்குத் தெரியும். நான் ஒரிஜினல் முஸ்லிம் அல்ல என்பது. மட்டுமல்ல, அதிகாலை ஐந்து மணிக்கு எழுந்து நான் நிர்மால்ய பூஜைக்குச் செல்வதுண்டு. நாற்பத்தொரு நாட்கள் நிர்மால்ய பூஜை செய்ய வேண்டும் என்றொரு ஆசை. பக்தி வாழ்க்கையென்பது அன்றுவரை வாய்க்கவில்லை. போலீஸ்காரர்கள் அனுமதிக்க வில்லை. காலை ஒன்பது மணிவரை பரஸ்பரம் முகம் தெரியாத அளவுக்கு இங்கே பனி மூட்டமிருக்கும். இதில் அதிகாலையில் எழுந்திருப்பது என்பது பெரிய சவால். நவம்பர் முதல் பெப்ரவரிவரை கனத்தப் பனிப் பொழிவுமிருக்கும்.

## 51 - சலிம்பாஷாவின் சனிக்கிரகம்

மைசூரிலிருந்து நான் இடையிடையே ஊருக்குச் செல்வதுண்டு. கொல்லத்தில் ஏதாவது ஒதுங்கிய இடத்தில் லாட்ஜில் தங்குவேன். இரவு வெகுநேரத்திற்குப் பிறகு டாக்சி பிடித்து, அரை கிலோமீட்டர் தொலைவில் இறங்கி வீட்டுக்கு நடப்பேன். அம்மாவைப் பார்ப்பதற்காக. பெற்ற அன்பின் நூற்றிலொரு பங்கினைக்கூட திருப்பிக்கொடுக்க இயலாத ஒரு மகன்; வயதான காலத்தில் கவனித்துக்கொள்ள முடியாத மகன் என்பதெல்லாம் போகட்டும். பெற்ற வயிற்றில் நெருப்பையல்லவா கொட்டினேன். ஜெயிலில் கிடந்தால் வெளியே வருவது வரைக்குமாவது உயிருடனிருக்கிறான் என்று நிம்மதி இருக்கும். இப்போது எங்கே இருக்கிறான் என்றே தெரியாது. இப்படியான அவஸ்தை அம்மாவுக்கு. கடிதமெழுதவும் முடியாது. முத்திரையைப் பார்த்துவிட்டு போலீஸ் மோப்பம் பிடித்து வரும். இந்த ஒரு வழிதான் உண்டு. இரவில் எல்லோரும் படுத்துத் தூங்கும்போது அம்மா என்னை நினைத்து அழுதுகொண்டிருப்பாள். நான் நல்ல நிலையில் இருக்கிறேன் என்றெல்லாம் சொல்லிப் பார்ப்பேன். "இதுவா நல்ல நிலை? பட்டினி கிடந்தாலும் மன அமைதியோட வாழணும். இப்படி, ராத்திரி வந்துட்டு விடியறதுக்குள்ளால எறங்கிப் போறதா நல்ல நிலை? போலீசுக்குப் பயந்து வாழுற இந்த நல்ல நிலை எத்தனை நாளைக்குடா?" என்பாள். நான் தலை குனிந்து உட்கார்ந்திருப்பேன்.

நான் எதுவுமே கொண்டு வருவதில்லை. கொண்டு வந்தாலும் வாங்கிக்கொள்ள மாட்டாள். அழுதழுது அம்மாவின் கண்ணீரெல்லாம் வற்றிய பிறகு அதிகாலையில் அங்கிருந்து புறப்படுவேன். ஊருக்குள் பால்காரனும் பத்திரிகைக்காரனுமெல்லாம் வருவதற்குள் போய்விட வேண்டும். அதிகாலையின் வாய்மொழிச் செய்தியாளர்கள் இவர்கள்தான்.

"மணியன்பிள்ளை விஷயம் ஏதாவது தெரியுமா?"

"எந்த மணியன்பிள்ளை?"

"கள்ளன் மணியன்."

"ஆங், எங்காவது போலீஸ்கிட்ட அடி வாங்கிச் செத்திருப்பான்."

"இல்லேங்குறேன்."

"அப்ப ஏதாவது ஜெயில்ல கிடப்பான்."

"இல்லேங்குறேனே, அவன் வந்து போயிட்டுத்தானிருக்கான். இன்னிக்கு வீட்டுக்கு வந்திட்டு அதிகாலையில் இறங்கிப் போறதை நான் பார்த்தேன்" என்பான்.

ஆகவே, நான்கு மணியானதும் ஊருக்குள் போகாமல் மற்றொரு வழியாகத் தட்டாமலை தேசிய நெடுஞ்சாலைக்கு நடப்பேன். ஏதாவது பஸ்சோ காரோ வந்தால் கை காட்டி நிறுத்தி கொல்லத்திற்குப் போவேன். அங்கிருந்து கோழிக்கோட்டுக்கு.

அம்மாவை அழ வைப்பதற்காக மட்டுமே வருகிற மகன். என்றாலும் அம்மா எனக்காகக் காத்திருப்பாள். இதுதான் ஒரு மனத் திருப்தி. வாகனம் ஓடிக்கொண்டிருக்கும்; நான் உட்கார்ந்து அழுதுகொண்டிருப்பேன். என்னை நினைத்து, என்னை நம்பியிருப்பவர்களை நினைத்து. என்ன பிறவியோ? என் பொருட்டு என்னவெல்லாம் வேதனைகளை மற்றவர்கள் அனுபவிக்கிறார்கள்.

இரவின் தூக்கத்தைப் பகலில் பஸ்சிலிருந்துத் தீர்ப்பேன். ஒரு தூக்கம் போட்டு விழித்ததும் நற்சிந்தனைகள் மனத்தை விட்டகலும். தேவதையின் ஷிஃப்ட் முடிந்து, சாத்தான் சார்ஜ் எடுப்பான். கோழிக்கோட்டுக்கு வந்து சேர்வேன். மூடு நன்றாக இருந்தால் லாட்ஜில் ரூம் போட்டு ஒரு பைன்ட் அடிப்பேன். மீண்டும் தூங்குவேன். இரவில் ஏதாவது பஸ்சில் ஏறுவேன். எங்காவது இறங்கி, ஏதேனும் வீட்டில் நுழைவேன். சாதனங்களோ பணமோ, கிடைப்பதைச் சுருட்டிக்கொண்டு மைசூருக்குப் புறப்படுவேன். அணிலின் வேலை மரமேறுவதுதானே? லட்சக்கணக்கில் இருந்தாலும், வியாபாரத்தை அபிவிருத்திச் செய்வதற்குக் கையில் இருப்பதையா செலவழிக்க முடியும்? சேர்த்து வைத்துவிட்டுக் குப்புறப்படுத்துத் தூங்கும் மக்களுக்கும் வேண்டாமா ஒரு அதிர்ச்சி? இல்லையென்றால் பணக்கொழுப்பு அவர்களை அலைக்கழித்து விடுமே? அபகரிக்கப்படும் என்ற பயமிருந்தால்தான் தர்ம சிந்தனையும் இருக்கும். அப்புறம் போலீஸ் என்றொரு இலாகா இருக்கிறது. என்னுடைய நண்பர்கள்தான். இந்த அமைப்பைக் குலைய விடவும் அனுமதிக்கலாகாது. இப்படியான நல்லெண்ணெங்களும்தான் இதையெல்லாம் செய்வதற்கான காரணங்கள்.

இப்படியிருக்கும்போது மனைவிக்கொரு ஆசை: "உங்கம்மாவை மட்டும் போய்ப் பார்த்துட்டு வர்றீங்களே. இனி, போகும்போது எங்க உம்மாவையும் பார்த்துட்டு வாங்களேன்."

பேராபத்தின் வாசனையை அப்போதே என்னால் உணர்ந்துகொள்ள முடிந்தது. இப்படியான எண்ணம் உருவான பிறகு பெண்கள் அதைச் சாதிக்கவே செய்வார்கள்.

"இந்த ஆசையை நீ மனசுக்குள்ள வெச்சிக்கிறதுதான் நல்லது. இப்ப ஏதோ நிம்மதியா வாழ்ந்திட்டிருக்கோம். பிடிக்கலேன்னா சொல்லிடு, நான் நேராப் போயி போலீசில சரண்டராயிடுறேன்."

"அதுக்காகச் சொல்லலீங்க. இப்ப நீங்க போயிட்டு வர்றீங்களே, யாராவது பாக்கவா செய்றாங்க? இதுபோல ரகசியமா போய்ப் பார்த்துட்டு வாங்கன்னுதான் சொல்றேன்?"

"வள்ளக்கடவு சுலைமான் தெருவுக்குள்ள ரகசியமாப் போறதா? இதைவிட சுலபமான விஷயம், வெள்ளை மாளிகைக்குள்ள நுழைஞ்சி அமெரிக்க ஜனாதிபதியைச் சுடுறதுதான்."

"நீங்க நினைச்சா முடியுங்குறேன்."

எனக்குக் கோபம் வந்தது: "இனிமேல் இதைப் பற்றி நீ பேசக்கூடாது."

அவ்வப்போது இந்தப் பல்லவி காதில் விழுந்து கொண்டிருப்பதற்கேற்ப என்னுடைய பிடிவாதமும் தளர்ந்துகொண்டிருந்தது. இன்னொரு தடவை சொன்னால் நான் சரி வைக்கவும் கூடும்.

அடுத்தத் தடவை போகும்போது சொன்னாள்: "உங்களுக்கு உங்கம்மா போலதானே எனக்கு எங்கும்மாவும்? நானும் அவளைப் பார்க்கப்போறதில்லை. நீங்களாவது போய் உடல்நிலையை விசாரிச்சிட்டு மகளும் குழந்தையும் சௌக்கியமா இருக்கிறதா ஆறுதல் சொல்லிட்டு ஏதாவது கொடுத்துட்டு வந்துடுங்க போதும்."

நாமெல்லாம் பெரிய அறிவாளிகள் என்று சொல்லித் திரிகிறோம். எல்லாமே தவறு. விதிதான் நம்மை வழி நடத்துகிறது. தேவையான கட்டத்தின்போது முன்னனுபவங்கள் எவையும் நினைவுக்கு வராது. முட்டாள்தனமாகவே நடந்து கொள்வோம். அறிவுப்பூர்வமாக வாழ்பவனாக இருந்தாலும் நடைமுறைவாதிகளாக இருந்தாலும் யாருமே

இதிலிருந்து தப்பித்துவிட முடியாது.

இப்படியாக, விதிபோர்த்திய அறிவுடன் நான் திருவனந்தபுரம், வள்ளக்கடவிலுள்ள என் மனைவியின் வீட்டுக்கு நள்ளிரவில் வந்தேன். வழியில் நின்றிருந்த இருவர்: "மெகருன்னிஸாவோட புருஷன்தானே? ஆளைப் பார்க்கவே முடியலையேப்பா?" என்றார்கள். 'மணி ஒண்ணாகுதே, இவனுகளுக்குத் தூக்கமே வராதா?' என்று நினைத்துக்கொண்டேன்.

வீட்டுக்கு வந்து பத்து நிமிடங்கள்தான் ஆகியிருக்கும். ஜமாஅத் முழுவதுமே வீட்டின்முன் திரண்டு விட்டது. ஏற்கனவே விசாரித்தவர்களுட்பட அனைவரும் கண்களில் கனல் தெறிக்க நிற்கிறார்கள். ஒருபுறம், மாமியாரின் அங்கலாய்ப்பும் கூப்பாடும். "எம்மவள எங்கே?" அவள் சௌக்கியமாக இருக்கிறாள் என்பதைத் தவிர என்னால் வேறு என்ன சொல்ல முடியும்? "எனக்குத் தெரியும்; அவள் இப்ப உயிரோடில்லை. எஸ்ஸெஸெல்சி படிச்சவ, ஒரு கடிதம்கூட எழுதாமலா இருப்பா?" என்று அழுகிறாள். அதெப்படி கடிதமெழுத முடியும் என்று அந்தக் கூட்டத்தில் வைத்துக் கேட்கவும் முடியாது. பத்மராஜனின் 'ஓரிடத்தொரு ஃபயில்வான்' திரைப்படத்தில் பயில்வானின் மனைவிக்கு சில விதிகளுக்கேற்பவே வாழ இயலும். திருடனின் நிலையும் இதுதான். நினைத்த மாத்திரத்தில் ஒரு திருமதி திருடன் கடிதமெழுதிவிட முடியுமா?

"உம்மா, நாங்க இப்ப மைசூர்ல நல்ல நிலைமைல இருக்கோம். இந்தா லட்டு சாப்பிடுங்க" என்றெல்லாம் சொல்லிப் பார்த்தேன். ம்ஹூம். எந்தப் பிரயோஜனமுமில்லை. என்ன செய்வதென்று தெரியாமல் நான் கையறு நிலையில் நின்றிருந்தேன். இப்படியான ஒரு சூழ்நிலை உருவாகுமென்பதை என்னால் யூகிக்க முடியாமல் போய் விட்டதே!

"அவளை எப்படி உதறித் தள்றதுன்னு நீ அப்பவே யோசிச்சவன் தானேடா, துரோகி. இவனுக்கு வேற ஏதாவது தொடுப்புகள் இருக்கும். அவளை இவன் என்னவோ பண்ணிட்டான்." அதாவது நான் அவளைக் கொன்றுவிட்டதாகச் சொல்கிறாள்.

நான் இதை மட்டும் சொன்னேன்: "நான் இங்க நிக்கிற ஒவ்வொரு நிமிஷமும் உங்க மக அனாதையாயிட்டிருக்கா, புரிஞ்சுக்குங்க." உள்ளூர் பிரதானிகள் தலையிட்டார்கள். யாரேனும் ஒருவரையாவது புரிய வைக்க முயற்சி செய்தேன். எதையாவது சொல்லலாம் என்றால் என்னுடைய

கெட்ட காலம், கேட்கவோ அதைப் புரிந்துகொள்ளவோ திறனுள்ள யாருமே அங்கில்லை. மும்பையில் சிவப்பு விளக்குப் பகுதியென்று ஒன்றிருப்பதாகவும் இங்கிலீசில் அதை ரெட் லைட் ஸ்ட்ரீட் என்று சொல்வதாகவும் அவளை அங்கே கொண்டுபோய் விற்றிருப்பான் என்றும் யாரெல்லாமோ அளந்து கொண்டிருந்தார்கள். இனியும் இங்கே நின்றிருந்தால் யாராவது போலீசுக்குச் சொல்லிவிடுவார்கள். அடுத்த வருகை போலீஸ்தான். கடைசியில் நான் ஒரு பாக்கேஜை முன் வைத்தேன்:

"உங்க மக, உயிரோடிருக்காளான்னு அறியணும். அவ்வளவுதானே? சரி சலீமை எங்கூட அனுப்புங்க" என்று சொல்லிவிட்டு மனைவியின் தம்பி சலீமின் தோளில் கை போட்டுச் சொன்னேன்: "இவன் வரட்டும். இரண்டே நாள்ல இவன் இங்கே திரும்பி வந்துடுவான்."

அரைமனதுடன் சிலர் ஒப்புக்கொண்டார்கள்.

என்னுடன் மைசூருக்கு வந்த மச்சினன்பிள்ளை அதிர்ச்சியில் நிலைகுலைந்து போனான். இரண்டே நாட்கள், நான்காயின, ஆறாயின, கொன்றாலும் அவன் திரும்பிச் செல்வதற்கான அறிகுறிகள் தென்படவில்லை. இடையிடையே, டிஒய்எஸ்பி. சீருடையில் வருவார். இவன் நினைத்துவிட்டான்: "மச்சானும் போலீசும் கூட்டா இருக்கும்போது பயப்படுறதுக்கு என்ன இருக்கு?"

ஒன்றிரண்டு மாதம் கழிந்ததும் நான் சொன்னேன்: "நீ உடனே புறப்படு. போய்ச் சேர்ந்ததும் என் ஃபோன் நம்பரை உன் சித்திகிட்ட கொடுத்துடு. ஏதாவது பிரச்சினை வந்தா உடனடியா எனக்கு ஃபோன் பண்ணச் சொல்லு. நான் தலைமறைவாயிடறேன்."

பிரச்சினைகள் வருவதற்கான சிறு வாய்ப்பையும் அடைத்தேன். சிறிது மன அமைதி கிடைத்தது. குடும்பக் கலகமும் முடிவுக்கு வந்தது. திருவனந்தபுரத்திற்குப் போய்ச் சேர்ந்த அவன் ஃபோன் நம்பரைக் கொடுக்காமல் மச்சானின் மகிமைகளை விதந்தோத வீட்டிற்கு ஓடினான். அங்கே நிலைமை வேறு விதமாக மாறியிருந்தது. மகளைக் கடத்திக்கொண்டு போன மருமகன் அவளை ரெட்லைட் பகுதியில் கொண்டுபோய் விற்றுவிட்டான். அக்காவைக் காட்டித் தருவதாக அழைத்துக்கொண்டுபோன மைத்துனனையும் வெட்டிக்கொன்றிருப்பான். சம்பவத்தை அவர்கள் வலியதுறை போலீசில் அறிவித்துவிட்டார்கள். மனைவியையும் மைத்துனனையும் கடத்திக்கொண்டு போய்விட்டான்.

உயிரோடிருக்கிறார்களா இல்லையா என்பதுகூடத் தெரியவில்லை. அவன் வந்தால் உடனே தகவல் சொல்லும்படி போலீஸ் உத்தரவிட்டது. போலீஸ் என்னைப் பிடிக்கும்போதும் இலக்கை அடையாத அந்த ஃபோன் நம்பர், மச்சினப் பையனின் பாக்கெட்டில் பத்திரமாக இருந்தது.

## 52 - வீழ்ந்த நாள்

கடந்துபோன அந்நாளை மீண்டும் நினைவுகூரும்போது மேலும் சில விஷயங்கள் தெளிவடைகின்றன. சலிம்பாஷாவின் சாம்ராஜ்யம் வீழ்ச்சியடைந்த அந்நாளைய நிகழ்வுகள். எல்லா நாட்களையும்போல் படுக்கையிலிருந்து எழுந்தேன். சற்று நேரத்தில் என்னுடைய கேரளா ஓட்டலுக்குச் சென்றேன். பத்து மணிக்கு மலையாளப் பத்திரிகை வந்திருக்கும். ஒரு சாயாவும் குடித்து பத்திரிகையும் வாசித்தால்தான் அன்றைய பொழுது ஆரம்பமாகும். என்னவோ தெரியாது மனதிற்குள் ஒரு போதாமை. தூக்கம் விழித்து எழுந்ததிலிருந்து இப்படித்தானிருக்கிறது. கடந்த கொஞ்ச காலமாக மனத்திற்குள் எதிர்மறை சிந்தனை எதுவும் உருவாவதில்லை. தொட்டதெல்லாம் பொன். மன அமைதியுடனான குடும்ப வாழ்க்கை. இருந்தும் ஏனோ? ஏதாவது கெட்ட கனவு கண்டோமா? நினைவுக்கு வரவில்லை. வெளியே புறப்படும்போது மனைவியிடம் சொல்லிக்கொள்வது வழக்கம். அன்று ஏனோ எதுவும் சொல்லாமல் நடந்தேன். குப்பையில் வாழும்போதும் என்னிடம் அவள் காட்டிய பரிவுதான் என் பக்கபலமாக இருந்தது. எதையோ சிந்தித்தபடி நடந்துகொண்டிருந்தேன். திடீரென்று பின்னாலிருந்து ஒரு குரல்: "மணியன்பிள்ளை." எதையும் யோசிக்காமல் திரும்பிப் பார்த்தேன். யாரோ இரண்டுபேர் ஓடி வருகிறார்கள். பிரச்சினைதான். திரும்பிப் பார்க்காததுபோல் நான் நடந்தேன். ஓடி வந்தவர்கள் என்னெதிரில் வந்து நின்றார்கள். பின்பக்கமும் இரண்டு போலீஸ்காரர்கள்.

"என்ன விஷயம்?" நான் கன்னடத்தில் கேட்டேன்.

"மணியன்பிள்ளைதானே?"

"இல்லை, நான் சலிம்பாஷா."

கேட்டவர் மஃப்டியிலுள்ள ஒரு போலீஸ்காரர். ஒருவர் என் பான்டையும் சட்டைப் பாக்கெட்டையும் இடுப்பையும் தடவினார். ஆயுதம் ஏதாவது இருக்கிறதா என்று பார்க்கிறார்.

"ஹேய், நீங்க, என்ன பண்றீங்க?"

பிரச்சினை மோசமாகப் போய்விட்டதென்பதைப் புரிந்துகொண்டதுடன் என்னுடைய சமநிலை தவறியிருந்தது. எவ்வளவு காலமாக போலீஸ்காரர்களுடன் நெருங்கிப் பழகுகிறேன். பரிசோதிக்கும்போது நான் உடலை அசைக்கிறேன். நான்கு புறமும் பார்க்கிறேன். ஓடித் தப்பித்துக்கொள்வதற்கு ஏற்ற இடமல்ல. ஓடினால் திருடனென்பது ஊர்ஜிதமாகி விடும். தற்போதைக்கு நான் மணியன்பிள்ளையல்ல என்று சொல்வதுதான் சுலபம். கூடவே இவர்கள் வேறு யாரையாவது தேடி வந்திருக்கவும் வாய்ப்பிருக்கிறது என்ற ஆறுதலும் தோன்றியது. கன்னடம், தமிழ், உருது, இங்கிலீஸ் என்று மலையாளத்தைத் தவிர எல்லா மொழிகளிலும் ஏதேதோ சொல்லி, நான் சலிம்பாஷா என்று உறுதிப்படுத்த முயல்கிறேன். நான் இங்கே ஜனதா பார்ட்டியின் வேட்பாளராகப் போகிறவன் என்றும் சொல்கிறேன். திடீரென்று எனது சப்தநாடிகளும் ஒடுங்குவதுபோல் கேரளப் பதிவெண் கொண்ட ஒரு ஜீப் வந்து நின்றது. இத்துடன் எல்லாமே முடிவுக்கு வந்தது. டிரைவர் உட்பட நான்கைந்து பேர் ஜீப்பினுள் இருந்தார்கள். காவியுடையில் மாறு வேடத்தில் வந்திருந்தார்கள். ஜீப்பில் என் மைத்துனன் சலீமைக் கண்டேன். வீழ்ச்சி முழுமையாகப் புரிந்தது. இனி எதைப் பேசியும் பயனில்லை.

நான் மலையாளத்தில் அவனிடம் கேட்டேன்: "திருப்திதானேடா? அக்காவைத் தெருவில இறக்கி விட்டுட்டியே, திருப்திதானே?"

அவன் ஜீப்பின் பின் இருக்கையில் உட்கார்ந்து அழுதுகொண்டிருக்கிறான்.

அதற்குள் ஆட்கள் வந்து கூடிவிட்டார்கள்.

"என்ன முதலாளி, என்னாச்சு?"

"ஒண்ணுமில்லே" என்றேன்.

"வண்டியில ஏறு."

மணியன்பிள்ளை என்று கூப்பிட்ட போலீஸ்காரன் மலையாளத்தில் சொன்னான். ஏறினேன். போலீஸ்காரர்களும் ஏறினார்கள். ஜீப் முன்னால் நகர்ந்தது. மைத்துனனின் பொருமல் சத்தமும் கட்டுப்படுத்த முடியாத அழுகைச் சத்தமும் இடையிடையே கேட்டது. எனக்குக் கோபம் வந்தது. திரும்பத் திரும்ப எத்தனை முறை சொல்லியிருப்பேன். முக்கால் மணி நேரம் ஓடிய ஜீப் ஆளரவமற்ற இடத்திலொரு குன்றின்மீது நின்றதும் தூரத்திலிருந்து ஒருவர் எதிர்பார்ப்புடன் ஓடோடி வருகிறார். அரைக்கை

சட்டையும் ஒட்ட வெட்டிய தலை முடியும் போலீஸ்காரர் என்பதைக் காட்டியது. ஓடி வந்தவர் கேட்டார்:

"கிடைச்சானா?"

"கிடைச்சான் என்று சொல்லிவிட்டு போலீஸ்காரர் பெருமையுடன் ஒரு சல்யூட் அடித்தார்.

ஓடிவந்தவர் ஜீப்பின் பின்னால் வந்து பார்த்துவிட்டுச் சொன்னார்:

"சே . . . இவனா மணியன்பிள்ளை?"

நம்பிக்கையில்லாமல் போலீஸ்காரர்களிடம் கேட்டார்.

குலாம் விழுமென்று எதிர்பார்த்து பதிலுக்கு ஆறாம் நம்பர் விழுந்தது போன்ற ஏமாற்றம் அவரது முகத்தில் படர்ந்தது.

சொன்ன போலீஸ்காரரின் முகமும் பொலிவிழந்தது.

"இவன்தான் சார்" என்றார்.

ஆறடி உயரமும் தடிமனும் கடா மீசையும் வைத்த பயங்கரமான மணியன்பிள்ளையை போலீஸ் அதிகாரி எதிர்பார்த்திருக்கிறார். என்னைப் பற்றி உலாவும் கதைகள் அவரை அப்படி நம்ப வைத்திருந்தன. நானோ, ஐந்தரையடி உயரமும் மெலிந்த உடல்வாகுமுள்ள ஒரு சின்ன மனிதன். என்ன செய்ய முடியும்? போலீஸ்காரர்களின் கற்பனைக்கேற்ப நான் 'ஷோலே' படத்தில் வரும் அம்ஜத்கான் ஆக முடியாதல்லவா? தங்களது கற்பனைக்கு ஏற்றவாறு ஆட்களை உயர்த்திக் காட்டுவதற்காகவே போலீஸ்காரர்கள் சில அடைமொழிகளையும் சூட்டுகிறார்கள். ஒருவனின் பெயர் குட்டப்பன் என்றிருக்கும். இவன் ஏதாவது தேங்காய் திருடிய வழக்கில் பிடிபட்டிருப்பான். பத்திரிகைக்காரர்களுக்கு செய்தி கொடுக்கும்போது பிரபல கொள்ளையன் இடிவாள் குட்டப்பன் போலீஸ் பிடியில் என்று எழுதிக் கொடுப்பார்கள். இடிவாளை விடுவோம், குட்டப்பன் நல்ல ஒரு பேனாக் கத்தியைக்கூட பார்த்திராதவனாக இருப்பான்.

பிடிபட்டால் போலீஸ்காரர்களுடன் இணக்கமாகப் போய்விடுவதுதான் என்னுடைய பாணி. எனக்குப் பெயர் சூட்டாததற்கான காரணம் இதுவாகவும் இருக்கலாம். ஊரில் கள்ள மணியன் என்று சொல்வதைத்

தவிர என் பெயரில் மாற்றமெதுவும் நிகழவில்லை. கள்ள மணியன் என்னதான் நல்ல மணியனாக மாறினாலும் பெயரில் மாற்றம் நிகழாது. வேறு எந்தக் கேடுகெட்ட தொழிலிலும் ஒரு பச்சாதாபம் உருவாகும். ஆனால், ஒருமுறை திருடினாலும் திருடன் திருடன்தான். திருட்டு அருவருப்பான ஒன்றாக இருப்பது நல்ல விஷயம்தான். ஊழல், சாதிய அபிமானம்போலுள்ள தீயவைகளையும் இதனுடன் சேர்த்துக்கொண்டால் நாடு விளங்கும்.

எஸ்ஐ நந்தகுமாரன் சார் ஜீப்பின் முன் இருக்கையில் வந்தமர்ந்தார். அதன் முன்புற அறையிலிருந்து ஒரு துப்பாக்கியை எடுத்துவிட்டு மீண்டும் அதை உள்ளே வைத்து மூடினார். இந்தச் சிறு உயிரிக்கு ஒரு பட்டாஸ் துப்பாக்கிகூட தேவைப்படாதென்று அவர் நினைத்திருக்கலாம். பிறகு என் பக்கம் திரும்பிக் கேட்டார்:

"இணக்கமாப் போறியா, இல்லை, பிணக்கமாப் போறியா? விருப்பம் எப்படி?"

நான் சொன்னேன்: "இணக்கமாவே போயிடறேன் சார். ஆனா, எனக்கு தனிப்பட்ட முறையில சார்கிட்ட கொஞ்சம் பேசணும்."

"எதுவா இருந்தாலும் இங்கேயே பேசிக்க. ரகசியப் பேச்செல்லாம் வேண்டாம்."

"இல்லை சார், தனியாப் பேசணும். உங்ககிட்ட மட்டும்தான் அதைச் சொல்ல முடியும்."

அவர் வண்டியை நிறுத்தச் சொல்லிவிட்டு கை விலங்கைக் கழற்றும்படி உத்தரவிட்டார்.

போலீஸ்காரர்களுக்குத் தயக்கம். மீண்டும் சொன்னார். என் தோளில் கையைப் போட்டு சற்றுத் தூரத்தில் அழைத்துச் சென்றார். ஆள் சஞ்சாரமில்லாத இடம். மிகுந்த மரியாதையுடன் நான் ஏற்கனவே சொன்ன தொகையைச் சொன்னேன். மறுத்துவிட்டார். அந்த வழியும் அடைபட்டது. "சொல்றதுக்கு வேறெதுவுமில்லை சார்." என்றேன்.

"இங்கிருந்து உனக்கு ஏதாவது எடுக்கணும்னா எடுத்துக்க. அதுக்கான உதவிகள் வேணும்னாலும் சரி. பிறகு, நீ இந்த இடத்தைப் பார்க்கப் போறதில்லை" என்றார்.

"எனக்கெதுவும் எடுக்க வேண்டாம் சார். ஆனா, கிராமத்திலுள்ளவங்க என்மேல ரொம்ப மரியாதை வெச்சிருக்காங்க. அவங்ககிட்ட நான் ஒரு திருடனுங்கிறதை சொல்ல வேண்டாம். வேணும்னா கடத்தல்காரன்னு சொல்லிக்குங்க."

மறுநாள் பிரஜாவாணி, தினத்தந்தி போன்ற கர்நாடகா, தமிழ்நாடு பத்திரிகைகளுட்பட இந்தியாவின் பெரும்பாலான எல்லாப் பத்திரிகைகளிலும் செய்தி வந்தது. கிராமத்திலுள்ள மக்களில் பெருமளவும் பத்திரிக்கை வாசிப்பவர்கள் அல்ல. பொருட்களை மீட்பதற்காக என்னைக் கொண்டு வரும்போது அங்குள்ள மக்கள் வண்டியைத் தடுத்து நிறுத்தினார்கள். இது பிரச்சினையாகும் என்பதைப் போலீசார் புரிந்துகொண்டனர். என்னை எதற்காகக் கைது செய்தார்கள் எங்கே கொண்டுபோகிறார்கள் என்பதையெல்லாம் அவர்களுக்கு அறிய வேண்டும். கூட்டத்தினிடையே நின்றிருந்த ஒரு விவசாயி கையிலிருந்த டிராஃப்டை என்னிடம் அசைத்துக் காட்டுகிறான். புகையிலைக் கம்பெனிக்காரர்கள் சிறு விவசாயிகளுக்கு டிராஃப்டும் செக்கும்தான் கொடுப்பார்கள். பணமாக மாற்றியெடுக்க நாட்களாகும். நான் அதையெல்லாம் வாங்கி வைத்து உடனுக்குடன் பணம் கொடுத்துவிட்டு எல்லாவற்றையும் சேர்த்து கலெக்ஷனுக்கு அனுப்புவேன். எந்த நஷ்டமுமில்லாத ஒரு உதவி. பாவம், என்ன அவசரத் தேவையோ? எதையுமே யோசிக்காமல் அவன் அதை அசைத்துக்கொண்டே இருக்கிறான். நான் பார்வையை அவனிடமிருந்து விலக்கிக்கொண்டேன்.

கர்நாடகா போலீஸ் மக்களுக்குச் சொல்லிப் புரிய வைத்தது.

"இவன் மிகப் பெரிய திருடன்."

கண்கண்ட தெய்வம் சலிம்பாஷா திருடனா? அவர்கள் நம்பவில்லை.

கடைசியில் நந்தகுமார் சார் ஏற்கனவே பேசியபடி சொன்னார்:

"திருடனல்ல, கடத்தல்காரன். வெளிநாட்டுப் பொருட்களை இவர் பலருக்குக் கொடுத்திருக்கார். அதற்கான விலை மற்றுமுள்ள சில விஷயங்களை இவர்கிட்ட விசாரிக்க வேண்டியதிருக்கு. அது முடிஞ்சதும் விட்டுடுவோம்."

மக்கள் இதையும் நம்பவில்லை. இனி, கிராமத் தலைவரே முடிவு செய்யட்டும்.

நந்தகுமார் சார் கிராமத்தலைவரைப் போய்ப் பார்த்து பணிவுடன் விஷயங்களைப் பேசினார். தலைவர் தகவலாளியை அழைத்துச் சொன்னார். அவர் கிராம எல்லைகளுக்குச் சென்று அறிவித்தார்:

"சலிம்பாஷாவிடமிருந்து யாராவது எதையாவது வாங்கியிருந்தால் இரண்டு மணி நேரத்திற்குள் திரும்பக் கொண்டுவந்து ஒப்படைக்க வேண்டும். போலீஸ் கேசென்பதால் அனைவரும் பஞ்சாயத்துக்கூடத்திற்கு உடனே வரவேண்டும்."

மக்கள் பஞ்சாயத்துக்கூடத்தில் திரண்டார்கள். நிறைய பொருட்கள் கொண்டு வரப்பட்டிருந்தன. எல்லாவற்றையும் ஜீப்பில் ஏற்றினார்கள். கர்நாடக போலீசார் விஷயத்தை டிஒய்எஸ்பிக்குத் தெரிவித்தனர். இங்கே பிடிபட்ட பொருட்களை கேரளத்திற்கு அனுப்ப வேண்டாமென்று உத்தரவானது. கர்நாடகாவுக்கு வந்து கேரளா போலீஸ் கைது செய்வதென்பது அவர்களுக்கும் சங்கடத்தை ஏற்படுத்துகிற விஷயமல்லவா? பொருட்களை அங்கேயே ஏலம் விட வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது.

நான் இதையெல்லாம் பார்த்தபடியும் கேட்டபடியும் சிகரெட் புகைத்தபடியே மூலையில் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தேன்.

மனைவி வந்தாள். என்னைக் கண்டதும் மயக்கம் போட்டு விழுந்தவள், தண்ணீர் தெளித்ததும் எழுந்தாள். அவளுடைய வாழ்க்கையின் பொற்காலம் முடிவுக்கு வந்திருக்கிறது. மூன்றரை வருட தாம்பத்ய வாழ்க்கை நிம்மதியாகக் கழிந்தது. ஒரு திருடனுடன் இத்தனை வருடம் இப்படி வாழ முடிந்ததே பெரிய விஷயம்தான். இனி பிரிய வேண்டியது வராதென்று நினைத்திருந்தாள். பாவம்.

மைத்துனனும் கூடவே நின்றிருந்தான். என்னுடைய முகத்தைப் பார்க்கும் தைரியம் அவனிடமில்லை. அழுதழுது கண்ணும் முகமும் வீங்கிப்போயிருந்தது. நான் சொன்னேன்: "போனது போகட்டும் விடுடா. நீராலானது நீரால் அழியும். இதோடு எல்லாமே அஸ்தமித்துப்போயிடாது. இப்போதைக்கு நீயும் அக்காவும் கேரளாவுக்குப் போயிடுங்க. பிறகெல்லாம் நடக்குறதுபோல . . ."

என் மனைவியை அங்கிருந்து அனுப்பி வைப்பதே பெரும் சிரமமாக இருந்தது.

"இது முதல் சம்பவமொண்ணும் இல்லையே? கடைசியுமில்லை. நீ பயப்படாம இரு. திருவனந்தபுரத்துக்கு என்னைக் கொண்டு வருவாங்க. அப்ப வந்துப் பாரு."

போலீஸ் அதிகாரி விசாரணைகளிலும் விவாதங்களிலும் முனைப்புடன் ஈடுபட்டிருந்தார். அப்போதுதான் என்னுடைய வலது கையான யூஸஃப் ஓடோடி வருகிறான். பாவம், ஆத்மார்த்த நண்பன். யாரோ சொல்லி விவரம் அறிந்து வருகிறான். கள்ளங்கபடமில்லாத அவன் என்னை ஒரு திருடனென்று கடைசிவரை நம்பவில்லை. ஒரு பெரிய ஹாலின் மூலையில் நான் உட்கார்ந்திருக்கிறேன். சிகரெட்டும் தீர்ந்து விட்டது. ஒன்று தீர்ந்ததும் இன்னொன்று என்று இழுத்துக்கொண்டே இருந்தேன். மனிதனின் உயர்வையும் தாழ்வையும் நினைக்கிறேன். வந்தவன் போலீஸ்காரர்களைக் கவனிக்காமல் என் பக்கத்தில் வந்தான்.

"சலிமண்ணா, என்ன இது? என்ன நடந்தது? அவங்க ஏதாவது செய்தாங்களா?"

நான் சொன்னேன்: "ஒண்ணுமில்லை யூஸஃப். நீ எனக்கு ரெண்டு பாக்கெட் சிகரெட் வாங்கிட்டு வா."

"என்ன நடந்ததுன்னு சொல்லுங்க."

"சொல்றேன். நீ முதல்லே சிகரெட் வாங்கிட்டு வா."

யூஸஃப் பதற்றத்துடன் வெளியே ஓடினான். போலீஸ்காரர்கள் விசாரணையைத் தொடங்கினார்கள். இவன் யார்? யாரோ சொன்னார்கள். "இவன்தான் மூளை. எம்ஏ வரை படிச்சிருக்கான். இவ்வளவையும் சம்பாதிக்க கூட்டு நின்னவன் இவன்தான்."

யூஸஃப் சிகரெட்டுடன் வந்தான். போலீஸ் பிடித்துக்கொண்டது.

"கஸ்டடியில இருக்குற ஒருத்தனுக்கு யார் சொல்லிடா நீ சிகரெட் வாங்கிக்கொடுத்தே? யார்டா நீ? ஏறுடா உள்ளே."

யூஸஃப் அதிர்ச்சியில் உறைந்துபோனான். நான் தடுக்க முயன்றேன். போலீஸ் கண்டுகொள்ளவில்லை. யூஸஃபையும் ஏற்றிக்கொண்டு ஜீப் நகர்ந்தது. உண்மையில் அப்போதுதான் நான் வேதனைப்பட்டேன். நான் யாரென்று சொல்லாமல், ஒரு நல்ல இளைஞனை ஏமாற்றியிருக்கிறேன்.

சற்றுநேரத்தில் என்னுடைய நெருங்கிய நண்பரான நஞ்சன்கோடு டிஒய்எஸ்பி வந்தார். என்னைக் கண்டதும் அவர் அப்படியே ஸ்தம்பித்து நின்றுவிட்டார். கடந்த ஒன்றரை வருடங்களாக பெரும்பாலான நாட்களிலும் ஒன்றுகூடும் நண்பர்கள். குடிப்பதினிடையே நாங்கள் விவாதிக்காத விஷயங்களே இல்லை. டிஒய்எஸ்பியான தன்னுடைய நண்பன் கேரளத்திலுள்ள ஒரு பெரிய திருடனா? அவருக்கு அதிர்ச்சி. இந்நிலையில் போலீஸ் போலீசாகவே மாறி விடுவார்கள். உறவுகளெல்லாம் அவர்களுக்குப் பொருட்டே கிடையாது.

ஆனால், இவர் அப்படியில்லை.

அங்கிருந்தவர்களிடம் வெளியே போகச் சொன்னார். நானும் நண்பரும் மட்டும். நடுவில் இப்போது மதுக்குப்பிகளில்லை; கொண்டாட்டங்களில்லை; சிரிப்பில்லை; இறுகிய மௌனம். மெல்ல ஒரு நீண்ட பெருமூச்சை உதிர்த்துவிட்டுக் கேட்டார்:

"சலிம் என்ன இது, நான் கேள்விப்பட்டது உண்மையா?"

"உண்மைதான் சார், நான் கேரளா போலீசின் வான்டெட் லிஸ்டிலுள்ள ஒரு கிரிமினல்."

"இதை நீ ஏன் எங்கிட்ட சொல்லலை?"

"சார் போலீஸ்காரருங்குறதுனால?"

"இருந்தாலும் இன்னொரு பகுதியில இருக்குற நீ எங்கிட்ட இதைச் சொல்லியிருக்கணும். அப்படிச் சொல்லியிருந்தா உனக்கு இந்த நிலைமை ஏற்பட்டிருக்காது."

"உங்களை நான் எப்படி நம்ப முடியும்?"

"இவ்வளவு நாளாகியும் என்னை உன்னாலப் புரிஞ்சுக்க முடியலையா?"

"போகட்டும் சார் விடுங்க, வர்ற வினை வழியில தங்காது."

இருவருமே பேசவில்லை. மீண்டும் சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு சார் சொன்னார்:

"சொல்லு, நான் உனக்கு என்ன உதவி செய்யணும்?"

"அரெஸ்ட் ரிக்கார்டை இங்கேயே பதிவு பண்ணணும். கேரளாவுக்குப் போன பிறகு வழக்கு எப்படி மாறும்னு சொல்ல முடியாது."

திருவனந்தபுரம் போலீஸ் என்னை ஒரு வழியாக்கி விடுமென்று நான் உறுதியாக நம்பியிருந்தேன். தலைவேதனையை உருவாக்கிய பல வழக்குகள் என் பெயரிலிருந்தன. இவ்வளவு காலமும் பிடிகொடுக்காதிருந்த கோபத்தையும் தீர்த்துக்கொள்வார்கள். மட்டுமல்ல, எஸ்ஐ நந்தகுமார் சார், முன்னாள் முதல்வர் கருணாகரனின் உறவிலுள்ள ஒரு சகோதரன். என்னை இவர் என்ன செய்தாலும் எதிர்த்து நிற்க முடியாது. கருணாகரச் செங்கோல் வானளாவிய அதிகாரத்துடன் உயர்ந்திருந்த காலம் அது. கருணாகரன் என்றாலே கக்கயம் முகாமும் ராஜனுமெல்லாம் நினைவுக்கு வருகிற காலம். ஆனால், நந்தகுமார் சார் கடைசிவரைக்கும் இதில் நேர்மையுடன்தான் நடந்துகொண்டார்.

"சரி."

என்னைக் கொண்டுபோகும் அன்று டிஒய்எஸ்பி. வந்து கை கொடுத்தார்:

"குட்லக்."

நான் சிரித்தேன்: "குட்லக்கா?"

"வாழ்க்கை இதோடு தீர்ந்திடப் போறதில்லையே? தண்டனைக்காலம் முடிந்த பிறகு இங்கே வா."

"இல்லை, இனி, சார் ஒரு பச்சிலை, நான் புள்ளி விழுந்த இலை."

"சரி, விடு. உனக்கு இங்கே அரெஸ்ட் பதிவு பண்ணணும் இல்லையா? நான் அதைச் செய்திடறேன். இனி நாம சந்திப்போமான்னு சொல்ல முடியாது. குட் பை. உங்கூட இருந்த அந்த நல்ல நாட்கள் எப்பவும் என் மனசுல இருக்கும்."

சொன்னதுபோலவே செய்தார். இங்கே நீதிமன்றத்தில் பொருட்களைக் காட்டி உறுதி செய்த பிறகு கொண்டுபோனால் போதும். ஆனால், அதற்குள் ஒரு லோடு சாதனங்கள் கர்நாடகா எல்லையைக் கடந்து போயிருந்தன.

நான் நினைத்துப் பார்த்தேன். டிஒய்எஸ்பி விஷ்கண்டப்பாவிடம் என்னை அறிமுகம் செய்து வைத்தவர் டாக்டர் ஹக்கீம்பாஷா. டாக்டர் தன்னுடைய

பைக்கில் வாரத்திற்கொரு முறை நஞ்சன்கோட்டிற்குப் போவார். ஏதாவது மருந்து வாங்கப் போகிறார் என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஒருமுறை மைசூருக்குப் போகும்போது என்னையும் அழைத்தார். எடயாளத்திலிருந்து நஞ்சன்கோட்டுக்கு வந்தோம். இங்கிருந்து மைசூர் அறுபத்தெட்டு கிலோமீட்டர் தூரம். நஞ்சன்கோட்டில் வண்டியை நிறுத்தினார்.

"டிரிங்ஸ் உபயோகிக்கிற பழக்கமுண்டா?" டாக்டர் கேட்டார்.

"எப்போதாவது."

அங்கிருந்த கணேஷ் பாரில் நுழைந்தோம். விஐபி பார். பெர்மிட் கார்ட் உள்ளவர்களை மட்டுமே அனுமதிப்பார்கள். ஒரு பைன்ட் டிப்ளோமேட் பிராண்டி வாங்கிவிட்டு உட்காரும்போது பக்கத்தில் டாக்டருக்குத் தெரிந்த ஒருவர் இருந்தார். அறிமுகம் ஆனோம். விஷ்கண்டப்பா டிஒய்எஸ்பி, நஞ்சன்கோடு. என்னை அவருக்கு அறிமுகம் செய்து வைத்தார். டிஒய்எஸ்பி, வீட்டையும் ஊரையும் பற்றிக் கேட்டார். எடயாளத்தில் என் நிலையைப் பற்றி சொன்னார் டாக்டர்.

ஒருமுறை நானும் என் மனைவியும் மைசூரில் சாமுண்டீஸ்வரி கோயிலைப் பார்ப்பதற்காகப் போயிருந்தோம். மலையின் இயற்கைக் காட்சிகளை ரசித்துக் கொண்டிருக்கும்போது ஒருவர் வந்து கேட்டார்: "டாக்டர் ஹக்கீமின் நண்பர்தானே?" டிஒய்எஸ்பிதான். குடும்பத்துடன் வந்திருந்தார்.

"என்ன இந்தப் பக்கம்? நீங்க முஸ்லிம் அல்லவா?"

"மனைவிதான் முஸ்லிம். நான் இந்து."

திரும்பி வரும்போது நாங்கள் இரண்டு குடும்பமும் சேர்ந்தே வந்தோம். இப்படியாக நெருக்கமானோம். நஞ்சன்கோட்டிலிருந்து பேகூருக்கு எடயாளம் வழியாகத்தான் போக வேண்டும். வாரத்தில் இரண்டு மூன்று முறை விஷ்கண்டப்பா சார் இந்த வழியாகச் செல்வார். வண்டியை என் கடையின் முன் நிறுத்துவார். பிறகு, பீர்பால் டாமிற்குச் சென்று ஐபியில் இரண்டு மணி நேரம் உட்கார்ந்து கொஞ்சம் குடித்து விட்டு வீட்டிற்குப் போவார். என்னையும் ஒரு நாள் டாமிற்கு அழைத்துச் சென்றார். நான் கம்பெனி கொடுத்தது பிடித்திருக்க வேண்டும். பிறகு, வாரத்திற்கு இரண்டுமுறை திருடனும் போலீசும் டாம் ஐபியில் ஒன்றுசேர்ந்து

தண்ணியடிப்போம். டாமிலிருந்து கிடைக்கும் பெரிய பெரிய மீன்கள்தான் சைடு டிஷ்.

ஒருநாள், தங்கள் குழந்தையின் பிறந்த நாள் விழாவுக்கு அழைப்பதற்காக ஜீப்பில் தம்பதி சமேதராக வந்தபோது எனக்குத் தாங்க முடியாத ஆச்சரியம். நாங்கள் குடும்ப சமேதம் சென்றிருந்தோம். நஞ்சன்கோடு நந்தகேஸ்வரன் கோயிலின் அருகில்தான் வீடு. ஆறேழு விருந்தினர்கள் மட்டும்தான் வந்திருந்தார்கள். மிகவும் தாமதமாகச் சென்றது நாங்கள்தான். ஜீப்பில் கொண்டுபோய் விடும்படி சொன்னார். போலீஸ் ஜீப்தான்.

திருடனின் மனைவியும் டிஒய்எஸ்பியின் மனைவியும் உருதுவில் சரமாரியாக உரையாடினார்கள். பெண்கள் சீக்கிரமாக மொழியைக் கற்றுக்கொள்கிறார்கள்.

நாங்களும் அவர்களை வீட்டிற்கு அழைத்தோம். மனைவியுடனும் இரண்டு குழந்தைகளுடனும் வந்திருந்தார். இறைச்சி அவர்களுக்கு மிகவும் பிடிக்கும். ஆனால், ருசியாக சமைக்கத் தெரியாது. அதை கேரள மாடலில் எப்படி சமைப்பதென்று திருடனின் மனைவி கற்றுக்கொடுத்தாள். டிஒய்எஸ்பி சாருக்கு ஒரு ஆசை. முன்பு எப்போதோ கேரளத்துக்குப் போனபோது, மரச்சீனிக்கிழங்கு மசியல் சாப்பிட்டிருக்கிறார். சுவை நாக்கில் இன்றும் நிற்கிறதாம். மரச்சீனிக்கிழங்கு மசியல் சாப்பிட வேண்டும். கூடவே, கற்றும் தர வேண்டும்.

ஆனால், பாவம் எங்கள் கையிலிருந்து மரச்சீனிக்கிழங்கு மசியல் சாப்பிடுகிற வாய்ப்பு அவருக்குக் கிடைக்கவில்லை. அதற்குள் ஸாய்வர் சாயம் கரைந்த நான் இதோ திருடனாக நிற்கிறேன். விஷ்கண்டப்பாவின் அறிமுகம் கிடைத்து ஒன்றரை வருடத்தில் கைதாகிறேன். வேறு யாராவதாக இருந்தால் செய்த நம்பிக்கைத் துரோகத்திற்காகத் திரும்பியும் பார்க்க மாட்டார்கள். ஆனால், கடவுள் அனுக்கிரகம், பல இடங்களிலிருந்தும் எனக்கு அன்பை வாரி வழங்கியது. டிஒய்எஸ்பி சாரும் தன்னால் முடிந்ததை செய்து விட்டுத்தான் போனார்.

ஒரு கர்நாடகா போலீஸ்காரர் சொன்னார்: "நம்ம போலீஸ்காரங்க யாரும் அவன் உடம்பில கை வைக்க வேண்டாம். அதுக்கான தேவை நமக்கில்லை." அவர் சொல்லாமலிருந்தால் அவர்கள் ஒருசில தடவைகளாவது என்னைக் கை வைத்திருப்பார்கள். போதாக்குறைக்கு என் வீட்டிலொரு நடராஜ விக்கிரகமும் சந்தனத்திலொரு காளைக்கன்றும்

இருந்தன. பணம் பெருகியதால் வந்த அகம்பாவம். மைசூரில் நடந்த அரசுப் பொருட் காட்சியில் வாங்கியது. கர்நாடகாவில் அப்போது பல கோயில்களில் சிற்பங்கள் திருட்டுப் போயிருந்தன. இதில் என்னுடைய பங்கு ஏதாவது இருக்கிறதா என்று அவர்களுக்கு அறிய வேண்டும். இதைக் கேட்டுவிட்டு உடனே விட்டுவிடவும் செய்தார்கள்.

யூஸஃபின் விஷயத்தில் உதவி செய்தவர் டிஒய்எஸ்பியாகவே இருக்க வேண்டும் என்பதுதான் என்னுடைய எண்ணம். என் வலது கையாக இருந்த யூஸஃபை பிறகு நான் பார்க்கும்போது அந்தரத்தில் கிடந்துத் துடிக்கிறான். போலீஸ்காரர்கள் என்னிடம் சொன்னார்கள்: "உன்னையும் இதுபோல செய்திருக்கணும் . . ."

நான் சொன்னேன்: "செய்யுங்க. என்னைதான் இதுபோல செய்யணும். என்னைப் பற்றி அவனுக்கெதுவும் தெரியாது. நான் யார்னு தெரியாம எனக்கு அவன் உதவி செய்துட்டான் அவ்வளவுதான்." கதவைத் திறக்கும்போது முதலில் அவனுடைய கதறல் சத்தம்தான் கேட்டது. கைகளைப் பின்புறமாகக் கட்டி ஃபேன் கொக்கியில் தொங்கவிட்டு கயிற்றை இழுக்கிறார்கள். கைகள் உயரும்போது உடலின் முழுப் பாரமும் கைகளில் வரும். கடைசியில் கால் பெருவிரலைத் தரையில் தொட்டும் தொடாமலும் நிறுத்துவார்கள். தோளெலும்புகள் இழுபட்டுப் பெயர்ந்து விடுவதுபோல் வலிக்கும். மறுநாள் டிஒஎஸ்பி. வந்ததும் சொன்னேன்: "அவனைத் தொந்தரவுப் பண்ண வேண்டாம் சார்."

எதுவாயினும் பிறகு தொந்தரவு செய்திருக்கமாட்டார்கள் என்றுதான் நினைக்கிறேன். ஒருநாள் சாயங்காலம் நான்கரை மணிக்கு டிபிக்கு வந்த டிஒய்எஸ்பி சார் இரவு பதினொரு மணிக்குத்தான் திரும்பினார். என்னைத் தொந்தரவு செய்யாமல் இருப்பதற்காக.

விடுதலை செய்யப்பட்ட யூஸஃபைப் பார்த்த பிறகுதான் என் மனம் அமைதியடைந்தது. அப்போது நான் கொஞ்சம் குடித்துமிருந்தேன். பிராண்டி உட்பட எல்லா வசதிகளும் டிபியில் இருந்தன. இரவில் போலீசும் திருடனும் சேர்ந்துத் தண்ணியடிப்போம். நந்தகுமார் சார் மட்டும் கலந்துகொள்ள மாட்டார்.

நான் பிடிபட்ட ஐந்தாவது நாள், அனுமதியுடன் யூஸஃப் என்னைப் பார்க்க வந்தான். அவனது கண்கள் கலங்கியிருந்தன. நாற்பது பாக்கெட் அடங்கிய வில்ஸ் சிகரெட் கொண்டு வந்தான். ஐடிசி கம்பெனிக்காரர்கள் அவர்களது வியாபாரக் கூட்டாளிக்கு அனுப்பிக் கொடுத்த சிகரெட்

பண்டல். கடைசியாக நான் அதை வாங்கிக்கொண்டேன். என்னைப் பார்த்ததும் யூஸஃப் அழுதான். அவனுடைய மனத்தில் அப்போது என்ன ஓடியிருக்கும்? என்மீதான வெறுப்பா? ஆனால், வார்த்தைகளில் எந்த வருத்தமும் தெரியவில்லை.

"நான் பெங்களூருக்கு என் அக்கா ஸைனபா வீட்டுக்குப் போறேன். இனி இங்கே என்னால வாழ முடியாது. திருடனோட நண்பன்னு எல்லாரும் கேலி பண்றாங்க. அக்காவையும் குழந்தையையும் உங்க மச்சினனையும் பாதுகாப்பா ஊருக்கு அனுப்பி வெச்சிட்டுத்தான் நான் போவேன்."

நானும் வேறெதுவும் கேட்கவில்லை. இனி எத்தனை லட்சம் வர வேண்டியதிருக்கிறது என்றோ வெளியே எவ்வளவு போயிருக்கிறது என்றோ எதுவுமே. நீராலானது நீரில் போகட்டும். இனி ஆதங்கப்பட்டுப் பயனில்லை. யூஸஃபைப் பிறகு நான் பார்க்கவே இல்லை. குண்டன்பேட்டில் திருமணம் செய்துகொண்டான்; அங்குள்ள பள்ளிவாசல் பக்கத்தில் வசிக்கிறான்; இரண்டு குழந்தைகள் இருக்கின்றன; மைசூரின் பால் கூட்டுறவு சங்கத்தின் உயரதிகாரியாகப் பணிபுரிகிறான் என்றெல்லாம் அறிந்தேன். இதுபோன்ற நல்ல குணமுள்ள ஒரு இளைஞனை வேதனைப்படுத்தியதற்காக மிகவும் வருந்தினேன். அந்த வருத்தம் இப்போதும் உண்டு. திருடன் மட்டுமல்ல, அவன்மீது அன்பு காட்டுபவர்களும் வேதனைக்குள்ளாவார்கள்.

நஞ்சன்கோடு எக்ஸ்க்யூட்டிவ் ஃபஸ்ட் கிளாஸ் மாஜிஸ்ட்ரேட்டின் தலைமையில் என்னுடைய ஸ்தாபர ஜங்கம சொத்துக்கள் அனைத்தும் ஏலம் விடப்பட்டன. ஏலத்தொகை மட்டுமே 93 லட்சம் ரூபாய். ஒரு கீழ்நிலை கிளார்க்கின் சம்பளம் 500 ரூபாயாக இருந்த 1983 காலகட்டம் இது.

பணமாக வெளியே போன தொகை எத்தனை லட்சமோ இல்லை கோடியோ தெரியாது. எல்லாம் யூஸஃபிற்குத்தான் தெரியும். அது திரும்பக் கிடைத்ததோ என்னவோ? அதற்கான வாய்ப்புகள் மிகக் குறைவுதான். இதற்காக அவன் திரும்பி வரவும் மாட்டான். அந்த அளவிற்கு அவன் பாதித்திருந்தான். அப்படியே கேட்டாலும் திருடனின் பணத்தை யாரும் திருப்பிக்கொடுக்க மாட்டார்கள். ஒவ்வொரு நிறுவனத்திலுமுள்ள பொருட்கள் பட்டியலிடப்பட்டு என் முன்னால்தான் ஏலம் நடந்தது. என்னுடைய பொருட்களை மற்றவர்கள் கொண்டுபோவதைப் பார்த்துக்கொண்டிருந்தேன். எனக்கு எந்த உணர்வையும் அது ஏற்படுத்தவில்லை. மனிதனின் நிலையே

இவ்வளவுதான். காயம் மட்டும் மிஞ்ச, மூச்சுக்காற்று எல்லாவற்றையும் உதறித்தள்ளிவிட்டுப் போவதை விட இதுவொன்றும் பெரிய விஷயமல்ல.

லாபத்தை வேறு வியாபாரங்களில் திருப்பி விட்டுக்கொண்டிருந்த போதும் பிடிபடுகிற கடைசி மூன்று நான்கு மாதங்களாக சுமார் ஒன்றரை லட்சம் ரூபாய் வீதம் பணமாக மட்டுமே யூஸஃப் என்னிடம் தந்துகொண்டிருந்தான். அவன் நினைத்தால் எவ்வளவு வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ள முடியும். நான் கேட்கப் போவதுமில்லை. ஏனென்றால் எல்லாமே அவனுடைய மூளையால் சம்பாதிப்பவை. ரசீதுகள் மட்டுமே என் வழியாக வந்துபோய்க்கொண்டிருந்தன. புகையிலைக் கம்பெனியில் இருந்தெல்லாம் ஏராளமான பணம் வரவேண்டியதிருந்தது. எல்லாமே லாப்ஸாகியிருக்கும். இதில் வேடிக்கை என்னவென்றால், நான் என்னைப் பற்றி அறிவதற்கான எந்த முகவரியையும் யூஸஃபிடம் கொடுக்கவில்லை. திருவனந்தபுரத்துக்காரன் என்று மட்டும் அவனுக்குத் தெரியும்.

என் மனைவி தன்னுடைய சேமிப்பாக, தரையில் குழிதோண்டி சில்வர் குடத்தில் பணத்தை வைத்து மேலே ஷீட்டும் விரித்திருந்தாள். இது, திருடனின் பணமல்ல. சலிம்பாஷா முதலாளியின் மனைவியின் சேமிப்பு. அதில் அதிகமும் நூறு ரூபாய் கட்டுகள். இதையும் போலீசார் தோண்டியெடுத்தார்கள். புகையிலையை உலர வைப்பதற்கான போர்மாக்கள் பூமிக்கடியிலும் இருக்கும். கேரளா போலீசாருக்கு இது என்னவென்று புரியவில்லை. அதையெல்லாம் குத்தியும் தட்டியும் பரிசோதனை செய்தார்கள். நான் தோண்டிய சுரங்கங்கள் என்று நினைத்துவிட்டார்கள். எனக்கு சுரங்கம் தோண்டுறதுதானே வேலை!

விசாரணைக்காக இரண்டு வார காலம், நஞ்சன்கோடு இன்ஸ்பெக்ஷன் பங்களாவில் போலீஸ் பாதுகாப்பிலிருந்தேன். மனைவி என்னைப் பார்த்து கதறி அழுதுவிட்டுப்போன நான்காவது நாள். என்னை வெறுமனே அறைக்குள் உட்கார வைத்திருந்தார்கள். கொஞ்சம் தண்ணியடி, சிகரெட், துணைக்கு போலீஸ்காரர்கள். பிள்ளை அல்லது மணியா என்பதைத் தவிர சீ . . . போ . . . என்றொரு வார்த்தையைக்கூட அவர்கள் உச்சரிக்கவில்லை.

அன்றுதான் ஒரு போலீஸ்காரன் சொன்னான்: "மணியா, உன் மச்சினன் இருக்கானே அவன் உன்னைவிட பெரிய கள்ளன். இரண்டு தடவை உருட்டின பிறகும் உன் இருப்பிடத்தைச் சொல்ல மாட்டேன்னுட்டான். வேற வழியில்லாம, அவனோட உம்மாவைக் கொண்டுவந்து, அதாவது

உன் மாமியாரைக் கொண்டுவந்து அவ உள்ளங்கால்ல லத்தியால நாலு வெச்சோம். உடனே சொல்லிட்டான்."

நான் நினைத்துக்கொண்டேன். ஒருவன் திருடனாக ஆனால், அவனது உறவினர்களுக்கும் பாதுகாப்பில்லை. மருமகன் திருடனாகி விட்டதற்காக மாமியார் என்ன செய்வாள்? அவர்களையும் குற்றவாளிகளாகக் கருதி சித்தரவதை செய்வதற்கான அனுமதியை எந்த நீதிமன்றம், எந்த ஆட்சியதிகாரம் இவர்களுக்கு வழங்கியது? திருட்டுகளைக் கண்டு பிடிக்க இதுபோன்ற சில மனித உரிமை மீறல்கள் தேவையென்பது போலீஸ் தரப்பு. ஏதாவதொரு வழக்கில் தன்னுடைய தாயையும் சகோதரிகளையும் மனைவியையும் பிடித்துக் கொண்டுவந்து சித்தரவதை செய்தால்தான் இந்த வேதனையைப் புரிந்துகொள்ள இயலும். பிறகு, இப்படிச் சொல்லமாட்டார்கள். எந்த போலீஸ்காரனின் மகனும் சந்தர்ப்பவசத்தால் திருடனாகவோ தேசத்துரோகியாகவோ மாறக்கூடும். பாலியல் மயக்கத்தின்போது தான் விரும்பியோ விரும்பாமலோ ஊன்றப்படுகிற விதத்தில் இவன் சற்குணவான் ஆகக்கடவது என்று எழுதிவைக்க இயலாது. விளங்காதவன்களின் வாரிசு மாமேதைகளாகலாம். ஆகவே, இதுபோன்ற கொடுமை செய்பவர்கள் நிச்சயமாக அனுபவிப்பார்கள்.

போலீசாரின் மற்றொரு அறிவீனம்: ஒரு திருடனின் பெயரைப் பத்திரிக்கைகளுக்குக் கொடுக்கும்போது அவனது வீட்டுப் பெயர் உட்பட அப்பாவின் பெயரையும் கொடுப்பது. பாவம் அவர் என்ன செய்வார்? தன்னுடைய வாரிசு ஒரு திருடனாகி விட்டானே என்ற மனவேதனையுடன் வாழும் அவரை இது மேலும் வேதனைப்படுத்த மட்டுமே உதவும்.

திருடனை என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள். அவனது குடும்பத்திலுள்ள நிரபராதிகளை விட்டுவிடுங்கள். மைத்துனன் இப்போது பேருந்து ஓட்டுனராக இருக்கிறான். முன்பு உருட்டியதன் விளைவாக, இப்போதும் அவனது காலில் பிரச்சினை இருக்கிறது. மருமகன் சரியில்லை என்பதால், என் மனைவியின் தாய்க்கும் கொஞ்ச காலமாக, காலைத் தரையில் ஊன்ற முடியாமலிருந்தது. என்னுடைய ஜென்ம வினையால் மற்றவர்களுக்கு நான் கொடுத்த துன்பங்கள் ஏராளம். நான் சிப்பியின் தோடு மட்டும்தான். என்னுள்ளிருக்கும் மாமிசம்தான் உறவினர்கள். துன்பங்களை எல்லாம் அனுபவித்தது மாமிசம்தான்.

பேட்டை சாக்கு: பேட்டை போலீஸ் ஸ்டேஷன். மைசூரில் பிடிபட்டு, விசாரணைகள் எல்லாம் முடிவடைந்தன. சி.ஐ நந்தகுமார் சார்: "இனி இவனோட பழைய துணியோ வேற ஏதாவதோ இருந்தா எரிச்சுடுங்க"

என்றார். ஸ்டேஷனில் சாக்கு என்றொரு போலீஸ்காரரிருந்தார். பிடிபடுகிற திருடனோ கொலைகாரனோ யாராக இருந்தாலும் ஸ்டேஷனிலுள்ள போலீஸ்காரர்களுக்கு பணம் கொடுக்க வேண்டுமென்ற ஒரு நியதி இருக்கிறது. பிரதியை அடிக்காமல் இருப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட ஒரு வழக்கம் இது. இதனால் எந்தப் பலனுமில்லை என்பதுதான் உண்மை. பத்து உதை கொடுக்க வேண்டுமென்றால் போலீசார் அதை மிகச் சரியாகக் கொடுத்துவிடுவார்கள். பிறகு, வெளியே வந்து உறவினர்களிடம் "எஸ்ஐ, பன்னிரெண்டு அடி கொடுக்கச் சொன்னார். நான் பத்துதான் கொடுத்தேன்" என்பார். பணம் இரண்டு அடியைக் குறைந்திருப்பதாக அவர்களும் நினைத்துக்கொள்வார்கள். பணம் கொடுக்காத கைதியின்மீது போலீஸ்காரர்களுக்கு கோபம் வரும். இதுதான் சாக்குவிற்கும் வந்திருக்க வேண்டும்.

மைசூரில் நானும் என்னுடைய எல்லாச் சொத்துக்களும் பிடிபட்டன. மிச்சமிருந்த உடைமைகள் அனைத்தும் எரிக்கப்பட்டன. சான்றிதழ்கள், இன்கம் டாக்ஸ் ரசீதுகள், வியாபார ஒப்பந்தங்கள், பெட்ரோல் பம்பிற்காக நான் செக்யூரிட்டியாக பணம் கொடுத்த ஆதாரங்கள், என்னுடைய டயரிக்குறிப்புகள், கணக்குப் புத்தகங்கள், பாஸ்புக், திருமணச் சான்றிதழ், மகனின் பிறப்புச் சான்றிதழ், பள்ளிவாசல் கமிட்டியிலுள்ள ஆதாரங்கள் போன்ற எல்லாவற்றையும் எரித்தார்கள். இவ்வளவையும் எரித்தவர்கள் என்னையும் அதில் சேர்த்திருக்கலாம்.

போலீஸ் ஸ்டேஷன் வளாகத்தில் எதுவோ எரிகிற வாசம். ஒவ்வொரு காலகட்டங்களிலும் நான் வாழ்ந்தேன் என்பதற்கான சாட்சியங்கள் எரிகின்றன என்பது எனக்குத் தெரியாது. ஜெயிலில் நான் டயரிக்குறிப்புகள் எழுதுவதுண்டு. அன்றுவரை எழுதிய அனைத்துமே எரியூட்டப்பட்டன.

இரண்டு நாட்களுக்குப் பிறகு, ஏதோ தேவைக்காக நான், "என்னோட பைகள் வேணும்; சில ஆதாரங்களைப் பார்க்கணும்" என்றேன்.

"பையா? அதில வெறும் குப்பைதானே இருந்தது?" சாக்கு கேட்டார்.

"இருக்கட்டும், அதை எடுங்க."

"அதையெல்லாம் நான் அப்பவே எரிச்சிட்டேன்."

என் நெஞ்சில் இடி வெட்டியது.

"யார் சொல்லி அதை எரிச்சீங்க?" என்று அலறினேன்.

"சிஐ சொன்னார்."

நான் வருத்தத்துடன் போய் சிஐயிடம் சொன்னேன்.

"அவனோட தேவையில்லாத துணிகளைத்தான் நான் எரிக்கச் சொன்னேன். எதையும் பார்க்காம எல்லாத்தையும் சேர்த்துப்போட்டு எரிக்க உங்கிட்ட யார் சொன்னா?" என்று கேட்டு அவர் சாக்கைத் திட்டினார்.

சாக்கு திரும்பி வந்து என்னைத் திட்டினார்: "திருடனோட ஒவ்வொரு துண்டுப் பேப்பரையும் எடுத்துப் படிச்சிட்டு எரிக்க முடியுமா? ஜெயிலுக்குப் போகப்போற உனக்கு ஒரு ம . . . ரும் தேவையில்லை. போடா த . . . ளி."

உண்மைதான். திருடனுக்கு எதற்குச் சான்றிதழ்கள்? எதற்குத் தனித்துவம்?

இதற்கான பதிலை என்னால் சொல்ல வைக்க முடியும். அனுபவமுள்ள திருடன் அரை போலீஸ் மட்டுமல்ல, அரை நீதிமன்றமும்கூட! திருடனுக்குக் கேட்கவும் கேட்க வைக்கவும் பொறுப்புள்ள நீதிபீடமிருக்கிறது. வேண்டாமென்று முடிவு செய்தேன். அதற்கான காரணமும் இருக்கிறது. உதைத்தாலும் கெட்ட கெட்ட வார்த்தைகளால் அபிஷேகம் செய்தாலும் திருடனுக்கும் போலீசுக்குமிடையிலான பரஸ்பரப் புரிதல்கள் எப்போதுமே இருக்கும். வரலாற்றின் துவக்கம் முதலே இது இப்படித்தான். கொள்வினை; கொடுப்பினை.

பேட்டை போலீஸ் ஸ்டேஷனுக்கு வருவதுவரைக்கும் என்மீது ஒரு மண்பரல் கூட விழவில்லை. பேட்டை போலீஸ், விசாரணை செய்வதற்காக பதினான்கு நாட்கள் என்னை நீதிமன்றப் பாதுகாப்பில் கொண்டுவந்தார்கள். விசாரணையும் தடயங்களும் பொருட்களை மீட்பதுமெல்லாம் மைசூரிலேயே நடந்து முடிந்துவிட்டன. இதெல்லாம் போலீஸ் முறைகள். மதுரை, கட்டப்பனை, மைசூர், கோழிக்கோடு போன்ற இடங்களுக்குப் போனதாக பதிவு செய்யப்பட்டிருக்கும். திருடன் முன்பு போனதும், நுழைந்ததும், தங்கியிருந்ததுமான இடங்கள் இவை.

பதிவுகளில் திருடனும் போலீசும் ஊர் சுற்றிக்கொண்டிருப்பார்கள். உண்மையில் இந்தப் பதினான்கு நாட்களும் திருடன், போலீஸ் ஸ்டேஷன்

லாக்கப்பில்தான் இருப்பான். விசாரணை முடிவுக்கு வந்தாலும் மீண்டும் பதினான்கு நாட்கள் கஸ்டடியை நீட்டித்து வாங்குவார்கள். இந்த முதல் பதினான்கு நாட்களுக்கான டிஏவை வாங்கிக்கொள்வார்கள். இதுதான் வழக்கம். குற்றம் சொல்லக்கூடாது. நானும் கற்பனையில் இந்தப் பதினான்கு நாட்களும் மைசூரிலும் கட்டப்பனையிலும் தான் வாழ்ந்தேன். காலையில் விருப்பமான நாஸ்டா, மதியம் பிரியாணி, இரவு ஒறட்டியும் இறைச்சியும் என்று அபகரித்த அரசாங்கப் பணத்தில் திருடனுக்கு பாத்தியப்பட்ட விகிதம் உணவாக வந்துகொண்டிருக்கும்.

சான்றாதாரங்கள் அனைத்தையும் எரித்து விடலாம். ஆனால், ஒரு மனிதனின் மனதில் பதிந்தவற்றைச் சாம்பலாக்க வேண்டுமென்றால் அவனை எரிக்க வேண்டும். எப்போது வேண்டுமானாலும் நான் ஜெயிலுக்குப் போக வேண்டிய ஒரு திருடன்தான். இந்த உடலைத் தவிர வேறெதையும் சட்டபூர்வமாக ஜெயிலுக்கு அனுப்பிவிட முடியாது. ஆகவே, நானே ஒரு கணக்குப் புத்தகமாக மாறிவிட வேண்டியதுதான். மனதிற்குள் ஒரு நாட்காட்டியைத் தொங்கவிட வேண்டும். வழக்கு, நீதிமன்றம், எனக்கு நானே வக்காலத்து என்று நிறைய இருந்தாலும் ஒவ்வொன்றையும் மிகச் சரியாக வரிசைப்படுத்தி என்னுடைய மனக்கணினியில் பாதுகாத்து வைத்திருந்தேன். இதில் பெரும்பாலானவற்றையும் ஒரு ஷெல்ஃபிலிருந்து எடுப்பதுபோல் என்னால் எடுக்க முடியும். வயது அதிகரிப்பதற்கேற்ப சில நேரங்களில் ஆதாரக் கட்டுகளின் ஒரு பகுதியைக் கரையான் அரிக்கவும் செய்திருக்கும். அதுதான் இந்தப் புத்தகத்தினூடே சொல்லப்பட்டிருக்கிறது. சாக்கின்மீது வழக்குத் தொடர ஏதாவது ஆதாரங்கள் கிடைக்குமா? பிறகு, முடிவு செய்தேன். போகட்டும், எல்லாமே தீக்கிரையாகிப் போகட்டும்.

## 53 - மைசூரின் மிச்சம்

மைசூரின் மிச்சம் என்ன இருக்கிறது? நான் நினைத்துப்பார்ப்பதுண்டு. வெறுமனே உட்கார்ந்திருக்கும்போது எனக்குக்கூட தோன்றும். நிகழ்ந்ததெல்லாம் உண்மைதானா? இதற்கெல்லாம் வெளிப்படையான ஆதாரங்கள், என் மனைவி யின் தங்கை பீமாவின் குழந்தைகள்தான். அவர்களைப் பார்க்கும் போதுதான் எல்லாமே நினைவுக்கு வரும். அவர்கள் இப்போது வளர்ந்துவிட்டார்கள். மைசூரில் என்னுடன் தங்கியிருந்த பீமாவைக் கடத்திக்கொண்டு போனவன் என்னுடைய அணுக்கத் தோழனாக இருந்த கமால் என்ற தமிழன்.

யூஸஃப் என் வலது கை என்றால் கமால் என் உதவியாளன். தினமும் சாயங்காலம் நான் தண்ணியடிப்பேன் என்பதை அறிந்திருக்கும் வெகு சிலரில் இவனுமொருவன். பாட்டில் தீர்ந்ததும் ஃபிரிட்ஜைத் திறந்துப் பார்ப்பதற்கான உரிமையும் மது கையிருப்பு குறையாமல் பாதுகாக்க வேண்டிய பொறுப்பும் இவனுக்குத்தான். வீட்டுக்கும் மனைவிக்கும் பீமாவுக்கும் தேவையான பொருட்களை இவனிடம் சொன்னால் போதும். மைசூருக்குப் போய் சரக்குகள் கொள்முதல் செய்வதும் இவன்தான். கூடவே, ஒட்டலையும் கண்காணிக்க வேண்டும்.

ஒருநாள், டிஒய்எஸ்பியுடன் சாயங்காலப் பொழுதைப் போக்கிவிட்டுத் திரும்பி வரும்போது வீட்டில் பீமா இல்லை. மது போதையில் ஒருநாள் நான் தவறாக நடந்துகொண்டது இவளிடம்தான். பிறகு, ஒரு சகோதரியாக மட்டுமே இவளை நான் பார்த்தேன்.

"பீமா எங்கே?"

"அவ கமால்கூட போயிட்டா." மனைவி மிக இயல்பாகச் சொன்னாள்.

"போயிட்டான்னா?"

"அவளுக்கு அவனைப் பிடிச்சிருக்கு; போயிட்டா. வேற என்ன சொல்றதுக்கு?"

இரண்டு வைத்துவிட்டுச் சொன்னேன்: "நாயே, அவ ஒருத்தனை விரும்பினா எங்கிட்டதானே சொல்லியிருக்கணும்? நான் நம்பி வீட்டில வெச்ச ஒருத்தன், உன் சகோதரியை இழுத்துட்டுப் போயிட்டான்னா ஊருலகம் என்னை என்னடி சொல்லும்?"

"அது அவளோட விருப்பம். நம்ம என்ன யோக்கியமா? உங்களால முடியும்னா அவங்களைத் திருப்பி அழைச்சிட்டு வாங்க."

இன்னும் இரண்டு வைத்தேன். "அவனை நான் அடிச்சித் துவைச்சி இங்க கொண்டுவந்து போடுவேன். எனக்குத் துரோகம் செய்த அவனை நான் சும்மா விடப்போறதில்லை. நான் அவனுக்கு எல்லா உரிமையும் கொடுத்திருந்தேன். இதை அவன் எங்கிட்ட சொல்லியிருக்கணும்."

"நடக்குற விஷயத்தைப் பேசுங்க. சொன்னா நீங்க அவனைச் சும்மா விட்டுடுவீங்களா?"

"ஒருவேளை இரண்டு கொடுத்திருப்பேன். ஆனா, இப்ப அவன் அதை விட நாலு மடங்கு அதிகம் வாங்கப்போறான். அந்த நாய்க்குப் பொறந்தவனை நான் அடிச்சிழுத்து இங்க கொண்டுவந்துப் போட்டு சிகிச்சை செய்வேன். எங்கிட்ட அவன் முறைப்படி பெண் கேட்டு, பிறகு அவங்க ஒண்ணா வாழ்ந்தாப் போதும்."

வெளியே இறங்கிவிட்டு வந்து கேட்டேன்: "எனக்கு ஒரு விஷயம் தெளிவாகணும். முன்பொரு தடவை நான் ஒரு தப்பு பண்ணிட்டேன். உடனடியா அதிலிருந்து மீளவும் செய்தேன். பிறகு, பார்வையாலோ வார்த்தையாலோ நான் ஏதாவது தவறா நடந்திருக்கேனா? என்மேல அவளுக்கு ஏதாவது பயமிருந்ததா?"

"அதெல்லாமில்ல, நீங்க அப்படி நினைக்கவும் வேண்டாம்."

அப்படியென்றால் எனக்குக் குற்றவுணர்ச்சி இல்லை. இதற்கானக் காரணம் நான் இல்லை. வெளியே வந்தேன். ஆட்கள் தயார். சின்னப்பையன், பாஷா உட்பட மூன்று நான்குபேர்கள்.

நம்பிக்கைத் துரோகம் எனக்குப் பிடிக்காது. கூடவே, பெரும் பணத்தால் வந்த அகங்காரம். நான் எடுத்துக்கொடுத்த ஒரு அவுட்ஹவுசில்தான் அவன் தங்கியிருந்தான். தற்போது அங்கே இருக்கமாட்டான். எடயாளத்தி லிருந்து பதினேழு கிலோ மீட்டர் தொலைவில் பேகூரில் அவனது

சகோதரி வசிக்கிறாள். ஆனந்தாரி காடு வழியாகச் சென்றால் தூரம் குறையும். இடையிடையே யானைகள் மூங்கில்களைக் கடித்துத் தின்னும் சத்தம் கேட்கும். என் மனதிற்குள் பகை புகைந்துகொண்டிருந்தது. கமாலின் சகோதரி வீட்டிற்குச் சென்றோம். என்னை அவளுக்குத் தெரியும். நான் நன்றாகக் குடித்துமிருந்தேன்.

"கமால் இங்க வந்தானா?"

"என் வீட்டுக்காரர் வீட்டில இல்லை" என்ற பதில் வந்தது. அதாவது அவனும் அவளும் இங்குதான் இருக்கிறார்கள். சொல்லிவிட்டு அவள் கதவை மூடி, அரைக்கதவின் பின்னால் நின்று பயத்துடன் பார்த்தாள். வீட்டினுள் நுழைவது சரியல்ல, இளம் வயதுப் பெண். அக்கம் பக்கங்களில் சிறு சிறு வீடுகளிருந்தன. திடீரென்று சத்தம் கேட்டதும் அயல் வீடுகளிலிருந்து ஆட்களிறங்கி வந்தார்கள். அதிலொரு தடியன், யாருடா இந்த ராத்திரி நேரத்தில வந்து பெரியாள் ஆகுறவன் என்று உரத்தக் குரலில் கேட்டான். பெரியவர் ஒருவர் அவனைத் தடுத்து: "இவர் சலிம்ஸாய்வர்" என்றார். பெரியவர் எனக்குப் புகையிலை விற்பவர். பாம்புபோல் தலையை உள்ளே இழுத்துக்கொண்டான் தடியன்.

நான் பக்கத்திலிருந்த ஒரு மரத்தின்கீழ் உட்கார்ந்துகொண்டேன். பணியாளர்களுடன். அதாவது அடியாட்களுடன். அதில் இரண்டு பேரிடம் வீட்டின் பின்பக்கம் போய் உட்காரச் சொன்னேன். வீடு முற்றுகைக்குள்ளா னது. அடியாட்களில் ஒருவன் காய்ந்த சருகுகளை அள்ளிப்போட்டு தீ வைத்தான். போதை படிப்படியாக இறங்கிக்கொண்டிருந்தது. நடந்து கொள்ளும் முறையின் அகம்பாவமும் நாடகத் தன்மையும் உறைக்க ஆரம்பித்தது. ஒரு சவாலாக எடுத்துக்கொண்டாயிற்று. திருட்டு மணியன் தோற்கலாம்; சலிம்பாஷா தோற்கக்கூடாது.

மறுநாள் காலையில் கமாலின் தங்கையிடம் சொன்னேன்: "நீ இங்க வந்து நில்லு தங்கச்சி. எனக்கு உள்ள போய்ப் பார்க்கணும்."

"அதுக்கென்ன ஸாய்வர், தாராளமா போய்ப் பாருங்க" என்றாள். இப்போது மட்டும் அவளுக்கு இந்தத் தைரியம் எப்படி வந்தது? உள்ளே யாருமில்லை. ஆனால், இங்குதான் இருந்திருக்கிறார்கள். சலிம் முதலாளியால் இதை உணர்ந்துகொள்ள இயலாது. ஆனால், திருட்டு மணியனால் முடியும். இரண்டுபேர் இருந்ததற்கான அடையாளங்கள் அங்கிருந்தன. கண்களை மூடி, சுவாசத்தை உள்ளே இழுத்தேன்.

சிறுவயதுமுதல் எனக்குத் தெரிந்த அவளது வேர்வையின் நெடி இந்த அறையில் தங்கிச் சென்றிருக்கிறது. திருடன் ஒரு போலீஸ் நாயும்கூட!

சாயங்காலம் எடயாளத்துக்குச் சென்றேன். கோபம் சிறிது தணிந்திருந் தது. சின்னப்பையனையும் பாஷாவையும் அழைத்தேன். வந்ததுமே சின்னப் பையனின் கன்னத்தில் ஓங்கி ஒன்று வைத்தேன். அவன் அலறினான். பாஷா அப்படியே காலில் விழுந்தான்.

"மன்னிச்சிக்குங்க அண்ணே . . . அவங்க வீட்டுக்குள்ளதான் இருந்தாங்க."

"அப்படின்னா உங்களுக்குத் தெரியாம அவங்க எப்படி வெளியே போயிருக்க முடியும். சமையலறை வாசலைத் திறந்துட்டு உங்க எதிர்லதான் வெளியே போயிருக்காங்க."

ஒப்புக்கொண்டார்கள். "அண்ணே கமால் பாஷா ரொம்ப நல்லவண்ணே . . ." என்றெல்லாம் சொன்னார்கள். இன்று அவர்கள் நஞ்சன்கோடு சப்ரிஜிஸ்ட்ரார் ஆஃபீசுக்குப் போய் திருமணத்தைப் பதிவு செய்திருப்பார்கள்.

ஈகோவைத் திருப்திப்படுத்த பணம் ஒருபோதும் பயன்படாதென்பதைப் புரிந்துகொண்டேன். இவர்கள் என்னுடைய பணத்திற்கு விசுவாசமாக நடந்துகொள்ளவில்லை. ஆனால், அன்புக்கு அடிமையாக இருந்திருக்கிறார் கள். அதுதான் சரியானதும்கூட. மனிதனின் மனம் குரங்குத்தனம்கொண்டது. அதற்குப் பெருந்தன்மை கிடையாது. தோல்வியை அவ்வளவு சுலபமாக அது ஏற்பதில்லை.

"அவனைப் பார்த்தாச் சொல்லிடுங்க. இங்கேயே வெட்டிப் போட்டுடு வேன்னு."

இப்படியெல்லாம் பேசிப் பயமுறுத்தியிருக்கக்கூடாது. நான் பிடிபடுவது வரைக்கும் அவர்கள் இங்கு வரவே இல்லை. முதலில் கோயம்புத்தூருக்கும் அங்கிருந்து மேட்டுப்பாளையத்திற்கும் போய் அங்கேயே தங்கி விட்டார்கள். கமால் ஒரு ஒர்க் ஷாப்பில் வேலைக்குச் சேர்ந்தான். பீமா இப்போது திருவனந்தபுரத்தில்தான் இருக்கிறாள். கொஞ்சம் முன்கோபக்காரி. பிறகு, கமாலும் பீமாவும் குழந்தைகளுடன் வந்தார்கள். முன்போலவே, நட்புறவு உருவானது. அகங்காரத்தின் ஸார்வர் அப்போது அஸ்தமித்திருந்தான்.

1988இல் பரோலில் இறங்கி, இடவாவில் ஒரு வீட்டில் ஏறினேன். நூறுக்கும் அதிகமான சவரன் நகையும் கொஞ்சம் பணமும் கிடைத்தது. மனைவியையும் குழந்தையையும் அழைத்துக்கொண்டு தலைமறைவானேன். இந்தத் தடவை எங்கே போவது? கமாலின் உறவினர் ஒருவர் தமிழ்நாட்டில் துவரங்குறிச்சியில் இருப்பதாக அறிந்து அங்கே சென்றேன். உதவிக்கு, கமாலும் வந்தான்.

உறவினர் உதவியுடன் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துத் தங்கி, ஃபர்னிச்சர் வியாபாரம் தொடங்கினேன். இங்கே யாரும் இந்த வியாபாரத் தில் ஈடுபட்டிருக்க வில்லை. துவரங்குறிச்சி காவல் நிலையத்தின் எதிரில்தான் என்னுடைய ஃபர்னிச்சர் ஷாப். இந்த இடத்தில் கடை அமைந்தது தற்செயல் நிகழ்வுதான். விதி, போலீசார் இல்லாத இடத்தில் நம்மை உட்கார அனுமதிப்பதில்லை. கடை ஆரம்பித்து இரண்டு வாரம்தானிருக்கும். ஒரு போலீஸ்காரர் வந்து சொன்னார்: "எஸ்ஐ கூப்பிடுறார்."

நான் சற்றுத் தயங்கினேன். வேறு எதற்குமில்லை. ஏதாவது தேவையில் லாத கேள்விகள் வந்தால், சமாளித்து நிற்பதற்கு, சற்று வலுவான பதில்களைத் தயார் செய்ய வேண்டும்.

நான் பயந்துவிட்டதாக நினைத்த கான்ஸ்டபிள்: "பயப்பட வேண்டாம். எஸ்ஐயும் நம்மைப்போல ஒரு மனுஷன்தான். எஸ்ஐகிட்ட நீ பேசியிருக்கியா?"

"இல்லை."

"பேசியிருக்கணும்; இந்த இடத்தில ஒரு கடை போடும்போது அவரை வெச்சித் திறந்திருக்கணும்."

"எனக்குக் கொஞ்சம் பயந்த சுபாவம் . . ."

கான்ஸ்டபிள் சிரித்தார்: "போலீஸ்காரன்னா அவ்வளவு பயமா?"

"ஆமா . . ."

"பயப்பட வேண்டியதில்லை. நாமெல்லாம் நண்பர்கள்தான். என் பெயர் செல்லையன்."

நான் என் தலையெழுத்தைப் பழித்தேன்: "எங்க போனாலும் எங்கூட நட்பு

வைக்கிறதுக்குன்னே கிளம்பியிருக்கானுங்க."

திறப்பு விழாவிற்கு அழைக்காததில் எஸ்ஐக்கு வருத்தமிருப்பது வெளிப்படையாகத் தெரிந்தது.

"கடைக்கு லைசென்ஸ் இருக்கா?"

"இல்லை, எடுத்துடறேன்."

"ஆரம்பிச்ச பத்தாவது பிறந்த நாளுக்கா?"

நான் பயந்ததுபோல் நின்றேன்.

"சரி, விடு. உன்னைப் பார்த்தது நல்லதாப்போச்சு. இங்க பாரு, இது ஒரு போலீஸ் ஸ்டேஷன்போலவா இருக்கு? ஒரு ஃபர்னிச்சர் கிடையாது."

"சரிதான்."

"கொஞ்சம் ஃபர்னிச்சர் செய்யணும். செல்லையன் எல்லாம் சொல்வான். சரியா?"

"சரி."

"போ."

"சரி."

நகைகளை விற்று, பணத்தை முதலீடு செய்து வியாபாரத்தை அபிவிருத்தி செய்ய ஆரம்பித்திருந்தேன். ஆசாரிகளை வைத்து வேலை செய்தேன். மைசூரில் யூஸஃப் என்றால், இங்கே தங்கவேல் ஆசாரி. நானே ராஜா ரகம். தச்சர்களின் தலைவா . . . என்று தினம் நான்கு முறை சொல்ல வேண்டும். இதை மற்ற தச்சர்கள் கேட்க வேண்டும். இது போதும்.

தங்கவேல் சொன்னான்: "நமக்கு அரசாங்கத் தடியை ஏலத்தில பிடிக்கணும். அப்படின்னா திருட்டுத்தனமா வேறு தடிகளும் கொண்டு வரலாம்."

"திருட்டுத்தனமாவா? அது தப்பில்லையா?"

"திருட்டுத்தனம்னா திருடுறதில்லை. அதையெல்லாம் நான் பார்த்துக்கு

றேன்."

அப்படீன்னா சரி. முதல் லோடை மதுரை அவனியாபுரத்தில் ஏலம் பிடித்தோம். கூடவே, மரம் அறுத்து விற்பதும் விறகு வியாபாரமும் தொடங்கினேன். ஒரு டூ வீலர் வாங்கினேன். எங்காவது ஒரு நல்ல மரத்தைப் பார்த்தால் போதும், உடனே தங்கவேலுவும் சிஷ்யர்களும் அதை விலைக்குக் கேட்பார்கள். செங்குத்தாக நின்ற மரம், ஒருசில மணி நேரங்களில் நெடுஞ்சாண்கிடையாகக் கிடக்கும். அந்தப் பகுதிகளில் யாரும் தராத கூலியை நான் தந்தேன். பாவம், என்னைத் தயாநிதி என்று நினைத்திருப்பார்கள். பிறகு, ஒரு டெம்போ வாங்கினேன். ஒன்றரை வருட காலத்தில் நினைத்திராத முன்னேற்றம். இதனிடையே, போலீஸ் ஸ்டேஷனுக்கு மேஜை, பெஞ்சுகளென்று செய்து கொடுத்தோம். அதெல்லாம் இன்றும் அங்கே இருக்கக்கூடும். ஒரு லட்சத்திற்கும் மேல் ரொக்கப் பணமும் கைவசமிருந்தது. இன்னும் அதில் கை வைக்கவில்லை. ஒரு ஸாமில் தொடங்க வேண்டும். இதுதான் கனவு.

இதனிடையே, திமுகவின் ஒரு உள்ளூர் தலைவருடனான அறிமுகம் கிடைத்தது. அங்கிருந்த ஒரு செருப்புக் கடையின்கீழ் நல்ல கள்ளச் சாராயம் கிடைக்கும். இங்கேதான் அந்த அறிமுகம் நிகழ்ந்தது. அவர் என்னைக் கழகத்தில் இணைத்தார். ஓரிரு கூட்டங்களுக்கும் அழைத்துச் சென்றார். கலைஞர் அப்போது துவரங்குறிச்சிக்கு வந்தார். தோளிலொரு கேமிராவையும் தொங்கவிட்டபடி நாகர்கோவிலிலிருந்து வந்த பத்திரிகை ஃபோட்டோ கிராஃபர் என்று சொல்லி நானும் சென்று சில புகைப்படங்கள் எடுத்தேன். எல்லாம் ஒரு பம்மாத்துதான்.

ஒருநாள், திமுகவின் அந்த உள்ளூர்ப் பிரமுகர் ஒரு நல்ல வாய்ப்புடன் வந்தார். தமிழ்நாடு அரசின் சமூகக் காடுவளர்ப்புத் திட்டத்தின் கீழுள்ள 82 ஏக்கர் நிலத்தை வெட்டிச் சீர்படுத்திக் கொடுக்க வேண்டும். அதிலுள்ள மரங்கள் உட்பட ஏலம். சில நல்ல மரங்களும் அதிலிருந்தன. அதில் பெரும் லாபம் கிடைத்தது. அடுத்ததாக, ஸாமில் தொடங்குவது பற்றிய யோசனையில் மூழ்கினேன்.

ஒருநாள், துவரங்குறிச்சி காவல்நிலையத்தின் எதிரில் ஒரு டெம்போ வந்து நிற்பதைக் கடையிலிருந்துப் பார்த்தேன். கவனம் அதில் பதியவில்லை. இப்படி எத்தனையோ வண்டிகள் வருகின்றன, போகின்றனவே. வண்டியில் கேரளப் பதிவெண் இருந்தது.

வண்டியில் வந்தவர்கள் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து இறங்கினார்கள்.

கூடவே, இங்குள்ள எஸ்ஐயும். அதிலொருவன் எஸ்ஐயிடம் எதுவோ சொல்கிறான். கடையில் வாடிக்கையாளர்கள் வந்தார்கள். நான் அவர்களைக் கவனிப்பதில் மூழ்கினேன். கடையை மூடிவிட்டு இரவில் இரண்டு பெக் போட்டுவிட்டு வீட்டில் வந்து படுத்தேன். நடுச்சாமத்தில் ஏதோ பயங்கரச் சத்தம். நாய்களோ பூனைகளோ சண்டை போடுகிறதென்று நினைத்தேன். பிறகு, பட் . . . பட் . . . என்று கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. கூடவே பூட்சு சத்தமும் விசில் சத்தமும். வாசலை இப்போது பலமாகத் தட்டு கிறார்கள். "கதவைத் திற . . . கதவைத் திற . . ." என்று சொல்லி.

நான் மனைவியிடம் சொன்னேன்: "வேளை வந்துட்டது."

கதவைத் திறந்ததும் ஆச்சரியத்தில் உறைந்துபோனேன். பெரிய பெரிய ஆறேழு ரைஃபிள்கள், ஒன்றன்பின் ஒன்றாக உள்ளே நீண்டு வருகின்றன. அதிலொருவர் கேட்கிறார்:

"மணியன்பிள்ளைதானே நீ?"

'இனி மறைக்க என்ன இருக்கிறது. இவ்வளவு பெரிய முஸ்தீபுகளை மதித்தேயாக வேண்டும்.'

"ஆமா, சார். நான் மணியன்பிள்ளைதான்."

"நான் ராமச்சந்திரன் செட்டியார். வர்க்கலை எஸ்ஐ. இடவா கேஸ் ஞாபகமிருக்கா?"

"இருக்கு சார்."

அறைக்குள் நுழைந்து இருந்ததை எல்லாம் அள்ளிப்போட்டு சோதனை செய்தார்கள். மனைவி அப்படியே சிலையாக நின்றாள். மகன் விழித்து அரக்கப் பரக்கப் பார்க்கிறான். சினிமாவில் தவிர, நேரில் இத்தனைத் துப்பாக்கிகளை அவன் ஒன்றாகப் பார்த்ததில்லை. மனைவி மிகவும் தளர்ந்துபோயிருந்தாள். கணவன் எப்படிப்பட்டவனாக இருந்தாலும் நிம்மதியான வாழ்க்கையைத்தானே ஒரு மனைவி விரும்புவாள்.

சில காகிதங்களுக்கு அடியிலிருந்த ஒரு பெட்டியை வர்க்கலை போலீஸ்காரர் ஒருவர் எடுத்துக்கொண்டுவந்து வைத்தார். தமிழக போலீஸ் துப்பாக்கிகளை இன்னும் கீழே இறக்கவில்லை. இத்தனைத் துப்பாக்கிகளையும் நீட்டிக்கொண்டு நிற்பதற்கான கொள்ளளவு அந்த

அறைக்கும் இல்லை.

போலீஸ்காரர் பெட்டியைத் திறந்தார். அடுக்கடுக்காக நூறு ரூபாய் கட்டுகள். அவர் திகைப்புடன் தலையை உயர்த்தி செட்டியார் சாரைப் பார்த்தார். உமிழ்நீர் விழுங்கவும் சிரமப்பட்டார். வேர்த்த உடலுடன் ஏலாதவர்போல் அப்படியே சம்மணமிட்டு உட்கார்ந்து விட்டார்.

"எவ்வளவு இருக்கு?" செட்டியார் சார் கேட்டார்.

"பதினொரு கட்டு. ஒரு லட்சத்து பத்தாயிரம்."

அதை மூடி வைத்துவிட்டு சூட்கேஸில் இருந்த பழைய டர்க்கி டவலை எடுத்தார்கள். ஒரு செயின், இரண்டு மோதிரங்கள்.

மதுரைக்குக் கொண்டு வந்தார்கள். அங்கே ஒரு லாட்ஜில் தங்கி யிருந்தேன். வாதியின் ஆட்களும் கூடவே இருந்தார்கள். இவர்கள்தான் டெம்போவில் வந்தவர்கள்.

திருட்டுப் பொருட்களை எடுத்த எஸ்ஐ, மனைவியின் சேலைகள், துணிகள், அவசரத் தேவைக்கான கொஞ்சம் பணம் போன்றவற்றைத் திருப்பிக் கொடுத்தார். பேட்டையில் என்னுடைய எல்லா ஆதாரங்களையும் தீயிட்டு எரித்த அந்த போலீஸ்காரரைப் பொறுத்தவரைக்கும் இவர் எத்தனையோ மடங்கு நல்லவர். கொல்லத்தில் ஒரு பெரிய முந்திரி ஆலை முதலாளியின் மூன்று லோடு முந்திரியைப் பிடித்ததற்காக சஸ்பென்ஷன் வாங்கிய மனச்சாட்சியுள்ள அதிகாரி

என்னுடைய வழக்கில் பதினாறு பவுன் குறைவிருந்தது. துவரங்குறிச்சி யில் நான் தங்கியிருந்த வீட்டின் உரிமையாளருக்கு நான்கு பெண் மக்கள். வாடகை மட்டும்தான் அவர்களது மொத்த வருமானம். கழுத்திலோ காதிலோ எதுவுமில்லை. அதை அவர்களுக்குக் கொடுத்திருந்தேன். சாரிடம் சொன்னேன்:

"அதைப் பிடிச்சுப் பறிக்கப் போக வேண்டாம் சார். நான்கு பெண் குழந்தைங்க. அவங்க நிலைமை, தேம்புற நாய் தலையில தேங்கா விழுந்தது போலாயிடும். குடும்பத்தோட ஒருவேளை அவங்க தற்கொலைப் பண்ணிக்க வும் இது காரணமாயிடலாம். சார் அதை விட்டுடணும். இல்லை, வாதிகளுக்கு அது கிடைச்சே தீரணும்னா நான் கேசை விவாதிப்பேன். பிறகு, உள்ளதும் போயிடும். என்னைக் குற்றம்

சொல்லாதீங்க."

இதிலும் அவர் பெருந்தன்மையுடன் நடந்துகொண்டார். வாதிகளுடன் பேசி முடிவு செய்தார். பணத்திலிருந்து எடுத்து, பதிலுக்கு நகை செய்து வைக்கப்பட்டது.

அந்த அத்தியாயமும் முடிவடைந்தது. மைசூரிலும் துவரங்குறிச்சியிலும் அதிர்ஷ்டம் என் பக்கமிருந்தது ஏனென்று இன்னும் புரிந்துகொள்ள முடியவில்லை. நினைத்துப் பார்க்க முடியாத, ஆச்சரியப்படுகிற முன்னேற்றம். நிம்மதியாக வாழ்வதற்கு மட்டுமே ஆசைப்பட்டேன். விதியென்பது இதுதான். நம்மை உயரத்தில் கொண்டுபோய் நிறுத்திவிட்டு, அப்படியே கீழே போட்டு விடும். பின்பு, வீழ்ச்சியின் ஆழத்தையும் துயரத்தையும் பார்த்துக் கை கொட்டிச் சிரிக்கும்.

சில நேரங்களில் தோன்றும். அந்த நான்கு பெண் மக்களுக்கும் எதையாவது கொடுப்பதற்கு கடவுள் என்னைப் பயன்படுத்தியிருக்கலாம். அதை நான் என்னுடைய அதிர்ஷ்டமென்று தவறாக நினைத்துவிட்டேன். நானொரு நிமித்தம் மட்டும்தான். முன்பு அம்மா சொன்ன ஒரு கதையும் என் நினைவுக்கு வருகிறது. மிகமோசமான ஒருவன். நன்மையென்றால் என்னவென்று அறியாதவன். அவன் இறந்த பிறகு அவனது ஆன்மாவை செக்கிலிட்டு ஆட்டும்படி உத்தரவிடப்பட்டது. செக்கு ஆடத் தொடங்கும்போது ஒரு சிரட்டைத் துணுக்குத் தடுத்து செக்கு நின்றது. காலன் என்னவென்று விசாரித்தான். கடைசியில் தெரிய வந்தது: ஒரு குழந்தை, தூரத்தில் கிடந்த சிரட்டையை எட்டிப் பிடிக்க முயற்சிக்கும்போது இவன் எள்ளலுடன் தனது காலால் அதை குழந்தையின் அருகில் தட்டி விட்டான். அதிலிருந்த தேங்காயைத் தின்று குழந்தை உயிர் பிழைத்தது. கொடிய பாவங்களின் பட்டியலில் இதுபோன்ற சிறு சிரட்டைத் துணுக்குகள் இருந்தால் அதுதான் புண்ணியம்.

## **54 -** சித்தப்பிரமை

கர்நாடகாவில் 1983இல் கைது செய்யப்பட்டேன். பல லட்சங்கள் மதிப்புள்ள என்னுடைய ஸ்தாபர ஜங்கம சொத்துக்களை போலீஸ் ஏலத்தில் விற்றது. வெளியிலிருந்து வரவேண்டிய தொகை இதை விடவும் பல மடங்கு அதிகம். எல்லாமே புகையிலை விவசாயமும் வேறு பல வியாபாரங்களும் செய்து நான் சம்பாதித்தவை. ஆனால், இந்த லாபம் முழுவதும் இடவாவில் நடந்த அந்தத் திருட்டு முதலீட்டிலிருந்து கிடைத்தவை.

வழக்கின்போது நீதிமன்றம் கருணை காட்டியது. தீர்ப்புப்படி என்னுடைய தண்டனை காலம் 2011இல் முடிவடையும். பல்வேறு வழக்குகளில் ஜாமீனில் வந்து தலைமறைவானவர்களும் விசாரணைக்கு வந்திருந்தார்கள். ஆனால், திருந்தி வாழவேண்டுமென்ற என் விண்ணப்பத்தின்பேரில் ஆற்றிங்கல் நீதிமன்றம் நிபந்தனைகளுடன் என்னுடைய தண்டனைக் காலத்தைக் குறைத்தது. டிஒய்எஸ்பி ராங்கில் குறையாத ஒரு அதிகாரியின் தொடர் கண்காணிப்பிலும் பரிந்துரையிலும் மூன்று வருடங்கள் இருக்க வேண்டும். இந்தக் காலகட்டத்தில் திருந்திவிட்டதாகத் தெளிவாக வேண்டும். என்றால், டிஒய்எஸ்பி ஒரு சான்று தருவார். அதை விசாரணை நீதிமன்றத்தில் சமர்ப்பித்தால் மட்டுமே தண்டனையிலிருந்து முழுமையான விடுதலை கிடைக்கும்.

கைப்பற்றிய தொகையில் ஒரு பகுதியை என்னுடைய உழைப்பை மனதில்கொண்டு திருப்பித் தரவேண்டுமென்று உயர்நீதிமன்றத்தில் நான் அப்பீல் செய்தேன். குறிப்பிட்ட ஒரு தொகை எனக்குத் தரப்பட வேண்டுமென்று நீதிமன்றமும் உத்தரவிட்டது. சட்டப்படி இரண்டு லட்சத்திற்கும் அதிகமான இந்தத் தொகை வட்டியுடன் சேர்த்து எனக்கு வரவேண்டும்.

1995இல் ஜெயிலிருந்து வெளிவந்த பிறகு, மூன்று வருடம் ஈஸ்ட் போலீஸ் ஸ்டேஷனில் சேவகனாக இருந்தேன். இங்கு எல்லாமே நான்தான். சாயா வாங்கிக் கொடுப்பவன் முதல் எழுத்தர்வரை வேலை பார்த்தேன். இப்படியாக, மூன்று வருட நன்னடத்தையை வெற்றிகரமாகப் பூர்த்தி

செய்தேன்.

டிஒய்எஸ்பி வில்ஃபிரட் சார் அளித்த சான்றிதழை ஆற்றிங்கல் நீதிமன்றத்தில் சமர்ப்பித்தேன். அங்கே மற்றொரு சான்றிதழ் தந்தார்கள். அதை ஆற்றிங்கல் சப் டிரஷரியில் கொடுத்தால் எனக்கு சேர வேண்டிய பணம் கிடைக்கும். அதை வைத்து ஏதாவது வியாபாரம் செய்து வாழ வேண்டும். கொஞ்சம் பணத்தை மகனுக்குக் கொடுக்க வேண்டும். கெட்ட பெயரைத் தவிர இதுவரை அவனுக்கு நான் எதையும் கொடுத்ததில்லை.

எதிர்பார்த்திருந்த அந்த நாள் வந்தது. இன்று ஆற்றிங்கல் டிரஷரியிலிருந்து நீதிமன்றம் உத்தரவிட்ட தொகை கிடைக்கும். ஏறத்தாழ நான்கு லட்சம் ரூபாய். பணத்தைக் கொண்டுவருவதற்காக ஒரு சூட்கேஸ் இரவல் வாங்கினேன். இரண்டு நண்பர்களையும் துணைக்கு அழைத்துக்கொண்டேன். கோட்டயம் வீட்டில் சுரேஷும் ஆர்எஸ்எஸ்காரனான மற்றொரு நண்பனும். ஒரு பைக்கில் மூன்றுபேருமாக ஆற்றிங்கல் சென்றோம். நான் உழைத்துச் சம்பாதித்தப் பணத்தில் கொஞ்சம் குடிக்க வேண்டும். மிச்சப்பணம் மகனுக்கு. தாயில்லாத பையன். ஓட்டங்களினிடையே அவனைச் சரியாகப் படிக்க வைக்க இயலவில்லை. பெரிய அளவில் உழைப்பதற்கான சக்தியும் என் உடம்பில் இல்லை. இரண்டு ஆட்டோ வாங்கிவிட வேண்டும். எங்காவது ஐந்து சென்ட் நிலம் வாங்க வேண்டும். முதல் நாளிரவு தூக்கமில்லாமல் சிந்தித்துக் கொண்டிருந்தேன். நேற்று மட்டுமல்ல, சில வருடங்களாகவே இந்தப் பணத்தைப் பற்றிதான் சிந்தித்துக் கொண்டிருந்தேன். என் மனைவி மரணமடைந்தபோது என்னைத் தடுத்து நிறுத்தியவன் மகன்தான். அவனது வாழ்க்கையைச் சீராக்கி எடுப்பதற்கு என்னுடைய பங்காக இவ்வளவாவது கிடைக்கிறதல்லவா என்ற ஆறுதலுடன்தான் ஜெயில் வாழ்க்கையைக் கழித்தேன்.

முன்தினம், ஈஸ்ட் ஸ்டேஷனிலிருந்து ஆயிரம் ரூபாய் கடன் வாங்கியிருந்தேன். மறுநாள் நான்கு லட்சம் ரூபாய் கிடைக்கப்போகிற நம்பிக்கையுடன். நீதிமன்றம் தந்த சான்றிதழை டிரஷரியில் கொண்டுபோய்க் கொடுத்தேன். டிரஷரி ஆஃபீசர் சொன்னதைக் கேட்டதும் என் குரல்வளையே அறுபட்டது போலானது.

"பணம் தர்றதுக்கான வாய்ப்பு தற்போதில்லை. கேரளா ஹை கோர்ட் தீர்ப்புக்கெதிரா கர்நாடகா அரசோட ஸ்டேட் அப்பீல் சுப்ரீம் கோர்ட்டுக்குப் போயிருக்கு. உங்களுக்கு ஒரு எக்ஸ்பிளனேஷன் மெமோ வந்திருக்கு. கிடைக்க வேண்டிய தொகை சம்பந்தமாக நீங்க விரும்பினா கர்நாடகா

சீஃப் செகரட்டரிக்கு அப்பீல் பண்ணலாம். கைப்பற்றிய முப்பது நாட்களுக்குள்ளால அங்கிருந்து உங்களுக்கு விளக்கம் கிடைக்கும்."

எனக்கு எதுவுமே புரியவில்லை. அதில் எழுதியிருந்ததை அவரே வாசித்துச் சொன்னார்: "திருட்டு முதலீட்டை வைத்துச் சம்பாதித்ததில் குறிப்பிட்ட ஒரு பங்கினைத் திருடனுக்குத் திருப்பிக் கொடுக்கும் தவறானதொரு வழக்கம் கர்நாடக அரசுக்குக் கிடையாது. இதைக் காரணமா வெச்சிதான் அப்பீல் போயிருக்கு."

நான் அப்படியே தகர்ந்துபோனேன். இனி, சுப்ரீம் கோர்ட்டுக்குப்போய் கர்நாடகா அரசுக்கெதிராக வழக்கு நடத்தி நான் வெற்றிபெறவா? வெளியே வந்திருந்து அழுதேன். நண்பர்கள் ஆறுதல் சொன்னார்கள். இனி என்ன ஆறுதல் வேண்டிக்கிடக்கிறது. நேராக பாரை நோக்கி நடந்தோம்.

வீட்டுக்கு வந்தேன். பிறகு நடந்தது எதுவும் நினைவில் இல்லை. மற்றவர்கள் சொல்லித்தான் அறிந்துகொண்டேன். "ராத்திரி முழுவதும் தூங்கவே இல்லை. ஒரே பாட்டும் கூத்தும் பேச்சும் ரகளையும்தான்." அதிகமாகக் குடித்து விட்டேன் என்று நினைத்திருக்கிறார்கள்.

விடியற்காலையில், அறைக்குள்ளிருந்த சூட்கேசையும் எடுத்துக்கொண்டு புறப்பட்டேன். முதல் நாள் கடன் வாங்கிய ஆயிரத்தில் இருநூறு ரூபாய் மிச்சமிருந்தது. முதல் நாளைய அழுக்கான சட்டையும் வேட்டியும்தான் இப்போதும். துவைத்துத் தேய்த்ததாக நினைத்துக்கொண்டேன். பணத்தை வாங்கப் போகிறேன். முதல் நாள் பணமில்லை என்று சொன்னதை இரவு முழுவதும் சொல்லிச் சொல்லிப் பார்த்தும் மனம் ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டது. அந்தப் பணத்தை நான் அவ்வளவுக்கு நம்பியிருந்தேன். என் வாழ்க்கை முழுவதையும் இந்தப் பணத்தால் வரையறுத்து வைத்திருந்தேன். இது கிடைக்காது என்பதை மனம் நம்ப மறுக்கிறது. ரோட்டில் இறங்கினேன். இன்னும் நேரம் விடியவில்லை. எதிரில், காராளில் சந்திரன் தன்னுடைய மினி லாரியில் வந்தான்:

"எங்கே போறே அண்ணா?"

"திருவனந்தபுரத்துக்கு."

"அது சரி. விடியறதுக்கு இன்னும் எவ்வளவோ நேரமிருக்கு. பஸ் கிடைக்குமா? அண்ணனுக்கு யோகமிருக்கு. எனக்கும்

திருவனந்தபுரத்துக்கு ஒரு சவாரி இருக்கு. வா, ஏறு."

ஆனால், பாரிப்பள்ளி ஹைவேயை அடைந்ததும் சொன்னேன்: "நான் இங்க இறங்கிக்கிறேன்."

"திருவனந்தபுரத்துக்குப் போறேன்னே?"

"வேண்டாம், இங்க இறங்கினா போதும்."

மனம், இந்த ஊரை ஆற்றிங்கல் என்று சொல்கிறது. டிரஷரியில் போய் பணம் வாங்க வேண்டுமே? மனத்தில் மகனைப் பற்றிய எண்ணம். தொகையை வைத்து மகனுடைய வாழ்க்கைக்கு ஏதாவதொரு வழி கண்டுபிடிக்க வேண்டும். என் வாழ்க்கைக்குள் சிக்கிச் சீரழிக்கப்பட்டிருக்கிறது அவனுடைய வாழ்க்கையும். இந்தக் குற்றவுணர்ச்சி எப்போதுமே இருந்து வருகிறது. பக்கத்தில் எங்கோ மாட்டுச்சந்தை இருக்க வேண்டும். ரோடு முழுக்க மாடுகளாக வந்துகொண்டிருந்தன. இடையில் ஒரு நிமிடம் தடுமாற்றத்துடன் சுயநினைவும் வருகிறது. இந்த சூட்கேஸ் இனி பயன்படாதென்று ரோட்டில் வீசியெறிகிறேன். மீண்டும் சுயஉணர்வு வரும்போது சாப்ஸாகப்போகும் மாடுகளினிடையில் நிற்கிறேன். ஓட்டி வந்த பையன்மார் எதையோ சொல்லித் திட்டுகிறார்கள். மீண்டும் சுயஉணர்வும் தடுமாற்றமும். அய்யோ சூட்கேஸ் ரோட்டில் அல்லவா கிடக்கிறது. அதில் நிறைய பணமிருக்கிறதே. ஓடிப்போய் அதை எடுக்கிறேன். உடனே அதை வீட்டில் கொண்டுபோய்ச் சேர்க்க வேண்டும்.

ஒரு சூப்பர் ஃபாஸ்ட் வந்தது. ஏறினேன். பஸ் கொல்லத்துக்கு வந்த விஷயம் உணர்வில் தட்டவில்லை. கருநாகப்பள்ளியை அடைந்த பிறகுதான் தூரத்தைப் பற்றிய உணர்வு வருகிறது. இன்னுமா கொல்லத்துக்கு வந்து சேரவில்லை. கருநாகப்பள்ளியில் இறங்கி நின்றேன். எந்த இடம்? மனதில் பதியவில்லை. மறுநாள் டிசம்பர் ஆறு. பாபர் மசூதி தகர்க்கப்பட்டதன் நினைவு நாள். நிறைய கண்டனச் சுவரொட்டிகள் ஒட்டப்பட்டிருந்தன. நேற்று முன் தினம், ஸ்டேஷனிலிருந்து வரும்போது டிசம்பர் ஆறாம் தேதியை எப்படி எதிர்கொள்வதென்று அங்கே நடந்த ஒரு ஆலோசனைக் கூட்டமும் நினைவிருந்தது. ஒரு டாங்கர் லாரியை நிறுத்திவிட்டு டிரைவர் இறங்கி சாயா குடித்துக்கொண்டிருந்தான். நான் சத்தமாக அலறினேன்:

"அய்யோ இதுக்குள்ள நிறைய வெடிகுண்டு இருக்கே . . ."

ஆட்கள் ஓடி வந்தார்கள். பாவம், டிரைவர் பதற்றத்திலானான். கையிலிருந்த சாயா தம்ளருடன் அவன் ஓடினான். இவ்வளவு ரகளைகளும் நடந்துகொண்டிருக்கும்போது நான் பஸ்சிலேறி கொல்லம் கேஎஸ்ஆர்டிசி பேருந்து நிலையத்தில் வந்திறங்கினேன். மனம் முழுக்க வெடிகுண்டுகள். பெட்டியைக் கீழே போட்டேன்:

"யாரும் தொட்டுடாதீங்க; இது நிறைய வெடிகுண்டுகள் இருக்கு."

போலீஸ் வரும்போது மூத்திரத்தில் கிடந்து உருண்டபடியே நான் நல்ல தூக்கம். எஸ்ஐ பார்த்து விட்டு: "அய்யோ இவன் நம்ம மணியன்பிள்ளை இல்லையா? இவன் வெடிகுண்டு வெச்சிருக்கானா?" என்று கேட்டுவிட்டு என்னையும் சூட்கேசையும் தூக்கி ஜீப்பில் போட்டு, ஸ்டேஷனுக்குக் கொண்டு வந்தார்கள். துணி முழுவதும் கறுப்பு நிறத்திலிருந்தது. ஸ்டேஷன் சுற்றுப்புறமெங்கும் மூத்திர வாடை. என்னுடன் படித்த சிவசங்கரன் போலீசும் ரஷீது சாரும் பாத்ரூமுக்குக் கூட்டிச் சென்று குளிப்பாட்டி, புதிய சட்டையும் வேட்டியும் உடுத்தி ஸ்டேஷனில் உட்கார வைத்தார்கள். வெறுமொரு திருடனான என்மீது இவர்களுக்கிருந்த அக்கறை!

அங்கும் நான் உட்கார்ந்திருக்கவில்லை. வெளியே இறங்கி அட்டகாசம் செய்தேன். பாரா போலீசின் கையிலிருந்த துப்பாக்கியைப் பிடுங்கினேன். அந்த மனிதர் பயந்துவிட்டார். திருப்பிக் கொடுக்க மறுக்கிறேன். எல்லாருமாகச் சேர்ந்துப் பிடித்து வாங்கினார்கள். பிறகு கெட்ட வார்த்தைகள்.

"அநியாயமாக உள்ளே அடைக்கப்பட்டிருக்கும் அனைவரையும் விடுதலை செய்" கோஷம் போடுகிறேன். வெளியே நின்றிருந்த யாரோ ஒருவரின் பாக்கெட்டில் கை போட்டு "எடுடா என் ஆறு லட்சம் ரூபாவை" என்கிறேன். பாவம் அந்த ஆள் நடுங்கிப்போய்: "எந்த ஆறு லட்சம்?" என்கிறான். கடைசியில் கைகளில் விலங்கு மாட்டி ஒரு தூணில் கட்டிப் போட்டார்கள்.

சிஐ ஜேம்ஸ் சார் வந்ததும் கேட்டார்: "அவன் தண்ணியோ கஞ்சாவோ அடிச்சிருக்கானா?"

"இல்லை சார்."

"ஆங் . . . அவனை இங்க வெச்சிருக்குறது சரியில்லை. அவனோட

சொந்தக்காரங்களைக் கூப்பிடுங்க."

வாழத்துங்கலுக்கு போலீஸ் சென்றது. அங்கே எனக்குப் பொறுப்பாக யாருமில்லை. குட்டிக்கடையிலுள்ள பெரிய அக்காவின் பிள்ளைகள் வந்து, ஸ்டேஷனிலிருந்து பிடித்துக்கொண்டுபோய் மாவட்ட மருத்துவமனையில் சேர்த்துவிட்டு திருவனந்தபுரத்திலிருக்கும் மகனுக்குத் தகவல் சொன்னார்கள். கண் தவறினால் இறங்கி ஓடி விடுவேன். மயக்க மருந்துகள் பலனளிக்கவில்லை. உடுத்தியிருந்த உடையைக்கூட மாற்றாமல் மூன்று நாட்களாக என் மகன் இரவும் பகலும் கண்விழித்திருந்து திருட்டு அப்பனைப் பாதுகாத்தான். ஊரிலிருந்து என்னுடைய நண்பன் பிரசன்னன் வந்த பிறகுதான் அவனால் கொஞ்சம் தலைசாய்க்க முடிந்தது.

ஆஸ்பத்திரியில் மூன்று நாள் கலாட்டாவை முடித்துவிட்டு அமைதியாகத் தூங்கினேன். விழித்தபோது எல்லாமே முன்போல். என்ன நடந்தது தென்று புரிந்தது. காட்சிகள் மனத்திலிருந்து அழியவில்லை. இரண்டு வாரம் கழிந்து மீண்டும் வரச் சொல்லி டாக்டர் அனுப்பி வைத்தார்.

மகன் நேராகத் திருவனந்தபுரத்துக்கு அழைத்து வந்தான். மனைவியின் உறவினர்களுக்கெல்லாம் மிகுந்த வருத்தம். அவர்கள் மணக்காட்டில் பைத்தியத்திற்கு சிகிச்சை அளிக்கும் ஏதோ ஒரு மந்திரவாதியிடம் அழைத்துச் சென்றார்கள். அவர், பீங்கானில் ஏதோ அரபுச் சொற்களை எழுதி அதை நீரில் கலந்து சூடாக்கி அந்த நீரைக் குடிக்கச் சொன்னார்.

பிறகு, டாக்டரைப் பார்க்கச் சென்றேன். ஏதோ ஒரு போலீஸ்காரன் என்னுடைய வாழ்க்கைக் கதையை டாக்டரிடம் சொல்லியிருக்கிறான். அனுதாபத்துடன் டாக்டர் சொன்னார்:

"உட்காருங்க."

"உங்களைப் பார்க்க வெளியே நிறைய பேர் காத்திருக்காங்க" என்றேன்.

"பரவாயில்லை, பிள்ளை உட்காருங்க" என்றார். உட்கார்ந்தேன்.

"அந்தப் பணம் கிடைச்சுடும்னு மணியன்பிள்ளை ரொம்ப அதிகமாவே எதிர்பார்த்தீங்க. அது கிடைக்கலேன்னதும் மனசு ரிவோல்ட் ஆயிடுச்சி. சரி, போனது போகட்டும். யதார்த்தம் இன்னதுன்னு இப்பப் புரிஞ்சிடுச்சி இல்லையா? இனி எந்தப் பிரச்சினையும் இல்லை. மணியன்பிள்ளையோட

மனசு ரெண்டு துருவங்களில கிடந்து சஞ்சரிக்குது. எதிர்பார்ப்பும் ஏமாற்றமும். இனி அது வேண்டாம். அதீதமான எதிர்பார்ப்பும் தேவையில்லை; அதீதமான ஏமாற்றமும் தேவையில்லை. கையை மேஜைமேல வைங்க." என்றார் டாக்டர்.

வைத்தேன். அதைப் பார்த்தபடியே சொன்னார்: "மணியன்பிள்ளை உங்க கதையை நான் அறிஞ்சேன். கோடிகள்வரை இந்தக் கை வழியாகக் கடந்துபோயிருக்கு . . . இல்லையா? இது ஒரு சிறு தொகைதான்."

நான் கையை எடுத்துவிட்டுச் சொன்னேன்: "டாக்டர், அன்னிக்குக் கோடிக்கணக்கில போனபிறகும் நான் நிலைகுலையலை. நீராலானது நீரில். ஆனா, அப்போதெல்லாம் மனசுக்குள்ள ஒரு தைரியமிருந்தது. இனியும் முடியும்னு. நான் அன்னிக்குப் பிடிவாதமுள்ள ஒரு திருடன். இன்னிக்கு அப்படியில்லை. மிகச் சாதாரணமான ஒரு ஆள். என்னோட எல்லா வாழ்க்கைக்கும் இந்த நாலு லட்சத்தைத்தான் ஆதாரமா நினைச்சிருந்தேன். ஒரு சாதாரண ஏழைக்கு நாலு லட்சம் ரூபாங்குறது மிகப் பெரிய தொகை. எனக்குத் தெரியும், இனி என்னோட மனநிலை அவ்வளவு சுலபமாத் தவறிடாது. ஏன்னா என்னுடைய எதிர்பார்ப்பு முழுவதும் இதிலதானிருந்தது. இனி எதுவுமில்லை. எதிர்பார்ப்போட கடைசி வெளிச்சமும் அஸ்தமிச்சுப்போயிடுச்சி. இனி, அமைதி... எல்லாமே அமைதி."

ராமேஸ்வரம்: பரோலில் வந்து, துவரங்குறிச்சிக்குப் போவதற்கு முன், நான், தலைமறைவாக இருந்த இடம் ராமேசுவரம். தொடர்ந்து அங்கேயே தங்கியிருப்பேன் என்றால் அவ்வளவு சுலபமாகப் பிடிபட்டிருக்க முடியாது. திருடன்கள் ஒருபோதும் உறவினர் மூலம் தலைமறைவாகக் கூடாது. திறமையான ஒரு போலீஸ் அதிகாரி, பிடித்துவிடுவதென்று கங்கணம் கட்டினால் உறவினரை வைத்தே பிடித்துவிட முடியும். போலீஸ்காரர்களைக் கண்டால் உறவைக் கை விட்டுவிடுவார்கள் உறவினர். சரியான வழியையும் காட்டிக்கொடுத்து விடுவார்கள். துவரங்குறிச்சியில் பிடிபட்டதும் இப்படித்தான். கேரளத்திற்கு வெளியே என் உறவினர் வீடுகள் எங்கெல்லாம் இருக்கிறதென்று எஸ்ஐ ராமச்சந்திரன் செட்டியார் விசாரித்தார். மேட்டுப்பாளயத்தில் ஒரு சகலபாடி இருப்பதாகத் தகவல் கிடைக்க, அங்கே வந்தார். இங்கு கொஞ்ச நாள் தங்கியிருந்ததாக அறிந்ததுடன், இப்போது எங்கிருக்கிறான்? அந்த சகலபாடி எங்கே என்றெல்லாம் சிறிது மிரட்டியதும் உறவினர்கள் சொல்லிவிட்டார்கள்: "எங்க சொந்தக்காரங்க சிலபேர் துவரங்குறிச்சியில இருக்காங்க." துவரங்குறிச்சி போலீஸ் ஸ்டேஷனுக்கு வரும்போது நான்

அங்கே கடை வைத்து, தொழில் முனைவராக வீற்றிருக்கிறேன்.

கேரளாவில் நூறு பவுன் நகைகளும் பணமுமெல்லாம் அடித்து மாற்றினேன் அல்லவா? விரலடையாளம் திருடியவன் யாரென்பதைச் சொல்லிவிட்டது. உடனே, எல்லாச் செலவுகளையும் ஏற்று, திருட்டுப்போன நகைகளை மீட்டே ஆகவேண்டுமென்ற பிடிவாதத்துடன் திருட்டுப்போன வீட்டுக்காரர்கள் இறங்கிவிட்டார்கள். உண்மையில், போலீஸ்காரர்கள் தீவிரமாக விசாரணை செய்ததும் நான் பிடிபட்டதும் இதனால்தான். விதியின் செயல்பாடுகளுக்கு அடிப்படையாக இருப்பது இதுபோன்ற நிமித்தங்கள்தான். உறவினர்கள் உதவியுடன் தலைமறைவாதல் கூடாதெனும் பாடத்தைப் படித்து முடிப்பதற்குள் திருடன் பிடிபட்டு விடுகிறான். பெரிய திறமைசாலி என்றெல்லாம் சொல்லிக்கொள்வதில் எந்த அர்த்தமுமில்லை. திறமையானவர்களைச் சிக்க வைப்பதுதான் விதியின் சுவாரஸ்யம். எந்த அறிவுமில்லாத தான்தோன்றித் திருடன்கள் அதிர்ஷ்டவசமாகத் தப்பித்துக்கொள்ளும்போது, தன்னைப் புத்திசாலியாகக் கருதும் என்போன்ற சிலர் பாடம் படிக்கிறார்கள். நிகழ்வுகளிலிருந்து பாடம் படிப்பதற்கான வாய்ப்புகள் திருடன்களின் வாழ்க்கையில் ரொம்பக் கம்மி.

ராமேஸ்வரத்தில் தங்கியிருந்தால் பிடிபட்டிருக்க மாட்டேன் என்றா சொன்னேன்? தவறு. மதுரை - திருச்சி தேசிய நெடுஞ்சாலையிலுள்ள துவரங்குறிச்சியில் வைத்துப் பிடிபட வேண்டுமென்று விதி நிச்சயித்திருந்தால் நான் ராமேஸ்வரத்தில் எப்படித் தங்கியிருக்க முடியும்? என்னுடைய அக்காவும் அத்தானும் ராமனாதபுரத்தில் வசித்து வந்தார்கள். நான் சில நாட்கள் அங்குத் தங்கியதுண்டு. பாம்பன் பாலத்தைக் கடந்தால் அழகான ஒரு ஊர். மனத்திற்குள் அன்று முடிவு செய்தேன். போலீசின் கையிலிருந்து அடிபட்டுச் சாவதற்குள் கொஞ்ச காலம் இங்கே வாழ்ந்துவிட வேண்டும். இந்த அழகான ஊரில்.

மனைவியும் குழந்தையும் இருக்கிறார்கள். இங்கு யாரையுமே தெரியாது. அதுவும் ஒருவகையில் நன்மைதான். எங்காவது வாடகைக்கொரு வீடு எடுக்க வேண்டும். பிறகு, ஆபரேஷனைத் தொடங்கலாம். முதலில் லாட்ஜில் ரூம் போட்டு, குடும்பத்தைத் தங்க வைத்தேன்.

"யார் வந்தாலும் கதவைத் திறக்காதே. வாடகைக்கு ஒரு வீடு கிடைக்குமான்னு பார்க்கணும்" என்றேன்.

"தெரிஞ்சவங்க யாருமில்லாமல் எப்படி வீடு கிடைக்கும்?" என்று

கேட்டாள் மனைவி.

"எப்படியோ நாளைக்கு வீடு எடுத்திருப்பேன்."

அங்கிருந்த மிக மோசமான ஒரு பாருக்குள் நுழைந்தேன். உடலுழைப்புத் தொழிலாளர்கள்தான் அங்கே நிரந்தர வாடிக்கையாளர்கள். வெளியே ரிக்ஷா வண்டிகள் நின்றிருந்தன. ரிக்ஷா ஓட்டுபவர்களை அவர்களது வேர்வை படிந்து மஞ்சள் நிறமான பனியன்களையும் தலைக்கட்டுகளையும் வைத்து எளிதாகக் கண்டுபிடித்து விடலாம். ஒரு ரிக்ஷாக்காரனின் பக்கத்திலிருந்த சேரில் உட்கார்ந்தேன். மட்டமான ஒரு லார்ஜ் பிராண்டியையும் வைத்துக்கொண்டு அவன் கொஞ்ச நேரமாகவே உட்கார்ந்திருக்கிறான். குடித்தால் தீர்ந்துவிடுமென்ற பயத்துடன். நான் ஒரு சலாம் வைத்தேன். அடுத்த நொடியில் அவன் அதை எடுத்துக் குடித்துவிட்டு எழுந்தான். நான் அவனைக் கவனிக்காமல் என்னுடைய கர்மத்தில் கண்ணாயினேன். சிறிது நேரத்திற்குப் பிறகு வந்து சொன்னான்:

"சாரை நான் எங்கியோ பாத்திருக்கேனே."

"ஒருவேளை நான் உன் வண்டியில ஏறியிருக்கலாம். ராமேஸ்வரம் எனக்கு ரொம்பப் பிடித்தமான ஒரு ஊர். பலதடவை இங்க வந்திருக்கேன்."

"அதானே பாத்தேன். சாரை நான் சீதா தீர்த்தத்தில கொண்டுபோய் விட்ட ஞாபகமிருக்கு."

மேஜையின்மீது கவிழ்த்து வைத்திருந்த தம்ளரை எடுத்து ஒரு லார்ஜை அதில் ஊற்றிக் கொடுத்தேன். எதிரில் இருக்கை காலியில்லை. அவன் நின்றபடியே 'கம்' என்றொரு ஓசையுடன் அதைக் கவிழ்த்துவிட்டு, தம்ளரை மேஜையில் வைத்தான்.

அவனுடன் வெளியே வந்தேன்: "நான் கருவாடு வியாபாரம் பண்ணலாம்னு நினைச்சிருக்கேன்."

"அய்யோ, அதுக்குச் சரியான இடமே இதுதான்."

"தெரியும். ஆனா, முதல்லே ஒரு வீடு வேணும். குடும்பத்தோட வந்திருக்கேன்."

"அவ்வளவுதானே? ஏறி உட்கார் சார்."

வண்டி ஓடிக்கொண்டிருந்தது. ஒன்றரை மணி நேரத்துக்குள் வீடு கிடைத்தது. ரிக்ஷாக்காரனின் வீட்டுப் பக்கத்தில். வண்டிச் சத்தம்போக நூறு ரூபாய் கொடுத்துவிட்டு: "இது உன்னோட குழந்தைகளுக்கும் குதிரைக்கும்" என்றேன். பிறகு, என்னுடைய சவாரி இல்லையென்றால் மட்டும்தான் அவன் வேறு சவாரிக்குச் செல்வான். அவனது மனைவியும் உறவினர்களும் அக்கம்பக்கத்திலுள்ளவர்களும் சேர்ந்து பெருமகிழ்ச்சியுடன் எங்களை வரவேற்றார்கள். எந்தத் தேவையாக இருந்தாலும் ஒரு வார்த்தை சொன்னால் போதும்.

டான்சர் வைக்கம் மூர்த்தியின் தம்பிக்கு இங்கே கடையிருந்தது. அதை வாடகைக்கு எடுப்பதாக முடிவு செய்தேன்.

சுல்தான்பத்தேரியில் எப்போதுமே கருவாடுக்கு நல்ல டிமாண்ட் இருக்கும். ஆட்கள் மூலம் அனுப்பிக்கொடுத்தால் போதும். கடையின் எதிரில் கஸ்டம்ஸ் கலெக்டர் அலுவலகம். வீட்டின் எதிரில் - சிரிக்காதீர்கள் -ராமேஸ்வரம் போலீஸ் ஸ்டேஷன். இங்கிருந்து துவரங்குறிச்சிக்குப் போனால் அங்கேயும் கடையின் எதிரில் போலீஸ் ஸ்டேஷன். விதி செய்யும் வினோதங்கள். ஹச் மொபைல் கம்பெனி: 'நீங்கள் எங்கோ நாங்களும் அங்கே' என்றெல்லாம் விளம்பரம் செய்வார்களே, அதுபோல். நீ போகுமிடமெல்லாம் போலீசும் வரும் என்று என் தலையெழுத்துப் புத்தகத்தில் கடவுள் அடிவரையிட்டிருக்கிறார்.

வீடு ரோட்டோரத்தில் என்பதாலும் அக்கம்பக்கத்தில் ஒரு பிடிமானம் ஏற்படவும் ஏற்றதொரு தொழில் சாயாக் கடைதான். மைசூரிலிருக்கும்போது இதைப் புரிந்துகொண்டேன். மட்டுமல்ல, இது அதிர்ஷ்டத்தின் தொடக்கப் புள்ளி. வீட்டின் முன் சாய்த்துக்கட்டி மூன்று நான்கு பெஞ்சும் ஸ்டூலும் வாங்கிப்போட்டு காஃபி ஹவுஸ் என்றொரு சிறு பெயர்ப்பலகையும் வைத்தேன். அடுத்தத் திட்டம், கருவாட்டில் மெல்லக் கால் வைக்க வேண்டுமென்பது. இரண்டு வாரங்கள்கூட சென்றிருக்காது. அங்குள்ள ஒரு கடைத் தெருவில் மனைவி அரிசி வாங்கப் போனாள். கடைக்காரன் சாய்ந்தும் சரிந்தும் ஒருமாதிரியாகப் பார்க்கிறான். சரி, இது மற்றக் கோளாறாக இருக்குமென்று அவள் நினைத்துவிட்டாள். சாயங்காலம் தண்ணீர் பிடிக்க மற்றப்பெண்களுடன் நின்றிருந்தவளை கடைக்காரனின் மனைவி தனியாகக் கூட்டிச் சென்று மலையாளத்தில் கேட்டாள்:

"அல்ல, நின்டெ மாப்ளெ கள்ளனாணோ?"

அவள் திடுக்கிட்டு: "ஈ கொடிய கள்ளம் ஆரு பறஞ்ஞு?" என்று கோபத்துடன் கேட்டாள்.

"நீ கார்யமாக்கண்டா. இவிடெ இடைக்கிடெ அண்டிப்பரிப்பு வில்க்கான் வருந்ந ஒருத்தன் என்டெ பர்த்தாவினோடு பறஞ்ஞுதா. சும்மாதாயிரிக்கும்."

தண்ணியும் வேண்டாம்; ஒரு புண்ணாக்கும் வேண்டாம்.

ஒருநிமிடம்கூட அவள் அங்கே நிற்கவில்லை. கடையில் நான் உற்சாகத்துடன் சாயா அடித்துக்கொண்டு நின்றிருந்தேன். வாடிக்கையாளர்கள் காத்து நிற்கிறார்கள்.

மனைவி என்னை அழைத்தாள்: "கொஞ்சம் இங்க வந்துட்டுப் போங்களேன்."

பதற்றத்துடன் விஷயத்தைச் சொன்னாள்: "பெரிய பிரச்சினை. அந்தக் கடைக்காரன் பொண்டாட்டி, உங்களை திருடனான்னு கேக்குறா."

"சரி, பொட்டியைக் கட்டிட்டுத் தயாராயிரு."

திரும்பி வந்து, நிறைய பாலூற்றி முடிந்தவரைக்கும் டிக்காஷன் சேர்த்துக் கூடி நின்றவர்களுக்கெல்லாம் சாயா கொடுத்தேன்.

"இப்படி சாயா அடிச்சா கட்டும்படியாகுமா முதலாளி?" ஒருவன் கேட்கிறான்.

"நான் தொலைஞ்சே போனாலும் நீங்க நல்ல சாயா குடிக்கணும். பணம் இன்னிக்கிருக்கும் நாளன்னிக்குப் போகும். அன்புதான் பெருசு" என்றேன். அவர்கள் சாயாவுக்கான சில்லறையை நீட்டினார்கள்.

நான் சொன்னேன்: "இன்னிக்கு எல்லாருக்கும் ஃப்ரீ."

"அதென்ன அப்படி?"

"எம்பொஞ்சாதி வந்து ஒரு மகிழ்ச்சியான சங்கதி சொன்னா. அதான்."

"அது சரி . . ."

'பொஞ்சாதி புள்ளை உண்டாயிருக்காபோல' என்ற எண்ணத்தில் அவர்கள் பெருமகிழ்ச்சியடைந்தார்கள். கடையில் மிச்சமிருந்த போண்டாவையும் வினியோகித்தேன்.

ரிக்ஷாக்காரனிடம் சொன்னேன்: "நைட்ல ஒரு பயணம் இருக்கு. ஊர்ல நெருங்கின உறவுக்காரர் ஒருத்தர் இறந்துட்டாரு. திரும்பி வர்றதுக்கு ரெண்டு வாரமாகும்."

இரவு ரிக்ஷாவில் ஏறியதும் கேட்டேன்: "அண்டிப் பருப்பு விக்கிறவன் ஒருத்தன் இங்க வர்றானா?"

"ஆமா, மாயாவி. அவனை அப்படித்தான் கூப்பிடுவோம். மாசத்துல மூணோ நாலோ நாள்தான் வருவான். திடீர்னு வருவான்; திடீர்னு போவான். அதான் மாயாவி."

"இப்ப அவன் எங்கே இருப்பான்?"

"நாம போற வழியிலுள்ள ஒரு லாட்ஜிலதான் தங்குவான்."

வண்டியை லாட்ஜின் எதிரில் நிறுத்தி மனைவியையும் மகனையும் வண்டியிலிருந்து இறங்க வேண்டாம் என்று சொல்லிவிட்டு லாட்ஜில் ஏறினேன்.

"மாயாவி தங்கியிருக்குற ரூம் நம்பர் எத்தனை?"

"பதினாலு." லாட்ஜிலும் அவன் பெயர் மாயாவிதான்போலிருக்கிறது.

கதவைத் தட்டினேன். திறந்தது, உஸ்மான். கழுத்தில் கத்தியை வைத்தேன். முழி பிதுங்கி நின்றான்.

"நாய்க்குப் பொறந்தவனே, திருடனா இருந்தாலும் ஒரு அந்தஸ்து வேணும்டா."

"மாப்ளே, நான் தெரியாம . . ."

"நான் இங்கிருந்து போறேண்டா, ஆனா, போலீசுக்குப் பயந்து நடக்குற நீ உன் அண்டிப்பருப்பை இனிமேல் இங்க வித்துடலாம்னு நினைக்க வேண்டாம். தூ . . ." காறித்துப்பி விட்டு வெளியே வந்தேன்.

வண்டி போய்க்கொண்டிருக்கும்போது வண்டிக்காரன் கேட்டான்: "ஏற்கனவே அவனைத் தெரியுமா? ஆங் . . . மலையாளத்தாங்குற பழக்கமாயிருக்கும்."

இரவு, மதுரைக்குப் போகும் ரெயிலில் உட்கார்ந்திருக்கிறோம். நடைபாதையின் இருட்டுப்பகுதியினூடே ஒருவன் ஓடி வருகிறான். ஆட்கள் அதிகமில்லாத பெட்டியை நோக்கி ஓடுகிறான். கையிலொரு பார்சலுமிருந்தது. உஸ்மான்.

ஒரே இடத்தில் இரண்டு திருடன்கள் வாழ முடியாது. பரஸ்பரம் பார்த்துவிட்ட பிறகு ஒருவனும் வாழ முடியாது.

உஸ்மானுடன் எனக்குப் பெரிய அளவிலான அறிமுகமெல்லாம் கிடையாது. நமக்குச் சேர வேண்டிய நன்மைகளும் தீமைகளும் நடக்க விதியிருந்தால் அறிமுகமெல்லாம் ஒரு விஷயமே கிடையாது. இவனுடைய முன்னொட்டுப் பெயர்: பட்டி உஸ்மான். காரணம், வேறொன்றுமில்லை. இவனோட மூக்கு, நாய்வால்போல் ஒருபுறம் வளைந்திருக்கும். இவனுடைய மூக்கைப் பிடித்து நேராக்க முயற்சி செய்வது, ஜெயில் கைதிகளுக்கு ஒரு பொழுதுபோக்கு. தொடர்ந்து பார்த்துக்கொண்டிருந்தால் இந்த வளைவு யாரையுமே தொந்தரவு படுத்தும். இடையிடையே, வளைவை நேர் செய்கிறேன் என்று ஆஸ்பத்திரிக்குப் போவான். மூச்சு சீராக ஏறி இறங்காமல் இருப்பதால் சுவாசத்தடையும் ஏற்படும். ஆபரேஷன் என்ற வார்த்தை காதில் விழுந்தால் போதும், திரும்பி வந்துவிடுவான். வாயை திறந்துதான் மூச்சுவிட முடியும். இதனால், வாப்பொளந்தான் உஸ்மான் என்ற விளிப்பெயரும் பெற்றிருந்தான். கொல்லம் சப் ஜெயிலில் ஒரு வார கால பரிச்சயம்தான் எங்களினிடையே இருந்தது. பிறகு, உஸ்மானை நான் பார்த்தது, மிகவும் மோசமான ஒரு நிலையில்.

ஒருதடவை, கோழிக்கோடு வெள்ளை ரெயில்வே ஸ்டேஷன் பக்கத்தில் ஒரு திருட்டு நடத்தினேன். ரெயில்வே கம்பியின் உதவியுடன் வீட்டு ஜன்னல் கம்பியை வளைத்தேன். பச்சை ஈர்க்கில் வளைவதுபோல் ஜன்னல் கம்பி வளைந்துகொடுத்தது. ரெயில்வே சில நேரங்களில் எதற்கெல்லாமோ உதவுகிறது. பெட்ரூம் முழுவதையும் அலசியும் நாலணாகூட கிடைக்கவில்லை. சமையலறைக்குள் நுழைவதைப் பொதுவாகவே நான் விரும்புவதில்லை. கிறுக்குப் பிடிச்சுடும். டப்பாக்களின் தொடர் பிரவாகம். எவ்வளவு டப்பா இருந்தாலும் பெண்களுக்கு ஆசை தீராது. எல்லாவற்றையும் சமையலறைக்குள்

போட்டு வைப்பார்கள். அது அவர்களுடைய சாம்ராஜ்யம். கொஞ்சம் சோறு கிடைக்குமா என்று பார்க்க சமையலறைக்குள் நுழைந்தேன். என்னுடைய வாழத்துங்கல் கிராமம், கடற்கரையிலிருந்து கிட்டத்தட்ட ஒன்றரை கிலோமீட்டர் தொலைவில்தான் இருக்கிறது. பக்கத்தில் காயலுமிருக்கிறது. ஆகவே, மீன் எனக்கொரு பலவீனமாகப் போயிருந்தது. அண்மைக் காலங்களில் நல்ல மீன் எதுவும் சாப்பிடாமலிருந்தால் திருட்டின் போது அபூர்வமாக இப்படியான ஆசைகள் உருவாவதுண்டு.

திருடன் தின்ற விஷயத்தைப் பெரும்பாலும் வீட்டுக்காரர்கள் அறிவதில்லை. குற்ற ஒப்புதல் தரும்போது போலீஸ்காரர்களிடமும் இதைச் சொல்வதில்லை. உணவை சாப்பிட்டுவிட்டு எச்சில்களை அதற்கான பாத்திரத்திலிட்டு, தின்றப் பாத்திரத்தைக் நன்றாகக் கழுவி, துடைத்து வைத்துவிடுவேன். எதிலும் ஒரு மரியாதை வேண்டும். சமையலறைக்குள் நல்ல அயிலைக் குழம்பிருந்தது. இரண்டாவது துண்டைச் சாப்பிடும்போது கையால் மறைத்தபடியே சமையலறை முழுவதும் டார்ச் அடித்துப் பார்த்தேன். டப்பாக்களினிடையே ஒன்று மூக்கை நுழைத்துக்கொண்டிருந்தது. அது, ஜான்ஸன் அன்ட் ஜான்ஸன் கம்பெனி பவுடர் டின்னின் மூக்கு என்பது தெரிந்தது. சமையலறைக்குள் யாராவது பவுடர் டின் வைப்பார்களா? இல்லை, அதில், கடுகு மல்லியைத்தான் போட்டு வைப்பார்களா? அவர்களுக்கு ஏற்பட்ட தோல்வி இந்தக் கேள்விகள்தான்?

சந்தேகத்தின்பேரில் திறந்துப் பார்த்துவிட்டு, வீட்டக்காவை மனத்திற்குள் தொழுதேன். நிறைய நோட்டுகள். அந்த இடத்தில் வைத்தே எண்ணிப் பார்த்தேன். நூறு ரூபாய் கட்டுகள் பல கை வழியாகக் கடந்து போயிருந்தாலும் ஐநூறு ரூபாய் நோட்டுகளை முதல்முதலாக இப்போதுதான் பார்க்கிறேன். ஒன்பதாயிரத்திற்கும் அதிகமாக இருந்தது. வீட்டக்காவின் சேமிப்பு. கூடவே அந்த பவுடர் கம்பெனிக்கும் நன்றி செலுத்தினேன். இப்படி, கரன்சியாகக் கிடைப்பதினுள் திருடனுக்கு மகிழ்ச்சியூட்டும் பல அம்சங்கள் உள்ளன. விற்பதற்காக அலைய வேண்டியதில்லை. தட்டான்மீதான மனஸ்தாபத்திற்கிடமில்லை. அனைத்திற்கும் மேலாக நீதிமன்றத்திற்கு வரும்போது வழக்கு நிற்பதில்லை. கரன்சியை தடயமாகக்கொள்ள இயலாது.

ஆனால், அவசர கதியில் பவுடர் டின்னைத் துடைக்க மறந்துவிட்டேன். விரல் அடையாள விற்பன்னர்கள் வந்து பரிசோதித்தார்கள்: "இது கள்ளன் மணியன்பிள்ளைதான்." சரிதான். ஆனால், நான் கிடைக்க வேண்டாமா?

போலீஸ் தேட ஆரம்பித்தது. இப்படியிருக்கும்போது ஒருநாள், இரவு பதினொரு மணிக்குக் கொல்லம் பேருந்து நிலையத்தில் வந்து இறங்கினேன். அதன் மேற்குப் பக்கம், அஷ்டமுடிக்காயலின் ஒரு முனைப்பகுதி. அங்கே ஸ்டே பஸ்கள் நிற்கின்றன. அதனிடையே கூரிருட்டு. சுயபாலினமோகிகளும் தெரு விபச்சாரிகளும் நிற்குமிடம். பஸ்சின்மீது சாய்த்து நிறுத்தும் வசதியுமுண்டு. ஆர்வக் கோளாறு காரணமாக நான் இந்த இடங்களையெல்லாம் கவனிப்பதுண்டு. ஆர்வத்தை விடுவோம். திருடனுக்கில்லாத வக்கிரப்புத்தியா? அன்று பார்க்கும்போது பஸ்களினிடையே இரண்டு பெண்கள். பரவாயில்லாத அழகிகள். இப்படியானவர்களைப் பார்த்ததுமே புரிந்துகொள்ள முடியும். ஏதோ ஒன்று சரியில்லையே என்று.

ஒரு வேடிக்கைக்காக நான் வெளிச்சத்திலிருந்து சற்று முன்னால் சென்று பார்த்தேன். உடனே ஸ் . . . என்று குரல் கொடுத்தாள் ஒருத்தி. நான் பக்கத்தில் நெருங்கினேன். உடனே, "வர்றியா" என்றாள். பதில் சொல்வதற்குள் விசில் சத்தம். நாலாபுறமிருந்தும் ஐந்தாறு போலீஸ்காரர்கள் ஓடோடி வருகிறார்கள். இதில் தெரிந்த ஓரிரண்டு போலீஸ்காரர்களும் இருந்தார்கள். என்னைக் கண்டதும்: "ஆங் . . . இது யாரு, நம்ம மணியன் பிள்ளையா? எஸ்ஐ ஐயா ரொம்ப நாளா தேடுறாரு. கொஞ்சம் கையெழுத்துக் கிடைச்சிருக்கு" என்றார் அதிலொருவர்.

விஷயம் தெரியாத இரண்டு போலீஸ்காரர்கள் கையை அழுத்திப் பிடித்திருக்கிறார்கள். வலிக்கிறது. "சே . . . கையை விடுங்க" என்று சொல்லி உதறுகிறேன்.

"கையை விட்டுடுங்க. பிடிபட்டா பூனைபோல அவன் கூடவே வந்துடுவான்" என்றார் மற்றொருவர்.

ஜீப் அப்படியே திரும்பி வந்தது. நான் ஏறுவதற்காகப் போகும்போது, ஒரு தூணின் மறைவில் நின்றபடி நீண்டு வளைந்த ஒரு மூக்கு நடுச்சாமத்தில் ஐஸ்கிரீம் சாப்பிடுகிறது. பட்டி உஸ்மான். மிகவும் பரிதாபகரமான அந்தக் காட்சி மனத்தை விட்டு இன்றும் அகலாமல் நிற்கிறது. இப்படியான தோற்றத்தில் அவனை எனக்குக் காட்டித் தந்த கடவுளின் செயல்தான் என்னைக் காட்டிக்கொடுப்பதற்காக அவன் முந்திரிப் பருப்பு வியாபாரி வேடமணிந்து துவரங்குறிச்சியில் அவதரித்தது.

## 55 - பெண்கள்

கோடிகளுக்கு அதிபதியாக இருந்த நிலை மாறி ஏதுமில்லாதவன் ஆனேன். திருடனின் மனைவிக்கு வாழ வழியில்லை. திருடன் வழக்கம்போல் ஜெயிலில். மனைவி மெகருன்னிஸா ஆயா வேலைக்காக வளைகுடா நாட்டிற்குச் சென்றாள். மனித வாழ்க்கையே இதுதான். கர்நாடகாவில் நான்கு வருடங்கள் ராஜகுமாரிபோல் வாழ்ந்தவள். நான்கைந்து வேலைக்காரிகளை வைத்திருந்தவள் இப்போது வேலைக்காரியாக அரபு நாட்டில் அல்லல்படுகிறாள். அனுப்புவதற்கு விருப்பமுமில்லை; வேறு வழியுமில்லை. இடையே ஒருதடவை விடுமுறையில் வந்தாள். போலீஸ் பாதுகாப்புடன் பலதடவை நான் வீட்டுக்கு வந்து இரவைக் கழித்திருக்கிறேன். நாளை, கொல்லத்தில் வழக்கு விசாரணை என்றால் திருவனந்தபுரத்திலிருந்து இன்று புறப்பட்டு நாளைக்குத் திரும்பிவிட வேண்டும். நாங்கள் ஜெயிலிலிருந்து நேராக வீட்டுக்கு வருவோம். போலீஸ்காரர்களுக்கு ஸ்மால் வாங்கிக்கொடுப்பேன். போதையுடன் அவர்கள் திண்ணையில் படுத்துத் தூங்குவார்கள். எல்லாமே ஒரு நம்பிக்கைதான். மணியன்பிள்ளை போலீசாருக்குத் துரோகம் செய்ய மாட்டான் என்று பொதுவாகவே ஒரு நம்பிக்கை நிலவி வந்தது. இது உருவாவதற்குக் காரணமுமிருந்தது.

ஒருமுறை, கோழிக்கோட்டில் ஒரு விசாரணைக்குப் போய்விட்டுத் திரும்பி வந்துகொண்டிருந்தோம். திருவனந்தபுரத்தை நெருங்கியிருப்போம். காவலுக்கு இரண்டு போலீஸ்காரர்கள். எனக்குக் கை விலங்கு இடப்படவில்லை. பயணம் செய்யும்போது ஒரு கையில்தான் விலங்கு வைக்க வேண்டும் என்பது மனித உரிமை சம்பந்தமானது. வண்டி ஏதாவது ஆற்றிலோ குளத்திலோ விழுந்தால் விலங்கிடப்பட்ட குற்றவாளியால் தப்பிக்க இயலாமலாகி விடும். திருடனாக இருந்தாலும் மனிதன் அல்லவா? மருத்துவக் கல்லூரியின் அருகில் வந்ததும் ஒரு போலீஸ்காரர் வீட்டுக்குப் போவதற்காக இறங்குவார். பஸ்சில் நெரிசல் அதிகம். எப்படியோ இரண்டு போலீஸ்காரர்களுக்கும் ஏற முடியாமல் போய்விட்டது. திருடன் மட்டும் பஸ்சினுள். டபுள் பெல் அடித்ததும் பஸ் நகர்ந்தது. செய்வதறியாத போலீஸ்காரர்கள் பஸ்சின் பின்னால் ஓடி வருகிறார்கள். பஸ்

போய்விட்டது. பட்டத்திற்கு வந்த பிறகுதான் பஸ்சினுள் போலீஸ்காரர்கள் இல்லையென்பது எனக்குத் தெரிந்தது. சுதந்திர மனிதன். வேகமாக எழுந்து நடத்துனரின் அருகில் சென்று பெல் அடித்துவிட்டுக் குதித்திறங்கித் தப்பித்துக்கொள்ள முடியும். பான்டும் சர்ட்டும் அணிந்திருந்தேன். தேவைக்கான பணமும் கைவசமிருந்தது. எந்தக் கைதியாக இருந்தாலும் ஒரு கணம் இந்த சிந்தனை ஓடுவது இயல்புதான். ஆனால், நம்பிக்கைத் துரோகம் கூடாது. டிரைவரின் அருகில் சென்று விவரத்தைச் சொன்னேன். அவர் பஸ்சை நிறுத்தினார். நான் இறங்கி பஸ் வந்த திசையைப் பார்த்து ஓடினேன். கேசவதாசபுரத்தில் வரும்போது போலீஸ்காரர்கள் பதற்றத்துடன் ஓடோடி வருகிறார்கள். என்னைக் கண்டதும் பதற்றம் தணிந்தவர்களாக அன்புடன் அழைத்தார்கள்: "மணியன்பிள்ளை." தகவல் ஜெயிலிலும் பரவியது. இப்படித்தான் நான் நல்ல திருடன் ஆனதும் நம்பகத் தன்மையில் பதவி உயர்வு பெற்றதும்.

என்னை மனிதனாக மாற்றியவள் என் மனைவி. பெண் என்பதொரு உடல் மட்டுமல்ல, அதனுள் அன்பு வடிவான ஆன்மாவும் இருக்கிறதென்பதை எனக்கு உணர்த்தியவளும் அவள்தான்.

1976 - '77 காலகட்டம். கொல்லம் நகரில் நான் கோலோச்சி வாழ்ந்த காலம். குற்றவாளிகளுக்கு மறுவாழ்வளிக்க வேண்டுமென்பதில் ஆர்வமுள்ள, எஸ்பியாக பணிநிறைவு செய்த டிகே மனோகரன் சார் கேட்டார்: "இந்த வேலையை நிறுத்திட்டு நல்லவனா வாழ்றதில உனக்கு விருப்பமிருக்கா?"

"திருடனுக்கு யார் சார் வேற வேலை கொடுப்பாங்க? ஒரு தடவை திருடுனா காலம் முழுவதும் அவன் திருடன்தானே?"

நகராட்சி செயல் அலுவலருக்கு சார் ஒரு கடிதம் தந்தார். வேலை கிடைத்தது. கொல்லம் நகராட்சிக்குட்பட்ட பகுதிகளில் பார்க் செய்திருக்கும் லாரிகளில் கட்டணம் வசூலிக்க வேண்டும். ஓரளவுக்குச் சண்டித்தனமில்லாமல் வேலை நடக்காது. செயின்ட் பீட்டர்ஸ் என்ற லாரியின் டிரைவருடன் மோதியது நினைவுக்கு வருகிறது. "ரெயில்வே ஏரியாவில பார்க் பண்ணியிருக்குற லாரிக்கு நகராட்சிக்குப் பணம் தரமுடியாது" என்றான். அவன் சொல்வது சரிதான். சின்னக்கடை மற்றும் அதன் சுற்றுப்புறங்களில் அதிகமும் ரெயில்வேக்குச் சொந்தமான இடங்கள்தான். இதையெல்லாம் பார்த்தால் வசூல் நடக்காது. பொது இடம் எதுவாயினும் அது நகராட்சிக்குச் சொந்தம் என்பதுபோல்தான் வசூல் வேட்டை நடக்கிறது. அவன் சொல்வதை ஏற்றுக்கொண்டால் பிறகு, எந்த லாரிக்காரனும் பணம் தரமாட்டான். அவனைக் கவனித்து

வைத்துக்கொண்டேன். மறுநாள் அவன் லாரியைக் கொண்டுவரும்போது ஃபாத்திமா கல்லூரியின் முன்னால் வைத்து என் சைக்கிளைக் குறுக்கே நிறுத்தினேன். லாரி நின்றது. பின்னால் வந்த வண்டிகளும் நின்றன. டிராஃபிக் பிளாக். "இப்ப நீ பார்க் பண்ணியிருக்கிறது முனிசிப்பல் ஏரியாதான். எடுடா பார்க்கிங் ஃபீஸ்" என்றேன். பிறகு, இவன் என்னிடம் வம்பு வைத்துக்கொள்வதில்லை. இவன் என்னை விட பெரிய சண்டியர்தான். ஆனால், அன்று கொல்லத்தில் நானிருந்த நிலை அப்படி.

கொல்லம் மாவட்டத்தில் அன்று பதினேழு ஆட்டோக்கள்தானிருந்தன. மக்களுக்கு ஆட்டோவில் செல்லும் வழக்கமில்லை. எனக்குச் சொந்தமாக ஒரு ஆட்டோ இருந்தது. கிருஷ்ணன் என்பவனுடன் பார்ட்னர்ஷிப்பில் ஒரு காரும் ஓடியது. போலீஸ்காரர்களுடனும் கிரிமினல்களுடனும் நல்ல தொடர்பிருந்தது. நகராட்சி வசூலும் கை வசமிருந்ததால் கொல்லத்திலுள்ள எல்லாமும் அத்துபடி. மணியன்பிள்ளை மனது வைத்தால் கொல்லத்தில் அன்று எதையும் சாதிக்க முடியும். சில போலீஸ்காரர்களைத் தவிர, என்னைத் திருடன் என்று தெரிந்தவர்கள் மிக அபூர்வம். இருபத்தாறு இருபத்தேழு வயதின் தைரியமும் பணமும் அகந்தையும். இப்படித்தான் நான் தவறான வாழ்க்கைக்குள் வந்து விழுந்தேன். மனோகரன் சார் துலக்க நினைத்தார்; அது மேலும் பாண்டுப் பிடித்தது.

கல்லூரி மாணவிகளும் நர்சிங் மாணவிகளும்தான் பிரதான இலக்குகள். வளைத்தது எத்தனை; ஒடித்தது எத்தனை என்றெல்லாம் கணக்குக் கிடையாது. ஒரு தடவை உபயோகித்துவிட்டுக் கழற்றிவிட்டு விடுவேன். நகரிலுள்ள பெரிய ஷாப்பில் விலையுயர்ந்த துணிகள் வாங்கி, அதிநவீன மாடலில் தைத்து இன் பண்ணி அவிழ்த்துவிட்ட காளைபோல் கல்லூரிச் சந்திப்புபோன்ற இடங்களுக்குச் சென்று ஒரு தினுசாக நிற்பேன். மூன்று மாணவிகள் சேர்ந்து வருவதாக இருந்தால் அதில் அழகில் இரண்டாம் இடத்திலிருப்பவளைப் பார்ப்பேன். இரண்டு நாட்கள் இது தொடரும். மூன்றாம் நாள் சிறு புன்னகையைத் தூவுவேன். குறைந்த அளவிலாவது அது திரும்பக் கிடைக்கும். நான்காம் நாள் இடம் மாறி நிற்பேன். வழக்கமான இடத்தில் ஆளில்லையென்றதும் அவளுக்குள் ஏதோ குறுகுறுக்கும். கண்கள் அலைபாய்ந்து சற்று விலகி நிற்பதைக் காணும். குறுகுறுப்பு ஆறுதலாகவும் வெட்கமாகவும் மாறும். உடனே அருகில் சென்று ஒரு நிமிடம் என்று சொல்வேன். எழுபதுகளின் காதல்வெளிப்பாட்டு வடிவமிதுதான். மற்றவர்களின் தனிப்பட்ட விஷயம் என்பது போன்ற செயற்கையான உணர்வுடன் கூட நிற்கும் மாணவிகள்

சற்று விலகிக்கொள்வார்கள். பிறகு, பெயர் கேட்பது, தன்னைப் பெரிதாக அறிமுகம் செய்துகொள்வது. அன்று இவ்வளவுதான். ஒரு வாரத்திற்குள் படிப்படியாக இது சினிமாவுக்குப் போவோமா என்பதுவரைக்கும் செல்லும்.

வஞ்சனையின் அரங்கேற்றம் பிறகுதான். கொல்லம் சின்னக்கடையிலுள்ள டபுள் தியேட்டர்களில் ஒன்றில் பாக்ஸ் என்றொரு வகுப்பிருந்தது. மொத்தமே அதில் பதினாறு சீட்டுகள்தான். சீட் என்றால் சோபா கம்பெட். சமூக உன்னதர்களுக்கென செய்யப்பட்ட ஏற்பாடு. பெண்கள் வருவதற்கான வாய்ப்புள்ள இரண்டு மூன்று நாட்களும் 11 மணி காட்சிக்கான அத்தனை சீட்டுகளையும் நான் புக் செய்து விடுவேன். இந்தக் காட்சிக்குப் பொதுவாக தியேட்டர் நிறையாது. டிக்கெட் தீர்வதில் தியேட்டர்காரர்களுக்கும் மகிழ்ச்சிதான். சிக்கியவளுடன் செல்வேன். சினிமா தொடங்கும். அவள் இடைவெளியைப் பாதுகாப்பாள். நானும்தான். நேரம் கடந்து கொண்டிருக்கும். சூழ்நிலையுடன் அவள் இணக்கமாவாள். இடைவேளைக்குப் பிறகு, ஏதோ ஒரு கட்டத்தில் சோபா பெட் ஆக மாறும். இப்படி எத்தனை எத்தனை பெண்கள். இன்று அதெல்லாம் துரோகமும் திமிர்த்தனமுமாகப் படுகிறது.

## **56 -** மெகருன்னிஸா

நோட்டமிடுவதில் பெருமளவும் படிந்து விடுவதால் இணங்காதவள் மீதான பிடிவாதம் அதிகரித்து விடும். இதற்காக எந்த அளவு கீழ்நிலைக்குச் செல்வதற்கும் தயக்கம் ஏற்படுவதில்லை. இன்றைய ரெயில்வியூ ஓட்டல் அப்போது அசோகா ஓட்டலாக இருந்தது. இங்கே தினமும் வந்து ஸ்மால் அடிப்பது வழக்கம். இங்கேதான் ரெயில்வேயில் புக்கிங் கிளார்க்காக வேலை பார்த்த அப்து சாரின் அறிமுகம் கிடைக்கிறது. ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் தொழுகை முடிந்த பிறகு யாருக்கும் தெரியாமல் வந்து அப்து சாரும் குடிப்பார். பொதுவாகவே, நான் நடந்துகொள்ளும் முறை யாருக்கும் சந்தேகம் வராத அளவுக்கு மென்மையாக இருக்கும். மனத் தூய்மையுள்ள யாராக இருந்தாலும் என்னை நல்ல பையன் என்று நம்பிவிடுவார்கள். ஒரு பெருநாள் அன்று அப்து சார் என்னை வீட்டுக்குச் சாப்பிட அழைத்தார். அங்கே வைத்துதான் அப்து சாரின் மருமகள் மெகருன்னிஸாவை முதன்முதலாகப் பார்க்கிறேன். நல்ல அழகு. பதினாறு வயது. அறிமுகத் தகுதியை முன்வைத்து ஆறு நாட்கள் முயற்சி செய்து வலையில் வீழ்த்தினேன். சினிமாவிற்கு அழைத்தபோது வர மறுத்துவிட்டாள். மெகருன்னிஸாவின் குடும்பம், திருவனந்தபுரம், திருமலையிலிருந்தது. அப்து சார் ஒரு நாள் என்னிடம் இருநூறு ரூபாய் கடன் கேட்டு வந்தார். மருமகள் வீட்டிற்குப் போகிறாள். கொஞ்சம் பணம் கொடுத்து அனுப்ப வேண்டும் என்று.

அப்போது வசூல் பணியும் இருந்ததால் கையில் தாராளமாகப் பணம் புழங்கியது. கோணல் புத்தி வேலை செய்தது: "கையில இப்ப பணமில்லை; நாளைக்கு வீட்டில கொண்டுவந்து கொடுத்திடறேன்" என்று சொன்னேன். யாரும் சந்தேகப்பட முடியாதபடி கைலியும் உடுத்து ஆட்டோவில் சென்றேன். புறப்படுவதற்கு அவள் தயாராக நின்றிருந்ததால், இயல்பாகவே அப்து சார் கேட்டார்: "ஆட்டோவில்தானே வந்தே? அப்படியே அவளைக் கொஞ்சம் பஸ்சேற்றி விட்டுடேன்." பாவம், அந்த அளவுக்கு என்மீது அவருக்கு நம்பிக்கை இருந்தது. என்னுள் பிசாசு குடியிருக்கும் விஷயம் பாவம் அப்து சாருக்குத் தெரியவா செய்யும்?

அப்படியாக, கேஎல்யு 478 எண்ணுள்ள என்னுடைய ஆட்டோவில் அழகே உருவான மெகருன்னிஸாவையும் அழைத்துக்கொண்டு பேருந்து நிலையத்துக்குச் சென்றேன். சின்னக்கடைக்கு வந்ததும் பிரஸ் கிளப்பின் ஒருபுறம் வண்டியைத் திருப்பி நிறுத்தினேன். இடைவழியில் படிக்கட்டின் பக்கம் நின்று கைலியை மாற்றி பான்ட் அணிந்துகொண்டேன். திரும்பி வந்து ஆட்டோவை ஒரு நண்பனிடம் ஒப்படைத்துவிட்டு வேறொரு ஆட்டோவில் பேருந்து நிலையத்திற்கு வந்தேன்: "திருவனந்தபுரம் வரைக்கும் நானே கொண்டுவந்து விட்டுடறேன். அதுவரைக்குமாவது பேசிட்டிருக்கலாம்" என்றேன். அவளுக்கும் மகிழ்ச்சிதான். திருவனந்தபுரத்தை அடைந்ததும், "கன்னியாக்குமரி வரைக்கும் போயிட்டு வருவோம். பிறகு உன்னை இன்னிக்கே வீட்டுல கொண்டுபோய் விட்டுடறேன்" என்று வற்புறுத்திச் சம்மதிக்க வைத்தேன். அவள் வருகிற விஷயம் வீட்டிலுள்ளவர்களுக்குத் தெரியாது. அப்து சார் சொல்லியிருக்கவுமில்லை. இன்றுபோல் ஃபோன் வசதிகள் அதிகமில்லாத காலம் அல்லவா? ஆறேழு குழந்தைகளுள்ள வீடுகளென்பதால் இதுபோன்ற விஷயங்களில் பெரிய அளவில் கவனம் செலுத்த மாட்டார்கள். கன்னியாக்குமரியில் திருத்தணி என்ற தங்கும் விடுதியில் ரூம் எடுத்துத் தங்கினோம். ஒன்று, இரண்டு, நாட்கள் மூன்றாயின. திகட்டவில்லை. விட்டுவிடவும் தோன்றவில்லை. லாட்ஜ்காரர்களுக்கு சந்தேகம் உருவானது. கையிலிருந்த பணமும் தீர்ந்து விட்டது. வசூலுக்கும் போக வேண்டும். இதற்குள் அவள் இவனே போதும் என்ற மனநிலைக்கு வந்துவிட்டாள். மணியனே சரணம்! "எங்க போகணும்னு நீங்க சொன்னாப் போதும்."

மூன்றாவது நாள். திரும்பவும் கொல்லத்துக்கு வந்தோம். அன்றைய செல்வாக்கில் இருட்டுவதற்குமுன் வாடகைக்கு வீடு எடுத்துத் தங்க வைத்தேன். நான் திருடன், கேடுகெட்டவன் என்பதெல்லாம் அவளுக்குத் தெரியாது. ஆட்டோக்காரன், நகராட்சி ஊழியன் கணவனாக வாய்த்திருப்பது தன்னுடைய அதிர்ஷ்டமென்று நினைத்திருப்பாள்.

ஒரு மாதம் கழிந்த பிறகுதான் அப்து சார் விஷயத்தைக் கேள்விப்பட்டார். மெகருன்னிஸா மாமா வீட்டிலிருப்பதாக அவர்கள் நினைத்திருந்தார்கள். விஷயத்தைக் கேள்விப்பட்டதும் அவர்கள் பதறியடித்துக்கொண்டு கொல்லத்துக்கு வந்தார்கள். அப்து சார் நெஞ்சில் கை வைத்தபடியே என்னிடம் வந்தார். நான் கை விரித்தேன்: "நீங்க பஸ்சேற்றிவிடச் சொன்னீங்க. நான் அன்னிக்கே பஸ்சேற்றி அனுப்பிட்டேன்." அப்து சார் என் காலைப் பிடித்தார்: "துரோகம் பண்ணிடாதடா, இப்ப அவ எங்க

இருக்கான்னாவது சொல்லு."

காரியம் முடிந்த பிறகு என்ன மரியாதை வேண்டிக் கிடக்கிறது. "சும்மா போங்க சார்" என்றேன்.

ஸ்டேஷனுக்குப் புகார் போனது. அப்போது எஸ்ஐ.யாக இருந்த மனோகரன் சார் கேட்டார்: "உன்னைப் பற்றி எனக்கா தெரியாது?" மனோகரன் சாரிடம் நான் பொய் சொல்லமாட்டேன் என்பது அவருக்கும் தெரியும்.

"அவ ஒரு மாசமா எங்கூடதான் இருக்கா. இன்ன இடத்தில தங்க வெச்சிருக்கேன்." என்றேன். அழைத்துக்கொண்டு வரச் சொன்னார். அரைமணி நேரத்தில் ஸ்டேஷனில் ஆஜரான மெகருன்னிஸாவின், முதல் வார்த்தைகளே இதுதான்: "நீங்க எல்லாரும் போயிடுங்க. நான் இவரோடதான் வாழ்வேன்." பிறகு, பேசுவதற்கு எதுவுமில்லை.

மனோகரன் சார் சொன்னார்: "இவன்கூட விட்டா, கையும் காலையும் கட்டி கடல்ல எறிஞ்சதா நினைச்சுக்கிடுங்க." எஸ்ஐக்குத் தெரியாத என்னுடைய உள்கிடப்புகளும் இரவுப்பணிகளும் கிடையாது.

மேலுமொரு குண்டு வெடித்தது: "அவ இப்ப கர்ப்பமா இருக்கா."

பிறகு, யாரும் எதுவும் பேச முடியாமலானது. கண்ணீரும் கம்பலையுமாக அவர்கள் இடத்தைக் காலி செய்தார்கள். ஏழு மாத கர்ப்பமானதும் எப்படி இவளைக் கை கழுவுவதென்ற யோசனையில் ஆழ்ந்தேன். ஒரே நேரத்தில் ஒருத்தியுடன் வாழ்வதுதான் எனக்குப் பிடிக்கும். ஒன்று திகட்டிய பிறகுதான் மற்றொன்று.

இவளுக்கு இப்போது உடல்ரீதியாக ஒத்துழைக்கவும் இயலவில்லை. "பிரசவத்துக்கு நீ உன்னோட தாய் வீட்டுக்குப் போ" என்றேன். முதலில் மறுத்துப் பார்த்தாள். கை கழுவுவதற்கான வாய்ப்பை அல்லவா எதிர் பார்த்துக்கொண்டிருந்தேன்? கொண்டுபோய் அவளது உறவினர்களிடம் தள்ளிவிட்டு கதையை அப்போதே மறந்து விட்டேன்.

ஒன்றரை வருடங்களுக்குப் பிறகு: என்னுடைய அப்போதைய தொடுப்பு, மேபு என்ற ஒரு நாடக நடிகை. மேபுடன் காரில் கோவளத்திற்குச் சென்றுகொண்டிருந்தேன். திருவனந்தபுரம் கிழக்கே கோட்டையில் காரை நிறுத்தி ஒரு ஃபுல் வாங்கிவிட்டுத் திரும்பவும் காரில் ஏறுவதற்காக

நடந்தேன். எதிரில் பீமா பள்ளிக்குப் போகும் பதினான்காம் நம்பர் நடைபாதையில் தள்ளாடியபடியே நடக்கும் இரண்டு பெண்களின்மீது பார்வை பதிந்தது. தாட்சண்யமில்லாமல் நான் உதறித்தள்ளிய என் மனைவி மெகருன்னிஸாவும் அவளது தாயும். மெகருன்னிஸாவின் தோளில் என் குழந்தை.

அருகிலுள்ள ஹோமியோபதி ஆஸ்பத்திரியிலிருந்து மருந்து வாங்கிவிட்டு வருகிறார்கள். குழந்தையின் தலையின் ஒரு பகுதியில் கரப்பான் சொறி. நோய் பிடித்து மோசமான நிலையிலிருந்தது குழந்தை. உயிரிருக்கிறதா என்றுகூடத் தெரியவில்லை.

திடீரென்று என்னைப் பார்த்து விட்டாள். தாயைத் தொட்டழைத்து: "உம்மா . . . அங்கப் பாரு அவரு . . ." என்று மட்டும் சொல்லிவிட்டு அடுத்த வினாடி குழந்தையுடன் தொப்பென்று கீழே விழுந்தாள். எந்த அசைவுமில்லை. குழந்தையிடம் அழுவதற்கான திராணிகூட இல்லை.

அந்தத் தாய் ஒருபுறம் என்னைத் திட்டுகிறாள்; இன்னொரு புறம் கதறுகிறாள். ஆட்கள் கூடினார்கள். அவர்களிடமும் சொல்கிறாள்: "இவன் என் மகளைக் கல்யாணம் பண்ணிட்டு, வயிற்றில கொடுத்துட்டு ஓடிட்டான் . . ."

ஆட்கள் அறிவுரை சொல்ல ஆரம்பித்தார்கள். நானும் அவளைத் திருப்பித் திட்டினேன். என்னுடைய கவனமெல்லாம், கார் காத்து நிற்கிறது என்பதில்தான். நடப்பவை எதுவுமே என்னைப் பாதிக்கவில்லை. இதனிடையில் யாரோ அவளது முகத்தில் தண்ணீர் தெளித்தார்கள். மயக்கம் நீங்கியதும் ஓடி வந்து, நடக்கத் தொடங்கிய என் கால்களைக் கட்டிப் பிடித்துக் கதறினாள். நான் ஒரு வார்த்தைகூட பேசாமல் நின்றிருந்தேன். உண்மையில் என்னுள் கிடந்த குரூரங்கள் அப்போது உருக ஆரம்பித்திருந்தன. எங்கோ மண்புதைந்து கிடந்த மனிதாபிமானம் மேலெழுந்தது. மனம் சொன்னது: "உன்னை மட்டுமே நம்பி வாழ்கிற உன்னில் பாதி. போதும் உன் அகம்பாவம்."

அன்று, மணியன்பிள்ளையின் மனதிலிருந்த எல்லாக் காமக்குரோதங்களும் விலகியோடின. பிறகு, என்னுடன் படுக்கையைப் பகிர்ந்தவள் மனைவி மெகருன்னிஸா மட்டும்தான். என்னுள்ளிலிருந்த அகந்தை, ஒரு பெண்ணின் தனித்துவ அன்பிற்கு என்றென்றும் அடிபணிந்து வாழத் தயாரானது. இன்றும் பல பெண்கள் தயாராகவே இருக்கிறார்கள். மைசூரில் மகாராஜாவாக வாழும்போது உங்களுக்குப்

பிரச்சினை ஏதாவது இருக்கிறதா என்றுகூடக் கேட்டிருக்கிறார்கள். குண்டுராவுடன் சென்றபோதும் மனம் குலையவில்லை. எந்த வெள்ளைத் தோலாலும் என்னை வீழ்த்திவிட முடியவில்லை. நான் திருப்பியனுப்பிய கடைசித் தொடுப்பு மேபுதான். கார் புறப்பட்டது.

ஒரு ஆட்டோவில் மூன்றுபேரையும் ஏற்றிக்கொண்டு பீமா பள்ளி பகுதியை நோக்கிச் சென்றேன். சுலைமான் தெரு என்பது முஸ்லிம்கள் நெருக்கமாக வாழும் ஒரு சேரிப்பகுதி. போய்ச் சேர்ந்ததுதான் தாமதம், மக்கள் வந்து மொய்த்துக் கொண்டார்கள்: "இனி, இங்கிருந்து நீ போனா உயிரோடிருக்கமாட்டே" என்று சொல்லி பெரும் பிரச்சினை. மெகருன்னிஸா சொன்னாள்: "வேண்டாம், அடித்துப் பழுக்க வைக்க வேண்டாம். அதுவாகப் பழுத்தாப் போதும். இல்லேன்னா, இன்னொரு குழந்தையையும் தந்துட்டு அவர் போவார்."

உண்மையில், திருவனந்தபுரம் கோவளம் பகுதியிலிருந்து அதிகாரப் பூர்வமாக நான் ஒரு திருமணம் செய்திருந்தேன். என்னைத் திருத்துவதற்காக நெருங்கிய உறவினர்கள் சேர்ந்து நடத்திய வைபவம். கரயோகக்காரர்களின் அனுமதியுடன் சிறப்பாகவே நடந்தேறியது. திருடன் என்று அறிந்ததுடன் நமக்கு இது சரிப்பட்டு வராது என்பதைப் புரிந்துகொண்டாள். அத்துடன் அது முடிவிற்கு வந்தது.

மெகருன்னிஸாவுடன் வாழத்துங்கலுக்குச் சென்றேன். முதலில் ஒன்றைக் கட்டி அதை இல்லாமலாக்கிவிட்டு இப்போது ஒரு முஸ்லிம் பெண்ணுடன் சென்றது அங்கே பிரச்சினையாகிவிட்டது. இரண்டு சகோதரிகள் இருக்கிறார்கள். முக்கியஸ்தர்களான உறவினர்கள் வந்தார்கள். தீர்ப்பும் வந்தது: "குடும்ப வீட்டுக்குப் போகக் கூடாது. உன் பங்கான அந்த மூணரை சென்ட் இடத்திலதான் இருக்கணும்." அந்த இடத்திலொரு குடில் கட்டித் தங்கினோம்.

வாழத்துங்கல் தொடக்கப்பள்ளியில் மகனை ஒன்றாம் வகுப்பில் சேர்த்துவிட்டு வரும்போது வீட்டில் போலீஸ். மனைவிக்கு விஷயம் பிடிபடவில்லை. தன்னுடைய காதல் கணவனொரு மொள்ளமாரி என்பதை அவள் அறிவாள். ஆனால், முடிச்சவிழ்ப்பவன் என்ற விஷயம் தெரியாது. பதினொரு நாட்களுக்கு முன்னால் செய்த ஒரு திருட்டு. விரலடையாளத்தை வைத்து நான்தான் செய்தேன் என்று உறுதி செய்தார்கள். திருடனின் மனைவியென்றால், பொதுவாகவே போலீஸ்காரர்களுக்கு இளக்காரம்தான். திருடனென்று தெரிந்தும் திருடியதைத் தின்றும் திருடனுடன் வாழ்பவளும் திருடியாகவே

இருப்பாளென்று நினைக்கிறார்கள். போலீஸ்காரர்களிடமிருந்து பாதுகாக்க என்னைக் கட்டிபிடித்தபடியே விடமாட்டேன் என்று கதறினாள். போலீஸ்காரர்கள் பிடித்திழுத்தார்கள். அவர்களுக்குத் தெரியாதல்லவா இவள் உண்மையாகவே கதறுகிறாள் என்று?

என்னைத் திருடன் என்று புரிந்துகொண்டதுடன் அவள் உதறித் தள்ளியிருக்கலாம். பிறகு நடந்த பல நூறு துன்பங்களிலும் என்னைவிட்டு விலகியிருக்கலாம்; வெறுத்திருக்கலாம். நான் எதையும் சம்பாதித்துக் கொடுக்கவுமில்லை. கொடுத்ததெல்லாம் பிறருக்குத்தான். எந்தத் தேவைகளையும் முன்வைக்காமல் என்னுடன் வாழ்ந்தவள். பெரிய பெரிய பொய்களைச் சொல்லும்போதும் என்னை நம்பினாள். நண்பனின் மனைவியிடமிருந்து கடனாக வாங்கியது என்று சொல்லி அவளையும் அழைத்துக்கொண்டுபோய் திருட்டுப் பொருளை விற்றிருக்கிறேன். களங்கமென்றால் என்னவென்று அறியாத ஒரு பெண்பிஞ்சு. ஆனால், பலமுறை அவள் வற்புறுத்திய போதும் திருட்டிலிருந்து விலகி வாழ என்னால் முடியாமல் போய்விட்டது. எல்லா சுகபோகங்களுடனும் சேர்ந்து வாழ ஆசைப்பட்டேன்.

முதல்தடவை அரேபியாவிற்குப் போய்விட்டு இரண்டு மாத விடுமுறையில் வந்தாள். அப்போது பத்துப்பதினைந்து நாட்கள்தான் அவளுடன் இருந்திருப்பேன். மீண்டும் போவதற்காக என்னிடம் அனுமதி கேட்டாள்: "உன் விருப்பம்" என்று சொல்லிவிட்டேன். இதைச் சொல்வதற்கான அருகதை மட்டும்தான் எனக்கு. குடும்பத்தையே அவள்தான் போற்றுகிறாள். நீங்கள் ஜெயிலிலிருந்து வந்த பிறகு நான் வேலையை விட்டு வந்து விடுகிறேன் என்றாள். போய் கொஞ்ச நாட்களாகி இருக்கும். ஒரு நாள்: டெபுடி ஜெயிலர் சசிகுமார் ஆர்டர்லியை விட்டு ஜெயிலிலிருக்கும் என்னை அழைத்துக்கொண்டு வரச் சொன்னார். வந்ததும் கேட்டார்:

"உன்னோட வைஃப் எங்கே இருக்கறதா சொன்னே?" "அரேபியாவில," என்று சொல்லிவிட்டு: "என்ன சார் விஷயம்?" என்றேன். "ஒண்ணுமில்ல நீ போ" என்றார். பின்னால் ஒரு மேஸ்திரி வந்தார். கைதிகளில் நல்ல பிள்ளைகள்தான் மேஸ்திரியாக வருவார்கள். அவர் வந்து மெதுவாகச் சொன்னார்: "உன் பொஞ்சாதி இறந்துட்டாப்பா." திடுக்கிட்டு விட்டேன். உலகமே அஸ்தமித்ததுபோலிருந்தது. சீரழிந்து கிடந்த வாழ்க்கையிலிருந்து தூக்கிவிட்ட என் மனைவி. பெண் என்பவள் உடல் மட்டுமல்ல, அவளுக்குள் அன்பே வடிவானதொரு ஆன்மா இருக்கிறதென்பதை உணர்த்தியவள். இப்போது அவள் இல்லாமலாகி

விட்டாள். இனி எனக்கேது வாழ்க்கை?

சாகும் வயதுமல்ல அவளுக்கு. என்னுடன் சேர்ந்து அனுபவிக்கவிருப்பது நரக வாழ்க்கையென்று தெரிந்த பிறகும் பிரியாமலிருந்தவள். அவள் இறந்துபோய் விட்டதாகச் சொல்கிறான். நம்பிக்கை வராமலேயே தளர்ந்து போனேன். ஒரு உயிர்மீது நானும் அன்பு வைத்திருக்கிறேன் என்று அப்போதுதான் புரிந்தது. இனியாவது நிம்மதியாக வாழவேண்டுமென்று ஒவ்வொரு தடவையும் நினைத்து அதற்காகவே மீண்டும் மீண்டும் திருடினேன். எந்தத் திருடனும் எதையும் தேடி வைத்ததில்லை. எல்லாமே மாயைதான். பிடிபட்ட பிறகு முதலிலிருந்தே ஆரம்பிக்க வேண்டும். ஒவ்வொரு திருடனின் வாழ்க்கையும் பரமபத விளையாட்டுதான். ஏணியில் ஏறியதும் சொர்க்கத்தை எட்டிவிட்டதாகத் தோன்றும். ஆனால், பாதாளத்தில் தள்ளுவதற்காக பதினாறு பாம்புகள் அங்கே வாய் பிளந்து நிற்கும். ஏதாவதொன்றின் வாயில் விழுந்தே தீரவேண்டும். எத்தனை முறை சொல்லியிருப்பாள், கூலி வேலை செய்தாவது நிம்மதியாக வாழலாம் என்று. உயர்ந்த நிலையில் அவளை வாழ வைக்க வேண்டும்; சொர்க்கத்தைக் கட்டியெழுப்ப வேண்டும். பிறகு, நிம்மதியாக வாழலாமென்று நினைத்து அதற்காகப் பயணித்தேன். எல்லாமே தகர்ந்துபோய் விட்டது. வாழ்க்கை என்னவென்பதை அப்போதுதான் உணர்ந்துகொண்டேன். ஏதோ ஒரு நாட்டில் செத்து விழுந்து மரத்துக் கிடக்கும் என் மனைவியின் காலைத் தொட்டு மன்னிப்புக் கேட்டு உறுதியளித்தேன்: "மணியன்பிள்ளை என்ற திருடன் இங்கே அஸ்தமித்திருக்கிறான்." இந்த வாக்குறுதியை இன்றுவரையிலும் காப்பாற்றி வருகிறேன். இன்றும் அந்தக் கால்களைப் பற்றிக்கொண்டு மனதால் அழுது மன்றாடிக்கொண்டிருக்கிறேன்.

ஜெயிலில் நான் தீயைத் தின்று உயிர்வாழ்ந்துகொண்டிருந்தேன். எல்லாமே விதி. இதை நேரடியாக அனுபவித்துக்கொண்டிருக்கும் என் மகனுடைய வேதனைகள் எவ்வளவு கொடூரமாக இருக்கும். அவனுடைய தாயின் உயிரற்ற உடல், வந்து சேர ஒரு மாதமும் பதிமூன்று நாட்களுமாயின. அவளது முகவரி, ஸ்பான்சரின் பெயரிலிருந்தது. அவர் மும்பைக்காரர். இதனால் ஏற்பட்ட குளறுபடிதான் உடல் வந்து சேர்வதில் ஏற்பட்ட காலதாமதம். என் மனைவி மெகருன்னிஸா, இத்தனை நாட்களும் சௌதியில் அல்ஸஃபா ஆஸ்பத்திரியின் பிண அறையில் கிடந்தாள். சடலம் வந்தது. நைட் டியூட்டியில் இருந்த போலீஸ்காரர் செல்லுக்குள் வந்து சொன்னார்: "உன் பொஞ்சாதியோட பாடி வந்திருக்கு. போக வேண்டாமா?"

## **57 -** நாட்குறிப்பில்

21.05.1994. என்னுடைய சிறைச்சாலை நாட்குறிப்பில் அந்த வேதனைப் பயணம் பற்றித் தெளிவாகக் குறிப்பிட்டிருந்தேன்: என்னுடையவும் எல்லாருடையவும் கணக்குகளைக் குலைத்துப் போடுவதுபோல் 18ஆம் தேதியன்று அதிகாலையில் என் மெகருன்னிஸாவின் மையத்து அடக்கம் செய்வதற்காகக் கொண்டுபோகப்பட்டது. ஒரு தலைமைக் காவலரும் இரண்டு காவலர்களும் உட்பட நாங்கள் நான்குபேர் காலை ஏழு மணிக்குள் திருச்சூர் ரெயில்வே ஸ்டேஷனை அடைந்தோம். அதிர்ஷ்டவசமாக, அதிகாலை ஐந்து மணிக்கு வந்திருக்க வேண்டிய மெட்ராஸ் மெயில் மிகவும் தாமதமாக எட்டு மணிக்கு வந்ததால் உடனே திருவனந்தபுரத்திற்குப் புறப்பட முடிந்தது. இல்லையென்றால் 9:30க்கு வரும் டே எக்ஸ்பிரசில்தான் போக முடியும். இப்படியாக நினைத்த நேரத்திற்கும் முன்னதாக இரண்டு மணிக்குத் திருவனந்தபுரத்துக்குப் போய்ச் சேர்ந்தோம். ரெயில்வே ஸ்டேஷனில் இரண்டுபேர் எதிர்பார்த்து நின்றிருந்தார்கள். குளிர்ந்த தண்ணீர் குடித்தோம். இரண்டு ஆட்டோக்களில் சங்குமுகம் காவல் நிலையத்துக்குச் சென்று அங்கிருந்து ஒரு தலைமைக் காவலருடன் ஸுலியாத்தாவின் டிசி 542ஆம் எண் வீட்டுக்குச் சென்றோம்.

சுலைமான் தெருவின் இருபுறமும் வயது வேறுபாடில்லாமல், குழந்தைக்குட்டிகள் சகிதம் அதிசய விருந்தினனின் வருகையை எதிர்பார்த்து மக்கள் கூட்டம். வீட்டின் 25 மீட்டர் தொலைவில் வைத்து ஆட்டோவில் ஏதோ கோளாறு ஏற்பட்டது. இறங்கி நடந்தோம். அலி ஓடி வந்து என்னைக் கட்டிப்பிடித்து ஆறுதல் சொன்னான். யாரெல்லாமோ கூட்டத்தை ஒழுங்குபடுத்திக்கொண்டிருந்தார்கள். ரோட்டிலிருந்து திரும்பும் ஒற்றையடிப் பாதைக்கு வந்ததும் வீட்டிலிருப்பவர்கள் தெரிந்தார்கள். சவப்பெட்டி என் முன்னால் வைத்துத் திறக்கப்பட்டது. மருந்து நெடி மூக்கிலடித்தது. என் முகத்துக்கு நேராக யாரோ வத்திப் புகையை விசிறினார்கள்.

மெகருன்னிஸாவின் உடல் கபறடக்கம் செய்யப்படுவதற்காகப் பள்ளிவாசலில் வைக்கப்பட்டிருந்தது. நாங்கள் சிலர் போலீசின்

பார்வையில் படும்விதமாகத் தோட்டத்தில் வேப்ப மர நிழலில் நின்றிருந்தோம். சில சந்தேகங்கள் அங்கே பரிமாறப்பட்டன. பேச்சினிடையே உடலை மீண்டும் போஸ்ட்மார்ட்டம் செய்ய வேண்டுமென்று சொன்னேன். உடனே, எங்களுடன் வந்திருந்திருந்த தலைமைக் காவலர், இதை போலீசுக்கு ஃபோன் செய்து தெரிவிப்பதற்காகச் சென்றார். என் மைத்துனன் பஷீரும் அலியும் மீண்டும் போஸ்ட்மார்ட்டம் செய்வதிலுள்ள சிக்கல்களைச் சொன்னார்கள். நான் தலைமைக் காவலரைத் திரும்ப அழைத்தேன்.

அலி மையத்து தொழுகைக்காக என்னை அழைத்தான். நான் சமாளித்துவிட்டேன். பிறகு, வேறு சிலர் வற்புறுத்தினார்கள். நான் ஒளு செய்துவிட்டுப் பள்ளிவாசலில் முன்வரிசையில் நின்று மையத்து தொழுகை நடத்தினேன்.

மையத்தை அடக்கம் செய்வதற்காக எடுத்தோம். சந்தாக்கின் வலது புறத்தின் நடுப்பகுதியை தோளில் ஏந்திக்கொண்டேன். மையத்து கபர் குழியின் அருகில் இறக்கி வைக்கப்பட்டது. குழிக்குள் நின்றிருந்தவர்கள் என் மனைவியின் உயிரற்ற உடலின் தலைப்பகுதியைப் பிடித்து வாங்கினார்கள். அவளது முதுகு முதல் பாதம்வரை மெல்ல மெல்லக் குழிக்குள்ளிருந்த பெட்டியில் வைக்கப்பட்டது. இதிலும் என்னுடைய கை இணைந்துகொண்டது. அந்த முகத்தை மீண்டுமொருமுறை பார்த்தேன். சொல்ல முடியாத சோகமொன்று மனதில் உருத்திரண்டு வந்தது. அக்கம் பக்கம் பார்த்து, கண்கள் திருப்பி சோகத்தை அடக்க முயற்சித்தேன். குழிக்குள்ளிருக்கும் மனைவியின் கால் மாட்டில் நின்றிருந்த என் கண்களிலிருந்து இரண்டு துளி கண்ணீர் அந்தக் கால்களை மூடியிருந்த மண்ணில் விழுந்தது. பெட்டியின் கடைசிப் பலகையும் மூடப்பட்டது. என் மனைவியின்மீது கொட்டப்படும் மண்ணில் மற்றவர்களுடன் சேர்ந்து என் பங்காக நானும் மூன்று பிடி மண் போட்டேன். எல்லாம் முடிந்து வீட்டுக்கு வந்தோம். கூட வந்த போலீஸ்காரர்கள் உட்கார யாரோ செயர்களை நீக்கிக் கொடுத்தார்கள். மனைவியின் அண்ணனைக் கூப்பிட்டு முற்றத்தில் கிடந்த பெஞ்சில் உட்காரச் சொல்லிப் பேசிக்கொண்டிருந்தேன். சுற்றுப்புறங்களில் நிற்கும் ஆட்களைப் பார்க்கும்போதெல்லாம் கண்களில் துயரம் கவிந்து கொண்டது. அண்ணனின் பாக்கெட்டிலிருந்த காஜா பீடியிலிருந்து ஒன்றை எடுத்தேன். அப்போது பஷீர் வில்ஸ் சிகரெட் தந்தான். குளிர்ந்த கொக்கோ கோலா கிடைத்தது.

அப்போது, மூன்று நான்கு போலீஸ்காரர்கள் பின்தொடர சங்குமுகம் சப் இன்ஸ்பெக்டர் வந்தார். நான் பெஞ்சிலிருந்து எழுந்தேன். உட்கார்ந்திருந்த

போலீஸ்காரர்கள் எழுந்து சல்யூட் அடித்தார்கள். நான் கும்பிட்டேன். அவர் என்னைப் பக்கத்தில் உட்காரச் சொன்னார். செயரை சற்றுப் பின்னால் போட்டு நானும் உட்கார்ந்தேன். அவர், தீர்ப்பைப் பற்றியும் தண்டனையைப் பற்றியும் அஸி. கமிஷனர் தெரிந்துகொள்ளவும் உன்னைப் பார்க்கவும் விரும்புகிறார் என்றும் அதற்கான நேரத்தை ஒதுக்க வேண்டும் என்றும் சொன்னார். நான் சாயா குடித்துவிட்டு ஸுலியாத்தாவின் பக்கத்தில் சென்றேன். எல்லோரும் கட்டிப் பிடித்தார்கள். அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் என்னைப் பார்ப்பதற்காக வந்து கூடினார்கள். நான் முகத்தை உயர்த்தி அவர்களது பார்வையில் படும்படி நின்றிருந்தேன். தங்களுக்குள் எதையோ பேசிக்கொண்டனர். திரும்பிச் செல்லும்போது மனைவியின் உம்மா நூறு ரூபாய் நோட்டு ஒன்று தந்தார். சுபைதா தாத்தா கொடுத்திருக்கலாம். விடைபெறும்போது இன்ஸ்பெக்டரும் வந்து அவருக்கு ஆறுதல் சொன்னார்.

இன்ஸ்பெக்டர் வந்த அதே வண்டியில் நாங்கள் சங்குமுகம் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றோம். அஸி. கமிஷனரைப் பார்த்தோம். ஆறுதல் சொன்னார். ஸ்டேஷன் ஜீப்பில் கொண்டுபோய் எங்களை ரெயில்வே ஸ்டேஷனில் விடச் சொன்னார். ஏஎஸ்ஐயுடன் தம்பானூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வந்தபோது இரவு மணி ஏழரை. எட்டு மணிக்குப் புறப்படும் கண்ணூர் எக்ஸ்பிரசில் ஏறி அதிகாலை ஐந்தரைக்குப் பிறகு ஜெயிலுக்கு வந்து சேர்ந்தோம். டயரிக்குறிப்பில் இப்படித்தான் எழுதப்பட்டிருந்தது.

கடைசிச் சந்திப்பு: என் மனைவி முதல்முறையாக வெளிநாட்டுக்குப் போய்விட்டு வரும்போதும் நான் ஜெயிலிலிருந்தேன். விமான நிலையத்தின் அருகில்தான் நாங்கள் தங்கியிருந்தோம். பெட்டியை இறக்கி வைத்துவிட்டு சற்று நிதானமாக வந்து என்னை அவள் பார்த்திருக்கலாம். ஆனால், விமான நிலையத்திலிருந்து ஒரு டாக்சி பிடித்து நேராக ஜெயிலுக்கு வந்துவிட்டாள். பெட்டிகளும் கட்டுகளுமாக ஜெயிலின் முன்னால் வந்து நின்றாள்; சந்தித்தோம். கம்பிகளினூடே என் கைகளைப் பற்றிக் கொண்டு அழுதாள். அரவணைத்து ஆறுதல்படுத்த வேண்டும் போலிருந்தது. சட்ட விதிகள் குறுக்கே நின்றன. ஒரு திருடன்மீது எதற்காக இவ்வளவு அன்பு செலுத்துகிறாள். வேதனைகளையும் துன்பங்களையும் மட்டுமே தந்திருக்கும் ஒரு பெருந்திருடன்மீது.

மூன்றாவது நாள் என்னை வஞ்சியூர் நீதிமன்றத்திற்குக் கொண்டு வந்தார்கள். அங்குள்ள சட்டச் சடங்குகள் முடிந்த பிறகு ஆற்றிங்கல் நீதிமன்றம். அவள் ஒரு டாக்சியில் என்னைப் பின்தொடர்ந்து வந்தாள்.

போலீஸ்காரர்களுக்கு பணமும் அறுசுவை உணவும் கிடைத்தன. அவர்கள் திருப்தியாகி தம்பதி சமேதராக டாக்சியில் வர அனுமதித்தார்கள். கைகளைக் கோர்த்துக்கொண்டு என் தோள்மீது சாய்ந்து கிடந்த அவளது கண்ணீரில் என் தோள் நனைந்தது.

தாமரைச்சேரியில் ஒரு வழக்கிற்காகப் போகும்போது போலீஸ்காரர்கள் அனுமதியுடன் ஒருநாள் வீட்டில் தங்குவதற்கான வாய்ப்புக் கிடைத்தது. பத்தாயிரம் தடவை உதைத்தாலும் இப்படியான ஒரு மனிதாபிமானமே போதும், இவர்கள் செய்த எல்லாப் பாவங்களும் இல்லாமலாகி விடுவதற்கு.

1993 செப்டம்பர் 21. வாழ்க்கையில் ஒருபோதுமே மறக்க முடியாத நாள். அன்றுதான் என் மனைவியுடனான ஒரு உடல் சேர்க்கை நிகழ்ந்தது. பின்பொருமுறை என்னை ஜெயிலில் வந்து பார்த்தாள் என்பதைத் தவிர பிறகு அவளை நான் உயிரோடு பார்க்கவில்லை. அப்போது நான் ஜெயிலிலிருந்தேன். நான்கு நீதிமன்றங்களில் என்னுடைய வழக்கு நடந்துகொண்டிருந்தது. 18ஆம் தேதி ஆற்றிங்கல், 19ஆம் தேதி கொல்லம், 20ஆம் தேதி கோழிக்கோடு, 21ஆம் தேதி தாமரைச்சேரி என்று. ஆனால், 20ஆம் தேதியே தாமரைச்சேரி வழக்கிற்கு அழைக்கப்பட்டேன். இத்துடன் ஒரு நாள் ஓய்வு கிடைத்தது. 21ஆம் தேதி அதிகாலையில் நாங்கள் திருவனந்தபுரத்திற்கு வந்து சேர்ந்தோம். மறுநாள் பத்து மணிக்குப் பிறகு எனக்கு ஜெயிலில் அறிக்கை தாக்கல் செய்தால் போதும். ஒரு பகலும் ஒரு இரவும் என் கையில்.

நானும் ஒரு போலீஸ்காரருமாக வலியதுறையிலுள்ள எங்கள் வீட்டுக்குச் சென்றோம். பகல் நேரத்தை ஸ்மால் அடித்தும் சீட்டு விளையாடியும் போக்கினோம். இரவில் நான் மனைவியுடனிருந்தேன். பரஸ்பரம் அழுதோம்; அரவணைத்தோம்; அடித்துக் கொண்டோம். மீண்டும் அழுதோம்; சங்கமித்தோம். அவளது மரணச் செய்தியை அறிந்த பிறகு ஒருவகை பாலியல் உணர்வின்மை ஏற்பட்டது. இப்போது எந்த அழகியைக் கண்டாலும் தவறான சிந்தனைகளெவையும் உருவாவதில்லை. அப்படியே உருவானால் அதைக் கண்டுகொள்வதுமில்லை. அதைப் பற்றிய எண்ணமே இல்லை. இதன் பிறகு தூக்கத்தில்கூட ஸ்கலிதம் ஏற்பட்டதில்லை என்பதுதான் உண்மை.

1983இல் நான் மைசூரில் வைத்துக் கைதானேன். வழக்குகள் நடந்துகொண்டிருக்கும்போது மாயமாகி துவரங்குறிச்சியில் அவதரித்தேன். 88இல் மீண்டும் பிடிபட்டேன்.

விசாரணைகள் பாதியளவு முடிந்திருந்த பழைய வழக்குகளுட்பட என் பெயரில் மொத்தம் பதினாறு வழக்குகள் இருந்தன. தண்டனை விதித்தால் என்னுடைய ஜெயில் வாசம் 2011இல்தான் முடிவடையும். மொத்தம் 21 வருட தண்டனை. உயர்நீதி மன்றத்தில் மனுச்செய்தேன். ரிமாண்ட் காலம் தண்டனையாக ஏற்கப்பட்டது. இப்படியாகக் கொஞ்சம் நாட்கள் குறைந்தன.

இதனிடையில் என் மனைவியின் வாழ்க்கை மிகவும் துயர நிலைக்கு மாறியிருந்தது. எங்கே போனாலும் திருடனின் மனைவி என்ற பார்வை. அயல்வாசிகளின் தொல்லைகள் வேறு. பக்கத்தில் திருடனின் வீடிருப்பது என்பது அவர்களது கௌரவத்திற்கு இடைஞ்சலாக இருந்தது. கூடவே, தனிமையில் வாழும் பெண். கணவனோ, ஜெயில்வாசம் அனுபவிக்கும் ஒரு திருடன். சில எல்லைப் பிரச்சினைகளின் காரணமாக அயல்வாசிகளுடன் உரசல் ஏற்பட்டது. அவர்கள் போலீசில் சொல்லி, சங்குமுகம் எஸ்ஐ. வந்து ஷோ காட்டினார். இவள் அமைதியாகக் கேட்டுக்கொண்டு நின்றுவிட்டு கடைசியில்: "நீ உன் வேலையைப் பாருடா. போலீஸ் வேஷத்தில வந்துட்டேன்னு நான் பயந்துட முடியாது" என்றாள். எஸ்ஐ. அடிப்பதற்காகப் பாய்ந்தார். "பெண் போலீஸ் இல்லாம என் உடம்ப தொட்டேன்னா உன்னை சுப்ரீம் கோர்ட்வரைக்கும் இழுத்தடிப்பேன்." என்றாள். எஸ்ஐ. விக்கித்துப் போய் நின்றுவிட்டார். பிறகு, பரஸ்பரம் கெட்ட வார்த்தைகளின் பரிவர்த்தனை. "நான் யார்னு உனக்குக் காட்டுறேன்டி" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்ட எஸ்ஐ. பிறகு அந்தப் பக்கம் தலை வைக்கவில்லை.

வாடகை வீடு. உரிமையாளர் வந்தார். வீட்டைக் காலி செய்ய வேண்டும் என்றார். திருடனுக்கு வீடு கொடுப்பது சரியில்லை என்பது பக்கத்து வீட்டுக்காரர்களின் அபிப்பிராயம். சரி, எங்கே போவது? மகனையும் அழைத்துக்கொண்டு கொஞ்ச நாட்கள் ஸ்ரீசித்ரா புவர் ஹோமில் அனாதைகள் போல் தங்கியிருந்தார்கள். அங்கும் சரியில்லை என்றானதும்தான் அரேபியாவிற்குப் போகலாமென்று முடிவு செய்தாள். அன்று மைசூரில் கொஞ்சம் பணத்தைப் பாதுகாப்பாக எடுத்து வைத்திருந்தால் . . . இதற்கான அதிர்ஷ்டமும் அருகதையும் திருடனுக்கு ஏது? தலை விதி. கோடீஸ்வரியாக வாழ்ந்தவள், புவர் ஹோமில் அனாதையாக! என் காரணமாக என்னென்ன துன்பங்களை எல்லாம் அவள் அனுபவித்திருக்கிறாள்.

1986 மார்ச் 24ஆம் தேதி, திங்கட்கிழமை. நான் ஜெயிலில் கிடக்கிறேன். அன்றைய மாத்ருபூமி நாளிதழின் மனதை உருக்கும் மிகப்பெரிய செய்தி

என்னைப் பற்றியதுதான். மேல் பக்கத்தில் ஐந்து பத்திகளில் செய்தி வந்திருந்தது. மூன்று பத்திகளில் கால் பக்கம் வருமளவில் நான் எழுதிய ஒரு கடிதமும்.

செய்தியில்: பெப்ரவரி முதல் வாரத்தில் ஒருநாள் மணியன்பிள்ளையின் மனைவி மெகருன்னிஸா, கைதியாக இருக்கும் தன்னுடைய கணவன் உயர்நீதிமன்றத்தில் சமர்ப்பித்திருக்கும் அப்பீல் குறித்து அறிந்துகொள்வதற்காக வஞ்சியூரில் ஒரு வழக்கறிஞர் அலுவலகத்திற்கு வந்தார்.

பல வழக்கறிஞர்களிருக்கும் ஒரு அலுவலகம் அது. அங்கிருந்த ஒரு இளம் வழக்கறிஞர் மெகருன்னிஸாவிடம் விவரங்களைக் கேட்டறிந்தார். அவரது கணவனுடைய வழக்கை உயர்நீதிமன்றத்தில் நடத்துபவர் திருவனந்தபுரத்திலிருப்பதாகச் சொல்லி அழைத்துச் சென்றார். பிறகு நடந்ததை மெகருன்னிஸாவே சொல்கிறார்:

"அறையின் ஒரு புறம் கட்டிலும் படுக்கையுமிருந்தது. என்னிடம் அவர் கட்டிலில் உட்காரச் சொன்னபோது, வேண்டாம் நான் நிற்கிறேன் என்று சொல்லிவிட்டேன். அப்போது அறையின் வாசல்கதவு மூடப்பட்டது. இரண்டுபேரும் சேர்ந்து என்னைப் பாலியல் பலாத்காரம் செய்ய முயற்சித்தனர். நான் கதவைத் திறந்து ஓடித் தப்பித்துக்கொண்டேன்."

வலியதுறையில் மார்க்கெட் பகுதியில் வாடகை வீட்டில் தங்கியிருக்கும் மெகருன்னிஸா தன்னுடைய கணவனின் வருகையை எதிர்பார்த்துக் காத்திருக்கிறார் . . . இப்படியாகச் சென்றது அந்தச் செய்தி.

சம்பவம் இதுதான்: ஒருநாள் ஜெயிலில் என்னைப் பார்க்க யாரோ வந்திருப்பதாகத் தகவல் கிடைத்தது. போய்ப் பார்க்கும்போது என் மனைவி அழுதபடியே நிற்கிறாள். என்னைக் கண்டதும் மேலும் அழ ஆரம்பித்தாள். "கேஸ் சம்பந்தமான விஷயம்னு சொல்லி இதுக்காகவா யாரையாவது பார்க்க என்னை அனுப்புறீங்க?" என்று கேட்டாள்.

"என்ன நடந்ததுன்னு சொல்லு?" என்றேன்.

அரசு வழக்கறிஞரைப் பார்க்க அவளை அனுப்பியவன் நான்தான். நீ அங்கே போனால் போதும். அவரே எல்லாவற்றையும் சரியாக்கித் தந்துவிடுவார். விவரங்களை மட்டும் நீ சொன்னால் போதுமென்று சொல்லி அனுப்பி வைத்தேன். வக்கீல் ஆஃபீசுக்குச் சென்றபோது

தனியாக இருந்த ஜூனியர் வக்கீல்: "சார் உள்ளே இருக்கிறார்." என்றார். அங்கே அரசு வழக்கறிஞரும் ஒரு பெட்ரூமும். அவள் உள்ளே போகாமல் வாசலில் நின்றாள். அரசு வழக்கறிஞர்: "ஆங், திருட்டு மணியன்பிள்ளையோட பொஞ்சாதிதானே?" என்று கேட்டார்.

பிறகுதான் பத்திரிகையில் வந்த சம்பவம் நிகழ்கிறது. அலறியபடியே இறங்கி ஓடியவள், நேராக இங்கு வந்துவிட்டாள்.

"சரி, நான் பார்த்துக்குறேன். நீ போ" என்றேன்.

அப்போது மாவட்ட நீதிபதியாக இருந்த கே.டி. தாமஸ் சாருக்கும் செஷன்ஸ் கோர்ட் நீதிபதிக்கும் காவல்துறை உயர் அதிகாரிகளுக்கும், ஜெயில் கைதியாக இருக்கும் கதியற்ற ஒருவனின் மொழியில் கடிதமெழுதினேன். ஒரு பிரதியை மாத்ருபூமி பத்திரிகைக்கும் அனுப்பி வைத்தேன். மறுநாள் மாத்ருபூமி பத்திரிகையைப் பார்த்து நானே ஆச்சரியப்பட்டேன். நான்கு பத்தியில் கால் பகுதி வருமளவில் என்னுடைய கடிதம். நான் எழுதியதை விடவும் பெரிதாக என் கையெழுத்தில் அச்சாகி இருந்தது. கீழ்ப்பகுதியிலிருந்த வேறு சில முக்கியச் செய்திகளை விடவும் பெரிதாக ஐந்து பத்திகளில் செய்தியும். அன்றைய தினமே உள்துறை அமைச்சர் இதற்கான நடவடிக்கையெடுக்கும்படி காவல்துறையிடம் கேட்டுக்கொண்டார். ஜூனியர் அஜித்தும் மூத்தவர் ராமச்சந்திரனும் பொறிக்குள். வழக்கைப் பேசித்தீர்ப்பதற்காக இவர்கள் ஜெயிலில் என்னைப் பார்க்க வந்தார்கள். நடுவராக ஒரு வெல்ஃபேர் அதிகாரி. இந்த அதிகாரி என் ஊர்க்காரரான டாக்டர் விக்கிரமன் பிள்ளை.

டாக்டர் சொன்னார்: "டேய் மணியா, வழக்கை வாபஸ் வாங்கிடு. அதுக்காக என்ன வேணும்னாலும் செய்ய நாங்க தயாரா இருக்கோம்னு சொல்றாங்க."

"என்ன செய்யப் போறாங்க? பணம் தர்றாங்களாமா? என் பொஞ்சாதியோட மானப்பிரச்சினையை முதலீடாக்கி நாலணா வாங்கினா நான் ஒரு ஆம்பிளையா? நீங்களே சொல்லுங்கண்ணா?" என்று கேட்டேன்.

அவர் சொன்னார்: "சரி, அப்ப நீ எதுவும் வாங்கிக்க வேண்டாம். பதிலுக்கு ஏதாவது திருப்பிக் கொடு."

"அது போதும்." அவர்கள் வந்தார்கள். அஜித்துக்குச் சரியாகவே

கொடுத்தேன். கூடவே *பூரத்தெறியும். பதில் சொல்லவா முடியும்? கேட்டுக்கொண்டு நின்றார்கள்.

வழக்கைத் தொடர்ந்து நடத்த வேண்டுமென்ற எண்ணமும் எனக்கில்லை. கைதி என்பவன் ஒரு குற்றவாளி. அவன் செய்த குற்றத்திற்கு அதிகார வர்க்கம் தண்டனையளிக்கிறது. இத்துடன் அவன்மீதான குற்றம் சமன்படுத்தப்படுகிறது. இந்தக் காலகட்டத்தில் பாதுகாப்பில்லாத நிலையிலுள்ள அவனது குடும்பத்தினருக்குத் துரோகமிழைக்கலாமா? மனித உரிமைகள் சம்பந்தமான மிகப் பெரிய விஷயம் இது. ஜெயிலில் கிடப்பவன் கதியற்றவன். அவன் ஜெயிலில் இருக்கும்போது அவனது பாதுகாப்பில் வாழவேண்டியவர்களுடைய பொறுப்பு, அவனைத் திருத்துவதற்காகத் தண்டனையளித்த அதிகார வர்க்கத்திற்கு இருக்கிறது.

ஆனால், இதற்கு மாறாக மிக அதிகம் சுரண்டலுக்குள்ளாகுபவர்கள் இதுபோன்ற கதியற்றவர்களின் குடும்பம்தான். போலீஸ்காரன் வேட்டை நாய்போல் இவர்களையே மோப்பம் பிடித்து நடப்பான். இந்நிலையில் இப்போது மாற்றங்கள் நிகழ்ந்திருக்கின்றன. காமமென்பது மனிதனின் மிக முக்கியமான உணர்வுதான். ஆனால், அதனைக் கதியற்றவர்கள்மீது ஏவுவது; அதிகாரத்தை இதற்காகப் பயன்படுத்துவது போன்றவை மனிதத் தன்மையற்ற செயல்கள். வாய்ப்புக் கிடைத்தால் போதும், திருடனின் மனைவி மற்றொருவனுடன் சென்று விடுவாள் என்பது தவறான அனுமானம். கணவன் மீதான அன்பு திருடனின் மனைவிக்கு மிக அதிகமாகவே இருக்கும். விசேஷ அன்புகொண்ட சில பெண்களால் மட்டும்தான் திருடன்களுடன் வாழ முடியும். இப்படியான அன்பிருப்பவள் மட்டுமே எல்லாவிதத் துன்பங்களையும் ஏற்று அவனுடன் வாழ்கிறாள். மற்றவர்களின் கிண்டல் கேலிகளை ஏற்று மானங்கெட்டு வாழும் அவள், திருடன் இல்லாத வேளையில் மற்றவர்களின் இச்சைக்கு இணங்கி விடுவாள் என்று நினைக்கிறார்கள். இது எல்லா இடங்களிலும் அப்படி அல்ல என்பதை அரசுத் தரப்பும் அவரது தரப்பும் உணர்ந்திருக்கும்.

என்னுடைய வழக்கு நீதிமன்றத்திற்கு வந்தபோது நான் சூடானேன்: "மாண்புமிகு நீதிபதி அவர்களே, என் வழக்கை இந்த வழக்கறிஞர் விசாரிப்பதை நான் விரும்பலை. இவருக்கு வழக்கு முக்கியமல்ல, பிரதியோட பொஞ்சாதிதான் முக்கியம். மாண்புமிகு கோர்ட்டாருடைய பொஞ்சாதியாக இருந்தாலும் விடாத அயோக்கியன்."

வழக்கு அடுத்தத் தடவை விசாரணைக்கு வரும்போது அரசுத் தரப்பு

வழக்கறிஞர் மற்றொருவர்.

என் காரணமாக இப்படி எத்தனைத் துன்பங்களைத் தாங்கி, என்றாவதொரு நாள் நிம்மதியாக வாழ்வோம் என்ற கனவிலிருந்தவள். இன்று, ஏதோ ஒரு அரபியின் உதையோ அடியோ பட்டு . . . இதுபோன்ற மரணங்கள் அரபு நாட்டில் சகஜம் என்று பலர் என்னிடம் சொல்லியிருக்கிறார்கள்.

இறந்தவள் என் மனைவிதான் என்பதை என்னால் இப்போதும் நம்ப முடியவில்லை. சடலமிருந்த பெட்டியின் மூடியைத் திறந்ததும், என்னைப் பாருங்கள் என்று அவள் சொல்வதாக நினைத்துக் கண்களைத் தாழ்த்தினேன். ஆனால், எனக்கே சந்தேகம் வந்துவிட்டது. என்னுடைய அழகான மனைவியா இவள்? இல்லை, இது அவளல்ல. அவள் இனிமேல் வருவாள்.

இதயத்தில் ரத்தம் இறுகி சுவாசத்தடை ஏற்பட்டு மரணம் சம்பவித்ததாகவும், பாலியல் பலாத்காரம் நடந்ததற்கான தடயங்களெதுவுமில்லை என்றும் அறிக்கையில் சொல்லப்பட்டிருந்தது. மாதமுறை தவறும்போது ஏற்படுகிற வயிற்று வலிக்காக ஒன்றோ இரண்டோ தடவை அவளுக்கு மாத்திரை வாங்கிக் கொடுத்திருக்கிறேன். இதைத் தவிர ஒரு காய்ச்சல் மாத்திரைகூட அவளுக்கு வாங்கிக்கொடுக்கும் தேவை ஏற்பட்டதில்லை. அப்படியென்றால், முதலாளி ஏதாவது குற்றத்திற்காக அடித்திருக்கலாம். எவ்வளவு முரண்பாடு. பத்து மனிதர்களால்கூட தாங்கமுடியாத அளவுக்கு அடியும் உதையும்பட்ட நான் இன்னமும் உயிர் வாழ்கிறேன். என்னுடைய மனைவி, பாவம். எவனோ ஒருவனின் ஒரு அடியில் . . .

இன்றும் நினைவுகளில் அவளது கால்களைக் கண்ணீரால் கழுவாமல் நான் தூங்கியதில்லை.

## **58 -** காபரே

இரு துருவங்களில் சஞ்சரிப்பதுதான் திருடனின் வாழ்க்கை. ஒன்றில், சுகபோகத்தினுள் ஆழ்ந்து கிடப்பது அல்லது கொடும் சித்திரவதைக்கும் பட்டினிக்கும் ஆட்பட்டுக் கிடப்பது. பணத்தை அள்ளியிறைத்து நிறையவே சுகம் அனுபவித்திருக்கிறேன். அதிலொன்றுதான் காபரே.

அப்போது, கோழிக்கோட்டில் காபரே நடனம் நடக்கும். நானும் நல்ல விடலைப் பருவம். முதல்முறை போயிருந்தபோதே ஒரு ஆசை. நடனமாடுபவளை எல்லாருடைய முன்னிலையிலும் எட்டிப் பிடிக்க வேண்டும். என்னதான் நடந்துவிடும் என்று பார்ப்போமே! அன்னிய பெண்ணின் நிர்வாண உடலைப் பார்த்து வாய் பிளக்காதவன் இருக்கவா முடியும்? இருந்தும் பெரிய மனிதத் தோரணையில் மூச்சை அடக்கிப்பிடித்து உட்கார்ந்து தண்ணியடித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தப் போலித்தனத்தைப் பார்த்ததும் எனக்கு எரிச்சல் வந்தது. மனிதன் கொஞ்சகாலம்தான் வாழப்போகிறான். போலியாக இல்லாமல் அதை பச்சையாக வாழ்ந்து தீர்ப்பதற்குப் பதிலாக பாசாங்கிலேயே மூழ்கிக் கிடக்கிறார்கள். சமூகத்தின் எல்லா நாடகத்தன்மைக்கும் பதில் சொல்ல இயலும் ஒரு வாழ்க்கையை நான் தேர்ந்தெடுத்திருக்கிறேன். எல்லா சமூகக் கட்டுத்திட்டங்களையும் கடந்து வெளியில் நிற்கும் ஒருவன் நினைத்தால் மட்டுமே குறைந்த அளவிலாவது சில அதிர்வுகளை இங்கே உருவாக்க முடியும். ஆகவே, "இந்தக் கூத்தச்சிமவளை இவனுங்க எதிர்ல வெச்சு, பிடிச்சு விடணும்." என்ன நடந்துவிடப் போகிறது. இங்கே உட்கார்ந்திருக்கும் எல்லா மானஸ்தர்களும் மனதிற்குள் நினைப்பதை நான் செய்கிறேன். ஐயாயிரமோ பத்தாயிரமோ கொடுத்தால் படுப்பவள். கூடவே உடைபடுவது ஓட்டல்காரனின் நியதிகள். ஒரு திருடனைப் பொறுத்த வரைக்கும் இது ம . . . சமானம்.

அதிகபட்சம் என்ன நடக்கும்? ஓட்டல்காரன்கள் அனைவரும் சேர்ந்து சுற்றி நின்று அடிப்பார்கள். அல்லது உதைப்பார்கள். எவ்வளவுதான் அடித்துவிட முடியும்? இல்லையென்றாலும், உடம்பு கொஞ்சம் அசைந்துகொடுத்து ரொம்ப நாளாகிறது. குற்றங்களில் நான் முதுகலை தேறிய பிறகு போலீஸ்காரர் களுக்கும் என்னுடம்பின்மீது பெரிய

அளவில் ஆர்வமில்லை. மற்றவர்கள் எதைச் செய்தாலும், போலீஸ்காரர்கள்மீதான பயவுணர்வுடன்தான் செய்வார்கள். எல்லாருக்குமே உதைவிழுமென்பதில்தான் பயம். இதற்குப் பயப்படாதவனால் எதையும் செய்ய முடியும்.

மானாஞ்சிற மைதானத்தின் அருகிலுள்ள ஓட்டலில் நிகழ்ச்சி நடைபெறுகிறது. அடுத்த காட்சி, காதுகளைச் செவிடாக்கும் வாத்திய கோஷம். அட்டகாசமான ஆடையலங்காரத்துடன் மணியன்பிள்ளை உள்ளே நுழைகிறான். தலைப்பாகை அணிந்த கொம்பு மீசைக்காரன் சல்யூட் அடித்தான். அவனுக்குச் சிறு புன்னகையால் பதில் சொன்னேன். என்னே ஒரு மரியாதை?

உள்ளே நுழைந்தேன். ஆட்டக்காரி முதலில் உடலைப் போர்த்திக்கொண்டுதான் வருவாள். நாற்பத்தைந்து நிமிடங்கள் நடக்கும் காட்சியின் இறுதிக் கட்டத்தில் பிரேசியரும் ஜட்டியும் மிஞ்சும். இயன்றவரைக்கும் குனிந்தும் குலுக்கியும் காட்டுவாள். முலைக்காம்புகளைத் தவிர அனைத்தையும் காட்டுவாள். காட்சி முடிவடையும் நேரத்தில் பிரேசியரைக் கழற்றுவாள். இந்நேரம், ஆட்களினிடையிலிருந்து விலகி வாத்தியக்காரர்களின் அருகில் பாதுகாப்பாக நிற்பாள். கடைசியில் இதோ பார்வையாளர்கள் வாய் பிளந்து நிற்கும் சுபமுகூர்த்தம். திரும்பி நின்று ஜட்டியைத் தாழ்த்திக் குனிந்து நிற்பாள். வாய் பார்த்தான்களின் கண்களிலுள்ள ஆர்வத்தைத் தணிப்பதுபோல் விளக்குகள் அணையும். ஆட்டக்காரி மறைவாள். ஏமாற்றத்தின் கொடிகள் மெல்ல இறங்கத் தொடங்கும்.

முதல்முறை போயிருந்தபோது, காட்சி முடிந்து விளக்குகள் அணைந்ததும் நான் யோசித்தேன். மனிதனின் காம உணர்வைத் தூண்டுகிற எந்த வியாபாரமாக இருந்தாலும் வெற்றி பெற்று விடுகிறது. ஆனாலும் மனித உணர்வுகளை இவ்வளவு மோசமாகக் கொச்சைப்படுத்தக்கூடாது. அவள் குனிந்து நின்றுக் குண்டி காட்டுவதை என்னை அவமானப்படுத்துவதாக உணர்ந்தேன். ஆண்களை அல்ல, ஆண்மையை அவமானப்படுத்துகிறாள். உடலைக் கோணலாக்கிக் காட்சிப்படுத்துவதைக் கண்டால் ஏனோ எனக்குக் கோபம் வந்துவிடுகிறது. வயிற்றுப் பிழைப்பிற்காக இருக்கலாம். இருந்தாலும் அதிர்ச்சியளித்தாக வேண்டும். அன்றே உறுதி செய்துகொண்டேன். இதைச் சரிவரப் புரிந்துகொள்வதற்காக இரண்டுமுறை போனேன். ஒவ்வொரு முறையும் அவள் கடைசிக் கட்டத்தில் குனியும்போது எனக்குக் கோபம் கோபமாக வந்தது.

மூன்றாவதுமுறையான இப்போது ஒரு முடிவுடன் வந்திருக்கிறேன். இதை எப்படிச் செயல்படுத்துவது? கோவா மாடல் சரிப்பட்டு வருமா?

கோவா சாராயமான ஃபென்னி குடிக்க வேண்டுமென்ற ஆர்வத்தில் ஒருமுறை கோவாவிற்குப் புறப்பட்டேன். சில, பிராந்திய மற்றும் தேசிய குற்றவாளிகள் நீரூற்றி வளர்த்த இந்த ஆசையைக் கருகவிட என் திருவுளம் சம்மதிக்கவில்லை. யாரோ சொன்னார்களென்று நான் எளிதில் விழுந்துவிடமாட்டேன். இருந்தாலும் நல்ல முந்திரிப்பழத்திலிருந்து காய்ச்சும் சாராயம் என்றதும் மனம் சஞ்சலமடைந்தது. அப்போதும் நான் ஜெயிலில்தான் இருக்கிறேன் என்பது முக்கியத் தகவல் கிடையாது. முந்திரியின் வாசம் என் பால்யத்தை நினைவுபடுத்தும். வாழத்துங்கலில் ஏராளமான முந்திரி மரங்களுண்டு. இம்மரங்கள் பூக்கும்போதே தூக்கலான ஒரு வாசம் வரும். குறுகுறுக்க வைக்கும் வாசம். பழுக்கும்போது மனம் மயக்கும் வாசம். கிளிகள் கொத்தி விழுந்த பழங்கள், சைக்கிள் டயரில்பட்டும் ஆட்கள் மிதித்தும் நசுங்கிப்போய் அந்தப் பகுதி முழுவதையும் கமகமக்க வைக்கும். ஃபென்னியை நினைக்கும்போதே எனக்குப் போதை வந்துவிட்டது.

பால்யகால நினைவுகள் என்னை மங்கலாபுரம் ரெயிலில் கொண்டு வந்து சேர்த்தது. கொங்கன் ரெயில்வே இல்லாத காலமென்பதால் கோவாவிற்குப் பஸ்சேறினேன். ஸ்டார் ஓட்டலில் தங்கினேன். எவனுடைய பணமாக இருந்தாலும் நம் கையிலிருக்கும்போது தேவையில்லாமல் லாட்ஜில் தங்குவானேன். மேலாளர்களின் பவ்யமும், பரிசாரகரின் பணிவுகளும், ஒரு தினுசாக அவர்கள் இடதுபக்கம் வந்து தம்ளர்களை நிரப்பும் மேஜை மரியாதைகளையும் பார்க்கும்போதெல்லாம் எனக்குப் பற்றிக்கொண்டு வரும். "எழும்பி ஒண்ணு வெச்சிடலாமா?" என்றுகூடத் தோன்றியதுண்டு. வைத்துவிட்டு: "இங்கே குந்தியிருக்குறவனுகளுக்கு எப்ப நீயும் இதுபோல ஒண்ணு கொடுக்கிறியோ அன்னிக்கு உன் மனச்சாட்சி உனக்குக் கை கொடுக்கும்" என்று சொல்ல வேண்டும். அந்த இரண்டு நிமிட நேரம் அவனும் மனிதனாக வாழ்வான். அடி வாங்கிய மரியாதைக்குரிய வாடிக்கையாளனும் மனிதனாக வாழ்வான். செத்துக்கிடந்த அவனது அகந்தை உஷாராகி அடுத்த நிமிடம் திருப்பித் தாக்கும்வரையாவது.

பணத்தின் மிகப்பெரிய அசிங்கம் இதுதான். இங்கே விரயமாகும் பணம் உழைத்தோ வேர்வை சிந்தியோ சம்பாதித்ததல்ல. என்னைப்போல் திருடிய பணம்தான். நான் நேராகப்போய் திருடுகிறேன். இவர்கள் தொழிலாளர்களைப் பிழிந்தும் அரசாங்கத்தை ஏமாற்றியும் கூட்டிக்

கொடுத்தும் . . . நான் ஒரு இரவில் ஒரு வீட்டுக்காரனின் சாபத்தை ஏற்கிறேன் என்றால் இவர்கள் பல தலைமுறையினரின் சாபத்தை ஏற்கிறார்கள். இவர்களின் முன்னால், இவர்கள் வீசுகிற பணத்தின் முன்னால் பாவம், இந்த இளைஞர்கள் கூனிக்குறுகி நிற்கிறார்கள். சரி அதை விடுவோம்.

கோவாவில் பணம்பார்க்கும் ஏற்பாடுகள் விரிவாகச் செய்யப்பட்டிருக்கும். பெரிய செயற்கை நீரூற்றும் தாமரைப்பொய்கைகளுமுள்ள அழகான ஊர். வாயில் வைத்தால் அப்படியே கரைந்துபோகும் விதமாக நெய்யில் வறுத்தெடுத்த உருளைக் கிழங்கு, சற்றுத் தொலைவில் கடலிசைக்கும் கீதம். நான் அப்படியே குடித்துக்குடித்து . . . ஒரு குழந்தையாய் . . . குடல்வரைக்கும் முந்திரிப்பழத்தின் வாசமுமாய் . . . அப்படியே கிறங்கி நிற்கும்போது . . .

நிறைய பெண்கள் . . . சிலர் துள்ளுகிறார்கள். சிலர் கட்டிப்பிடிக்கிறார்கள். வாடிக்கையாளர் சிலருடன் நடனம் பயில்கிறார்கள். தட்டுகிறார்கள்; முட்டுகிறார்கள்; என்னவெல்லாமோ நடக்குது போங்கள். என் ஆர்வம் அப்படியே முடங்கிப்போய்க் கிடந்தது. எல்லாவளும் ஒன்று சேர்ந்து வந்தால் ஆர்வமா வரும்? போதை முற்றிய நிலையில் வெயிட்டருக்கு ஐம்பது ரூபாய் டிப் கொடுத்தேன். ரூபாய் அதிகமாகக் கிடைத்தால் உடனே கூட்டிக்கொடுப்பதில் ஆர்வமேற்படுமோ? அவன் ஆரம்பித்தான்: "அந்த மஞ்சள் சேலைக்காரி . . . ஒருமணி நேரத்துக்கு . . . சாருக்கு எங்கிறதால நான் ஆயிர ரூபாய்க்கு . . ." நான் அவனது முகத்தை ஏறிட்டுப் பார்த்தேன். என் கண்களும் நாக்கும் நிமிர்ந்து நிற்கவில்லை என்பது அவனுடைய அதிர்ஷ்டம். நான் மனதிற்குள் சொல்லிக்கொண்டேன்: "டேய், நீ நல்ல பையன் . . . உனக்கு எதுக்குடா இந்த வேலை? இதுக்கெல்லாம் வந்துடக் கூடாதுன்னுதானே டிப் தர்றது. நான் எப்படியோ வழி தவறிப்போயிட்டேன்."

அவனும் விடுவதாக இல்லை: "நானும் கொஞ்சம் வழி தவறிக்கிறேனே? இதில மட்டும் சுவாரஸ்யமிருக்காதா என்ன?" என்பதுபோல் கூட்டி விடுவதிலேயே குறியாக நிற்கிறான்: "பிராமின் பொண்ணு" என்று சொல்லிவிட்டு ஏதோ ஒரு கணக்கு சொன்னான். நான் சொன்னேன்: "அதைத் திருப்பிச் சொல்லு?" அவன் மூன்று இலக்கங்களைச் சொன்னான். மார்பளவும் இடுப்பளவும் வேறு ஏதோ ஒரு எளவும். இவ்வளவுதான் புரிந்தது.

நான் கூலாகச் சொன்னேன்: "போடா . . . ம . . ." அவன் பேசாமல்

நடந்தான்.

மற்றவர்கள் செய்யத் தயங்குவதை நான் செய்தாக வேண்டும். கோழிக்கோடுதான் அதற்குச் சரியான இடம். கோழிக்கோட்டில் நான் பார்க்கும் மூன்றாவது காபரே டான்ஸ் இது.

அவள் துள்ள ஆரம்பித்தாள். வழக்கமான வாடிக்கையாளர்கள் வரும்போது கையை உயர்த்திக் காட்டுவாள். இதில் குளிர்ந்துபோய் பெருமிதத்துடன் அவர்கள் சுற்றிலும் பார்ப்பார்கள். பாவம், அவளது தூக்கிய கையை பெருமையாக நினைப்பவர்கள் சீக்கிரமே தரைதட்டி விடுவார்கள் என்பதுதான் உண்மை. சிலருக்கு அவளே வந்து தம்ளரை எடுத்துக்கொடுப்பாள். லபக்கென்று ஊற்றுபவர்களுக்கு இந்த உபசரிப்பு கிடையாது. தம்ளரை வைத்துக்கொண்டு தேமேன்னு உட்கார்ந்திருப்பவர்களுக்கு மட்டும்தான். அதாவது: "சீக்கிரம் குடித்துத் தொலைச்சிட்டு அடுத்ததை ஊற்று" என்பதுதான் இதன் பொருள். இதனிடையே அவள் ஏறுகொண்ட நெஞ்சுமாய் அவர்களது அருகில் செல்வாள். அவர்கள் அதில் நோட்டைச் சொருகிவிட்டுச் சொக்கி நிற்பார்கள். அவள் அதை ஜட்டிக்குள் வைப்பாள். அதற்கான இடமும் அதுதான்.

நான் அப்படியே பார்த்துக்கொண்டிருந்தேன். இனி, அவள் பக்கத்தில் வந்த பிறகுதான் பாக்கியுள்ளவை. மெதுவாகச் சுற்றித் திரிந்து வந்தாள். கொஞ்ச நேரமாகவே நான் தம்ளரை நிரப்பி வைத்திருக்கிறேன். அவள் அதை எடுத்துக் கையில் தந்தாள். நான் வாங்கிக் கீழே வைத்தேன். பிறகு, வேண்டுமென்றே அவளது நெஞ்சைப் பிடித்து அமுக்கி விட்டேன். அவள் திடுக்கிட்டு முறைத்துப் பார்த்தாள். நான் எட்டி, தொடையைப் பிடித்தேன். உடனே எதுவும் நடக்காததுபோல் ஆடிக்கொண்டே இடத்தை விட்டு நகர்ந்தாள்.

அப்போது ஒருவன் வந்து கை குலுக்கினான். கை நெரிபட்டது. நானும் விடவில்லை. முடிந்தவரைக்கும் நெரித்தேன். அவன்தான் பலசாலி. எனக்குத்தான் வலி கிடையாதே . . . கையை நெரித்தவன் "கொன்னுடுவேன்" என்று மெதுவாகச் சொல்லிவிட்டு நகர்ந்தான். எதுவுமே நிகழாது போனதில் எனக்கு ஏமாற்றமிருந்தது. சே, போக்கிரித்தனம் காட்டுபவர்களை இப்படியா எதிர்கொள்வது? அவர்கள்மீது கோபம் வந்தது.

## 59 - சேச்சி

மெகருன்னிஸா வருவதற்கு முன் என் வாழ்க்கையில் பல பெண்கள் வந்து போயிருக்கிறார்கள். இதில் மிகவும் தைரியசாலி சேச்சி.

வாழத்துங்கலில் ஒருவருக்கு மூன்று நான்கு கடைகளிருந்தன. அதன் பின்பக்கம் ஒரு வீடு. டிரான்ஸ்போர்ட்டில் வேலை பார்க்கும் ஒருவர் அதில் தங்கியிருந்தார். அவரது மனைவி பள்ளி ஆசிரியை. வாடகை வீடு. என்னுடைய உறவினர் ஒருவரது வீடும் இந்தக் காம்பவுண்டில் இருந்தது. இந்த வீட்டில் எனக்கு நல்ல சுதந்திரமிருந்தது. வீடு கிட்டத்தட்ட காலியாகவே கிடந்தது. உறவினருக்கு ஒரு கடையிருந்தது. அவ்வப்போது ஓய்வெடுக்க மட்டும் உறவினர் இங்கே வருவார். இவரை ஓணர் என்று சொல்வார்கள். ஒருநாள் நான் இங்கு ஓய்வெடுத்துக் கொண்டிருந்தேன். எனக்கு அப்போது இருபத்திரண்டு வயதிருக்கும். ரோட்டிலிருந்துப் பார்ப்பவர்களுக்குக் கடைகளின் மறைவிலிருக்கும் வீடு கண்ணில்படாது. இது எனக்குப் பாதுகாப்பாக இருந்தது. ஓணர் மாமாவுக்கு என்னை மிகவும் பிடிக்கும். ஒரு ஸ்டெப்னிபோல் நான் பக்கத்திலேயே இருந்தேன். கடைக்குப் போகவும், சாமான்கள் வாங்கவும், இடையிடையே கடையில் அமர்ந்துகொள்ளவும் . . . திருடனைக் காவலுக்கு வைத்துவிட்டுப் போகலாம். ஏனென்றால் தான் திருடன் என்ற உணர்வு அவனுக்கு எப்போதுமே இருக்கும். இந்த விஷயத்தில் அவரை பலர் எச்சரித்ததுண்டு. ஆனால், உண்மையான திருடன் ஓணரின் மகன்தான். கடையிலிருந்து அவ்வப்போது காசு திருடுவான். என் வயதுதான். என்னைப் போல் அவனால் வேறெங்காவது போய் திருட முடியாதல்லவா? அப்பா கொடுத்தால்தானே வாங்க முடியும்?

ஒருநாள் பக்கத்து வீட்டு டீச்சர் என்னைக் கூப்பிட்டார்:

"மணியா இங்க கொஞ்சம் வந்துட்டுப்போடா."

"இதைப் பார்த்தியா?" ஒரு கடிதம். அதன் உள்ளடக்கம்: ரொம்ப ஆசையாக இருக்கிறது. ஒருயொரு தடவை மட்டும் . . . பிளீஸ் . . .

நான் சொன்னேன்: "நான் ஆறாம் கிளாஸ்தான் படிச்சிருக்கேன். ஆனால்,

எழுத்துப் பிழை வராது. இதை நான் எழுதலை. நிறைய எழுத்துப் பிழை இருக்கு."

"நீ எழுதினதா நான் சொல்லலையே."

"அப்புறம் எங்கிட்ட எதுக்குக் காட்டுறீங்க?"

"இதை உன் சொந்தக்காரன்தான் எழுதியிருக்கான் . . . ஓணரோட மவன். அவன்கிட்ட சொல்லிடு. என் ஊட்டுக்காரரு டிரான்ஸ்போர்ட் டிரைவரா இருக்காரு. ஸ்டீரிங் பிடிச்ச கை உருக்குபோல இருக்கும். நான்கூட பயந்துபோய்தான் அவர் பக்கத்தில நிப்பேன். எடுத்த உடனே கை நீட்டிடுவாரு. ஒரு பக்கத் தோள்பட்டை அப்படியே இறங்கிடும்னு சொல்லிடு." என்றாள்.

நான் சொன்னேன்: "இதை நீங்களே போய்ச் சொல்லிடுங்களேன். என்கிட்ட எதுக்காகச் சொல்றீங்க?"

"நீ திருடனாவோ கொள்ளைக்காரனாவோ இருந்துட்டுப்போ. ஆனா, உன்மேல எனக்கு நம்பிக்கை இருக்கு. உங்கிட்ட நேர்மை இல்லைன்னாலும் நெறியிருக்கு. யார்கிட்டயாவது சொல்லணும்னு தோணிச்சு, சொன்னேன்."

சேச்சி திரும்பி நடந்தாள். லுங்கியும் பிளவ்சும் டவலும் அணிந்திருந்தாள். பின்னால் ஒரு காட்சிதான் சேச்சி. வீட்டிற்குள் ஏறும்போது சேச்சி திரும்பிப் பார்த்தாள்.

புருஷன்காரன் ஃபாஸ்ட் பாசஞ்சர் டிரைவராக இருக்கிறான். தொலைதூரப் பயணம். பெரும்பாலும் பொழுது விடியும்போதுதான் வருவான். கொல்லம் - கோழிக்கோடு ரூட்டை அண்ணன் இருந்தால் வேறு யாருக்கும் கொடுக்கமாட்டார்கள் என்று சேச்சி சொல்வாள்.

மெல்ல மெல்ல இவர்களுடன் மிகவும் நெருக்கமானேன். டிரைவர் அண்ணனுக்கு என்மீது நல்ல நம்பிக்கையிருந்தது. "இவளும் பிள்ளையும் தனியாக இருக்கிறதால ஊருக்குள்ள இவன் தூங்காமயிருக்குறது நமக்கு உபகாரமாப் போயிட்டது" என்பார்.

பஸ் நீண்டகரைக்கு போகும்போதும் வரும்போதும் பாலத்தின் எதிரில் இவர் பஸ்சை நிறுத்துவார். போட்காரர்களின் வசதிக்காக. போட் அசோசியேசன்காரர்கள் நல்ல மீன் கொடுப்பார்கள். அதையும் கொண்டு

தான் வீட்டுக்கு வருவார். சேச்சி மிகவும் ருசியாக மீன்குழம்பு சமைப்பாள். அதைச் சாப்பிட்ட பிறகுதான் அண்ணன் தூங்குவார். நான் இருந்தால் என்னையும் சாப்பிட அழைப்பார். இங்கே சாப்பிட்ட இரால் குழம்புபோல் நான் வேறெங்குமே சாப்பிட்டதில்லை. எங்கள் வீட்டில் அப்போது பெரும்பாலும் பட்டினிதான்.

ஒருநாள், ஊரில் முக்கியமான ஒருவரின் மரணம். நிகழ்ந்தது. கடைகளை எல்லாம் மூடிவிட்டு நாயர்கள் இறுதிச் சடங்குக்குப் போய்விட்டார்கள். காலை மணி ஒன்பது. சேச்சி ஸ்கூலுக்குப் போகத் தயாராகிக்கொண்டிருந்தாள். நான் என்னுடைய அறையில் படுத்திருந்தேன். இடையே சேச்சி என்னை ஓரக்கண்ணால் பார்க்கிறாள். சேலையெல்லாம் உடுத்திக்கொண்டு சேச்சி அழகாக நின்றிருந்தாள். போவதற்கு சிறு தயக்கமிருப்பதுபோல் தோன்றியது. மணி ஒன்பதரை.

நான் கேட்டேன்: "ஸ்கூலுக்கு நேரமாயிடுச்சே சேச்சி?"

"நீ கொஞ்சம் இங்க வா." என்னை அழைத்தாள்.

"காலையில ஏதாவது சாப்பிட்டியா நீ?"

"சாப்பிட்டேன்."

"அவிச்ச ஆனை முட்டை சாப்பிட்டிருப்பே. எனக்கு உன்னைத் தெரியாதா? சமையக்கட்டுல புட்டும் அப்பளமுமிருக்கு, போய்ச் சாப்பிடு."

சேச்சி இன்னும் புறப்படவில்லை.

"என்னமோ தெரியலைடா, ஒரு தலைவலி. ஆங் . . . எப்பவும் ஒரே இடத்துக்குப் போறதுதானே? ஒரு சின்ன மாற்றம் வேண்டாமா . . ?"

நான் புட்டு தின்றுகொண்டிருந்தேன். சேச்சி வெளியிலிறங்கி அக்கம் பக்கங்களில் பார்த்துவிட்டு உள்ளே வந்து எச்சில் கையோடு என்னைப் பிடித்து எழச் செய்தாள்.

"உன்னைப் பார்த்தால் எனக்குப் பொறுக்கலைடா . . ."

பிறகு, இது வாடிக்கையாயிற்று. சாதாரணமாக ஸ்கூலுக்குப்போவதற்காக சேச்சி குளிப்பதற்கு முன் நடக்கும். பெண்கள் தங்களது ஆசையை

நிறைவேற்றுவதில் பயப்பட மாட்டார்கள் எனும் பாடத்தை டீச்சர்தான் எனக்குக் கற்றுத் தந்தாள். ஒருநாள், ஓணர் மாமாவின் மகன் வந்து வெளியே நின்று கூப்பிட்டான்.

"மணியன் உள்ளே இருக்கானா?"

உக்கிரத்துடன் நின்ற என் உற்சாகம் அப்படியே தணிந்துவிட்டது. சேச்சி விட மறுக்கிறாள்.

"அவன் ஊரு முழுவதும் சொல்லுவான்."

"சொல்லட்டும்." ஆனாலும் சேச்சி விடவில்லை.

"அவன் பார்த்துடுவான்."

"பார்த்து எச்சில் வடிச்சிட்டு போகட்டும்டா."

அவனுக்கு உள்ளே நுழையும் தைரியமில்லை. சிறிது நேரம் நின்றுப் பார்த்துவிட்டுப் போய்விட்டான்.

சேச்சி ஒருதடவை மாத்திரை வாங்கி வரச் சொல்லி சீட்டெழுதித் தந்தாள். நான் அப்போது நகராட்சியின் தரைவாடகை வசூலிக்கும் பணியைத் தொடங்கியிருந்தேன். அறிமுகமுள்ள ஒரு மெடிக்கல் ஸ்டோர்காரன் மாத்திரையைத் தந்தான். அது காப்பிப்பொடி நிறத்திலிருந்தது.

"ஒரு ரூபா தொண்ணூறு பைசா. வசூல் மட்டுமல்ல அப்ப இந்த வேலையும் கை வசமுண்டு இல்லையா?" என்றான்.

"அது ஏன் அப்படிச் சொல்றீங்க?" என்று கேட்டேன்.

"இது கர்ப்பம் கலைக்கிற மாத்திரைடா" என்றார்.

பின்பொரு வழக்கில் தண்டனை அனுபவித்து விடுதலையாகி வரும்போது சேச்சியின் குடும்பம் வீட்டைக் காலி செய்திருந்தது. கொல்லம் மேற்கில் வசிப்பதாக அறிந்து போக நினைத்தேன். ஊருக்குள் மணியன் திருடனல்ல, ஆனால் வெளியே எங்கு போனாலும் திருடன்தான். திருடனும் நீதிபதியும் எங்கும் எப்போதும் திருடனும் நீதிபதியும்தான். ஆகவே, வேண்டாமென்று வைத்தேன்.

ஆறேழு வருடங்களுக்குப் பிறகு ஒருநாள், கொல்லம் அர்ச்சனா தியேட்டரில் நானும் மைத்துனன் ஒருவனுமாக சினிமா பார்க்கச் சென்றோம். உள்ளே நுழையும்போது படம் ஆரம்பித்திருந்தது. இருட்டில் தப்பித் தடுமாறி சீட் பிடித்தோம். படம் ஓடிக்கொண்டிருந்தது. பான்டின் நடுவில் ஒரு கை. எதிர்பார்க்கவில்லை என்பதால் திடுக்கிட்டேன். மைத்துனன் சினிமாவில் லயித்திருந்தான். கை யாருடையதென்று பார்த்தேன். ஒரு பெண். கூர்மையாகப் பார்த்த பிறகுதான் அடையாளம் தெரிந்தது. சேச்சி! மைத்துனன் பெரிய மானஸ்தனும் ஒழுக்கவாதியும் உத்தமனுமாவான். அவன் கவனிக்கவில்லை என்றதும் தைரியம் வந்தது. அர்ச்சனா தியேட்டரில் சீட்டுகள் உயரமாக இருக்கும். பின்னாலிருப்பவர்களுக்கு முன்புற இருக்கை முழுமையாகத் தெரியாது. நல்லதாகப் போய்விட்டது. இடைவேளையின் போது அப்போது தான் பார்ப்பதுபோல்: "அய்யோ சேச்சி, சேச்சி என்ன இந்தப் பக்கம் . . ?" என்றேன்.

"அடிக்கடி வீட்டுப் பக்கம் வாயேன்" என்றாள் சேச்சி.

காலம் நகர்ந்தது. ஒருதடவை கொல்லம் மேற்கில் போயிருந்தபோது சேச்சியின் வீட்டிற்கும் போனேன்.

"அவருக்கு இன்னிக்குப் பகல் டியூட்டிதான். ஏதோ ஃபாஸ்ட் வண்டி. நீ இங்க இரு. சாயங்காலம் அவரையும் பார்த்திட்டுப் போகலாம்" என்றாள்.

அது, 1995ஆம் வருடம். 94இல் மனைவி இறந்தாள். பழி, பாவம் இன்னதென்று உணர்ந்து மனக்கட்டுப்பாடு பயின்றுகொண்டிருந்த காலகட்டம்.

"சும்மா இந்தப் பக்கம் வந்தபோது எட்டிப் பார்க்கலாம்னு தோணிச்சு." கொஞ்ச நேரம் உட்கார்ந்திருந்தேன். சாயங்காலம் சேச்சியின் ஒரே மகள் வந்தாள். இவள் குழந்தையாக இருக்கும்போது நான் தூக்கி விளையாடியதுண்டு. அமெரிக்காவில் பணியாற்றும் ஒருவனுடன் இவளுக்குத் திருமணம் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. அவளிடம் அன்பாக சில வார்த்தைகள் பேசிவிட்டு வந்தேன்.

## 60 - ஜானகி

பஸ்சில் திரும்பி வரும்போது மனதிற்குள் சேச்சியின் மகளைப் பற்றிய எண்ணம் வந்தது. இவளை விடவும் அழகாக இருப்பாள் ஜானகி. என்னுடைய விடலைப் பருவத்தில் ஜானகி அளவுக்கு என்னைக் கவர்ந்தவர்கள் யாருமில்லை. கூடையைக் கவிழ்த்து வைத்ததுபோல் தலைமுடி. ஜானகி தலைமுடியை அவிழ்த்துப்போட்டு நடந்தால்போதும் தரை சுத்தமாகி விடும் என்று ஊரிலுள்ளவர்கள் சொல்வார்கள். எண்ணெய்க் கம்பெனிகள் இவளைப் பார்த்திருந்தால் அப்போதே விளம்பர மாடலாக்கி இருப்பார்கள்.

ஒரு உறவினன் என்ற முறையிலும் அல்லாமலும் இவளுடைய வீட்டிற்கு சிறு சிறு உதவிகள் செய்து கொடுப்பேன். ஒரு சாயங்கால நேரம், ஜானகி என்னிடம் எண்ணெய் வாங்கச் சொன்னாள். வாங்கிக் கொடுத்துவிட்டு அப்படியே நின்றேன். அவள் தனியாக இருந்தாள். நான்: "மனசோட ஆசையில்லை; உடம்போட ஆசைதான். கொஞ்சம் சம்மதிப்பியா?" என்று மெதுவாகக் கேட்டேன்.

அவளுக்குக் கோபம் வந்தது: "பொறுக்கிப்பயலே என்னடா கேக்குறே? நாயே, என் வீட்டில யாராவது அறிஞ்சா உன் காலும்கையும் இருக்காது. உனக்கு எவ்வளவு தைரியம் இருக்கணும்டா எங்கிட்ட இப்படிக் கேட்கிறதுக்கு?" என்றாள்.

"சத்தம் போட்டுடாதே, இதை அப்படியே மறந்துடு" என்று சொல்லிவிட்டு வந்துவிட்டேன்.

கொஞ்ச நேரத்தில் அவளும் மற்ற பெண்களும் உள் முற்றத்தில் நான் வாங்கிக் கொடுத்த எண்ணெயில் குத்து விளக்கேற்றி நாமஜெபம் சொல்லத் தொடங்கினார்கள். விளக்குடன் சேர்ந்து என்னுடைய துக்கிரித்தனமும் எரிந்து கொண்டிருந்தது. நேரம் இருட்டியது. சமையல்கட்டுப் பக்கம் போனேன். வேலையிலிருந்த அவளது அம்மா, எதையோ எடுப்பதற்காகத் திரும்பினாள். நான் ஜானகியின் படுக்கையறைக்குள்.

தனியாக இருக்கும் யாரும் எப்போதுமே வெளிக்கதவைத் திறந்து வைக்கக் கூடாது. இதோ நான் இங்குதானே நிற்கிறேன் என்று நினைக்கலாம். நூறு மீட்டர் தூரத்தைப் பத்து நொடியில் ஓடிக் கடந்துவிட முடியுமென்பது நினைவிருக்கட்டும். குறைந்தது ஐந்தோ ஆறோ நொடிக்குள் ஒருவனால் படுக்கையறைக்குள் நுழைந்துவிட முடியும். இப்படியான எத்தனை நொடிகள் நாம் அங்குமிங்கும் திரும்புவோம் என்பதை நினைத்துப் பாருங்கள். ஒருவன் ஒருமணி நேரம் சமையலறையில் நிற்கிறான் என்றால் அதில் கண் திரும்புகிற வேளைகளில் ஒரு ஐம்பது திருடர்களாவது வீட்டினுள் நுழைந்துவிட முடியும்.

அப்படியே அவளது கட்டிலின்கீழ் சுருண்டுகொண்டேன். முன்பெல்லாம் பெண்கள் பாதுகாப்பை உறுதி செய்வதற்காக, கட்டிலின்கீழ் குனிந்துப் பார்த்துவிட்டுதான் படுப்பார்கள். இது தேவையும்தான். தூங்கப்போகும்போது அறையை சோதனையிடுவது நல்ல பழக்கம். இதைச் செய்யாமலிருப்பது தன்னம்பிக்கைதான் என்றால் ஜானகிக்கும் அந்த நம்பிக்கை இருந்திருக்கலாம்.

படிக்க வேண்டியதை எல்லாம் படித்து, இரவுச் சாப்பாட்டையும் முடித்துவிட்டு பத்து மணிக்கு அவள் படுக்கையறைக்கு வருவாள். எனக்கு இந்த விஷயங்கள் எதுவும் தெரியாது. நான் ஏழுமணிக்குக் கட்டிலின்கீழ் படுத்தவன். சுக நித்திரையிலாழ்ந்தேன். மூச்சுக்கட்டுப்பாடென்பது திருடன்களின் இயல்பான குண விசேஷம். சிறு சத்தமோ கொட்டாவியோ குறட்டையோ இல்லாமல் அவர்களால் தூங்க முடியும். கடிகாரத்தில் காலை ஏழுமணிக்கு அலாரம் வைத்துவிட்டுத் தூங்குபவர்கள், அது பலமுறை அடித்த பிறகுதான் விழிப்பார்கள். முக்கியத் தேவைகளோ பயிற்சியோ இல்லையென்றால் அணைத்துவிட்டு மீண்டும் தூங்குவார்கள். ஆனால் முதல்முறையாக, மறுநாள் நான்கு மணிக்கு கண்டிப்பாக எழுந்திருக்க வேண்டிய தேவையிருந்து, மனதிற்கு இதனை அறிவுறுத்திவிட்டுத் தூங்கச் சென்றால் மிகச் சரியாக, நான்கு மணிக்குச் சில நிமிடங்களுக்கு முன்பே விழித்துக்கொள்ள இயலும். வெட்கமில்லாமல் நான்கு மணிக்கு அலாரம் அடிக்கும். தூங்குகிற ஒரு மனிதனால் எப்படி இவ்வளவு சரியாக விழித்துக்கொள்ள முடிகிறது என்றால் இதற்குப் பதிலில்லை. ஒரு திருடனைப் பொறுத்தவரைக்கும் இது அவனது உயிர் வாழ்தலுடன் தொடர்புடையது.

பத்தரை மணியென்று மனத்திற்கு அலாரம் கொடுத்துவிட்டுத் தூங்கிய நான் மிகச் சரியாக விழித்துக்கொண்டேன். சுற்றிலும் கூரிருட்டு.

மெதுவாகக் கட்டிலில் ஏறினேன். ஜன்னல் வழியே சிறு நிலவு வெளிச்சம் வந்தால் பரவாயில்லை போலிருந்தது. மரஜன்னல். ஒன்றுமே தெரியவில்லை. அவளது மெல்லிய சுவாசக் காற்றின் வாசம் மனதை மயக்கியது. டார்ச் லைட்டை எரியவிட்டு கீழே வைத்தேன். இப்போது அவளைப் பார்க்க முடிந்தது. நிறைகுடம்போல் அழகு ததும்பத் தூங்குகிறாள். இடது கையால் வாயை அமுக்கிப் பிடித்தேன். திடுக்கிட்டு விழித்தாள். என்னைக் கண்ட பயத்தில் அவளது விழிகள் மேலும் அகன்றன.

"நான் இப்ப கையை எடுக்கப்போறேன். அலறவோ கூப்பாடு போடறதாகவோ இருந்தா முதல்ல புரிஞ்சுக்க. பக்கத்து வீடுகள்ல உள்ளவங்க இன்னும் தூங்கியிருக்க மாட்டாங்க. எல்லாரும் ஓடி வருவாங்க. நான் ஒரு பொறுக்கிப்பயலுங்குறது உனக்கே தெரியும். எனக்குன்னு மானமோ கௌரவமோ கிடையாது. புரிஞ்சுக்க, நான் இப்ப வெளியில இல்லை. உன்னோட படுக்கையறைக்குள்ள இருக்கேன். உள்பக்கம் தாழ்ப்பாளிருக்கும் போது என்னால எப்படி நுழைய முடியும்? ஏற்கனவே நுழைஞ்சிட்டான்னு நீ சொன்னா யாரும் நம்பப்போறதில்லை. உன் வீட்டில உள்ளவங்ககூட நம்ப மாட்டாங்க. நீ கல்யாணமெல்லாம் பண்ணிட்டுப் பெரிய பொறுப்புக்கு வரப்போறவ. உன்னோட வாழ்க்கையை பாழாக்குறதும் பாழாக்காம இருக்கறதும் இப்ப உன் கையிலதான் இருக்கு."

சொல்லிவிட்டு மெதுவாக கையை எடுத்தேன். அவள் பேசாமல் அசைவற்றுப் போய்க் கிடந்தாள். நான் சொன்னேன்: "நடக்கபோறதை ஒரு கனவாக மட்டும் நினைச்சுக்க. வாழ்க்கைக்கும் கனவுக்கும் எந்த சம்பந்தமுமில்லை. உடுப்பைக் கழற்று" என்றேன். அவள் அசையவில்லை. "சரி நானே கழற்றுறேன்" என்றதும் வேண்டாம் என்று சொல்லிவிட்டு மேலாடைகளை நீக்கினாள். "பயமாயிருக்கு" என்று சொல்லி, கைகளால் கண்களைப் பொத்திக்கொண்டாள். கைகளைப் பிடித்து விலக்கிய பின்பும் கண்கள் அடைந்தே இருந்தன.

பத்து நிமிடத்தில் விகாரங்களைத் தணித்துக்கொண்ட அனுபூதியில் மெல்ல அவளது பக்கவாட்டில் சாய்ந்தேன். நெற்றியில் முத்தமிட்டு வடிந்து கொண்டிருந்த கண்ணீரைத் துடைத்துவிட்டு மெல்ல எழுந்தேன். அப்போது அவள்: "எதுக்கு மோசமானவளுங்ககிட்ட போறே? ஏதாவது நோய் வந்துடும். இனிமேல் போவியா?" என்று கேட்டாள்.

நான் பதில் சொல்லவில்லை.

"இனி நீ திருடவும் போகக் கூடாது. நான் அப்பாகிட்ட சொல்லி உனக்கு ஏதாவது வேலை வாங்கித் தர்றேன். மோசமான பொண்ணுங்ககிட்ட இனி போவியா?"

"முயற்சி பண்றேன்." அவள் என் பக்கம் சாய்ந்தாள். கட்டியணைத்தேன். மீண்டும் முக்கால் மணி நேரம். ஆவேசங்கள் தணிந்து அமைதி ஏற்பட்டது.

பிறகு, அவளே எழுந்துக் கதவைத் திறந்து தந்தாள். சமையலறைக் கதவையும் திறந்தாள். வெளியே விழுங்கக் காத்திருக்கும் கூரிருட்டினுள் கரைந்து போகப் புறப்பட்டதும் கையைப் பற்றினாள். ஏறிட்டுப் பார்த்தேன். பனங்குலைபோல் குலைத்துக்கிடந்த தலைமுடி. அகன்ற விழிகள். பற்றிய கையில் அழகழகான விரல்கள். விரல்களைப் பிரித்து விலக்கினேன்.

"இனியும் வரணும்" என்றாள்.

"மாட்டேன்" என்று சொல்லிவிட்டு இருளில் புதைந்து, மதில் சுவரேறிக் குதித்து ரோட்டுக்கு வந்து, திரும்பிப் பார்த்தேன் அவள் பயமில்லாமல் அங்கேயே நின்றிருந்தாள். பிறகு, மெல்ல உள்ளே சென்றாள். தொடர்ந்து, கதவைத் தாளிடும் சத்தம் மிக மெதுவாகக் கேட்டது.

பாவம் செய்துவிட்டதான உணர்வுகள் எதுவும் அப்போது ஏற்படவில்லை. பிறகு, இயன்றவரைக்கும் அவளது கண்ணில் படுவதைத் தவிர்த்தேன். ஓரிரு வருடங்களுக்குப் பிறகு, பெரிய உத்தியோகத்திலிருக்கும் ஒருவரைத் திருமணம் செய்துகொண்டாள். இரண்டு மூன்று குழந்தைகளும் பிறந்தன. அவர்களும் இன்று மிகப் பெரிய பொறுப்புகளில் இருக்கிறார்கள். இடையே எப்போதாவது பார்ப்போம். பரிவுடன் ஏதாவது கேட்பாள். எந்தக் களங்கமுமின்றி தம்பியிடம் கேட்பதுபோல்: "மணியா . . . இப்ப என்னடா பண்றே?" என்பாள்.

இதை விடவும் மிகப் பெரிய பாவச்செயல் ஒன்றைச் செய்திருக்கிறேன். என் சுயசரிதையில் இதுவொரு கறுப்பு அத்தியாயம். திருட்டின்போது நான் இழைத்துவிட்ட மிகக் கொடூரமான அக்கிரமச் செயல்.

திருடச்செல்லும் இடங்களில் பெண்ணுடல்களைக் காண நேர்வது இயல்பான விஷயம்தான். தூங்கும்போது ஆடைகள் அங்குமிங்கும் விலகவே செய்யும். வெளிநாட்டு இந்தியர்கள் அதிகம் வாழ்கிற

கிராமத்தில் ஒரு வீட்டில் நுழைந்தேன். பொருட்கள் அதிகமொன்றும் கிடைக்கவில்லை. கிடைத்தக் கொஞ்ச நஞ்சம் துணிவகைகளை அள்ளி மூட்டைக் கட்டினேன். பெண்கள் அணிந்திருக்கும் நகைகளை நான் திருடுவதில்லை. அறையில் ஒருத்தி தூங்கிக்கிடந்தாள். முப்பத்தைந்து வயதிருக்கும். திடீரென்று சொறிந்துகொண்டாள். நான் துணிகளை பண்டல் போடுவதில் குறியாக இருந்தேன். ஒவ்வொரு முறை சொறியும்போதும் உடுத்தியிருந்தத் துணி மேலே உயர்ந்துகொண்டிருந்தது. தூங்குபவர்களையும் இப்படி நடிப்பவர்களையும் திருடன்களால் இனம் கண்டுகொள்ள முடியும். இவள் நடிக்கிறாள். இதைப் புரிந்துகொண்டதும் ஒரு குறுநகையுடன் என்னை ஒரு குதிரையாக நினைத்து ஒரே தாவில் அடுத்த கணம் மதிலுக்கு வெளியே நின்றேன். திடீரென்று அந்த அறைக்குள் வெளிச்சம் படர்ந்தது. இச்சாபங்கத்துடன் அவள்.

வேறொரு வீட்டில் ஒரு பெண் நிர்வாண கோலத்தில் தூங்குகிறாள். எனக்குக் கோபம் வந்தது. ரோட்டோர மதிலில் ஒருவன் ஏறி நின்றால் இவள் படுத்திருப்பது தெரியும். நிலவு வெளிச்சமுமிருக்கிறது. இவர்கள் என்னென்ன மனச்சிக்கல்களுக்கு ஆட்பட்டிருக்கிறார்களோ? பிரச்சினைகள் இல்லையென்றால் ஜன்னல்களை மூடியிருப்பார்கள். தூக்கத்தில் ஆடைகளை அவிழ்க்கும் பெண்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்படியான ஒருத்தியாக இருக்குமோ? வேலைகள் திருப்தியாக முடிந்து விட்டதில் சற்று உற்சாக மனநிலையுடனிருந்தேன். தேவையான ஆபரணங்களும் கிடைத்திருந்தன. ஆனாலும் இவளை அப்படியே விட்டுவிட்டுப் போக மனமில்லை. ஒருவேளை வேறு வகை நோயாக இருந்தால் இன்று அதைத் தீர்த்து வைக்க வேண்டும். திருடன் சிற்சில உபகாரங்களும் செய்ய வேண்டாமா? இதுபோன்ற மனநோய்களுக்கு அதிர்ச்சிதான் வைத்தியம். எப்படி அதிர்ச்சி கொடுப்பது? வெளியே நீளமான ஒரு மட்டை கிடந்தது. எடுத்து ஜன்னல்வழியாக உள்ளே விட்டு அவளது ஜனனேந்திரிய பாகத்தில் மெல்லக் குத்தினேன். மாதாவே என்றொரு அலறல் சத்தம் கேட்டது. திருடன் மதிலுக்கு வெளியில்.

தங்கவர்ண அழகி: என்னுடைய சுயசரிதையின் கறுப்பு அத்தியாயமான இதைச் சொல்வதா வேண்டாமா என்ற தயக்கமும் இருந்தது. மிகப் பெரிய அக்கிரமத்தைச் செய்திருக்கிறோம் என்ற பாவ சிந்தனையெதுவும் அன்று ஏற்படவில்லை. வயதும் அதுதான். இன்று அது குற்றவுணர்ச்சியாக மாறியிருக்கிறது. இதைத் தவிர்த்தால் சுயசரிதை முழுமையாகாது.

ஆகவே, சொல்கிறேன்:

இந்தச் சம்பவம் நடந்த இடத்தைக் குறிப்பிட விருப்பமில்லை. அந்தப் பகுதியில் வாழ்பவர்களை இது அவமதிப்பதாக அமைந்துபோகும். ஒரு வீட்டினுள் நடுச்சாமத்திற்குப் பின் நுழைந்தேன். மேல்தளத்தில் இரண்டு படுக்கையறைகளும் கீழ்தளத்தில் இரண்டு படிக்கையறைகளுமுள்ள ஒரு வீடு அது. நான் இறங்கியது மேல்தளம். இதற்கான காரணம் அங்கே சிறு வெளிச்சம் தெரிந்ததுதான். யாராவது இருந்தால் கவனித்துதான் அடுத்த நடவடிக்கையை மேற்கொள்ள முடியும். அறை திறந்து கிடந்தது. டேபிள் ஃபேன் ஓடும் சத்தம் கேட்டது. எரிந்துகொண்டிருந்த டேபிள் லைட்டின் வெளிச்சம் ஒரு இளம் பெண்ணின் முகத்தில் பதிந்து கொண்டிருந்தது. அழகே உருவான பெண்ணொருத்தி. ஃபேன் காற்றிலும் அவளது மேலுதட்டின்மீதுள்ள பொன்னிற மென்ரோமங்களில் லேசாக வியர்வைத் துளிர்த்து நின்றது. மார்பின்மீது ஒரு புத்தகம். வாசித்தபடியே தூங்கியிருப்பாள். மெல்லக் கீழிறங்கிய எனது கண்கள் அதிர்ச்சியால் அசைவற்று நின்றன. இவ்வளவு அழகிய பொன்னிற ரோமப் பகுதியை நான் பார்த்ததில்லை. என்ன செய்வதென்று ஒரு நிமிடம் யோசித்துவிட்டு மெதுவாகக் கட்டிலிலேறி இடது கையால் அவளது வாயைப் பொத்திப் பிடித்தேன். முகத்தில் வேர்வை முத்துக்கள். விகாரம் மேலிட்டு என் கைகளும் வேர்த்தன. அவளது திறந்தக் கண்கள் பயத்தில் உறைந்தன. உருவிய கத்தியை அவளது கழுத்தில் வைத்துவிட்டுச் சொன்னேன்: "அசைஞ்சாக் கொலை பண்ணிடுவேன்." அசையாமல் கண்களை மூடிக்கொண்டாள். அவளது நெஞ்சுத் துடிப்பு மெல்ல மெல்லத் தாளக்கிரமத்திற்கு வந்தது. நான் விலகிக்கொண்டேன். அவள் பக்கவாட்டில் சாய்ந்தாள். அந்த வீட்டிலிருந்து நான் வேறு எதையும் திருடவில்லை.

பிராயச்சித்தம்: இந்த மிகப் பெரிய துரோகச் செயலுக்குப் பிராயச்சித்தம் செய்வதற்கான வாய்ப்பு வேறொரு வடிவத்தில் கிடைத்தது. நான், திருட்டில் பிரகாசித்துக் கொண்டிருந்த காலமது. இளம் வயது. கை நிறைய பணம். தீர்ந்ததும் அடுத்தத் திருட்டு. திருவனந்தபுரம் மெடிக்கல் காலேஜ் பகுதியில் அப்போது தங்கியிருந்தேன். ஓரளவு பெரிய லாட்ஜில். பகல் நேரம். நான்தான் பகல்பொழுதுகளை வெறுப்பவன் ஆயிற்றே. இந்நேரங்களை நான் ஒறட்டியும் கறியும் சாப்பிட்டோ, குடித்தோ போக்குவேன். பிற்பகல் மூன்று மணியிருக்கும். இரவுப் பணிக்காக மனதளவில் தயாராகத் தொடங்கினேன். இதற்கான வெள்ளோட்டமாக ரூம்பாய் மதுவும் தண்ணீர் பாட்டிலும் கொண்டு வந்தான். நான் ஒரு

பெரிய கம்பெனியின் மெடிக்கல் ரெப்ரெசென்டேடிவ் என்ற விஷயம் இவனுக்குத் தெரியும். என் பேச்சையும் நடையுடை பாவனைகளையும் பார்த்தால் இதைவிட நல்ல வேலையிருப்பவன் என்று சொன்னாலும் நம்பிவிட வேண்டியதுதான்.

மெடிக்கல் காலேஜ் பகுதியில் ரூம் எடுப்பதில் பல நன்மைகளுண்டு. பெரிய அளவில் யாரும் யாரையும் விசாரித்துக்கொண்டிருக்க மாட்டார்கள். இன்றும் நாளையும் தங்கியிருப்பேன்; இந்தா அட்வான்ஸ் என்று சொல்லிக் காசைக் கொடுத்தால் பிறகு நம்முடைய எதிலும் லாட்ஜ்காரர்கள் தலையிட மாட்டார்கள். பெண்கள் யாராவது உடனிருந்தாலும் அவர்களுக்குப் பிரச்சினை இல்லை. ஆஸ்பத்திரியில் நோயாளிக்கு உதவியாக வந்த உறவினராக இருக்கலாம். இரவு எவ்வளவு தாமதமாகவும் வரலாம். பொதுவார்டில் நோயாளியுடன் இருந்துவிட்டு வருவார்களாக இருக்கும். கொஞ்சம் முதுகைச் சாய்க்க வந்திருக்கலாம். சந்தேகத்திற்குரிய வருகைகள்கூட இப்படியான பதிலையும் உள்ளடக்கியதாகவே இருக்கும்.

நோயாளி மெடிக்கல் காலேஜுக்கு வருவதாக இருந்தால் நோய் அதிகரித்திருக்கலாம். இந்நிலையில் உறவினரின் மனநிலையும் வருத்தத்துடனிருக்கும். ஆகவே, இதுபோன்ற பிரச்சினைகளை யாரும் கண்டுகொள்ள மாட்டார்கள். எந்த நடுச்சாமத்திலும் எந்த லாட்ஜுக்கும் வரலாம், போகலாம். ஆகவே, மெடிக்கல் காலேஜ் பகுதிகள் பொதுவாக, சமூக விரோதிகளின் கூடாரமாக இருக்கும். அதில் மணியன்பிள்ளைகளும் விபச்சாரிகளும் கூட்டி விடுபவனும் இருப்பார்கள். அவசரச் சிகிச்சைகளுக்காக நகைகளை வாங்கி உடனடியாகப் பணம் கொடுக்கும் கொள்ளை லாபக் கும்பல்களும் இருக்கும். இப்படியான, பல சாக்கடைகள் ஒன்று சேருமிடம் மெடிக்கல் காலேஜ் பகுதிகள். இதை விட்டால் இத்தகைய வசதிகளுக்குப் பேர்பெற்ற இடம் குருவாயூர் கோயில். இது முன்னதை விடவும் பாதுகாப்பான இடம். மதத்தின் பாதுகாப்புமுண்டு. மத உணர்வுகள் புண்பட்டு விடுமென்பதால் சரியான தகவல்கள் இல்லாமல் எந்தப் போலீசாரும் எந்த லாட்ஜையும் நெருங்கமாட்டார்கள். ஆகவே, பாலியல் தொழில் இங்கே உச்சநிலைப் பரவசத்துடன் நடக்கும். சரி, குடிப்பதற்கான தயாரிப்புகளில் ஈடுபட்டிருந்த ரூம்பாய் என் முகத்தைப் பார்க்காமல் சொன்னான்: "அடுத்த அறையில ஒரு சேச்சி தங்கியிருக்கா."

"அதுக்கு நான் என்ன பண்ணணும்?"

"சாரைப் பார்க்கணும்னு விரும்புறா."

"வந்து எட்டிப் பார்த்துட்டுப் போகச்சொல்லு."

"அப்படிப் பார்த்தாப் போதாது."

"பிறகு?"

"எதுவோ சொல்லணுமாம்."

"வரச்சொல்லு" என்றேன். அடுத்த ஐந்து நிமிடத்தில் அவள் வாசலில் நின்றாள். முகத்தில் பரிதாபம் கூடுகட்டிக் கிடந்தது. சேலைத் தலைப்பை விரலில் சுற்றிக்கொண்டிருந்தாள். மெலிந்த உடல்வாகு. இருபத்தைந்து வயதிருக்கும். அழகாக இருந்தாள். கொஞ்சம் கழுவித் துடைத்து எடுக்க வேண்டும். தலை நிறைந்த கூந்தல், சீவியொதுக்கப்படாமல் கலைந்துக் கிடந்தது. இப்படியான தலைமுடிகளை நான் பலருக்குக் கட்டிக்கொடுத்திருக்கிறேன்.

நான் கேட்டேன்: "என்ன விஷயமா என்னைப் பார்க்கணும்?"

பதிலில்லை. "சரி உள்ள வா." என்றேன்.

அவள் அக்கம்பக்கம் பார்த்துவிட்டுத் தயக்கத்துடன் உள்ளே வந்தாள்.

"சரி சொல்லு, என்ன விஷயம்?"

அவள் என்ன சொல்வதென்று தெரியாமல் நிற்கிறாள். இதெல்லாம் வெறும் பாவலாதான். இதைப்போல் எத்தனை கேசுகளைப் பார்த்தவன் நான்.

"எனக்கு . . . எனக்கு . . . கொஞ்சம் ரூபாய் வேணும்."

"நான் அடகுப் பிடிக்கிறவனுமில்லை. வட்டிக்காரனுமில்லை."

"இல்லை, நான் இங்கே நாலு நாளா தங்கியிருக்கேன். புருஷனை ஆஸ்பத்திரியில அட்மிட் பண்ணியிருக்கேன். ரூம்பாய்தான் சொன்னான். சாரைப் போய்ப் பார்னு."

இதுபோல் பலரைக் கண்டவன் நான். அவளுடைய உதடுகள் விதும்ப

ஆரம்பித்தன. இனி ஏதாவது பேசினால் அழுதுவிடுவாள்போலிருந்தது. இதைவிட திறமையான நடிகைகளையும் பார்த்திருக்கிறேன்.

ஒரு வருடத்திற்கு முன் இதே மெடிக்கல்காலேஜ் பகுதியில் நடந்த மற்றொரு சம்பவம்: அந்தி மயங்கும் நேரம். நல்லதொரு ஆபரேசனை நிகழ்த்திக்காட்டுவது போன்ற பெரிய விஷயங்களைச் சிந்தித்தபடி நடந்துகொண்டிருந்தேன். மெடிக்கல் ஷாப்பின் அருகிலுள்ள ஒரு குறுகிய சந்திலிருந்து ஸ் . . . ஸ் . . . சத்தம். நான் அங்கே சென்றேன். ஒரு பெண். பெரிய அழகியெல்லாம் இல்லை.

"என்ன விஷயம்?"

"என் புருஷன்காரன் உடம்புக்கு முடியாம இருக்கார் . . ."

"நான் அவனை எதுவும் பண்ணலியே."

"இல்லை . . ."

"இல்லேன்னா, என்னை எதுக்காகக் கூப்பிட்டே?"

"மூணு நாளைக்க ஒருவாட்டி ரத்தம் கொடுக்கணும்."

"கொடு. நானா வேண்டாண்ணேன்."

"ரெண்டாயிரம் ரூபா ஆகும்."

"சரி?"

"என் உடம்பைப் பயன்படுத்திட்டு, நீங்க விரும்பறதைக் கொடுங்க."

எனக்குக் கோபம் வந்தது: "பொலயாடி மவளே . . . உன்னை எனக்குத் தெரியாதுன்னு நினைச்சியா? உன்னை நான் தம்பானூர்ல பார்த்திருக்கேண்டீ." மெல்ல அவள் இருட்டினூடே பின்வாங்கினாள்.

இந்த அளவிற்கு வேதனைக்குரிய பிறவிகள் இருக்க முடியாது. நிர்க்கதியால் வஞ்சனையால் வடிவம்பெற்ற மனித உருக்கள். சமூக நிந்தனைக்கும் ஏச்சுக்கும் பேச்சுக்கும் வடிகால்களாக இருப்பவர்கள். எங்களைப் போன்ற திருடன்களை விடவும் படுமோசமான பிறவிகள்.

அதிலொருத்திதான் இவளும். ஊர்வசியை விடவும் உயர்ந்தபட்ச விருதுக்கு அருகதையுடையவள்.

நான் சொன்னேன்: "எனக்கு அதுக்கெல்லாம் நேரமில்லை. நான் ஒரு மெடிக்கல் ரெப்பு."

"ரூம் பாய் சொன்னான்."

"நான் நைட்லதான் கிளையன்ட்சை கன்சல்ட் பண்றது வழக்கம். வேலை இருக்கு. என்ன விஷயம்னு சொல்லிட்டு சீக்கிரமா இடத்தைக் காலி பண்ணு."

அவள் ஏதோ ஒரு பெரிய நோயின் பெயரைச் சொல்லிவிட்டு அதே மூச்சில் தொடர்ந்தாள்: "சாப்பிட முடியாது. டியூப் போட்டிருக்கு. எந்த வழியுமில்லை. தினமும் 150 ரூபாய்க்கு இஞ்செக்ஷன் போடணும். ராத்திரி ஏழு மணிக்கு முன்னால போட்டிருக்கணும்."

"ஆங் . . . சரி, ஒண்ணு பண்ணு. ஒரு ஆறு மணி சுமாருக்கு நல்லாக் குளிச்சி சுத்தப் பத்தமா வா."

மிகப் பெரிய ஆறுதலுடன் அவள் வெளியே போனாள்.

நான் குடித்துவிட்டுப் படுத்துத் தூங்கினேன். ஆறு மணிக்கு கதவைத் தட்டும் சத்தம். திறந்ததும் அவள் நிற்கிறாள். கூந்தல் ஈரம் இன்னும் காயவில்லை. துணியை மாற்றவில்லை. "துணியை மாற்றலையா?" என்று கேட்டேன்.

"மாற்றி உடுக்குற சேலை, இன்னும் உலரலை."

பெரிய திருட்டுக் கழுதையாக இருப்பாளோ? சரி அதையும்தான் பார்த்துவிடலாம். நான் பேக்கைத் திறந்து அதிலிருந்து இரண்டு புதிய சேலைகளை எடுத்துப் படுக்கையிலிட்டேன்.

"போய் உடுத்திட்டு வா."

"வேண்டாம் . . ."

"சும்மா பாவலா காட்டாதே . . ."

சேலையுடன் அவள் பாத்ரூம் பக்கம் போனாள். மிச்சமிருக்கும் சேலையில் ஆழ்ந்தது என் மனம். திருடப்போன இடத்தில் கிடைத்த இந்தச் சேலைகளை என் சகோதரிகளுக்குக் கொடுத்தபோது வாங்கவில்லை: "எங்களுக்கு வேண்டாம்; போலீஸ் வந்து கேட்டால் அவிழ்த்துக்கொடுக்க வேண்டியதாயிடும். திருட்டுப் பொருள் எங்களுக்குத் தேவையில்லை" என்று சொல்லிவிட்டார்கள்.

நான் கோபத்துடன் சொன்னேன்: "நான் ஏதாவது வேசிகளுக்குக் கொடுப்பேன்."

"அதுக்கு ரெண்டு சேலை பத்தாதே." என்றாள் ஒருத்தி.

அதிலொன்றுதான் இது. அவள் அதை உடுத்திக்கொண்டு வந்தாள்.

"உட்கார்." கட்டிலில் ஓரமாக உட்கார்ந்தாள்.

"உனக்குச் சொந்தக்காரங்க யாருமில்லையா? எல்லாவனும் செத்துத் தொலைஞ்சுட்டானுங்களா?"

"நான் பந்தளத்தில பிறந்தவ."

"பந்தளத்தில பிறந்தாப் பந்தங்கள் இருக்காதாமா?"

"நான் காதலிச்சுக் கல்யாணம் பண்ணிக்கிட்டவ. வசதியான குடும்பத்தில உள்ளவ. கீழ்ச்சாதியில பிறந்த, ரப்பர் வெட்டுறவர்கூட ஓடியாந்துட்டேன் . . . வீட்டுக்காரங்க கை விட்டுட்டாங்க. உடனே போயிடலாம்னுதான் வந்தோம். இங்க வந்த பிறகுதான் நோய் அதிகமாயிட்டது. எனக்கு இங்க யாருமில்லை."

"இப்படி, புருஷன் மோசமான நிலைமையில இருக்குறதா இங்கே நிறைய பேர் சொல்றாளுங்க."

அவளது கண்கள் நிறைந்தன. பார்வையைத் தாழ்த்தியபடியே உட்கார்ந்திருந்தாள்.

"அவளுங்க உன்னைவிட அழகா அழுதுக் காட்டுவாளுங்க."

கண்களைத் துடைத்துவிட்டு நிமிர்ந்துப் பார்த்தாள்.

"ஏதாவது சாப்பிட்டியா?"

"ஏழு மணிக்கு வார்டுக்குப் போகணும்."

"வார்டுன்னா எந்த லாட்ஜோட கோடு வேர்டு?"

பதில் இல்லை. மத்தியானம் வாங்கிய பிரியாணி இருந்தது.

"அதை எடுத்துச் சாப்பிடு." என்றேன்.

"சீக்கிரமாக முடிஞ்சா . . ."

"மணி இப்ப ஆறுதானே ஆகுது. அது ஒரு பத்து நிமிட வேலைதான்."

பிரியாணிப் பொட்டலத்தை அவிழ்த்ததைத்தான் பார்த்தேன். மூன்றே நிமிடத்தில் அதை நக்கித் துடைத்தாள்.

"இதுக்கு முன்னாடி நீ பிரியாணியைப் பார்த்ததே இல்லையா?" நான் கேலி செய்தேன்.

பேப்பரை மூலையிலிருந்த வேஸ்ட் பாக்சில் போட்டுவிட்டு வந்து கையைக் கழுவிவிட்டுக் கேட்டாள்: "காசை இப்ப தருவீங்களா முடிஞ்ச பிறகா?"

"எவனாவது ஏமாற்றிட்டானோ?"

வேதனையுடன் ஆமாம் என்று தலையசைத்தாள்.

நான் பாக்கெட்டைப் பார்த்தேன். ஆகமொத்தம் 175 ரூபாய்தான் இருக்கிறது. வழக்கம்போல் லாட்ஜில் கொஞ்சம் அதிகமாகவே அட்வான்ஸ் கொடுத்திருந்தேன். சில நேரங்களில் இரண்டு மூன்று நாட்கள்வரை தங்க வேண்டியதாகி விடும். கையிலுள்ள பணம் தீர்ந்து போய்விடக்கூடும் என்பதால் ஒரு முன்னெச்சரிக்கை. 150 ரூபாயை எடுத்துக் கட்டிலில் போட்டேன். அவள் அதையெடுத்து சேலைத்தலைப்பில் இரண்டுபேர் சேர்ந்தும் அவிழ்க்க முடியாதபடி முடிந்து வைத்துவிட்டு கட்டிலில் படுத்தாள்.

"நீ தூங்கவா போறே?" என்று கேட்டேன். அவள் சந்தேகத்துடன் எழுந்து உட்கார்ந்தாள்.

"நான் எத்தனாவது ஆள்? கணக்குகள்லாம் எப்பவோ கடந்திருக்கும். இல்லையா?"

அவள் பதில் சொல்லவில்லை. "கணக்கு சொல்லமாட்டேன்னா காசைத் தந்துடு" என்றேன்.

"பதினொண்ணு." கண்களைத் திறக்காமலேயே பதில் சொன்னாள்.

"மூணே நாள்ல பத்து பேரா?" பதில் இல்லை.

நம்பவா வேண்டாமா என்ற நிலையில் நான். இவள் சொல்வது உண்மை என்றால் . . .

"எனக்கு இப்ப மூடில்லை. நீ எழுந்திருச்சிப் போ" என்றேன்.

அவளது மூடிய கண்களிலிருந்து கண்ணீர் வெளியே வந்தது.

நான் சொன்னேன்: "நீ சொல்ற புருஷன் கதையில எனக்கு நம்பிக்கையில்லை. ஆனா, ஒருவேளை அது உண்மையா இருந்தா பாவம் செய்ததாயிடும். இதைவிடக் கொடிய பாவமெல்லாம் செய்தவன்தான். இனிமேல், தெரிஞ்சு அதையெல்லாம் செய்ய விரும்பலை.

உண்மையாக இருந்தாலும் நீ செய்யிறது சரியில்லை. இதைவிட பிச்சையெடுக்கலாம். இல்லைன்னா அஞ்சு ரூபாய்க்கு விஷம் வாங்கிக் கொடுத்து அவனைக் கொன்னுடு."

அவள் சேலைத் தலைப்பால் முகத்தை மறைத்துக்கொண்டு அழுதாள்.

"காசு கிடைச்சாச்சில்லே? இடத்தைக் காலி பண்ணு . . . இந்தா இந்தச் சேலையையும் எடுத்துக்க" என்றேன்.

அவள் நம்பிக்கை வராமல் நின்றிருந்தாள்.

"போடீ இங்கிருந்து . . . போடீங்கறேன்ல . . ?" நான் கை ஓங்கினேன். அவள் வேகமாகக் கதவைத் திறந்தாள்.

மனதிற்குள் சொல்லிக்கொண்டேன்: "பெரிய திருடியா இருப்பா போலிருக்கு."

திடீரென்று மனதிலொரு மின்னல். வக்கிரப் புத்தி வேலை செய்தது. ஒரு திருடனால் மிக எளிதாக போலீஸ் வேலை பார்க்க முடியும். அவள் சொன்னது உண்மைதானா என்று அறிய வேண்டும்.

உடனடியாக வேஷத்தைக் கலைத்துவிட்டு, லுங்கி பனியனுக்கு மாறினேன். நோயாளியின் உதவியாளன்போல் ஒரு டவலை எடுத்துத் தோளிலிட்டேன். வேகமாகக் கீழே வந்தேன். அவள் தொலைவில் நடந்துகொண்டிருந்தாள். வேகமாகப் பின்தொடர்ந்தேன். அவள் ஒரு மெடிக்கல் ஸ்டோரில் ஏறினாள். அவளை நெருங்கிவிட்டேன். கையில் வைத்திருந்ததைக் கடைக்காரனிடம் காட்டி மருந்து வாங்கினாள். நூற்றிநாற்பத்தைந்து ரூபாயும் சில்லரையும். சேலைத் தலைப்பில் முடிந்து வைத்திருந்த பணத்தைச் சிரமப்பட்டு அவிழ்த்துக்கொடுத்தாள். பிறகு ஆஸ்பத்திரியின் மெயின் கேட்டு வழியாக உள்ளே போனாள். ஜாக்கெட்டில் வைத்திருந்த கார்டை எடுத்து நீட்டினாள். செக்யூரிட்டி மிகவும் விறைப்பானவன். யாரோ கெஞ்சிக் கேட்டும் விட மறுக்கிறான். "இவனுகளுக்கு ரெண்டு கொடுக்கிறதுக்கு ஆணாப்பொறந்தவன் யாருமில்லைபோலிருக்கு இங்கே" என்று நினைத்துக்கொண்டு நிற்கவும் அவன் தலையைக் குனிந்து நிமிர்வதற்குமிடையே நான் உள்ளே. அவளைக் காணவில்லை. சுற்றுமுற்றும் பார்த்தேன். அதோ போகிறாள். ஒரே குதிப்பில் அவளைத் தொட்டுப் பின்னால் நடந்தேன். முதல் தளத்தில் இரண்டு பொது வார்டுகள். அதில் இரண்டாவது வார்டில் ஏறி, டாக்டர்களும் நர்சுகளும் இருக்குமிடத்திற்குச் சென்றாள்.

நர்ஸ் கோபப்பட்டாள்: "எவ்வளவு நேரமாகுது. அந்த ஆள் இங்க வலியில கிடந்து . . ."

"ஏழு மணிக்குத்தானே மருந்து . . ." அவள் எதையோ சொல்ல முற்படுகிறாள்.

நர்ஸ் அனைவருக்குமான ஒரு பொதுத் தாக்கீதாக: "நோயாளி பக்கத்தில யாராவது ஒருத்தர் கண்டிப்பா இருக்கணும். இங்க ஏதாவது நடந்துப்போச்சின்னா நாங்க கொன்னுட்டதாக வந்துடும்" என்று சொல்லிவிட்டு: "இனி நீ உன் பாட்டுக்குப் போகக்கூடாது. இதைப் பல தடவை உங்கிட்ட சொல்லியிருக்கேன்" என்றாள்.

மருந்து கை மாறியது. அவள் ஒரு நோயாளியின் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள். அடுத்த படுக்கையில் இருப்பவர்கள் அவளுக்கு ஆறுதல் சொல்கிறார்கள். அவள் டவலால் அவனது முகத்தைத்

துடைத்துவிடுகிறாள். கழுத்தைக் கட்டிப் பொதிந்து வைத்திருக்கிறார்கள். அதிலிருந்து ஒரு டியூப் போகிறது. இரத்தம் ஏறிக்கொண்டிருந்தது.

மனம் கனத்துக்கிடந்தது. திரும்பி லாட்ஜில் போய்ப் படுத்தேன். இரண்டு நிமிடம் கழிந்திருக்கும். ரூம்பாய் வந்து: "சேச்சி போயிட்டாளா?" என்று கேட்டான். நான் பதில் சொல்லாமல் கிடந்தேன். மனதில் மனித வர்க்கத்தின்மீதான வெஞ்சினமும் எல்லாவற்றின்மீதான ஆற்றாமையும்.

"இல்லை, சேச்சி அவ்வளவு சீக்கிரமாப் போயிட்டாளா?" ரூம்பாய் விடுவதாக இல்லை. டிப் வாங்குவதற்காக இருக்கலாம். எனக்கு என்னுடைய இயல்பான கோபம் வந்தது:

"ஆங் . . . துரித ஸ்கலிதம். அவ உடனே போயிட்டா . . ."

இவளுக்குக் கொஞ்சம் பணம் கொடுக்க முடியவில்லை என்றால் மனிதன் என்று சொல்லித் திரிவதில் அர்த்தமில்லை. புருஷன் உயிரைத் தாங்குவதற்காக, கையில் ஐம்பதோ அறுபதோ ரூபாய் வைத்திருக்கும் ஏதாவது சொறிப்பயல்களை இவள் தன்மீது தாங்குவாள். எவ்வளவு கொடூரம் . . ? வெட்டை நோய் பிடித்தவன்களும் அசிங்கம் பிடித்தவன்களும் இனியும் இவளை அழுக்காக்க அனுமதிக்கக்கூடாது. பணம் என்கிற ஏற்பாட்டின்மீதான அருவருப்பு மேலும் அதிகரித்தது. சிலர் கோடிகள்மீது புரள்கிறார்கள். இவள் மானத்தை விற்று மருந்து வாங்குகிறாள். இரவு சீக்கிரம் வந்துவிடாதா என்ற எதிர்பார்ப்புடன் உட்கார்ந்திருந்தேன்.

ஆனால், கஷ்டகாலம். நுழைந்த ஒரு வீட்டிலும் வெற்றிபெற இயலவில்லை. நாய்களின் முறைப்பிற்கே பயந்துவிடுகிறேன். உணர்ச்சிவசப்பட்ட நிலையில் இறங்கவே கூடாது. அவளைப் பற்றிய நினைவுகளால் மனம் தன் ஒருங்குநிலையை இழந்துவிட்டிருந்தது. நான் கொடுத்த சேலையை உடுத்திக்கொண்டு இன்று அவள் . . . ஏதோ ஒரு பெரிய வீட்டின் சின்ன எஜமானியம்மா ஒரு நாளோ இரண்டு நாளோ உடுத்திய விலையுயர்ந்த சேலை. அதில் அசிங்கம் பிடித்தவன்களின் வேர்வையெல்லாம் படிந்து . . . அனைத்தின்மீதும் பகையுணர்வு கொழுந்து விட்டெரிந்துகொண்டிருந்தது. ஏதோ ஒரு வீட்டில் எதையோ தட்டிப்போட்டு . . . அந்த முயற்சியும் பாழானது.

மறுநாள் முழுவதும் கோபத்துடனிருந்தேன். அறைக்குள்ளேயே அடைந்து கிடந்தேன். மதியம் இரண்டு மணியாகியும் அறை திறக்கப்படவில்லை

என்றதும் ரூம்பாய் வந்து கதவைத் தட்டினான். பிறகு, ஆளைக் குளிர வைக்கும் வார்த்தைகள்:

"இல்ல நான் நினைச்சேன். சார் . . ."

"நாண்டுக்கிட்டுச் செத்திருப்பான்னு நினைச்சிருப்பே. நீ போ. தொந்தரவு பண்ணாம." கதவை மூடிவிட்டு திரும்பவும் படுத்துத் தூங்கினேன். இரவு முழுவதும் அலைந்துத்திரிந்தேன். மெடிக்கல் காலேஜ் பகுதியில் மூன்று நான்கு கிலோமீட்டர் சுற்றளவு அலைந்திருப்பேன். மனம் அடங்க மறுக்கிறது. அனைத்தையும் இழந்துவிட்டவன்போல் ஏமாற்றத்துடன் வந்து கட்டிலில் விழுந்தேன்.

மூன்றாவது நாள், இதுவும் விதிதான். அவள் எப்போதோ செய்து வைத்த பாவத்தின் பலன். இவ்வளவு முயற்சி செய்தும் ஒரு நாலணாகூட கிடைக்கவில்லை என்றால் வேறு என்ன காரணமிருக்க முடியும்? இனி எல்லாவற்றையும் விதிக்கே விட்டுக்கொடுத்துவிட வேண்டியதுதான். ஆனால், நான் தளர்ந்துவிட மாட்டேன். முயற்சியைத் தொடர வேண்டும். அவளுக்கு விதித்திருக்குமென்றால் . . .

அன்று மனத்திற்கு அமைதி கை வந்திருந்தது. பன்னிரெண்டு மணியானதும் இறங்கி நடந்தேன். வைத்திருந்த பிராந்தியில் சிறிதளவை முகத்தில் ஊற்றினேன். வாசனைக்காக. இது, பெரும் பணத்தைக் கட்டியழுபவர்கள் வாழ்கிற பகுதியென்பதால் போலீஸ் பாதுகாப்பும் அதிகமாகவே இருக்கும். நோயாளிக்காக அவனது மனைவியோ தாயோ சகோதரியோ முந்தானை விரிக்க, மீண்டும் மீண்டும் அள்ளிக்குவிக்க ஆசைப்படும் எத்தனையோ டாக்டர்கள் இந்தப் பகுதியில் வாழ்கிறார்கள். இவர்களுக்கும் இவர்களது பிந்தைய தலைமுறையினருக்கும் அமைதியான வாழ்க்கை கிடைக்குமா? ஒரு பத்து சதவிகிதம் டாக்டர்களாவது நல்ல எண்ணங்களுடன் தூங்குவார்களா? இந்தப் பகுதியை விஐபி பகுதியாக மாற்றுவது வெறும் பணம் மட்டும்தான். இந்தப் பகுதியின்மீது காவல்துறை மிகவும் அக்கறைகொண்டிருக்கிறது. செல்வந்தர்களின் உயிரையும் உடமையையும் மக்களிடமிருந்து பாதுகாத்தாக வேண்டும். பாவப்பட்டவனின் கையில் பணம் கிடையாது. ஆகவே, அவன் மீது அக்கறை காட்டுவதற்கில்லை. நான் அப்படியே தார்மிக ரோஷம்பூண்டு கொதி நிலை அடைகிறேன்.

மதுவை முகத்தில் ஊற்றுவதற்கான காரணம் போலீஸ்காரனை ஏமாற்றுவதுதான். போலீஸ்காரர்கள் தடுத்து நிறுத்தினால் உடனே, ஆ . . .

பூ . . . கா என்று சம்மந்தா சம்மந்தமில்லாமல் ஏதாவது உளறினால் போதும். அதுவும் அவர்களது முகத்தில் எச்சில் தெறிப்பதுபோல் உளற வேண்டும். அவர் உடனே தூரத்தில் நிற்கும் தலைமையிடம்: "சார் தண்ணியடி பார்ட்டி சார்" என்பார். உடனே அங்கிருந்து: "போகச் சொல்லு அவனை" என்ற பதில் வரும். விரும்பினால் போலீஸ்காரனைத் திட்டவும் செய்யலாம். தொண்ணூறு சதவிகிதமும் கண்டுகொள்ள மாட்டார்கள். அப்படியே ஒன்று தந்துவிட்டாலும் அதை வாங்கி என்ன ஆகிவிடப்போகிறது? ஒவ்வொரு நரம்பாக உருட்டியெடுக்கப்பட்டவனின் முகத்தில் ஒரு குத்து விழுந்தால் செத்தா விடுவான்? பீமன் முதுகில் புளியங்கொட்டையை எறிந்ததுபோல்தான். இதற்கு நேரெதிரான ஒரு முறையியலும் உண்டு. டிப்-டாப் உடைகளும் பெரும் கௌரவமுமாக நடந்துகொண்டிருக்க வேண்டும். போலீஸ் ரோந்துப் படை நம்மைக் கண்காணிப்பதாக உணர்ந்தால் நேராக அவர்களிடம்போய்: "எக்ஸ்யூஸ் மி, பஸ் ஸ்டாண்ட் போற வழி . . ?" ஒருவேளை எங்கே போய்விட்டு வருகிறீர்கள் என்று கேட்கலாம். இதைத் தவிர வேறு கேள்வியே வராது. சரியான பதிலையும் சொல்வார்கள். சிந்தித்தபடியே ஒரு ஜங்ஷன் பக்கம் நடந்துகொண்டிருந்தேன். அங்கே, குன்றின்மீது ஒரு வீடு. திசையைத் திருப்பினேன். கூடத்தையொட்டிய இடை வழியிலிருந்த ஜன்னல் கம்பியை வளைத்தேன். அறைக்குள் சுமார் இருபத்தைந்து வயதான ஒரு பெண் தூங்குகிறாள். மற்றொரு அறையில் இரண்டு ஆண்கள். நான் படுக்கையறைக்குள் நுழைந்தேன். கதவை வெறுமனே சாத்தியிருந்தார்கள். மெல்லத் திறந்தேன். வீட்டுக்காரன் அடித்து மேய்ந்துவிட்டுப் படுத்துத் தூங்குகிறான். பெரிய படுக்கையறை. பகுதி ஜவான் ரம் அப்படியே இருக்கிறது. தம்பதியின் உடல்கள்மீது நூலிழையின் தொடர்புமில்லை. இவ்வளவு வயதாகியும் விவஸ்தை வேண்டாமா? சரி, கதவையாவது தாளிடலாமே?

நானொரு பூனையாக மெல்ல செயரில் அமர்ந்தேன். ஐஸ் க்யூபுகள் கரைந்து கிடந்தன. பத்து நிமிடத்தில் குவார்ட்டர் அளவுக்குக் குடித்தேன். அவர்களில் யாராவது கண் திறந்து பார்த்தால் நல்லதொரு காட்சியாக இருக்கும். ஏதோ பாரில் உட்கார்ந்திருப்பதுபோல் தங்கள் பெட்ரூமில் உட்கார்ந்து ஒருவன் குடிக்கிறான்.

அலமாராவைத் திறக்க முடியவில்லை. வீட்டுக்காரன் உருவிப்போட்ட பான்டைத் தடவினேன். பர்ஸ் தட்டுப்பட்டது. எண்ணிப்பார்த்தேன். 1800 ரூபாய். தம்பதியின் செயின்கள், வாட்சுகள். இவ்வளவும் கிடைத்தன. வளையல்கள் அவளது கையில் கிடந்தன. ஸீரோ வால்ட் பல்பை ஆஃப்

பண்ணினேன். பிள்ளைகள் எழுந்து வந்தால் இந்தக் கண்றாவியைப் பார்க்க வேண்டாம். கதவைச் சாத்தினேன். ஹோ . . . மனக்கிலேசம் குறைந்தது. எல்லாமே பத்திரமாக இருக்கிறது. தப்பித்து ஓடுவதற்காகத் திறந்து வைத்திருந்த சமையலறைக் கதவையும் மூடினேன். வளைந்த ஜன்னல் கம்பிகளை பத்து நிமிடங்கள் செலவழித்து மிகுந்த கலாரசனையுடன் முன்பிருந்தது போல் வைத்தேன். முதலாளிகளும்தான் கொஞ்சம் சிந்திக்கட்டுமே!

மனம் குதூகலத்தில் ஆனந்த நடனம்புரிந்தது. மனம் முழுக்க அந்தப் பெண்தான். மணி மூன்றரை இருக்கும். அங்கிருந்து லாட்ஜுக்குக்கூட போகாமல் மெடிக்கல் காலேஜ் வார்டுக்குப் போகும் கேட்டின் பக்கத்தில் உட்கார்ந்தேன். போதை தந்தக் கிறக்கமும், வெற்றிகரமாக ஆபரேசன் நடத்திய சோர்வும். என்னைப்போல் பிற இடங்களிலிருந்து வந்தவர்களும் இங்கே காத்திருந்தார்கள். இரவில் ஒருவரை மட்டுமே உள்ளே அனுமதிப்பார்கள். ரீங்காரமிட்டு அமரும் ராட்சசக் கொசுக்களை என் தோல் எதிர்கொண்டது: சென்ட்ரல் ஜெயில்லே உங்க பாட்டன்மார் குத்திக் குத்தித் துவாரமிட்டு நல்ல டெம்பரான தோல் இது. உங்க பம்மாத்தெல்லாம் இங்கே எடுபடாது.

இப்படியாக, பல வேடிக்கைகளிலும் மனம் ஈடுபட்டிருக்க கீழ் வானத்தில் சிவப்பு தென்பட ஆரம்பித்தது. இவ்வளவு மன அமைதியுடன் அன்றுவரையிலும் ஒரு பொழுது விடிந்ததில்லை. இதை அவளிடம் கொடுத்துவிட்டுத் திரும்பிவிட வேண்டியதுதான். தேவைப்பட்டால் செயினை விற்றுக்கொடுக்க வேண்டும். பாவம் அவள் எங்கே கொண்டுபோய் விற்பாள்.

கொஞ்சம் பணத்தைச் செலவுக்காக எடுத்துக்கொண்டேன். மிச்சப் பணத்தையும் நகைகளையும் வாட்சையும் சேர்த்து ஒரே பார்சலாக்கினேன். ஆறு மணிக்கு வார்டுக்குச் சென்றேன். படுக்கையில் வேறொருவன். அடுத்தப் படுக்கையிலிருந்த நோயாளியின் உதவியாளனிடம் கேட்டேன்: "இந்த பெட்லே ஏற்கனவே இருந்தவங்க எங்கே?"

"ஒரு மணி நேரம்தான் இருக்கும். கஷ்டம். அவன்கூட ஒரு பொண்ணும் இருந்தாள். பொறுப்பில்லாத பொம்பளை. நேற்று சாயங்காலம் நாலு மணிக்குப் போனவள். திரும்பி பதினொரு மணிக்கு வர்றா. சொன்ன நேரத்துக்கு மருந்து கொடுக்கலேன்னா மயிரா உயிர் கிடக்கும்?"

அவனைத் தடுத்த நோயாளி முதியவர்: "மருந்து வாங்கப் பணம்

வேண்டாமா? அதிருந்தா இங்கியா வந்துக் கிடக்கப்போறான்?" என்று சொல்லிவிட்டு முகட்டைப் பார்த்தபடி ஒரு நீண்டப் பெருமூச்சை உதிர்த்தார்.

அங்கே நான் எவ்வளவு நேரம் நின்றிருந்தேன் என்பது நினைவில்லை. முதியவரும் தூங்கிவிட்டார்.

அந்தப் பெண்ணின் கணவன் கிடந்த படுக்கையைப் பார்த்தேன். அதில் இடம் பிடித்தவனின் முகத்தில் கட்டில் கிடைத்த திருப்தி. மீண்டுமொரு மரணத்தைத் தொடர்ந்து, தங்கள் முறையை எதிர்பார்த்துக் கீழே பெட்ஷீட்டிலும் பாயிலும் சுருண்டு கிடக்கும் நான்கைந்து நோயாளிகள், கட்டிலில் கிடப்பவர்களை பொறாமையுடன் பார்க்கிறார்கள். நான் வெளியே வந்தேன். இந்தப் பொன்னுக்கும் பணத்திற்குமெல்லாம் என்ன அர்த்தமிருக்க முடியும்? அழுகை வந்தது. எதற்காக அடக்கி வைக்க வேண்டும். யாரைப் பயந்து? இந்த அயோக்கியர்களையா? பொழுது இன்னும் சரியாக விடியவில்லை. வெளிச்சமில்லாத ஒரு இடத்திற்கு வந்ததும் வாய்விட்டு அழுதேன்.

## 61 - உதவாக்கரைப் பணம்

உண்மையில் இந்தப் பணம் யாருக்கும் உதவாமல் போய்விட்டது. இந்த வழக்கில் போலீசில் பிடிபட்ட பிறகுதான். இதைச் சரியாகப் புரிந்துகொண்டேன். பிடிபட்டது இப்படித்தான்:

இன்கம்டாக்ஸ் அதிகாரி பொன்னப்பனின் வீட்டிலிருந்து ஒரு டேப் ரிக்கார்டர், நகைபோன்ற சில பொருட்களைத் திருடினேன். இந்த வழக்கில் பொருட்களை மீட்கும்போது டேப்ரிக்கார்டரை வாங்கிய கடைக்காரன் பயந்துபோய் ஒரு வாட்சும் வாங்கியதாகச் சொல்லி விட்டான்.

இன்னும் வழக்குகள் இருக்கிறதென்பது தெரிந்துவிட்டது. புகழ்பெற்ற ஃபோர்ட் போலீஸ் ஸ்டேஷனில்தான் விசாரணை நடக்கிறது. இங்குள்ள போலீசார் உருட்டுவதிலும் கொடூரமாக வதைப்பதிலும் நிபுணத்துவம் பெற்றவர்கள். போலீஸ் ஸ்டேஷன்களில் லத்தியால் உள்ளங்காலில் அடிப்பார்கள். இவர்கள் அடித்தால் உள்ளங்காலில் ரத்தம் உறைந்துவிடும். அடி, மூளை வரைக்கும் பிடிக்கும். கண்களில் இருள் படரும். எழுந்து நிற்க வைத்தாலும் கொஞ்ச நேரத்திற்கெல்லாம் தலைக்கு உணர்வு வராது. விரல்களை சில இடங்களில் அழுத்திப்பிடித்து உணர்வுகளை மயங்க வைக்கும் விசாரணைமுறைகளும் சில பழைய போலீஸ்காரர்களின் கை வசமுண்டு.

என்னை உருட்ட ஆரம்பித்தார்கள். ஒன்று விடாமல் சொல்லச் சொல்லி உருட்டினார்கள். நான் சொன்னேன்: "உங்க வேலையைச் செய்துட்டே இருங்க. இன்னும் ஒண்ணு ரெண்டு பாக்கியிருக்கு. அதையும் வேணா சொல்லிடறேன். இன்னும் இருக்குன்னு நீங்க நினைச்சா, நீங்க விரும்புற எதை வேணாலும் என் தலையில தூக்கி வையுங்க. அதையும் சுமக்குறேன். ஆனால், தேவையே இல்லாம உதைச்சி உங்க சக்தியை நீங்க விரயம் செய்யிறதைத் தவிர இந்த உடம்பிலிருந்து வேறென்ன உங்களுக்குக் கிடைச்சுடப்போவுது?"

"அவனை அவிழ்த்து விடுங்க" என்றார் ஏசி யூஸஃப் சார்.

அப்படித்தான் இந்த வழக்கையும் வாந்தியெடுத்தேன்.

வழக்குக்காக என்னை அட்டக்குளங்கரை சப் ஜெயிலிலிருந்து வஞ்சியூர் நீதிமன்றத்துக்குக் கொண்டுவந்தார்கள். சம்பவம் நடந்து அப்போது மூன்று மாதங்களாகி இருந்தன. வாதிகள் இரண்டு மூன்று பேர் அங்கே நின்றிருந்தார்கள். கூட்டம் அதிகமாக இருந்தது. என்போல் பல குற்றவாளிகள், பல போலீஸ்காரர்கள், பல்வேறு வழக்குகள் . . .

திடீரென்று என் பக்கத்தில் வந்த ஒருவர் என்னை ஏறயிறங்கப் பார்த்துவிட்டு அருகில் நின்ற போலீஸ்காரரிடம் கேட்டார்: "ஆள் இவன் தானா?"

அப்போதுதான் அவரைக் கவனித்தேன். அன்றிரவு குடித்துப் போதமற்று தூங்கிய அந்த மீசைக்காரர். திடீரென்று அவர் அலறினார்: "ராஸ்கல், என் வீட்டுக்குள்ளேயே நுழைஞ்சு திருடற அளவுக்கு உனக்குத் தைரியமாடா? தலையணைக்குக் கீழே நான் ரிவால்வர் வெச்சிருந்தேன் ராஸ்கல். விழிச்சிருந்தேன்னா உன்னைச் சுட்டுப்பொசுக்கியிருப்பேனடா."

நான் பதில் சொல்லவில்லை. அவர் பக்கத்தில் நெருங்கி வந்தார். குடித்திருக்கிறார். எனக்குச் சம்பவம் நடந்த அன்றிரவு நினைவுக்கு வந்தது. கூடவே அந்தப் பெண்ணின் நினைவும். எனக்குக் கோபம் தலைக்கேறியது. சமநிலை தவறியது:

"போ . . . பு . . . மவனே, உன் நாற்றம் பிடிச்சப் பணம். நாய்க்குக்கூட உதவாதுடா, புழுத்துப்போன உன்னோட பணம்."

மொபைல் கோர்ட் நீதிபதியின் தனியறையின் திண்ணையில் நின்றுகொண்டிருந்த என் குரல் ஓங்கியொலித்ததும் போலீஸ்காரர்கள் தலையிட்டார்கள்.

"மூப்பிலான், என்ன இது போக்கிரித்தனம்? இவனை நீர் அடிப்பீர் போலிருக்கே? இவன் முதுகில ஈ உட்கார்ந்தாலும் நாங்க விரட்டணும். பிரதியைப் பத்திரமாத் திரும்பக் கொண்டுவந்து சேர்க்கிறதுக்குத்தான் சம்பளம் தந்து அரசாங்கம் எங்களை அனுப்பி வைக்குது. மரியாதையா நடந்துக்கலேன்னா பிடிச்சு உள்ள போட்டுடுவோம். ஆமா . . ."

"ஹும், நான் யார் தெரியுமா? ஒரு பத்து வருஷத்துக்கு முன்னால இப்படி நடந்திருக்கும்னா உங்களையெல்லாம் நான் சல்யூட் அடிக்க வெச்சிருப்பேன்."

"அந்தக் காலமெல்லாம் மலையேறிடுச்சுன்னு தெரியுதில்லே . . . போங்க . . . போங்க"

நான் பின்னாலிருந்துச் சத்தமாகச் சொன்னேன்: "உன்னோட வெளங்காத அந்தப் பணத்தை . . . நான் மணியன்பிள்ளையா இருந்தா நீ அதை தொடவும் விடமாட்டேன். உனக்கு அது கிடைக்கவே கிடைக்காது. உதவாமதான் போகும் உன் பணமெல்லாம்."

நீதிமன்றத்தில் வாதம் தொடங்கியது. குறுக்கு விசாரணைக்காக நான் மீசைக்காரரை நெருங்கினேன். அவருக்கு ஒன்றுமே பிடிபடவில்லை:

"இவன் திருடனா? வக்கீலா?"

"ஸ் . . . ஸ் . . . என்ன வேலை பார்க்கிறதா சொன்னீங்க?"

"அதையெல்லாம் நான் சொல்ல வேண்டிய இடத்தில சொல்லிக்கிறேன்."

நீதிபதி உத்தரவிட்டார்: "அவர் கேட்குறதுக்கு ஒழுங்கா பதில் சொல்லுங்க."

அவருக்கு விஷயம் பிடிபட்டது. புலி உடனே பூனையாக மாறியது. அவரது தொண்டை வறண்டது.

"மிலிட்டரியில."

"எந்தப் பிரிவு?"

"ஆர்மி."

"ஆர்மியில?"

"எம்இஎஸ்."

"மிலிட்டரியில ரோடு போடுற வேலை." நீதிமன்றத்தில் சிரிப்பலைகள்.

"சரி, உங்க வீட்டிலிருந்து திருட்டுப் போனதாகச் சொல்லப்படுற பொருட்களை நீங்க அடையாளம் பாத்தீங்களா?"

"பாத்தேன்."

"அது உங்களோடதுதாங்கிறதுக்கு ஆதாரமிருக்கா?"

"பாத்தால் சொல்ல முடியும்."

"அடையாளம் ஏதாவது சொல்ல முடியுமா?"

அவர் முத்துமாலையின், வாட்சின் தயாரிப்பையும் அதன் மாடல்களையும் சொன்னார்.

முத்துமாலையை வாங்கிய கடைக்காரன் அதை சின்னாப்பின்னமாக்கிய விவரம் எனக்குத் தெரியும். என் முன்னால் வைத்துதான் கட்டிங் பிளேயரால் முத்துக்களைக் கழற்றினான். தங்கத்தை வேறு ஏதாவது நகையாக்கி இருப்பான். போலீஸ் பிடித்ததும் பதிலுக்கு அதே எடையில் அதே மாடலில் வேறு செயின் செய்துகொடுத்தான்.

செயினில் பதிக்கப்பட்டிருந்த முத்துக்களின் நிறம், எடை, மாடல் தொடங்கி அதற்கான ரசீதுவரைக்கும் தாக்கல் செய்யப்பட்டிருந்தது. ஆனால், பட்டாளத்தான் சொன்ன முத்தின் நிறத்தில் ஒரு சிறு தவறு நிகழ்ந்துபோய் விட்டது. ஒரிஜினல் முத்து கறுப்பு நிறம். புதிதாகச் செய்ததில் அது கடும் சிவப்பு நிறம். நான் நிறத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டேன்:

"மாண்புமிகு நீதிபதி அவர்களே, இவர் நீண்டகாலமாக அணிந்து வந்ததாகச் சொல்லும் செயினிலுள்ள கறுப்பு முத்து இதோ சிவப்பாக இருக்கிறது. ஒரு நிரபராதியைக் காராக்கிரகத்தில் தள்ளுவதற்கான ரகசியத் திட்டத்திலொண்ணு அம்பலமாகி விட்டது."

அடுத்தது, வாட்ச். நான் இவரிடமிருந்து திருடியது ஒரு விசேஷமான கம்பெனியின் லிமிட்டெட் எடிஷன் வாட்சுகளிலொன்று. வங்கி உத்தரவாதம் பெற்ற இந்த வாட்ச் ரொம்பவும் அரிதானது.

நான் கேட்டேன்: "இதுக்கான பில் இருக்கா?"

"பில் தேவையில்லை. இந்த வாட்ச் எங்கிட்டே மட்டும்தான் இருக்கு."

"உறுதியாச் சொல்றீங்களா?"

"உறுதியாத்தான்."

"அது ஏன் அப்படி?"

இந்த வாட்சை அவர் வடஇந்தியாவில் பணியாற்றும்போது ஆர்டர் செய்து வாங்கினாராம். இந்தியாவிலேயே ஒருவேளை நான்தான் இதற்கு ஆர்டர் செய்திருக்கக்கூடும். நிச்சயமாக கேரளத்தில் இருக்கவே முடியாது என்றார்.

இந்த வாய்ச்சவடாலும் அற்பத்தனமும் எரிச்சலை ஏற்படுத்தியது. இவர் சொல்வதுபோல் அவ்வளவு அபூர்வமொன்றுமில்லை அந்த வாட்ச். நான் முன்பொரு வழக்கில் இதே மாடல் வாட்சைத் திருடியிருக்கிறேன். விசாரணையின்போது அந்த வாட்சை ஒப்படைக்க வேண்டியதும் வந்தது. இதைவிடவும் நல்லதொரு வாய்ப்புக் கிடைக்கவா போகிறது?

நான் சொன்னேன்: "இவர் சொல்ற முதல் தகவலே தவறென்பதைச் சுட்டிக்காட்ட விரும்புறேன் நீதிபதி அவர்களே. இதே கம்பெனியின் வாட்ச் திருட்டுப்போனது தொடர்பாக சிசி . . . நம்பர் வழக்கு இதே நீதிமன்றத்தில நடந்திருக்கு."

நீதிமன்றமே திகைத்துவிட்டது. திருடன் வழக்கு எண்களையெல்லாம் குறிப்பிட்டு வாதம் செய்கிறானே? அதுவும் என்னுடைய வழக்குதான் என்ற விஷயம் எனக்கு மட்டும்தான் தெரியும்.

வாதி முழி பிதுங்கி நின்றார். வழக்கில் பிடிபட்ட பொருட்கள் தன்னுடையவை என்று வாதிதரப்பால் நிரூபிக்க இயலாத நிலையில் அவற்றை அரசு ஏற்றுக்கொள்வதாகத் தீர்ப்புச் சொல்லப்பட்டது.

போகும் வழியில் பட்டாளத்தான் பரிதாபமாக என்னைத் திரும்பிப் பார்த்துவிட்டுப் போனார்.

போலீஸ்காரர் சொன்னார்: "அவ்வளவு பொருட்களும் யாருக்குமே உதவாமப் போயிடுச்சேடா."

நான் சொன்னேன்: "அந்தப் பணத்தோட விதியே அதுதான். பணத்துக்கும் ஒரு யோகமிருக்கு. அது துரதிர்ஷ்டம் பிடிச்சப் பணம்."

வெற்றி பெற்றதில் எனக்கு மகிழ்ச்சி எல்லாம் கிடையாது. மனத்திற்குள் அப்போதும் அந்தப் பெண்தானிருந்தாள். உலகத்தின்மீதான என் கோபம் அப்படியே கனன்று கொண்டிருந்தது.

சுதந்திர மனிதன்: ஊரையும் வீட்டையும் மறந்து நாம் தன்னிச்சையாகத் திரிகிறோம் என்ற எண்ணம் ஒருவனிடம் உருவாவதற்கு முன்பே, ஊரின் சஞ்சல மனோபாவமுள்ள பெண்கள் இதை உணர்ந்திருப்பார்கள். என்னுடைய தடம்புரண்ட பாலியல் தொடர்பு அப்பாவின் மரணத்திற்கு முன்பே தொடங்கிவிட்டது. இவனை நம்பலாம் அல்லது பிஞ்சில் பழுத்தவன் என்பதை ஒருத்தி புரிந்துகொள்ளும்போது அவனது தடம்புரள்வும் தொடங்கிவிடுகிறது.

பக்கத்து வீட்டில் இரவுத் துணைக்கு என்னை அழைத்ததிலிருந்து இது தொடக்கம் பெற்றது. எங்களுக்குள் சிறு உறவுமிருந்தது. அங்குள்ள இளம்வயது சேச்சிக்கு அப்போது திருமணமாகவில்லை. என்னுடலில் மாற்றங்களும் அவளுக்குத் திருமணமுமான பிறகு நானாக விரும்பியும்கூட அவள் ஏற்கவில்லை. தவறான எந்த எண்ணங்களுமில்லாத நல்லதொரு குடும்பப் பெண்ணாக, இன்று வாழ்க்கையின் இறுதிக் கட்டத்துக்கு வந்திருக்கிறாள். அவளது இளமையின் தேடுதல் ஒரு அறிதலை முன்னிறுத்தியதாக மட்டும்தானிருந்திருக்கிறது. அறிதலை உணர்ந்துகொண்டதனாலும் இருக்கலாம், எல்லாத் தூண்டுதல்களையும் கடந்து அவளால் திருப்தியுடன் வாழ முடிந்தது. பெண்கள் தரப்பிலிருந்து நிகழும் சிறு தவறுகளை நான் குற்றமாக நினைக்கவில்லை. ஆணை, ஆண்மையைப் பற்றிய தேடுதல்களாக மட்டுமே இதனைப் பார்க்க முடியும். எதிர்பாலினரோடுள்ள அறிதல்கள் குறைவுபடுகிற நிலையில்தான் மனம் வேலி தாண்ட நினைக்கிறது. அல்லது, துணைகளுக்குப் பாலியல் சுதந்திர மனோபாவம் இருக்கலாம். அதிர்ஷ்டமோ, துரதிர்ஷ்டமோ இம்மனநிலை மிகவும் அபூர்வம். குறிப்பாக நம் நாட்டில்.

இரண்டாமவள்: இவள்தான் என்னை நீண்ட நாட்களாக உபயோகித்தவள். என்னுடைய பதினாறு வயதுவரை. அப்போது என்னைக் குண்டுமணி என்று சொல்வார்கள். உயரம் குறைவாக இருந்தாலும் வெள்ளைத் தோலும் தடித்துக் கொழுத்த வடிவத்திலும் இருப்பேன். தினம் ஐந்து இளநீரையும் தேங்காயையும் சாப்பிட்டு பலநாட்கள் உயிர் வாழ்ந்திருக்கிறேனே! குடிப்பதற்குப் பணமில்லையென்றால் தன்னுடைய மேற்பார்வையிலுள்ள, களத்தூர் மீனாட்சி அத்தையின் பல ஏக்கர்கள் வரும் தென்னந் தோப்பிலுள்ள இளநீர்களை அப்பா விலைக்கு விற்பார். எனக்கும் தாராளமாகக் கிடைக்கும்.

இயற்கைக்கும் தனக்குரிய சில தயாரிப்பு முன்கருதல்கள் இருக்குமல்லவா? இளநீர் என்பது என்னுடைய எதிர்காலத்தைக் கருதி

இயற்கை ஏற்பாடு செய்த உணவாக இருக்கலாம். இவனொரு திருடனாக ஆவான்; இன்ன பிற வேதனைகளை இவன் அனுபவிப்பான் என்ற விஷயம் மனிதர்களுக்குத் தெரியாமலிருக்கலாம். ஆனால், இவை அனைத்தையும் விதி அறிந்திருக்கும். போலீஸ்காரர்களின் கை அரிப்பைத் தீர்க்கும் கருவியாக மாறவிருப்பவன் என்ற விஷயமும் விதிக்குத் தெரியும். இதற்கேற்ப இவனை வடிவமைக்க வேண்டும். இவன்மீது ஒரு வாழ்க்கை விதிக்கப்பட்டிருக்கிறது. அதை இவன் வெற்றிகரமாக வாழ்ந்துத் தீர்க்க வேண்டும். இதற்கு இடையூறாக வரும் எல்லாத் தடைகளையும் தாண்டி இவன் உயிர்பிழைத்தாக வேண்டும். இதற்கான அடிப்படை, உடல் ஆரோக்கியம். ஆக, விதியின் முன்கருதல்களிலொன்றுதான் என்னுடைய இள நீராகாரம். இந்தத் தன்வரலாறும் ஏற்கனவே விதிக்கப்பட்டவைகளில்தான் சேரும். பலநாட்கள் சாப்பிடாமல் இன்றும் என்னால் உயிர் வாழ முடிகிறது. யாரிடமும் கையேந்தாமல். என் சக திருடன்களில் பலரும் தகர்ந்துபோன பிறகும் என்னுயிரையும் உடலையும் பாதுகாத்துக் கொண்டிருந்தது நான் உண்டு தீர்த்த இளநீர் உணவுதான். நான் தின்றும் குடித்தும் தீர்த்த நூற்றுக்கணக்கான இளநீர்களைத் தந்த கற்பக விருட்சமே உனக்கு அனந்த கோடி நன்றி.

இரண்டாமவளான அந்தப் பெண்மணியும் சமூகத்தில் மிகவும் மரியாதைக்குரியவளாகவே வாழ்கிறாள். அவள்மீது எந்தக் கறையும் இன்றுவரைக்கும் படிந்தது கிடையாது. என் விஷயத்தில் அவளுக்கு இரவு பகல் பேதங்களில்லை. என்னுடைய அருகாமையை உணர்ந்ததுமே ஆச்சரியப்படும் வகையில் அதற்கான சூழ்நிலையையும் உருவாக்கிவிடுவாள். வீட்டில் விருந்தினர்களின் பிரவாகம் நிகழும் சில நாட்களில்கூட அன்று முழுவதுமே என்னைச் சிறைப்படுத்தி வைத்திருப்பாள். இடையே எந்தப் பயமுமில்லாமல் வந்து படுக்கையறைக் கதவைத் தாளிட்டு இச்சையைத் தணித்துவிட்டு வெகுஇயல்பாகக் கதவை மூடிவிட்டுப் போவாள். ஒளிந்துகொள் என்றுகூட சொல்லமாட்டாள். எங்களைப் பற்றிய புரிதலில் அந்த அளவுக்குத் தவறான ஆரோக்கியமிருந்தது. ஏழெட்டு வருடங்களாகத் தொடர்ந்த இந்த உறவில் மற்றவர்கள் சந்தேகிக்கும்படியாக ஒரு சூழல்கூட உருவானதில்லை. பிறகு, நான் ஒரு இளைஞனாகி விட்டேன் என்ற எண்ணம் உருவானதும் எந்தத் தயக்கமுமில்லாமல் விட்டு விலகினாள். என்னுடனான இவளது பிந்தைய உறவுகள் கௌரவமானவை. உருக்கு மனோபாவமுள்ள ஒரு பெண்மணி. இத்தகைய நெஞ்சுரம்பெற்ற பெண்கள் மிகவும் அபூர்வம்.

## 62 - காதல் உணர்வுகள்

என்னுடைய காதல் உணர்வுகள் சிறு வயதிலேயே, ஆறாம் வகுப்பில் படிக்கும்போதே ஆரம்பித்து விட்டன. பெண்கள் சிலர் அப்போதே சில பாலபாடங்களைப் பயிற்றுவித்திருந்தார்கள். என்னுடைய பள்ளிக்கூட நண்பன் புளியறை வீட்டில் வாசுபிள்ளை. என்னுடைய எர்த். பள்ளிக்கூடத்தில் உப்புமா வினியோகிக்கும் பொறுப்பு என்னுடையது. உணவுக் கிடைக்காத பஞ்ச காலத்தில் உப்புமா தருபவன் பெரியவன். எனக்குக் கீழ்ப்படிபவர்களுக்கு அகப்பை நிறைய அள்ளி வைப்பேன். இந்தக் காரணத்தை முன்னிட்டு நான் பெரிய ஆள். வாசுபிள்ளை அப்போது இரண்டாம் வகுப்பில் படித்தான். ஒன்றாம் வகுப்பிற்கும் இரண்டாம் வகுப்பிற்கும் உப்புமா வினியோகிக்கும் பொறுப்பை நான் வாசுபிள்ளையிடம் விட்டிருந்தேன். உப்புமா வினியோகம் நிமித்தம் சிறு மனஸ்தாபங்களும் கோபமும் உருவாவது இயல்புதான். அகப்பையில் கொஞ்சம் குறைந்தால் எதிரி. சண்டித்தனமில்லை என்றால் பிழைக்க முடியாது. இப்படியான ஒருவனிடம்தான் பொறுப்பை ஒப்படைக்கவும் முடியும். அப்போதெல்லாம் கோஷ்டித் தகராறுகள் நிறையவே நடக்கும். வீடுகளில் எந்தக் கட்டுப்பாடுமிருக்காது. வாசுபிள்ளையும் அடிபிடியில் தேர்ந்தவன்தான். முதலில் அவன் பேசுவான்; அடுத்ததாக சிலேட் பேசும். ஒண்ணுக்குப் போகும்போதும் கையில் சிலேட் வைத்திருப்பான். மூத்திரப்புரை ஏரியா எப்போதுமே போர்க்களம்தான். எதிரிகள் மறைந்திருந்து தாக்குமிடமும் இதுதான். அப்படியான வில்லன் வாசுபிள்ளை எனும் எண் குணத்தான் ஓடி வந்து சொன்னான்: "மணியண்ணா, ஒண்ணாப்புல ஒரு யானைக்குட்டி நிக்குது . . ." நானும் ஓடினேன். உண்மைதான். அது ஒருபுறம் திரும்பி நின்று யாருடனோ பேசிக்கொண்டு நிற்கிறது. பதினாறு வயதுத் தோற்றம். கண்டதும் காதல்கொண்டேன். நம்முடைய தகுதிக்கேற்ற உறவுதான். முதல்முதலாக ஒரு பெண்மீது மையல் கொள்கிறேன். அதற்கே உரிய மனப்பதற்றத்துடன்.

பெயர் மாலதி. எட்டோ ஒன்பதோ வயது. மாலா என்று அழைப்போம். அப்பாவும் அம்மாவும் கொச்சியிலிருந்து வந்தவர்கள். அவளது வயதுக்கேற்ப படிப்பைத் தொடர இயலவில்லை. அம்மா ஒரு பெரிய

கம்யூனிஸ்ட்காரி

இரண்டு நாட்களுக்குப் பிறகு பள்ளியிலிருந்து வீட்டுக்குப்போகும்போது முன்னால் மாலா. என் வீட்டின் முன்பாகவே அவளும் போவாள் என்பதைப் புரிந்துகொண்டேன். கடவுள்தான் போக வைத்திருக்கிறார். ஓடிப்போய் அவளுடன் சேர்ந்துகொண்டேன். என்னுடைய முதல் வார்த்தையே: "வளந்தா நான் உன்னியக் கல்யாணம் பண்ணிக்குவேன்?" என்பதுதான். அவள்: "போடா" என்றாள். ஐந்தாறு வருடங்கள் கழிந்தன. நான் விளைந்துப் பழுத்து விட்டேன். படிப்பு நின்றது. சண்டித்தனம் அதிகரித்தது. மோசமான நண்பர்கள் வட்டம். யாரிடமும் பயமில்லை. ஒரு இளம்பெண், சிறுமிகளுடன் சேர்ந்து பள்ளிக்கூடத்திற்குப் போவது போலிருந்ததால் மாலாவும் நான்கிலோ ஐந்திலோ படிப்பை நிறுத்திவிட்டாள். வீட்டிலும் வறுமை. அன்று சமூகத்தின் அடித்தட்டிலுள்ள பெண்களுக்கு கொல்லத்தில் வேலை கிடைப்பது சுலபம். ஏதாவது முந்திரி ஆலையில்போய் மானேஜரைப் பார்த்துச் சொன்னால் போதும். மறுநாளிலிருந்து முந்திரி உடைக்கப் போகலாம். மாலாவையும் அங்கே வேலைக்கு அனுப்பினார்கள். காலை ஏழு மணிக்குப் புறப்பட வேண்டும். அயத்தில் எனுமிடத்தில் ஆலை இருந்தது. நான்கைந்து கிலோ மீட்டர் நடக்க வேண்டும். சாயங்காலம் ஐந்துமணிக்குச் சங்கூதுவார்கள். வேலை முடிந்து, சந்தைக்குப் போய் நாலணாவுக்கு மீன், குங்குமம், கண் மை என்று வாங்கிவிட்டு வீட்டுக்கு வரும்போது அந்தி மயங்கிவிடும். ஆலையில் காலைச் சங்கு எட்டுமணிக்கு ஊதியதும் கேட்டை மூடிவிடுவார்கள் என்பதால் போகும்போதுள்ள வேகம் திரும்பி வரும்போது இருக்காது. இவள் போகும் வழியில் இளைஞர்கள் கூடி நிற்பார்கள். அதில் நானுமொருவன். என்னிடம் மட்டும்தான் பேசுவாள். வீட்டின் முன் வைத்து ஒருமுறை கேட்டேன்:

"எங்க ஓடுறே மாலா?"

"பாத்தா தெரியலையா?"

"நடந்துபோலாம்லே?"

"அதை நான் பாத்துக்குறேன்."

"எதை?"

"எதுக்காக நடந்து போகச் சொல்றே? ஓடும்போதுப் பாக்குறதுக்கு

அவ்வளவு அசிங்கமாவாத் தெரியுது?"

நான் பதில் சொல்லவில்லை. சிரித்தேன். பாவம்.

"எப்பவுமே நினைக்கிறதுதான். இப்ப பாரேன், நீ கூப்பிட்ட இந் நேரத்துக்குப் பிறகு போனா கேட்டை மூடியிருப்பாங்க."

"நீ போக வேண்டாம்."

"காசு நீ தருவியா?"

"தர்றேன்."

"சும்மாச் சொல்றே."

"உண்மையாவே. இதோ பார்."

"சீக்கிரமாத் திரும்பிப்போனா அம்மா திட்டுவாளே?"

"சரியான நேரத்துக்குப் போனாப்போதும்."

"அதுவரைக்கும் எங்க இருக்குறது?"

"இங்கே."

"வேண்டாம், மானம்போயிடும்."

"இங்க யாருமே இல்லை. எல்லாரும் கம்பெனிக்குப் போயிட்டாங்க."

"வேண்டாம், நான் வரலை."

"கொஞ்சம் வந்துட்டுப் போ புள்ளெ . . . இந்த ஏரியாவில யாருமே இல்லை. நீ ஆறு மணிக்கு போனாப் போதும். தேவையில்லாம வெயில்லே காயாதே, கறுத்துடுவே."

பாவம், களங்கமில்லாத ஒரு பெண். சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு வீட்டுக்குள் நுழைந்தாள். நான் கதவை மூடினேன். இன்று அந்தத் தைரியத்தை நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. நூலிழைத் தொடர்புமில்லாமல் எல்லாவற்றையும் கழற்றுவதென்பது தொன்று தொட்டுத் தொடங்கிய பலவீனம். வெளிச்சமும் வேண்டும். இதில்

அவளுக்கும் வெட்கமில்லை. அப்படியே படுத்துக்கொண்டு தொடக்கூடாது என்பாள். தொட்டுத் தடவி முத்தமிட்டு . . . அவ்வளவுதான். சாயங்காலம் போய்விடுவாள். நான் வாரச் சம்பளம் கொடுக்க ஆரம்பித்தேன். பகல் நேரங்களில் இங்கே இருக்கும் நான் வாராவாரம் எப்படிச் சம்பளம் கொடுப்பேன்? காசுக்கு முடை வந்தது. அவளுக்கு அது பிரச்சினையில்லை. வீட்டில் கேட்க ஆரம்பித்தார்கள். அவள் எதையும் கண்டுகொள்ளாமல் வந்துகொண்டிருந்தாள். ஓரிரண்டு மாதங்களாக இது தொடர்ந்தது. அம்மாக்காரி அறிந்து வீட்டுக்கு வெளியே வந்து நின்றுவிட்டேனா பாரென்று குதித்தாள். அம்மா வெளியே நின்று அலறுகிறாள். இவள் சாவகாசமாக எழுந்து பாவாடையை உடுத்துகிறாள். இதற்கான உதவிகளுக்கு நானிருக்கிறேன். சத்தம் இப்போது வீட்டின் முன்புறம் கேட்டது. மூடியிருந்தக் கதவைத் திறந்தேன். அம்மாக்காரி முற்றத்தில் ஏறி நின்றாள். நான் சர்வ சாதாரணமாகச் சொன்னேன்:

"இறங்கு, எந்தப் பிரச்சினையாக இருந்தாலும் வேலிக்கு வெளியே நின்னுப் பேசினா போதும். இறங்கு."

அம்மாக்காரி விடுவதாக இல்லை: "வேலைக்குப் போற புள்ளயை மயக்கி நீ வீட்டுக்குள்ள அடைப்பே, இல்லையாடா?"

"மயக்குறதுக்கு நான் என்ன மந்திரவாதியா?"

"பின்னே, எப்படிடா அவள் உள்ள வந்தா?"

"அதை வீட்டுக்குப்போன பிறகு உம் மககிட்ட கேளு."

மாலா வெகு இயல்பாக இறங்கி வீட்டுக்கு நடந்தாள். அதற்குள் ஆட்கள் வந்து கூடி, தங்கள் உபதேசத்தை ஆரம்பித்தார்கள்:

"சத்தம் போட்டேன்னா உனக்குத்தான் கேவலம். அவன் கூப்பிட்டான்னு ஒரு பொட்டப்புள்ளை உள்ள போயிடலாமா? அப்ப அவ பேர்லதானே குற்றம்?"

நான் உபதேசியார்களுக்கு உத்தரவிட்டேன்: "உங்க அபிப்பிராயமெல்லாம் இங்க தேவையில்லை. நல்லாப் பார்த்தீங்கள்லே, இப்ப சீன் முடிஞ்சுபோச்சு. இடத்தைக் காலி பண்ணுங்க."

அடுத்த நிமிடம் ஊர்க்காரர்கள் பிளேட்டைத் திருப்பினார்கள்: "திமிரைப் பாரேன் . . . வழியில போற பொம்பளைப் புள்ளையைப் பிடிச்சி

வீட்டுக்குள்ள அடைச்சிட்டு . . ."

இத்துடன் என்னுடைய டிராக் மாறியது. இரண்டு மூன்று வருடங்கள் அவளைப் பார்ப்பதற்கான வாய்ப்புக் கிடைக்கவில்லை. வேலைக்குப் போவது நின்றது. அவளுக்கு என்னைப் பார்க்க ஆசை. நானும் பிசியாகிவிட்டேனா? முதல்முறையாக ஜெயிலுக்குப் போய்விட்டு வந்து, அண்ட சராசரங்கள் அனைத்தின் மீதும் கோபத்தில் திரிகிறேன். இதில் காதலுணர்வுகளுக்கு இடமேது?

ஒருநாள் 'வாழி சசி' எனும் ஒட்டுப்பெயருள்ள நண்பனொருவன் வந்தான். மகாபோக்கிரி. நான் மட்டுமென்ன? இனம் இனத்தோடு சேரும். எங்கள் இனத்தாரிடையிலான அறிமுகங்களில் பெருமளவும் கள்ளுக் கடையில் வைத்து ஒரு அடிதடியின் மூலம்தான் உருவாகும்.

தட்டாமலையிலுள்ள தொட்டாவாடி கள்ளுக்கடை. மூக்கில் ஈ உட்கார்ந்தாலும் போட்டுத்தள்ளுகிற வயது. அங்கே, *ஊச்சாளிகள் வேளை என்று ஒன்று தனியாக ஒதுக்கப்பட்டிருக்கும். சாயங்காலம் ஆட்கள் கூடுவதற்கு முன்புள்ள பிற்பகல் நேரம். கடையில் கூட்டம் இருக்காது. சாயங்காலத்திற்கான சமையல் வேலைகள் மட்டும் நடக்கும். ஒரு அடிதடிக்கான எல்லா முஸ்தீபுகளையும் கடைக்காரன் செய்து வைத்திருப்பது போல் தோன்றும். கள்ளுக்கடை என்பது ரௌடிகள் பாவலா காட்டுவதற்கான ஒரு வெளி. இதன் நாளைய தேவையைக் கவனத்தில்கொண்டு அதிக சேதாரங்கள் ஏற்பட்டு விடாமல் அவர்கள் பார்த்துக்கொள்வார்கள்.

இதற்கு, கடை முதலாளியின் ஆதரவும் தேவை. என்றால்தான் பாவலா விலை போகும். கள்ளுக்கடைகளின் ஃபர்னிச்சர் என்பது உழுத்துப் போன பெஞ்சும் மேஜைகளும்தான். தட்டுப்பட்டால் தரையில் கிடக்கும். அடிதடியை நிகழ்த்திவிட்டு நஷ்ட ஈட்டை கேட்டுக்கொடுக்கும் ரௌடி நான். கணக்கெல்லாம் பார்க்க மாட்டேன். அன்றில்லாவிட்டாலும் கொடுத்துவிடுவேன். இப்படியான ரௌடிகளை முதலாளிகளே வளர்த்துவார்கள்.

ஒசியை விரும்பாத ரௌடி என்பதால் நான் மேஜைமீதுதான் உட்காருவேன். "உட்கார்றதெல்லாம் சரிதான்; மேசைக்கு உத்தரவாதமில்லை. உடைஞ்சா காசு தரணும்." சப்ளை செய்பவன் தமாஷாகச் சொல்வான்.

ஒருநாள் நான் கள்ளுக்கடைக்குப் போகும்போது மேஜையின்மீது வாளி சசி வீற்றிருந்தான். "ம். . .க்கும்" என்னுடைய வருகையை உணர்த்தியும் அவன் கண்டுகொள்வதாக இல்லை. எட்டி ஒரே உதை. ஒரு வாளி சசி, இரண்டு குப்பிக் கள்ளு, மூணு குப்பி. இவ்வளவும் மேஜையோடு தரையில். எழுந்திருப்பதற்கான கால அவகாசமில்லாமல் உதைத்தேன். மாப்பிளை தரையில் கிடந்து மூச்சுவாங்குகிறான். தாங்கியெடுத்து பெஞ்சில் உட்கார வைத்தேன். சமத்துவம் இனிமேல்தான். நானும் உட்கார்ந்தேன். கொட்டியக் கள்ளை வட்டியுடன் கொடுத்தேன். நட்பு முகிழ்த்தது.

நட்புகொண்ட ஒரு மாதத்திற்குப் பிறகு, வாளி சசி காரில் என்னைப் பார்க்க வந்தான். மூத்தவர்கள் முந்திரி உடைக்கவும் இளவல்கள் பள்ளிக்கூடத்திற்கும் போயிருந்தார்கள். உடற்பயிற்சியெல்லாம் முடித்து மசில்களில் எண்ணெய் தடவி அப்படியே நான் வீட்டின் முன்னால் சயனித்திருந்தேன். வழக்கம்போல் தனிக்காட்டு ராஜாவாக!

வந்தவன் சொன்னான்: "மாப்ளே, நாளைக்கு ஒருத்தி வருவா, நான் படியும்னு எதிர்பார்க்கவே இல்லை. உன்னோட வீடுன்னு சொன்னதும் உடனே ஒத்துக்கிட்டா. நல்ல உருப்படி. ஃப்ரெஷா இருக்கு. என் அதிர்ஷ்டம் . . . கார் இருக்குன்னு சொன்னதும் தைரியமா வர்றேன்னுட்டா."

"பிரச்சினை எதுவுமில்லையே?"

"என்ன பிரச்சினை? ஒரு பிரச்சினையுமில்லை."

"பிரச்சினை வந்துடக்கூடாது. காரியத்தை முடிக்கணும்; இடத்தைக் காலி பண்ணணும். சரியா?"

"மாப்ளே, முதல்லே நீ கேட்டுடாதே. நான் அவளை இணக்கமாக்கி எடுக்கறேன். பிறகு பாத்துக்கலாம்."

"எனக்கு வேண்டாம் உன் எச்சில்."

"அப்படின்னா சந்தோசம்."

மறுநாள் அவனேதான் கார் ஓட்டிக்கொண்டு வந்தான். கூட வந்தவள் மாலதி. எனக்குக் கோபம் வந்தது. அடக்கிக்கொண்டேன். இவள் இதையும் செய்வாள்; இதற்கு மேலும் செய்வாள். என்னைப் பார்த்ததும் அண்ணா என்று கூப்பிட்டாள்.

ஸ் . . . என்று அதட்டிவிட்டு சசியிடம்: "வண்டிச் சாவியை எடு. நான் கடைவரைக்கும் போயிட்டு வந்திடறேன்" என்றேன்.

இந்த நேரத்தில் விமானச் சாவியைக் கேட்டாலும் தந்து விடுவான். எனக்குப் பெரிய அளவில் கார் ஓட்டத் தெரியாது. மெல்ல, ஃபர்ஸ்டிலும் செகண்டிலுமாக உருட்டிக்கொண்டுபோய் புத்தன்சந்தை ஜங்ஷனில் நிறுத்தினேன். கடையில் போய் ஒரு சிகரெட் வாங்கிப் பற்ற வைத்து மெதுவாக இழுத்தேன். அன்று காரில் போவதென்பது கௌரவமான விஷயம். கிராமப்புறமல்லவா?

ஒரு கார் நிற்கிறதே, இது யாரோட கார் என்று சில மானஸ்தர்கள் விசாரிக்கிறார்கள். "இந்த வண்டியை இதுவரைக்கும் நான் பார்த்ததில்லையே" என்று கடைக்காரனிடம் சொல்கிறான் ஒருவன். ஏதோ எல்லா வண்டியும் இவன் வீட்டில் வந்துதான் ரெஜிஸ்ட்ரேஷனாகும்போலிருக்கிறது.

"ஸ் . . . அவன் கொண்டு வந்த வண்டி."

"எவன்?"

"மணியன் . . ."

"எந்த மணியன்?"

"திருடன்."

"என்னது?"

"ஸ் . . . ஸ் . . . அதோ நிக்கிறான், கடைத்திண்ணையில . . ."

"ஆங் . . . பஞ்சு வெச்ச சிகரெட்தான் இழுப்பாரு. திருட்டுப்பசங்களுக்கு வந்த வாழ்வு. இதில கார் வேற" என்று சொல்லிவிட்டு மெதுவாக நகர்ந்தான்.

விசாரிக்க மேலும் ஆட்கள் வந்தார்கள். ரோட்டின் எதிர்ப்புறம் நான் மட்டும்தான் நிற்கிறேன். இருந்தும் கேட்டார்கள்: "யாரோட கார்?" திருடன் காரில் வந்தான் என்பதை அவர்களால் நம்பவே முடியவில்லை.

நேரமாகி விட்டது. சசியும் மாலாவும் வந்த வேலையை முடித்திருப்பார்கள். இடையிடையே மாலதிமீது கோபமும் வந்தது. அசிங்கம் பிடித்த வர்க்கம்.

காரில் ஏறி மிகவும் சிரமப்பட்டு வளைத்தேன். எஞ்சின் நின்றால் அவமானம். திருடனின் எஞ்சின் நிற்பதென்பது வேடிக்கைக்குரிய விஷயம். இருபுறமும் வண்டிகள் வந்து வரிசை கட்டின. ஒண்ணும் அவசரமில்லை. அப்படியே நில்லுங்க. திருப்புவதற்கு இரண்டு நிமிடங்களாயின.

மீண்டும் கிசுகிசு வார்த்தைகள். நான் வந்ததே இதற்குத்தானே!

"மணியன் கார் ஓட்டுறான் பாத்தியா?"

"எந்த மணியன்?"

"திருடன்."

உடனே கை வாயருகில் போகும். திமிரைப் பாரேன் என்பதுபோல் கோபத்துடன் முறைப்பார்கள். நான் பார்த்தால் உடனே முகத்தைத் திருப்பிக்கொள்வார்கள். நான் வண்டியையும் திருப்பிக்கொண்டு நேராக வந்துவிட்டேன். வண்டியை வீட்டின் முன் நிறுத்தினேன். வீட்டுக்குள் என்னவோ கசமுசா. நான் கண்டுகொள்ளவில்லை. அது அவர்கள் பாடு. நிழல் தாங்கலில் ஓய்வெடுப்பதற்காக போட்டிருந்த கயிற்றுக்கட்டிலில் படுத்து ரேடியோவைத் திருகினேன். அன்று கேட்ட பாட்டு இன்றும் நினைவிலிருக்கிறது: 'அரையிலொற்ற முண்டுடுத்த பெண்ணே . . .' ஒவ்வொரு வாழ்க்கைச் சூழலுக்குமேற்ப பாட்டின் பின்னணிகள் மட்டும் மாறும். வாழ்க்கையே இதுதானே? கசமுசா ஓசை இப்போது வேறுவிதமாகக் கேட்டது. பிரச்சினைதான்போலிருக்கிறது. கதவைத் தட்டினேன். மாலதி வந்து திறந்தாள். அவளது கண்கள் அழுதுக் கலங்கியிருந்தன. ஜாக்கெட்டின் ஓரப்பகுதி கிழிந்திருந்தது. அவள் சொன்னாள்:

"நீ இப்படிப்பட்டவன்னு நான் நினைக்கவே இல்லை. உன்னைப் பார்க்கிற ஆசையிலதான் நான் இவன்கூட வந்தேன் . . . உனக்குக் கோபம் வரணும்னு இவன்கூட வீட்டுக்குள்ளேயும் வந்தேன் . . . அப்படி நான் பண்ணியிருக்கக்கூடாது . . ."

சசிக்கு எதுவும் புரியவில்லை: "என்ன மாப்ளே விஷயம்?" என்றான்.

எனக்குக் கோபம் வந்தது.

"என்னவெல்லாமோ சொல்லிட்டு வந்தா மாப்ளே . . . இந்த ஜென்மத்துல அவ சம்மதிக்கமாட்டா போலிருக்கு . . . கொஞ்சம் பாத்தாவது மனசைத் தேத்தியிருப்பேன். அதுக்கும் மாட்டேன்னுட்டா . . ."

"போடா, இங்கிருந்து . . . இனிமேல் இந்த வேலைக்குன்னு நீ இந்த ஏரியாவிலேயே வந்துடக்கூடாது."

"மாப்ளே, நீ நினைக்குறதுபோல நான் அவளை ஏமாற்றி அழைச்சிட்டு வரலை. நாங்க வர்றது அவளோட அம்மாவுக்கும் தெரியும் . . . நான் இவளைக் கல்யாணம் பண்ணிக்கிறதா சொல்லியிருக்கேன். அவளோட அம்மாவுக்கும் சம்மதம்தான். நீ இவளைக் கட்டிக்கிட்டா மணியன் தொந்தரவு பண்ணமாட்டான்னும் சொன்னாள். அந்த மணியன் நீதான்னு இப்பதான் தெரியும். மாப்ளைக்கு வேணும்னா எனக்கு வேண்டாம்."

"நான் எதையுமே கேட்க விரும்பலை; நீ இடத்தைக் காலி பண்ணு."

'அரையிலொற்ற முண்டுடுத்த பெண்ணே . . .' பாடலைக் கேட்கும்போதெல்லாம் எனக்கு இந்தச் சம்பவம் நினைவுக்கு வரும்.

இன்று அவள் வாழத்துங்கலில் இல்லை. மய்யநாட்டில் என்னுடைய உறவினர் ஒருவரின் வீட்டுப் பக்கத்தில் வசிக்கிறாள். நான் எப்போதெல்லாம் அந்த ஊருக்குப் போகிறேனோ அப்போது எங்காவது ஓரிடத்தில் அவளைச் சந்திப்பேன். ஏதோ ஒரு நியதிபோல் இது நிகழ்கிறது. அதே தடித்த உடல் வாகுதான். இன்று அவள் அம்மாவாகி பாட்டியுமாகி விட்டாள். என்னைப் பார்க்கும்போதெல்லாம் அவள் மனம் ஏதோ உணர்வுகளுக்கு ஆட்படுவது வெளிப்படையாகத் தெரியும். இப்போதும் அவள் என்னுடன் வரத் தயாராகவே இருக்கிறாள். ஒருநாள் சொன்னாள்: "என்னைக்காவது ஒருநாள் நீங்க வருவீங்க. அன்னைக்கு நாம ஒண்ணா வாழப்போறோம். இது நிச்சயம் நடந்தே தீரும்."

நான் சொன்னேன்: "மாலா அது இந்தப் பிறவியில நடக்காது. மனசுங்கிறது புதைஞ்சுபோன ஒரு எலும்பு. அதில ரத்தம் நீரெல்லாம் இருக்காது. இனி நீ அதைப் பற்றி நினைக்கவே வேண்டாம்." அவள் பதிலே சொல்லாமல் நடந்தாள்.

இப்போதும் நான் கேலி செய்வதுண்டு: "உருண்டு விழுந்துடாதடீ. நான் தாங்கிக்க மாட்டேன். பிறகு, ஃபயர் எஞ்சின்தான் வரணும்."

அவள் விரக்தியுடன் சிரிப்பாள். நீர் ததும்பும் கண்களால் ஏறிட்டுப் பார்ப்பாள். உனக்கு நான் இவ்வளவுதானா என்பதுபோல். அவளது உடல்போலவே மனதும் அன்பும். ஆனால், நான் பழைய எல்லாவற்றையும் அள்ளி மனத்திற்குள் வைத்தே தீ மூட்டி விட்டேன். அதன் இறுதிக்கட்டம் தான் இந்த நினைவுக்குறிப்புகள். அனைத்தையும் இறக்கிவைத்து உள்ளறைகளைக் காலியாக வைக்கப்போகிறேன். இறைவன் இந்த உயிரை எடுக்கும்வரை மகனுடன் அவனுக்கு எந்தத் தொந்தரவையும் கொடுக்காமல் வாழ்ந்து முடித்துவிட வேண்டும் என்ற ஒரு ஆசை மட்டும்தான் இப்போது.

வாளி சசியின் அந்தச் சம்பவம் நடந்த கொஞ்ச நாட்களுக்குப் பிறகு, ஒருவன் என்னைத் தேடி வந்து ஏதோ எழுதியிருந்த ஒரு சார்மினார் சிகரெட் கவரைத் தந்தான். அதில்: அண்ணன் இங்கே வரவும். சில விஷயங்கள் பேச வேண்டியதிருக்கிறது என்று எழுதியிருந்தது. என்னுடைய ஒரு சகோதரியின் வீட்டுக்கு வரச் சொல்லி நான் பதில் எழுதிக் கொடுத்தேன். அது ஒரு ஓலை வீடு. சகோதரி அப்போது வேறொரு வீட்டில் வசித்து வந்தாள். எனக்குத்தான் சாவி தேவையில்லையே. பூட்டு "வலிக்குது அண்ணா மெதுவா" என்று சொல்லித் திறந்து கொடுத்தது. நான் உள்ளே ஏறியதுதான் தாமதம், காத்திருந்தவள்போல் மாலா ஓடோடி வந்தாள்.

"அண்ணன் என்னைக் கல்யாணம் பண்ணிக்கணும். என் நெஞ்சுக் கூட்டில மூச்சிருக்குற வரைக்கும் அந்தத் திருடனுக்கு உன்னைக் கட்டி வைக்க மாட்டேன்னு அம்மா பிடிவாதமா இருக்கா. நீ அங்க வந்தாத் தடுக்குறதுக்கான ஏற்பாடுகளோட சில ரௌடிப்பசங்களையும் சேர்த்துக்கிட்டு மாப்பிளை தேடுறா . . . நானும் பிடிவாதமாத்தான் இருக்கேன். எனக்குன்னு குழந்தைப் பேறு இருக்கும்னா, அது ஆணாப்பிறந்த மணியனோட."

"அதுக்கு இன்னும் காலமிருக்கு."

"இல்லை, ராத்திரியானா உனக்கு எப்ப என்ன தோணும்னு யாருக்கும் தெரியாது. அதோட போலீஸ் பிடிச்சு உன்னை உள்ள போடும். பிறகு திரும்பி வர்றதுக்கு ஒரு வருடமாகுமோ ரெண்டு வருடமாகுமோ. அதுக்குள்ள நான் வேற எவன் வாயிலாவது விழுந்திருப்பேன்."

"அப்படின்னா . . . வா, பாயை விரி."

ஏழெட்டு நிமிடம் கழிந்து நான் எழுந்த பிறகும் அவள் வெட்டிப்போட்ட தடிபோல் அப்படியே கிடந்தாள். எந்த அசைவுமில்லாமல் செத்துக்கிடப்பவள் போல். எழுந்திருக்க விருப்பமில்லையா என்று கேட்டேன்.

"இல்லை, என்ன வேணா பண்ணிக்க,"

"புரியாம பேசாதே, பிரச்சினையாயிடும்" என்றேன்.

"பிரச்சினையாகணும் . . ." அவள் பிடிவாதமாக நின்றாள்: "நான் செய்யிறது தப்பாக இருக்கலாம். ஆனா, பழி தீர்க்கணும். என் அம்மாவை . . . அவ என்னை வித்துடுவா. எனக்குத் தெரியும். நீ எனக்குக் கிடைக்கமாட்டே."

"சரி, உன் விருப்பம்." எந்த எதிர்விளைவுமில்லாமல் முடிந்தது.

"போய்விட்டது" என்றாள். எனக்குச் சிரிப்பு வந்தது.

"சரி, உனக்கு எதுவும் வேண்டாமா?"

"வேண்டாம்" என்று சொல்லிவிட்டு எழுந்தாள். "ஏதாவது நடக்குறதா இருந்தால் அது இன்னிக்கே நடக்கணும்." எந்தக் கூச்சமுமில்லாமல் சொன்னாள்.

"நீ சசியோட கஸ்டடியில இருக்குறவ இல்லையா?"

இல்லையென்று தெரிந்தும் கோபம் வருவதற்காகவே கேட்டேன். கையை நீட்டி கன்னத்தில் ஒன்று வைத்தாள். திரும்பவும் அடித்தாள். மனதில் குதூகலத்தையும் உடலில் வலியையும் சேர்ந்து அனுபவித்தது அப்போதுதான். பெண்களுக்கான அகமனமென்று ஒன்றிருக்கிறது. அதில் அடி விழுந்தால் அடித்தவனுக்கும் வலிக்குமென்று என்னைப் புரிய வைத்ததும் இந்த நிகழ்வுதான்.

அவள் உடுத்தியிருந்தத் துணிகளை வாரிச்சுருட்டிக்கொண்டு நடந்தாள். யாராவது பார்ப்பார்கள் என்றெல்லாம் யோசிக்கவே இல்லை.

நான் முடிவு செய்தேன். இவள்தான் என்னுடைய வாழ்க்கைத்துணை. நான்

எவ்வளவு பெரிய திருடனாக இருந்தாலும் இவள் என்னை உதாசீனம் செய்ய மாட்டாள்.

இடையே ஆர்எஸ்எஸ்சில் சேர்ந்தேன் என்றாலும் இடதுசாரி மனோபாவம்தான் மேலோங்கி நின்றது. அன்று நான், சிபிஎம். இரவிபுரம் லோக்கல் கமிட்டி உறுப்பினரும்கூட. அதில் ஸ்டான்டிங் கமிட்டிபோல் தீவிரமானவர்களின் ஒரு பிரிவிருந்தது. நான் அதன் வைஸ் பிரசிடென்ட். எங்கள் குடும்பத்துடன் நெருக்கமான தோழர் கார்த்திகேயனின் பொறுப்பில் தான் இரவிபுரம் கமிட்டி இயங்கி வந்தது. மரணமடைவதுவரைக்கும் தோழர்தான் இதன் தலைவராக இருந்தார். நான் அப்போது அரசியலிலும் கலை, பண்பாட்டுச் செயல்பாடுகளிலும் ஈடுபட்டு நல்லவனாக இருந்தேன். வாழத்துங்கலின் பழமைச் சிறப்புமிக்க கெஜிஎம் வாசிப்புசாலையின் துணை நூலகரும் நான்தான். எங்கள் வீட்டினருகிலுள்ள புத்தன்சந்தை ஜங்ஷனில் வாசிப்புசாலை இருந்தது. இரவு நேரங்களில் எனக்குப் புத்துணர்ச்சி ஏற்படுமென்பது பிறவிக்குணமல்லவா? வாசிப்புசாலையைத் திறந்து வைத்து இரவு முழுவதும் உட்கார்ந்து வாசிப்பேன். சிலர் இப்படிக் கேட்டதாகவும் அறிந்தேன்:

"வாசிப்புசாலையில என்ன வெளிச்சம்?"

"திருடுறதைப் பற்றி பிஎச்.டி பண்ணப்போறானோ?"

"அதுக்கான புத்தகமெல்லாம் அங்கே இருக்குதாமா?"

"நான் அதுக்குள்ள ஏறினதே கிடையாது."

"நானும் போனதில்லை."

"ஒருவேளை இருக்கலாம்; அல்லது இவனே புதுசா ஒண்ணு எழுதுறானா இருக்கும்."

ஹ. . . ஹா . . . ஹி . . . ஹீ.

அப்போது நடமாடும் நூலகமும் இயங்கி வந்தது. சைக்கிளில் வீடுகள் தோறும் புத்தகங்கள் வினியோகிப்பேன். பெண்கள் அப்போது வாசிப்புசாலைகளுக்கு வருவதில்லை. வர விடுவதில்லை. அவர்களுக்குத் தேவைப்படுகிற புத்தகங்களை வீடுகளுக்குக் கொண்டுபோய்க் கொடுப்பேன். நன்றாக நடந்துகொண்டிருந்தது. எல்லாமே போய்விட்டது.

பண்பாட்டு ரீதியிலான வாழத்துங்கலும் இன்றில்லை. சங்கம்புழ சொன்னதுபோல் நம்முடைய பிரக்ஞையின் ஒரு பகுதியில் அமாவாசை.

இதனிடையே மாலதியுடனான நெருக்கமும் அன்பும் மேலும் அதிகமானது. எனக்குப் பொருத்தமானவள் என்பதைப் புரிந்துகொண்டேன். தொடர்ந்து அவள் வீட்டுக்கு வருவதும் நாங்கள் இணைசேர்வதும் நடந்து கொண்டிருந்தது. யாராவது பார்த்து விடுவார்கள் என்ற பயம் இருவருக்குமே கிடையாது.

"யாராவது வந்தா என்ன பண்றது?" நான் கேட்டேன்.

"வரட்டும்."

"பாத்துட்டாங்கன்னா?"

"பாக்கட்டும், எல்லார்கிட்டயும் இருக்கிறதுதானே?"

"இருந்தாலும் . . ."

"பாக்கணும்னுதானே நான் விரும்புறேன்."

"கெட்டபேர் வந்துடாதா?"

"என்ன கெட்ட பேர்? ஒருத்தனோட மட்டும்தானே? இந்தக் கெட்ட பேரை அவங்களாவே மாற்றிக்க முடியும்."

"அதெப்படி?"

"ஒண்ணுமே தெரியாது" என்று சொல்லிவிட்டு: "என்னைக் கட்டிக்க" என்றாள்.

அவளது விருப்பம்போலவே நடந்தது. சங்கம வேளையில் ஒருநாள் வெளியே ஆரவாரம்.

அவள் மிகுந்தத் தைரியத்துடன் சொன்னாள்: "அப்பாடா, இதுக்கு இவ்வளவு நாளா?"

நான் அவசர அவசரமாக உடுப்புகளை அணிந்தேன்.

"ஏன் இவ்வளவு அவசரப்படுறே? அவங்க உடனே ஒண்ணும் போயிடப்

போறதில்லை . . . இல்லேன்னா அண்ணன் போ . . . நான் இதையெல்லாம் கட்டிட்டு வந்துடறேன்."

நான் வாசலைத் திறக்கும்போது யாரோ பயமுறுத்துகிறார்கள்: "உள்ளே ஒளிஞ்சா இருக்கே? உடைங்கடா வாசலை."

வீடு கட்டுவதற்காக வைத்திருந்த கமுகுத் தடி உள்ளே இருந்தது. அதை எடுத்து வாசலருகில் வைத்தேன்.

"எவன்டா அவன் வாசலை உடைக்கிறவன்?" என்றபடியே சட்டையின் கடைசிப் பொத்தானையும் போட்டுவிட்டு வாசலைத் திறந்தேன். கூடி நின்றவர்கள் ஒரு இரண்டடி பின்வாங்கினார்கள். ஒரு நிமிட நிசப்தம். சுற்றிலும் பார்த்தேன். மிகப் பெரிய படையே திரண்டு வந்து வீட்டை முற்றுகையிட்டிருந்தது. மாலாவின் மாமாவும் அதிலிருந்தார். இவரும் கம்யூனிஸ்ட்காரர்தான். சங்கமவேளையில் கையும் களவுமாகப் பிடிக்க வேண்டுமென்பது ஐயாவின் ஐடியாதான். புத்திசாலி மாமா.

நான் சொன்னேன்: "ஆர்ப்பாட்டமெல்லாம் இங்க வேண்டாம். அவனவன் வீட்டில வெச்சுக்குங்க. இது என்னோட வீடு."

"எங்கடா அவ? ஒளிச்சி வெச்சிருக்கிறியா?"

"ஒளிச்சி வைக்கிறதுக்கு அவ என்ன புட்டுக் கலயமா?"

அப்போது மாலதியும் பின்னால் வந்து நின்றாள்.

"இறங்குடீ கீழே."

நான் தடியுடன் முன்னால் வந்தேன்: "என் வீட்டுல இருக்கிறவள எவனாவது தொட்டீங்க . . ."

பிரச்சினையைக் கேள்விப்பட்டு கட்சிக்காரர்கள் வந்தார்கள். இது தோழர்களின் உள்விவகாரம். மாலதியின் அம்மாவும் மாமாவும் நானும் தோழர்கள் அல்லவா? கட்சி ரீதியாகப் பேசுவதென்றால் அதற்கும் தயார். எல்லோரும் அவரவர் வீடுகளுக்குப்போவதென்றும் விஷயத்தைப் பிற்பாடு கட்சி அலுவலகத்தில் விவாதிக்கலாமென்றும் முடிவு செய்யப்பட்டது. பிரச்சினை கட்சி அலுவலகத்தில் விவாதத்திற்கு வந்தது. மணியன் குற்றவாளிதான் என்பதில் மாற்றுக்கருத்தில்லை. ஆனால், ஊர் முழுவதும் அறிந்துவிட்ட நிலையில் அவளுடைய எதிர்காலம் . . ?

"கல்யாணம் பண்ணிக்கிட்டா பிரச்சினை தீரும்னா நான் ஏற்கனவே தயாராக இருக்கேன்."

"பிறகென்ன?"

பிரச்சினைக்குரிய அம்மா சொன்னாள்: "அவளை இவனுக்குக் கட்டி வைக்க முடியாது. இவன் இனிமேல் திருடமாட்டாங்குறதுக்கு என்ன உத்தரவாதமிருக்கு?"

நான் சொன்னேன்: "திருடமாட்டேன். கை வண்டியிழுத்தாவது அவளைக் காப்பாத்துவேன்."

"முடியாதுன்னா முடியாதுதான்." அம்மா விடாப்பிடியாக நின்றாள்.

விவாதம் வெற்றி வாய்ப்பை இழந்தது. அவளைப் பார்க்காமலிருக்கவும் முடியாது. அம்மாவின் கடுங்காவலில் இருப்பவளைப் பார்க்கவும் முடியாது. எனக்கு இன்னமும் புரியவில்லை. அந்த அம்மாவுக்கு என்மேல் ஏன் இவ்வளவு கோபம்? நான் திருடன் என்பது உண்மைதான். ஆனால், என்னை விடவும் மோசமானவர்களுக்குக் கட்டிவைக்கவும் தயாராகத்தானே இருக்கிறாள்? சரி, எதுவானாலும் இதை இப்படியே நீட்டிக்கொண்டு போவது சரியில்லை.

மாலதியின் அம்மா இல்லாத நேரம் பார்த்து மாலதியின் வீட்டுக்குப் போய் அவளைக் கூப்பிட்டேன். வந்தாள். கோயிலுக்குப்போய் இரண்டு துளசி மாலைகள் வாங்கி பரஸ்பரம் அணிந்துகொண்டோம். நான் சொன்னேன்: "இன்னையிலிருந்து நீ என் மனைவி. நாம ஒருவருக்கொருவர் நம்பிக்கையுடனும் நல்லபடியாகவும் வாழணும்."

அவளை என் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்தேன். ஏற்கனவே அங்கு நிறைய பெண்கள். நான்கு சகோதரிகளும் அம்மாவும். எல்லோரும் தாம்தூம் என்று குதித்தார்கள். மாலதியையும் போதுமான அளவுக்குத் திட்டினார்கள். அவள் சுகமாக கேட்டுக்கொண்டு நின்றாள்: "நீயும் உன் ஆட்களும் பரவாயில்லையேடீ. எங்க பையனை வசமா மயக்கிட்டியேடீ?" என்றெல்லாம் சொன்னார்கள். "நான் கல்யாணம் பண்ணிக்கொண்டு வந்தவ அவ. இந்த வீடு எனக்கும் பாத்தியப்பட்டதுதான். இனி அவ இங்கதான் இருப்பா."

இத்துடன் முடிந்து விடாதென்ற விஷயம் அம்மாவுக்கும் தெரியும். அவள்

சேரூர் குடும்பத்தின் காரணவரான வேலுப்பிள்ளை மாமாவைப் போய்ப் பார்த்தாள். மாமாவுக்கு என்னைப் பற்றி நன்றாகவே தெரியும். என் வாயிலிருந்து ஏதாவது கேட்டால் உள்ள மரியாதையும் இல்லையென்றாகி விடும். நீண்ட காலமாகவே காரணவர் பொறுப்பை தக்க வைத்திருப்பவர், அதற்கான பதவிசுகளையும் அறியமாட்டாரா என்ன? அவர் என் பக்கம் சேர்ந்துகொண்டார்: "அவனும் ஆளாயிட்டானே, அவனுக்குன்னு ஒரு பெண்துணை வேண்டாமா?"

"பத்தொன்பது வயசில பெண்துணையா? அவனோட மூத்தவளும் இளையவளும் இருக்கும்போது" என்று அம்மா.

"அம்மா சொல்றதிலேயும் நியாயமிருக்குடா மருமவனே" என்று சொல்லிவிட்டு: "சரி, நீ ஒண்ணு பண்ணு. உன் அவளுக்குக் கூடப்பிறந்தவங்க யாருமில்லையே? அந்த வீட்டுல அவளுக்கும் உரிமையிருக்கு. நீ அவளையும் அழைச்சிட்டுத் தைரியமா அவ வீட்டுக்குப் போயிடு." என்றார்.

"இது சரியா வரும்னு எனக்குத் தோணலை. அம்மாவைத் தெரியும் தானே? வேணும்னா முயற்சி பண்ணிப் பார்க்கலாம்." என்றாள் மாலதி.

வீட்டுக்குப் போனபோது அம்மா ஓங்கி நிற்கிறாள். கையில் வாளில்லாத குறைதான். மகள் மட்டும் உள்ளே சென்றாள். "நில்லுடா அங்கே" என்று சொல்லிவிட்டு, "திருடனை வீட்டுக்குள்ள விட முடியாது. இறங்குடா வெளியே" என்றாள். "சரி உள்ளே விடவேண்டாம். திருடன் வெளியே படுத்துக்குவான்" என்று சொல்லிவிட்டு, வீட்டின் முன்புறம் மாமரத்தின் முன் இறக்கி வைக்கப்பட்டிருந்த கடல்மணலில் உட்கார்ந்துகொண்டேன். வேறு போக்கிடமுமில்லை; வேலையும் இல்லை. இப்போது மனைவிக்கும் செலவுக்குக் கொடுக்க வேண்டும். சிக்கல்தான். எதுவானாலும் இனி திருடக்கூடாது.

வேலைக்குப்போக ஆரம்பித்தேன். செய்யாத வேலைகளில்லை. மனதில் எந்தப் பெரிய எண்ணங்களும் இல்லை. மனைவிக்குச் செலவுக்குக் கொடுக்க வேண்டும். கான்கிரீட் வேலைக்குக் கையாளாகப் போனேன்; மண் சுமந்தேன்; கை வண்டியிழுத்தேன்; சாணி சுமந்தேன். ஆனாலும் திருப்தியுடன் இருந்தேன். இரவில் சட்டையையும் வேட்டியையும் மாமரக்கிளையில் தொங்க விடுவேன். கிணற்றின் கரையில் குளிப்பேன். மாமரத்தின்கீழ் கடல் மணலில் ஒரு மாத காலம் வாழ்ந்தேன். டிசம்பர் மாதம். கடுங்குளிர். இந்தப் பரீட்சையில் ஜெயித்தாக வேண்டும்.

அட்வான்ஸ் கொடுக்கக் கொஞ்சம் காசு தேறியதும் ஒரு குடிசையை வாடகைக்கு எடுக்க வேண்டும். பாவம், மாலதி. இரவில் வீட்டிலிருந்து இறங்கி வருவாள். வெட்ட வெளிப் பகுதி. தனிமையில்லை. ஆர்வலர்கள் இருட்டில் மறைந்திருக்கக்கூடும். வெறுமனே பேசிக்கொண்டிருக்க மட்டும்தான் முடியும். இப்படியாக, வாழ்க்கையின் யதார்த்தத்தை அறிந்துகொண்டிருந்த ஒருநாள்:

அன்று சாணி சுமந்துவிட்டு வந்தேன். உடம்பு முழுவதும் துர்நாற்றம். குளிக்க வேண்டும். வீடு பூட்டிக்கிடந்தது. மகளையும் அழைத்துக்கொண்டு எங்கே போயிருப்பாள்? அந்தி நேரமானது. அவளிடம் கேட்க வேண்டும். அனுமதியில்லாமல் என் மனைவியை எப்படி அழைத்துக்கொண்டு போகலாம்? இரவானது. மறுநாள் ஆனது. புரிந்துவிட்டது. மகளைக் கடத்திக்கொண்டு போய்விட்டாள்.

அப்படியே தளர்ந்துபோய் மண்ணில் முகம் புதைத்து அழுதேன். மாலாவின் அன்புக்காக ஏங்கினேன். அதற்காக எந்த வேலை செய்யவும் திருட்டை ஒரேயடியாக விட்டுவிடவும் நான் தயாராக இருந்தேன்.

செம்மீன் திரைப்படத்தின் பரீக்குட்டியைப்போல், மூன்று நான்கு நாட்களாக அழுதழுதுத் தளர்ந்தேன். எனக்குள்ளிருந்த வேறொருவன் வெளியில் வந்து சொன்னான்:

"வெட்கமில்லையாடா உனக்கு; எங்காவது போய் அவளைத் தேடிப்பிடி."

அவர்கள் பிற்படுத்தபட்ட ஜாதியிலுள்ள ஒரு பிரிவைச் சேர்ந்தவர்கள். பந்தளத்தை அடுத்து, இந்தப் பிரிவினர் அதிகமாக வாழும் ஒரு ஊரிருக்கிறது. இவர்களுடைய குடும்பத்துடன் நெருக்கமான என் நண்பன் கோபால கிருஷ்ணன்தான் தகவல்களைச் சொன்னான். இரண்டுபேரும் நேராகப் பந்தளத்திற்குச் சென்றோம். பெரிய ஊர். இதில் அவர்களை எப்படித் தேடிக் கண்டுபிடிப்பது? இரண்டு நாட்களாகத் தொடர்ந்து விசாரித்தோம். கடைசியில், ஏமாற்றத்துடன் ஒரு சாயாக்கடையில் உட்கார்ந்திருந்தோம். எதிரில் சாயா இருந்தது. குடிக்க மனமில்லை. அவ்வளவு மனவேதனை. கண்ணீர் வடிந்துகொண்டிருந்தது. விஷயத்தைக் கேட்டறிந்த சாயாக் கடைக்காரன் சொன்னான்: "நீங்க தேடுற ஆட்கள் இங்க பக்கத்திலதான் இருக்காங்க." ஆச்சரியமாக இருந்தது. முதலில் சாயாவைக் குடி என்றான் கடைக்காரன். அது தொண்டைக்குள் இறங்கவில்லை. தொண்டை காய்ந்து வறண்டு போயிருந்தது. கொஞ்சம் வென்னீரில் வாய்க்கொப்பளித்த பிறகுதான் குடிக்க முடிந்தது. பிறகு சற்று

ஆறுதல் கிடைத்தது.

கடைக்காரன் தன் மனைவியை அழைத்து விஷயத்தைச் சொன்னான். உடனடியாகத் தகவல் சேகரிக்கப் புறப்பட்டவள் திரும்பி வந்து சொன்னாள்: "அவளைப் பார்த்து விஷயங்களைச் சொன்னேன். அவ இப்பவே இறங்கி வரத் தயாரா இருக்கா." கையில் திரும்பிச் செல்வதற்கான பஸ் கட்டணம் மட்டும்தானிருந்தது. அவளையும் அழைத்துக்கொண்டு போனால் தங்குவதற்கு ஒரு இடம் வேண்டும். மறுநாள் காலையில் வருவதாக அவளிடம் சொல்லச் சொன்னேன். அதற்குள் யாரிடமிருந்தாவது கடன் வாங்கி ஒரு வாடகை வீடு ஏற்பாடு செய்ய வேண்டும்.

ஊருக்கு வந்தோம். பலரிடமும் சென்று பணம் கேட்டுக் கெஞ்சினேன். மறுநாளே எல்லாவற்றையும் தயார் செய்துவிட்டு சொன்ன நேரத்தில் பந்தளத்தில் போய் இறங்கினேன். சாயாக்கடைக்குச் சென்றதும் கடைக்காரனிடம் ஐம்பது ரூபாய் கொடுத்தேன். அவன் அதை வாங்காமல் சொன்னான்:

"அம்மாக்காரி ஏமாற்றிட்டா. மகளை அவ வேறெங்கயோ கடத்திட்டுப் போயிட்டா."

"எங்கே?" நான் அலறினேன். எனக்கு வெறிபிடித்தது. இனி இந்த அம்மாவை சும்மா விடக்கூடாது. குத்திக் கிழித்துவிட வேண்டியதுதான்.

"தெரியாது . . . நீங்க வந்த விஷயத்தை அவ எப்படியோ கேள்விப்பட்டிருக்கா. பிறகு, வந்து எங்கிட்ட கேட்டா. என் பொஞ்சாதியிருக்காளே, அவ இங்கேயும் பேசுவா, அங்கேயும் பேசுவா."

நான் எல்லாவற்றையும் இழந்தவன்போல் திரும்பி நடந்தேன்.

ரதி: இப்படியிருக்கும்போதுதான் எனக்கு ரதியுடன் தொடர்பு ஏற்படுகிறது. இவள் என்னுடைய நேர் மூத்த சகோதரி லீலாவின் கணவரின் உறவுப்பெண். லீலா அக்காவின் கணவர் ஆசாரி சமூகத்தைச் சேர்ந்தவர். அக்கா அன்று அறிவுடன் நடந்துகொண்டதால் இன்று நல்ல நிலைமையில் வாழ்கிறாள். ஆசாரி அவளைத் தங்கம்போல் வைத்திருக்கிறார். எங்கள் வீட்டினருகில் குட்டிக்கடை என்னுமிடத்தில், கிளாஸ் எம்போரியம் அன்ட் கிளாஸ்வேர் என்ற நிறுவனத்தை நடத்தி வருகிறார். இரண்டு பிள்ளைகள். இன்றும் நான் முழுச் சுதந்திரமாக ஒரு வீட்டினுள் ஏறுகிறேன் என்றால்

அது இங்கு மட்டும்தான். அக்காவின் மகளும் என்மீது நல்ல பாசமாக இருப்பாள். என்னை இவர்கள் ஒருபோதுமே வேதனைப்படுத்தியதில்லை. ஆனால், நான் இவர்களைப் பலமுறை வேதனைப்படுத்தியிருக்கிறேன். அதிலொன்று ரதியுடன் நான் வைத்த தொடர்பு.

அக்காவின் திருமணத்தின்போது ரதி எட்டாம் வகுப்பில் படிக்கிறாள். அன்றைய பிரபல நடிகை விஜயலலிதா போலிருப்பாள். நாங்கள் பரஸ்பரம் பார்த்தால் சிரித்துக்கொள்வோம். அப்போது பிரபாத் தியேட்டரில் ஓடிய ஏதோ சினிமாவின் விளம்பரச் சுவரொட்டியில் ஒரு வார்த்தை இடம் பெற்றிருந்தது: 'என்னைக் காதலிக்காத, என்னால் காதலிக்கப்படும் என் ரதிக்கு' என்று. நான் இதை வெட்டியெடுத்து ரதியிடம் கொடுத்தேன். அக்கா எதையோ புடைத்துக் கொண்டிருந்தாள். நான் முன்புற அறையில் இருக்கிறேன். ரதியின் எதிர்வினையை அறியும் ஆர்வத்துடன். அதை வாங்கியதும் பதற்றத்துடன் உள்ளே சென்றாள். அவள் அப்போது பத்தாம் வகுப்பில் படிக்கிறாள்.

திரும்பி வந்து சொன்னாள்: "நான் அக்காகிட்ட இப்பச் சொல்லுவேன்." மீண்டும் உள்ளே சென்றாள். எனக்குத்தான் பயமென்பதே கிடையாதே. ஒரு ரோஜாப்பூவைப் பறித்து முகர்ந்தபடி உலகப் புகழ்பெற்ற காதலன்போல் அப்படியே உட்கார்ந்திருந்தேன். கொஞ்ச நேரத்தில் அக்கா சந்தைக்குப் போனாள். நான் ரதிக்கு அந்த ரோஜாப்பூவைக் கொண்டுபோய் அன்பளித்து அப்படியே ஒரு முத்தமும் கொடுத்தேன். அப்போதெல்லாம் எனக்குத் தாடி இருந்தது. அது காதல் தோல்விகளின் காலகட்டம். காதலிலே தோல்வியுற்ற காளைகளின் முகத்தைப் பார்த்தாலே தெரிந்துபோகும். கண்கள் பகுதியளவு மூடியிருக்கும். முகத்தில் ஏமாற்றத் தாடி படர்ந்திருக்கும். அன்றெல்லாம் காதலிக்காத இளைஞர்களோ இளைஞிகளோ இருக்கவே முடியாது. எல்லோருமே காதலர்கள்தான். ஆகவே, தோல்வியுற்றவர்கள் சதவிகிதம் அதிகமாக இருந்தது. நாடு முழுக்க இளந்தாடிகளின் பிரயளம்தான். நானும் அதிலொருவன். அவள் கேட்டாள்:

"இந்தத் தாடி எதுக்கு?"

"உன்னைப்போலுள்ள பெண்களை நம்ப முடியாது."

"பழைய கதையெல்லாம் எனக்கும் தெரியும். இனியாவது தாடியை எடுக்கலாமே?"

"எதுக்கு?"

"இல்லை, தாடியை எடுக்கணும்."

தாடி எடுக்கப்பட்டது. கண்களில் இரத்தவோட்டம் ஏற்பட்டது. கன்னங்கள் உப்பின. புத்துணர்வு கிடைத்தது. காதலில் விழுந்தவர்கள்போல் உதட்டில் சங்கீதம். அடிக்கடி அக்காவின் வீட்டுக்குப் போக ஆரம்பித்தேன். சில நேரங்களில் ரதி கட்டிலில் படுத்திருப்பாள். என்னைக் கண்ட பிறகும் அசைய மாட்டாள். நான் கன்னத்திலோ நெற்றியிலோ முத்தம் பதிப்பேன். நான் வரவில்லை என்றால் பள்ளிக்கூடத்திலிருந்து நேராக அவள் என் வீட்டுக்கு வந்துவிடுவாள். சந்தர்ப்பம் வாய்த்தால் கட்டிப்பிடிப்பேன். அவ்வளவுதான். காதலின் புனிதத்தைக் காப்பாற்ற முடிந்ததென்றால் இதில் மட்டும்தான். ஒரு நாள் எனக்குள் ஒரு பதற்றம் உருவானது. பகல் கனவு. ரதியை யாரோ என்னிடமிருந்து அபகரித்து விட்டார்கள். பிறகு, நான் தீவிரவாதியாகிறேன். பைத்தியம் பிடித்தவன்போல் திரிகிறேன். திடுக்கிட்டு விழித்தேன். இது சரிப்பட்டு வராது. நான் காதலிப்பேன். எவளாவது கடத்திக்கொண்டு போவாள். இனி விடக்கூடாது. சைக்கிளை நேராக, குட்டிக்கடை நோக்கி மிதித்தேன். அவள் மதியம் சாப்பிட்டுவிட்டு பள்ளிக்கூடத்திற்குப் போகத் தயாராகி, தலை முடியை இரண்டாக வகுந்து அதை மூன்றாக மடித்துக் கட்டுகிறாள். மெல்லிய முடியிழைகள் பதிந்த அவளது அழகிய கழுத்துப்பகுதி தெரிந்தது.

நான் மெல்லச் சென்று அதிலொரு முத்தம் பதித்தேன். கூச்சத்துடன் திரும்பினாள். நான் சொன்னேன்: "இனியும் என்னால காத்திருக்க முடியாது. நாளைக்குப் பத்து மணிக்கு அசெம்பிளி முடிஞ்சதும் நீ கிளாசுக்குப்போகாம நேராக டாய்லெட் போயிடு. பத்து பத்துக்கு வெளியே வா. பத்தேகால் மணிக்கு ஸ்கூல் எதிரில மய்யநாடு பஸ் வரும். அதில ஏறிடு"

அன்றெல்லாம் யூனிஃபாம், டை தெருப்புழுதியெல்லாம் கிடையாது. அதுவும் ஒருவகையில் நல்லதுதான். பாவாடையும் சட்டையும்தான் உடை. ஹை ஸ்கூல் மாணவிகள் விரும்பினால் தாவணி அணியலாம். இவ்வளவு அழகான உடையை இந்த உலகத்திலேயே பார்க்க முடியாது. வயதுப்பெண்களின் உடலழகை இவ்வளவு அப்பட்டமாக எந்த உடையாலும் காட்ட முடியாது. நம் திராவிட இனத்திற்கே உரித்தான ஒரு கலாச்சார ஆடை. இதை மற்றவர்களும் ஏற்க வேண்டுமென்ற கட்டாயமில்லை. அன்று, ஹை ஸ்கூல் மாணவிகளுக்கு வயது அதிகமாக இருக்கும். ஹை ஸ்கூலில் பாவாடையையும் சட்டையையும்

கட்டாயமாக்கினால் விளையாட்டு வினையாகி விடும். பிறகு, பள்ளிக்கூடத்திற்கே வரமாட்டார்கள். ஆகவேதான், தாவணிச் சலுகை. முதன்முதலில் தாவணி அணிவதென்பது அவர்களது ஒரு கனவு. தாவணிக்கனவு. நான் சொன்னேன்: "நீ கண்டிப்பா நாளைக்குத் தாவணியிலதான் வரணும்."

அவள் தாவணியெல்லாம் உடுத்திக்கொண்டு ஸ்கூல் ஜங்ஷனில் நிற்பாள். நான் இரண்டு ஸ்டாப்களுக்கு முன்புள்ள புத்தன்சந்தை ஸ்டாப்பிலிருந்து பஸ் ஏறுவேன். இதுதான் திட்டம். சரியான நேரத்தில் பஸ் வந்தது. நான் இன்னும் கொஞ்சம் தூங்கலாமென்று நினைத்துப் படுத்ததில் தாமதமாகி விட்டது. ஜங்ஷனுக்கு ஓடி வரும்போது பஸ் புறப்பட்டு விட்டது. பிரச்சினையாகி விடுமே. அவள் இன்றுவரை தனியாக எங்குமே போனதில்லை. சிக்கலாகி விடும்போலிருக்கிறதே என்று யோசித்துக் கொண்டிருக்கும்போது தேவதூதன்போல் என்னுடைய ஆத்ம நண்பன் காராளில்ரவி நான்கு பாக்கட் சிமிண்டை சைக்கிளில் வைத்து மிதித்துக் கொண்டு வருகிறான். அவனிடம் சொன்னேன்: "டேய் மாப்ளே, வாழ்க்கைப் பிரச்சினைடா, அந்த பஸ்சைப் பிடிக்கணும். அதில நான் வரச்சொன்ன பொண்ணு ஏறிடுவா. பஸ்சைப் பிடிக்க முடியலைன்னா பெரிய சிக்கலாயிடும்." ஓரளவு விஷயங்கள் இவனுக்கும் தெரியும். சைக்கிளைச் சாய்த்தான். இருநூறு கிலோ சிமெண்டும் ரோட்டில்.

"ஏறுடா." என்றான். அறுபது கிலோ பாரமுள்ள நான் அவனுக்கு ஒரு பொருட்டே இல்லை. அம்புபோல் பாய்ந்தான். பஸ் இடையே நின்று நின்று போகிறது. இரண்டு ஸ்டாப்கள் தாண்டியதும் பஸ்சைப் பிடிக்க முடிந்தது. அவள் ஜன்னலோர சீட்டில் தலையை வெளியே நீட்டி உட்கார்ந்திருந்தாள். நான் சைக்கிளின் பின்னாலிருந்துப் பார்த்தேன். அவள் முகத்தில் தென்பட்ட ஆறுதல் எந்தப் பெண்ணிடமும் இல்லாத ஒன்று. அடுத்த ஸ்டாப்பில் ரவி சைக்கிளை பஸ்சின் முன்னால் நிறுத்தினான். நான் பஸ்சுக்குள். சுபமான முடிவு. பள்ளிமுக்கில் இறங்கி, அங்கிருந்து பாரிப்பள்ளிக்குப்போய், அங்கிருந்து நிலமேல் சென்று அங்கிருந்து சடயமங்கலத்தை அடைந்து அங்கிருந்து புறப்பட்டு இளமாடு எனும் குக்கிராமத்தை அடையும்போது மதியம் இரண்டு மணி. இங்கேதான் என் பெரியம்மா வசிக்கிறாள்.

விரும்பிய ஒருத்தியை இழந்தேன். மற்றொருத்தி கிடைத்தாள். நல்லது. இனி நல்லபடியாக வாழ்ந்துவிட வேண்டியதுதான். இங்கேயே ஏதாவது வேலை தேட வேண்டும். நான்கு மணியிருக்கும். பயங்கரமான தலைவலி. பெரியம்மா சாயா போட்டுத் தந்தாள். இருந்தும் தலைவலி தீரவில்லை. ரதி

மிகுந்த உற்சாகத்துடனிருந்தாள். பாவம், சிறு வயதல்லவா? பெரியம்மா முதலில் திட்டினாள். பிறகு சொன்னாள்: "எந்தச் சாதி புள்ளையா இருந்தா என்ன? மனசுக்குப் பிடிச்சவகூட வாழணும். ஒரேயொரு வாழ்க்கை தானே, அது உடனே தீரும். நாங்களெல்லாம் பாண்டி விளையாண்டுகிட்டு நடந்த காலம் நேற்றுபோல இருக்கு. இவ்வளவுதான் வாழ்க்கை."

"தலைவலி நிக்கலை பெரியம்மா."

"ஒரு மைல் தூரத்திலதான் ஜங்ஷன், அங்க மெடிக்கல் ஸ்டோரிருக்கு."

வாங்கியே ஆக வேண்டும். நான் ரதியின் மௌன சம்மதத்துடன் மாத்திரை வாங்கக் கிளம்பினேன். கிராமப்புறங்களில் வாழ்பவர்கள் ஒரு மைல் என்று சொன்னால் இரண்டரை மைலாவது இருக்குமென்று புரிந்துகொண்டேன். திரும்பி வந்து சேர்வதற்கு ஒரு மணி நேரமானது.

பெரியம்மா வெற்றிலை மென்றுகொண்டிருந்தாள்.

"ரதி எங்கே பெரியம்மா?"

"அவளை அழைச்சிட்டுப் போயிட்டாங்க." மிக இயல்பாகச் சொன்னாள் பெரியம்மா.

நான் பதற்றத்துடன் கேட்டேன்:

"அழைச்சிட்டுப்போயிட்டாங்களா? யாரு, எங்கே அழைச்சிட்டுப் போனாங்க?"

"போலீஸ்காரங்கன்னு சொன்னாங்க . . . மூணுநாலு பேரா வந்தாங்க . . ."

"பெரியம்மா உடனே விட்டுட்டீங்களா?" எனக்கு அழுகை வந்தது.

பெரியம்மா புகையிலையை விரலால் எடுத்துவிட்டுச் சொன்னாள்: "செல்ல மவனே, பெரியம்மாவுக்கு இந்த வயசான காலத்தில போலீசுக்கெல்லாம் அலைய முடியாது. அதிலயும் நீ நல்ல மவன். என்னக் கதைகளெல்லாம் நடந்திருக்குன்னு யாருக்குத் தெரியும்."

கொஞ்ச நேரத்துக்கு முன் தைரியமூட்டிய பெரியம்மா.

"எங்க அழைச்சிட்டுப் போனாங்க?"

பெரியம்மா புகையிலையை வாயிலிட்டுவிட்டு கையை விரித்தாள்.

இளமாடு கிராமம் கொட்டாரக்கரா போலீஸ் சரகத்தில் வரும். ஓடியும் பஸ்சேறியும் ஆட்டோ பிடித்தும் எப்படியெல்லாமோ கொட்டாரக்கரா போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தேன். ஸ்டேஷன் எனக்கு என்ன புதிய இடமா? நேராக எஸ்ஐயைப் போய்ப் பார்த்துக் கேட்டேன்: "சார், இளமாடுலேருந்து ஒரு பெண்ணை இங்கே கொண்டு வந்திருக்கீங்களா? கொல்லத்தில யாராவது கம்பிளைன்ட் பண்ணி . . ."

அவர் துள்ளிக்குதித்துக் கடிக்க வந்தார்: "எந்தப் பெண், எங்கே? முதல்லே நீ யாருடா . . ?" கையில் லத்தி வேறு வைத்திருந்தார். "இங்க அப்படி யாருமில்லை. நீ விசாரிக்க வந்தவனாடா?"

அந்த எஸ்ஐக்கு என்னைத் தெரியாது போலிருக்கிறது. வருத்தத்துடன் திரும்பி நடந்தேன். 'அது சரி, பக்கத்தில இருக்குற கடையில ஒரு அட்ரஸ் விசாரிக்கலாம்; தாகமா இருந்தா ஒரு வீட்டில போய் கொஞ்சம் தண்ணி கேக்கலாம்; கேஸ் வந்திருக்கான்னு ஸ்டேஷன்ல போய் கேக்கக்கூடாதாமா? கேட்டா உதைக்க வர்றானுங்களே?

அடுத்த பஸ் பிடித்து நேராக வீட்டுக்குச் சென்றேன். அங்கே எந்த அசைவும் தென்படவில்லை. ஒரு அக்கா கேட்டாள்: "திருடுறது பத்தாதுன்னு இப்ப கடத்திட்டுப் போகவும் தொடங்கிட்டியா?"

ஆக, விஷயம் எல்லா இடத்திற்கும் பரவியாகி விட்டது. நான் புத்தன் சந்தையிலிருந்து ஒரு வாடகை சைக்கிளில் நேராகக் குட்டிக்கடைக்குப் போனேன். அங்கே வீட்டு முற்றத்தில் பச்சை நிறத்தில் ஒரு கார் நிற்கிறது. அப்போதுதான் எனக்கு நினைவு வந்தது, இளமாடில் நான் மாத்திரை வாங்கிவிட்டுத் திரும்பி வரும்போது எதிரில் வந்த கார் அல்லவா? குட்டிக்கடையில் இந்தக் காரைப் பலமுறை பார்த்திருக்கிறேன். காரின் நம்பர்கூட நினைவிருக்கிறது. ஆனால், அப்போது தட்டுப்படவே இல்லையே? எப்படித் தட்டுப்படும்? என்னை மகத்தானதொரு திருடனாக்கும் முயற்சியில் விதி ஈடுபட்டிருக்கும்போது சில விஷயங்கள் கண்களுக்குத் தட்டுப்படாது. அப்படியே பட்டாலும் மனத்தில் உறைக்காது. மனத்தில் உறைத்தாலும் மூளைக்கு எட்டாது.

வீட்டுக்குள் நுழைந்ததும் அழுத கண்களுடன் லீலா அக்கா கேட்டாள்: "நீ என்னை நிம்மதியா வாழ விடமாட்டியா?"

"ரதி எங்கே?"

"அவ அவங்க வீட்டுக்குப்போயிட்டா. ஆனா, நீ இனிமேல் அவளைத் தொந்தரவு பண்ணுவேன்னா, இங்க என்னோட வாழ்க்கையை நான் முடிச்சுக்குவேன். அவரை வேதனைப்படுத்த என்னால முடியாது. யாருக்கும் பாரமாவும் இருக்கமாட்டேன். உனக்குத் தெரியும்தானே, நான் சொன்னா சொன்னதுதான் . . . தூக்குப்போட்டுச் செத்துடுவேன்."

சைக்கிள் வேகமெடுத்து, நேராகப் பதினேழாம் நம்பர் கள்ளுக்கடையின் முன்னால்போய் நின்றது. பிறகு, ஐந்தாறு நாட்களாக கடை அடைத்துத் திறப்பது வரைக்கும் நான் அங்கேதான். ஏழாவது நாள் குடியை நிறுத்துவதாக சபதமேற்றேன்.

பெண்கள் அனைவருமே வஞ்சகிகள். எனக்கொரு பெண் தராத சமூகம் அதை விடவும் வஞ்சகமானது. பெண்களையும் சமூகத்தையும் பழிவாங்க வேண்டும். எந்தப் பெண்ணையும் இனி ஒருபோதுமே நம்ப மாட்டேன். தாயையும் சகோதரிகளையும் தவிர அத்தனைப் பெண்களுமே போகப்பொருட்கள்தான். எல்லாருமே காமரூபிணிகள். சமூகத்துக்கு நானொரு பாடம் கற்பிப்பேன். எந்த வடிவங்களில் எல்லாம் முடியுமோ அந்த வடிவங்களில் பழிவாங்குவேன். இனி நானொரு வெடிகுண்டு. சமூகத்தின்மீது வைத்த ஒரு வெடிகுண்டு.

பழிவாங்க வேண்டுமென்று வெறிகொண்டு அலைந்தேன்; பயமில்லை; அறமில்லை; நியாய உணர்வுகளில்லை; எதுவுமில்லை. வஞ்சிக்க முடிந்த எல்லாப் பெண்களையும் வஞ்சித்தேன். புறத்தோற்றத்தில் சாதுவாகவும் மனத்திற்குள் பிசாசாகவும் அவதாரமெடுத்தேன். தோற்றத்தைப் பார்த்து நம்பியவர்களுக்குத் துரோகமிழைத்தேன். அம்மாவை மேவி விட்டு அப்பாவின் அனுமதியுடன் பதிமூன்று வயதுச் சிறுமியை சினிமாவுக்கு அழைத்துச் சென்று வஞ்சித்தேன்.

## 63 - மீண்டும் மாலதி

இப்படியாக நான்கு வருடங்கள் கழிந்தன. ஒருநாள், எங்கள் ஊரிலுள்ள வயலில் ஒரு டர்க்கி டவலை விரித்துப் படுத்திருந்தேன். இதனிடையே சில திருட்டுகள் நடத்தி இரண்டு தடவையாக ஆறு மாத சிறைத் தண்டனையெல்லாம் அனுபவித்துவிட்டு வந்திருந்தேன். கேரளத்தில் நெல் வயல்களை இல்லாமலாக்கும் வேலை ஆரம்பித்திருந்த காலகட்டம் அது. வயல்கள் முழுவதும் தென்னங்கன்றுகளை நட்டு வைத்திருந்தார்கள். இதனிடையில் படுத்திருந்தேன். தூரத்தில் மெயின் ரோட்டில் போலீஸ் வேன் வந்தால் ஓடித் தப்பித்துவிட முடியும்.

திருடனால் ஒருபோதுமே அமைதியாகப் படுத்துத் தூங்க முடியாது. இடையிடையே காக்கி நிறம், கெட்டகனவுபோல் நேரில் வந்து துன்புறுத்தும். ஆகவே, குடி போதையுடன் உணர்வற்றுத் தூங்குவேன். இந்நிலையில் போலீஸ்காரர்கள் வந்தால் பெரும்பாலும் விட்டுவிடுவார்கள். அப்படியே பிடித்துக் கொண்டு போனால் போகட்டும் என்ற முடிவில்தான் தூங்குவேன். இப்போது நான் போதையில் இல்லை. ஆகவே, ஏதோ ஒரு வண்டி வருவதை உணர்ந்து காதுகளைக் கூர்மையாக்கினேன்.

ஒரு குடும்பம் வீடு மாறி வருகிறது. நிறைய சாமான்கள். டிரங்க் பெட்டிகள். வேடிக்கை மனோபாவம் உருவானது. வயலிலிருந்து பார்த்தால் வண்டி எங்கே போகிறது என்று தெரியும். ரோட்டிலிறங்கி நின்றேன். வண்டி அப்படியே சுற்றி வந்து நான் நிற்கும் பகுதிக்கே வந்தது. வண்டியை நோக்கி மெல்ல நடந்தேன். அதிலிருந்து ஒரு பெண் இறங்கினாள். மாலதி! கைகளிலும் கழுத்திலும் தங்கத்தின் மினுமினுப்பு. இன்னும் கொஞ்சம் தடித்திருந்தாள். கூடவே, ஒரு மெலிந்த அப்பாவி மனிதர். வயது சற்று அதிகமிருக்கும். என்னைக் கண்டதும் அவளது முகத்தில் சிறு மாற்றம். என்றாவதொரு நாள் சந்திப்போம் என்ற நம்பிக்கை இருந்தது. அது இவ்வளவு சீக்கிரம் நிகழுமென்று எதிர்பார்க்கவில்லை. ஒரு காலத்தில் என்னுடைய மனைவியாக இருந்தவள். இடுப்பில் ஒரு குழந்தையுமிருந்தது. என்னைக் கண்டதும்: "என்னம்மா இங்கே ஒரு சுத்தமுமில்லை" என்றெல்லாம் தமிழில் ஏதோ

புலம்பினாள். அம்மாக்காரி இறங்கி வந்தாள். வெற்றிபெற்ற மனோபாவத்துடன் என்னை ஏளனமாகப் பார்த்தாள்.

மாலதி எதையும் கவனிக்காதது போல் உள்ளே போனாள். இடையே ஓரக்கண்ணால் பார்க்கவும் செய்தாள். அவளது கண்களில் பயமுமிருந்தது. ஏதாவது பிரச்சினை பண்ணுவேனோ என்ற பயம். உண்மையில் நான் இவ்வளவு நேரமும் அதிர்ச்சியில் உறைந்துபோய் நின்றிருந்தேன். பூட்டிக்கிடந்த வீட்டில் ஒட்டடை அடிக்கும் சத்தம் கேட்டது. நான் கள்ளுக்கடைக்கு நடந்தேன். வருத்தமோ மனஸ்தாபமோ எது ஏற்பட்டாலும் போக்கிடம் இதுதானே?

மீண்டும் நாட்கள் ஓடின. அவளுக்கு ஒரு பெண்குழந்தையும் பிறந்தது. இதன் பிறகு, நான் அந்தப் பக்கமே திரும்பவில்லை. இதனிடையே அவளது அடுத்த வீட்டில் ஒரு கிறிஸ்தவக் குடும்பம் குடி வந்தது. குடும்பத் தலைவனை ஒருமுறை போலீஸ் ஸ்டேஷனில் சந்தித்திருக்கிறேன். கள்ளக்கடத்தல் சாமான்கள் வாங்கி விற்பதுதான் இவனது பிரதான தொழில். நேரடியாகத் திருடமாட்டான் என்பதைத் தவிர, எல்லாப் போக்கிரித்தனங்களையும் கைவசம் வைத்திருப்பவன். திருட்டுப் பொருட்களை வாங்குவதற்குப் பக்கத்திலேயே ஒரு ஆள் கிடைத்திருக்கிறான். சேரிடம் அறிந்து சேர்ந்தேன்.

அவர்களது வீட்டின் தின விருந்தினனாக ஆனேன். வீட்டில் அவன் இருக்கிறானா, இல்லையா என்றெல்லாம் பார்க்க மாட்டேன். அவனது மனைவி ஒரு விசித்திரமான குணவதி. இவ்வளவு கூச்சநாச்சமற்ற ஒருத்தியை நான் பார்த்ததில்லை. இயற்கை உபாதைகளைத் தீர்ப்பது; சுத்தம் செய்வது; குழந்தைக்குப் பால் கொடுப்பது என்று எதுவாக இருந்தாலும் என் கண்முன்னால்தான் நடக்கும். என்னைத் தூண்டுவதற்காகச் செய்வதுமில்லை. புருஷன்காரன் இருந்தாலும் இப்படித்தான். அவனும் இதையெல்லாம் கண்டுகொள்ள மாட்டான். வீட்டில் நானிருக்கும்போது வெளியே போவான். நானிருக்கும்போது வருவான். "அண்ணனுக்குத் தூக்கம் வந்தால் உள்ள போய்ப் படு; அடியே அண்ணனுக்குப் பாய் விரிச்சுக்கொடு" என்று சொல்லிவிட்டுப் போவான். அவனுக்கும் எந்தக் கெட்ட எண்ணமும் கிடையாது. எது நடந்தால் எனக்கென்ன என்பதுபோல். குழந்தைக்குப் பால் கொடுத்துவிட்டு அப்படியே தூங்குவாள். வேலிக்கு வெளியில் நடந்து போகிறவர்கள் எட்டிப் பார்த்தால் தெரியும்.

"எடுத்து உள்ளப்போட்டுட்டு ஒழுங்காப் படு. ஊர்ல உள்ளவங்க எல்லாம்

பாத்துட்டுப் போறாங்க" என்று சொல்லியிருக்கிறேன். "பாத்துட்டுப் போட்டுண்ணா" என்று அரைத் தூக்கத்தில் சொல்வாள். இந்த அளவுக்கு உணர்வில்லாதவர்களை என் மனம் பெண்களாக ஏற்பதில்லை. ஆகவே, காய்ந்து கிடந்த நிலையிலும் அவளை போகிப்பதென்ற எண்ணமே எனக்கு ஏற்பட்டதில்லை. அவள் இதையெல்லாம் ஒரு பொருட்டாக எடுத்துக்கொள்ள மாட்டாள் என்பது மற்றொரு காரணம். கண்ணில்படுவதை எல்லாம் போகிப்பதற்கு நான் நாயுமில்லை. அவள்தான் சொன்னாள்: "அண்ணா அந்த மாலதி இங்கே வர்றதுண்டு. வரும்போதெல்லாம் உன்னைப் பற்றிச் சொல்லி ஒரே அழுகை. அவன் என் உயிருக்குயிரானவன்னு சொல்வாள்."

அதெல்லாம் முடிந்துபோன கதை என்றேன். ஒருநாள், மாலதியின் வீட்டுக்குப் போகத் தோன்றியது. போன ஐந்தாவது நிமிடத்தில் மாலதி வந்தாள். என் கால்களைக் கட்டிப்பிடித்து ஒரே ஒப்பாரி: "என்னால உன்னை மறக்கவே முடியலைண்ணா. என் மாமாவும் அம்மாவுமெல்லாம் சேந்து பொய் சொல்லி என்னை எங்கேயோ அழைச்சிட்டுப் போய் இவருக்குக் கட்டி வச்சிட்டாங்க. அண்ணன் சொன்னா நான் இப்பவே இறங்கி வரத் தயாரா இருக்கேன்" என்றாள்.

"இந்த இரண்டு குழந்தைகளையும் பாவம் அந்த மனுசனையும் விட்டுட்டு வர்றேன்னு சொல்றதுக்கு உனக்கு எப்படிடீ மனசு வருது? அதெல்லாம் நடக்குற விஷயமுமில்லை. உடல் சுகமுங்கிறத நான் முழுமையா அறிஞ்சது உங்கிட்ட இருந்துதான். அதுக்கு முன்னால பல தொடர்புகளிருந்தாலும் அதெல்லாம் எனக்காக இல்லை, அவளுகளோட ஆசைகளுக்காக. இனி உனக்கு உன் வழி, எனக்கு என் வழி. இப்பவும் எனக்கு அதுக்கெல்லாம் ஒரு பஞ்சமுமில்லை . . ." நான் சொல்லி முடிப்பதற்குள் அந்தக் கிறிஸ்தவ பெண் சொன்னாள்:

"ஆமா, எவ்வளவுபேரு, நானும் பாக்குறனே! சாந்தா, பெண்ணம்மான்னு பல கேசுங்க அண்ணனைத் தேடி வர்றாளுங்க. ஆனா, அண்ணனோட விருப்பம் குசுமம்பேர்லதான், என்னண்ணா?"

அந்தப் பகுதியிலுள்ள பேர்கேட்ட ஒரு சேரிதான் என்னுடைய போக்குவரத்து இடம். அங்குள்ள பல பெண்களுக்கு இதெல்லாம் பிரச்சினைக்குரிய விஷயங்களே இல்லை. அதற்காக, வெளியிலிருந்து யாரையும் அனுமதித்துவிட மாட்டார்கள். யாராவது ஒருவனுடன் மட்டும். அவ்வளவு பாதுகாப்பாக நடக்கும்.

பலர் தின்ற மிச்சத்தைத் தின்பதில் எனக்கு விருப்பமில்லை. சொந்தமாக வாங்கி வைத்து ருசித்துத் தின்பேன். என்னுடைய திருட்டுச் சம்பாத்தியத்தில் இவர்களும் நிறையவே தின்றிருக்கிறார்கள். இதில், சாந்தா திருமணமானவள். புருசனுமிருக்கிறான். குசுமம் திருமணமாகாதவள். இவர்களில் சிலர் இப்போது நன்றாக இருக்கிறார்கள். எங்கே கண்டாலும் விசாரித்துக்கொள்வார்கள். களங்கமில்லாத அன்பு. பெண்களுக்கிடையிலும் நல்ல ஒற்றுமை. மூன்று பேரையும் சேர்த்து நான் கொல்லத்துக்கு அழைத்துச்சென்று சினிமா பார்த்துவிட்டுப் பிரியாணியெல்லாம் வாங்கிக்கொடுத்து வெளிப்படையாகவே வீட்டில் கொண்டுபோய் விட்டிருக்கிறேன். இவர்களுடனான தொடர்புகளில் நேர்மையிருக்கும். வெறும் பணம் மட்டுமல்ல, இவர்களுடைய நோக்கம். ஒரு கேளிக்கை மனோபாவம். வெளியூர்களுக்குச் சுற்றுலா அழைத்துச் செல்வதற்கு ஒரு ஆள் கிடைத்திருக்கிறான். பதிலுக்கு அவர்களால் செய்ய முடிந்த கைமாறு. அவ்வளவுதான்.

மனைவி மெகருன்னிஸாவைத் தவிர நான் அடியே என்றழைத்த ஒரே பெண் மாலதிதான். ஏதாவது இரட்டைப் பொருள் தொனிக்கும்படியாக கேலி செய்வதும் மாலதியை மட்டும்தான்.

என் கால்களை விடாமல் அழுதுகொண்டும் பேசிக்கொண்டுமிருக்கிறாள் மாலதி. இதெல்லாம் ஒரு விஷயமே கிடையாது என்பதுபோல் இதைப் பார்த்தபடியே பேன் கொன்று கொண்டிருந்தாள் அந்த கிறிஸ்தவப் பெண். "நடக்கிறதெல்லாம் நடந்துடுச்சு. நீ காலை விடு." என்றேன். விட மறுக்கிறாள். "இப்ப உன்னைப் பாக்கும்போது எனக்கு உன் உடம்புமேல மட்டும்தான் ஆசை வருது" என்றேன்.

"இது உனக்குப் போகத்தான் மற்ற யாருக்கும். இதுவரைக்கும் மட்டுமில்லை, இனிமேலும் அப்படித்தான். நீ வர்றதா இருந்தா சாயங் காலத்துக்குப் பிறகு வா. வீட்டுக்காரர் ராத்திரி பத்தரை மணி பஸ்சில வருவார்."

அன்று வாழத்துங்கல் வழி கொல்லம் - மய்யநாடு ரூட்டில் மொத்தம் இரண்டு பஸ்கள்தான் ஓடின. தனியார் பஸ்கள் கிடையாது. நான், காராளில் ரவி, பொடிக்காரன் சசி ஆகிய மூன்று பேரும் சேர்ந்து, ஆர்டிஓவையும் எம்எல்ஏவையும் பார்த்து இந்த ரூட்டில் பஸ் விடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்தோம். அது ஒருவகையில் இப்போது நல்லதாகப் போய்விட்டது. ஒரு கிலோமீட்டர் தொலைவில் இரவிபுரம் ரூட்டில் நிறைய பஸ்கள் ஓடின. ஆனால், நடக்க விருப்பமில்லாதவர்கள் இரவு

ஒன்பது மணியிலிருந்தே இந்த பஸ்சுக்காகக் காத்து நிற்பார்கள். அதிகமும் வாழத்துங்கல்காரர்கள்தான். இது ஒரு ரசனை. அதே பஸ்சில்தான் மாலதியின் வீட்டுக்காரனும் வருவான். இருட்டிய பிறகு பத்து மணி வரைக்கும் எந்தத் தொந்தரவும் இருக்காது. பத்துமணி கழிந்ததும் நான் கள்ளுக்கடைக்கு நடப்பேன். இரண்டு குப்பியைக் குடித்துவிட்டு இரண்டு குப்பி பார்சலும் வாங்கிவிட்டு திரும்பி வரும்போது மாலதியின் வீட்டுக்காரன் வருவான். கையை உயர்த்தி விஷ் பண்ணிவிட்டு இருவரும் இரு திசைகளில் பிரிவோம்.

இப்படியே சுமார் ஒரு வருட காலம். இவ்வளவு காலமும் யார் கண்ணிலும் படாமல் போய் வருவதற்கு நானென்ன பி.சி. சர்க்காரா?

"எவனோ போட்டுக் கொடுத்திருப்பான் போலிருக்கு. கொஞ்ச நாட்களாகவே அவர் பேச்சில கொஞ்சம் சந்தேகம் தெரியுது" என்று ஏற்கனவே சொல்லியிருந்தாள். அவளே சொன்னாள்: "போனாப்போகுது, நான் முந்திரிக் கம்பெனி வேலைக்குப் போய்ப் பொழைச்சிக்குவேன். வேற யார்கூடயும் போகலையே, என் முதல் புருஷன்கூடத்தானே? நான் வேணும்னா அந்த மனுஷன்தான் பொறுத்துக்கணும்."

எப்படியோ ஒருநாளிரவு நாங்கள் அகப்பட்டோம். புருஷன் வெளியில் நின்று கூச்சலிட்டான்: "அடியே மாலா . . ." நான் வாட்சில் பார்த்தேன். மணி எட்டரை. குலுக்கிப் பார்த்தேன். வாட்ச்தான் ஒருவேளை ஏமாற்றிவிட்டதோ? இல்லை, வேறு எவனோ செய்த சதி. பின்புறம் ஒரு வாசல். அதன் வடக்குப்பகுதியில் பரந்து விரிந்த வயல். இறங்கி ஓடிவிடலாமென்று கதவுப் பக்கம் வந்து காதுகளைக் கூர்மையாக்கினேன். வெளியே யாரோ மூச்சு வாங்கும் சத்தம். முன்பக்க வாசலுக்கு வரும்போது அங்கேயும் இதே மூச்சு வாங்கும் சத்தம். அவன், முன்வாசலுக்கும் பின்வாசலுக்குமாக ஓடியோடி கண்காணிக்கிறான். போதாத காலத்திற்கு நிலா வெளிச்சம் வேறு. அவனுடைய கண்ணில் தெரியாமல் தப்பித்து விடவே முடியாது. ஓலை வீடாக இருந்தால் ஏதாவதொரு பகுதியைப் பொத்துக்கொண்டு வெளியேறி பிரித்த ஓலையை பழையபடி பொருத்திவிட்டு ஒரு நிமிடத்தில் தப்பிவிடலாம். ஆனால், மரப்பலகை வீடு. அகப்பட்டாகி விட்டது.

"தப்பிக்க வழியே இல்லை" என்றேன்.

அவள் என்னை இழுத்துக்கொண்டுபோய் முன்கூடத்தின் எதிர்புறமுள்ள அறையின் கீழ்ப்பகுதியில் ஒளிந்துகொள்ளச் சொன்னாள். இது

தோதுவான இடமில்லை என்பது தெரிந்ததுதான். புருஷன் வீட்டுக்குள் போய்விட்டான் என்றால் கதவைத் திறந்து வெளியே ஓடிவிடலாம். உள்ளே இருந்து யாரும் வெளியே போய்விடக்கூடாதென்று கதவைப் பூட்டினால் . . ? பெரும்பாலும் பூட்டுவான்.

கதவுக்குப் பின்னால் ஒளிந்துகொள்வதென்பது பழைய ஏற்பாடு. சந்தேகிப்பவன் முதலில் பார்க்கும் இடமே அதுதான். நான் வெள்ளையில் கடுஞ்சிவப்பு புள்ளிபோட்ட ஒரு கைலி உடுத்திருந்தேன். கிட்டத்தட்ட அதற்குப் பொருத்தமான நிறத்தில் சட்டையும். இது எனக்கான ஒரு ஸ்டைல். சட்டையும் வேட்டியும் மேட்சாக இருக்க வேண்டும்.

மாலதியின் கைகால்கள் உதறலெடுக்க ஆரம்பித்தன. தப்பு செய்யும்போது தெரியாதா, பிடிபடுவோம் என்று? அவளுடைய செழித்த உடல் ஆட்டம் கண்டது. வெளியில் உரத்தக் குரலில் கூப்பாடு. இடையிடையே கதவையும் தட்டுகிறான்: "மாலதி . . . அடியே, மாலா . . ." அழைப்பின் தொனியே, எல்லாவற்றையும் அறிந்துதான் வந்திருக்கிறான் என்பதைச் சொல்லிவிட்டது. யாரோ சொல்லி, சீக்கிரமாக வந்திருக்கிறான். போட்டுக் கொடுத்த கஸ்மாலங்கள் நிச்சயமாக இந்த ஏரியாவில் எங்காவது இதை வேடிக்கைப் பார்த்துக்கொண்டு நிற்பார்கள். நான் சுற்றுமுற்றும் கண்களை ஓட்டினேன். ஏனென்றால் இதுபோன்ற சந்தர்ப்பங்களில் பெரும் கோபத்துடன் நிற்கும் புருஷன்கள் என்ன வேண்டுமானாலும் செய்வார்கள். குறைந்தபட்சம் ஒரு வெட்டரிவாளையாவது எதிர்பார்க்கலாம். அப்படி ஒரு நிலை ஏற்பட்டால் ஓடிவிடாமல் நின்று தடுக்க வேண்டும். இல்லையென்றால் தப்பித்து ஓடும் என் பங்கும் சேர்த்து மாலதிக்குக் கிடைக்கும்.

மாலதி நடுக்கத்துடன் கதவைத் திறந்தாள். அவன் உள்ளே தேடிப் பார்த்துவிட்டு அவளிடம்: "உனக்கேன் இவ்வளவு வேர்க்குது?" என்றான்.

"ஒண்ணுமில்லையே, சூடு . . ." என்றாள்.

"ம் . . . ஏன் ஒருமாதிரியாயிருக்கே?"

"ஒண்ணுமில்லையே . . ?

"கை கால்களெல்லாம் நடுங்குது . . ?"

அவள் பதில் சொல்லவில்லை. தொண்டை அடைத்துக்கொண்டது.

அவளது கையில் ஒரு ராந்தலிருந்தது. "ராந்தலைக் கொஞ்சம் நீக்கிப் புடி புள்ளே" என்று சொல்லலாம் போலிருந்தது. கண்ணாடியைத் துடைத்துச் சுத்தம் செய்து புதிய திரியெல்லாம் போட்டிருந்தாள். அதுதான் இவ்வளவு வெளிச்சம். "ராந்தலை இங்கிருந்து கொண்டுபோ புள்ளே, நீ எதுக்கு விளக்குப் புடிக்கிறே" என்று நான் நினைத்துக்கொண்டிருக்கும்போது அவனது பார்வை இந்தப் பக்கமாக நகருகிறது. நான் ஒரு கண்ணை வாசல்மீதும் வைத்திருக்கிறேன். மிகச் சரியாக அவன் என் கைலியைப் பார்க்கிறான். பாலிஸ்டர் கைலி. வெளிச்சத்தைக் கண்டதும் தலைவனைக் கண்ட தலைவியின் முகம்போல் ஒளிரும்.

அவள் "வா . . . உள்ள போலாம்" என்று அழைக்கிறாள். "குடிக்கத் தண்ணி வேணுமா, வா . . ." என்றெல்லாம் ஏதேதோ சொல்லி புருஷனை உள்ளே அழைத்துச் செல்ல முயற்சிக்கிறாள். அவன், மருந்து திணிக்கப்பட்ட வெடிகுண்டுபோல் அசையாமல் நிற்கிறான். திடீரென்று பலகை செல்ஃபிலிருந்து சாவியை எடுத்து கதவைப் பூட்டினான். இரண்டு புறமிருந்தும் பூட்டுகிற சாவி. மாலதி திடுக்கிட்டாள்: "ஏன் . . . ஏன் கதவைப் பூட்டுறே?" என்று மட்டுமே அவளால் கேட்க முடிந்தது.

"திருடனுங்க இந்த ஏரியால ரொம்ப அதிகம் . . . திருட்டு மட்டுமா?" என்றான்.

பண்பாட்டுக் காவலர்கள் ஆள் யாரென்றுவரை போட்டுக்கொடுத்திருக்கிறார்கள். பூட்டைப் பார்த்தேன். மூன்று லிவர் பூட்டு. ஒரு வழியுமில்லை. சுற்றிலும் கண்களை ஓட்டினேன். ஒரு ஈர்க்கில்கூட இல்லை. கத்தியை எடுத்து நிமிர்த்துப் பார்த்தேன். முனை பூட்டுக்குள் நுழையாது. இனி அவ்வளவுதான். இருவரும் சமையல்கட்டுப் பக்கம் போனார்கள். மாலாவின் கன்னத்தில் பளீரென்று ஒன்று விழுந்தது. கூடவே, புஷ்டியான புறமுதுகில் தொம் என்றொரு சத்தமும் கேட்டது. அடுத்ததாக அய்யோ என்று அலறல் சத்தம். ஆனால், அது இப்போது வீட்டுக்கு வெளியே கேட்கிறது. மாலதின் அழுகைச் சத்தமும். அதாவது, அவன் பின்புற வாசலையும் பூட்டிவிட்டு வெளியில் இறங்கி விட்டான்.

என்னை வீட்டுச் சிறையில் வைத்துவிட்டு அவன் வெளியில் நின்று ஆர்ப்பாட்டம் செய்தான். "அய்யோ ஓடிவாங்களேன் . . . நான் இவளோட கள்ளப் புருஷனைக் கையும் களவுமாப் புடிச்சிட்டேன் . . . யாராவது வாங்களேன் . . ." மாலதி தடுக்க முயற்சிக்கிறாள். உடனே உதை விழுகிறது. மக்கள் திரண்டு வந்தார்கள். எல்லோரும் ஏதாவது செய்திகளை எதிர் பார்த்திருப்பதால் உடனே கூடி விடுகிறார்கள்.

குறிப்பாக, பக்கத்து வீட்டுச் செய்திகளை. அதிலும், நல்ல சுவாரஸ்யமான செய்தி வேறா? ஐந்தே நிமிடத்தில் பத்துத் தொண்ணூறுபேர் கூடி விட்டார்கள். மாலதியின்மீது அடிவிழாமலும் பார்த்துக் கொள்கிறார்கள்.

இதனிடையே கொஞ்ச தூரத்திலிருக்கும் என் அக்காவும் வந்துவிட்டாள். என்னுடைய போதாத காலம், அவள்தான் கேட்டாள்: "ஆள் யாரு?" மாலதியின் புருஷனிடமிருந்து பதில் காட்டமாக வந்தது: "வேற யாரு, உன் தம்பிதான். அந்தத் திருட்டு . . ."

கூடி நின்றிருந்தவர்களுக்கு ஆள் யாரென்று தெரிந்துவிட்டது. "அவனா . . . திமிர் பிடிச்சில்லே திரியறான் . . . குடும்பப் பொண்ணுங்களைச் சீரழிக்கிறதுக்குன்னே . . ."

அக்கா மெல்ல நழுவப் பார்த்தாள்.

"வேண்டாம், தம்பியைப் பாத்துட்டுப் போனாப்போதும் . . ."

அக்காவின் பின்னாலிருந்து யாரோ கேட்டார்கள்: "என்னக்கா விஷயம் . . ?"

திரும்பிப் பார்த்த அக்காவின் முகத்தில் பேருவகை. அவளது சகோதரன் சாட்சாத் மணியன்பிள்ளை நிற்கிறான்.

புருஷனின் தொண்டை அடைத்துக்கொண்டது. திறந்த வாய் பத்து நிமிடம் அப்படியே இருந்தது.

நான் சாந்த சொரூபனாக சொன்னேன்: "ஆள் தெரியாம யார்மேலயும் இப்படிப் பழி போடாதீங்க."

அக்கா சும்மாக் குதறியெடுக்கிறாள்: "வேற யார் பேர்லயாவது பழியைப் போட்டுட்டு அப்படியெல்லாம் போயிட முடியாது. உன் வீட்டுல ஏறுனவன் எவண்டீ?"

மாலதி பிடித்துக்கொண்டாள்: "என் வீட்டில ஒருத்தனும் ஏறலை. இவருக்கு அப்படித் தோணியிருக்கு . . ."

புருஷன் உறுதியாகச் சொன்னான்: "இல்லை, நான் இந்தக் கண்ணாலப் பாத்தேன். இவன் இல்லைன்னா வேற ஒருத்தன் . . . நான் பாத்தேன். ஒரு சிவப்பு கைலி . . ."

நம்பிக்கை வராமல் திரும்பவும் என்னைப் பார்த்தான். கூடி நின்றவர்களும் பார்த்தார்கள்: "மணியன் பான்ட்லே போட்டிருக்கான் . . ?"

கறுப்பு பான்டும் வெள்ளைச் சட்டையும். "நீ எங்க போறே . . ?"

"போகலை, போயிட்டு வர்றேன் . . . சின்னக்கடைக்குப் போயிட்டு வர்றேன் . . . ஆங் . . . சரி, நீ வா அக்கா."

அக்கா குதறுகிறாள்: "நாறப்பயலே, என் தம்பியைப் பற்றி நீ அபாண்டமா பேசினியேடா?"

நான் அக்காவைப் பின்னால் இழுத்தேன்: "உங்கிட்ட பேச்சை நிறுத்துன்னு சொல்றேன்லே."

"சரி, உள்ள ஒருத்தன் இருக்குறதா சொன்னியே? கதவைத் திற, பாக்கலாம்."

"ஆமா . . ."

ஆட்களின் கவனம் திரும்பியதும் அடக்கிப் பிடித்திருந்த மூச்சை நான் சீராக விட்டு என்னை ஆறுதல்படுத்திக்கொண்டேன். அப்பா, என்ன ஓட்டம் இது?

கூடிநின்றவர்கள் உற்சாகத்துடன் கம்பும் தடியுமாகத் தயாரானார்கள். கள்ளப் புருஷன், கையில் ஏதாவது ஆயுதம் வைத்திருப்பான். வாசலின் கீழ்ப்பகுதியை உற்றுப் பார்த்தார்கள். அங்கே மனிதன் அல்ல, மனித ரோமம்கூட இல்லை. புருஷனின் முகம் காகிதம்போலானது.

"நான் பாத்தேன் . . . நான் பாத்தேன். இந்த ரெண்டு கண்ணால பாத்தேன்."

"அப்படின்னா இறங்கி ஓடியிருப்பான்."

"இல்லியே, நான் கதவைப் பூட்டிட்டனே. மேல உள்ள ஏறுதாளையும் போட்டனே?"

கதவையும் பூட்டினேன். ஏறுதாளும் போட்டேன். வேறு வாசலுமில்லை. புருஷன் முடிவுக்கு வந்தார்: "ப் . . . ச் . . . கண்ணுக்கு ஒருவேளை அப்படித் தோணியிருக்கலாம்."

அடுத்தது மாலதியின் முறை. அவள் ஆரம்பித்தாள்: "இந்த குடிகாரங் கூட இப்பிடி நரக வாழ்க்கை வாழ்றனே . . . குடித்தனம் பண்றவமேல அபாண்டமா பழி போடுறாரே . . . ரெண்டு குழந்தைங்க பொறந்த பிறகா இவர் இப்படி நடந்துக்கணும் . . ." என்றெல்லாம் கேட்டாள். தூங்கிக்கிடந்த குழந்தைகள் எழுந்து அழத்தொடங்கின. ஆக, பிரளயம்.

இதனிடையே ஒருவர் கதவினிடையே கிடந்த ஒரு சிவப்பு டவலை எடுத்துக் காட்டினார். கிடைத்த டவலைப் புருஷன் கெட்டியாகப் பிடித்துக்கொண்டார்:

"இந்த டவல் யாரோடது?"

புருஷ மூஞ்சியில் ணங்கென்று குத்திய மாலதி: "போன திருவிழாவுக்கு வாங்குனது, கலர் போய்க் கிடக்கு" என்றாள்.

"அப்படியா?" கிடையவே கிடையாதென்று உறுதியாகச் சொல்ல புருஷனால் முடியவில்லை.

இவன் வெளியே வந்து சத்தம்போடுற இவ்வளவு நேரத்துக்குள்ள உள்ளே இருக்கிறவன் ஆவியா கரைஞ்சிட்டானாக்கும் . . ? ஆட்கள் புலம்ப ஆரம்பித்தார்கள் . . . "சந்தேக வியாதிபோலிருக்கு . . . நீ கதவைச் சாத்து . . ." அவர்கள் சொல்லிவிட்டு இடம்பெயர்ந்தார்கள்.

மறுநாளிரவு புருஷன், நான் இங்க ஒரு ஈர்க்கில் வெச்சிருந்தேனே? அதை எடுத்துக் குப்பையில போட்டுட்டியா? என்று கேட்டுவிட்டு வெளியிலிறங்கி ஒரு புதிய ஈர்க்கிலை ஒடித்துக் கொண்டுவந்து காது குடைந்தான்.

இனி, கொஞ்ச நாட்கள் அந்தப் பக்கமே போகக்கூடாதென்றுதான் நினைத்திருந்தேன். சில நாட்கள்தான் பிடித்து நிற்க முடிந்தது. மீண்டும் போனேன். இன்று நினைக்கும்போது மகாபோக்கிரித்தனம்தான்; ஆபத்தும்கூட. அவளுக்கு எந்தக் கூச்சமுமில்லை. அவள் சொன்னாள்: "பயமெல்லாம் கிடையாது. ஒரு தயக்கம் அவ்வளவுதான். அவர் போனால் என்ன? முந்திரிக் கம்பெனியில வேலைக்குச் சேந்து இந்த ரெண்டு குழந்தைகளையும் வளர்த்த என்னால முடியும். ரெண்டு குழந்தைங்கதானே? ஆமா, அதெப்படி நீ ஈயா மாறிப் பறந்துட்டே?"

"இல்லை, சில திருடனுங்க கூடுவிட்டுக் கூடு பாய்வாங்கன்னு

கேள்விப்பட்டிருக்கேன் . . . அதெப்படி உன்னால முடிஞ்சுது?"

"ஈயா மாறலை, எறும்பா மாறினேன்."

"எப்படி வெளிய வந்தேன்னு சொல்லேன்."

"அது வேறொண்ணுமில்லை, ஒரு பச்சை ஈர்க்கில். அதை வச்சித் திறந்து வெளியில வந்திட்டேன் . . . அது ஒரு மேஜிக்தான் . . ." அவளும் நம்பிவிட்டாள்.

அன்று கொஞ்சம் சீக்கிரமாகக் கிளம்பினேன். கள்ளுக்கடைக்குப் போய் இரண்டு குப்பி குடித்துவிட்டுத் திரும்பி வரும்போது எதிரில் புருஷன் வந்துகொண்டிருந்தான். என்னைக் கண்டதும் சிறு தயக்கம் . . . நான் கண்டுகொள்ளவே இல்லை. பின்னால் நின்று அழைத்தான்:

"டேய் மணியா." நான் திரும்பி நின்றேன்.

"மன்னிச்சுக்கடா, ஆட்கள் சொன்னதையெல்லாம் நம்பிட்டேன் . . ."

"சரி, விடுங்க. திருடனைப் பற்றி யாரும் எதை வேணாலும் சொல்லலாமில்லே." ஒரு சென்டிமென்டையும் இறக்கி வைத்துவிட்டு நடந்தேன்.

மாலதியிடம் கடைசிவரை அந்த ரகசியத்தைச் சொல்லவே இல்லை.

ரகசியம் வேறொண்ணுமில்லை. இதுவுமொரு மேஜிக்போல்தான். வெளியே சொல்லிவிட்டால் ஒன்றுமே இல்லை. சொல்லாமலிருந்தால் மிகப் பெரிய அதிசயம். இரண்டு கதவுகளுள்ள ஒரு வாசல் அது. ஒரு கதவை அடைத்து ஏறுதாளிட்டு இன்னொரு கதவையும் அடைத்துப் பூட்ட வேண்டும். ஏறுதாளிடாமல் வாசலை மட்டும் பூட்டிவிட்டுத் தள்ளினால் கதவுகள் பிரிந்து வாசல் திறந்துவிடும். மீண்டும் அடைத்தால் முன்பிருந்ததுபோலாகி விடும். என் வீட்டில் இதை நான் பலதடவை செய்து பார்த்திருக்கிறேன். சும்மா இருப்பது பிடிக்காதென்பதால் இதுபோல் ஏதாவது செய்து பார்ப்பேன்.

வாசலின்கீழ் ஒளிந்திருக்கும்போது போட்டத் திட்டத்தின்படி ஈர்க்கிலில் ஒரு முடிச்சுப் போட்டு அதை ஏறுதாளின் பிடியில் கட்டினேன். கதவின் மேல்பகுதியிலிருந்த சிறுஇடைவெளினூடே ஈர்க்கிலை வெளியே விட்டேன். கதவை மூடிவிட்டு ஈர்க்கில் அறுபடாதபடி மெல்ல இழுத்தேன்.

தாளின் பிடி உயர்ந்தது. மெல்ல வெட்டி அசைத்தேன். தாள் ஒரு புறமாகச் சாய்ந்து, உள்ளே இருந்து தாளிட்டதுபோலாயிற்று. வெளியிலிருந்து ஒருவன் இதைச் செய்யவே முடியாதுபோல் தோன்றும். இப்படியாக, புருஷன் காது குடைவதற்காக வைத்திருந்த பச்சை ஈர்க்கிலின் உதவியால் வெளியில் வந்தேன். குற்றம் நிகழ்ந்த இடத்தில் நிச்சயமாக ஒரு தடயமும் இருக்குமென்று துப்பறியும் நிபுணர்கள் சொல்வார்கள் அல்லவா? இங்கும் நுட்பமாகப் பரிசோதித்தால் ஏறுதாள் பிடியில் ஈர்க்கிலின் முடிச்சுப்பகுதி இருக்கும். எதுவாயினும் புருஷனுக்கு என்மீது பிறகு நல்ல பரிவு உருவாயிற்று. பழைய நிகழ்வின் குற்றவுணர்ச்சி.

## **64** - கடத்தல்

மடத்தில் வாழும் பெண்களுடனான அந்த நிகழ்வு இன்றும் ஆச்சரியமாகவே இருக்கிறது. அப்போது, பதினான்கு வயது. படிப்பு நின்றுபோய்விட்டது. ஒருநாள், கொஞ்சம் காசு கிடைத்தது. சினிமாவுக்குக் கிளம்பினேன். பஸ்கள் அன்று கொல்லம் கிராண்ட் தியேட்டரின் தெற்கு ரோடு வழியாகச் செல்லும். நான் ஆஸாத் ஓட்டலின் எதிரில் நின்றுகொண்டிருந்தேன். பிற்பகல். டிக்கெட் கொடுக்க இன்னும் நேரமிருக்கிறது. மெதுவாக நடந்தேன். ஓட்டலில் கோழி வறுவலின் வாசம். விலையில்லா வாசமென்பதால் முகர்ந்துகொண்டு நின்றேன். ஹிமாலயா பேக்கரி ஸ்டாப்பில் ஒரு பஸ் வந்து நின்றது. அதிலிருந்து ஒரு பெண் இறங்கினாள். ரோட்டின் எதிர்ப்புறமிருந்த ராதாஸ் ஏஜென்சியின் முன் மற்றொரு பெண் நின்றிருந்தாள். அவள் முன் காகிதத்தில் சுற்றப்பட்ட ஒரு பெரிய பார்சலிருந்தது. பஸ்சிலிருந்து இறங்கியவளிடம் இவள் ஏதோ சொல்கிறாள். பிறகு என்னைக் கை காட்டி அழைத்து, இதை சைக்கிள் ரிக்ஷாவரைக்கும் கொண்டுவந்து தர முடியுமா என்று கேட்டார்கள். இரண்டு ரூபாய் தருவதாகவும் சொன்னார்கள். இரண்டு ரூபாய் கிடைத்தால் இன்னும் இரண்டு சினிமா பார்க்கலாம்.

சரியென்று சொல்லி பெட்டியைத் தூக்கினேன். பாரமே இல்லை. காலிப் பெட்டி. புதிதாக வாங்கியிருக்க வேண்டும். மிக எளிதாக அவர்களே இதைத் தூக்கிவிட முடியும். நடக்கும் போது பெட்டி தரையில் தட்டுகிறது. அவ்வளவு பெரிய பெட்டி. நான் அதைத் தலையில் தூக்கி வைத்து பெரிய சுமட்டுக்காரன் என்ற பெருமிதத்தில் நடந்துகொண்டிருந்தேன். அவர்கள் என்னுடைய பெயர், ஊர், குடும்பம், சகோதர சகோதரிகள் என்று எல்லாத் தகவல்களையும் கேட்டறிந்தார்கள். உயரம் குறைவாக இருந்தாலும் நான் அப்போது நல்ல புஷ்டியாக இருப்பேன். இதை வீடுவரைக்கும் கொண்டு வந்து தர முடியுமா என்றும் கேட்டார்கள். திரும்பி வருவதற்கு இரண்டு ரூபாய் பஸ்சுக்கும் தருவதாகச் சொன்னார்கள். எனக்குப் பெரும் மகிழ்ச்சி.

ரிக்ஷா தங்கச்சேரிக்குப் போய்க்கொண்டிருந்தது. நான் இதுவரை இங்கே வந்ததில்லை. தங்கச்சேரி கோட்டை வாசலை முதல் தடவையாக இப்போதுதான் பார்க்கிறேன். ரிக்ஷா கோட்டைக்குள் நுழைந்து, பல

இடைவழிகளைக் கடந்து ஓடியது. ஆளரவமில்லாத வழிகள். பல வீடுகளில் ஆட்கள் வசிப்பதுபோல் தெரியவில்லை.

ரிக்ஷா, சுமார் பத்தடி உயரமுள்ள மதில்கேட்டின் முன்நின்றது. அதில் கடிதங்கள், பத்திரிகைகள் போட்டுச் செல்வதற்கான ஒரு துவாரமுமிருந்தது. அதன் வழியாக உள்ளே எதையும் பார்க்க முடியாது.

ரிக்ஷாக்காரனை அனுப்பிவிட்டுக் கேட்டை உட்புறமிருந்து பூட்டிய அவர்களில் ஒருத்தி என்னைப் பார்த்துப் புன்முறுவல் செய்தாள். பார்க்க அழகாக இருந்தாள். சிரிக்கும்போது இன்னும் அழகு. மற்றொருத்தி கொஞ்சம் கறுப்பாக இருந்தாள். நல்ல முகக்களை. வயது முப்பதுக்குள்ளிருக்கும்.

பெட்டியை எடுத்து வைத்துவிட்டு, வெளுப்பி உள்ளே போனாள். கறுப்பி முன்வாசலை அடைத்துத் தாளிட்டுவிட்டு, தலையில் கிடந்த துணியை எடுத்து வேர்வையைத் துடைத்தாள். மொட்டைத் தலை என்பதை அப்போதுதான் புரிந்துகொண்டேன். அரண்மனைபோலிருந்த வரவேற்பு அறையில் பிரமாண்டமான மூங்கில் செயர்கள் கிடந்தன. மூன்று நான்குபேர் உட்காரலாம். மின்விசிறியைச் சுற்ற வைத்தார்கள். வேர்வைக்கு இதமாக இருந்தது. இதனிடையே கறுப்பி என்னென்னவோ கேட்டாள். ஓரிரு தடவை பரிவுடன் கன்னத்தைக் கிள்ளினாள்.

உள்ளே போனவள் திரும்பி வந்தாள். தலையில் கிடந்த வெள்ளைத் துணிக்குப் பதில் இப்போது டர்க்கி.

"சினிமா எத்தனை மணிக்கு?"

"ரெண்டரைக்கு."

"இரவிபுரம் தங்கசேரி பஸ் அடிக்கடி இருக்குதானே?"

"ஆமா."

"சினிமா நாளைக்குப் பாக்கலாமே?"

நான் பதில் சொல்லவில்லை.

"சாயாவெல்லாம் குடிச்சிட்டு மெதுவாப்போகலாம், சரியா?"

கறுப்பி உள்ளே போய் சாயா, சிப்ஸ், பிஸ்கட், பால் கட்டியில் செய்த ஏதோ தின்பண்டமெல்லாம் கொண்டு வந்தாள். பால்பண்டம் குளிர்ந்திருந்தது. என் மனமும் குளிர்ந்தது. பிஸ்கட் சாப்பிட்டதுண்டு என்றாலும் இடையில் ஆரஞ்சுச் சுவையுள்ள கிரீம் வைத்த பிஸ்கட்டை அப்போதுதான் பார்க்கிறேன். இங்கே தின்ற பால்கோவா போன்ற பண்டத்தைப் பிறகு சாப்பிட்டதே இல்லை. சாப்பிட்டுக்கொண்டிருக்கும் போது வெளுப்பி வந்து பக்கத்தில் நெருங்கி உட்கார்ந்தாள். அவளது கை என்னுடலை அழுத்தமாக வருடியது.

நினைவு வரும்போது நான் படுக்கையாக மாறிய சோபாவில் கிடந்தேன். அவளுடைய தலையில் கிடந்த டர்க்கி என் முகத்தில். அதை எடுக்க முயற்சித்தபோது அவள் விடவில்லை. அவளது செய்கை பதற்றத்துடனும் அவசர கதியிலும் இருந்தது. அதே பதற்றத்துடன் டர்க்கியைத் தலையில் போட்டுவிட்டு உள்ளே போனாள்.

அடுத்தது, கறுப்பியின் முறை. அவள் பொறுமையாக அந்த இடத்தைச் சுத்தம் செய்தாள். இப்படியாக அன்று அங்கேயே கழிந்தது. இரவில் தூங்க முடியவில்லை. காலையில் எழுந்தபோது சிறுநீர் கழிக்க சிரமப்பட்டேன். எரிச்சலிருந்தது. பகலிலும் அணுகினார்கள். அப்போது எனக்குக் காய்ச்சல். அவர்களுக்குப் பதற்றம் தொற்றிக் கொண்டது. ஏதேதோ மாத்திரைகள் தந்தார்கள். டெட்டால் விட்டு அந்த இடத்தைக் கழுவினார்கள். இன்றும் டெட்டால் வாசத்தை உணரும்போது எனக்கு இந்தச் சம்பவம்தான் நினைவுக்கு வரும். நான் அழுதேன். உடல் முழுவதும் வலித்தது. சிறுநீர் கழிக்க வேண்டும்போலிருக்கும், ஆனால் எரிச்சல்.

அவர்கள் பிரட்டை ரோஸ்ட் செய்து தந்தார்கள். பிரட்டை இப்படியெல்லாம் செய்ய முடியுமென்று அன்றுதான் தெரியும். அதை, கெட்டியான பாலில் நனைத்து அவர்களே ஊட்டினார்கள். பஞ்சை நனைத்து நெற்றியில் வைத்தார்கள். தலையை மடியில் ஏந்திக்கொண்டு முடியிழைகளினூடே விரல் நுழைத்து வருடினார்கள். அவர்களது செய்கைகளில் மிகுந்த வாத்சல்யமிருந்தது. இப்படியே செத்தாலும் பரவாயில்லை. இங்கேயே இருந்துவிடத் தோன்றியது. யாரும் என்னை இதுபோல் பரிவுடன் நடத்தியதில்லை. மடத்தில் வாழும் பெண்களைப் பார்க்கும்போதெல்லாம் எனக்கு இந்தப் பரிவுதான் நினைவுக்கு வரும். இதற்கு முன் நடந்ததெல்லாம் உடல் தேவைகள். இது மனதின், அன்பின் வெளிப்பாடு. எல்லா தூய இருதயத்துடனும்தான் இதை நான் நினைவுகூருகிறேன்.

பாலில் தோய்த்த பிரட் ரோஸ்டும் பால்கோவாவும் தின்று அங்கேயே வாழ்ந்துவிடலாமென்ற ஆசை ஈடேறவில்லை. தங்களுக்குள் எதையோ இங்கிலீசில் பேசிவிட்டு, துவைத்து இஸ்திரி போட்டு வைத்திருந்த என் நிக்கரையும் சட்டையையும் தந்தார்கள். பவுடர் போட்டு விட்டார்கள். உடம்பு மிகவும் தளர்ந்து போயிருந்தது. நடக்கவே சிரமப்பட்டேன். நடுக்கமுமிருந்தது. சிறிது நேரத்தில் வெளியே ரிக்ஷா மணியடிக்கும் சத்தம் கேட்டது. ஒருத்தி சென்று கேட்டைத் திறந்தாள். ரிக்ஷா உள்ளே வந்ததும் கேட் மூடிக்கொண்டது. ரிக்ஷாக்காரனை அவர்கள் சக்கரியா என்று அழைத்தது இன்னமும் நினைவிருக்கிறது.

"சக்கரியா, இவனை ஏதாவது ஆஸ்பத்திரியில காட்டி மருந்து வாங்கிக் கொடுத்து சின்னக்கடையில கொண்டுபோய் விட்டுடு. அவன் போயிடுவான். பஸ்சில அவன் ஏறினதும் கண்டக்டர்கிட்ட ஸ்டாப் வந்ததும் இறக்கி விட்டுடச் சொல்லிட்டு வா."

ரிக்ஷாக்காரனின் கையில் பணம் கொடுத்தார்கள். அவனிடம் எதுவும் பேச வேண்டாமென்று என்னிடம் சொன்னார்கள். அவன் எதுவும் கேட்கவுமில்லை. ஆனால், ஆஸ்பத்திரிக்குப் போகாமல், சின்னக்கடையில் இறக்கி விட்டுவிட்டு நான்கு ரூபாய் தந்தான். கூடவே, இரண்டு நாலணா துட்டுகளும். ஒன்றின்கீழ் நான்கு என்று எழுதிய இரண்டு நாணயங்கள். வீட்டுக்கு வந்தேன். இரவில் காய்ச்சல் அதிகமானது. வீட்டிலுள்ளவர்கள் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோனார்கள். மூன்று நாட்கள் ஆஸ்பத்திரியில் கிடந்தேன்.

வாழ்க்கையின் நீச்சல்களைக் கற்றுத்தேறிய பதினைந்து வருடங்களுக்குப் பின் திடீரென்று ஒரு ஆசை. பேர்கேட்ட அந்தப் பள்ளிக்கூட விளையாட்டு மைதானத்தின் பக்கத்திலுள்ள ஒரு இடமாகவே இருக்குமென்று தோன்றியது. நிறைய மாற்றங்கள் வேறு நிகழ்ந்திருந்தன. கொஞ்ச தூரம் சுற்றியலைந்தேன். உயர்ந்த மதில் கட்டுள்ள அந்த இடத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அந்த முகங்களையும் நினைவுப்படுத்தியெடுக்க முடியவில்லை. தலைத்துணியும் டர்க்கி டவலும்தான் நினைவுக்கு வருகின்றன. எல்லாமே கடவுளின் லீலாவினோதங்கள்தான்.

அக்கா: சிலரது முகத்தில் நம்பலாம் என்ற முத்திரை இருக்கும். என் முகத்திலும் அப்படி ஏதாவது இருந்ததா தெரியவில்லை. ஒருவேளை சில பெண்களுக்கு அப்படி தோன்றியிருக்கலாம். திருவனந்தபுரத்தில் வைத்து இப்படியான அனுபவம் ஏற்பட்டது. ஒரு தியேட்டரின் அருகில் சிகரெட்

பிடித்தபடி யோசனையுடன் நின்றிருந்தேன். பகல் பொழுதைப் போக்க வேண்டுமே. திருடனைப் பொறுத்தவரைக்கும் பகலென்பது ஒரு சவால். அவனது உலகம் இரவில்தான் விழிப்புடனிருக்கும். ஆகவே, இப்படி ஆள் சஞ்சாரமுள்ளதும் யாரும் யாரையும் கவனிக்காததுமான இடங்களில் போய் நிற்பது வழக்கம். தெரிந்த போலீஸ்காரர்கள் கண்டாலும் பெரிதாகப் பொருட்படுத்த மாட்டார்கள். நிற்குமிடமே பதில் சொல்லிவிடும். சினிமா பார்க்க வந்திருக்கிறான். போலீஸ் மொழியில் சந்தேகப்படும்படியான சூழ்நிலையல்ல இது. திருட முயற்சி செய்யும்போது பிடிபட்டதாகச் சொல்ல முடியாது. ஒரு பிக்பாக்கட் திருடனைப் பொறுத்தவரைக்கும் இது சந்தேகப்படும்படியான சூழ்நிலை. சூழல்கள் செய்தொழில் வேற்றுமையாலானது. நான் பிக்பாக்கட்காரன் அல்லவே. வழக்கமாக நான் இங்கே வந்து நிற்பதைக் கவனிக்கிற வழக்கமானவர்களும் இருக்கலாம். இதில் பெண்களும் உட்படுவார்கள் என்று நான் நினைத்ததே இல்லை.

அப்படியே நிற்கும்போது ஒருநாள் பெண்ணொருத்தி என்னருகில் வந்தாள்: "டிக்கெட் கிடைக்கலேன்னு நிக்கிறியா?" நாற்பது வயதைக் கடந்த, தடித்த பெண்மணி. நான் பதில் சொல்லவில்லை. "நான் டிக்கெட் எடுத்துத் தர்றேன், கௌண்டர் பக்கம் வா" என்றாள். பணம் வாங்காமல் போனதும் எனக்குப் புரிந்துவிட்டது. ஜெயிலில் இருக்கும்போது கேள்விப்பட்டிருக்கிறேன்.

அந்த சினிமாவைப் பார்க்கவேண்டுமென்று நான் நினைக்கவே இல்லை. பெரிய அளவில் எனக்கு சினிமா ஆர்வமுமில்லை. ஆனால், சிறுவயதில் என்போல் அதிகம் சினிமா பார்த்தவர்கள் அபூர்வமாகவே இருக்க முடியும். சினிமாவுக்காகச் செலவு செய்த பணமிருந்தால் சொந்தமாக ஒரு தியேட்டரே வாங்கியிருக்கலாம். மூன்று சினிமாவரை பார்த்த நாட்கள் நிறைய. சில நகரங்களுக்கு வந்து சேர்வேன். நேரத்தைப் போக்க வேண்டும். இரவு பன்னிரெண்டு மணியாக வேண்டுமே? போ என்றால் போய் விடுமா நேரம்? காலைக்காட்சிக்குத் தியேட்டரில் நுழைவேன். பெரும்பாலும் ஏதாவது செக்ஸ் படமாகவே இருக்கும். திருவனந்தபுரம் பத்மனாபா தியேட்டரில் ஒரே படத்தை நான்கு தடவை பார்த்ததும் நினைவிருக்கிறது.

இன்று தொலைக்காட்சியில் எழுபதுகளின் சினிமாக்களை ஒளிபரப்பும் போது சில காட்சிகள் மட்டும் நினைவுக்கு வரும். எப்போதோ பார்த்த சினிமாவாக இருக்கும் அது. கதாநாயகி ஒருதினுசாக நிற்பது, குளிப்பதுபோன்ற சில சமூக அக்கறையுள்ள காட்சிகள் மட்டும் நினைவிலிருக்கும். மிச்ச நேரங்கள் முழுக்க எந்த ஆர்வமுமில்லாமல்

திரையைப் பார்த்தபடி உட்கார்ந்திருப்பேன். மனம் வேறேதாவது மேய்ச்சல் களங்களில் சஞ்சரிக்கும்.

அப்படியாக இன்று ஸ்ரீகுமார் தியேட்டர் பால்கனியில். விழித்த முகம் பரவாயில்லை போலிருக்கிறது. விலையில்லா பொழுதுபோக்கு. பொழுதுபோக்கு மட்டுமல்ல, எதற்குமே விலையில்லை. தியேட்டரினுள் அவள் ஈசான மூலை நோக்கி நடந்தாள். அனுபவசாலி. இடது கைக்குச் சொல்லி வைத்தேன். வேலை அதிகமாக இருக்கும். தயாராக இரு. படம் ஓடத் தொடங்கியதுமே இடது கையை கஸ்டடியில் எடுத்துக்கொண்டாள். அவளுக்கு என்ன அவசரமோ? அதன் நகர்வுகளையும் அவளே தீர்மானிக்க முடிந்தது.

சினிமா முடிந்தது. கூடவே வரச் சொன்னாள். நடக்கும்போது முகத்தைப் பார்க்கக்கூடாது; நேராகப் பார்த்து நடக்க வேண்டும்; பேசும் போதுகூட! மருந்துக்கடைக்குப் போவதாகச் சொல்லி, இருநூறு ரூபாய் தந்து உனக்குத் தேவையான மருந்தை வாங்கிக்கொள் என்றாள். நான் ஒரு ஃபுல் பாட்டில் ஹனிபீ மருந்து வாங்கிவிட்டு வரும்போது அவள் டானிக் பாட்டிலும் காய்ச்சல் தலைவேதனைக்கான மாத்திரைகளுமாக என்னை எதிர்பார்த்து நின்றிருந்தாள். டானிக் பார்சலின் காகிதத்தைப் பிரித்து பாட்டிலை மட்டும் கையில் வைத்தாள். யாராவது பார்த்தால் பாவம், மருந்து வாங்கச் சென்றதாக நினைத்துக்கொள்ள வேண்டுமாம்.

"சீக்கிரம் . . . சீக்கிரம் . . ."

லாட்ஜின் பெயரைச் சொன்னாள். மெடிக்கல் காலேஜிலிருந்து பேட்டைக்குச் செல்லும் வழியில் கீழ்ப்பக்கமாக நடந்தேன். யாரும் அவ்வளவு சீக்கிரமாகக் கவனிக்காத ஆனால், ஓரளவு பரவாயில்லாத லாட்ஜ். வாடகையையும் கொடுத்தாள். உள்ளே ஏறியதும் முதல் வேலையாக நான் பீரில் கொஞ்சத்தை வாயில் ஊற்றிக்கொண்டேன்.

"சீக்கிரம் போகணும்" என்றாள்.

"பீர் வேணுமா?" என்றேன்.

"வேண்டாம். மருந்து வாங்கணும்னு சொல்லி வீட்டில இருந்து வந்திருக்கேன். நாலு மணிக்குத் திரும்பிடணும். தாண்டினா பஸ் கிடைக்காது. ஆட்டோ பிடிக்கணும். நாலரைக்கு வீட்டில நிக்கணும். அத்தை அஞ்சு மணிக்கு வந்துடுவா. மீன் கம்பெனிக்குப் போயிட்டு."

திடீரென்று கேட்டாள்: "நீ திருடனா?" அதிர்ந்துபோய் விட்டேன். என்னை இவளுக்கு ஏற்கனவே தெரியுமா?

". . ."

"இல்லை. எனக்கு பாத்ரூம் போகணும்."

அப்பாடா! "எதுக்கு?"

"இல்லை, முன்பு ஒரு தடவை நான் இப்படி பாத்ரூம் போயிட்டு வந்து பாக்கும்போது ஆளையும் காணோம்; என் பேக்கையும் காணோம். கையில காசில்லாம இங்கிருந்தே ஆட்டோ பிடிச்சி வீட்டுக்குப் போனேன். அதுக்குப் பிறகு நான் கையில பேக்கையும் எடுத்துக்கிட்டுதான் பாத்ரூம் போறது. இன்னிக்கு நான் பேக்கை எடுக்கப்போறதா இல்லை. நீ பணத்தை விடவும் அதில ஆர்வமுள்ளவன். அதனால என்னை விட்டுட்டு நீ போயிட மாட்டே."

"ஓகோ . . ."

"பின்னே இல்லையா . . ?" அவள் வெட்கம் நடித்தாள்: "ஆளைப் பாத்தாலே தெரிஞ்சுபோயிடும், திருடனா வழிப்பறிக்காரனான்னு."

நன்றி சொன்னேன்.

திரும்பி வந்ததும் சொன்னேன்: "எனக்குக் குளிக்கணும். நேற்று ராத்திரி தூங்கவே இல்லை. உடம்பெல்லாம் வேர்வை . . ."

"பரவாயில்லை. நானும் என் வீட்டுக்காரரும் மீன் காயப்போடுற பாயிலதான் ராத்திரி . . . சட்டையைக் கழற்று."

போகும்போது இருநூறு ரூபாய் தந்தாள். அடுத்த வாரம் வர முடியுமா என்றும் கேட்டாள். இதே நாள் வருவதாகச் சொன்னேன்.

அவள் சொன்னாள்: "நம்பிக்கையான ஒருத்தன் கிடைக்கிறது ரொம்ப சிரமம். எல்லாவனும் திருடனாவே இருக்கானுங்க . . . நாமும் மனுசப் பிறவிங்கதானே?"

"சந்தேகமில்லாம." நான் ஒப்புக்கொண்டேன்.

"ஆயுசு, திரையடிச்சுத் திரும்புறதுபோலக் கடந்துபோயிடும். வெளிநாட்டில கிடந்து அவர் எங்களுக்காகக் கஷ்டப்படுறாரு. என்மேல நல்ல பிரியமும்தான் . . . என்ன பண்ண முடியும்?"

டானிக்கை எடுத்துப் பார்த்துவிட்டுக் கேட்டேன்:

"உடம்புக்கு என்ன?"

"ஒரு மண்ணுமில்லை." அவள் அதைப் பறித்து வாங்கினாள்.

"இது காஃப் ஸிரப் போலிருக்கு . . . இருமுறதை நான் பாக்கலியே?"

"தேவைப்படுறவங்க முன்னால நான் இருமிக்கிறேன் . . ."

மேலும் இரண்டு முறை இவளைச் சந்தித்தேன். பிறகு, காசு வாங்கவில்லை. எவ்வளவு வேண்டுமானாலும் கறந்திருக்க முடியும். விருப்பமில்லை. என் கையில் நிறைய பணமிருந்தது. இருந்தால் நான் சிங்கம். பசித்தால்தான் சாப்பிடுவேன். கையில் பணமிருக்கும்போது மற்றவர்களிடமிருந்து வாங்கித் தின்பதில் விருப்பமில்லை.

மேபு: ஒரு நாடக நடிகை. என்னுடைய முன்னாள் தொடுப்பு. காயம்குளத்துக்காரி. கொல்லத்தில் போளயத்தோடு என்னுமிடத்தில் வீடெடுத்து இவளைத் தங்க வைத்திருந்தேன். அப்போது நகராட்சி தரைவாடகை வசூலிக்கும் பொறுப்பிருந்தது. தவிர்க்க முடியாத பணத்தேவை ஏற்பட்டால் மட்டும் ஏதாவது வீட்டில் நுழைவேன். மேபு மனதிற்கிணக்கமானவள். வீட்டில் அவளும் அவளது அம்மாவுமிருந்தார்கள். வறுமைதான் மேபை இப்படியான வாழ்க்கைக்குள் கொண்டுவந்து சேர்த்தது. இதில் அவளுக்குக் குற்றவுணர்ச்சியும் இருந்தது. நல்ல அன்பானவள். மோசமான குணங்களெதுவும் கிடையாது. ஒன்றிரண்டு பேர்களுடன் இதற்கு முன் போயிருந்தாலும் ஒருவனின் செலவில் வாழ்வது இப்போதுதான் என்றாள்.

திருவனந்தபுரத்தில் புத்தரிக்கண்டம் மாதவிபோல் கொல்லத்தில் பேர்கேட்ட ஒருத்தி சந்திரிகா. தனித்துவமுள்ளவள். காசு கிடைக்குமென்பதற்காக இணங்கிவிடமாட்டாள். கொல்லத்திலுள்ள ஒரு பாலம் இப்போது இவள் பெயரில்தான் அறியப்படுகிறது. இவளுடைய தொடுப்பில் ஒருவன் இருந்தான். கோபாலன். பார்க்க அழகாக

இருப்பான். இன் பண்ணி ஒரு சிகரெட்டும் பற்ற வைத்து சின்னக்கடையில் நின்றால் ஐஏஎஸ். அதிகாரிபோலிருப்பான். இடையிடையே வேட்டியும் உடுத்திக் கொண்டு காரில் ஆற்றிங்கலுக்கோ ஆலப்புழைக்கோ திருவனந்தபுரத்திற்கோ போய் ஏதாவது பெரிய ஜவுளிக்கடையில் ஏறுவான். கூடவே இரண்டு மூன்று நண்பர்களையும் சேர்த்துக்கொள்வான். நானும் இவனுடன் ஒருநாள் போயிருக்கிறேன். சும்மா துணைக்கு என்றுதான் நினைத்தேன்: "நான் உனக்கு ஒரு சர்ட் எடுத்துத் தரப்போகிறேன்" என்றான். நான் சொன்னேன்: "நான் ஓசியை விரும்பறதில்லை." "சரி, வேண்டாம். எனக்கு நீ ஒரு சர்ட் செலக்ட் பண்ணி தா." என்றான். சரியென்றேன்.

ஜவுளிக்கடையில் அவனும் நண்பர்களும் சேலைகளை அள்ளிப் போட்டுத் தேடிக்கொண்டிருக்கிறார்கள். கொஞ்ச நேரத்தில் நான் மூன்று சர்ட்டுகளைத் தேர்வு செய்துவிட்டு அவனை அழைத்துக்காட்டினேன். கவரைக்கூடத் திறந்துபார்க்காமல், பில் போடு, பணமெடுத்துக்கொண்டு வருகிறேன் என்று சொல்லிவிட்டுக் காரை நோக்கி நடந்தான். பின்னாலுள்ள டோரைத் திறந்தவன் பணத்துடன் வந்தான். அவ்வளவு சேலைகளும் அள்ளி வெளியில் போடப்பட்டிருந்தது. ஆனால் வாங்கவில்லை. வேலைக்காரர்கள் முகத்தில் சலிப்பு. திரும்பிச் சென்றோம். முன்னால் சென்று காரின் பின்கதவைத் திறந்ததும் நான் அதிர்ந்து விட்டேன். ஏழெட்டு பட்டுச் சேலைகள். சீக்கிரம் ஏறுடா என்று சொல்லி கோபாலன் என்னைக் காருக்குள் தள்ளினான். வண்டி வேகமாகச் சென்றது. போகும் வழியில், பாரிப்பள்ளியில் ஒரு ஜவுளிக்கடையில் எட்டு சேலைகளையும் கொடுத்துப் பணம் வாங்கினான். திருநெல்வேலியில் தன் நண்பன் ஒருவனின் துணிக் கடையிலிருந்து விலை குறைத்து வாங்கி இங்கே கொண்டுவந்து விற்பதாகச் சொல்லி வைத்திருக்கிறேன் என்றான்.

இது எப்படி சாத்தியமென்று கேட்டேன். கோபாலன் சொன்னான்: "ஒரு தமிழன் மூணு நாள்ல படிச்சுத் தந்தான். முன்னூறு ரூபாய் ஃபீஸ் கொடுத்தேன். தமிழன் அனாயசமா பன்னிரெண்டு சேலைவரைக்கும் திருடுவான். நான் ஒருதடவை அவன்கூட டிரைவராகப் போனேன். சேலையை விரிச்சுக் காட்டுறவனோட கவனம் கொஞ்சம் திரும்பியதும் பத்துப் பன்னிரெண்டு சேலைகள் ஒரே அடுக்கா அவன் தொடைக்கிடையில போயிடும். தாழ்த்தி உடுத்திய வேட்டியோட பாண்டி கையையும் வீசிட்டு நடந்தா கடவுள்கூட சந்தேகப்பட மாட்டார். இதுக்கு முதல்லே செய்ய வேண்டியது, திருடவேண்டிய சேலைகளை அடுக்குக்

குலையாம அப்படியே வெச்சிருக்கணும். மற்ற சேலைகளைப் பிரிச்சுப்போட்டிருக்கும்போது அடியிலுள்ள அடுக்குக் காணாமல் போறதை அவனாலக் கவனிக்க முடியாது."

கோபாலனை நான் ஒருநாள் வீட்டுக்கு அழைத்துச் சென்றேன். போளயத்தோடுக்குப்போன இடத்தில் கொஞ்சம் மீன் கிடைத்தது. அதை வீட்டுக்குக் கொண்டுபோகும்போது கோபாலன் நின்றிருந்தான். அவனையும் அழைத்தேன்.

கோபாலனைக் கண்டதும் மேபுவின் முகம் வெளிறியது. அவள் செய்வதறியாமல் ஸ்தம்பித்து நின்றாள். எனக்கு விஷயம் பிடிபட்டது. சாப்பாடெல்லாம் முடிந்து திரும்பிப் போகும்போது கோபாலன் சொன்னான்: "மாப்ளே நீ யோகக்காரன்டா. உன் கஸ்டடிக்குள்ள இவளைக் கொண்டு வந்திட்டியே."

"உனக்கு ஏற்கனவே இவளைத் தெரியுமா?"

"ஓ, ஒரு தடவை நான் ஆலப்புழைக்குக் கொண்டுபோயிருக்கேன். டூரிஸ்ட்தான். லோக்கல் கிடையாது. வேற வழியில்லேண்ணாதான் வருவா. இரண்டாவது தடவை கொண்டு போறதுக்கு குறைஞ்சது ஏழெட்டு தடவையாவது அவளோட புரோக்கர்கிட்ட பேசியிருப்பேன். ஒருவழியாக் கிடைச்சா."

எனக்கு நினைவு வந்தது. முதல் தொடர்பின்போது சில பாவலாக்கள் காட்டி, வேதனை நடித்தாள். நான் சொன்னேன்:

"நான் என்ன ஒண்ணும் தெரியாதவனா? தேவையில்லாம எதுக்குப் பாவலா பண்றே?

அவள் ஒப்புக்கொண்டாள்: "மூணு நாலு பேர்கூட போயிருக்கேங்குறது உண்மைதான்."

மேபு கேட்டாள்: "என்னை டெஸ்ட் பண்றதுக்குன்னுதானே அவனை அழைச்சிட்டு வந்தீங்க?"

"டெஸ்ட் பண்ற கட்டடங்களைத்தான் நீ எப்பவோ கடந்துட்டியேடீ."

"நீங்கதான் முதல் ஆளுன்னு நான் சொல்லலியே?"

"ஆங் . . . எதுவானாலும் நாம பிரியறோம். என் வாழ்க்கையில உன்னோட அத்தியாயத்துக்கு நான் முற்றுப்புள்ளி வைக்கிறேன். இந்த விஷயத்தில போட்டியிருக்கிறதை நான் அசிங்கமா நினைக்கிறேன்."

அவள் அழ ஆரம்பித்தாள். புதிய மேய்ச்சல் களம் தேட வேண்டும். இதுபோல் அமைதியான வாழ்க்கை அமைவது அவ்வளவு சுலபமல்ல.

நான் சொன்னேன்: "அழுது பயனில்லை."

"தெரியும். இருந்தாலும் மனுஷ ஜென்மமில்லையா? இவ்வளவு நாள் சேர்ந்து வாழ்ந்துட்டு பிரியும்போது கொஞ்சம் அழவும்கூடாதா?"

"தாராளமா அழுதுக்க. இவ்வளவு நாளா என்கூட இருந்த உன்னை நான் நல்லபடியாவே அனுப்பி வைப்பேன். மென்று துப்புற மாமிசமா நடத்தவே மாட்டேன். கடைசியா ஒரு தடவை நாம கன்னியாக்குமரிக்குப் போறோம். டிரைவர் கிருஷ்ணனும் கூட வருவான். நான் முதல்லே வந்துடுவேன். உன்னோட பொறுப்பை கொஞ்ச நாள் அவன் ஏத்துக்குவான். அவன் வரும்போது நீயும் கூட வரலாம்."

கார் கன்னியாக்குமரியை நோக்கிப் போய்க்கொண்டிருந்தது. திருவனந்தபுரம் கிழக்கே கோட்டைக்கு வரும்போது கையிலிருந்த சரக்குத் தீர்ந்தது. பக்கத்திலுள்ள பாரில் வாங்கலாமென்று நினைத்து வண்டியை நிறுத்தினேன். அப்போதுதான் என்னுடைய வாழ்க்கையைப் புரட்டிப்போட்ட அந்தச் சம்பவம் நிகழ்ந்தது. நான் உதாசீனம் செய்த என் மனைவி மெகருன்னிஸாவையும் மகளையும் சந்திக்க நேர்ந்த ஏற்கனவே குறிப்பிட்ட அந்த நிகழ்வு.

## **65 -** பத்மினி

என் மனைவிக்குச் செய்த மற்றொரு மகாபாவத்தின் பெயர் பத்மினி. என் குழந்தையின் தாயான மெகருன்னிஸாவை முழுமனத்துடன் ஏற்றுக்கொண்டதன் பின், ஒருநாள் சொன்னேன்: "நான் இன்னொரு கல்யாணம் செய்துக்கப் போறேன்." அவள் மீண்டும் முழுகாமலிருந்த சமயம் அது. நாங்கள் அப்போது திருவனந்தபுரம் வள்ளக்கடவில் வசித்து வந்தோம். நாங்கள் என்றால் நான் சில நாளிரவுகளில் சென்று தங்குவேன். அவ்வளவுதான். கொல்லம் நகராட்சியில் வசூல் வேலையிருந்தது.

அவள் பயத்துடன் சொன்னாள்: "என் குழந்தையோட தகப்பன் நீங்க."

"எனக்குப் பணம் வேணும். வரதட்சிணைப் பணத்தில நான் உனக்கொரு ஆட்டோ வாங்கித் தர்றேன். அதை வாடகைக்கு விட்டு வர்ற பணத்தில நீயும் குழந்தையும் வாழ்ந்துக்கலாம்."

"அப்ப நீங்க போயிடுவேங்கிறீங்க இல்லையா?"

"என் விஷயத்தை உறுதியாச் சொல்ல முடியாது. இது உங்களுக்காக! நான் ஜெயிலுக்குப் போயிட்டாலும் நீயும் குழந்தையும் வாழ வேண்டாமா?"

அவள் அழுகையுடன் சொன்னாள்: "சுமடு தூக்கியாவது பிழைச்சுக்கலாம். இந்த வேலையை விட்டுடுங்க."

"நான் சொல்றதை மட்டும் கேளு. உனக்காகத்தான் சொல்றேன்."

"எனக்காகன்னா அது வேண்டாம்." என்றாள்.

"எப்படியாவது எனக்குக் கொஞ்சம் பணம் தேவைப்படுது. நான் கல்யாணம் செய்துக்கறதா முடிவு பண்ணிட்டேன்." நான் முடிவு செய்தால் செய்ததுதான். காட்டெருமையின் காதில் வேதம் ஓதினால் ஏறாது.

"வேற ஏதாவது நோக்கமிருந்தாச் சொல்லிடுங்க. எங்கிட்ட இல்லாத எதுவும் வேற யாரிட்டயும் இருந்துடப் போறதில்லை."

நான் திட்டினேன். ஒரு மாதமாகத் தொடர்ந்து இதையே பாடிக்கொண்டிருந்தேன். தங்கும்போதும் திங்கும்போதும் தூங்கும்போதும். அவளோ என்ன செய்வதென்று தெரியாமல் தவித்தாள். அதிகம் இறுக்கிப் பிடித்தால் பிடியிலிருந்து கழன்று விடுமென்பதும் அவளுக்குத் தெரியும். குழந்தைக்கு அப்பா வேண்டுமென்பதில் அவள் உறுதியாக இருந்தாள். வேறு வழியே இல்லாத நிலையில் சொன்னாள்: "உங்க விருப்பம்போல செய்துக்குங்க. ஆனா, அதுக்கு முன்னாடி கர்ப்பம் கலையுறதுக்கான மாத்திரை வாங்கித் தந்துட்டுப் போங்க. நீங்கப் போயிட்டாலும் நான் என் ஒரு குழந்தையோட எப்படியாவது பிழைச்சுக்குவேன். இன்னொண்ணும் இருந்தா சாவுறதைத் தவிர எனக்கு வேற வழியில்லை."

வேண்டாமென்று சொல்லிப் பார்த்தேன். "உங்க விருப்பம் அதுவா இருந்தா, என் விருப்பம் இதுதான். இது என்னோட உரிமை."

இந்த மாத்திரை அப்போது வெறும் நாற்பது காசுதான். வாங்கிக் கொடுத்தேன்.

மீண்டுமொரு திருமணம். இந்த யோசனை எப்படி உருவானது? பக்கத்து வீட்டிலுள்ள ராஜம்மா அக்கச்சியும் அம்மாவும் பேசிக்கொண்டிருந்தார்கள். திருவனந்தபுரத்தில் எனக்கொரு குடும்பம் இருக்கும் விஷயங்கள் எதுவும் அம்மாவுக்குத் தெரியாது. அதெல்லாம் எப்பவோ இல்லாமல் போய்விட்டது என்றுதான் அம்மாவும் நினைத்துக்கொண்டிருந்தாள்.

அம்மா சொன்னாள்: "கல்யாணம் பண்ணி வெச்சா ஒருவேளை திருந்திடுவான்."

ராஜம்மா அக்கச்சி என்னைச் சீண்டுவதற்காகச் சொன்னாள்: "திருடனுக்கு யார்டே பொண்ணு கொடுக்குறா?"

"நானும் பாக்குறனே யாராவது தர்றாங்களான்னு." என்றேன்.

இப்படியிருக்கும்போது புரோக்கர்மூலம் ஒரு யோசனை வந்தது: "பொண்ணோட ஊர், திருவனந்தபுரத்தில வடக்கு கோவளம். நல்ல குடும்பம். பொருளாதார ரீதியாக் கீழ வந்துட்டாங்க. நல்ல மரியாதையான குடும்பம்."

"அப்ப நமக்குத் தோதுப்படாது."

"ஏன் அப்படி . . ?"

"அதுக்கான யோக்கியதை எனக்கு வேண்டாமா?"

"நீ இப்ப எதுல குறைஞ்சுபோயிட்டே?" என்று சொல்லிவிட்டு: "அடேய், ஒவ்வொருத்தன் மனசையும் திறந்துப் பாக்கும்போதுதான் எறும்புக்கூடுபோல உள்ளே என்னவெல்லாம் இருக்குங்கிறதைப் புரிஞ்சுக்க முடியும். அதனால இந்த விஷயங்களில நீ எதுவும் சொல்ல வேண்டாம். முனிசிப்பாலிட்டியில வரி வசூல் பண்ற ஒரு நல்ல வேலையில இருக்கே நீ. வருமானமுமிருக்கு. அது போதும்."

குட்டிக்கடையில் கணியான் நண்பனொருவன் இருந்தான். பெண்ணின் ஜாதகத்துடன் அவனைப் பார்க்கச் சென்றேன். அவன் சொன்னான்: "பெண்ணோடது பாவஜாதகமும் உன்னோடது சுத்த ஜாதகமும். இரண்டையும் ஒண்ணு சேக்குறது முடியாத காரியம் . . ."

"நான் கேட்டேன்: "டேய், நிஜம் இதுக்கு நேர்மாறானதில்லையா? நான் பாவம் செய்றவன். இந்த ஜாதகங்கள் எல்லாத்தையுமே தலைகீழாத்தான் சொல்லுமா?"

அவன் சொன்னான்: "ஜோதிடம் ஒருபோதும் பொய் சொல்லாது."

"ஜோசியன் பொய் சொல்வானே? மட்டுமில்ல, பாவஜாதகத்தோட பலனை அவ முழுசா அனுபவிக்கணும்னா என்னைக் கட்டிக்கிட்டாதானே முடியும்? என்னையும் பாவியாக்கி ஜாதகத்தை மாத்தியெழுது."

பெண்ணின் அப்பா கொல்லத்துக்கு வந்து என்னப் பற்றி சரியாகத் தெரியாத யாரிடமோ விசாரித்திருக்கிறார். "அவனா? நல்ல பையனாச்சே! உழைப்பாளி. தைரியமாக் கொடுக்கலாம்" என்று சொல்லியிருக்கிறார்கள். சடங்கு நிறைவேறிய திருப்தியுடன் பெண்ணின் அப்பா ஊருக்குத் திரும்பினார். அது சொத்தை இது சொள்ளை என்றெல்லால் பார்த்தால் காலம் பூராவும் பார்க்கலாம். கூட்டிக் கழித்து எப்படியாவது பெண்ணை அனுப்பி விட வேண்டுமென்று நினைத்திருப்பார். எதையும் தீர விசாரித்துதான் முடிவெடுக்க வேண்டும். குறிப்பாக பெண்கள் விஷயத்தில். வாழத்துங்கலின் மீது பறக்கும் ஒரு கிளிகூட என்னைப் பற்றி நல்ல அபிப்பிராயம் சொல்லாது. அவளுடைய ஜாதகதோஷம். பெரிய

அளவில் திருமணம் நடந்தேறியது. வாழத்துங்கலின் கஜகேசரிகளான நாயர்கள் நான்கைந்து டெம்போக்களில் திருவனந்தபுரம் நோக்கிப் புறப்பட்டார்கள். திருமண மண்டபத்திற்கு மணப்பெண் வந்தாள். ஊர்க்காரர்கள் மூச்சடைத்து நின்றுவிட்டார்கள். திருடனின் மனைவி, கொள்ளை அழகு. மூக்கு முட்டத் தின்னும்போதும் யாரும் எதுவும் சொல்லவில்லை. எல்லோருக்குள்ளும் குற்றவுணர்ச்சியும் பதற்றமும் இருந்திருக்கும். அவர்களுக்குத் தெரியாதா என்ன? மாப்பிள்ளைப் பையன் மகா கள்ளன் என்கிற விஷயம். பெண்ணின் எதிர்காலத்தைப் பற்றிய முடிவில் வாழத்துங்கல்காரர்களுக்கு எந்தவிதக் கருத்து முரண்பாடுகளுமில்லை.

நான் பெருமிதத்தில் ஆழ்ந்திருந்தேன். திருடனுக்கும் பெண் கிடைத்திருக்கிறாள். அதுவும் ஒரு பேரழகி. பல் நீண்டவளோ கறுப்பியோ வயதானவளோ மொட்டைச்சியோ இல்லை. உடம்பில் எதற்கும் எந்தக் குறைகளுமில்லை. ஒரேயொரு பிரச்சினை. வாயைத் திறந்தால் தனி, திருவனந்தபுரம் மலையாளம்.

இரவில்தான் பிரச்சினை. மனதிற்கிசைவாக இருந்தால் மட்டுமே என்னால் உறவில் ஈடுபட இயலும். நானோ இவளை ஏமாற்றித் திருமணம் செய்திருப்பவன். இவ்வளவு அழகானவளுடன் இணைவதற்கான யோக்கியதை எதுவும் என்னிடமில்லை. முழுமையான தாம்பத்திய சுகத்தை ஒருபோதுமே என்னால் அனுபவிக்க இயலவில்லை. மிகவும் குறைவான நாட்கள்தான் இணைந்துமிருப்போம். இதிலொரு வகை ஆர்வமற்ற போக்கு அவளிடம் தெரிந்தது. படுக்கையில் அழகை மட்டுமே ஒரு அளவுகோலாகக்கொள்ள முடியாது.

நான் மகிழ்ச்சியான தாம்பத்திய வாழ்க்கை நடத்தி வருவதாக ஊர்க்காரர்கள் தவறாக நினைத்திருந்த ஒருநாள், காலையில் நான் வழக்கம்போல் வேலைக்குச் சென்றுவிட்டேன். கொஞ்ச நேரத்தில் சூறாவளி போல் வருகிறாள் என் மனைவி மெகருன்னிஸா. பக்கத்து வீட்டு அக்காவின் வீட்டில் போயிருந்து ஒரே அழுகையும் ஒப்பாரியும் வைக்கத் தொடங்கினாள். அக்கா தடுத்தும் கேட்காமல், நேராக வீட்டுக்கு வந்து நான் எங்கே என்று கேட்டிருக்கிறாள். என் இளைய தங்கை தத்தம்மையும் பத்மினியும் சேர்ந்து இவள்மீது பாய்ந்தார்கள். இவளோ இரட்டைப் புலி. சண்டைப் போட்டு வளர்ந்தவள். இவளை எதிர்த்து நிற்க இரண்டுபேர் பத்தாது. பிரச்சினையானது. இவளை பக்கத்து வீட்டக்கா இழுத்துக்கொண்டுபோய் வீட்டில் வைத்துக்கொண்டாள்.

நான் இதையெல்லாம் அறியாமல் ஒரு பாடலை ராகம் இழுத்தபடியே சைக்கிளை ஸ்டான்ட் போட்டு நிறுத்தினேன். பத்மினியின் முகம், போகும்போது இருந்ததுபோல் அல்ல, இப்போது இரு மடங்கு பெரிதாகி இருந்தது. வழி மறித்து நின்றாள்:

"உன் முகம் தேனீச்சைக் கொட்டினது போலிருக்கே, என்ன விசேஷம்?" என்று குசலம் விசாரித்தேன்.

இதற்கான பதில்: "உங்களுக்கு எத்தனைப் பொண்டாட்டிங்க இருக்காளுங்க. முதல்லே அதைச் சொல்லுங்க. எனக்கும் தெரியணும்."

என்னவோ பிரச்சினை இருக்கிறது என்பதைப் புரிந்துகொண்டு கையை எடு என்று சொல்லித் தட்டிவிட்டு உள்ளே போனேன்.

தங்கையும் அவளுடன் சேர்ந்துகொண்டாள்: "மெகருன்னிஸான்னு ஒருத்தி வந்திருந்தா. இப்ப, பக்கத்து வீட்டில இருக்கா."

இறங்கிப்போய் மெகருன்னிஸாவைக் கூப்பிட்டுக் கேட்டேன்: "என்ன விஷயமா வந்தே?"

"குழந்தையைத் திருவனந்தபுரம் ஜெனரல் ஆஸ்பத்திரியில வெச்சிருக்கேன். காய்ச்சல் அதிகமாயிடுச்சு."

"நீ இப்ப எதுக்கு இங்க வந்தே? நான்தான் ஃபோன் பண்ணாப் போதும்னு சொல்லியிருக்கேன்ல?"

"கொல்லம் ஆஃபீசுக்கு ஃபோன் பண்ணினேன். ஞாயிற்றுக்கிழமை மட்டும்தான் இங்க வருவார்னு சொல்லிட்டாங்க." அவள் அழ ஆரம்பித்தாள். எனக்கும் என்னவோ போலிருந்தது. குழந்தையை முதலில் கவனிக்க வேண்டும். மற்றவை வருவதுபோல் வரட்டும்.

"சரி, நீ வீட்டுக்குப் போ." என்றேன்.

"இனி நான் உங்களுக்கு ஃபோன் பண்ணவும் மாட்டேன். இங்க வரவும் மாட்டேன். குழந்தையோட நிலைமையைச் சொல்லணும்னுதான் வந்தேன். அப்பாங்கிறதுக்காக . . . ஏதாவது ஆயிடுச்சுன்னா முதல்லேயே ஏன் சொல்லலைன்னு கேட்டுடக் கூடாதேங்குறதுக்காக மட்டும். குழந்தையோட நிலைமை . . . இப்ப சரியில்லை . . ."

"சரி, நீ போ. நான் வந்துடறேன்."

அவள் நீர் ததும்பும் கண்களால் என் முகத்தைப் பார்த்தாள். அள்ளியணைத்து ஆறுதல் சொல்லத் தோன்றியது.

"பஸ்சுக்குக் காசு வெச்சிருக்கிறியா?"

"இருக்கு." என்று சொல்லிவிட்டு நடந்தாள்.

வீட்டுக்கு வந்தேன். மற்றொரு பத்னியான பத்மினி அமைதியாக நின்றிருந்தாள்.

"என்ன சொல்லி அனுப்பி வெச்சீங்க. பின்னால வர்றேன்னுட்டா?"

ஒருமணி நேரம் கழிந்தது. "ஆஃபீஸ்வரைக்கும் போகவேண்டியதிருக்கு. ரசீது புக்கைக் கொடுக்க மறந்துட்டேன். ஒருமணி நேரத்தில திரும்பி வந்திடறேன்" என்று பத்மினியிடம் சொல்லிவிட்டுப் புறப்பட்டேன். அவள் எதுவுமே சொல்லவில்லை.

திருவனந்தபுரத்திற்கு பஸ்சேறினேன். ஆஸ்பத்திரிக்குச் சென்று மகனைப் பார்த்தேன். மூன்று நாட்கள் கூடவே இருந்து, காய்ச்சல் விட்ட பிறகு வீட்டில் கொண்டு போய்ச்சேர்த்தேன். புறப்படும்போது மெகருன்னிஸாவைப் பார்த்தேன். நிறைந்த கண்களுடன் நின்றாள். பாவம், ரொம்பவும் மெலிந்து போயிருந்தாள். எவ்வளவு கஷ்டங்கள் வந்தாலும் என்னிடம் சொல்ல மாட்டாள். இந்தப் பாவங்கள் எல்லாம் என்னை எங்குக் கொண்டுபோய்ச் சேர்க்கப்போகிறதோ?

வீட்டுக்கு வந்தேன். பிரச்சினை அங்கே தீவிரமாகி இருந்தது. எதையெதையோ சொல்லி பத்மினியை சாந்தப்படுத்தினேன். அரைகுறையாக நம்பியதுபோலவும் தெரிந்தது. அல்லது அப்படி நடித்திருப்பாள்.

"கோவளத்திலே எங்க வீட்டுக்குப் போகலாம். அங்கேயே இருக்கறதா இருந்தால் சரி, இல்லேன்னா பிரிஞ்சிடுவோம்" என்றாள்.

ஒருவகையில் இதுதான் வசதி. மெகருன்னிஸாவின் வீட்டிலிருந்து கோவளம் இருபது கிலோமீட்டர்தான். ஆனால், அங்கிருந்து கொல்லத்துக்கு வேலைக்கு வருவதிலுள்ள சிரமத்தைக் குறிப்பிட்டு வாரத்திற்கொரு தடவை வருவதாகச் சொன்னேன். ஒப்புக்கொண்டாள்.

வசதிக்கேற்ப சில வாரங்களில் இரண்டு தடவையும் போயிருக்கிறேன்.

வள்ளக்கடவையும் கோவளத்தையும் தொடர்ந்து பராமரித்துச் செல்வது எளிதாக இல்லை. திருடன் அல்லவா? ஊதாரித்தனம் அதிகம். கிடைப்பதை அவ்வப்போது தீர்த்து விடுவேன். முனிசிப்பாலிட்டி வசூலை வைத்து ஒரு குடும்பம் நல்ல முறையில் வாழலாம். இப்போது இரண்டு குடும்பங்கள். கொல்லத்தில் ஓடிக்கொண்டிருந்த என்னுடைய ஆட்டோவில் பழுது பார்க்கும் வேலைகள் அதிகமாகிக் கொண்டிருந்தன. ஒரு நாள் முன்புற டயர் வெடித்தால் மறுநாள் பின்புறம் வெடிக்கும். இல்லையென்றால் எஞ்சின் பழுதாகும். திக்கு முக்காடிப்போனேன். கடனும் அதிகரித்தது. வண்டியை வந்த விலைக்கு விற்றேன். அதில் மெகருன்னிஸாவுக்கு ஒரு பங்கு. மிச்சத்தைப் பத்மினியின் வீட்டுக்குச் செலவு செய்தேன். அவளது வீட்டில் உட்காருவதற்கான செயர்கள் இல்லை. அதை வாங்கினேன். மாமனார் அதுவரை பார்த்திராத பெரிய பெரிய மீன்கள் வாங்கி வந்தேன். சாயங்காலமானால் அவருக்குக் கொஞ்சம் அடிக்க வேண்டும். ஒருநாள் இரண்டு ஃபுல் பாட்டில்களை நான் வாங்கிப்போட்ட மேஜையின்மீது அவருக்காகவென்று வைத்தேன். விலையுயர்ந்த சரக்கு. மாமனார் மலைத்துவிட்டார். இரண்டு குப்பிச் சரக்கையும் தீர்த்தபிறகுதான் உயிர்த்தெழுந்தார். மருமகனுக்கு நல்ல வருமானம் என்று நினைத்துவிட்டார். பிறகு, எப்போது பார்த்தாலும் மருமகன் புராணம்தான்.

அப்படியாக அந்தப் பணமும் தீர்ந்தது. ஆட்டோ வாடகைக்கு ஓடுவதிலும் இரவில் நானே ஓட்டுவதிலும் கிடைத்து வந்த ஓரளவிலான வருமானமும் நின்றது. பணமுடை அதிகரித்தது.

ஒருநாள், திருவனந்தபுரத்தில் வந்திறங்கும்போது சாயா குடிப்பதற்கான காசுகூட கையில் இல்லை. ஒரு வீட்டிலேறி ஆபரேசன் செய்தேன். கொஞ்சம் துட்டுக் கிடைத்தது. இப்படியாக பல இடங்களிலும் நடத்திய திருட்டுகளில் கிடைத்தப் பணத்தில் மாமனார் அடிக்கடி விழவும் உயிர்த்தெழவும் செய்தார். சமையல்கட்டு, வறுவல் செய்ததும் பொரியல் செய்ததுமான பெரிய பெரிய மீன்களால் நிறைவு பெற்றது. அப்போது நிறைய கெட்ட பேர் சம்பாதித்திருந்த ஒரு ஸ்டேஷன், ஃபோர்ட் போலீஸ் ஸ்டேஷன். லாக்கப் சாவுகள் அன்றும் நிறையவே நடந்தன. இதனிடையில் மெகருன்னிஸாவின் வள்ளக்கடவு வீட்டிலிருந்து சிறிது தொலைவிலுள்ள துண்டத்தில் எனுமிடத்திற்கு நாங்கள் வீடு மாறினோம். கொழுப்புதான் இதற்கானக் காரணம். கொழுப்பும் அவனது மனைவியும் கொல்லத்தில் எங்கள் வீட்டின் அருகாமையில் வசித்து வந்தவர்கள். இவர்களது சொந்த

ஊர், வள்ளக்கடவின் பக்கத்திலுள்ள வலியதுறை என்பது என்னுடைய போதாத காலம். இவனுக்கு என்னுடைய தன்வரலாறுகள் முழுவதும் தெரியும். மெகருன்னிஸாவின் வீட்டிலுள்ளவர்களுக்கும் என்னைப் பற்றிய எல்லாமும் தெரியுமென்பதால் பிரச்சினை இல்லை. கொழுப்பு சாராய வியாபாரம் செய்பவன். குடிக்க வந்த இடத்தில் எனக்கும் கொழுப்புக்கும் சிறு தகராறு ஏற்பட்டு விட்டது. அவன் போலீசில் புகார் செய்தான். கீதாபாலன்நாயர் என்ற எஸ்ஐ என்னைத் தூக்கினார்.

மெகருன்னிஸாவின் வீட்டிலுள்ளவர்கள் கலாபிரேமி பஷீர் என்றொரு பொதுச்சேவகனைப் போய்ப் பார்த்தார்கள். இவர் ஒரு நல்ல மனிதர். போலீசில் போதுமான அளவுக்குச் செல்வாக்குள்ள மனிதர். அவர் வந்து சொன்னார்: "தண்ணியடிக்கிறதில வந்த சச்சரவுதானே, விட்டுடலாமே" என்றார். நான் வெளியில் வந்தேன். இவருக்கு என்னுடைய பின்னணிகள் எவையும் தெரியாது.

நான் வெளியே வந்துவிட்டேன் என்பதை அறிந்ததும் கொழுப்புக்கு வீம்பு வந்துவிட்டது. அவன் எசகுபிசகான ஒரு திட்டம் தீட்டினான். கொழுப்புவிடம் சாராயம் வாங்கிக் குடிப்பவரும், ஃபோர்ட் சிஐ ஸ்குவாடிலுள்ளவருமான ஒரு போலீஸ்காரரிடம் என் வரலாற்றுப் பின்னணிகளைப் போட்டுக்கொடுத்து விட்டான். அவர் சிஐயிடம் சொன்னார். இதனிடையே திருவனந்தபுரத்தில் நடந்த பல திருட்டுகளிலும் என்னுடைய விரல் ரேகைகள் பதிந்திருந்தன. ஆள் யாரென்று அவர்களுக்குப் பிடிகிடைக்கவில்லை. பதித்துவைத்த விரலடையாளங்களுடன் கொஞ்ச நாட்களாக அவர்கள் காத்திருக்கிறார்கள். ஏனென்றால், திருவனந்தபுரம் ஏரியா லிஸ்டில் நானில்லை. இந்நிலையில்தான் இந்தப் பொன்னான வாய்ப்புத் தேடி வருகிறது.

அவர்கள் உடனடியாக வலியதுறைக்கு வந்து கடற்கரை முழுவதையும் அரித்துப் பார்த்தார்கள். என் மனைவியின் உறவினர்களை மிரட்டினார்கள். நாங்கள் துண்டத்தில் வீடு மாறியிருக்கும் செய்தி இவர்களுக்குத் தெரியாது. யாரிடமும் சொல்ல வேண்டாமென்று நான் ஏற்கனவே மனைவியிடம் சொல்லி வைத்திருந்தேன். கணவன் பிடிபடுவது ஒருநாள் தாமதமாகுமென்றால் அந்த ஒருநாளாவது அவனுடன் இருக்கலாமே என்று அவளும் சொல்லவில்லை. துண்டத்தில் அவளது தூரத்து உறவினர் ஒருவரின் வீட்டுப் பக்கத்தில்தான் வசித்து வந்தோம்.

ஒருநாளிரவு கண்ணுமூலை எனுமிடத்தில் வைத்து தெரியாத்தனமாக நான்

ஃபோர்ட் போலீஸ்காரர்கள் கையில் சிக்கிவிட்டேன். அன்று நான்கு திருட்டுகளைச் சொன்னேன். ஜெனரல் ஆஸ்பத்திரி அருகில், குமாரபுரத்தில், கேசவதாசபுரத்தில், உள்ளூரில் என்று மொத்தம் நான்கு.

பிறகெல்லாம் வழக்கம்போல்தான். போலீஸ் என்னையும்கொண்டு அங்கே எழுந்தருளியது. பொருட்களை எங்கெல்லாம் விற்றேனோ அங்கெல்லாம் ரிக்கவரி. போலீசாருக்கும் பரம சுகம். பொருட்களை வாங்கியவர்களை மிரட்டி அவர்களுடைய பணத்தில் எல்லாமே நடந்தது. பத்மினியின் வீட்டை அலங்கரித்தவைகளில் பெருமளவும் எங்கிருந்தோ வந்தவைதான்.

போலீஸ் என்னையும்கொண்டு கோவளத்திற்கு வந்தது. ரோட்டிலிருந்து ஒரு குறுகிய பாதை வழியாக ஒரு கிலோமீட்டர் தூரம் நடந்து பத்மினியின் வீட்டுக்குப் போக வேண்டும். ஜீப்பை ரோட்டில் நிறுத்திவிட்டு நானும் போலீஸ்காரர்களும் பாதயாத்திரை மேற்கொண்டோம். கை விலங்குடன் நான் முன்னால் நடந்தேன். அந்த வழியில் நான் பல மாதங்களாக நடப்பவன். எல்லோருடனும் நல்ல பரிச்சயமுமிருந்தது. கிராமப்புறமென்பதால் ஒருவரை ஒருவர் அறிந்திருப்பார்கள். அப்போது, 'மதராசிலெ மோன்' என்ற திரைப்படம் வெளியான காலகட்டம். கிராமத்திலுள்ள சின்னஞ்சிறுசுகள் இதோ கொல்லத்தில் மகன் என்று சொல்லிக் கூக்குரலிட்டபடியே கூட்டமாகப் பின்னால் வந்துகொண்டிருந்தார்கள். பெரியவர்களும் வந்தார்கள். ஆனால், கூக்குரலிடவில்லை. கையில் விலங்குடன் நான் தலைகுனிந்து நடந்த ஒரே சந்தர்ப்பம் இதுதான். மிகப்பெரிய அவமானம். கணவன் திருடன் என்கிற விஷயம் பத்மினிக்குத் தெரியாது. சில வேண்டாத்தனமான நடவடிக்கைகளும் பெண் தொடர்புகளுமுண்டு என்று மட்டும் தெரியும். பொருளாதார நிலையில் தாழ்ந்தவர்களாக இருந்தாலும் குடும்பப் பெருமைகளைக் குலையாமல் காத்து வருபவர்கள். கை விலங்குடன் போலீஸ் அழைத்து வரும் கணவன் அல்லது மருமகனைக் கண்டதும் அவர்களுக்கு ஏற்படுகிற பாதிப்பை யூகித்துவிட முடியும்தான். அதுவும் திருட்டு வழக்கில்.

நேராக வீட்டுக்குச் சென்றோம். கை விலங்குடன் நான் வந்து கொண்டிருக்கும் செய்தியை யாரோ சொல்லி அறிந்திருந்தார்கள். வீட்டின் முன் திருவிழாக் கூட்டம். யாரும் முற்றத்தில் இல்லை. நான் ஆபத்தைப் புரிந்துகொண்டேன். ஏதாவது அசம்பாவிதம் நிகழ்ந்துவிட்டதா? சிறிது நேரம் கூப்பிட்ட பிறகுதான் வயதான அந்த மனிதர் நிறைந்த கண்களுடன் இறங்கி வந்தார். அவரது முகத்தை ஏறிட்டுப் பார்க்கவும்கூட மனதில்

தெம்பில்லை. என்னைப் பொறுத்தவரைக்கும் நானொரு திருடன். அவ்வளவுதான். ஆனால், அவர்களுக்கோ மனதால் நினைத்துப் பார்க்கவும் முடியாத மிகப் பெரிய வஞ்சனை நிகழ்ந்திருக்கிறது. மனச்சாட்சிக்கு மிகப்பெரும் குந்தகம் விளைவித்தவனாக நான் தலைகுனிந்து நின்றிருந்தேன்

"நான் தந்திருக்கிறதயெல்லாம் கொடுத்துடுங்க . . . பத்மினியோட அரைஞாணும் மோதிரமும் வளையலும் . . . அப்புறம் வேறு என்னெல்லாம் தந்தனோ எல்லாத்தையும் . . ."

உள்ளே இருந்து அடக்கி வைக்க முடியாத தேம்பல் குரல்கள். மாமா வெளியே வரும்போதும் உள்ளே போகும்போதும் ஆட்களின் கூக்குரலும் சத்தமும். எல்லாவற்றையும் தெரிந்துதான் இவர்கள் வாங்கியிருக்கிறார்கள் என்பது போலீசாருடையவும் பொதுமக்களுடையவும் எண்ணம். பாவம், அவர்களுக்கு எதுவுமே தெரியாது என்பதுதான் உண்மை.

நான் கொடுக்காததுட்பட ஐந்தாறு சேலைகள் வந்து வெளியே விழுந்தன. சந்தேகமுள்ள எல்லாப் பொருட்களையும் எடுத்து வெளியே போடுகிறார். சந்தேகத்தைக் கேட்டுத் தெளிவுபடுத்தும் மனநிலையில் இல்லை அவர். வளையல், மோதிரம், அரைஞாண் எல்லாவற்றையும் வைத்துவிட்டுச் சொன்னார்: "என் மகளுக்கோ எனக்கோ தெரியாம இங்க ஏதாவது வெச்சிருந்தா ஏறி எடுத்துக்கலாம் . . . இப்பவே! இனியொரு தடவை போலீஸ் இங்கே வரக்கூடாது" என்றவர் போலீஸ்காரர்களைப் பார்த்துச் சொன்னார்: "இவன் என்னவெல்லாமோ வாங்கித் தந்து அதை நான் தின்னிருக்கேன், குடிச்சிருக்கேன் சார். எதுவுமே எனக்குத் தெரியாது சார். வாந்தியெடுக்க முடியும்னா அதை நான் வாந்தியெடுத்திருப்பேன்."

வேலிக்குப் பின்னால் ஆட்களின் கேலியும் கூக்குரலும். அவர் அழுதபடியே உள்ளே போனார். போலீஸ்காரர்கள் ஒவ்வொன்றாக எழுதி எடுத்துக்கொண்டிருக்கும்போது அவர்கள் அனுமதியுடன் சில போலீஸ்காரர்களுடன் சென்று ஜீப்பில் போய் உட்கார்ந்தேன். ஆட்கள் இங்கேயும் வந்து கூடினார்கள். பிறகுதான் அறிந்தேன். பத்மினி மயக்கம் போட்டு விழுந்துவிட்டதாக. பாவம்!

அன்று சாயங்காலம் பத்மினியும் அவளது அப்பாவும் சகோதரர்களும் ஃபோர்ட் போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்தார்கள். அவளை மீண்டும் பார்ப்போம் என்று நான் நினைக்கவில்லை. இதுதான் கடைசி என்பது

உறுதி. அவள் சொன்னாள்: "எனக்கு இனி இந்த மனுசனோட எந்த உறவும் வேண்டாம். நான் யார் வீட்டிலாவது பத்துப் பாத்திரம் கழுவிப் பொழைச்சுக்குவேன்."

சிஜ சொன்னார்: "இது விவாகரத்து கொடுக்குற இடமில்லை. நாங்க செய்ய வேண்டியதை எல்லாம் செய்து முடிச்சு கோர்ட்டில கொண்டுபோய் ஒப்படைப்போம். எங்க வேலை அவ்வளவுதான்."

மறுநாள்தான் மெகருன்னிஸா விஷயத்தைக் கேள்விப்பட்டு சாப்பிடுவதற்கான ஏதோ ஆகாரங்களுடன் வந்தாள். ஸ்டேஷனை சுத்தம் செய்பவள் வரைக்கும் சட்ட ஆலோசகராக இருந்தாக வேண்டுமல்லவா? அவள் சொன்னாள்: "வீட்டுக்காரன் திரும்பக் கிடைக்கணும்னா கோர்ட்டுல போய் அவனைக் காணலை, போலீஸ் பிடிச்சிட்டுப் போயிருக்குறதா சந்தேகப்படுறேன்னு சொல்லி புகார் கொடு. இது ஃபோர்ட் ஸ்டேஷங்கிறதை ஞாபகம் வெச்சுக்க. கோர்ட்டுக்கு ஒருவேளை வந்தாதான் உண்டு."

சிஜ யூஸஃப் சார் வந்து என்னைப் பார்த்தார். இவருடைய பங்கு எனக்கு இன்னும் கிடைக்கவில்லை. அவர் விசாரிக்க ஆரம்பித்தார்.

"புதிய பிரம்பு வந்துடுச்சாப்பா?"

"உள்ளூர்ல பிரம்புக் கடையிலேருந்து வாங்கி வெச்சிருக்கோம் சார்." ஒரு போலீஸ்காரர் பதில் சொன்னார்.

சார் பிரம்புடன் வந்தார். கொஞ்ச நேரமாக என்னையே பார்த்துக் கொண்டு நின்றார். எதையெதையோ கேட்டார். பலமுறை கை ஓங்கினார். பிறகு சொன்னார்:

"இவன் கண்ணைப் பாத்தா எதுவும் பண்ணவும் தோணலை . . ." பிரம்பை எறிந்துவிட்டு எழுந்து சென்றார்.

மனைவியின் புகார்மீது நீதிமன்றம் அறிக்கை கோரியது. அதற்குள் மிச்சமிருந்த தடயங்கள் சேகரிப்பும் முடிவடைந்தது. என்னை நீதிமன்றத்தில் ஆஜர்படுத்தினார்கள்.

ஜாமீனில் எடுப்பதற்காக அம்மா வந்திருந்தாள். நான்கு வழக்குகளும் அதன் உட்பிரிவுகளுமெல்லாம் சேர்ந்து நிறையவே இருந்தன. பெரிய அக்காவும் அம்மாவும் தங்கள் நிலத்தை விற்று வைத்திருந்த

பணத்தைதான் அம்மா இந்த முடிந்த புதல்வனுக்காகக் கொண்டுவந்திருக்கிறாள். தன்னுடைய உழைப்பில் குடும்பத்தை அச்சாணியாக நின்று தாங்க வேண்டிய மகன்; நான்கு சகோதரிகளுடன் பிறந்த ஏக சகோதரன்.

ஜாமீனில் வெளியே வந்த பிறகு, ஒருநாள் மனைவியிடம் சொன்னேன்: "கொஞ்ச காலமாவது நாம நிம்மதியா வாழ வேண்டாமா? இருக்குறதை எல்லாம் அள்ளிக்கட்டு. எங்காவது தலைமறைவாயிடலாம்."

ஐந்தாறு வருடங்களுக்குப் பிறகு, ஒருநாள் நானும் மனைவியும் திருவனந்தபுரம் சென்ட்ரல் காலேஜில் போலீஸ் பாதுகாப்பு வளையத்தினுள் நிற்கிறோம். என்னை ஜெயிலிருந்து கொண்டுவருவதை அறிந்து வந்திருக்கிறாள். மூன்று நான்கு பற்கள் வைக்க வேண்டும். கதராடைகள் அணிந்திருப்பேன் என்றால் ஏதாவது மந்திரியாக இருக்குமென்று நினைத்துக்கொள்வார்கள். அவ்வளவு கம்பீரமாக நிற்கிறேன். மனைவியுடன் பேசிக்கொண்டிருப்பதால் போலீஸ்காரர்கள் சற்று விலகியே நின்றார்கள்.

அப்போது ஒரு வயதான மனிதர் வந்து கேட்டார்:

"பத்மினியோட புருஷன்தானே?" நான் மனைவியின் முகத்தைப் பார்த்துவிட்டுச் சொன்னேன்:

"ஆமா."

திரும்பி அவளைப் பார்த்துவிட்டுக் கேட்டார்: "இது யாரு?"

இதற்கு அவளே பதில் சொன்னாள்: "இவர் என் வீட்டுக்காரர் . . ."

ஏதோ மிகப் பெரிய ரகசியத்தைக் கண்டுபிடித்தவர்போல் அவர் உற்சாகத்துடன் சொன்னார்: "ஆங் . . . இவதான் அந்த மேத்தப் பொண்ணு இல்லையா? பாக்கணும்னு நினைச்சிட்டிருந்தேன்" என்று சொல்லி ஏற்ற இறக்கங்களையெல்லாம் ஒரு நிமிடம் அளவு பார்த்துவிட்டுக் கூடவே சந்தோசத்துடனான ஒரு சான்றிதழும் கொடுத்தார்:

"நல்ல பொண்ணு . . . பத்மினியைபோலதான் இருக்குறா . . . குறைசொல்ல முடியாது."

"பத்மினி இப்ப . . ?" என்று இழுத்தேன்.

"மாமா மகனே அவளைக் கல்யாணம் பண்ணிட்டான். நல்ல பையன் . . ."

"பத்மினியும்தான்." என்றேன் நான்.

"ஏதாவது சொல்லணுமா?" என்றார்.

"வேண்டாம். பாத்ததாகக்கூட சொல்லிடாதீங்க."

"சட்டப்படி விவாகரத்து ஆயிடுச்சா?"

"மனசால விலகியாச்சு. அப்புறம் சட்டம் எதுக்கு?"

கிளீனர்: கொஞ்ச நாட்கள் ஆர்எஸ்பி லாரித் தொழிலாளர் யூனியன் அலுவலகம் தொடர்பான வேலைகளையும் செய்திருக்கிறேன். என்னைத் திருத்துவதற்காக சிஜ மனோகரன் சார் சேர்த்துவிட்ட பார்க்கிங் கட்டணம் வசூலின் மொத்தக் குத்தகையை ஆஎஸ்பியின் மாவட்ட லாரித் தொழிலாளர்கள் யூனியன்தான் எடுத்திருந்தது. இதன் தலைவராக இருந்த முஜீப் ரஷீது ஒரு நல்ல மனிதர்; தொழிலாளர்களை நேசிப்பவர். இவரது ஒரே பலவீனம் கட்சி என்றால், கட்சித்தலைவர்களுக்குப் பல்வேறு பலவீனங்கள். ரஷீது அண்ணன்மீது அவர்களுக்கு நல்ல நம்பிக்கையிருந்தது. யூனியனின்கீழ் ஏராளமாக லாரிகள் ஓடின. ரஷீதுக்கும் சொந்தமாக லாரி இருந்தது. லாரிகளின் விபத்து தொடர்பாகவும் அதிகாரிகளின் உபயோகத்துக்கு அவற்றை அனுப்புவது தொடர்பாகவும் போலீஸ் ஸ்டேஷனில் ரஷீது அண்ணனுக்கு நல்ல செல்வாக்கிருந்தது. இதை முதலீடாக வைத்துத் தேவையற்ற எதிலுமே அவர் ஈடுபடமாட்டார். எனக்கு ஒரு வேலை போட்டுத் தரும்படி ஃபோனில் மனோகரன் சார் இவரிடம்தான் சொன்னார். திருடன், ஏமாற்றுப் பேர்வழி என்றெல்லாம் சொன்னாரா தெரியாது. சொல்லாமலிருக்க மாட்டார். ஆனால், ரஷீது அண்ணன் ஒருபோதுமே என்னை இப்படியாக நடத்தியதில்லை. நானும் நம்பிக்கைக்கு பாதக மேற்படாமல் நடந்துகொண்டேன்.

இரவு நேரங்களில் அலுவலகத்தினுள் டிரைவர்களோ மற்றவர்களோ வரமாட்டார்கள்; வரக்கூடாது. அதற்கானத் தேவையுமில்லை. அதனுள் ஓரிரு நல்ல அறைகளுமிருந்தன. இடைநிலைத் தலைவர்கள் தங்குமிடம். கொல்லம் ரெயில்வே ஸ்டேஷனின் பக்கத்தில் இன்று பிரணவம் தியேட்டர் இருக்குமிடத்தில்தான் அலுவலகமிருந்தது. இரவு நேரங்களில் தண்ணியடி நடக்கும். மறுநாள் காலையில் ரஷீது அண்ணன் ஆள் வைத்து

அந்த இடத்தைச் சுத்தம் செய்வார். பெரும்பாலும் நான்தான். ரஷீது அண்ணன் குடித்து நான் பார்த்ததில்லை. யாராவது கேட்டால் அது ஹராம் என்று சொல்லிவிடுவார். ஒருவர்: "நாமெல்லாம் புரட்சியாளர்களில்லையா ரஷீது?" என்று கேட்டார். அவர் வெறுமனே சிரித்து வைத்தார். அவ்வளவுதான். இப்படியாக, கொல்லத்திலுள்ள முந்திரி ஆலை முதலாளிகள் தரும் விலையுயர்ந்த முந்திரிப்பருப்பும் குப்பியுமாக புரட்சி செய்த முகாமிது.

யூனியன் அலுவலகத்தில் ரஷீது அண்ணனுக்கென்று தனியறை ஒதுக்கப்பட்டிருந்தது. அதனுள் ஒரு பெண் உட்கார்ந்திருப்பதை நான் முதல்முறையாகப் பார்த்தேன். ஒருநாள் சாயங்காலம் வசூல் பணத்தை ஒப்படைக்கச் சென்றபோது ரஷீது அண்ணன் சொன்னார்: "பத்து மணி சுமாருக்கு இங்க வந்துடு. சின்ன வேலையிருக்கு." அதாவது யாரோ ஒரு தலைவர் வருகை தர இருக்கிறார். நான் போனதும் சிக்கன் ஃபிரையும் சப்பாத்தியும் வாங்கி வரச் சொன்னார். கிராண்ட் தியேட்டரின் தெற்குச் சாலையிலுள்ள ஒரு கடை இதற்குப் பேர்பெற்றது. கடை பதினொரு மணிவரை திறந்திருக்கும். வாங்கி வந்ததை உள்ளே கொண்டுபோய் வைக்கச் சொன்னார். அறைக்குள் பளிங்கு மாலையும் இளம் பச்சை நிறத்தில் சேலையும் அணிந்த அழகான ஒரு பெண்ணிருந்தாள். இருபத்தாறு வயதிருக்கும். ஒரு பெரிய அதிகாரியின் தோற்றமிருந்தது. நான் மேலும் கீழுமாகப் பார்த்துவிட்டு வெளியே வந்தேன். ரஷீது அண்ணனின் மகன் வாப்பாவிடம் எதையோ பேசிக்கொண்டு நின்றான். வாப்பாவை அழைத்துச் செல்வதற்காக வந்திருந்தான். நாங்கள் நல்ல நண்பர்கள். அவன் வெளியே இறங்கியதும் நான் கேட்டேன்:

"உள்ளே யாரு புதுசா ஒரு பீஸ்?"

"வாப்பாவோட ரூம்லேதானே . . ? அது நம்ம கேபி (பெயர் மாற்றப்பட்டிருக்கிறது) அண்ணனுக்காக . . ."

கேபி வந்தார். ரஷீது அண்ணன் அவரது எதிரில் வைத்து என்னிடம் சொன்னார்: "வெளியே நின்னுக்க, எங்கேயும் போயிடாதே. அண்ணனுக்கு ஏதாவது வேணும்னா வாங்கிக்கொடு. அண்ணன் போகும்போது சாவியை வாங்கி வெச்சுக்க."

ரஷீது அண்ணன் மகனின் வண்டியில் ஏறினார்; கேபி அண்ணன் அறைக்குள் . . .

ஒருமணி நேரம் கழிந்திருக்கும். அறைக்குள்ளிருந்து: "டேய், மூணு நாலு பழமும் ரெண்டு ஜூசும் வாங்கிட்டு வா" என்ற குரல் கேட்டது. சின்னக்கடைக்குப்போய் வாங்கி வந்தேன். பன்னிரெண்டு மணியானதும் அண்ணன் காரில் புறப்பட்டார். போகும்போது: "இடத்தையெல்லாம் கொஞ்சம் சுத்தம் பண்ணிடு" என்று மட்டும் சொன்னார்.

அறைக்குள் சென்றேன். ரஷீது அண்ணன் மிகவும் சுத்தமாகப் பராமரிக்கும் அறை அலங்கோலப்பட்டுக் கிடந்தது. ஒரு ஜூசின் பகுதியளவு தரையில் கொட்டிக் கிடந்தது. கட்டிலில் மல்லாந்துப் படுத்தபடி அவள், ஃபேன் சுழல்வதைப் பார்த்துக்கொண்டிருந்தாள். சேலை மட்டும் கொஞ்சம் விலகிக் கிடந்தது. நான் உள்ளே வந்தது தெரிந்தும் அவளிடம் எந்தச் சலனமுமில்லை. தரையைச் சுத்தம் செய்து மீந்த உணவுகளுடன் வெளியில் வந்தேன்.

கேபி அண்ணன் பிறகு அமைச்சரானார். கொல்லம் மாவட்ட காவல்துறை அதிகாரிகளின் ஒரு கூட்டத்தின்போது மீண்டும் பார்த்தேன். என்னை நன்றாகத் தெரியும். நான்தான் சாயா கொடுத்தேன். அந்த நிகழ்ச்சிக்கான எல்லாப் பணிகளையும் நான்தான் ஏற்று நடத்திக்கொண்டிருந்தேன். இடையே ஓரிரு தடவைகள் பார்த்திருந்ததால் அவருக்கு என்னை நினைவிருந்தது. பார்த்ததும் புன்னகைத்தார். இப்போது அரங்கின் நாலா புறமும் சாம்பிராணித் தூபமிடும் பணி நடக்கிறது. சாராய வியாபாரிகளின் கள்ளச்சந்தைக்காரர்களின் பணத்தின் துர்நாற்றம் விலகி, எங்கும் நறுமணம் வீசட்டும்.

வேதனை: பெண்கள் அனுபவிக்கும் பல்வேறு துயரங்களைக் கண்டு என் மனம் பரிதவித்ததுண்டு. இவர்களுக்குத் துரோகம் செய்பவர்களைப் பழிவாங்க வேண்டுமென்றும் தோன்றியிருக்கிறது. நான் செய்வதைக் குறித்த குற்றவுணர்ச்சியும் வேதனையும் தார்மிகக்கோபமும் தொடர்ந்து இருந்தே வந்தது. மனதினுள் தேவகுணமும் அசுரகுணமும் குடிகொண்டிருந்தது. திருடுவதினிடையே வசதிபடைத்த எத்தனையோ வீடுகளில் பெண்கள் அனுபவிக்கும் வேதனைகளைப் பார்த்திருக்கிறேன்.

எங்கள் வீட்டிலிருந்து இரண்டுகிலோமீட்டர் தூரத்தில், தேசிய நெடுஞ்சாலையில் பள்ளிமுக்கு எனுமிடமிருக்கிறது. தென்கேரளத்தில் மிகப் பெரிய ஜமாஅத்துகளில் ஒன்றான கொல்லூர்விளை இந்தப் பகுதியில் தான் இருக்கிறது. இங்கே, ஒரு வங்கிக் குடியிருப்பில் ஒளிந்திருந்தேன். இரவு ஒன்றரை மணியிருக்கும். இரண்டு நாட்களுக்கு முன் இதே வழியாகப் போகும்போது ஆபரண பூஷிதையாக ஒருத்தி

கணவனுடன் வீட்டுக்குள் நுழைவதைப் பார்த்தேன். உடனே திட்டம் போட்டேன். தங்கம் என்பது இப்படி சுமந்துத்திரிவதற்கான சாதனமில்லை. இதற்கான முக்கியத் தேவைகளுள்ள வேறு மனிதர்கள் இருக்கிறார்கள். இந்த உயரிய நோக்கத்தின் அடிப்படையில்தான் இப்போது வீட்டின் அருகில் நிற்கிறேன். படுக்கையறையில் ஸீரோ வால்ட் வெளிச்சம். ஜன்னலில் செவி சாய்த்தேன். உள்ளே சல்லாபச் சத்தங்கள். "ஒண்ணும் அவசரமில்லை மொள்ள" என்று மனத்திற்குள் நினைத்தபடி சமையல்கட்டுப் பக்கம் நகர்ந்து ஜன்னல் கம்பியுடன் மல்லுக்கட்டினேன். கம்பி டக்கென்ற சத்தத்துடன் ஒடிந்துவிட்டது. சாதாரணமாக, வளைந்து கொடுத்திருக்க வேண்டும். மரியாதை தெரியாத கம்பி. அப்படியே நின்றுவிட்டு மெல்ல படுக்கையறைப் பக்கம் நகர்ந்து செவிமடுத்தேன். சிருங்கார ஓசைகள் நின்றிருந்தன. சத்தம் கேட்டதைத் தொடர்ந்து சந்தேகத்தில் உருவான தற்காலிக நிசப்தம், மீண்டும் தொடர்ந்தது.

எல்லாமே ஒரு நம்பிக்கைதான். ஒரு தடவை சத்தம் கேட்டுவிட்டது என்பதற்காக யாரும் கதவைத் திறந்து வந்து பார்த்துவிடப்போவதில்லை. திருடனைப் பொறுத்தவரைக்கும் ஒன்றுக்குமதிகமான சத்தங்கள் நல்லதல்ல. படுத்திருக்கும்போது ஒரு சத்தம் கேட்பதாக வையுங்கள். என்ன செய்வோம்? கொஞ்சம் காதுகூர்ந்து என்ன சத்தமென்று கவனிப்போம். பிறகு, சத்தம் வரவில்லையென்றால் எலியோ பூனையாகவோ இருக்குமென்று முடிவு செய்வோம். ஆனாலும் அகமனதில் சந்தேகம் மிச்சமிருக்கும். இரண்டாவது சத்தம் கேட்டால் நிச்சயமாக எழுந்து விடுவோம்.

கொஞ்ச நேரம் சுற்றித் திரிந்தேன். படுக்கையில் தாளலயங்கள் அடங்கிவிட்டன. ஜன்னல் வழியாகத் தலை செலுத்தி, பாம்புபோல் ஊர்ந்து உள்ளே நுழைந்தேன். ஆபரேசனுக்கு இன்னும் அரைமணி நேரமிருக்கிறது. நன்றாகத் தூங்கிய பிறகு.

இப்போது சமையல்கட்டில் நின்றிருந்தேன். விபத்துப் பகுதி. கை கால்கள் கவனம். கண்ட கண்ட பாத்திரங்களோ தட்டுமுட்டுச் சாமான்களோ வழியில் கிடக்கும். இலேசாக இடறினால் போச்சு. படுக்கையறையில் திடீரென்று ஏதோ பேச்சுச் சத்தம். பூனையாகப் பதுங்கி அங்கே போனேன். கதவு மூடிக்கிடந்தது. சாவித்துவாரம் வழியாகப் பார்த்தேன். படுக்கையின் எதிரில் மேஜையில் கழற்றி வைக்கப்பட்டிருந்த நகைகளில் கண்கள் பதிந்து நின்றன. எழுபது சவரனுக்கும் அதிகமாக இருக்கும். என் கருவிழிகளில் மஞ்சள் படர்ந்தது. அறைக்குள் லைட் வெளிச்சம். ஆணின் கை ஒன்று ஒவ்வொரு ஆபரணமாக எடுத்து மிக நுட்பமாகப்

பரிசோதிக்கிறது. பேச்சுச் சத்தம் மெல்ல அதிகரிக்கிறது. சூழல் அவ்வளவு சரியில்லை என்பது புரிந்துவிட்டது.

அவள் பணிவுடன் நின்று பதில் சொல்கிறாள். அவன் பொருட்படுத்துவதாக இல்லை. ஆக்ரோசத்துடன் நிற்கிறான். பெண்ணின் அழுகைச் சத்தம் சுருதிபோல் மெல்ல உயருகிறது. இடையிடையே மனைவியின் வீட்டார்களைக் கெட்ட வார்த்தைகளால் திட்டுகிறான். இப்போது அவள் ஏதோ தகர்ந்துபோனதுபோல் பெருங்குரலில் அழுகிறாள். சத்தம் வெளிவராமலிருக்க அவளே வாயையும் பொத்தியிருக்கிறாள். அது, வேதனை மிகுந்தப் பரிதாபக்குரலாக வெளிவந்தது. வரதட்சணைப் பிரச்சினையாக இருக்க வேண்டும்.

மெதுவாகக் கதவைத் திறந்து வெளியேறி விட்டேன். இனி, சத்தம் சிறிது அதிகமானாலும் பிரச்சினையில்லை. கோபமும் வேதனையும் அவர்களது கவனத்தைச் சிதறடித்து விட்டது. இயற்கையின் தாளகதிக்கேற்ப மனங்களின் ஒன்றிணைவு நிசப்தமாக மாறுகிறது. நம்மை நாமே உள்ளில் செலுத்தும் செயல் இது. இவர்கள் தங்களுடைய அமைதியைத் தாங்களே குலைத்துக்கொண்டார்கள். பணத்தைக் காரணம் காட்டி அமைதியான தாம்பத்திய வாழ்க்கைமீது கணவன் கரும்புள்ளி வைக்கிறான். இதற்காகவாவது அவனைவிட்டு அவள் விலகிவிடலாம். இந்த மனோபாவமுள்ள ஒருவனுடன் வாழ்வதென்பது துயரம் மிகுந்ததாக இருக்கும். இதுவரை வாழ்ந்ததன் பல மடங்கு துன்பங்களையும் வேதனைகளையும் வெளிப்படுத்த இயலாமல் மனதிற்குள் நீறியபடி இனியும் அவள் வாழ்ந்துத் தீர்த்தாக வேண்டும். இதை நினைத்தும் அவள் அழுதிருக்கலாம். சமூகச் சட்டகங்களுக்குள் சிக்கிக்கிடக்கும் பெண்களால் அன்றும், இன்றும் அழுது கொண்டிருக்க மட்டுமே முடிகிறது. ஆண்களின் கால்களில் பெண்கள் மிதிபடுவதற்கான காரணமும் இதுதான்.

உன்னுடனான வாழ்க்கை சுகப்படாது என்று உதறிச் செல்வதற்கான தன் திடமும் மனநிலையும் மட்டுமே பெண்களுக்குப் போதுமானதாக இல்லை; இதற்கான சமூகச் சூழலும் தேவை. என்றால்தான் ஆண்களால் இப்படி நடந்துகொள்ள இயலாது.

ஒரு ஆண் இரண்டாவது திருமணம் செய்வதற்கும் பெண் செய்வதற்குமிடையிலான சமூகக் கண்ணோட்டம் மாறுபடுகிறது. சமூகம் அவளைக் கெட்டுப்போனவளாகப் பார்க்கிறது. பாலியல் நுகர்வு என்பது இரு வேறு உடல்களுக்கிடையில் நிகழ்வதாக இருந்தாலும் இதில் சில கூடுதல் குறைவுகள் இருந்தாலும், மூக்கு, காதுகள் போன்று மெல்லிய

உணர்வுகளுள்ள உடலின் உட்புறங்களை வெளியிலுள்ள பொருள் ஸ்பரிசிக்கும்போது ஏற்படுகிற ஒரு சுகம் மட்டும்தான். இந்த உறுப்புகளை நாம் துணியால் மூடி புனிதப்படுத்தி வைத்திருக்கிறோம் என்பதுதான் வேறுபாடு. பிற உறுப்புகள் ஸ்பரிசித்து விட்டதை ஏதோ பூகம்பம் நிகழ்ந்து விட்டதாகக் கருதுவதற்கு எந்தக் காரணமுமில்லை.

பண்பாடுகள் அவசியமற்றவை என்று சொல்லவரவில்லை. நல்லதொரு சமூகச் சூழலின் அமைவுக்குள் இதன் தேவையும் முக்கியமானது. ஆனால், சூழலுக்கான தேவைகளில் ஆண் பெண் பங்களிப்புகள் சமநிலையில் இருக்க வேண்டும். இப்படியான பங்களிப்புதான் ஆரோக்கியமான சமூகத்தின் அளவுகோலாகவும் இருக்க முடியும். துரதிர்ஷ்டவசமாக அந்தச் சூழல் நம்மிடையே இல்லை.

அந்தப் பெண்ணின் கண்ணீர் இன்றிரவு நிற்கப்போவதில்லை என்பது எனக்குத் தெரியும். பத்தே நிமிடத்தில் அவன் குறட்டை விட ஆரம்பித்துவிடுவான். அவள் தன்னுடைய வேதனையை மனதில் பொத்திப் பாதுகாத்துப் பொழுதை விடியச் செய்வாள். என்னுடைய நோக்கம் நிச்சயமாக நிறைவேறப்போவதில்லை. நான் வெளியில் வந்தேன்.

நானொன்றும் புனிதனில்லைதான். நகைகளைத் திருடுவதற்கான வாய்ப்புக் கிடைத்தால் திருடியிருப்பேன். ஆனால், பாறை மனதுக்குள் எங்கோ வேதனையைக் கண்டால் இளகும் ஒரு ஈரப்பகுதியும் இருக்கிறது. பிறகு, எனக்கு இந்த வீட்டைத் திரும்பிப் பார்க்கவும் தோன்றவில்லை. இதிலிருந்து ஒன்றைப் புரிந்துகொள்ள வேண்டும். கேரளத்தில் வீடுகளுக்குள் நுழைந்துத் திருடுவது அவ்வளவு எளிதான விஷயம் கிடையாது. இரவுகளை வேதனையில் கழிக்கும் ஏராளம் பெண்களைக்கொண்ட ஒரு நாடு இது.

நான் புரிந்துகொண்டிருப்பதுவரையிலும் உடல் தேவையை நிறைவு செய்த பின் இயல்பாகவே எதையோ இழந்துவிட்டதான ஒரு உணர்வு தோன்றுகிறது. இதன் பிரதிபலிப்பு பல்வேறு விதமாக வெளிப்படுகிறது. சில மனங்கள் தன் இணையை மனோரீதியாகத் துன்புறுத்த நினைக்கின்றன. சிலர், கெட்ட வார்த்தைகளைப் பயன்படுத்துகிறார்கள். பாலியல் தாக்குதலுக்குப் பிந்தைய வன்முறைதான் இம்மனோபாவத்தின் உச்சநிலை. முத்தத்தில் தொடங்கி முத்தத்தில் முடியும் உறவு மிகவும் அபூர்வமாகவே வாய்க்கிறது.

தூண்டப்பட்ட உணர்வுகளின் எழுச்சி நிலையிலேயே அவள் மன ரீதியாக வன்முறைக்கு உள்ளாகிறாள். பெண்ணை உடலிச்சையின் வடிகாலாக நினைப்பதிலிருந்துதான் இம்மனோபாவம் உருப்பெறுகிறது. இச்சைக்காக அணுகும்போதே பெண்ணின் மனதில் பிந்தைய மனவலி குறித்த பயம் உருவாகி விடும். இது பாலியல் உணர்வற்ற நிலைக்குக் கொண்டுவந்து சேர்த்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. அவள்மீதான என்னுரிமையை மறுக்கிறாள் என்ற குற்றச்சாட்டுடன் அவன் மற்றொருத்தியை நாடும்போதும் புரிந்துகொள்ளலாம் இதனுள் வேறு பிரச்சினைகளும் இருக்கக்கூடும்.

இணையை வேதனையிலாழ்த்தும் ஆண் எதை அடைந்தும் பயனில்லை. மன அமைதிதான் தாம்பத்திய வாழ்வில் பிரதான அம்சம். இதை இரண்டாம் இடத்திற்குத் தள்ளிவிட்டுப் பணத்தை மட்டுமே முதன்மைப்படுத்துவதாக மாறிவிட்ட மலையாள மனோபாவம் மிகப் பெரிய சமூக விபத்து.

இவை மனித குணங்கள் ஏதொன்றுமில்லாத ஒரு திருடனின் சிந்தனைகளாக இருக்கலாம். குறிப்பிட்ட ஒரு காலகட்டத்திற்குப் பிறகு இந்தத் திருடனின் போராட்டங்கள் அனைத்தும் - அதற்கான வழிமுறைகள் தவறாக இருப்பினும் நிம்மதியான ஒரு குடும்ப வாழ்க்கையைக் கட்டியமைப்பதற்கான முயற்சிகளாகவே இருந்தன. வழிமுறை சட்டவிரோதம் என்பதால் ஆட்சியதிகாரம் அனுமதிக்க மறுத்தது. ஒவ்வொரு முறையும் குறுக்கு வழியில் வாழ்வு தேடும் குருட்டுப் புத்தி மீண்டும் மீண்டும் ஆழக்குழியில் தள்ளியது. முப்பத்து மூன்றாவது வயதில் மனைவியும் போய்ச் சேர்ந்தாள். மனைவியை இறந்த பிறகு, இளமைத் துடிப்பை இழந்த பிறகு, ஆணவமும் அகங்காரமும் போன பிறகு, மனைவி நல்லவள், ஒப்பற்றவள், அன்பானவள் என்ற சான்றிதழ்கள் பயனற்றவை. அன்பு என்பது பரஸ்பரம் பரிமாறுவதற்கானது. அதைப் பெறுகிற உரிமையை மட்டுமே தனதாக்கிக்கொள்வது தவறு.

படுக்கையறை: கொல்லம் முண்டைக்கல்லில் ஒரு வீட்டின் மேல்மாடியில் ஏறி கீழே படுக்கையறைக்கு வந்தேன். அறை திறந்தே கிடந்தது. ஸீரோ வால்ட் வெளிச்சத்தில் நிகழ்ச்சி நடந்துகொண்டிருந்தது. இடையிடையே பரஸ்பரம் ஊர் விஷயங்களையும் வீட்டு விஷயங்களையும் பேசிக்கொள்கிறார்கள். இப்படியான நிகழ்வை நான் அன்றுதான் முதல்முறையாகப் பார்க்கிறேன். இடையே வார்த்தைகள் தடித்து அவன் பிணக்கம் கொண்டான்: "நீ எனக்குன்னு வந்து வாய்ச்சது என்னோட

போதாதகாலம். நீயும் உன் குடும்பமும் சேர்ந்துதான் என்னை இந்தக் கதிக்கு ஆளாக்கிட்டீங்க" என்று சொல்லி அவன் ஆரம்பித்தான். அவள் என்னவோ பதில் சொன்னாள். ஓங்கிக் கன்னத்திலொரு அறை விட்டான். அவள் அழுதுகொண்டே உடுப்புகளை அணிந்தாள். அவன் எழுந்து சிகரெட் பற்ற வைத்தான். இனி இங்கே நின்று பயனில்லை. திரும்பி நடந்தேன். மனம் இறுகிப் போயிருந்தது. மீண்டும் ஒரு முயற்சியில் ஈடுபடாமல் வீட்டுக்குத் திரும்பினேன்.

குடித்துவிட்டு வந்து படுப்பவர்களின் பராக்கிரமம் இன்னும் கொடூரமானது. ஒரு வீட்டில் நுழையும்போது மணி ஒன்றரை. வீட்டுக்காரன் நல்ல குடிபோதையுடன் அப்போதுதான் வந்து ஏறினான். சோற்றை எடுத்து வைத்துவிட்டு அவள் தூங்காமல் காத்திருந்தாள். குடிப்பதற்காக வைத்திருந்த தண்ணீரை எடுத்து அவன் உதட்டில் வைத்துவிட்டு ஓங்கி எறிந்தான்: "குடிக்கிறதுக்குப் புளிச்ச வடிநீரையாடி வெச்சிருக்கிறே?" என்று சொல்லி. "நடுச்சாமத்தில வந்தா வடிநீர் புளிக்காம என்ன பண்ணும்?" என்று அவள் கேட்கிறாள். இதையெல்லாம் குற்றம் சொல்வதற்கான அருகதை எனக்கில்லை என்றாலும் பெண்களை ஓரளவாவது மரியாதையுடன் நடத்துவதற்கு எனக்கு உதவியாக இருந்தது இதுபோன்ற நிகழ்வுகள் தான்.

கோழிக்கோட்டில் ஒரு வீட்டின் ஜன்னல் கம்பியை வளைக்கும்போது குடும்பத் தலைவி விழித்தெழுந்தாள். நான் குதித்து வெளியே ஓடினேன். அவள் அசையவே இல்லை. அவளிடமிருந்து எந்தச் சத்தமுமில்லை. குறைந்தது ஒரு அலறல் சத்தத்தையாவது எதிர்பார்த்தேன். இறங்கி ஓடும்போது ஏதோ மரம் இடறியதுபோலிருந்தது. என்னவென்று பார்த்தால் ஒரு மனிதன். என்னவோ புலம்புகிறான். இங்குவரை அவன் வந்ததே ஆச்சரியம்தான். அவ்வளவு போதையிலிருந்தான். அந்தப் பெண்ணுக்கு என்னால் கெட்ட பெயர் ஏற்பட்டிருக்கலாம். அவள் பேசாமல் நின்றதற்கான காரணம்: ஓடியவன் திருடன் என்று சொன்னால் யாரும் நம்பமாட்டார்கள் என்பதுதான். குடிகாரக் கணவன் நடுச்சாமத்தில் வந்து சேருகிற தைரியத்தில் கள்ளப் புருஷன் வந்திருப்பான் என்றே ஊரிலுள்ளவர்கள் சொல்வார்கள். நான் மிதித்ததை அறியும் நிலையில் அவன் இருந்திருந்தால் இதைச் சொல்லியும் உதை விழுந்திருக்கும். அவனை மிதித்துக் கால் சுளுக்கியதால் என்னால் ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியவில்லை. பக்கத்து வீட்டில் கட்டியிருந்த கொடிக்கயிற்றை அறுத்தெடுத்து காலில் இறுகக்கட்டி ஐந்தாறு முறை குத்தினேன். பிறகு மெல்ல நடக்க ஆரம்பித்தேன். சரியாகி விட்டது. பிறகு ஓட

## **66 -** சிறைச்சாலைகள்

ஜெயிலுக்குள் புதிதாக வருபவர்களைக் கண்டதும் பழைய கைதிகளுக்குள் இயல்பாகவே ஒரு சந்தேகம் உருவாகும். நம்முடைய தனித்துவம் இவனால் பாதிக்கப்படுமோ என்று. ஆகவே, புதியவனைத் தனக்குக் கீழ்ப்படியச் செய்ய எல்லா அடவுகளையும் பிரயோகிப்பார்கள். இதற்குப் பணிந்து கொடுத்தால் சுயபாலின்பம் உட்பட எல்லா சித்தரவதைக்கும் ஆளாக வேண்டியதுதான். ஆரம்பத்திலேயே எதிர்த்து நின்றால் அடி உதைகள் பண்டல் கட்டி வரும். எப்படி வரும், எங்கிருந்து வரும் என்றெல்லாம் யூகிக்க முடியாது. ஆனால், இயற்கைக்கு முரணான பாலியல் தொந்தரவுகள் குறையும்.

சிறுவயதில் இம்மாதிரியான பாலியல் சேட்டைகளை என்னிடம் முயற்சி செய்து பார்த்தவர்களுண்டு. எனக்கு இதில் அருவருப்பு. இதுபோன்ற விஷயங்களில் நானும் யாரையும் அண்டவிடுவதில்லை. ஆனால், இதைக் காரணமாக வைத்துப் பல சண்டைகள் நடத்தியிருக்கிறேன்.

நான் முதன்முதலில் ஜெயிலுக்கு வரும்போது பதினேழு வயது. தொடர்ந்து, சப் ஜெயில்கள், திருவனந்தபுரம் சென்ட்ரல் ஜெயில், நிரந்திரக் குற்றவாளிகளை அடைக்கும் விய்யூர் ஜெயில் என்று பல ஜெயில்களில் இருந்திருக்கிறேன். இடம் எதுவாக இருந்தாலும் முதன்முதலில் வரும்போது இம்மாதிரி பிரச்சினைகளை எதிர்கொண்டே ஆகவேண்டும். இப்படியாக, கைதிகளிடமிருந்து அடியும் உதையும் பட்டுத் தேறிய நான், பாதுகாப்பைக் கருதி எனக்கென்று சில விதிகளையும் உருவாக்கிக் கொண்டேன். என்மீது பரிவு காட்டிய சில கைதிகள் இதற்கான உபாயங்களையும் சொல்லித் தந்தார்கள்.

வயதான ஒரு கைதி சொன்னார்: "நீ போதுமான அளவு உயரமில்லை. இதை சமாளிக்கணும்னா ஒண்ணு ரெண்டு அடவுகள் நீ படிச்சிருக்கணும். முதல்லே ஜப்பான் குத்து. உயரமான ஒருத்தன் உன்னை அடிக்க வர்றான்னா, கொஞ்சம் குதறி விலகி, ரெண்டு விரலால இந்தா இப்படி ரெண்டு கண்ணையும் குத்திப்பிடிச்சுக்க. எதிரி மூணுநாலு நிமிஷம் அப்படியே நிலைகுலைஞ்சு நின்னுடுவான். அப்படியே மிதிச்சுத் தள்ளிடு.

கண்லெ குத்துறதுக்கான உயரமுமில்லைன்னா விதைக் கொட்டையை அப்படியே ஏந்தி விட்டுடு . . . எதிரி அடிச்சி நீ கீழே விழுறேன்னு வை, அப்படியே மூச்சைப் பலமாக இழுத்து விட்டுட்டுத் துள்ளியெழுந்திரு, சும்மா ரப்பர் பந்துபோல எழுந்துடுவே. லேசாப் பின்னால விலகி ஒரே பாய்ச்சலா தலையை அவன் வயிற்றில கொண்டுபோய் மோது. இதை, வேடன் பாய்ச்சல்னு சொல்லுவாங்க. எதிரி எவ்வளவு பலசாலியாக இருந்தாலும் திணறிடுவான். நீ உயரம் குறைஞ்சவங்கிறதால மர்ம ஸ்தானத்தைக் குறி பார்த்துக் கொடுக்கவும் முடியும்."

இதை நான் சிரமேற்கொண்டேன். ஜெயிலில் ஒருவன் தனியாக மோதினால் அவன் எவ்வளவு பலசாலியாக இருந்தாலும் எதிர்த்து நிற்பேன். தோல்வி, பொருட்டே கிடையாது. ஒருவேளை அவன் வெற்றி பெறுவானாக இருக்கலாம். என்னை உதைத்துக் கூழாக்கவும் கூடும். அதற்காக, நான் தோல்வியை ஒப்புக்கொண்டுவிட மாட்டேன். அவனிடமிருந்து நூறு உதை வாங்கினாலும் திருப்பி ஒன்றாவது கொடுப்பதில்தான் கவனம் செலுத்துவேன். மயக்கம் போட்டு விழுவது வரைக்கும் போராடுவேன்.

முதல்முறையாக நான் திருவனந்தபுரம் சென்ட்ரல் ஜெயிலுக்கு வரும்போது அங்குள்ள அதிகாரிகளுக்கு மற்ற சப் ஜெயில்களிலிருந்து தகவல் வந்தது. பிரச்சினைக்குரிய ஆள், பிடிக்காத ஏதாவது நடந்தால் எதிர்ப்பான். நேரடியாக மோத வேண்டாம். ஆப்பு வைத்துவிடுவான். புகார் எழுதுவதில் மன்னன். அதிகாரிகள் என்றெல்லாம் பார்க்க மாட்டான். அது எங்கெல்லாம் போய்ச் சேருமென்பதையும் ஊகிக்க முடியாது.

அதிகாரிகளின் விசுவாசக் கைதிகளிருக்கும் அறையில் அடைத்தார்கள். புலிக் கூண்டினுள் ஆட்டுக்குட்டிபோல். நான் உடல் வலியுடனும் மனவலியுடனும் அப்படியே உட்கார்ந்திருந்தேன். கொஞ்சம் தூங்கலாமென்று பாயை விரித்துச் சுருண்டேன். வெளியே வராந்தாவிலிருந்து கம்பிகளினூடே வந்துகொண்டிருந்த வெளிச்சம் திடீரென்று நின்றது. ஒரு போர்வை என்மீது விழுந்தது. அவ்வளவுதான்! உதைமேளா தொடங்கியது. நான் அலறினேன். அதிகாரிகள் வந்து லைட்டைப் பேட்டார்கள்.

"என்னடா இங்க தா . . ." கெட்ட வார்த்தையால் திட்டினார்கள்.

"ஏமானே . . . இந்தப் பொலையாடி மவன் வந்து ஆட்களைத் தொந்தரவு பண்றான் . . . தூங்க விடமாட்டேங்குறான்" என்றார்கள் மற்ற கைதிகள்.

"அப்படியாடா?" என்றார்.

நான் பரிதாபமாகச் சொன்னேன்: "இல்லை சார், இவன்தான் . . ."

"ஏமானே, இன்னைக்குவரைக்கும் இந்த வார்டுக்குள்ள ஏதாவது பிரச்சினை இருந்ததா . . ?" பிரச்சினையை உருவாக்கியவனே சொன்னான்.

"இங்க வாடா."

முகத்தில் எந்தப் பாவபேதமுமில்லாமல் என்னைக் கையசைத்துக் கூப்பிட்டார். கைக்கெட்டும் தூரத்தில் வைத்து நிக்கரைப் பிடித்து வெட்டியிழுத்தார். தலையும் நெஞ்சும் இரும்புப் பட்டைகளில் ஒரு இடி. நெற்றி உடைந்தது. கொடியிலிருந்து விழுந்த பழந்துணிபோல் தரையில் கிடந்தேன்.

நான்கு கெட்ட வார்த்தைகளையும் உதிர்த்து விட்டு ஏமான் திரும்பிப் போனார். சட்டப்பூர்வமான ஏதோ ஒன்றை நிறைவுசெய்த திருப்தியுடன்.

பிறகு, அன்று தூங்க முடியாது. அடுத்த இடி எப்போது விழுமென்று தெரியாது. மற்றவர்கள் சுகமாகப் படுத்துத் தூங்குவார்கள்.

மெல்ல மெல்ல என்னுடைய ஆட்டுத்தோலிலும் புள்ளிகள் விழும். குளம்பில் நகங்கள் விரிந்து புலிக்கால்களாக மாறும். கடைவாயில் பற்கள் நீளும்.

ஜெயில் விதிகளில் ஒரு கைதிக்குத் தேவையான அனைத்து உரிமைகளும் எனக்கு அத்துப்படி என்பது அதிகாரிகளுக்குப் பெரும் தலைவலி. ஜெயில் என்பது ஊழல்களின் ஊற்றுக்கண். கைதிகளில் ஒருவன் இதை அறிவான் எனில் அவனை எப்படி ஒழித்துக்கட்டுவது என்பதுதான் அவர்களது தலையாய சிந்தனையாக இருக்கும்.

கொல்லம் சப் ஜெயிலில் இருக்கும்போது நான் ஜெயில் விதிகளைப் படித்துத் தெரிந்துகொண்டேன். புத்தகம் வினியோகம் செய்யும் பொறுப்பு அன்று என்னிடம்தான். கொல்லம் பப்ளிக் லைப்ரரி தொடங்கிய காலம் அது. அங்கிருந்து புத்தகங்கள் வரும். ரெஜிஸ்டர்கள் ஜெயில் அலுவலகத்திலிருக்கும். இதனிடையே அதிகாரியின் மேஜைக்குள்ளிருந்த ஜெயில் விதிகளைப் பற்றிய புத்தகத்தை நான் வார்டுக்குள் கொண்டுவந்து படித்தேன். ஒருபோதும் நடைமுறைப்படுத்தப்படாத விதிகள் என்பதால் புத்தகம் இருக்கிறதா இல்லையா என்றுகூட பார்க்கமாட்டார்கள். நான்

கைதிகளின் உரிமைகளையும் முக்கியமான சில தகவல்களையும் என்னுடைய நோட் புத்தகத்தில் குறித்து வைத்துக்கொண்டேன். இது தொடர்ந்து கொஞ்ச காலம் நடந்துகொண்டிருந்தது. தூக்கத்திலிருந்து எழுப்பிக் கேட்டாலும் சொல்வதுபோல் அதை நல்ல மனப்பாடமாக்கினேன்.

ஜெயிலில் வினியோகிக்கப்படும் உணவுகளுக்கு அனுமதிக்கப்பட்ட எடை இருக்காது. இதில் மிச்சம் வருவது அதிகாரிகளின் பாக்கெட்டுகளில் நிரம்பும். அனுமதித்த அளவீட்டின்படி எனக்கு உணவுக் கிடைக்கவில்லை என்றால் பட்டினி கிடப்பேன் என்று அறிவித்தேன். பிரச்சினை வேண்டாம். உன்னுடைய ரேஷனை எடைபோட்டு வாங்கி நீயே சமைத்துக்கொள்ளலாம் என்று கண்காணிப்பாளர் சொன்னார்.

110 கிராம் கோதுமைப்பொடி, அரை லிட்டர் தண்ணீர், 350 கிராம் விறகு . . . என்று ஆரம்பித்துக் கணக்குச் சொல்லி வாங்கினேன். கண்காணிப்பாளர் முழிபிதுங்கி நின்றதுடன் என்னை சரியாக எடைபோட்டு வைத்தார்: "இவன் எங்கியோ கிடந்த துக்கிரித் திருடன் கிடையாது."

பகலில் வேலை செய்துகொண்டிருக்கும்போது வார்டன் சொன்னார்:

"உன்னை ஏமான் கூப்பிடுறார்."

கூப்பிட்டவர் மூன்று நட்சத்திர ஏமான். கொஞ்ச நேரத்தில் நான் கைதியின் கையிலிருக்கும் சப்பிச் சடைந்த பாத்திரம்போல் அறை வராந்தாவில் வந்து விழுந்தேன். பாத்திரத்தை வீசும் லாவகத்துடன்தான் எறிந்தான். நடக்க முடியவில்லை. பார்க்க முடியவில்லை. கண்ணைத் திறக்க முடிந்தால் தானே பார்க்க முடியும். வீங்கியிருந்தன. பேசவும் முடியவில்லை. உதடுகளும் கன்னங்களும் உழுது போட்ட நிலம்போலிருந்தன. மலையிலிருந்து விழுந்த அலுமினியக் குடம் போலானேன். என் முகத்தை நானே பார்க்க முடியாதல்லவா? மற்றவர்கள்தான் சொன்னார்கள். ஜெயிலில் அப்போதெல்லாம் முகம் பார்க்கக் கண்ணாடி கொடுப்பதில்லை. இந்தப் பரிதாபத்தை பார்க்கவேண்டாமென்ற பரிவா, அல்லது கண்ணாடியால் கை நரம்பை வெட்டிக்கொள்வான் என்ற பயமா தெரியாது.

மறுநாள், சவரம் செய்ய வேண்டிய தினம். உடம்பின் வீக்கங்கள் குறையவில்லை. முக அலங்கோலம் ஓரளவுக் குறைந்திருந்தது. ஏதாவதொரு கைதிதான் இந்த வேலையைச் செய்வான். வெளியில்

அவனுக்கு இதுதான் வேலையாக இருக்கும். எப்போதாவது நல்ல ஒரு சோப்பு டின்னோ சோப்போ அன்பளிப்பாகக் கொடுத்து சோப்புப் போட்டிருந்தால் அவனும் அதே அளவில் திருப்பி சோப்புப் போடுவான். பத்து பீடி அன்பளிப்பாகக் கொடுத்திருந்தால் கத்தி, நின்று நிதானமாக முகத்தில் நகரும். வேலைப்பளு அதிகமாக இருந்தால்: "பிள்ளை கொஞ்சம் நின்னுக்க. கூட்டம் குறையட்டும். பிறகு, நாம பேசிக்கிட்டே மெதுவாப் பண்ணிக்கிலாம்" என்பான்.

தலைமுடியை மெஷின் கட்டிங்கில் கட்டையாக வெட்டி விடுவார்கள். வெளியே நான் ட்ரிம் தாடியும் ஹிப்பி மாடல் தலைமுடியுமாக ஸ்டைலாக நடந்து திரியும்போது பார்த்து உள்ளே தூக்கிப்போட்டு விடுவார்கள். நெஞ்சில் அடித்து கதறியபடி வரும் மனைவிகூட தன்னையறியாமல் ஒரு நிமிடம் வாய்விட்டுச் சிரித்துவிடுவாள். அவ்வளவு விசித்திரமாக இருக்கும் என்னுடைய புதிய கோலம்.

சப் ஜெயிலில் சவரம் செய்பவர்களை ஒப்பந்த அடிப்படையில் வெளியிலிருந்து அழைத்து வருவது வழக்கம். கைதிகளில் ஆளில்லாமல் இல்லை. இதுதான் நல்லதும்கூட. வெளியில் ஒரு பார்பர் மற்றொருவனுக்கு சவரம் செய்த பிளேடால் தொட்டால்கூட நாம் கோபப்பட்டு விடுவோம். பிறகு அவனிடம் போக மாட்டோம். ஜெயிலில் நாற்பதுபேர்வரைக்கும் வரிசையாக உட்கார வைத்து ஒரே கத்தியால் மழிப்பார்கள். சோப்புக் கிடையாது. தண்ணீரைத் தடவிவிட்டு வந்து கைதிகளே உட்கார்ந்துவிட வேண்டும். சவரம் செய்ய ஆரம்பிக்கும்போது முகத்திலுள்ள ஈரம் உலர்ந்திருக்கும். முகத்தை அப்படியே கத்தியால் சுரண்டுவான். எரியும். அங்குமிங்கும் இரத்தம் துளிர்க்கும். ரோமம் சில இடங்களில் மிச்சமிருக்கும். சில இடங்களில் தோலோடு தோண்டியெடுக்கப்பட்டிருக்கும்.

ஜெயில் விதிகளைத் தெரிந்திருந்த குற்றத்திற்காக ஏற்கனவே என் முகம் சந்திரமண்டலம் போலிருந்தது. சவரக்கத்தி அதைச் செதுக்கியபடியே சஞ்சரித்தது. முகம் முழுவதும் இரத்தக்களரி. பார்பர் முகத்தில் எந்தப் பாவபேதமுமில்லை. எரிகிறதே என்று முகத்தில் கை வைத்தால் இரத்தமாக இருக்கும். பேச முடியாது. நல்லதுதான். ஒரு குற்றத்தைப் பேசப்போக இந்தப் பருவத்திலாக்கி வைத்திருக்கிறார்கள். இனி யாரிடமாவது போய் இதைப் பற்றிப் பேசப்போக . . . வம்புதான் வளரும் . . .

காலத்தின் கனிவாலும் சில வாய்ப்புகள் உருவாகும். என்னை

உதைப்பதற்குத் தலைமை தாங்கிய அந்த அதிகாரி கண்காணிப்பாளராக இருக்கும்போது மீண்டும் ஜெயிலுக்குப் போனேன். அன்று புறாவாக இருந்த நான், இன்று பருந்தாகி . . . கழுகாக மாறுவதற்காக பரீட்சையெழுதியிருந்த காலம். சகல அடவுகளும் கற்றிருந்தேன்.

ஒரு வழக்கில் ரிமாண்ட் செய்யப்பட்டதும் நான் தீவிரமான ஆஸ்துமா நோயால் பாதிக்கப்பட்டிருப்பதாக நீதிமன்றத்தில் மனுச் செய்தேன். சில அரசியல்வாதிகளால் பிறகு, கண்டுபிடிக்கப்பட்ட அதே தந்திரம். தொடர்ந்து, கொஞ்ச நாட்கள் ஆஸ்பத்தியில் சுகவாசம். ஜெயிலுக்கு வந்ததும் சவரம் செய்ய ஆள் வந்தது. பொதுவாக, விசாரணைக் கைதிகளை இப்படி ஒட்டவெட்டவும் முகச் சவரம் செய்யவுமெல்லாம் சட்ட அனுமதி கிடையாது. இவர்களுக்கு ஏது சட்டம்? பெரும்பாலான கைதிகள் எதிர்க்க மாட்டார்கள். என்னை அழைத்துக்கொண்டுவந்து உட்கார வைத்தார்கள்:

"என்ன பண்ணப்போறீங்க?" என்று கேட்டேன்.

"சிரைக்கிறதுக்குத்தான் . . ." வார்டன் சொன்னார்.

"நீங்க வேணும்னா சிரைச்சிக்குங்க. என்னைச் சிரைச்சா விவரம் படிப்பீங்க."

உடனடியாக கண்காணிப்பாளருக்குத் தகவல் சென்றது. என்னை அழைத்து வரச்சொன்னார்.

"நீ இன்னும் அனுசரணை படிக்கலை இல்லையா . . ?"

"முதல்ல கோர்ட் என்னைக் குற்றவாளின்னு சொல்லட்டும். அப்புறம் பாத்துக்கலாம்."

"மரியாதையாப்போயி ஷேவ் பண்ணிக்க . . ."

"மாட்டேன். நான் இப்ப விசாரணைக் கைதி."

"உனக்கு மட்டும் என்ன கொம்பா முளைச்சிருக்கு? இரண்டு வாரம் கழிச்சிக் கோர்ட்டுக்குப் போகும்போது அது வளந்திருக்கும்."

"என் வழக்கு நாளைக்கு விசாரணைக்கு வர இருக்கு."

அவர் தோற்கத் தயாராக இல்லை: "அப்படீன்னா இவன் தாடியை மட்டும் மழிச்சிட்டு விட்டுடு." என்று வார்டனிடம் சொன்னார்.

"எதுக்காக?" என்று கேட்டேன்.

"உன்னோட சீலைப்பேனை நீ ஜெயில் முழுவதும் பரப்பிடுவே."

"அப்படின்னா முடி அதிகமா இருக்குற, சீலைப்பேன் உருவாகுற வேறொரு பகுதி இருக்கு. அங்கதான் முதல்லே ஷேவ் பண்ணணும்."

"உன்னை . . ." கண்காணிப்பாளர் குதித்தெழுந்தார்.

"என் உடம்பில கை பட்டுடக்கூடாது. மீறிப்பட்டுச்சுன்னா நாளைக்குக் கோர்ட்டுல தேவையில்லாத சீன்கள்லாம் உருவாயிடும். தெரியுமில்லையா என்னை? சார் பிறகு, அங்கே வரவேண்டியதாயிடும் . . ."

எழுந்த அதே வேகத்தில் உட்கார்ந்தார். மறுநாள் என்னுடன் சேர்ந்து என் தாடியும் நீதிமன்றத்தில் ஆஜரானது.

கோதுமை உருண்டை: வெளியே தெரிந்தவரைக்கும் ஊழல்களில்லாத ஒரு கண்காணிப்பாளர் இருந்தார். பெயர், சிபெ. சம்பளத்தைத் தவிர இவர் எதற்கும் ஆசைப்பட்டதாகத் தகவலில்லை. பயங்கரமாகக் கோபப்படுவார். கைதிகளின் உணவுக்கான மீன்கள் நீண்டகரையிலிருந்து வரும். பெரும்பாலும் கெட்டுப்போன மீன்களைத்தான் அனுப்பி வைப்பார்கள். தண்டவாளத்தில் அடிபட்டுச் செத்ததுபோல் குழம்பில் அது சின்னாப்பின்னமாக மிதக்கும். கண்காணிப்பாளர் மாறிய விஷயம் ஒப்பந்தக்காரனுக்குத் தெரியாது. மீன் வந்தது. குட்டையைத் திறந்ததும் ஜெயில் முழுவதும் நாறிப்போய் விட்டது. கண்காணிப்பாளர் அதைத் தூக்கி வீசியெறிந்தார். மீன்கள் ரோட்டில்.

இவர் சார்ஜ் எடுத்த ஐந்தாவது நாள், என்னுடைய ரேஷன் போராட்டத்தை விரிவுப்படுத்தினேன். இவர் சற்று நியாய உணர்வுள்ள அதிகாரி என்ற எண்ணத்துடன்.

கொல்லம், எஃப்டிஐயிலிருந்து ஐந்து குவின்டால் அரிசி எடுத்தால் அதில் இரண்டரை அல்லது இரண்டே முக்கால் குவின்டால் அரிசிதான் ஜெயிலுக்கு வந்து சேரும். மீதி கொடவுனிலேயே பணமாகி விடும். ஆகவே, ஜெயிலில் வினியோகிக் கப்படும் கோதுமைச்சோறு

உருண்டைகள் பெரிய நெல்லிக்காய் அளவில் சிறுத்திருக்கும். எங்களுக்கான ஒதுக்கீட்டின் அளவு 110 கிராம் கோதுமை. வெந்து வரும்போது 350 கிராம் எடையிருக்கும். இதை நான் பல கைதிகளிடமும் சொல்லிப் பார்த்தேன். "நீ போடா, இதாவது கிடைக்குதேன்னு சந்தோசப்படு" என்று சொல்லிவிட்டார்கள். யாருமே கேட்க முடியாது. அப்படியே கேட்டாலும் அடித்துப் பருப்பெடுத்து விடுவார்கள். சில நேரங்களில் வயிற்றுக்குப் போதாமல் ஆரவாரம் செய்வார்கள். அதிகாரிகள் வந்து மிரட்டுவார்கள். அதோடு தீர்ந்தது. தனியாக உட்கார்ந்துத் திட்டித் தீர்ப்பது மட்டும்தான் ஒழுங்காக நடக்கும்.

ஜெயில் அதிகாரிகளுக்கு ஊழல் செய்வதற்கான பல்வேறு வாய்ப்புகளை அரசாங்கமே ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது. நூறு கிலோ இறைச்சியில் இருபது கிலோவை வேஸ்டாக மாற்றி, அதற்கான பணத்தைச் சாப்பிடலாம். இரண்டு மீட்டர் சட்டை, வேட்டியிலிருந்து இருபது முப்பது சென்டி மீட்டர் வெட்டலாம். கைதிகளின் வேலைக்கான உபகரணங்களில் கையாடலாம். பேப்பரிலும் ஸ்டேஷனரிகளிலும் தோன்றுவதை எழுதலாம். தச்சுவேலைக்கான மரங்களில் தில்லுமுல்லு செய்யலாம். நெசவுச்சாலையிலிருந்து நூல் பந்துகளைச் சுருட்டலாம். முக்கியமாக, ஆஸ்பத்திரிச்செலவில் தகிடுதத்தம் பண்ணலாம். ஆயிரம் கைதிகள் உள்ள ஒரு ஜெயிலில் தினமும் 700 ரூபாய்க்கான மருந்து லோக்கல் கொள்முதல் செய்யலாம். கொள்முதல்தான். மருந்து பாதியளவுகூட வந்து சேராது. இது பழைய கணக்கு. இப்போது வித்தியாசங்களிருக்கலாம்.

கைதிகளுக்குக் கொடுக்கப்படும் உணவுகளிலும் ஊழல். ஐம்பத்தைந்து கிலோ எடையுள்ள கைதி ஒரு கிலோ குறைந்தால் அவனுக்கு 120 மில்லி பால் அதிகமாகக் கொடுக்க வேண்டும். அல்லது ஒரு முட்டை. இரண்டு கிலோ குறைந்தால், ஈரலுடன் கூடிய இறைச்சி அதிகப்படியாகக் கொடுக்க வேண்டும். ஆட்டிறைச்சிதான் கொடுக்க வேண்டும். மெடிக்கல் அதிகாரியின் ஒப்புதலுடன் நடக்கும் இதன் விகிதாச்சாரம், டாக்டர்களுக்கும் உயரதிகாரிகளுக்கும்.

மெடிக்கல் விஜிலன்ஸ் உதவி இயக்குனர் டாக்டர் எம். லீலாவுக்கு நான் ஒரு புகார் அனுப்பினேன். இதை அறிந்ததும், ஜெயிலுக்குள் பெரும் மிரட்டல்கள் அரங்கேறின. நான் முடிவாகச் சொல்லி விட்டேன்: "தவறு செய்தேன்னா என்னைத் தண்டிச்சுக்குங்க. அநியாயமான முறையில என்னைத் தண்டிக்க நினைச்சீங்கன்னா ஞாபகத்தில வெச்சுக்குங்க என் பெயரே மணியன்தான். அடிச்சா அது சத்தம் போடவே செய்யும். அதனோட நாக்கைத் திருகி எறியறதுவரைக்கும் சத்தம் போடும்."

விஜிலன்சுக்குப் புகார் செய்வதற்கான காரணம் இதுதான். அன்று திருவனந்தபுரம் சென்ட்ரல் ஜெயில் டாக்டர் ஒருவர் ஊழலின் உறைவிடமாகத் திகழ்ந்தார். ஊழலையாவது சகித்துக்கொள்ளலாம். கைதிகளை இவர் நடத்தும் விதம் மிகவும் மோசமாக இருக்கும். மனிதப் பிறவிகளென்ற எண்ணமே இருக்காது. அவர்களைத் தொடமாட்டார். முகத்தில் ஏளனம். அருவருப்பு. அவமரியாதையுடனான பேச்சுகள். மிலிட்டரி சர்வீசில் இருந்த, மக்கள் சகவாசமில்லாத தோஷம் வேறு. ஆட்டிறைச்சியில் டாக்டருக்கான பங்கைக் கொண்டுபோய்க் கொடுப்பவர்கள் கைதிகள்தான். தினமும் இரண்டு கிலோ. கைதிகள் தீண்டத்தகாதவர்கள். அவர்களை ஏமாற்றித் தின்னும் இறைச்சி சுவைக்கிறது. கண்காணிப்பாளர்களுக்கு மட்டுமல்ல, ஐஜிக்குவரை இந்த இறைச்சியின் விகிதாச்சாரம் செல்வதுண்டு.

எனக்கு ஆஸ்துமா பிரச்சினையிருந்தது. டெட்ராஸைக்ளின் சாப்பிட்டு வந்தேன். இதை இவர் எழுதவே மாட்டார். எல்லாருக்கும் கொடுப்பது போல்தான் மாத்திரை தருவார். ஆஸ்துமா கொஞ்சம் தீவிரமாக இருந்த ஒருநாள் நான் சொன்னேன்: "ஒண்ணுல, எனக்கு மருந்து தாங்க. இல்லேன்னா ஆஸ்துமாவுக்கான வேறு சிகிச்சைக்கு ஏற்பாடு பண்ணுங்க."

"சீ . . . திருடனுக்கு ஸ்பெஷல் சிகிச்சையா? எதுக்கு திரும்பவும் எங்காவது போய் திருடறதுக்கா?"

நான் சொன்னேன்: "குற்றவாளி, நோயாளிதானே தவிர நோயல்ல. நோயையும் நோயாளியையும் ஒண்ணா நினைக்கிறது தவறு. அதிலேயும் உங்களைப்போல ஒரு டாக்டர் . . ."

"சீ . . . திருட்டுப்பசங்கெல்லாம் என் முன்ன நின்னுப் பேசுற அளவுக்கு வந்துடுச்சா?" அவர் அலறினார்.

மனதிற்குள் நினைத்துக்கொண்டேன்: "சும்மாவா அங்க தூக்கிப்போட்டு மிதிச்சாங்க?" மற்றொரு ஜெயிலில் கைதிகளிடமிருந்து சரியாக வாங்கிக்கட்டி விட்டு நேராக இங்குதான் மாறுதலாகி வந்திருக்கிறார். அடி, கையையும் கட்டிக்கொண்டு ரோட்டில் போனால் கூப்பிட்டு வாங்கிக்கொள்கிற டாக்டர் இவர். ராணுவத்தில் பணியாற்றினாராம். இடிஅமீனிடம் இருந்திருந்தால் ஜெனரல் ஆக்கியிருப்பார். கைதிகள் எவ்வளவு மோசமான நிலையில் வந்தாலும் என்ன நோயாக இருந்தாலும் இவர் குட் ஹெல்த், ஹார்ட் ஒர்க் என்றுதான் எழுதுவார். எனக்கு

என்னவோ இதையே எழுதி இவருக்கு மற்ற எழுத்துக்களெல்லாம் மறந்துபோய்விட்டதோ என்று தோன்றியது.

அவர் எழுதித் தந்ததை நான் திருப்பிக் கொடுத்தேன்: "என்னோட ஹெல்த், குட்கிட்டெல்லாம் கிடையாது. ராத்திரி முழுவதும் இழுப்பு. அப்ப வந்துப் பாருங்க."

"ஆமா, கண்ட கண்ட திருடனுக்கும் கொலைகாரனுக்கும் இழுக்குதான்னுப் பாக்குறதுக்கு நான் வர்றேன்."

"நீங்க வரவே வேண்டாம். தலைவலிக்கான நொவால்ஜின் மாத்திரையை நீங்களே சாப்பிடுங்க. எனக்கு டெட்ராஸைக்ளின் இருந்தாக் கொடுங்க."

"அதை நீ எப்படிடா முடிவு பண்ணுவே? நீ என்ன எம்பிபிஎஸ்சா . . ?"

"எனக்கு மெடிக்கல் காலேஜில அட்மிட் ஆகணும். இல்லேன்னா ஆஸ்துமா அதிகமாகி நான் செத்துடுவேன்."

"கண்டிப்பா செய்துட வேண்டியதுதான். உனக்கு நல்ல ஊட்டம் சேத்து திருட அனுப்புறதுக்காகத்தானே அரசாங்கம் எனக்குச் சம்பளம் தருது."

"சரி அப்புறம் உங்க விருப்பம்." எதுவும் பேசாமல் சீட்டையும் மாத்திரையையும் எடுத்துவிட்டு நான் வந்துவிட்டேன்.

பால், பழம், மெடிக்கல் டயட், மருந்துகள் . . . போன்ற விஷயங்களில் பாதிக்கப்பட்ட மற்ற கைதிகளில் ஓரளவு ஒத்து வருபவர்களிடமிருந்து இவர் எழுதித் தந்தச் சீட்டுகளைச் சேகரித்தேன். இவர்களது நோய்களைப் பற்றிய விவரங்களையும் கேட்டறிந்து எல்லாவற்றையும் சேர்த்து விஜிலன்சுக்கு எழுதினேன்.

சில நாட்கள் கழிந்த பிறகு, ஒருநாள் காலை பதினொரு மணி. டெபுடி ஜெயிலர் வந்தார். நான் அப்போது அலுவலகத்தையும் சுற்றுப்புறங்களையும் சுத்தம் செய்துகொண்டு நின்றேன். அவர் வந்து என்னை மேலும் கீழுமாகப் பார்த்தார்.

"கழுவேறி மவன் நிக்கிறதைப் பார் . . ." பற்களைக் கடித்தபடியே சொன்னார்.

"உன்னைப் பாக்குறதுக்காக விஜிலன்சிலேருந்து ஆள் வந்திருக்கு."

வெள்ளை ஆடைகள் உடுத்திய மூன்று நான்கு பேர்கள். அதிகாரிபோல் தோற்றமளித்த ஒரு பெண்மணி தன்னை அறிமுகம் செய்துகொண்டார்.

"நான் லீலா. ஹெல்த் விஜிலன்ஸ் அஸிஸ்டன்ட் டைரக்டர். உங்க புகார்கள் சம்பந்தமாக விசாரிக்க வந்திருக்கோம். சொல்லுங்க."

அதிகாரிகள் மிரண்டுபோய் நிற்கிறார்கள். நான் சொன்னேன்: "ஆஸ்துமா நோயாளியான எனக்கு தலைவலி மாத்திரையும் வயிற்றுவலி மாத்திரையும் தான் தர்றாங்க."

"அது வலிக்கான மாத்திரைன்னு எப்படிச் சொல்றீங்க?"

நான் அறைக்குபோய் என்னுடைய சீட்டுகளை எடுத்துக்கொண்டு வந்தேன்.

உடல் பலவீனமாகிக்கொண்டிருப்பதால் அறுபது கைதிகளுக்கு கூடுதல் பால் வழங்கப்படுவதாக பதிவில் குறிப்பிடப்பட்டிருந்தது. அந்தக் கைதிகளை வரவழைத்தேன். ஜெயில் ஊழியர்கள், இவர்களிடம் எல்லாமே கிடைப்பதாகச் சொல்லச் சொல்லியிருந்தார்கள். அப்படியே சொல்லிவிடுவதாக இவர்களும் ஒப்புக்கொண்டார்கள். ஆனால், அறுபது பேர்களில் முப்பத்தி ரண்டு பேர்கள் எதுவும் கிடைப்பதில்லை என்று சொல்லிவிட்டார்கள்.

பிறகு எல்லாமே துரிதகதியில் நடந்தேறியது. டாக்டர் சஸ்பென்ட் ஆனார். பிறகு வந்த டாக்டர் பி.கெ. சலீம் சார் கருணையுள்ள ஒரு மனிதர்.

ஆனால், இந்த ஒவ்வொரு சம்பவங்களையும் ஊழல் அதிகாரிகள் அவ்வப்போது மனதில் குறிப்பெடுத்துக்கொள்வார்கள். கொஞ்சநாட்கள் கழிந்து, மற்றொரு அதிகாரி வந்தார். அவரது பட்டப் பெயரே கிடிலம். பெயர்போல்தான் ஆளும். கைதிகளை தங்களுக்குள் மோத விடுவது; ஊழலுக்கு அவர்களையும் கூட்டுப் பிடிப்பது. கைதிகளில் தனக்கென்று அடியாள் கூட்டம் உருவாக்குவது போன்ற எல்லா அசிங்கங்களுக்கும் பேர்போனவர். கைதிகளை எப்போதுமே ஒரு உள்பயத்துடன்தான் வைத்திருப்பார். கிடிலம் வந்ததும் ஊழல் அதிகாரிகள் என்னைப் பற்றிய எல்லாத் தகவல்களையும் சொன்னார்கள்.

"முருக்கு மரத்தோட அகம்பாவம் அதிலிருக்குற முள்ளுதான். கூர்மையான கத்தியால முட்களைச் சீவி எடுத்துடணும். பிறகு ஏறிட

வேண்டியதுதான். இப்படி, முள்முருக்குலயும் ஏறலாம்; முள்ளன் பண்ணியையும் தின்னலாம். அவனுக்கு மரியாதையைப் படிச்சுக்கொடுக்கணும்னா முதல்லே அகம்பாவத்தை இல்லாமப் பண்ணணும்" என்றார் கிடிலம்.

"சரிதான். ஆனா, நேரடியா உரச வேண்டாம். உரசினா வேற ஏதாவது பண்ணி வெச்சுடுவான். அது பெரிய சிக்கல்லே கொண்டுபோய்விட்டுடும். ஆசன வாய் வழியாக அண்ணாக்கில் தட்டுப்படும்போதுதான் எந்த மாதிரி சிக்கல்னு தெரியும். பிறகு, உருவிட்டுத் தப்பிக்க எல்லாம் முடியாது. அவனுக்கு இழக்குறதுக்குன்னு ஒரு புல்லுமில்லை. மட்டுமில்லை, பெரிய அதிகாரிகள்வரைக்கும் தொடர்பு வெச்சிருக்கான். நேராப் போறவங்ககிட்ட முயல்மாதிரி நடந்துக்குவான்."

கிடிலம் சொன்னார்: "இவனெல்லாம் எம்மாத்திரம்? விரல்படாம எடுத்து அப்படியே நீக்கிடுவேன். முதல்லே அவனோட அகங்காரத்தைக் காலி பண்ணணும்னா அதில நாலு அடி விழணும். பாப்போம், வாய்ப்புக் கிடைக்கும்."

கான்டீனின் அருகில் இந்த சம்பாஷணை நடக்கிறது. சமையல் வேலை பார்க்கும் ஒரு கைதி இந்த விவரங்களை என்னிடம் வந்துச் சொன்னான்.

ஆகவே, என்னதான் கோபமூட்டினாலும் அசைந்து விடக்கூடாதென்று முடிவு செய்தேன். கிடிலத்தின் தலைமையில்தான் உணவு வினியோகம் நடந்தது. எனக்கு அளவு குறைவாகத்தான் கிடைக்கும். சாப்பாடுதானே கொஞ்சம் குறைந்தாலும் பரவாயில்லை என்றிருந்தேன். மேலும் குறைந்தது. வயிற்றுக்குப் பற்றாது. ஒருநாள் சொன்னேன்:

"அரசாங்கம் விதிச்ச அளவு உணவு எனக்குக் கிடைச்சே ஆகணும்."

கிடிலம்: "இனி இவனுக்கு யாரும் பரிமாற வேண்டாம்" என்று சொல்லிவிட்டு என்னிடம் சொன்னார்: "மற்றவங்களுக்குக் கொடுக்குறதுக்கு முன்னால அல்லது கொடுத்து முடிச்ச பிறகு, உனக்கான உணவைக் கொஞ்சமும் குறையாம நீயே எடுத்துச் சாப்பிட்டுக்கலாம். ஆனா ஒண்ணு, அதிகமா எடுத்துடக்கூடாது. எடுத்தா உதை விழும்."

இது நடைமுறைக்கு ஒத்துவராது என்பது மட்டுமல்ல, முக்கியமான சிக்கல்: மற்றவர்கள் பரிமாறுவது இவனுக்குப் பிடிக்கவில்லை. ஆகவே எடுத்துச் சாப்பிடுகிறான் என்று மற்றவர்களை நம்ப வைத்துவிடலாம்.

நான் சொன்னேன்: "வேண்டாம். எல்லாரையும்போல எனக்கும் கொடுங்கன்னுதான் கேட்கிறேன். எனக்கு அள்ளும்போது மட்டும் அகப்பை வளையாமலிருந்தாப் போதும்."

"ஆங் . . . சரி." கிடிலம் கேலியாக முனகி வைத்தார்.

அங்கே மணிகண்டன் எனும் ஒரு கைதியிருந்தான். திடீரென்று கோபப்படுவான்; அடிப்பான். இவனுக்கும் எனக்கும் அவ்வளவு பொருத்தமில்லாமலிருந்தது. சாப்பாட்டுப் பிரச்சினை நடந்த இரண்டாவது நாள். கைதிகள் வரிசையாக வந்து குளித்துக்கொண்டிருந்தார்கள். அடுத்தது நாங்கள். நான் தொட்டியை எடுப்பதற்குள் மணிகண்டன் ஒரு தொட்டி நீரை மொண்டு என் முகத்தில் ஊற்றினான். நான் நோக்கத்தைப் புரிந்துகொண்டேன். அடுத்தது ஒரு உதை விட்டான். அதிர்ஷ்டவசமாக நான் மற்றவர்கள்மீது விழுந்ததால் சமாளித்து நின்றேன். தரையில் விழுந்திருந்தால் கீழே போட்டு உருட்டியிருப்பான். சிறு உருவமான நான், தந்திரத்தாலும் வேகத்தாலும்தான் பிடித்து நிற்கிறேன். உடல் பலத்தால் அல்ல. அடுத்தது, அவன் உதைப்பதற்காகக் காலைத் தூக்கியதுதான் தாமதம், ஒரே டைவில் அவனது மற்றொரு காலில் போய் விழுந்து அதைத் தூக்கிவிட்டேன். எதிர்பார்க்கவே இயலாத நிலையில் அவன் அப்படியே பின்னால் விழுந்தான். அதிகாரிகள் ஓடி வந்தார்கள். இரண்டு பேருக்கும் தலா மூன்றோ நான்கோ அடிகள். அப்போதெல்லாம் கைதிகளுக்கு பட்டனில்லாத சட்டைகள்தான். அதைப் பிடித்து என்னை இழுத்துக்கொண்டுபோனார்கள். எக்குத்தப்பாக கீழே விழுந்ததால் மணிகண்டனை ஸ்டெச்சரில் கொண்டுபோக வேண்டியதாயிற்று.

இது கிடிலத்தின் சூத்திரம்தான் என்பது விளங்கிவிட்டது. இந்த ஆள் மட்டும்தான் இங்கே அதிகாரி என்றால் எனக்கு இன்னும் பலமாக அடி விழுந்திருக்கும். கைதிகள் குளிக்கும் பெரிய டாங்கைச் சுற்றிலும் பாசிப் படர்ந்து கிடக்கும். உடல்ரீதியாக ஒருவனைத் தொந்தரவு செய்ய வேண்டுமென்றால் இந்த இடத்தில் வைத்து லேசாகப் பிடித்துத் தள்ளினால் போதும். பிறகு அப்படியே போட்டு மிதித்தெடுத்து விட்டுப் பாசியில் வழுக்கி விழுந்தான் என்று சொல்லிவிடலாம். தடயத்திற்கு உடம்பில் பாசியும் படிந்திருக்கும்.

கொஞ்ச நேரம் கழிந்தது. எங்களை டவரின் அருகில் கொண்டு போனார்கள். கிடிலம், மணிகண்டனிடம் சொன்னார்: "சும்மா நின்னுட்டிருந்த உன்னை இவன் உதைச்சான் இல்லையா? இவனோட அகம்பாவத்தை இன்னைக்கே தீர்த்திடறேன்."

கிடிலம், லத்தியைக் கையிலெடுத்து வளைத்தபடியே நின்றார். மணிகண்டன் மதிலில் சாய்ந்து நிற்கிறான். அவனால் நேராக நிற்க முடியவில்லை. விழுந்ததில் இடுப்பில் அடிபட்டிருந்தது. அவன் கோபத்துடன் சொன்னான்: "இது என்ன வேண்டாத வேலை சார்? இவனை அடிக்கிறதுக்கு நீங்கதானே எங்கிட்ட சொன்னீங்க?"

மற்ற அதிகாரிகளும் நிற்கிறார்கள். கிடிலம் அப்படியே பதுங்கினார்.

"கழுவேறிமவனே நானாடா சொன்னேன்?"

"நீங்கதான் சார் சொன்னீங்க. எனக்கும் இவன் மேல கொஞ்சம் கோபம் இருந்தது. இதோட சேர்த்து அதையும் தீர்த்திடலாம்னு முடிவு பண்ணேன். இதுக்காக நீங்க அவனை அடிக்கத் தேவையில்லை. அப்படி நீங்க சுகம் அனுபவிக்க வேண்டாம். எனக்குப் புகார் எதுவுமில்லை. என்னை யாரும் அடிக்கலை. நான் பாசியில வழுக்கி விழுந்திட்டேன். என்னைப் பிடிக்க வந்த அவனும் பாசியில விழுந்திட்டான். அவ்வளவுதான். பாசியைக் காட்டுடா மணியா." என்றான்.

நான் உடம்பிலிருந்த பாசியைக் காட்டினேன்.

"போங்கடா ரெண்டுபேரும் . . ."

மணிகண்டன் சொன்னான்: "பாளையத்துக்காரன் அந்த ரௌடி அதிகாரி இருக்கான்லே, அவனை நான் கொட்டாரக்கர சப் ஜெயிலில வெச்சி யாருக்கும் தெரியாம நாலைந்து சரியாப் போட்டுட்டேன் . . . இங்க வந்த பிறகுதான் கேள்விப்பட்டேன். நீ மேஸ்திரிங்குறதால என்னைக் கொஞ்சம் சரிப்படுத்தணும்னு சொல்லி அவன் உங்கிட்ட வந்ததாகவும் நீ மாட்டேன்னு சொன்னதாகவும். நேர்மையா நடந்துக்கிட்டா மணிகண்டனும் நேர்மையா நடந்துக்குவான். பொலையாடித்தனம் பண்ணினா அவ்வளவுதான் . . . கோபம் வந்தா அடிப்பேன். நீயும் திருப்பி அடிச்சுக்க, பிரச்சினையில்லை." நான் எந்தப் பதிலும் சொல்லவில்லை. அவன்மீது கொஞ்சம் மரியாதையும் உருவானது. முழுக்க மோசமானவர்கள் என்று யாருமில்லை.

மூட்டைப்பூச்சி: மிருகக் காட்சி சாலையில் வாழும் மிருகங்களுக்கும் சிறைச்சாலைகளில் வதைபடும் மனிதர்களுக்கும் இடையிலான உரிமைகளில் சிற்சில வேறுபாடுகள்தான். அதிகாரிகளுக்குத் தங்களது பணி சார்ந்து சட்டப்படியான சில சடங்குகளைச் செய்தாக வேண்டும். ஒரு

மிருகம் செத்தால் போஸ்ட் மார்ட்டம். பல மிருகங்கள் செத்தால் விசாரணை, சஸ்பென்ஸன். அதுதான் இங்கும். மிருகங்களுக்குப் பதில் மனிதர்களாக இருப்பதாலும் பேசுகிறார்கள் என்பதாலும் அணுகுமுறை மேலும் கொஞ்சம் மோசமாக இருக்கிறதென்று தோன்றுகிறது. சமூகச் சட்டகங்களினுள் நிற்க மறுக்கும் நாங்கள் ஜெயிலுக்கு வருகிறோம். மேய்ப்பர்களும் மரியாதைக்குரியவர்களும் நல்லவர்களுமான எங்களை நிம்மதியாக வாழ அனுமதிக்காதவர்கள் என்பதுதான் எங்களைப் பற்றிய பொதுசமூகத்தின் கருத்து. அதன் ஒரு பகுதியான அதிகாரிகளின் மனோபாவமும் இப்படியாக இருப்பதைக் குற்றம் சொல்வதற்கில்லை. இந்த அருவருப்பான அணுகு முறைகளுக்கு இதுதான் காரணம்.

ஜெயில் என்பது மூட்டைப்பூச்சிகளின் கொசுக்களின் உறைவிடம். தூக்கத்தில் ஒரு கொசுக் கடித்தால்கூட மக்கள் தொந்தரவுக்குள்ளாகும்போது ஒரு டஜன் கொசுக்கள் ஒன்றுசேர்ந்து கடிக்காமலிருந்தால்தான் கைதிக்குத் தொந்தரவாக இருக்கும். கொசுக்களை ஒழிக்க முனிசிப்பாலிட்டி ஃபோகிங் செய்வதுபோன்ற ஏற்பாடுகள் ஜெயிலுக்குள்ளும் நடக்கும். மருந்து அடிக்கும் போது போதுமான அளவில் அடிக்கமாட்டார்கள். மூட்டைகள் போதையில் மயக்கம்போட்டு விழுந்து இரண்டு நாட்கள் கழித்து தாகத்துடன் எழுந்திருக்கும். கற்ற வித்தை, ஒன்றில் களத்துக்கு வெளியே, அல்லது குருவின் மார்பில். இம்முறை அடித்த மருந்து ஓவர் டோஸாகி விட்டது. மூட்டையுடன் சேர்ந்து கைதிகளும் போதையிலாழ்ந்தார்கள். மருந்தை சுவாசித்ததில் மூச்சடைத்தது. மருந்தடித்த அறைக்குள் இரண்டு நாட்கள் கைதிகளைத் தங்க வைக்கக்கூடாது. ஆனால், கைதிகள் வேலைக்குப் போகும்போது மருந்தடிப்பார்கள். சாயங்காலம் திரும்பி வருவதற்குள் சரியாகி விடும். இது நாங்கள் வருவதற்குக் கொஞ்சம் முன்னால்தான் அடித்திருக்கிறார்கள். அதனால்தான் காலையில் பிரச்சினையாகி விட்டது. அறைக்குள்ளிருந்த ஐம்பத்தாறு பேர்களும் வாந்தியெடுத்தோம். மூச்சு அடைத்தது. தலைச் சுற்றியது. ஜெயில் டெம்போவில் அள்ளிப்போட்டு எல்லோரையும் மெடிக்கல் காலேஜ் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனார்கள். காலையில் சாப்பிடாமல் வந்தோம். மதியமாகியும் எங்களுக்கு எதுவும் தரவில்லை. ட்ராலி வருகிறது. மற்றவர்களுக்கு மாடர்ன் பிரட்டும் பாலும் கொடுக்கிறார்கள். எங்களைக் கண்டுகொள்ளவே இல்லை. டிராலியிலிருந்த பொருட்கள் பாதியளவு தீர்ந்ததும் நாங்கள் அங்கே சென்றோம்.

"வண்டி எங்கே போகுது?" சிலர் பொறுமையிழந்து ஓரிரு பிரட்டுகளை

எடுத்துச் சாப்பிடவும் தொடங்கினார்கள்.

"உங்களுக்குத் தரச் சொல்லலை. லிஸ்டிலே உங்க பேர் கிடையாது."

"எங்களோட லிஸ்ட் அரசாங்கத்தோட கையிலிருக்கு. எங்களுக்கும் வேணும்."

"அதான், முடியாதுன்னு சொல்லிட்டோம்லே . . ?"

"இதை நீங்க உங்க வீட்டிலேருந்து கொண்டுட்டு வர்றீங்களா?"

எங்களுடன் வந்த போலீஸ்காரர்கள் எங்களுக்கு எதுவும் தெரியாது என்பதுபோல் திரும்பி நின்றுகொண்டார்கள். பொது விஷயம் என்று வரும்போது செட்டியும் செட்டிச்சியும் ஒன்று என்று சொல்வதுபோல்தான். போலீசும் குற்றவாளிகளுமான நாங்கள் வெளியிடங்களில் ஒரு தாய் மக்கள்போல் நடந்துகொள்வோம். குணத்தின் அடிப்படையில் எங்களை இனம்பிரித்துப் பார்க்கவும் இயலாது. பிரச்சினையாகி விடக்கூடாது என்பதில் மட்டும் கவனமாக இருப்போம். அது, எங்களுடனிருக்கும் அதிகாரியையும் பாதிக்கும்.

எடுத்த பிரட்களைத் திருப்பி வைத்துவிட்டு டிராலியைச் சுற்றி நாங்கள் அமர்ந்துகொண்டோம். சரி, நாம் இன்று பட்டினிதான் என்று மற்றவர்கள் வாயைத் திறந்தபடியே உட்கார்ந்திருந்தார்கள். ஆஸ்பத்திரி கண்காணிப்பாளர் ஓடோடி வந்தார். பின்னால் பாலும் பிரட்டும் வந்தது. தடுப்பூசி போடப்பட்டது. குளுக்கோஸ் தந்தார்கள். மருந்தின் விஷம் மாறியது. சாயங்காலமானதும் நாங்கள் வார்டுகளுக்குத் திரும்பினோம்.

ஜெயில் ஊழியர்களுக்கு ஜெயிலில் ஒரு நேர உணவுதான். அதுவும் அவர்கள் பணியில் இருக்கும்போது மட்டும். ஆனால், மூன்று நேரமும் சாப்பிட்டுவிட்டு வீட்டுக்கும் பார்சல் கொண்டுபோகிற ஊழியர்கள்தான் அதிகமும். இரவில் மது, தொட்டுக்கொள்ள, ஆடு, மாடு என்று எல்லாமே திருடன்களின் கொள்ளைக்காரன்களின் ஒதுக்கீடுகளிலிருந்து ஊழல் செய்தது தான்.

கொல்லம் சப் ஜெயிலுக்கே வருவோம். ஊழல் அதிகாரிகள்மீதான கோபம் கொழுந்துவிட்ட நிலையில்தான் ஏற்கனவே சொன்ன அந்தக் கண்காணிப்பாளர் வருகிறார். மீன் குட்டையைத் தூக்கி எறிந்த சம்பவம் அவர்மீது சிறு நம்பிக்கையை ஏற்படுத்தியது. அது, 1972 - '73 காலகட்டம்.

எனக்கு 22, 23 வயதுதானிருக்கும். வயதுக்கேற்ற முறுக்கு. அவரது முன்னிலையில் உணவு பரிமாறும்போது நான் பிளேட்டைக் காட்ட மறுத்தேன்:

"எனக்கு வேண்டாம்; எடை குறைவாயிருக்கு."

கண்காணிப்பாளர் என்னைக் கூர்ந்துப் பார்த்துவிட்டுச் சொன்னார்:

"அவனுக்கான உணவை எடை போட்டுக்கொடு."

என்னைக் கான்டீனுக்கு அழைத்துச்சென்று சாமான்களைத் தந்தார்கள். அளவைச் சொல்லி சரியாக எடை போட்டு வாங்கினேன்.

பாத்திரத்தில் தண்ணீரும் விறகுமாக நான் வராந்தாவின்கீழ் தனிப் பானை வைத்தேன். கண்காணிப்பாளர் கண்காணித்துக்கொண்டிருந்தார். மற்ற அதிகாரிகளும் நின்றார்கள். எனக்குத் தெரியும் சமையல் செய்து வரும்போது, அவர்கள் தந்த அளவுதான் இருக்குமென்றால் உதை மாரி பொழியும்.

வெந்து வந்ததை தட்டில் வைத்தேன். உருண்டை இரண்டு மடங்கு பெரிதாக இருந்தது சட்டப்படி இந்த அளவிருக்க வேண்டும். கண்காணிப்பாளர் திகைத்து நின்றார். இருந்தாலும் சமாளிக்க வேண்டுமல்லவா? அவர் சொன்னார்:

"இதில வேஸ்ட் வருமுங்கிற விஷயம் உனக்குத் தெரியுமா?"

இந்தக் கணக்கு எனக்குத் தெரியாது.

இதில் வருகிற வேஸ்டை உங்கம்மா தருவாளா என்று கேட்டு உதை ஆரம்பித்தது. சப் ஜெயிலின் அப்போதிருந்த பதினொரு அதிகாரிகளில் ஒன்பது பேர் உதைத்தார்கள். எப்படி உதைக்காமல் விடுவார்கள்? ஊதியத்தை விடவும் நான்கு மடங்கு ஊழலில் கிடைக்கிறது. இந்த அல்பம் அதில் மண்ணள்ளிப்போட நினைக்கிறது. வைத்தா பார்ப்பார்கள்? ஒவ்வொரு உதையும் 'கொல்லுடா அவனை . . .' என்ற பின்னணிக்குரலுடன் ஒலித்தது. கைதிகள் பார்த்துக்கொண்டு நின்றார்கள். அவர்களினிடையே சிறு சலசலப்புகள் தென்பட்டன. குரல்களும் மெல்ல அதிகரிக்க ஆரம்பித்தன. பிரச்சினையாகி விடுமென்பதைப் புரிந்துகொண்டதும் என்னை வராந்தாவில் வீசிவிட்டுப் போனார்கள். பத்தரை மணிக்கு கைதிகளை நீதிமன்றத்திற்கு அழைத்துக்கொண்டு

போகும்போது தொடங்கி பன்னிரெண்டு மணிக்குத் திரும்பக்கொண்டு வருவதுவரைக்குமான ஒன்றரை மணி நேரமும் என்னுடல் மீது கொலைத் தாண்டவமாடினார்கள்.

கழிவின் விஷயத்தில் எனக்கு அன்று சட்டம் தெரியவில்லை. பிறகு நான் இதே கேள்விக்குப் பதில் சொல்லியிருக்கிறேன். வேஸ்டெல்லாம் கழித்துப்போக இவ்வளவு எடை என்பதுதான் கணக்கு. 14 கிராம் தேங்காய் என்றால் அதை துருவித் தரவேண்டும். மீனை வெட்டி முள்ளை நீக்கிவிட்டுத் தர வேண்டும். 71 கிராம் இறைச்சியென்றால் அதில் 14 கிராம் எலும்புதான் இருக்கலாம். ஆனால், எலும்புக் கணக்கெல்லாம் சொன்னால் சொன்னவன் உடம்பில் எலும்பிருக்காது.

ஜெயில் எப்போதுமே ஒரு கலகச்சூழலை உள்ளடக்கியபடியே இருக்கும். கைதிகள் அதிகமாகவும் அதிகாரிகள் குறைவாகவுமிருப்பதால் பயம் எப்போதும் ஒரு நிழலாகப் படிந்துக் கிடக்கும். ஆகவே, சிறு உரிமைக்குரல்கூட உயர்ந்துவிடக் கூடாதென்பதிலும் அதை உடனடியாக அணைத்தாக வேண்டுமென்பதில் கவனமாக இருப்பார்கள். என்னதான் நீதிமானாக இருந்தாலும் இதில் சமரசம் செய்துகொள்ள மாட்டார்கள். இந்த இடம்தான் ஊழலுக்கும் சாதகமாக இருந்தது.

ஒருவாரம் கழிந்தது. என்னால் எழுந்து நடக்க முடியும் என்றானது. ஒருநாள் மதியம் கண்காணிப்பாளர் அழைப்பதாகத் தகவல் வந்தது. அடுத்த டோஸ் உதைக்காக இருக்கலாம். போனேன். அவர் என்னவோ எழுதிக்கொண்டிருந்தார். தலை நிமிராமல் கேட்டார்: "புகாரெல்லாம் தீந்திடுச்சாடா . . ?"

தீரவில்லை என்றால் மீண்டும் அடிப்பாயசம் கிடைக்கலாம். பதில் சொல்லாமல் நின்றேன். "கேட்டது காதில விழுந்துச்சாடா?" குரல் உயர்ந்தது.

"காரணமெல்லாம் எதுக்கு சார்? உதைக்கணும்னா உதையுங்க."

அவர் சொன்னார்: "உன்னோட புகார்களைத் தீர்க்க முடியுமான்னு நானும் பாக்குறனே." இனி மெஸ்சோட சார்ஜ் உனக்கு. தேவையான கைதிகளை உதவிக்கு வெச்சுக்க. நான் இங்க இருக்குறவரைக்கும் இனியொரு புகார் வரக்கூடாது. எல்லாப் பொறுப்புமே உனக்குத்தான் சொல்லிட்டேன்."

கண்காணிப்பாளருக்குக் குற்றவுணர்ச்சி தோன்றியிருக்குமோ? திடீரென்று

ஏன் இப்படியொரு முடிவு. இருபத்தைந்து பேர்களுக்கு ஒருவர் என்ற கணக்கில் உதவிக்கு ஆட்களை வைத்தேன். மெஸ் நிர்வாகத்தை ஆரம்பித்தேன். கண்காணிப்பாளருக்கு அடுத்த நிலையிலுள்ள அதிகாரி எனும் நிலைக்கு உயர்ந்தேன். அன்னதாதா. உணவை வெளியில் போய் வாங்கவா முடியும்? அப்போதுதான் அதிகாரிகளின் மற்றொரு பக்கத்தையும் கண்டேன். கொடூரமான அதிகாரிகள் பூனையாக மாறினார்கள். ஒரு கிண்ணம் சோற்றுக்காக கல்யாண குணங்கள் அனைத்தையும் துறந்து என்னிடம் வந்து கெஞ்சி நின்றார்கள்.

சாஸ்தாங்கோட்டையைச் சேர்ந்த குறுப்பு ஒருவர் டெபுடி ஜெயிலராக பணி நிறைவு பெற்றவர். இவருடைய வீட்டுக்கு நான் போயிருக்கிறேன். ஓரளவு நியாயமானவர். என்னை சற்று மரியாதையுடன் நடத்தியவர். இவர் வந்து சொன்னார்:

"டேய், மணியா இந்த 110 கிராம் கோதுமை எனக்குப் பத்தாதுடா."

வீட்டில் சிறு விவசாயமெல்லாம் உள்ள ஒரு மனிதர். நல்ல உழைப்பாளியும்கூட. வயிற்றுக்குப் போதாதாம். முன்பு, விருப்பம்போல் அள்ளி வைத்துத் தின்றவர்கள். கைதிகளுக்கும் வயிறு இருக்கிறதென்ற எண்ணம் அப்போதெல்லாம் இவர்களுக்கு இல்லவே இல்லை. என்ன சொல்ல முடியும்? அவரது வயதுக்கும் மரியாதை கொடுக்க வேண்டும். கொஞ்சம் அதிகமாகக் கொடுப்பேன். கைதிகளுக்குக் கொடுக்கும் அதே அளவுதான் அதிகாரிகளுக்கும். திருடனாக இருந்தாலும் மனிதன்தானே? பசியை அறிந்தவனும்கூட! கைதிகள் மனிதர்கள் கிடையாது; ஆகவே, இவ்வளவு போதும் என்பதுதான் இன்றும் ஜெயில் அதிகாரிகளின் எண்ணம்.

பசியின் அளவு எல்லாருக்கும் ஒன்றுதான் என்பதைக் கொஞ்ச காலமாவது அவர்களுக்குப் புரிய வைக்க என்னால் முடிந்தது. கண்காணிப்பாளர் மாறுதலாகிப் போவதுவரைக்குமான இந்த மூன்று மாத காலமும் ஊழியர்கள், அவரைத் திட்டாத நாட்களே கிடையாது. இரவில் மதுவருந்தும் போது தொட்டுக்கவும்கூட இறைச்சிபோன்ற எல்லா வசதிகளும் நின்றுபோயின.

தனித்துவம் இல்லாத மனிதர்கள் எந்த அளவுக்கும் தங்களை உயர்த்திக்கொள்ளவும் தாழ்த்திக்கொள்ளவும் தயங்கமாட்டார்கள் என்பதையும் புரிந்துகொண்டேன். வெறுமொரு திருடனான என்னிடம் வந்து பணிந்து நிற்பதிலும் பொறுப்புகளையும் குடும்பக் கஷ்டங்களையும்

சொல்வதிலும் இவர்களுக்கு எந்தத் தயக்கமுமில்லை. சுற்றி நின்று நாயை அடிப்பதுபோல் என்னை அடித்தவர்கள். எல்லாவற்றையும் மறந்து இப்போது ஒரு அகப்பைச் சோறும் கொஞ்சம் இறைச்சிக் குழம்பும் அதிகமாகக் கிடைப்பதற்காக . . .

விய்யூர் ஜெயிலில் சப்பாத்தி ராமன்பிள்ளை என்றொரு வார்டனிருந்தார். கொடூரமான மனிதர். கைதிகளின் காதுகளைக் குறிவைத்து அறைவார். எல்லோருமே வெறுக்கிற ஒரு மனிதர். நாங்கள் அதிர்ச்சி அடைவதுபோல் இவரை முன்னிறுத்தி ஒரு சம்பவம் நடந்தது. ராமன்பிள்ளை ஒருநாள் டியூட்டி முடிந்து கேன்டீனில் சாப்பிட்டுவிட்டு வீட்டுக்குப் புறப்படத் தயாரானார். கைதிகள் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது உயரதிகாரி ஒருவர் வந்தார். பிள்ளைவாள் ஓங்கியொரு சல்யூட் வைத்தார். தலையிலிருந்த தொப்பி, கை பட்டுக் கீழே விழுந்துவிட்டது. தொப்பிக்குள்ளிருந்து அடுக்கடுக்காக பத்துப்பன்னிரெண்டு சப்பாத்திகளும் தெறித்து விழுந்தன. அவமானத்தில் கூனிக்குறுகி, அடுத்து என்ன செய்வதென்று தெரியாமல் வேர்த்துக்கொட்ட நின்றிருந்தார். கண்களில் நீர் நிறைந்தது. ஏதோ ஒரு கைதி கீழே கிடந்த சப்பாத்திகளைப் பொறுக்கித் துடைத்து அவரிடம் நீட்டினான். வாங்கவா வேண்டாமா என்று தெரியாமல் அவர் ஸ்தம்பித்து நின்றிருந்தார்.

அதிகாரி சொன்னார்: "நீங்க போகலாம், பிள்ளை . . ."

பாவம், நடைப்பிணம்போல் நகர்ந்தார். கைதிகளின் மனதிலிருந்த எல்லா வெறுப்புணர்வுகளும் அந்த ஒரே நிமிடத்தில் இல்லாமலாயின. ராமன்பிள்ளையின் வேதனை நிறைந்த பொறுப்புகளைப் பிறகுதான் நாங்கள் கேள்விப்பட்டோம். இப்படியாக அவருக்குக் கிடைத்த பெயரின் முன்னொட்டுதான் சப்பாத்தி. இதனைச் சூட்டியவர்கள் கைதிகள் அல்ல, பிற அதிகாரிகள்.

நீதிமானாக இருந்தாலும் கொல்லத்தைச் சேர்ந்த அந்தக் கண்காணிப்பாளர் ஆளொரு கோழி. மிக ரகசியமாக அவர் நடத்திய ஒரு ஆபரேஷன் படுதோல்வியில் முடிந்தது. அதிகாரிகளின் தகிடுதத்தங்களை ஒழித்தவரல்லவா? அவருக்கொரு சிக்கல் நேரிடுமென்றால் சும்மா விடுவார்களா? நடந்த சம்பவம் இதுதான்:

கொல்லத்தில், கார்த்திகா ஓட்டலில் டபுள் ரூமும் சிங்கிள் ரூமும் வாடகைக்கெடுத்து ஒரு தம்பதியர் தங்கியிருந்தார்கள். சிங்கிள் ரூம், வரவிருக்கும் ஒரு உறவினருக்கு என்றார்கள். சரி. ஓட்டல்காரர்களுக்கும்

சந்தேகமில்லை. மனைவியாகப்பட்டவள், வெண்ணையின் பெண் வடிவம். இரவு நேரம். கணவன் தனியாகத் தங்கியிருக்கும் இளைஞர்களை நோட்டமிட்டான். அரை மணி நேரத்திற்கு இரண்டாயிரம் ரூபாய். சிக்கலான நிலைமையில் வேறு வழியில்லை என்பதால். மெல்ல ஒவ்வொருவராக வந்து பார்த்தார்கள். இரண்டாயிரம் கம்மிதான். டபுள் மடங்கு விலை போகும். தங்களது கையிருப்பைப் பற்றிய போதாமைகள் மட்டும்தான். அன்று அந்த லாட்ஜில் இளைஞர்கள் யாரும் தூங்கவில்லை. பணம் ஏற்பாடு செய்வதற்காக எத்தனிப்புகளில் ஈடுபட்டார்கள். அரைமணி நேரத்திற்குப் பிறகு, வெண்ணை வந்து இரண்டு நிமிடம் வெளியே நிற்கும். கணவன் அப்போது புதிய வாடிக்கையாளரை அனுப்பிவிட்டு, டபுள் ரூமிலிருந்து சிங்கிள் ரூமுக்குச் செல்வான். விற்பனை இரண்டு தடவை நடந்து மூன்றாவது பூர்த்தியாவதற்குள் போலீஸ் வந்தது. லாட்ஜில் தங்கியிருந்த, பைப் கம்பெனி விற்பனைப் பிரதிநிதி ஒருவன், ஆயிரம் ரூபாயைக் கையில் வைத்துக் கெஞ்சிப்பார்த்தும் படியவில்லை. வெண்ணையின் நினைவு அவன் மனதைப் புண்ணாக்கி விட்டது. கையில் காசுமில்லை. ரொம்பவும் துயரமான நிலையில் வேதனையைத் தாங்கமாட்டாத அவன் போலீசுக்குப் போட்டுக் கொடுத்துவிட்டான். பத்திரிகை அலுவலகத்திலிருந்து பேசுவதாகச் சொன்னான். அன்றிரவே சதிபதி சமேதராக அவர்கள் உள்ளே போய் விட்டார்கள். நீதிமன்றம் இருவரையும் ரிமான்ட் செய்தது. பெண்கள் வார்டில் சதியும் ஆண்கள் வார்டில் பதியும். அதற்குள் ஜெயில் கைதிகளினிடையிலும் கதை பரவி விட்டது. கணவனைச் சுற்றிலும் கைதிகள் கூட்டம். கேலியும் கிண்டலும் இழுபறியும். வெண்ணையின் கணவன் என்ற ஆராதனையும் சிலருக்கு இருந்தது.

பெண்கள் வார்டைப் பார்த்து அன்று பலர் பெருமூச்சு உதிர்த்தார்கள். பெண்கள் வார்டின், இடைவழியினூடே எப்போதாவது ஒருமுறை, அதிகபட்சமாகக் கண்ணில்படுவது உலரப்போட்டிருக்கும் சேலையின் அல்லது பாவாடையின் ஒரு அம்சம் மட்டும்தான். அது கண்ணில்படுகிற அன்று ஆண்கள் வார்டிலும் வராந்தாவிலும் நடக்கும்போது கவனம் தேவை. வழுக்கி விழக்கூடும். அல்லது ஏதாவது, ஏகாந்த வெளியிலிருந்து தெறித்து விழும். அன்று பெண்கள் வார்டிலிருந்த அந்த வெண்ணைக்குப் பயங்கரமான வயிற்று வலி. பெண் வார்டன்களில்லை. ஏழுமணிக்கு மிதமாகத் தொடங்கிய வயிற்று வலி ஒன்பதரைக்கெல்லாம் உச்சக் கட்டத்தை அடைந்தது. கண்காணிப்பாளருக்கு ஆள் போனது. ஜீப் என்ன, காரே வந்துவிட்டது. கொல்லத்தில் இப்போதும் தீவிரமாகப் பணியாற்றும் புகழ்ப்பெற்ற ஒரு வழக்கறிஞர் இருக்கிறார். நீதிபதிகளின் ஜாகையின்

அருகில் இவருக்கும் ஜாகைகளிருக்கும். வாடகை ஜாகைகள்தான். இப்படியாக பல 'அலுவலகங்கள்' உண்டு. ஜெயில் கண்காணிப்பாளரின் தேவையல்லவா? நேரம் விடியும்வரை அங்கே பரிசோதனைகள் நடந்து வெண்ணையின் எல்லாச் சீக்குகளும் குணமாயின. காலையில் ஆறு மணிக்கு மீண்டும் வார்டில். கண் விழித்திருந்து துப்பறியும் நிபுணர்களைக்கொண்ட நாடல்லவா நம்முடையது? அவர்கள் உடனடியாக தங்கள் விசாரணையைத் தொடங்கினார்கள். அறிக்கை கிடைத்தது. கண்காணிப்பாளரின் காமநோய். அவரை நோண்டுவதற்கான ஆயுதமாக இதை எடுத்துக்கொண்டார்கள். இதெல்லாம் நிற்குமா என்ன? அவர்களுக்குப் பயன்படாமலாயிற்று. மட்டுமல்ல, ஓரளவிலான சட்ட மீறுதல்கள் இருந்தாலும் பெரிய அளவில் தப்புக்கண்டு பிடிப்பதற்கெல்லாம் இதில் எதுவுமில்லை. ஜெயிலுக்குள் நடக்கிற ஒழுங்கீனங்களைப் பொறுத்தவரைக்கும் இது ஒரு விஷயமே கிடையாது. இருபது வருடங்களுக்கு முன், அதிகாரத்தைக் கையில் வைத்திருப்பவன் எதை வேண்டுமானாலும் செய்யலாமென்ற ஒரு நிலை இருந்தது. கிளாஸ் ஒண் அதிகாரிக்கு விருப்பம்போல் வேலை கொடுக்கலாம். மனித உரிமைகள் குறித்த அறியாமைகள் அதிகம். மீறுதல்களைப் பற்றிய கவலை கிடையாது. பத்தாம் வகுப்புகூட படிக்காமல் பணி மூப்பில் எஸ்ஐயும் தலைமை வார்டனுமாக பதவி உயர்வதெல்லாம் இயல்பான விஷயங்களாகவே இருந்தன. தங்களுக்குத் தோன்றியதைச் செய்வது. அப்போதெல்லாம் ஜெயில் கைதிகளின் அனுபவம் மிக மோசமாக இருந்திருக்கும். எந்தக் காலத்திலும் நல்லவர்களும் அயோக்கியர்களும் இருக்கவே செய்வார்கள். ஆனால், அந்தக் காலகட்டம் அயோக்கியர்களுக்கு நிறைய வாய்ப்புகளைக் கொடுத்திருந்தது.

ஜெயிலில் கருணன், அஸீஸ் என்று சில வார்டன்களிருந்தார்கள். கைதிகளில் சிறு வயதுப் பையன்களைக் கண்டால் விட்டு விலகவே மாட்டார்கள். கைதிகளுக்கும் அதிகாரிகளுக்கும் இடையிலான தொடர்புகளுக்கென கட்டடத்தில் ஒரு ஆள் முகத்தைப் பதித்துக்கொள்ளும் அளவில் மறைவான சில பகுதிகளிருக்கும். இதை இந்த அதிகாரிகளே உருவாக்கி வைத்திருப்பார்கள். அந்தப் பக்கம் நிரந்தரக் குற்றவாளிகள். பதிலுக்கு, பீடி, தீப்பட்டி, எப்போதாவது ஒரு கஞ்சா பீடி போன்றவைக் கிடைக்கும். பிறகு இதுவும் வந்து சேர்ந்தது. பிறகு அந்த இடத்தை இரும்பு ஷீட்டால் மறைத்தார்கள்.

## 67 - முதியவர்

திருவனந்தபுரம் சென்ட்ரல் ஜெயில். நான் பதினொன்றாம் எண் பிளாக்கில். இதன் கீழ்ப்புறமுள்ள கழிவறையில் ஒருஆள் தூக்குப்போட்டுச் செத்துப்போனான். பெரும் கூச்சலும் குழப்பமும். அதிகாரிகள் வந்தார்கள்: "யாராவது ஏறி கீழே இறக்குங்கடா . . ."

நான் முன்வந்தேன். இதொரு புண்ணிய கர்மம். உயிரற்ற உடலுக்குச் செய்ய வேண்டிய மரியாதையைச் செய்தாக வேண்டும். உடலை விட்டு ஆன்மா பிரிந்துவிட்டது. இனி உடலும் அழிந்துபோய்விடும். எல்லாருடைய நினைவுகளிலிருந்தும். வெறுமொரு கைதி. மறந்துவிட வேண்டியவர்கள் இறந்துபோனதாக அறிவதில் உறவினர்களுக்கு மகிழ்ச்சிதான். பெரும் குற்றங்களும் தவறுகளும் செய்தவனாக இருந்தாலும் சமூகத்துக்கும் சொந்தபந்தங்களுக்கும் சொல்வதற்கான ஏதாவது அவனிடமும் இருக்கும். யாரும் கேட்கத் தயாராக இல்லையென்றால்கூட! ஒரு குற்றவாளி என்ன சொல்லிவிட முடியும்? அதிகாரத்தின் குற்றவரையறையை மீறிவிட்டதுதான் இவர்கள் செய்த தவறு. சிக்கிக்கொள்ளாத குற்றவாளிகளும் வரையறைக்குட்பட்ட குற்றவாளிகளும் லட்சக்கணக்கணக்கில் வெளியில் இருக்கிறார்கள். இந்த குயுக்தி மூளை அவர்களுக்கு வாய்த்திருக்கிறது. சிக்கியவர்கள் தங்கள் செயல்பாட்டில் நேர்மையாளர்கள். தோன்றியதைச் செய்து, பிடியில் அகப்பட்டார்கள். அரசாங்கம் இதைத்தான் செய்யவும் முடியும். வரையறையை அகலப்படுத்தினால் ஜெயிலில் இடநெருக்கடி ஏற்படும். ஏற்கனவே நெருக்கடி.

இறந்தவர் வயதான மனிதர். கீழே நின்று யாரோ தூக்கிப் பிடிக்க, நான் கழிவறையின் அரைச்சுவரிலேறி நின்று கழுத்துச் சுருக்கை அவிழ்த்துவிட்டுக் குதித்திறங்கி உடலைத் தாங்கிக் கொண்டேன். மரண அவஸ்தையின் மனிதக்கழிவுகள் என் உடல் முழுவதும் வடிந்தன. தொடையை நகத்தால் கீறிய ரத்தம் என்னுடைய வெள்ளைச் சட்டையில் படிந்தது.

இந்த மனிதர் ஏன் இவ்வளவு காலமும் சாகாமலிருந்தார் என்பதுதான்

என்னுடைய ஆச்சரியம். அதிகாரிகள் மற்ற கைதிகளை உள்ளே நுழைய அனுமதிக்கவில்லை. நாங்கள் இரண்டுபேர் மட்டும். அதுவும் இப்படியான வேலை என்பதால்தான் அனுமதித்தார்கள். முதியவர் இதை எப்படி சாதித்தார் என்பது பிற கைதிகளுக்குத் தெரிந்துவிடக்கூடாது. நீண்டகால முயற்சியின் பலனாக இது அவருக்கு கை கூடியிருக்கலாம். இதைப் பார்க்கும் மற்ற கைதிகளுக்கு மிகச் சுலபமாகப் புரிந்துவிடும். செத்துப் போவதற்கான ஆசையும் அதற்கான வழிவகைகள் அறியாமலுமிருக்கும் பலருக்கு இது தூண்டுகோலாக அமையும். கைதியின் மனநிலைகளுக்கு ஒழுங்கோ வடிவமோ இருக்காது.

தன்னைத்தானே சிறைப்படுத்தி எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் இருந்துவிட முடியும். ஆனால், வெளியிலிருந்து ஒருவன் பூட்டிச் செல்வான் என்றால் அவன் மனத்தொந்தரவுக்கு உள்ளாவான். ஜெயிலுக்குள்ளிருந்து விடுதலையைப் பற்றி யோசிக்க ஆரம்பித்தால் ஆதியும் அந்தமுமிருக்காது. சரி, வெளியே வந்துவிட்டோம், இனி மேலாவது உள்ளே வராமல் பார்த்துக்கொள்வோம் என்றும் நினைக்கமாட்டான். இது மனித மனதின் பூர்வ குணம். மனத்திடமில்லாதவர்கள்தான் மென்மேலும் குற்றங்கள் செய்கிறார்கள். ஜெயிலுக்குள் இருக்கும்போது வெளியே போய் நல்லவனாக வாழ வேண்டுமென்று நினைப்பான். வெளியே வந்ததும் ஜெயிலுக்குள் கிடந்து இவ்வளவு நாள் கஷ்டப்பட்டாகி விட்டது. இனி கொஞ்சம் ஜாலியாக இருக்கலாமென்று நினைப்பான். முழுக்க நனைந்தாகி விட்டது. இனி சாண், முழம் கணக்குகள் எதற்கு? நமக்கு நாமே! மீண்டும் ஏதாவது குற்றத்தில் ஈடுபடுவான். மீண்டும் ஜெயில். தவறை ஒருபோதுமே சரி செய்துகொள்ள முடியாத சஞ்சலங்களினாலானது திருடனின் மனம். சங்கம்புழ போன்றவர்கள் கவிஞர்களாக மாறியது அதிர்ஷ்டம். கலைஞனின் மனம்போல் விசித்திர இழைகளால் கோர்க்கப்பட்டது குற்றவாளியின் மனம். சங்கம்புழயின் பாடல்களிலுள்ள மனநெருக்கம், விசித்திர இழைகளால் கோர்க்கப்பட்ட அதன் இனிமைதான். குற்றவாளிகளின் பாடல்களிலும் இதுபோன்ற இனிமையை உணர முடியும். ஆனால், மக்கள் இதனை உணர மறுப்பார்கள். ஆனால், வெளிப்பாடுகளைப் பொறுத்தவரைக்கும் இரண்டுமே கலைகள்தான்.

கலைஞனின் மனவோட்டத்தை முன்னரே கணித்துவிடுவதென்பது இயலாத விஷயம். அவனது குணம், இயல்புக்குமாறான, வேறுபட்ட பல நுட்பங்களும் சிக்கல்களும் முரண்களும் கொண்டதாக இருக்கும். குற்றவாசனைக்கான காரணமும் இதுதான். கவிஞனுக்கு

கவிமோட்சமில்லாததுபோன்ற ஒரு பிணைப்பு இதிலுமிருக்கிறது. இது திருடனிடமும் மோசடிக்காரனிடமும் பிக்பாக்கெட்காரனிடமும் குற்றவாசனையாகக் கிடக்கிறது. இது தூண்டுதலடையும்போது அவன் திருடுகிறான். பாக்கெட் அடிக்கிறான். அதற்காக, கவிஞனைக் கொண்டாடுவதுபோல் கள்ளனைக் கொண்டாட இயலாது. ஏனென்றால் பொதுப்புத்தி மனிதர்களுக்காகவே அதிகாரமும் பரிவாரங்களும் செயல்படுகின்றன. இதுபோன்ற விசித்திரமான குணாம்சம் கொண்டவர்களை வகைப்படுத்தியதில் கவிஞர்களைப்போன்ற மிகச் சிறு பிரிவினர் நல்ல புத்தகத்தில் சேர்கிறார்கள்.

வெளியே இருக்கும்போது எந்தச் சிந்தனையும் எந்தத் திருடன்மீதும் தாக்கம் செலுத்துவதில்லை. தாத்தாவின் தாடிபோல் மனம் பறந்து திரிய வழி பார்க்கிறது. சுகமான நினைவுகள் என்று அவனுக்கு எவையுமிருக்காது. ஆகவே, அவன் சிந்திப்பதில்லை. சிந்தனைகள் தன்னம்பிக்கைக்கு எதிரானவை. சிந்தித்துச் சீர்த்தூக்கிப் பார்த்தால் எந்த வீட்டிலும் நுழைய முடியாது. ஆகவேதான் அவன் கிடைத்த நேரம் முழுவதும் மதுவிலும் போதையிலும் மயங்கிக் கிடக்கிறான்.

ஜெயிலுக்குள் வந்த பிறகு சிந்தனைகளும் குற்றவுணர்வுகளும் மீண்டும் தலை தூக்கும். இது தொடராமலிருக்க சக கைதிகள் உதவுவார்கள். யாரையும் அவ்வளவு சுலபமாக அவர்கள் சிந்திக்க விடமாட்டார்கள். உதைத்து, கெட்ட வார்த்தைகளால் திட்டி யதார்த்தத்தை உணர்த்துவார்கள். மிகுந்த மனவருத்தத்துடன் இருக்கும்போது பிற கைதிகளின் சோகக்கதையைச் சொல்வார்கள். அதனுடன் ஒப்பிட்டால் நம்முடையவை துயரமே இல்லையென்று தோன்றும். ஒர்க் ஷாப்பிலோ நெசவுக் கூடத்திலோ வேலை பார்க்கும்போதும் சிந்தனைகள் தலைதூக்கும். எதற்காக வாழ வேண்டும்? ஒர்க் ஷாப்பில் கிடைக்கும் பனியன் கழிவுகளை நிக்கரில் மறைத்துக்கொண்டு வந்துவிடலாம். நெசவுக்கூடத்தில் திருடிய நூலைப் பிரித்து இரண்டு மீட்டர் நீளமாக்கி, கழிவறைக் கம்பியில் கட்டி வாழ்க்கையை முடித்துக்கொள்ளலாம். ஆனால், முயற்சிகள் பெரும்பாலும் ஏதாவதொரு கட்டத்தில் சககைதிகளின் கண்களில் பட்டுவிடும். பிறகு, அவ்வளவுதான். உதைத்து, அதைப் பறித்து விடுவார்கள். முன்பெல்லாம் ஒன்றரை மீட்டர் நூல்வரை நான் பிரித்தெடுத்திருக்கிறேன். அப்போது மூத்த கைதிகள் வந்து முகத்தில் அறைந்து அதைப் பறித்து விட்டார்கள்.

ஜெயிலுக்குள் கைதிகள் அனைவருக்கும் நல்ல உணர்வுகள்தான். உள்ளே இருக்கும்போது நானுட்பட, செய்த கொடூரங்களைக் கேட்டுப் பரஸ்பரம்

காறித் துப்புவோம். ஆகவே, பெரும்பாலும் அக மனதிலிருக்கும் நன்மைகளைப் பற்றி மட்டுமே பேசுவோம். ஜெயிலுக்குள் யாரையும் நம்பலாம். இங்கே கட்டிப்பிடித்துக் கிடந்தவர்கள் வெளியில் வந்தால் ஒருவரை ஒருவர் நம்பமாட்டார்கள். ஜெயிலுக்குள் ஒரு தாய் பெற்ற மக்கள். பரஸ்பரம் குழி தோண்டமாட்டார்கள். தோண்ட முடியாது. தோண்டினாலும் விழுந்தாலும் பலன் ஒன்றுதான். இரு தரப்பும் சேர்ந்து குழியில் விழ வேண்டும். வெளியில் நிலைமை இதுவல்ல. சுவரை விட்டு வெளியேறுவதை எதிர்பார்த்து நிற்கும் மற்றொரு மணியன்பிள்ளை வந்து தலையில் ஏறி விடுவான். நல்ல மணியன் இல்லாமல் போவான். இதனிடையே ஜெயிலிலிருந்த நண்பர்கள் யாரையாவது கண்டால் பாசம் வரும். ஆனால். நம்பிக்கை வராது. பறக்கும்போது யாரையும் காலில் தொங்க அனுமதிக்கக் கூடாது. ஆகவே, ஜெயில் நட்பு வேறு, வெளி நட்பு வேறு.

ஜெயிலுக்குள் தற்கொலை செய்ய நினைக்கும் ஒருவனை அர்ப்பணிப்பு உணர்வுடன் மீட்டு வாழ்க்கையின் யதார்த்தங்களையும் தத்துவார்த்தங்களையும் எடுத்துச் சொல்கிற சக கைதிகள் வெளியே அவன் சாகப்போவதாக அறிந்தால் "சாகத்தானே போறே, கையில போட்டிருக்குற வாட்சைக் கழற்றித் தந்துட்டுப் போயேன்" என்பார்கள். இப்படியாக ஜெயிலுக்குள் பொங்கிப் பிரவாகிக்கும் அர்ப்பண உணர்வுகளாலும் அம்முதியவரின் மரண வாஞ்சையைத் தடுத்துவிட முடியவில்லை. செத்தே தீர்வதென்று ஒருவன் முடிவு கட்டும் தருணமிருக்கிறது. இத்தருணத்தை முதியவர் தூக்குப்போட்ட கழிவறையின் ஜன்னலைப் பார்த்தாலே புரிந்துகொள்ள முடியும்.

கழிவறையின் அரைச் சுவரில் ஏறி நின்று சாதாரணமாக ஒரு இளைஞனால் முடியாத சாகசங்களைச் செய்துதான் அந்த மனிதர் தூக்குப்போட்டிருக்கிறார். இது எப்படி இவரால் சாத்தியமானது என்பது ஆச்சரியமான ஒன்று. எப்போதோ வாசித்த சத்ரபதி சிவாஜியின் கதை நினைவுக்கு வந்தது. ஒரு பால்காரி தினமும் காலையில் கோட்டைக்குப் பால் கொண்டுவந்து விட்டு கோட்டை வாசலை மூடுவதற்குள் திரும்பிச் செல்வது வழக்கம். கோட்டையின் வெளியிலுள்ள கிராமத்தில் அவளது வீடிருந்தது. சென்ற பிறகுதான் குழந்தைக்குப் பால் கொடுக்க வேண்டும். ஒரு நாள், திரும்பிச் செல்வதற்குத் தாமதமாகிவிட கோட்டை வாசல் மூடப்பட்டு விட்டது. இனி, மறுநாள் காலையில்தான் திறக்கும். அவள் மனம் கலங்கினாள். வீட்டில் குழந்தை பசியுடனிருக்கும். எப்படியாவது வெளியே போய்விட வேண்டுமென்ற எண்ணம் மட்டும் அவளது

மனதிலிருந்தது. கோட்டையில் ஏதோ ஒரு பகுதியினூடே நுழைந்து எப்படியோ வெளியேறி விட்டாள். மறுநாள், காவல்காரன் இதை அறிந்து திடுக்கிட்டான். சத்ரபதியின் முன்னால் கொண்டுவந்து நிறுத்தப்பட்ட அவள் வெளியேறியது எப்படி என்பதை விவரிக்கும் பொருட்டுக் கோட்டையின் உச்சியில் ஏறி கீழே பார்த்ததும் திடுக்கிட்டு விட்டாள். மனிதனால் இறங்கிவிட முடியாத, மிகப் பயங்கரமான ஆழம். சிவாஜி சொன்னார்: "சகோதரியே, நீ சொல்வதை நான் நம்புகிறேன். ஏனென்றால், அப்போது உன் மனதை ஆக்கிரமித்திருந்தது குழந்தையைப் பற்றிய எண்ணம்."

முதியவரின் கதையும் இதுதான். இருபத்திரெண்டு வருடங்களாகிறது, இவர் ஜெயிலுக்கு வந்து. விடுதலை செய்ய மெடிக்கல் போர்டு அனுமதியளிக்கவில்லை. அரசாங்கத்தின் விசேஷ அனுமதி வேண்டும். செல்வாக்குப் படைத்தவர்களால் மட்டுமே சாதிக்க முடிந்த விஷயமிது. திருவனந்தபுரம் சென்ட்ரல் ஜெயிலில் நாற்பது வருடங்களாக ஒரு கைதி அடைபட்டுக் கிடந்தார் என்றால் உங்களால் நம்ப முடிகிறதா? இவரைப் பார்க்கும் போதெல்லாம், திருவனந்தபுரம் மிருகக்காட்சி சாலையில் பார்த்த எழுந்திருக்க முடியாத கிழட்டுச் சிங்கம்தான் என் நினைவுக்கு வரும். எப்போது பார்த்தாலும் ஒரே இடத்தில் படுத்திருப்பார். இவரால் எழுந்திருக்க முடியாதோ என்ற சந்தேகம் வரும். எப்போதாவது ஒருநாள் தனியாக வார்டுக்குள் உலாத்திக்கொண்டிருப்பார். மனிதர்களைக் காண்பதே இவருக்கு வெறுப்பு. இவருக்கான உணவை அங்கேயே கொண்டுபோய்க் கொடுத்துவிடுவார்கள். கான்டீனில் வேலை பார்க்கும் யாராவது போய் வார்டுக்கு வெளியே நிற்பார்கள். இவர் சாப்பாட்டுத் தட்டைக் காலால் தட்டி எறிந்து கொடுப்பார். அதில் அள்ளி வைத்துக் கொடுப்பார்கள். ஏதாவது காரணத்தால் உணவு வரவில்லை என்றாலும் பிரச்சினையில்லை.

ஒரு கொலை வழக்கில் சிக்கி தனது, 21 - 22 வயதுகளில் உள்ளே வந்தவர். பாலாயில் ஏதோ ஒரு இடத்தைச் சேர்ந்தவர் என்று சொல்லக் கேள்வி. ஐம்பது வருடங்களுக்கு முன் இவர் யாரிடமாவது சொன்ன தகவலைச் செவிவழிச் செய்தியாக நாங்களும் பகிர்ந்துகொள்வோம். பெரிய கோடீஸ்வரன். ஜெயிலுக்குப் போனவர்களை வெளியே வரவிடாமல் செய்வதற்குப் பணமும் செல்வாக்கும் இருந்தால்போதும் என்றொரு நிலை அன்றிருந்தது. இப்படியான ஒருவர் எப்போதோ செத்துப்போய் விட்டதாகவே வில்லேஜ் ஆஃபீசிலும் பிற ரிக்கார்டுகளிலும் பதிவாகியிருக்கும். என்றால்தானே சொத்துக்களை அபகரித்துக்கொள்ள

முடியும்? இந்த மனிதரும் அரசாங்கப் பதிவுகளில் செத்துப் பல வருடங்களாகி இருக்கலாம். ஆர்வ மிகுதியால் ஒரு தடவை கொஞ்சம் பேசிப் பார்ப்போமே என்று சென்றேன். எதையெதையோ கேட்டேன். வெறுமனே என்னைப் பார்த்தபடி நின்றார். என்னுடைய அருகாமை மெல்ல மெல்ல அவரைத் தொந்தரவு செய்ய, முகத்தில் கோபம் படர ஆரம்பித்தது. நான் மெல்ல இடம் பெயர்ந்து விட்டேன்.

இந்த முதியவர் விசித்திரமான மனிதர் என்றால் ஜெயிலுக்குள் விசித்திரமானதொரு இடமிருக்கிறது. ஐசலேஷன் வார்டு. ஜெயில் ஊழியர்களுக்குத் தலைவலியாக இருக்கும் கைதிகளைத் தண்டனை நடவடிக்கை என்ற பெயரில் கொண்டுவந்து அடைக்குமிடம். ஜெயிலில் நடந்த ஒரு அடிதடிக்காக என்னையும் ஒருமுறை இங்கே அடைத்தார்கள். எவ்வளவு சத்தம் போட்டாலும் கேட்க முடியாத அளவுக்குத் தொலைவிலிருந்தது இந்த அறை. தூக்கிப்போட்டு மிதித்தாலும் வெளியுலகம் அறியாது. தனியாக சுவர் கட்டி மறைக்கப்பட்ட அறை. ஜெயிலுக்குள்ளொரு ஜெயில். வெளிச்சம் வருவதற்காக உயரத்தில் ஒரு சிறு ஜன்னல் மட்டுமிருக்கும். மற்றபடி கூரிருட்டு. உருவங்கள் நிழல்போல் தெரியும். ஒரு பதினைந்து நாட்கள் இங்கே இருந்தால் மனிதனிடம் மிச்சமிருக்கும் எல்லா ஆசைகளும் அற்றுப்போய் எலும்புக் கூடுபோலாகி விடுவான்.

என்னை ஒன்றரை மணி நேரம் மட்டும்தான் இதில் அடைத்து வைத்தார்கள். அதற்குள் நான்கு உதை தந்துவிட்டுத் தூக்கி வெளியில் கொண்டு வந்தார்கள். நரக தரிசனத் தண்டனை. அறையின் நடுவிலொரு சிமெண்ட் படுக்கையும் கீழே சுற்றிலும் ஈரமாகவும் இருக்கும். அதில் தண்ணீர் நிரப்புவதற்கான வசதியுமிருந்தது. நீர்ச்சாலை வெளியிலிருந்து மூடலாம். பிறகு தரையில் கால் வைக்க முடியாது. பெஞ்சிலேறி உட்கார்ந்து விட வேண்டியதுதான். ஈரம் கீழிருந்து மேல் நோக்கி வரும். நான் போகும்போதுகூட ரொம்ப நேரம் அதில் உட்கார்ந்திருக்க முடியாத குளிரிருந்தது. உப்பும் சோறும் தண்ணீரும்தான் ஆகாரம். தினமும் உடல் நிலையைப் பரிசோதிப்பதற்காக டாக்டர் வருவார். மூன்று நான்கு நாட்களானதும் டாக்டர் மாற்றச் சொல்லிவிடுவார். இல்லையென்றால் செத்துப்போய் விடுவான். பிறகு மெனக்கெடு. பெரிதாக ஒன்றுமில்லை. சில தகவல்களை எழுதி வைக்க வேண்டும். கைதிக்கு இன்ன வியாதிகள் இருந்தன. சாவுக்கான காரணங்கள் இன்னன்ன என்றெல்லாம் எழுதி வைக்க வேண்டும்.

ஜெயிலில் கைதிகள் இறந்தால் உறவினர்கள் குறிப்பிடும் ஆஸ்பத்திரியில்

போஸ்ட் மார்ட்டம் செய்து கொடுக்கவேண்டுமென்பது சட்டம். அன்றுவரை யாருமே வந்து பார்த்திருக்க மாட்டார்கள். இப்போதும் தேவையில்லைதான். ஆனால், ஒரு பிரச்சினை மூலம் அன்பிருப்பதாக நடிக்க விரும்புவார்கள். இப்போதெல்லாம் வெளிப்படுத்துவதற்கான நல்லதொரு வாய்ப்பைத் தேடி அன்புகள் அலைந்துகொண்டிருக்கின்றன.

வீட்டு வேலை: ஜெயிலிலிருந்து தப்பிப்பது அவ்வளவு சிரமமான பணியொன்றுமில்லை. அதுவும் இந்த உலகத்தில்தானே இருக்கிறது? வெளியிலிருந்து உணவுப் பொருட்கள், உடுப்புகள் போன்றவைகளுடன் வண்டிகள் வரும். கைதிகளுக்கு அலுவலகத்திலும் பிற இடங்களிலும் வேலைகளுமிருக்கும். சீருடையில்லாமல் அங்குமிங்கும் விலகி நிற்கும்போது அடையாளம் தெரிய வேண்டுமென்ற கட்டாயமில்லை. வேலைக்கு அழைத்துச் செல்லும் போதும் தப்பிப்பதற்கான வழிகள் பல இருந்தன. என்னுடைய ஒரு அனுபவம்: எங்களை ஒரு குழுவாக ஜெயில் அதிகாரியின் வீட்டு வேலைக்காக அழைத்துச் சென்றார்கள். வீட்டைச் சுத்தம் செய்வதுதான் முக்கியமான பணி. ஒரு அதிகாரியின் கண்காணிப்பில் பத்து கைதிகள். ஜெயிலரின் வீட்டில் மட்டுமல்ல, ஐஜி வீட்டிலும் வேலை செய்திருக்கிறேன். ஒரு கண்காணிப்பாளரின் மகள் வக்கீலுக்குப் படிப்பவள். வால் முளைத்த ரகம். மாதமுறை குருதி படிந்த உள்ளாடைகள் வரை கைதிகளை வைத்துத் துவைப்பது இவளுடைய ஒரு மனோபாவம். அதிகாரத்தில் இருக்கும் இவள்களது அப்பன்களே பரவாயில்லை. அதிகாரம் இவர்கள் கையில் கிடைத்தால் நாட்டின் கதி என்னவோ? சொந்த வாழ்க்கையில் இவர்களால் வெற்றி பெற இயலுமா? தகப்பனிடமும் கணவனிடமும் இதே குணம்தானே வெளிப்படும்? ஒரு மனிதனின் இரட்டை வாழ்க்கைக்கும் எல்லை இருக்கிறது. அந்த எல்லைக்குள் வைத்து சொந்த வாழ்க்கையில் அடிமேல் அடி விழும். எனக்கு அவள்மீது அனுதாபம்தான் உருவானது. உள்ளாடைகளைத் துவைத்து உலரப்போடும்போது பார்த்துக்கொண்டு நிற்பாள். மனிதமனதின் அனுபூதிகள் பலநிலைகளைக் கொண்டவை. இதுவும் அதிலொன்றுதான்.

அன்று குவாட்டர்ஸ் டியூட்டி எனப்படும் வீட்டு வேலைக்குப் போகும்போதும் ஒரு போக்கிரித்தனம் காட்டினேன். திருச்சூரில் வியூர் சென்ட்ரல் ஜெயில். பாம்புக்காவு ஜங்ஷன் பக்கத்தில் வேலை. அன்று அங்கே 11 கேவி லைன் போடுவதற்காக ஏராளமான நாவல் மரங்களை வெட்டி அழித்திருந்தார்கள். ஜெயிலில் அன்று ஆப்பிள் பீடி மிகவும் பிரசித்தி பெற்றிருந்தது. கைதிகளுக்கென அது விசேஷமாகத் தயார்

செய்யப்படுவதாக நம்பியிருந்தோம். அந்த அளவுக்கு கெட்டியான சுக்காவும் புகைச்சுருளும். அப்படியே தலைக்குப் பிடிக்கும். நான் நாவல் மரங்களின் உலர்ந்தக் கம்புகளை வெட்டி ஒன்றாகக் கட்டித் தூக்கிக்கொண்டு நடந்தேன். ஜெயில் காம்பவுண்ட் முள்வேலியை வளைத்து வெளியில் வந்தேன். ஒரு கைதி நிக்கரெல்லாம் அணிந்து ஒய்யாரமாக நடைபோடுகிறான். நேராக பாம்புக்காவு ஜங்ஷனிலிருக்கும் ஒரு ஓட்டலுக்குச் சென்று விறகைக் கொடுத்தேன். "ஏதாவது பிரச்சினை வருமாடா?" என்று கேட்டான் கடைக்காரன்.

"அப்படீன்னா நான் அடுத்தக் கடையில கொண்டுபோய் கொடுக்கிறேன்." என்றேன்.

"சரி எவ்வளவு வேணும்?"

இரண்டு கட்டு ஆப்பிள் பீடி, நல்ல ஸ்ட்ராங்கா ஒரு ஸ்பெஷல் சாயா. செய்திப் பத்திரிக்கை கிடந்தது. ஆட்கள் பேசிக்கொண்டிருக்கிறார்கள். ஒரு சுதந்திரக் குடிமகன்போல் நானும் அவர்களிலொருவனாக அவர்கள் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருந்தேன். ஒரு வடை எடுக்கலாம் போலிருந்தது. அதற்கான விறகிருந்தது. நான் பத்திரிகையை எடுத்து வாசிக்க ஆரம்பித்தேன்.

திடீரென்று பார்க்கும்போது 'வயிற்று வலி' சைக்கிளில் வந்து கொண்டிருந்தது. நான் திடுக்கிட்டேன். ஒரு வார்டன். இவருக்கு எந்நேரமும் வயிற்று வலி. கையில் எப்போதுமே சோடா உப்பு வைத்திருப்பார். வலி நிவாரணி. தொட்ட கைக்கு அடிப்பார். அடித்துவிட்டு அய்யோ என்று வயிற்றைப் பிடிப்பார். அடி வாங்கியவன் திகைப்பான். தனக்குள் ஏதோ ஒரு அமானுஷ்ய சக்தி செயல்படுகிறதோ, என்னை அடித்தவனே வலியில் அலறுகிறானே என்று!

வயிற்று வலி பார்க்கும்போது, ஒரு கைதி ஸ்டைலாக உட்கார்ந்து சாயா குடிக்கிறான். வடை தின்கிறான். நாட்டு நடப்புகளைக் கேட்டு அறிகிறான். அபிப்பிராயம் வேறு சொல்கிறான். நான் ஊதி ஊதிக் குடித்துக்கொண்டிருந்த சாயாவை, அவரைப் பார்த்ததும் ஒரே இழுப்பில் தீர்த்தேன். தொண்டை வெந்துபோனது. தவமாய் தவமிருந்துக் கிடைத்தத் தேனீர். தெய்வம் தம்புரான் வந்தாலும் களைந்து விட முடியாது. பீடியையும் எடுத்துவிட்டு சரம்போல் பாய்ந்தேன். ஜெயிலிருந்து ஒருவன் தப்பி வந்திருக்கிறான். வயிற்று வலி கடைக்காரனிடம் கோபப்பட்டார்.

உனக்கு நான் வெச்சிருக்கேண்டா என்றபடியே அவர் சைக்கிளைத் தூக்கித் திருப்பி, என் பின்னால் வேகமாக மிதித்து வந்தார். நான் அதற்குள் முள்வேலியைத் தாண்டி உள்ளே வந்துவிட்டேன். வேலியைப் பழையபடி சரியாக வைத்தேன். அவர் எல்லா முகாம்களிலும் தேடிப் பார்த்துவிட்டு பத்தாம் நம்பர் முகாமுக்கு வரும்போது நான் சுள்ளியுடன் எதிரில் வந்துகொண்டிருந்தேன். எங்கள் வார்டன் ஒரு அப்பிராணி மனிதர். அவர் சொன்னார்:

"அடிக்க வேண்டாம், நான் விசாரிக்கிறேன்."

"எங்கடா போனே?"

பொய் சொல்லிப் பயனில்லை. "சாயா குடிக்க."

காதைப் பிடித்துத் திருகினார். வேறு யாராவதாக இருந்தால் செவிட்டில் ஓங்கி அறைந்திருப்பார்கள்.

"ஓரளவு விஷயம் தெரிஞ்சவன்தானேன்னு நினைச்சு ஃப்ரீயா விட்டா, அதைத் தவறாப் பயன்படுத்துறே இல்லையா?"

வயிற்று வலி தொலைவில் நின்று சொல்கிறது:

"இப்படியெல்லாம் பண்ணினா பத்தாது நாயரே, இங்க அனுப்புங்க. முள்வேலியைக் கண்டாலே மூத்திரம் போற மாதிரி பண்ணிடறேன்."

"அதெல்லாம் வேண்டாம். போடா, போயி அஞ்சு மரக்கால் நெல்லுக் குத்து."

தண்டனை. மூட்டையில் காய்ந்த நெல் வரும். குத்தும்போது உள்ளங்கைகள் அப்பளம்போல் வீங்கும். குத்தி முடிக்கும்போது சாயங்காலமானது. குளித்துவிட்டு மறைத்து வைத்திருந்த இரண்டு கட்டு பீடியில் ஒன்றை ஒரேயடியாக இழுத்துத் தீர்த்துச் சோர்வை அகற்றினேன்.

## **68 -** வார்டன்

ஜெயில் வார்டன்கள் வாழ்க்கை விசித்திரமானது. கிரிமினல்களுடனான சகவாசம் அவர்களது மனதிலிருக்கும் அமைதியையும் நல்ல எண்ணங்களையும் சிதைத்துவிடும். கைதிகள் வெளியே போன பிறகும் பயம்தான். ஜெயிலில் கொடுப்பது சில நேரங்களில் வெளியில் திருப்பிக் கிடைக்கும். வாங்கியவர்களும் இருக்கிறார்கள். திருவனந்தபுரத்தில் தம்பானூரிலும் கிழக்கே கோட்டையிலும் நடக்கும்போது எதிர்படுபவர்களில் ஒரு சதவிகிதமாவது கிரிமினல்கள்தான். மற்றவர்களுக்கு அவர்கள் இயல்பான மனிதர்கள். எங்களைப் போல் குற்றவாசனையுள்ளவர்கள் ஓரிடத்தில் நின்று கொஞ்ச நேரம் ஸ்கேன் செய்து பார்த்தோம் என்றால் அதில் பல முகங்கள் தெரியும். மிக மோசமானவற்றைக் கைவசம் வைத்திருப்பவர்கள். ஜெயிலில் ஆதிக்கம் செலுத்தியவர்கள் தம்பானூரில் நிற்கும்போது முகம் தெரியாதவர் வந்து எதையேனும் செய்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை. நானும் செய்திருக்கிறேன். உடல் ரீதியாக அல்ல. வெறுமனே எச்சரிக்கை மட்டும். ஜெயிலில் விதிக்குப் புறம்பான எதையும் நான் செய்ததில்லை. ஆகவே, அதிகாரிகளுக்கு என்மீது நம்பிக்கை இருந்திருக்கும். ஜெயில் எப்போதுமே பதற்றத்துடன்தானிருக்கும். கைதியாக இருப்பவன் எப்போது வேண்டுமானாலும் தன்னுடைய தளையை அறுக்கலாம். ஒரு கலவரம் உருவானால் அதன் முதல் பலியே அதிகாரிகள்தான். இந்தப் பயத்தின் நிழல் அதிகாரிகள்மீது எப்போதுமே படிந்திருக்கும். ஆகவே, நம்பகத்தன்மை உள்ளவர்களை அதிகமாக அவர்கள் பகைத்துக் கொள்ளமாட்டார்கள்.

ஈஸ்டர், ரம்சான் போன்ற விசேஷ நாட்களில் வேலைக்கு அழைத்துச்செல்ல மாட்டார்கள். சுதந்திரமாகவும் இருக்கலாம். யாராவது கஞ்சா கொண்டுவருவார்கள். அதை இழுத்துவிட்டுப் பிரிந்து செல்வோம். இப்படியான ஒரு ஈஸ்டர் நாள். ஒரு ஹெட் வார்டன் வந்து எங்களைப் பிடித்துக்கொண்டார். ஹெட் கான்ஸ்டபிளுக்கு இணையானது இந்தப் பொறுப்பு. அவர் என்னை மட்டும் அழைத்துக் கேட்டார்:

"எங்கிருந்து கிடைச்சுது?"

"கீழ கிடந்தது."

"பொய் சொல்லக்கூடாது."

"சார்தானே பொய் சொல்ல வைக்கிறீங்க. அது கீழ கிடந்தும் கிடைக்காது; நானாகக் கொண்டு வரவுமில்லைங்குறதும் உங்களுக்குத் தெரியாதா?"

"எங்கிருந்து வந்ததுங்குறதும் இப்ப யார் கையில இருக்குங்குறதும் எனக்குத் தெரிஞ்சாகணும்."

நான் கேலிச் சிரிப்பொன்றை உதிர்த்து வைத்தேன். அதிகாரத் தோரணையுடன் கேட்பதைப் பார்த்தால் டியூட்டியை கர்மச் சிரத்தையுடன் மேற்கொள்வதுபோல் தோன்றும். உண்மையில் ஜெயிலுக்குள் நடக்கும் கஞ்சா வியாபாரத்தில் கணிசமாகப் பங்காற்றுகிற ஒரு ஆள் இவர் என்பது எல்லாருக்குமே தெரிந்த விஷயம். வேறு வழியில் வருவதாக அறிந்தால் கையோடு பிடிப்பதுடன் அந்த வழியை மூடுவதற்கான சூத்திரம் இது. நம்பிக்கையான சில கைதிகளும் இவரது கைவசமிருந்தார்கள்.

நான் சொன்னேன்: "நானொரு கைதி. வேலை செய்வது, மரியாதையாகப் படுத்துத்தூங்குவது. இதுதான் என்னுடைய வேலை. கஞ்சாவைக் கண்டுபிடிப்பதெல்லாம் உங்கள் வேலை."

"நான் பல தடவை உங்கிட்ட சொல்லிட்டேன். நீ என்கூட இருக்கணும்னு."

"நான் உங்களுக்கு எதிராக நிற்கமாட்டேன். எதிலும் தலையிடவும் மாட்டேன். எனக்கு என் வழி."

"சரி, உன்னை நான் வழிக்குக்கொண்டு வர்றேன்."

பிறகு, பரோலிலோ வேறு காரணங்களுக்காகவோ போய் வரும்போது பயங்கரமான சோதனை. வழக்கமான பரிவு இப்போதில்லை. உட்கார வைத்தும் படுக்க வைத்தும் பரிசோதனை நடந்தது. நான் ஐந்தாறு வில்ஸ் சிகரெட்கள் பாக்கெட்டில் வைத்திருந்தேன். நான் சிகரெட் கொண்டுவரும் போது தடுக்க மாட்டார்கள். சட்ட அனுமதியல்ல என்றாலும் விட்டுவிடுவார்கள். இவர் அதை எடுத்து ஒடித்து எறிந்துவிட்டார். எனக்கோ சிகரெட் என்றால் உயிர். பயங்கரமான கோபம் வந்தது. நேர்மையான அதிகாரி இதைச் செய்தால் நான் பேசாமல் போய்

விடுவேன். இவரோ கஞ்சா கடத்துவதற்குத் துணை போனதற்காக தற்காலிகப் பணிநீக்கம் செய்யப்பட்டவர். நடவடிக்கை வேறு பெயரில் மேற்கொள்ளப்பட்டாலும், கைதிகளின் வீட்டுக்குப் போய் கிடைப்பதை வடித்துக் கொட்டுகிற ஜென்மம். கைதியின் குடும்ப நிலைமை மிகவும் பரிதாபமாக இருக்கும். அங்கு நுழைந்துதான் இவர் . . . இப்படியான ஒருவனின் குணம் எப்படியிருக்கும்? அவரது அடுத்த உத்தரவு:

"இவனை உட்கார வெச்சிப் பரிசோதிக்கணும்."

என் பிளாக்கிலுள்ள டியூட்டி ஆள்தான் சோதனை செய்வதற்காக வந்தான். அவனுக்கு சிறு தயக்கம். அவன் சொன்னான்:

"சார், மணியன்பிள்ளை அப்படியெல்லாம் . . ."

ஒரு கெட்ட வார்த்தை அவனுக்கு.

நான் பான்ட் அணிந்துகொண்டு நின்றிருந்தேன். சட்டையைக் கழற்றி கையில் வைத்திருந்தேன். அதுதான் சட்டம். சாதாரணமாக, ஜெயில் அதிகாரிகளில் பெருமளவும் ஓரளவு மரியாதையுடன்தான் என்னிடம் நடந்துகொள்வார்கள். ஜெயிலுக்குள் முழுமையான மன அமைதியுடன் வாழ அதிகாரிகள் என்னை அனுமதித்திருந்தார்கள். இவரைப்போன்றவர்கள் எல்லா இடங்களிலும் காணப்படுகிற கரும்புள்ளிகள்.

ஏதாவது புதிய வழக்கில் சிக்கி இங்கே வரும்போது கேட்பார்கள்:

"மறுபடியும் வந்திட்டியா . . ?"

இயல்பான மனிதர்களாக இருந்தால்: "உங்களையெல்லாம் எவ்வளவு நாளாதான் பார்க்காம இருக்கறது?" என்பேன்.

வாரண்டுடன் சரி பார்ப்பார்கள். யாராவது பரிசோதிக்க ஆரம்பித்தால்: "அவன் போகட்டும் விடுங்க." என்று சொல்லி விடுவார்கள். இந்தச் சூழ்நிலையில்தான் இவர் ஆட்டம் போடுகிறார்.

குத்துக்காலிட்டு உட்காரச்சொல்லி மலத்துவாரத்தில் விரல் செலுத்திப் பரிசோதித்தான்.

"ஒண்ணுமில்லை சார்."

"ம் . . . அவனை அப்படியே விட்டுட வேண்டாம். ஆள் பெரிய வில்லன். டவருக்குக் கொண்டுபோய் நல்லா பரிசோதிக்கணும். விலகி நில்லுடா."

மற்றவர்களை வேகமாகப் பரிசோதனை செய்து அனுப்பினார்கள். நாங்கள் டவருக்கு நடந்தோம். திரைப்படங்களில் காட்டுகிற கலங்கரை விளக்கம்போன்ற பெரிய டவர். அதன் கீழ்ப்பகுதி அறைக்குள் பஞ்சு வைத்த காக்கி உறையிருக்கும். அதை கையில் அணிந்து குத்துவார்கள். உறைக்குள் பஞ்சு வைத்திருப்பதால் வெளிக் காயம் இருக்காது. விழுகிற கும்மாங்குத்துகளின் எதிரொலியும் கேட்காது. ஆபத்தான குத்து. அடங்க மறுப்பவர்களை கிளவுஸ் அணிந்துதான் மரியாதை கற்றுக் கொடுப்பார்கள். கைதி உதை வாங்கித் துவண்டிருப்பான். ஆனால், எந்த ஜெயில் கமிட்டியின் முன்பும் உதை விழுந்ததை நிரூபிக்க இயலாது. அங்கேதான் என்னை அழைத்துச் செல்கிறார்.

நான் சொன்னேன்: "சீக்கிரமா முடியுங்க. மத்தியானம் சாப்பிடணும். லேட்டானா சோறு கிடைக்காதுங்குறது தெரியுமில்லையா?"

முன்னால் நடந்துகொண்டிருந்த என் முதுகில் ஓங்கி ஒரு அடி. அது தோல்வியின் அறிகுறியென்பதையும் புரிந்துகொண்டேன். வேண்டுமா வேண்டாமா என்ற அங்கலாய்ப்பில் விழுந்த அடி. நான் குப்புற விழுந்தேன். தைரியம் வந்தது.

எழுந்ததும் சொன்னேன்: "தவறு செய்தா தண்டிச்சுக்கலாம். வீம்பு காட்ட வேண்டாம். அப்படிக் காட்டினா நானும் காட்டுவேன். இந்த காம்பவுண்டுக்குள்ள மட்டும்தான் காக்கி. வெளியே திருவனந்தபுரம் திறந்து கிடக்குது."

"என்னடா பண்ணிடுவே?" என்றபடி உதைக்க வந்தார். ஆனால், உதைக்கவில்லை. பயம். தோற்கவில்லையென்று காட்டி விட்டுப் பிரச்சினையை முடித்துக் கொள்வதற்கான முஸ்தீபு. சட்டையைப் பிடித்திழுத்து முகத்தில் நான்கைந்து தேய்ப்பு. அப்படியே பிடித்துத் தள்ளினார்.

"என்னை ஒருத்தனும் ஒண்ணும் பண்ணிட முடியாதுடா . . . அந்தளவுக்கு ஒருத்தனும் வளந்திடலைடா தாயோ . . ." என்று சொல்லி என்னை மற்றொருவனிடம் தள்ளிவிட்டு ஆவேசத்துடன் நகர்ந்தார். புதியவனும் ஐந்தாறு தந்துவிட்டு இடம் விட்டான்.

இதன் தொடர்ச்சியாக, பின்பொருமுறை நாங்கள் கிழக்கேகோட்டை காப்பி பார் அருகில் சந்தித்தோம். இப்போதைய புதிய அய்யப்பாஸை ஒட்டிய பகுதி. அவர் குடித்துவிட்டு இறங்கி வருகிறார். நான் உள்ளே ஏறுகிறேன். கையை குறுக்கே நீட்டினேன். அவர் திடுக்கிட்டுப் பார்த்தார். நான்.

"என்ன . . . என்ன . . .?" என்றார்.

"என்னைத் தெரியுமா?" என்று கேட்டேன்.

தெரியாது என்பதுபோல் புரள ஆரம்பித்தார்.

"நீங்க ஒரு பிக்பாக்கெட்னு நான் இப்ப சத்தம் போடப் போறேன். இந்த இடத்தில நீங்க திருடனாகவும் நான் போலீசாகவும் மாறுவோம். பாக்கிறீங்களா?" என்றேன்.

அவர் ஸ்தம்பித்து நின்றிருந்தார்.

"இந்த பாருக்குள்ள எனக்குத் தெரிஞ்ச நிறைய கிரிமினலுங்க தண்ணியடிச்சிட்டிருக்காங்க. ஜெயில்ல கிடந்தவங்களும் அதிலிருக்காங்க. கூப்பிடட்டுமா? உங்களைத் துவைச்சிச் சாணிதேய்ச்சு விட்டுடுவானுங்க பாக்கிறீங்களா?"

"மணியா, ஒரு மட்டு மரியாதை வேண்டாமா மணியா? நான் உன்னை என்ன பண்ணிட்டேன் . . . பிளீஸ் என்னைப் போக விடு, நாம இனியும் சந்திக்கப்போறவங்க . . ."

"அடிச்சா வலிக்குங்குற விஷயம் அடிக்கிறவனுக்கும் தெரிய வேண்டாமா?"

நான் கையை முஷ்டிச் சுருட்டினேன். அவர் ஆடிப்போய் பரிதாபமாக நின்றார்.

"சரி, சார், போயிடு . . ." என்றேன். திரும்பிப் பார்க்காமல் வேகமாக நடந்தார்.

இந்த மனிதர் இவ்வளவு தொடைநடுங்கியாக இருப்பாரென்று நான் நினைக்கவே இல்லை. நான் இவரை எதுவும் செய்யப்போவதுமில்லை. அந்த அளவுக்கெல்லாம் என்னை இவர் தொந்தரவு செய்து விடவில்லை.

திருடன்கள் இதையெல்லாம் ஒரு விளையாட்டுப்போலவே எடுக்க வேண்டும். கண்டவன்மீதும் கை வைத்தவன்மீதுமெல்லாம் பகைமை பாராட்டக்கூடாது. அதுபோல் கூட்டு நின்றவர்களை ஏமாற்றவும் கூடாது. அதனால்தான் ஒவ்வொரு கோர்ட்டாக மாறி மாறி பயணம் செய்ய வேண்டியதிருந்தும் போலீஸ்காரர்கள் என்னைக் கேட்டு வாங்கி பாதுகாப்புக்கு வந்தனர். ஒருதடவை ராஜன் என்ற போலீஸ்காரர் என்னைக் கேட்டு வாங்கி கோழிக்கோட்டுக்கு வரத் தயாரானார். நானும் இவரும் நல்ல கூட்டு. இரண்டு பிரதிகள் அல்லது இரண்டு போலீஸ்காரர்கள் என்ற புரிதலுடன் நாங்கள் பயணம் செய்வோம். கை விலங்கும் கிடையாது, ஒரு மண்ணும் கிடையாது. போலீஸ்காரர்களுக்கும் பொதுமக்களுக்குமிடையிலுள்ள மிகப் பெரிய வேறுபாடு இதுதான். பொதுமக்கள் ஒருபோதுமே ரிஸ்க் எடுக்க விரும்ப மாட்டார்கள். அவர்களைப் பொறுத்தவரைக்கும் திருடன் எப்போதுமே திருடன்தான். எந்த நிமிடத்திலும் அவன் நிறம் மாறலாம். போலீஸ்காரர்கள் அப்படியல்ல, எல்லாவற்றையும் சந்தேகிப்பார்கள்; எல்லாவற்றையும் நம்பவும் செய்வார்கள். அரக்க குணமும் தேவ குணமும் ஒருங்கே பெற்ற ஜென்மம் அது.

என்னை ராஜனிடம் ஒப்படைக்கும் தகவல்களை எழுதி முடித்த அதிகாரி: "இந்தா, உன் சக பிரதி" என்று ராஜனிடம் சொல்லிவிட்டு என்னிடம் கேட்டார்: "டேய், இப்போதைக்குத் தீருமாடா உன் வழக்குகள்லாம்? நிறைய இருக்கே . . . 2010லேயாவது வெளியே வந்துடுவியா?"

"சிரமம்தான். முயற்சி பண்ணணும்" என்றேன்.

ராஜனிடம் கேட்டார்: "போற வழியில இவன் தப்பிச்சுட்டான்னா என்ன பண்ணுவே? மனுஷன்தானே, அப்படித் தோணலாமில்லையா?"

ராஜன் சார் சிரித்தார். நியாயமான கேள்வி. நான் போலீஸ்காரனாக இருந்தால்கூட துணிந்து இப்படியொரு ரிஸ்க் எடுக்க மாட்டேன். கை விலங்கு அணிவிக்காமல் அழைத்துச் செல்லவும் மாட்டேன். ராஜன் சார் வண்டியில் உட்கார்ந்துகொண்டு சிகரெட்டும் சாயாவும் வாங்க என்னை அனுப்பி வைப்பார். என்னைப் பற்றிய எந்தப் பயமும் இவருக்கில்லை.

"இல்லை, தெரியாமதான் கேட்கிறேன். என்ன பண்ணுவே? கவனமாக இருந்தால் கஷ்டப்பட வேண்டியதில்லை. நாமெல்லாம் நிறைய பார்த்தவங்க . . ." என்றார்.

ராஜன் சார் சொன்னார்: "என் பிள்ளைகளோட ஆகாரம். அதை இல்லாம பண்றவன் அனுபவிப்பான். நான் ஒருத்தனை நம்புறேன். எல்லாரையுமே சந்தேகப்பட்டு வாழ முடியாதில்லையா . . . ஏதோ ஒரு நம்பிக்கை. அவ்வளவுதான்."

அதிகாரி சொன்னார்: "மனுஷன் குரங்கிலேருந்து பிறந்தவன். அதனோட மிச்சம் மீதிகள் எப்பவுமே மனசுக்குள்ள இருக்கும். இதை ஞாபகத்தில வெச்சுருக்குறது நல்லது."

ராஜன் சார் சிரித்தார்: "எதையும் யாராலயும் தடுத்திட முடியாது சார். ஒருத்தன் போகணும்னு முடிவு பண்ணிட்டான்னா நாம என்னதான் கவனமாக இருந்தாலும் போயிடுவான்."

ரெயிலில் கோழிக்கோடு நீதிமன்றத்துக்குப் போகும்போது இவர் மட்டும்தான் வருவார். டியூட்டியில் இன்னொருவரும் இருப்பார். ஆனால், அவர் படியும் வாங்கி வீட்டில் போய்ப் படுத்துத் தூங்குவார். சில போலீஸ்காரர்களுக்கும் திருடன்களுக்குமிடையே இப்படியான சில விசித்திர புரிதல்கள் இருக்கும். ரெயிலில் முதல் வகுப்பில்தான் பயணம். அது காலியாகக் கிடக்கும். டிடிஆரிடம் சொன்னால் போதும். ராஜன் சார் சிறுநீர் கழிக்கவோ வேறு எதற்காகவோ போகும்போது, கை விலங்கு, நீதிமன்றத்தில் ஒப்படைக்கவேண்டிய என்னுடைய பேப்பர்கள் எல்லாம் ஒரு பிளாஸ்டிக் கவரிலிடப்பட்டு என் கையில்தானிருக்கும். பிறகேன் தப்பித்து விடவில்லை என்றொரு கேள்வி உருவாகும். இது என்னிடம் நானே கேட்கிற ஒரு கேள்வியும்கூட. அதற்கான பதில் இன்றுவரை எனக்கும் தெரியவில்லை. நான் புனித ஆத்மாவொன்றுமில்லை என்பது தெரிந்த விஷயம். போலீஸ்காரனுடைய குழந்தைகளின் ஆகாரம் முடங்கி விடக்கூடாதென்ற நல்ல எண்ணமும் இதற்கானக் காரணமில்லை. ஒரு திருடன் இப்படியான விஷயங்களில் சஞ்சலப்படமாட்டான். ஆனால், வேறு சில காரணங்கள் இருந்திருக்கலாம். அதிலொன்று திருடனும் போலீசும் ஒரே இலாகாவைச் சேர்ந்தவர்கள் என்ற எண்ணம். திருடன் ஒரு அர்த்தத்தில் அரை போலீஸ்காரன். காவல் நிலையமும், நீதிமன்ற வளாகமும் சிறைச்சாலையும்தான் இரு தரப்பினரது வாழ்க்கையும். திருடனின் தொடர்புகள் அனைத்தும் போலீஸ்காரர்களுடன்தான். அவர்களை ஏமாற்றிவிட்டு அவனால் வாழ முடியாது. போலீஸ்காரர்களை ஏமாற்றிய பிறகு திருடனாக கேரளத்தில் வாழ்வதில் பொருளில்லை. அதன் பிறகு பிடிபட்டால் எப்போதும் அவன்மீது சந்தேக நிழல் படிந்து கிடக்கும். கெட்ட கெட்ட வார்த்தைகளின் அபிஷேகத்தால் மனரீதியாக மேலும் அவன் ஒடுங்கி விடுவான். இது வேதனைக்குரிய ஒரு நிலை.

இதுவே காரணமாக இருக்கக் கூடும். மட்டுமல்ல, பரோலில் தலைமறைவாவதற்கான வாய்ப்புக்கள் நிறைந்த கேரளத்தில் தேவையில்லாமல் இது எதற்கு? பயப்படாமல் தலைமறைவாகலாம். யாருக்கும் எந்தச் சேதாரமுமில்லை. தனிப்பட்ட முறையில் எந்தப் போலீஸ்காரனுக்கும் இழப்பில்லை. ஆகவே தான் நான் பரோலில் தலைமறைவாவதைத் தேர்வு செய்தேன்.

ஒத்து விளையாட்டு: ஜெயில்களில் போதைப் பொருட்கள் கிடைப்பதில் எந்தச் சிரமமுமில்லை. ஆற்றிங்கல் சப் ஜெயிலிலிருக்கும்போது ஒருமுறை கொஞ்சம் குடிக்க வேண்டும் போலிருந்தது. கான்டீனில் இருப்பவர்களிடம் ஆசையைச் சொன்னேன். மறுநாள் ஒரு குவார்ட்டர் வந்தது. சில நேரங்களில் விலை இரு மடங்காக இருக்கும். கான்டீனுக்கு வரும் காய்கறிகளினிடையே வைத்துக்கொண்டு வருவார்கள். இதைத் தவிர வேறு பல வழிகளுண்டு. கொல்லம் சப் ஜெயிலிலும் திருவனந்தபுரம் சப் ஜெயிலிலுமெல்லாம் நான் குடித்திருக்கிறேன். இடையிடையே வந்தும் போயும் ஜெயிலுக்குள் கஞ்சா வியாபாரம் செய்பவர்களுமுண்டு. ஜெயிலுக்குள் பணியிடங்களிலும் மற்றும் வேலைகள் பார்க்கும் கீழ்மட்ட சிவிலியன் பணியாளர்கள் இதற்கான இன்னொரு கண்ணி. அவர்களது வீட்டு முகவரிக்கு உறவினர்களோ மற்றவர்களோ ஆயிரம் ரூபாய் அனுப்பி வைத்துவிட்டுக் கடிதத்தில், இன்னாருக்கு இத்தனை கிராம் கஞ்சா இத்தனை தடவைகளாகக் கொடுக்கவும் என்று குறிப்பிட்டால் போதும். மிகச் சரியாக அது வந்து சேரும். இப்படிக் காசு பார்க்கும் சில ஊழியர்களும் இருந்தார்கள். நானொரு முறை ஜெயில் கான்டீனில் நடக்கும் ஊழல்களைக் குறிப்பிட்டுக் கண்காணிப்பாளருக்குக் கடிதம் எழுதினேன். இதற்குப் பழித் தீர்ப்பதற்காக அதிகாரி ஒருவர் வேறேதோ காரணத்தைச் சொல்லி என்னைத் தனிமையறைக்குள் தள்ளினார். அதனுள்ளிருக்கும் ஏகாந்தவாசம் ஒரு சுகமான அனுபவம்தான். ஆனால், அதிலொரு ஆபத்தும் இருக்கும். ஒரு சில நாட்களில் அதில் இன்னொருவனும் வந்து சேருவான். அவன் பழி தீர்க்க நினைக்கும் அதிகாரியின் கையாள். அவன் அன்றிரவு கூட இருப்பவனை உதைத்து ஒரு வழியாக்கி விடுவான். ஆரோக்கியமெல்லாம் குறைந்துகொண்டிருந்த வயது. புதிய புதிய பையன்மாரின் வருகை நிகழ்ந்துகொண்டிருந்தது. அவர்களது கையில் கிடைப்பது அவ்வளவு சரியாக இருக்காது. தனிமையறையில் என்னுடன் பிரபல ரௌடியான விஜயனை அடைத்தார்கள். வந்ததுமே லொள்ளு பண்ண ஆரம்பித்து விட்டான். எனக்குப் புரிந்துவிட்டது. இன்றிரவு இவன் என்னை இரத்த மலம் கழிக்க வைப்பான். சாயங்காலம் அந்த அதிகாரி

டியூட்டிக்கு வந்ததும் நான் சொன்னேன்: "சார் அனுப்பி வெச்ச ஆள் வந்திருக்கான். பரவாயில்லை. என்னோட நிலைமை இன்னைக்கு அவ்வளவுதான்."

"நான் அனுப்பி வெச்சனா? தேவையில்லாம பேசுனா தெரியுமில்லே . . ." அவர் கையை ஓங்கிக்கொண்டு நெருங்கினார்.

நான் சொன்னேன்: "பரவாயில்லை சார், அவனுக்குப் பயந்து நான் இன்னைக்குத் தூங்காம இருக்கப்போறதில்லை. ஏதாவது பண்றதா இருந்தால் அப்படியே தீர்த்துக்கட்டிடச் சொல்லுங்க. நான் உயிர்ப் பிழைச்சு வெளியே போன பிறகு என்னை மலப்புரத்தில பிடிச்சா நீங்களும் வருவீங்க. என் கை விலங்கைப் பங்குபோடுறதுக்கு. இரண்டாவது பிரதியாக. இப்படி, நான் எங்கெல்லாம் போய் திருடினேனோ அங்கெல்லாம் நீங்களும் வருவீங்க. எனக்கு இழக்குறதுக்குன்னு எதுவுமில்லை. திருடனும் ஜெயில் அதிகாரியும் கூட்டுன்னு பத்திரிகையில வர்ற செய்தியை அழுத்தம் கொடுத்துப் பிரசுரிப்பாங்க. நான் செய்வேன்னு சொன்னா செய்திருப்பேன். செய்துமிருக்கேன்."

"தேவையில்லாமப் பேசாதே, அப்படி நான் யாரையும் அனுப்பி வைக்கல."

சாயங்காலம் வேலை முடிந்து போகும்போது விஜயன் முகத்தில் பால் பொங்கி வழிய நிற்கிறான்.

"சார் என்ன சொன்னார்?" என்று கேட்டேன்.

"எந்த சார்?"

"என்னை உதைக்கிறதுக்காக உன்னை அனுப்பி வெச்சாரே அந்த சார்?"

"என்ன மாப்ளே . . . நாமெல்லாம் கைதிகளில்லையா . . . நமக்குள்ள ஒற்றுமை வேண்டாமா?"

"இது எப்போதுமே ஞாபகத்திலிருக்குறது நல்லது."

சார் வந்து இவனிடம் எதுவும் செய்துவிட வேண்டாமென்று சொல்லியிருக்க வேண்டும். இப்படியெல்லாம்தான் பிழைத்துக் கிடந்தேன். பெரிய பிரச்சினைக்குரிய வழக்குகளில் கைதியாக வருபவர்களிடம்

இவர்களுக்குப் பயம் உருவாகும். சித்தரவதை செய்வதன் மூலம் அவர்களை அடக்கி வைக்க நினைப்பார்கள். இதன் பலன், கோழையாக வருபவனும் வீரனாக மாறுவதுதான். ஏற்றுமானூரப்பனைத் திருடிய ஸ்டீஃபனை சப் ஜெயிலுக்குக் கொண்டு வந்து உருட்டி, குப்புறப் படுக்க வைத்து, துப்பாக்கிக் கட்டையால் இடித்துத் துவைத்துப் பக்குவம் செய்த ஈஞ்சைப் புல்போல் திரும்ப வார்டுக்குக் கொண்டுவந்தார்கள். பிரமிக்க வைக்கும் அவனது உடல் கட்டை இடித்துக் கலக்கியிருந்தார்கள். நான்தான் எண்ணெயிட்டுத் தடவி, சதைவுகளைச் சரிப்படுத்தினேன். கொலை வழக்கிலும் திருட்டு வழக்கிலுமெல்லாம் இவன் தண்டிக்கப்பட்டான். இருந்தபோதும் இன்றும் ஆச்சரியமாக உயிர் வாழ்கிறான். சொல்லாலோ செயலாலோ யாரையும் வேதனைப்படுத்தாதவன். எந்தவிதமான கெட்டப் பழக்கங்களும் கிடையாது. சில கெட்ட காலங்களில் எப்போதாவது ஏதாவது தோன்றும். யாராவது செய்ய வைப்பதுபோல். நியதிகள்போல். இப்போது நல்லவனாக வாழ்கிறான்.

கீப்பு: கேரளத்தின் ஜெயில் வாழ்க்கையைப் பற்றிய நேர்மையான சில காட்சிகளோ தகவல்களோ இருப்பது பாலுமகேந்திரா இயக்கத்தில் வெளியான யாத்ரா சினிமாவில்தான். அதில் கைதிகளினிடையே நிலவும் சுயபாலின தொடர்பைப் பற்றிய தகவல்களை மிகுந்த கலைநயத்துடன் சொல்லியிருப்பார். ஒரு முதியவருக்கும் இளைஞனுக்குமிடையிலான தொடர்பு என்பதாக நினைவு. முதியவர் ஜெயில் டவரின்மீதிருந்து குதித்துத் தற்கொலை செய்துகொண்ட நிலையில் இளைஞனின் சோகத்தை அற்புதமாகக் காட்சிப்படுத்தியிருப்பார். இதுபோன்ற ஏராளமான தொடர்புகள் ஜெயிலுக்குள் உண்டு. பாலியல் எதிர்பார்ப்பையும் உற்சாகமான மன நிலையையும் உருவாக்குகிற சிலர் எப்போதுமே இருப்பார்கள். சுதந்திரமாக வெளியே இருக்கும் சமூகத்தினுள் இது பல்வேறு வகைகளில் செயல்படுமென்றால் பாலியல் வறட்சியை அனுபவிக்கும் ஜெயில் நிலைமை என்னவாக இருக்கும்?

ஒரு புதுப் பையன் ஜெயிலுக்கு வந்தால் அவனைக் கவனித்துக்கொள்வதில் பெரும் ஆர்வம் காட்டுவார்கள். மனைவியைச் சீராட்டுவது போல் அவனது முழுச்செலவையும் ஏற்று தன்னுடைமைபோல் கூட்டிக்கொண்டு நடப்பவர்களுமுண்டு. பையனுக்கு வில்ஸ் சிகரெட் கொடுத்துவிட்டு இவர்கள் துண்டு பீடி இழுப்பார்கள். கான்டீனில் கிடைப்பதில் பகுதியை இந்தப் பையனுக்குக் கொடுத்துவிடுவார்கள். குளிக்கும்போது அவனையும் குளிப்பாட்டி

விடுவார்கள். இதில் வெட்கமெல்லாம் பார்க்க மாட்டார்கள். மற்றவர்களிடமிருந்து சில கமெண்ட்கள் வரும்தான். இதை மறைத்து வைக்கவெல்லாம் முயற்சி செய்ய மாட்டார்கள். மட்டுமல்ல, ஜெயிலில் ஒரு பிரிவினர் இதை பெருமையாகவும் நினைத்துக்கொள்வார்கள். இதெல்லாம் திருடன்களிடையில் மட்டும்தான். கொலைக் குற்றவாளிகள் இதிலிருந்து விலகி நிற்பார்கள். இவர்களில் குறிப்பிட்ட சதவிகிதத்தினர் விஷயம் தெரிந்தவர்களாகவும் ஆரோக்கியமான மனநிலையுள்ளவர்களாகவும் இருப்பார்கள். சூழ்நிலையின் அல்லது கோபத்தின் ஒரு பலவீன நிமிடத்தில் குற்றமிழைத்திருப்பார்கள். இவர்களில் 99 சதவிகிதத்தினரும் நல்லவர்கள்தான். நாங்கள் இப்படியல்ல, குற்றவாசனை இரத்தத்தில் கலந்தவர்கள். நாங்கள் வருவோம், போவோம், வருவோம்.

கைதிகளில் வெளிப்படும் பாலியல் ஆர்வம், சிலரிடம் தீவிரமாகச் செயலாற்றும். ஜெயிலில் ஏதோ தேவைக்காக வந்த ஒரு அழகான பெண்ணின் பாதம்பட்ட மண்ணெடுத்து ஒரு நேர சுய இன்பத்துக்குத் தூண்டுதலாக வைத்துக்கொண்ட கைதியும் உண்டு.

வில்லன்: ஜெயிலில் நான் பார்த்த குற்றவாளிகளின் உலகம் வேடிக்கையானதும் சிரிப்பை மூட்டுவதும் அழ வைப்பதுமாகும். மிக மோசமான ஜெயில் அனுபவங்கள். கிரிமினல்களின் கூடாரமென்று ஜெயிலைக் குறிப்பிடுவோமில்லையா? அங்கே எந்நேரமும் சண்டையும் சச்சரவுமாக இருக்குமென்று கருதிவிட வேண்டாம். மிகுந்த ஒற்றுமையுடன் கூட்டுறவாக வாழுமிடம் இது. மற்றபடி, சமூகத்திலுள்ள எல்லாக் கோளாறுகளும் இங்கும் இருக்கும். இதில் பெருமளவும் ஜெயில் அதிகாரிகளால் உருவாக்கப்படுபவை. பிரித்தாள்வதுதான் அவர்களது நிர்வாக முறை. குற்றவாளிகள் ஒற்றுமையாக இருந்தால் அவர்களைக் கட்டுப்படுத்துவது சிரமமான காரியம். இருந்தாலும் கைதிகளில் பெரும்பான்மையும் ஒற்றுமையோடுதான் வாழ்வார்கள். இன்று அரசியல் கைதிகளின் தலையீட்டில் அனைத்தும் தாறுமாறாகி விட்டன. சிபிஎம். ஆளும்கட்சியாக இருந்தால் இடதுசாரிகளின் மேலாண்மையும், காங்கிரஸ் ஆளும்கட்சியாக இருந்தால் ஆர்எஸ்எஸ்சின் மேலாண்மையும் அதிகமாக இருக்கும். அப்போதெல்லாம் ஜெயிலில் திருடன்களும் கொலைகாரன்களும்தான் அதிகமாக இருப்பார்கள். இதில் திருடன்களின் மேலாண்மை அதிகமாக இருக்கும்.

கொலைக்குற்றவாளிகள் சூழ்நிலைக் கைதிகள். கணநேரக் கோபத்தில் நிகழ்ந்துபோன குற்றம். திருடன்களுக்கு ஜெயிலென்பது சொந்த

வீடுபோல். அவ்வப்போது வெளியே எங்காவது சுற்றுப்பயணம் போவான், அல்லது அவ்வப்போது ஜெயிலுக்கு வருவான்.

கேரளத்தின் கொம்பன்கள் சிலர் நான் ஜெயிலிலிருந்த காலத்தில் என்னுடன் இருந்திருக்கிறார்கள். 'மெட்ராசில் மோன்' திரைப்படமெடுக்க யோசனை சொன்ன ரெனிஜார்ஜும் நண்பர்களும் . . . ஏற்றுமானூரப்பனை வேரோடுப் பிடிங்கிச் சென்ற ஸ்டீஃபனும் குழுவினரும் . . . மேலும் புகழ்பெற்ற திருடன்கள் பலரும் . . .

எனக்கு ஆஸ்துமா நோயிருந்தது. இது ஒருபோதும் தீராத வியாதி. ஆனால், ஜெயிலுக்குள் இந்த வியாதி அதிர்ஷ்டம். சிறு அளவிலான சுத்தம் செய்தல், கான்டீன் பொறுப்புபோன்ற மேனிகுலையா வேலைகள் மட்டுமே எனக்கு. ஆஸ்துமாதானே என்ற அசிரத்தை கூடாது. சில நேரங்களில் ஆளையே காலி செய்து விடுமென்று டாக்டர்களே சொல்லிவிட்டார்கள்.

சட்டவிரோதமென்று எதுவெல்லாமிருக்கிறதோ அதுவெல்லாம் சென்ட்ரல் ஜெயிலில் அன்றும் இன்றும் கிடைக்கும்.

போதை மருந்து நுகர்பவர்களையும் கொண்டு வருபவர்களையும் அதன் வினியோகத்தையும் பாதுகாக்கவும் முறைப்படுத்தவும் திறைமைபெற்ற ஒரு குழுவினர் ஜெயிலில் எப்போதுமே இருப்பார்கள். குலாம் முகம்மது, ரஷீது, குணசேகரன், கீப்லோ டானியல் போன்றவர்கள் நினைவுக்கு வருகிறார்கள். இவர்கள்தான் அன்றைய போதை மருந்து குழுவினர்.

குறிப்பிட்ட நேரத்தில் இவர்கள் ஒன்று கூடுவார்கள். சில வார்டன்கள் கண்களை மூடிக்கொள்வார்கள். முரண்டு பிடிப்பவராக இருந்தால் கூடுகை நேரம் மாற்றி வைக்கப்படும். சாதாரணமாக காலை எட்டு முதல் ஒன்பதுவரைதான் இதற்கான நேரம். பஞ்சீசு விளையாட்டு, எட்டு விளையாட்டு போன்றவையும் இதனுடன் சேர்ந்து நடக்கும்.

ரெனிஜார்ஜ்: இவன் முன்பெல்லாம் மகாமோசமான ஆள். இப்போது அடியோடு மாறிவிட்டான். பெங்களூருவில் பைபிள் வகுப்பு நடத்துகிறான். உலகிலுள்ள நல்ல மனிதர்களில் இப்போது இவனும் ஒருவன். பெரிய கிரிமினல்கள் மாறினால் அது பெரிய மாற்றமாகவே இருக்கும். நான் ஒரு சுற்றுப்பயணத்தை நிகழ்த்திக் கொஞ்சம் ஓய்வெடுத்துவிட்டு அடுத்தப் பயணத்திற்கான ஆயத்தங்களில் ஈடுபட்டிருந்த மூன்று வருட காலத்தினுள் ரெனியிடம் நிறையவே மாற்றம்

நிகழ்ந்திருந்தது. அவன் பெந்தகொஸ்தேவுக்கு மாறியிருந்தான். பிறகு, ஜெயிலுக்கு வருகிற கைதிகளுக்கு பெரிய உபதேசியாக ஆனான். அதற்கான தகுதியும் அவனுக்கிருந்தது.

கேப்டன் ஜோஸ்: இவன் எங்கள் ஊர்க்காரன்தான். கொல்லத்தைச் சேர்ந்தவன். பாலமந்திரத்தில் உடற்பயிற்சி ஆசிரியர். நல்ல திருடன்கள் தலைமைத்துவப்பண்பும் மனவுறுதியும் உள்ளவர்களாக இருப்பார்கள். எப்படியோ வழி தவறிப்போய் விடுகிறார்கள். கேப்டனும் இப்படித்தான். பாலமந்திரம் முதல், ஜோஸ் தன்னை கேப்டன் என்றுதான் சொல்லிக்கொள்வான். போலீஸ்காரர்களுக்கும் ஒரு அடைமொழி வேண்டாமா? அவர்களும் அதை மறுக்கவில்லை:

"சரி, அப்படின்னா அப்படி. கேப்டன்னே வெச்சுக்குவோம்."

கேப்டன், தனித்துவமுள்ள ஒரு திருடன். பூஜைப்புரையில் டாக்டர் வல்யத்தானின் வீட்டில் நுழைந்துத் திருடிவிட்டு: 'இழந்ததை எண்ணி வருத்தம் வேண்டாம்; ஈடுகட்டுவதற்கு வழி தேடு' என்று எழுதி வைத்தான். ஆனால், தனித்துவமுள்ள திருடன்களைப் பிடிப்பது வெகுசுலபம். இது போன்ற ஏதாவதொரு கலைநயத்தை அவர்கள் அதில் காட்டி வைத்திருப்பார்கள். புதுமைகளுக்கான வேட்கையாளர்கள் இவர்கள். இப்படித்தான் கேப்டன் கேரளத்தில் முதன்முறையாக நீதிமன்றத் திருடனாக மாறுகிறான். இந்தப் பதவியை அலங்கரிக்க இவனுக்குப் பிறகு யாரும் கேரளத்தில் பிறக்கவில்லை. பெற்ற பெயருக்கான காரணம் இதுதான்:

சங்கனாச்சேரியில் வைத்து கேப்டன் ஒரு பெண்ணுடன் அறிமுகமாகிறான். ஒன்று சேர்கிறார்கள். அவளும் சாதாரணப்பட்டவளில்லை. பொன்குன்னம் சபையில் ஒரு ஃபாதருடன் அவளுக்கு சிறு ஒட்டு ஏற்பட்டிருந்தது. கையில் காசில்லாமலிருந்தால் அவள், வா, நாம் ஃபாதரைப் போய்ப் பார்ப்போம் என்று கேப்டனை அழைத்துச் செல்வாள். பெண்ணின் சகோதரன் என்று சொல்லி கேப்டன் போய் ஃபாதரை மிரட்ட ஆரம்பித்தான். அங்கியைக் கழற்றி வைத்துவிட்டு இந்த இடத்திலேயே அவளை விவாகம் செய்தாக வேண்டுமென்று நிலையாக நின்றான். கடைசியில் வேறுவழி தெரியாத ஃபாதர் ஐம்பதாயிரம் ரூபாய்க்கான ஒரு காசோலை எழுதிக் கொடுத்தார். இனி எந்தவிதமான ஒட்டோ உறவுகளோ வைத்துக்கொள்ளலாகாது என்ற உடன்படிக்கையுடன் அவர்கள் பிரிந்தார்கள். காசோலையுடன் வரும் வழியில் பொன்குன்னம் தேவசகாயம் என்றொரு ஓட்டலில் அவர்கள் ரூம் போட்டார்கள். அங்கே

ரப்பர்ஷீட் திருட்டு வழக்கிலுள்ள இரண்டு பிரதிகள் தங்கியிருந்தார்கள். இவர்கள் இருவரும் கேப்டனின் துர்குண போதனையின் சீட கோடிகள். ஓட்டலை ரெய்டு செய்தபோது கேப்டனும் துணைவியும் பிடிபட்டார்கள். சீடகோடிகளுக்குக் கிடைத்த அடியின் வீரியத்தில் அவர்கள் கேப்டனைப் பற்றி விலாவாரியாகச் சொல்லிவிட்டு ஆனால், இதில் அவனுக்குப் பங்கில்லை என்றும் சொன்னார்கள்.

அதனால் என்ன, திருடன்தானே? பெட்டிக்கேசில் கேப்டனையும் பிடித்து உள்ளே போட்டார்கள். காசோலையும் கையிலிருந்தவையும் நீதிமன்றத்தில் ஒப்படைக்கப்பட்டன. ஃபாதரை ஏமாற்றி வாங்கிய காசோலை. விசாரித்தால் சிக்கல். அதைத் திருடியே தீர வேண்டும். எப்படித் திருடுவது? அரசால் கைப்பற்றப்படும் பொருட்கள் அந்தந்த நீதிமன்றங்களில் பாதுகாக்கப்படுவது வழக்கம். நீதிமன்றங்களில் இதுபோன்ற பொருட்களை வைத்திருக்கும் அறைகளுக்குக் காவலுக்கு ஆள் நியமித்திருக்க மாட்டார்கள். கேப்டன் அதற்குள் நுழைந்ததும் ஸ்தம்பித்து விட்டான். அரியதொரு நிதிக்குவியலே அங்கிருந்தது. காசோலையை மட்டுமல்ல, அங்கிருந்து கொஞ்சம் பொருட்களையும் எடுத்துக்கொண்டான். பிறகு, தன்னுடைய தேவைகளுக்கு அவன் நீதிமன்றங்களை நாடினான். பெரிய ஆள்போல் போலீஸ் பந்தோபஸ்துடன் நீதிமன்றங்களுக்கு அழைத்துச் செல்லப்படுவது கேப்டனுக்கு மிகவும் பிடிக்கும். ஆகவே, இரண்டு போலீஸ்காரர்களுடன் அழைத்துச் செல்லவிருந்தால் எச்சரிக்கை விடுப்பான். "வாய்ப்புக் கிடைத்தால் நான் தப்பித்துவிடுவேன்." பிறகு, பாதுகாப்புக்கு எஸ்ஐயும் ஒரு ஜீப்பும். போலீஸ் எஸ்கார்ட் இருந்தால்தான் திருடனுக்கு மதிப்பு என்பது கேப்டனின் வாதம்.

*

உன்னுடைய வழக்கை நீயே வாதிப்பதில் பல ஆபத்துகள் இருக்கிறதென்று பலரும் பயமுறுத்தியிருக்கிறார்கள். ஆனால், ஆபத்துகளை விடவும் அனுகூலங்கள்தான் அதிகம். போலீஸ்காரர்கள் சொல்லிக்கொடுத்து அழைத்துக்கொண்டு வந்த எதிர்த்தரப்பு சாட்சிகளை நான் நேரடியாக குறுக்கு விசாரணை செய்வதில் பல நன்மைகள். சாட்சிகள் மிரண்டு போயிருக்கிறார்களா இல்லையா என்பதைப் புரிந்துகொள்ளவும் முடியும்.

"நீங்க சொல்றதெல்லாம் உண்மைதானா?"

"ஆமா."

"பொய் சாட்சி சொன்னா ஆறு மாதம்வரை தண்டனை கிடைக்கும் தெரியுமா?"

சாட்சிக்கு ஒருவேளை இது புதிய தகவலாகவும் இருக்கும். ஏற்கனவே சொல்லித் தந்திருப்பதில் பாதி அப்போதே மறந்து விடும்.

அடுத்த உபதேசம்: "அந்த ஆறுமாதத் தண்டனையை ஒருவேளை என்கூட சேர்ந்து அனுபவிக்க வேண்டியதாகவும் இருக்கும். நினைவிருக்கட்டும்."

ஓரளவிலான தைரியமுள்ளவனுக்கும் அப்போது உள்கலக்கம் ஏற்பட்டுவிடும்.

1977 - '78களுக்குப் பிறகுதான் எனக்குள் குடும்பஸ்தனாக வாழ வேண்டுமென்ற ஆசை உருவானது. அறுபது பவுன் நகை திருடிய ஒரு வழக்கில் வாதியிடம் கேட்டேன்:

"உங்களுக்குப் பரம்பரையாகக் கிடைச்ச நகைகள்னு சொன்னீங்க. பரம்பரைன்னா . . ?"

"பதினைந்து வருஷம் . . ."

"பதினைந்து வருஷமானதும் உங்கக் குடும்பத்திலுள்ள பெண்கள் பிரசவிப்பாங்களா?"

நீதிமன்றத்தினுள் சிரிப்பலைகள் படரும். நீதிபதியின் ஆர்டர் வரும். சாட்சி பதினைந்தை முப்பதாக்குவார். நான் நீதிபதியிடம் சொன்னேன்:

"இது முப்பது வருடப் பழக்கமுள்ள ஆபரணமா, இல்லை புது ஆபரணமான்னு இதன் தேய்மானத்தை மாண்புமிகு நீதிமன்றம் தயைகூர்ந்துப் பரிசோதிக்கணும்."

விசாரணை தள்ளி வைக்கப்படும்.

அதற்குள் சாட்சித் தரப்பு வக்கீல் வாதிகளிடம் ஓடுவார்:

"உங்களோட பொருள் கிடைக்கணும்னா உடனடியா அவனைப் பாருங்க."

பத்து பவுன் நகையைத் திருடி விற்றிருந்தேன் என்றால் வாங்கிய தட்டான் உடனே அதை உருக்கி, தங்கமாக்கி விடுவான். பிறகு, போலீஸ் வரும்போது, எடைக்கு எடை அதுபோலொரு நகையைச் செய்து தருவான். இதுதான் வழக்கம். சில நீதிபதிகளுக்கு இது தெரியும். இவர்களிடம் என்னுடைய வாதம் செல்லுபடியாகாது. ஆனால், சட்டத்தை மிகக் கறாராகக் கையாளும் பெரும்பாலும் நீதிமன்றங்கள் இந்த வாதத்தை அப்படியே ஏற்றுக்கொண்டுவிடும். கொல்லம் சப் ஜெயிலில் சாட்சித் தரப்பினர் அதாவது, திருட்டுக்கொடுத்தவர்கள் மூவாயிரம் ரூபாயுடன் என்னைப் பார்ப்பதற்காக வந்தார்கள். ஒரு கைதி, சப் ஜெயிலில் இவ்வளவு ரூபாய் வைத்திருக்கவும் கூடாது. இருந்தாலும் இதுபோன்ற சமரசங்கள் இல்லாமல் முடியுமா? என்னைப் பிடித்த எஸ்ஐ. சொன்னார்:

"டேய் மணியா, உனக்குக் கிடைக்க வேண்டியது கிடைச்சாச்சு, போக வேண்டியது போயுமாச்சு. இனி அந்த நகையை யாருக்கும் உபயோகப்படாம ஏன் பண்ணணும் . . ? குற்றத்தை ஒப்புக்கொண்டுடு."

"சரி, நான் ஒப்புக்கொண்டா சாருக்கு எத்தனை பவுன் தேறும்?"

"போடா, இப்ப நீ ஒப்புக்கொள்றியா, இல்லையா?"

"இல்லைன்னா . . ?"

"சே . . . ஒப்புக்கொள்ளுடா அதை."

ஒப்புக்கொண்டு ஒரு ஆறுமாதம் உள்ளே இருப்பேன்.

இப்படியான ஒரு கட்டத்தில் ஐஜி செல்வராஜ், கொல்லம் சப் ஜெயிலைப் பார்வையிடுவதற்காக வந்தார். அன்று ஐஜிதான் ஜெயிலின் உயரதிகாரி ஏற்கனவே எங்களுக்குள் சென்ட்ரல் ஜெயிலில் வைத்து அறிமுகமிருந்தது. கைதிகளின் அணிவகுப்பு நடந்தது. என்னருகில் வந்தார். நான் தலை குனிந்து நின்றிருந்தேன்.

"முகத்தை உயர்த்துடா." என்றார் வார்டன். உயர்த்தினேன்.

"ஆங் . . . இது யாரு, பிள்ளையா? சௌக்கியமாயிருக்கியா?"

"சௌக்கியமே இல்லை சார். ஒரு சௌக்கியமுமில்லை. செய்ற வேலையில ஒரு ஒழுங்கோ நேர்த்தியோ வேண்டாமா சார் . . ?"

"பிரதீப், பிள்ளை நம்ம ஆளு. ஏதாவது கம்பிளெயின்ட் சொன்னா கொஞ்சம் காது கொடுத்துக் கேளுங்க." சார் கேலியாகச் சொல்லிவிட்டு நகர்ந்தார்.

சிங்காரவேலு ஐஜியாக இருக்கும்போதுதான் ஏ.பி. உதயபானு கமிட்டியின் ஜெயில் சீர்திருத்தம் வந்தது. அன்று நான் விரிவான ஒரு கடிதமெழுதினேன். கைதிகளாக இருக்கும் மாணவர்களுக்கு மேற்கொண்டு படிப்பதற்கான வசதிகளை ஏற்படுத்திக்கொடுக்க வேண்டுமென்று அதில் குறிப்பிட்டிருந்தேன். நான் எழுதியதால் நடந்தது என்றல்ல, இருந்தாலும் இதுபோன்ற சில நல்ல விஷயங்கள் நடந்தன. உணவின் அளவு அதிகரித்தது. எரிப்பும் புளிப்பும் அதிகமானது. இரவிலும் சோறும் துவரனும் என்றிருந்த நிலைமை மாறியது. ஜெயிலுக்குள் நான் அதிகமாக உதை வாங்கியது கைதிகளுக்கு வயிறு நிறைய உணவுக்காகப் போராடியதற்காகவும் கடித மெழுதியதற்காகவும்தான்.

முன்பெல்லாம் நீதிமன்றங்கள்கூட திருடன்கள் சொல்வதற்குக் காது கொடுக்காமல்தானிருந்தன. நான் வாதம் செய்த பல வழக்குகளிலும் இதைக் கவனித்திருக்கிறேன். முன்பெல்லாம் நிக்கரும் சட்டையும்தான் உடை. ஏதோ அளவுகளில் தைத்து வைத்திருப்பார்கள். சினிமாவில் சார்லி சாப்ளின் அணிவதுபோல். 16 வயதுப் பையனுக்கு அறுபத்தெட்டு வயதானவனின் சட்டை. நாற்பத்தெட்டு வயதானவனின் மார்பளவு. நான், ஐஜிக்கு மனுக்கொடுத்தேன். ஐஜி அலுவலகத்தில் ஜெயிலுக்கென்று தனி பிரிவிருந்தது. இத்தனை மீட்டர் துணி நெய்வதற்கு இத்தனை மீட்டர் நூல். இதில் இத்தனை மீட்டர் வேஸ்ட் என்றெல்லாம் கணக்கிருந்தது. நிக்கர்களெல்லாம் பெரும்பாலும் உட்கார்ந்து எழுந்தால் சுருண்டு ஜட்டி போலாகிவிடும். புகார் மனுவில் பரிந்துரைகளும் சொல்லப்பட்டிருந்தன. வழக்கமாக நடத்துகிற பரிசோதனை முறைகளில் மாற்றம் வேண்டும். கொடவுனும் பணிக்கூடமும் ஒரே நேரத்தில் பரிசோதனை செய்யப்பட வேண்டும். அப்படியென்றால்தான் முரண்பாடுகள் தெரியும். நானே ஆச்சரியப்படும் விதத்தில் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இரண்டே நாள் சோதனையில் லட்சக்கணக்கிலான ஊழல்கள் பிடிபட்டன. நீதிமன்றங்களுக்குப் போகும்போது கைதிகள் உடுத்திருக்கும் வேட்டி, சங்கம்புழயின் 'வாழைக்குலை'யில் வரும் மலையப்புலயனின் தோள் துண்டை விட ஏதோ கொஞ்சம் நீளமாக இருக்கும். அது சரி செய்யப் பட்டது. சட்டையில் பட்டன் வைத்துத் தைக்கப்பட்டது. குண்டறையிலுள்ள ஒரு அரசியல் தலைவரும் அப்போது ஜெயிலில்

இருந்தார். மனுக்கொடுக்கவும் அதற்கான வழிமுறைகளைச் சொல்லித் தரவும் இவர்தான் உதவினார். இவர் மூலம்தான் நான் கடிதங்களை வெளியே அனுப்பினேன். இல்லையென்றால் அவர்கள் அதைக் கிழித்துச் சுருட்டியெறிந்திருப்பார்கள். என்னையும் நாராகக் கிழித்திருப்பார்கள்.

பிறகு, கொஞ்சம் மிரட்டல்கள் அரங்கேறின. சிறு பயமுமிருந்தது. அதிகாரிகள் வார்டன்களிடம் சொன்னார்கள்: "அவன் கையில வேணும்னா ஒரு வெடிகுண்டை கொடுங்க, பேப்பர் கொடுத்துடாதீங்க. பேனா இல்லேன்னா அவன் ரத்தத்தால எழுதிடுவான். வக்கிரப் புத்தியோட வாத்தியார். அவன் எழுதினா ஒருவேளை பிரதமர்கூட வந்துடுவார். அந்தளவுக்கு எழுதுறான்."

வழக்கு விஷயங்களுக்காக நீதிமன்றங்களுக்குப்போய் வரும்போது காகிதம் இருக்கிறதா என்று பார்க்க என்னை விசேஷமாகப் பரிசோதிப்பார்கள். கொண்டுவர வேண்டிய தேவையே இல்லை. நீதிமன்றங்களில் காத்திருக்கும் போது தாராளமாக நேரம் கிடைக்கும். ஏஆர். போலீஸ்தான், என்னைப் பொறுப்பெடுத்து அழைத்துக்கொண்டுபோய் திரும்பக்கொண்டு வருபவர்கள். இவர்கள் இன்லாண்ட் வாங்கித் தருவார்கள். ஜெயிலுக்குள் என்றால் இரண்டு கஞ்சா பீடி கொடுத்தால் பான்ட் பேப்பரும் பேனாவும் இருப்பிடத்திற்கே வந்து சேரும்.

நார்கோட்டிக்: ஜெயிலிலிருந்து ஒருவன் விடுதலையாகும்போது மற்றவர்களுக்கு மகிழ்ச்சியும் சோகமும் சேர்ந்து உருவாகும். நம்மை விட்டு ஒருவன் பிரிந்து செல்கிற சோகமும் விடுதலையாகிற மகிழ்ச்சியும். கைதியின் மனநிலையும் இதுதான். உள்ளேயே சிக்கிக்கிடக்கும் சிலர் இருக்கிறார்கள். நார்கோட்டிக் குற்றவாளிகள். இவர்களுக்கு பரோல் கூடக் கிடையாது. இருபது வருடம்வரை தண்டனை நீண்டு போனாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. இவர்களில் பெரும்பான்மையினரும் திருடனைப்போல் தெரிந்தே குற்றங்களில் ஈடுபடுபவர்களில்லை. சதியில் சிக்கி உள்ளே வருபவர்கள். போதைப் பொருள் முதலாளிகள் யாரும் ஒருபோதும் சிக்க மாட்டார்கள். இதற்கென அவர்கள் படிப்பறிவில்லாத, ஏழை எளிய இளைஞர்களைப் பயன்படுத்துகிறார்கள். இயலாமையின் ஏதேனுமொரு கட்டத்தில் அவர்கள் இதற்கு உடன்பட்டு விடுகிறார்கள். நீ செய்ய வேண்டியதெல்லாம் இதுதான்: எரணாகுளத்திலுள்ள இந்த த்ரீ ஸ்டார் ஓட்டலில் ரூம் எடுத்துத் தங்கியிரு. தேவைப்பட்டதை வாங்கிச் சாப்பிடு. விருப்பம்போல் குடி. அதற்கான பணத்தை நாங்கள் கொடுத்து விடுவோம். இரவு எட்டு மணியாகும்போது உன்னுடைய ரூமுக்கு ஒருவர்

வருவார். அவர் கிழிந்த ஐந்து ரூபாய் நோட்டின் ஒரு பகுதியை உன்னிடம் காட்டுவார். அதன் மற்றொரு பகுதி இதோ இதுதான் என்று சொல்லி அவனிடம் கொடுப்பார்கள்.

நீ அதை வாங்கி உன்னிடம் இருக்கும் பகுதியுடன் ஒப்பிட்டுப்பார். சரியாக இருந்தால் இந்தப் பொட்டலத்தை அவனிடம் கொடு. சிவனும் சிவனும்[5] அறியாத விளையாட்டு. பிறகு, நேராக ஜோஸ் ஜங்ஷனுக்குப் போ. அங்கே ஒரு செருப்புத் தைப்பவன் உட்கார்ந்திருப்பான். அவனிடம் இந்த இரண்டு ஐந்து ரூபாய் துண்டுகளையும் கொடு. அவன் இருபத்தையாயிரம் ரூபாய் தருவான். பிறகு, ஜெனரல் ஆஸ்பத்திரியின் எதிரில் பிச்சையெடுத்துக் கொண்டிருக்கும் ஒற்றைக்கண்ணனிடம் வந்து ஒற்றைக்கண்ணனா இரட்டைக் கண்ணனா என்று கேள். 'சிவன்தான் முக்கண்ணன்' என்று பதில் சொன்னால் பணத்தை அவனிடம் கொடு. அவன் உனக்கான கூலியைத் தருவான். ஐயாயிரம் ரூபாய்.

திருவனந்தபுரம் சென்ட்ரல் ஜெயிலில் அறிமுகமான ஒரு இளைஞன், மனைவியின் ஆபரேசனுக்காக இந்த வேலையைச் செய்தவன். ஏஜென்ட்கள் மிகச் சுலபமாகச் சொல்லிவிடுவார்கள். ஆனால், இதனுள் மிகப்பெரிய மாஃபியா கும்பல் செயல்படுகிறது. இக்கும்பல்களுக்குள் பெரும் வியாபாரப் போட்டியுமிருக்கும். இவர்களுக்கிடையில் சிக்கி பாவம் இந்த இளைஞர்கள் பலியாகி விடுகிறார்கள். ஒவ்வொரு குழுவுக்குள்ளும் காட்டிக் கொடுப்பவர்களுமிருப்பார்கள்.

கிடைக்கும் பணத்தில் மனைவியின் ஆபரேஷனை முடித்து நிம்மதியுடன் வாழ்வதாக இளைஞன் கனவு கண்டுகொண்டிருந்தான். குறிப்பிட்ட நேரம் வந்தது. யாரோ கதவைத் தட்டினார்கள். இவன் ஐந்து ரூபாய் துண்டுடன் கதவைத் திறந்தபோது போலீஸ். யாரோ காட்டிக்கொடுத்து விட்டார்கள். திடுக்கிட்டு விட்டான். பார்சலிலிருந்தது கஞ்சா ஆயில். பத்திரிகைகளில் எல்லாம் செய்தி வெளிவந்தது. கணவன் - மனைவி இருவரது குடும்பமும் மானஸ்தர்கள். ஆகவேதான் யாரிடமும் பணத்துக்காகக் கெஞ்சி நிற்காமல் அவன் இப்படியான ஒரு முடிவுக்கு வந்திருந்தான். ஆபரேஷன் நடக்கவில்லை என்பது மட்டுமல்ல, மனநிலையும் தவறிப்போன அந்தப் பெண் நிரந்தர நோயாளியாகி விட்டாள். இவனைத் தனியாக இருக்க யாருமே விடமாட்டார்கள். ஏனென்றால் இவன் அழாத நாட்களுமில்லை. தூங்கிய இரவுகளுமில்லை. இவ்வளவுக்கு நல்ல குணமுள்ள ஒருவனைக் காண்பதே அரிதான விஷயம். வாழ்க்கை முழுவதையுமே சோகத்தில் ஆழ்த்தி விடுகிற சம்பவங்கள். ஆகவே, எச்சரிக்கை வேண்டும்.

வெளிநாடுகளுக்குப் போகும்போதும் ஏன், இந்தப் பார்சலைக் கொடுத்து விடுங்களேன் என்று அண்டை வீட்டார் சொன்னால்கூட சந்தேகிக்க வேண்டும். காலம் அப்படி. திருடன்களாகிய நாங்கள் எங்கள் காலதோஷத்தைத் தீர்க்கிறோம். எங்களுடைய வேதனைகளை இதனுடன் ஒப்பிடும்போது எவ்வளோ பரவாயில்லை.

குத்துச்சண்டை வீரன்: இன்னொரு ஜெயில் அனுபவம். மனிதனின் அகம்பாவத்திற்குக் கிடைத்த ஒரு தாக்கீது. சுமார் அறுபது பேர்கள்கொண்ட எங்கள் பிளாக்கில் புதியதொரு விருந்தினன். ஒரு பையன். இருபத்து நான்கு வயது. கொல்லத்தைச் சேர்ந்தவன். ஊர்க்காரனல்லவா என்று குசலம் விசாரிக்கச் சென்றேன். அவன் பெரிய கௌரவம் காட்டினான். நான் அந்த பிளாக்கின் மேஸ்திரி. என்னை அவன் மதித்து நடந்திருக்க வேண்டும். காப்பியடித்தோ மார்க் லிஸ்டில் கோல்மாலோ செய்து உள்ளே வந்திருந்தான்.

கொஞ்ச நேரம் அப்படியே உட்கார்ந்திருந்தான். பிறகு பாத்ரூமில்போய் சிறுநீர் கழித்தான். நான் கூப்பிட்டுப் பார்த்தும் வரவில்லை. நான் போய்: "ஒண்ணுக்குப் போறதெல்லாம் சரிதான். உட்கார்ந்துதான் ஒண்ணுக்கடிக்கணும். நின்னுட்டு அடிச்சேன்னா எல்லா இடங்கள்லேயும் தெறிக்கும். ஆட்களிருக்குற இடம். சுத்தமாக இருக்கணும்கிறதுக்காக சொல்றேன். புரியுதா?" என்றேன்.

அவன் எந்தப் பதிலும் சொல்லாமல் எள்ளலுடன் முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

இரவில் சிறுநீர் கழிக்கும்போதும் அதே சத்தம். நான் கோபப்பட்டேன்:

"உங்கிட்டதானே சொன்னேன், நின்னுட்டு ஒண்ணுக்கடிக்கக்கூடாதுன்னு? இனிமேல் இப்படிப் பண்ணாதே" என்றேன்.

மறுநாள், காலை ஒன்பது மணியிருக்கும். அவன் சிறுநீர் கழிக்கச் சென்றான். ஏற்கனவே, நான் அவனது பாவனையைப் பார்த்து எரிச்சலிலிருந்தேன். ஆகவே, காதுகளைக் கூர்மையாக்கினேன். நினைத்தது போலவே இப்போதும் பெருத்த சத்தம். அவன் நின்றபடியே சிறுநீர் கழிக்கிறான். நான் மெல்ல நடந்து பாத்ரூம் பக்கம் சென்றேன். அவன் கதவைத் திறந்து வெளியில் இறங்கினான். ஒன்று கொடுத்து விட்டுச் சொன்னேன்:

"எத்தனை தடவைச் சொல்லியிருக்கேன். நின்னு ஒண்ணுக்கடிக்காதேன்னுட்டு."

அடிபட்ட இடத்தைத் தடவியபடியே அவன் என் முகத்தைப் பார்த்தான். முகம் கோபத்தால் சிவந்துகொண்டிருந்தது. அடுத்த நிமிடம் அவனது கைகள் குத்துச்சண்டை வீரர்கள்போல் பொசிஷன் எடுத்தன. பத்துப் பன்னிரெண்டு வினாடிகளுக்குள் நான் குத்துமதிப்பாக வாங்கி ஒரு மூலையில் சுருண்டேன். மூக்கிலிருந்து இரத்தம் வடிந்தது. குத்து என்றால் இதுதான் குத்து. இதை விடவும் ஒரு குடத்தை எடுத்து அவன் மொத்தியிருக்கலாம். எழுந்திருக்க நினைத்தேன். முடிய வேண்டுமே!

அடுத்தக் காட்சி, சுமார் அறுபது கைதிகள் சுற்றி நின்று அவனைத் தாக்குகிறார்கள். நிறைய பேரை அவனும் அடித்துத் தள்ளினான். அடிபட்டவர்களெல்லால் கீழே விழுகிறார்கள். ரொம்ப நேரம் அவனால் பிடித்து நிற்க முடியவில்லை. ஈஞ்சைப் புல்போல் அவனைச் சிதைத்துவிட்டார்கள். ஸ்டெச்சர் கொண்டுவந்துதான் வார்டன்கள் அவனைக் கொண்டுபோனார்கள்.

பிறகுதான் அறிந்தோம். இவன்தான் இப்போதைய மிஸ்டர் கொல்லம். ஹெவி வெயிட் சாம்பியன். மாவட்ட அளவிலான குத்துச்சண்டை சாம்பியனும்கூட! இதெல்லாம் எவ்வளவு மகத்தான பதவிகளென்பதை கிடைத்த குத்திலிருந்து நான் புரிந்துகொண்டிருந்தேன்.

---

5. சிவனும் சிவனும் - காதும் காதும் வைத்ததுபோல்.

## 69 - சுயபாலின்பம்

என்னுடைய பதினெட்டு வயதில் முதன்முதலாக ஜெயிலுக்கு வருகிறேன். கூடவே இன்னும் இரண்டு பேர். ராஜுவும் ராமனும். ஜெயிலுக்கு வருகிற சிறுவர்களைப் பலவந்தம்செய்து உடல்ரீதியாகப் பயன்படுத்தும் கும்பல் எல்லாக் காலங்களிலும் இருந்தே வந்திருக்கிறார்கள்.

பொறுப்பில் இருப்பவர்கள் அதிகாரப்பூர்வமாக இதை ஏற்றுக்கொள்ளவே மாட்டார்கள். அங்குமிங்குமாக சில நடக்கக் கூடும் . . . என்று நழுவிக்கொள்வார்கள். உலகில் மிக அதிகமான பாலியல் முரண்களும் இயற்கைக்கெதிரான பாலியல் ஆர்வமும் கொண்ட ஒரு மக்கள் கூட்டம் மலையாளிகள்தான் என்பதில் சந்தேகமில்லை. இப்படியான சமூகத்திலிருந்து ஜெயிலுக்கு வருபவர்கள் நல்ல மனநிலையிலுள்ளவர்களாக இருப்பார்கள் என்று எதிர்பார்க்க முடியுமா?

கேரள ஜெயில்களில் சுயபாலின்ப பலாத்காரங்கள் மிக அதிகமென்பது எயிட்ஸ் போன்ற மோசமான வியாதிகள் பரவுவதற்கான மற்றொரு காரணம். பணமிருந்தால் போதை வஸ்துக்கள் தாராளமாகக் கிடைக்கும். முன்பு, கஞ்சா. இப்போதெல்லாம் சிரிஞ்ச் மூலம் பயன்படுத்துபவைதான் அதிகமும். ஒரே சிரிஞ்சைப் பலர் உபயோகிக்கிறார்கள். ஆண் விபச்சாரிகளாக இருக்கும் நிரந்தரக் கைதிகள். இவர்கள்தான் எச்ஐவியைப் பரப்புபவர்களாக மாறி விடுகிறார்கள்.

நமக்கு எச்ஐவி என்றாலே வெறுப்பு. மிகத் தீவிரமான பாலியல் எண்ணங்களும் மிகத் தீவிரமாக அதை அடக்கி வைக்கவும் நினைக்கிற ஒரு மக்கள் கூட்டம் மலையாளிகள்தான். உலகின் மிகப் பெரியதும் மிக மோசமானதும் மிகவும் முரண்பட்டதுமான விபச்சார விடுதி மலையாளிகளின் மனம்தான். இந்தப் புத்தகத்தில் குறிப்பிடப்பட்ட பாலியல் விவகாரங்கள் வரை இங்கே மோசமான முறையில் விவாதிக்கப்படும். இப்படி, ஒழுக்க வாளோங்குபவன்தான் தீவிரமாக அதனை ரசிக்கவும் செய்வான் என்பது தர்க்கமற்ற உண்மை.

சமீபத்தில் வெளியான ஒரு செய்தி. ஜெயில்களில் ஆணுறைகள் வினியோகம் செய்யப்படுமாம். கைதிகள் விடுதலையாகிப் போன பிறகு

உபயோகிப்பதற்காக இப்போது வினியோகிக்கிறார்களாம். எதற்காக இப்படியொரு நாடகம்? வெளியில் சென்று இதில் ஈடுபடுவதை விடவும் நூறு மடங்கு அதிகமாக ஜெயிலுக்குள் நடைபெறுவதைச் சொல்வதில் வெட்கமேன்?

திருடனான எனக்கே வெட்கமாக இருக்கிறது. உலகில் பண்பாட்டில் உயர்ந்தவர்களென்று சொல்லிக்கொள்ளும் பல நாடுகளைச் சேர்ந்த கைதிகளுடன் நான் பேசியிருக்கிறேன். அங்கே இதெல்லாம் ரகசியமே இல்லையாம். கடைகளில் போய் பற்பசையும் சோப்பும் வாங்குவதுபோல் காண்டமும் கேட்டு வாங்குகிறார்கள். இங்கு நாம் இதனை பெரிய ஒழுக்க மீறுதலாகக் கருதிக்கொள்கிறோம். மனரீதியாக நாம் இன்னும் வெகுதூரம் முன்னேற வேண்டியதிருக்கிறது என்றே இந்தத் திருடன் சொல்லிக்கொள்ள விரும்புகிறான்.

சுயபாலின்பம் என்றால் - வாசகர்கள் மன்னிக்கவும் - ஜெயிலில் ஆசனவாய் போகம்தான். கேரள ஜெயில்களில் சிறுவயது கைதிக்கு சக கைதிகளிடமிருந்து ஏன் சில நேரங்களில் அங்குள்ள ஊழியர்களிடமிருந்து கூட நேரிட வேண்டியது வருகிற இதுபோன்ற பாலியல் அக்கிரமங்களிலிருந்து அவர்களைப் பாதுகாக்க அதிகாரவர்க்கம் இதுவரை என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது? இதற்கான அறிவு சார்ந்ததும் மனிதத்தன்மையுமான அதிகார வர்க்கம் இங்கு உருவாகியிருக்கிறதா? கோட்டும் ஷூட்டும் அணிவதால் மட்டும் ஒரு மக்கள் கூட்டம் மேம்பட்ட நிலையை அடைந்துவிட இயலாது. மனிதத்துவம் சார்ந்து பண்பாடுகள் பேணப்பட வேண்டுமே தவிர, ஆடையணிகலன்களிலும் பாவனைகளிலும் வெற்று ஆரவாரங்களிலும் போலித்தனங்களிலும் அல்ல!

இங்கே நிலைமை இதுவல்ல, மனிதன் ஏதாவதொரு பலவீன நிமிடத்தில் தவறிழைத்து விட்டான் என்றால், அன்றுவரையும் அதற்குப் பின்பும் அவன் செய்த எல்லா நல்லதையும் மறந்து விடுகிறோம். அவனைப் பற்றிய ஞாபகங்கள் அனைத்திலும் செய்த தவறைப் பற்றிய கேலிதான் தொனித்து நிற்கும். பல தலைமுறைகளுக்குப் பின்னரும் அந்தக் குடும்பம் இதைச் சொல்லி இகழப்படும். புதிய தலைமுறையில் ஒருவன் எவ்வளவு பெரிய பொறுப்புக்கு வந்தாலும் என்றோ நிகழ்ந்ததைச் சொல்லி அவன் இகழப்படுவான். மனைவியைப் பெண்டாள வந்தவனை அவன் கொலை செய்திருக்கலாம். ஆனால், நமக்குக் காரணங்கள் முக்கியமல்ல. நிலைமைகளையும் சூழல்களையும் கணக்கிலெடுத்து குற்றம் மதிப்பிடப்பட வேண்டும். நீதிபீடம் அளிக்கும் குற்றத்திற்கான

தண்டனையை ஏற்க வேண்டியது பிரஜையின் கடமை. இதில் மற்றவர்கள் தலையிடுவதும் குரூரமாக அணுகுவதும் கூட குற்றங்கள்தான். நம்முடைய சந்ததியினருக்கு நாளை இப்படியான ஒரு நிலை ஏற்படாதென்பது உறுதியல்ல.

கருணை மனோபாவத்துடனும் மற்றவர்களின் நன்மை தின்மைகளை நேர்மையுடனும் அணுகும்போதுதான் நாமும் நல்லவர்களாகிறோம். அறிவுசார்ந்த முன்னேற்றம் என்பது இதுதான். இந்நிலையில் ஒருவன் கோட்டும் ஷூட்டுமல்ல, கோமணம் உடுத்திருந்தாலும் கௌரவம்தான். பரத்தையின் பதிவிரதப் பிரசங்கம் போன்ற திருடனின் இந்த உபதேசத்தை இத்துடன் நிறுத்திக்கொள்கிறேன்.

எப்போதும் நேரடிக் காட்சிகளில்தானே சுவாரஸ்யம். சிறுவயதில் நான் முதன் முறையாக ஜெயிலுக்கு வரும்போதுள்ள காட்சி: சிறுவயதுக் கைதிகளைப் பாலியல் வேட்டையாடும் குழு ஜெயிலில் இருக்கிறது என்ற விஷயம் எங்களுக்குத் தெரியாது. இவர்களிடம் சிக்காமல் தப்பிப்பது இயலாத காரியம். நிறைய கைதிகள் இருக்கும் வார்டாக இருந்தால் போர்வைக்குள்ளோ கழிவறைகளிலோ இது அரங்கேறும். பரீட்சையில் ஏதோ தில்லுமுல்லு நடத்தியதால் தண்டிக்கப்பட்ட இரண்டு மாணவர்களும் ஜெயிலுக்கு வந்தார்கள். பெரிய வீட்டுப் பிள்ளைகளான இவர்களை மிரட்டி தங்களுக்குப் பணிய வைத்தார்கள்.

என்னை கான்டீனில் உதவியாக இருக்கச் சொன்னார்கள். இதுதான் இவர்களது முகாம். பட்டாழி பாஸ்கரன் என்ற கிழவன்தான் இதன் தலைவன். ராஜுவின் பக்கத்தில் படுத்திருந்தவனை வேறு இடத்தில் படுக்கச் சொல்லிவிட்டு, ராஜுவிடம்: "நீ என் பக்கத்தில படுத்துக்க, ராத்திரி உனக்குப் பயமாக இருக்கும்" என்றான். பகலில் சேர்ந்து வேலை செய்பவனில்லையா, அந்தப் பரிவில் சொல்கிறான் போலிருக்கிறது என்றுதான் நினைத்தோம்.

விளக்கு அணைந்ததும் பலவந்தம் செய்தான். மற்றக் கைதிகள் கண்டுகொள்ளவில்லை. ராஜு சத்தம் போட முயற்சித்தபோது கழுத்தில் அடித்தான். இதன்பிறகு கண்களிலிருந்து தண்ணீர்தான் வரும். சத்தம் வெளியே வராது. பிறகு, பாஸ்கரனின் ஆட்கள் வந்தார்கள். பலாத்காரம் தொடர்ந்தது. மறுநாள் பார்க்கும்போது ராஜு மிகவும் மோசமான நிலையில் எழுந்திருக்கவோ உட்கார்ந்திருக்கவோ இயலாமலிருந்தான். இயற்கை உபாதையைக்கூட அவனால் தீர்க்க இயலவில்லை. இரத்தம். இயல்பான நிலைக்கு வர மூன்று நான்கு நாட்களானது.

சரியாவதுவரைக்கும் தொந்தரவு இருக்காது என்பதால் உண்மையில் இதில் அவர்களுக்குச் சிறு ஆறுதல்தான். தொடர்ந்து ராமன், அடுத்த இலக்கு நான்.

என்னிடம், "இன்னிக்கு நீதான். பேசாமல் சம்மதிச்சுடு. இல்லேன்னா அடிதான் மிச்சம். ஒருவேளை கொல்லவும் செய்வானுங்க" என்றார்கள்.

செத்தாலும் பரவாயில்லை; இதற்கு உடன்படக்கூடாதென்று முடிவு செய்தேன். இந்த அருவருப்புகளை நான் ஏற்கனவே அனுபவித்தவன். நான்காம் வகுப்பில் படிக்கும்போதுதான் முதன்முதலாக இப்படியெல்லாம் சிறுவர்கள் உபயோகப் படுத்தப்படுவார்கள் என்பதைப் புரிந்துகொண்டேன். அப்போது, நான் நான்காம் வகுப்பில் படித்துக்கொண்டிருந்தேன். பள்ளிக்கூடத்தின் அருகிலுள்ள ஒரு ஆசிரியரின் வீட்டில் டியூஷனுக்குச் செல்வேன். சாரின் மனைவி அவரை விட்டுப் பிரிந்து போயிருந்தாள். வீட்டில் சார் மட்டும்தானிருப்பார். நான் அந்த வீட்டில் சுதந்திரமாகவே நடமாடுவேன். ஒருநாள் சீக்கிரமாக அங்கே போகும்போது ஒரு காட்சி. எங்களை விடவும் சிறிது வயதில் மூத்த ஒரு பையனை சார் தன்னுடைய கால்களினிடையே உட்கார வைத்திருந்தார். இதை ஒளிந்திருந்துப் பார்த்து எனக்குள் புரிந்ததும் புரியாததுமான சில குழப்பங்கள் உருவாகின. மிகச் சீக்கிரமாகப் பள்ளிக்கூடத்திற்குப் போவதும் தாமதமாக வீட்டுக்குத் திரும்புவதும் என்னுடைய வழக்கம். இருட்டுவதற்குள் வீட்டுக்கு வந்துவிட வேண்டும் என்ற அளவில் மட்டும்தான் வீட்டாரின் அக்கறையிருந்தது.

எங்கள் வகுப்பில் அழகான ஒரு பையனிருந்தான். சாரின் லீலைகளை அவனிடம் பரீட்சித்துப் பார்க்கலாமென்று எனக்குத் தோன்றவே, அவனது சிலேட்டையும் பென்சிலையும் எடுத்து மறைத்து வைத்தேன். ஸ்கூல் விட்டு எல்லாரும் போன பிறகும் அவன் அதைத் தேடிக்கொண்டிருந்தான். வகுப்பில் நாங்கள் மட்டும்தான். நான் உதவி செய்வதுபோல் அவனது நிக்கரில் கை வைத்தேன். மிருதுவான இடங்களில் கை படும்போது சுகமாக இருந்தது. சார் காட்டிய வித்தைகளை நானும் முயற்சி செய்தேன்.

ஒருநாள் சார் என்னை அழைத்தார். அன்று நான் சீக்கிரமாகவே சென்றிருந்தேன். தினமும் நான்கைந்து இளநீரெல்லாம் குடித்து புஷ்டியாக இருப்பேன். சார் கொஞ்ச நேரம் எதையெல்லாமோ செய்துவிட்டு என்னை உட்கார வைத்தார். கொஞ்ச நேரம் கழிந்ததும் எனக்கு அருவருப்பாக இருந்தது. குமட்டல் வந்தது. எப்படியாவது தப்பியோடிவிடத் தோன்றியது. இறங்கி ஓடினேன். வீட்டினருகில் புதர்க்காட்டில் வைத்து

வாந்தியெடுத்தேன். இனி சாரின் வீட்டில் டியூஷன் படிக்கப் போகக்கூடாதென்று முடிவு செய்தேன்.

இரண்டுநாள் கழிந்ததும் சார் வீட்டிற்கு வந்தார்: "ரெண்டு நாளாக ஏன் டியூஷனுக்கு வரலை?" என்று கேட்டார். "உயிருள்ளவரைக்கும் நான் வரமாட்டேன்." அம்மாவின் முன்னால் வைத்துதான் இதைச் சொன்னேன். அம்மா: "ஏண்டா?" என்றாள். "இந்த சார் சரியில்லை." என்றேன். அவர் உடனே விஷயத்தை மாற்றி: "நான் சொல்லிக் கொடுக்குறது அவனுக்குப் புரியலைபோலிருக்கு, சரி, வற்புறுத்த வேண்டாம்" என்று சொல்லிவிட்டு: "உனக்கு விருப்பமிருந்தா வா, ஃபீஸ் எல்லாம் தரவேண்டியதில்லை" என்று சொல்லிவிட்டுப் போனார். சார் ஃபீஸ் வாங்காமல் பலருக்குச் சொல்லிக்கொடுக்கும் காரணம் எனக்குப் புரிந்தது. சாரின் மனைவி பிரிந்துபோனதற்கான காரணம் கொஞ்ச நாட்களுக்குப் பிறகுதான் தெரியவந்தது.

மறுநாள் பள்ளிக்கூடத்திற்குப் போனேன். சாயங்காலம் வீட்டுக்குப் போக இருக்கும்போது என்னுடைய சிலேட்டையும் புத்தகங்களையும் காணோம். தேடிக் கொண்டிருக்கும்போது என்னுடன் படிக்கும் அந்தப் பையன் வந்தான். நான் காட்டிய வித்தையைத் திருப்பி அவன் என்னிடம் காட்ட நினைக்கிறான். எல்லோரும் போன பிறகு கேட்டான்:

"அன்னைக்கு விளையாடினதுபோல விளையாடுவோமா?"

நான் கேட்டேன்: "என் சிலேட் எங்கேடா?"

"முதலில் விளையாட்டு. பிறகுதான் சிலேட்" என்றான்.

சொல்லி முடிப்பதற்குள் அடி விழுந்தது. கண் மூக்கு பார்க்காமல் அடித்தேன். சார்மீதுள்ள வெறுப்பு முழுவதையும் அவனிடம் காட்டினேன். பள்ளிக்கூடத்திற்கு அன்றெல்லாம் சுற்றுச்சுவர் கிடையாது. அவனது அலறல் சத்தம் கேட்டுப் பக்கத்தில் சாயாக்கடையிலிருந்த ஆட்கள் ஓடி வந்து பிடித்து விலக்கினார்கள்.

"எதுக்குடா அவனை அடிச்சே?"

"என் சிலேட்டை எடுத்து ஒளிச்சு வெச்சான்."

"எதுக்கடா அவன் சிலேட்டை ஒளிச்சு வெச்சே?"

"அவனும் எடுத்து ஒளிச்சி வெக்கிறதுண்டு. அதனால்தான் . . ." அவன் அழுதுகொண்டே சொன்னான்.

இத்துடன் தன்பாலியல் எண்ணம் மனதிற்குள் ஒரு வெறுப்பாக மிச்சமிருந்தது. சிறுவயதில் அனுபவித்ததை விடவும் பல மடங்கு வெறுக்கத் தக்க ஒன்றை இப்போது அனுபவிக்க இருக்கிறேன். நான் மனதிற்குள் முடிவு செய்துகொண்டேன்: 'ஒன்று இந்த ஜெயிலுக்குள்ளேயே செத்துவிட வேண்டும். அல்லது இதில் வெற்றிபெற வேண்டும்.' என் பக்கத்தில் குரீப்புழ சுரேஷ், மோகனன் ஆகிய இருவரும் படுப்பார்கள். முதல்நாள்வரை படுத்திருந்த இவர்களை வேறிடத்திலாக்கிவிட்டு இவர்கள் வந்துப் படுத்து, மிகுந்த ஆர்வத்துடனும் பரிவுடனும் எதையெதையோ பேசினார்கள். இடையே என் கையைப் பற்றுகிறார்கள். நான் வெறுப்புடன் விலக்கிவிட்டேன். மனதில், விளக்கு அணைவது வரைதான் உயிரிருக்கும் என்றும் தோன்றுகிறது.

விளக்கு அணைந்தது. தொந்தரவுகளில்லை. இமை மூடாமல் படுத்திருந்தேன். கண்கள் மெல்ல அடைந்தன. திடீரென்று உடம்பில் சூடு தட்டியது. என்மீது மற்றொரு உடல் அமர்கிறது. மற்றொருவன் நிக்கரைத் தாழ்த்த முயற்சிக்கிறான். நான் திடுக்கிட்டு எழுந்து சொன்னேன்:

"அண்ணே, எனக்கு இதில விருப்பமில்லை. உயிர் போனாலும் நான் இதுக்கு சம்மதிக்கமாட்டேன்."

"சீ . . . தா . . . பேசாமக் கிடந்தேன்னா பிழைச்சே . . ."

நான் உடம்பின் பலம் முழுவதையும் ஒன்றுத் திரட்டி, கால்மாட்டிலிருந்தவனை எட்டி உதைத்தேன். உடம்பைக் குலுக்கி மற்றொருவனைக் கீழே புரட்டினேன். அப்போது பட்டாழியும் ஓடி வந்தான். கை கலப்பானது. என்னைத் தாறுமாறாகத் தாக்கினார்கள். கழுத்தைக் குறி வைத்தார்கள். கண்களை மூடிக்கொண்டு முடிந்தவரைக்கும் நானும் கை போட்டேன். என்மீது மூன்று நான்கு அடிகள் விழும் போது என் கையும் அவர்கள்மீது விழுகிறது. குத்து, ஒருவனது கண்ணிலும் இன்னொன்று மற்றவனின் நாபியிலும் விழுந்தது. இரண்டு தீனக்குரல்கள் எழுந்தன. இதனிடையே நான், ஜெயில் முழுவதும் கேட்க அலறுகிறேன். விளக்குகள் எரிந்தன. அவர்கள் தங்கள் போர்வைக்குள் நுழைந்து தூங்குவதுபோல் நடித்தார்கள். நான் பயந்து நடுங்கியபடியே எழுந்து நின்றேன். பூட்ஸ் சத்தம் நெருங்கியது.

இரண்டு வார்டன்கள் வந்தார்கள்: "என்னடா இங்கே?"

என்னிடம்தான் கேட்டார்கள். நான் முதலில் எதுவும் சொல்லவில்லை. சொல்ல வாயெடுத்ததுதான் தாமதம், பட்டாழி துள்ளியெழுந்தான்: "பெரிய தொந்தரவா இருக்கு சார். தூக்கத்தில கிடந்து பிடிக்கவும் இழுக்கவுமெல்லாம் செய்றான். மற்றவங்களைத் தூங்கவிடமாட்டேங்குறான். மனநோயாளியை எங்க வார்டுல வைக்கக்கூடாது. சொல்லிட்டோம். தூக்கத்தில கழுத்தை நெரிச்சிக் கொன்னுடுவான்."

"வாடா இங்கே" என்றார்கள். என்னைத் தனியாகக் கூப்பிட்டு விசாரிப்பார்கள். வேறிடத்தில் படுக்க வைப்பார்கள் என்ற எதிர்பார்ப்புகளுடன் ஓடோடிச் சென்றேன். ஒரு வார்டன் இரும்புக் கிராதிகளினூடே கை நீட்டி என் நிக்கரை அள்ளிப் பிடித்து வேகமாக இழுத்தான். நெற்றியும் மார்பும் கம்பியில் வேகமாக வந்து மோதின. அலறியபடியே கீழே விழுந்தேன்.

"மரியாதையாப் படுத்துத் தூங்கலைனா ஒருத்தனும் வெளியுலகத்தைப் பாத்துட மாட்டீங்க" என்று எச்சரித்துவிட்டு அவர்கள் நடந்தார்கள். விழுந்த இடத்திலேயே நான் உட்கார்ந்திருந்தேன்.

மறுநாள், கான்டீனில் வைத்து பட்டாழி சொன்னான்: "நாங்க ஒருத்தனை கண் வச்சோம்னா அவனைக் கையில எடுத்தே தீருவோம். இன்னைக்கில்லேன்னா என்னைக்காவது."

நான் சொன்னேன்: "திரும்பி வர்றதா யாரிட்டயும் சொல்லிட்டு நான் ஜெயிலுக்கு வரல. ஒண்ணுல நான், இல்லேன்னா மற்றொருத்தன். இது, இன்னைக்கில்லைன்னா என்னைக்காவது நடக்கும். நான் சொன்னா சொன்னதுதான். ஒருத்தனைப் போட்டுத் தள்ளணும்னு நினைச்சா தள்ளியிருப்பேன்."

"பாத்துடலாம்."

"ஆங் . . . பாத்துடுவோம்."

பிறகு, பொருளாதாரத் தடை. தண்ணீர் கிடையாது. பீடி கிடையாது. தீ கிடையாது. கேன்டீன்காரர்களை மீறி எதுவுமே நடக்காது. அன்ன தாதாக்கள் அல்லவா?

இரவு நேரங்களில் இவர்கள் ஏதேதோ திட்டங்கள் போடுவதைப் பலதடவை கவனித்திருக்கிறேன். ஏனோ தெரியாது, எதுவுமே அமுலுக்கு வரவில்லை. உள்ளுக்குள் சிறு உதறல் இருக்கும்போல் தோன்றியது. நானும் இரண்டிலொன்று என்ற முடிவுடன்தானிருந்தேன். அவர்களுக்கும் இது தெரியுமென்பதில் சந்தேகமில்லை.

மெல்ல, ஒரு வார்டனின் பரிவைச் சம்பாதித்து வேறு வார்டுக்கு மாறினேன். என்னுடைய எதிர் நடவடிக்கை ஜெயில் முழுவதும் தெரிந்துவிட்டதால் பின்பு, இதுபோன்ற தொந்தரவுகளில்லை. ஒரு வேண்டுகோள் போல் வேறு பலர் அணுகினார்கள். நான் நேரடியாகவே சொல்லிவிடுவேன். எனக்கு இதில் விருப்பமில்லை. வேறு சிலர் கொஞ்சம் தட்டிப் பார்க்க முயற்சி செய்தார்கள். இதெல்லாம் என்னிடம் நடக்காதென்று நேரடியாகவே சொல்லிவிடுவேன். ஜெயில் வாழ்க்கையில் நான் தலை நிமிர்ந்து நிற்க இயன்றது இந்த ஒரு விஷயத்தில்தான்.

இதெல்லாம் எனக்கான பாடங்களாக இருந்தன. ஒரு கைதியின் சீழ் பிடித்தப் பிறப்புறுப்பு பற்றி ஏற்கனவே சொல்லியிருந்தேன். தெருவில் அலையும் விலைமாதர்களிடம் போவதில்லை என்று நான் முடிவு செய்தது இவனைப் பார்த்த பிறகுதான். சில விஷயங்கள்மீது முதலில் ஆர்வம் ஏற்படுவதும் பிறகு, அதில்லாமல் முடியாதென்ற நிலை உருவாகும். இதன் பின்விளைவுகளையும் அனுபவிக்க வேண்டியது வரும். அது, குடிப்பழக்கமாகவும் இருக்கலாம்; பரத்தையர் தொடர்பாகவும் இருக்கலாம்.

முதலில் விய்யூர் சென்ட்ரல் ஜெயிலுக்கு வரும்போதும் இப்படியான பெரும் பலாத்காரங்களை எதிர்கொள்ள வேண்டியதிருந்தது. ஆனால், அப்போது முன்னனுபவங்களும் முதுகெலும்பும் மேலும் உறுதியாக இருந்தன. புதிய பையன்களின் வார்டு என்று சொல்லப்படும் நியூ பிளாக்கின் மேஸ்திரி, வர்க்கலையைச் சேர்ந்த ரசாக். இவனது கூட்டாளியான சிரயின்கீழ் சங்கரன் ஒரு நாள் சொன்னான்:

"டேய், தா . . . இன்னைக்கு ராத்திரி ரசாக் அண்ணன் வருவான். போர்வையை சரியாக்கிட்டுத் தயாரா இருந்துக்க."

"ஒண்ணுல நான் அல்லது உன் மேஸ்திரி, இரண்டில ஒருத்தன் சாகவும் நான் தயாராகவே இருக்கேன்" என்றேன்.

"ஓகோ, நீ அந்தளவுக்குப் போயிட்டியா? அப்படின்னா யார் சாகப்

போறான்னு இன்னைக்கு நைட்லேயே பார்த்துடுவோம்" என்றான்.

நான் தயாராகவே இருந்தேன். இரண்டு நாட்கள் எந்தத் தொந்தரவுமில்லை. மூன்றாம் நாளிரவு, படுத்திருந்த என்மீது பலமான ஒரு அடி விழுந்தது. திடுக்கிட்டு எழுந்திருக்க முயற்சிக்கும்போது ஒரு கோணிப்பை என்னை மூடியது. தப்பிக்கவே முடியாத நிலைமை. நான் கோணியைப் பிடித்திருந்தக் கை விரலை கோணிக்குள்ளிருந்தே கடித்துப் பிய்த்தேன். கோணியின் பிடி விலகியதும் பாய்ந்துத் தாக்கினேன். அவர்களும் விடவில்லை. வார்டன் வரும்வரைக்கும் சமாளித்து நின்றேன். கன்னங்கள் அடிபட்டு வீங்கியிருந்தன. மார்பும் வலித்தது. அவர்களது நிலையும் சற்றொப்ப இதுவே. சரியாகவே வாங்கி வைத்திருந்தேன் என்றாலும் உளவியல் வெற்றி எனக்கே!

விசாரணைக்கு ஆஜரானதும் சொன்னேன்: "என்னை அடிச்சுக் கொன்னாலும் சரிதான், இதுக்கு நான் சம்மதிக்க மாட்டேன்."

முகத்தில் இரண்டு தந்து என்னை விட்டுவிட்டு, அவர்களை அழைத்துக் கொண்டுபோய் உதைத்தார்கள்.

வார்டன் நீலகண்டபிள்ளை, வார்டன் கிளிப் தங்கப்பன்பிள்ளையிடம்: "இனி இந்த வார்டுக்கு இவனையே மேஸ்திரியாக போடுவோமா?" என்று கேட்டார்.

"சின்னப்பையனா இருக்கானே?"

"பையனா இருந்தாலும் நாயரில்லையா?"

"செட்டியார் பையன்னு தோணுது."

"இல்லை, நாயர்தான்."

"அப்ப இருந்துட்டுப் போகட்டும்."

இப்படியாக நான் ராஜாவாக ஆரம்பித்தேன். ரசாக்கை பின்பொரு முறை ரெயில்வே ஸ்டேஷனில் சந்தித்தேன். புரோக்கராக! பெண் புரோக்கர் அல்ல, ஆண் புரோக்கர். முதலில் எரணாகுளத்திலும் பிறகு, கொல்லத்திலுமிருந்தான். கொல்லத்துக்கு வரும்போது ஆள் ரொம்பவே தளர்ந்துபோயிருந்தான். பிறகு, பிச்சையெடுக்க ஆரம்பித்தான். கொஞ்ச காலம் தன்னுடனிருந்த சங்கரன் எலும்புருக்கி நோய் வந்ததும் தன்னை

விட்டுப் போய்விட்டானென்று சொன்னான். நான் இரண்டு ரூபாய் கொடுத்தேன். என்னால் அன்று இவ்வளவுதான் கொடுக்க முடிந்தது.

## 70 - போலீஸ்

போலீஸ்காரனுக்கும் திருடனுக்குமிடையிலான உறவு, பரஸ்பர நம்பிக்கையில் உருவாவது. போலீஸ்காரன் தயவு தாட்சண்யமில்லாமல் திருடனை உதைக்கலாம்; ஒருவகை விரக்தியான மனோநிலையில் செத்தால் சாகட்டுமென்று கருணையில்லாமல் சித்தரவதை செய்யலாம். இருப்பினும் அவர்களுக்குள் பாசமிருக்கும். போலீஸ்காரன்மீது இல்லாவிட்டாலும் அவனது யூனிஃபார்ம் மீது திருடனுக்கு மரியாதை உண்டு. போலீசுடன் இருக்கும்போது திருடனுக்கு பாதுகாப்பு உணர்விருக்கும். சில நேரங்களில் திருடனை போலீஸ்காரன் நம்புவான். இது, கவர்ச்சியான சில காரணங்களையோ இலவசங்களையோ முன்னிட்ட நம்பிக்கையாக இருந்தாலும். ஓசியில் சுகம் காண்பதில் இந்த அளவுக்கு மனதிருப்தியடையும் மற்றொரு பிரிவு மனிதர்கள் இருப்பதே சந்தேகம்தான்.

என்னை நீதிமன்றத்திற்கு அழைத்துச்செல்வதற்கு போலீஸ்காரர்கள் விரும்புவார்கள். இதற்கான பல காரணங்களிலொன்று, நானொரு வளர்த்து மிருகம். எங்கே கொண்டுபோய் விட்டாலும் திரும்ப வந்துவிடுவேன். தப்பித்துக்கொள்ள மாட்டேன். நான் ஜாமீனில் வந்து தலைமறைவாகி இருக்கிறேனே தவிர, போலீஸ்காரர்களுக்கு சிக்கல் வருவதுபோல் நடந்துகொண்டதில்லை. பல்வேறு வாய்ப்புகள் இருந்த போதும். மற்றொன்று, என்னுடன் வரும்போது அவர்களது தேவைகள் அனைத்தும் மங்களகரமாக நடந்தேறி விடும். மங்களகரமென்றால் போலீஸ் அகராதியில் எல்லாச்செலவும் திருடனுக்கே என்பதுதான். மட்டுமல்ல, மனைவியிடமோ உறவினர்களிடமோ சொல்லி சிகரெட்டோ பிரியாணியோ இரண்டு ஸ்மாலோ வாங்கிக் கொடுப்பேன். அரசாங்கம் கொடுக்கிற காசை அவர்கள் பாக்கெட்டிலேயே வைத்துக்கொள்ளலாம்.

மனதுக்கினிய போலீசார்தான் எப்போதும் துணைக்கு வருவார்களென்று சொல்லிவிட முடியாது. இடையே கசப்பானவர் களும் வருவார்கள்.

ஒருதடவை, திருவனந்தபுரத்திலிருந்து என்னை, கொல்லம் நீதிமன்றத்திற்குக் கொண்டுபோனார்கள். பாதுகாப்புக்கு ஒரு கசப்பான

போலீஸ்காரர். இவர்கள் எப்போதும் இறுக்கமாகவே விலங்கு மாட்டுவார்கள். இரண்டு விரற்கிடைத் தூக்கி வைத்து விலங்கிடவில்லை என்றால் விலங்கின் இரும்புப் பல் பட்டு, கை வலியெடுக்கும். மிகவும் தொந்தரவாகவும் இருக்கும். ஏதாவது சொன்னால் கெட்டவார்த்தையில் திட்டுவார்கள். இதற்குப் பயந்து நான் எதுவும் சொல்வதில்லை.

திருவனந்தபுரம் தம்பானூர் பஸ் ஸ்டாண்டிலிருந்து பஸ் ஏறினோம். இறுக்கமான கை விலங்கு. நான் சொன்னேன்: "விலங்கைக் கழற்றுங்க சார்." பதிலுக்கு அவர் கெட்ட வார்த்தையில் திட்டினார்.

நான் சொன்னேன்: "சட்டப்படி விலங்கைக் கழற்றணும் மிஸ்டர்."

ஆட்கள் கவனிக்கிறார்கள். அவர் அடிப்பதற்காகக் கையோங்கினார்.

நான் சொன்னேன்: "அடிச்சுக்குங்க, திருப்பி நானும் அடிப்பேன். நீங்க பத்து அடி அடிச்சா, நான் ஒண்ணாவது திருப்பித் தருவேன். அவமானம் உங்களுக்குத்தான்."

"உனக்கு வெச்சிருக்கேண்டா . . ." என்று முகத்தில் மூன்று நான்கு தட்டுத் தந்தார்.

நான் சொன்னேன்: "ஓடுற பஸ்சுக்குள்ள சட்டப்படி விலங்கிடக்கூடாது."

"அதை நீ எனக்குச் சொல்லித்தர வேண்டியதில்லை. அதிகமாப் பேசினேன்னா கொன்னுடுவேன்."

அதன் பிறகு, நான் எதுவும் பேசவில்லை. சொன்னது உண்மைதான். ஓடுகிற பஸ்சில் ஏதாவது அசம்பாவிதங்கள் நிகழ்ந்தால் மற்றவர்களுக்குத் தப்பிப்பதற்கான வாய்ப்பிருக்கிறது. கை விலங்குடனிருப்பவன் தன்னைக் காப்பாற்றிக்கொள்வது மிகவும் சிரமம். குற்றவாளியா இல்லையா என்று முடிவு செய்யப்படாத ஒருவன் அநியாயமாக உயிரிழக்கக் கூடாது. இதற்காகத் தானே இரண்டு போலீஸ்காரர்களும் துப்பாக்கிகளும் பிற ஆயத்தங்களும்.

கொல்லம் நீதிமன்றத்தில் நான் முறையிட்டேன்: "இந்தப் போலீஸ்காரர் கூட என்னைத் திருப்பியனுப்ப வேண்டாம்னு மாண்புமிகு நீதிமன்றத்தில நான் கேட்டுக்குறேன். இவர் என்னை அடிக்கிறார். பஸ்சுல ஏறின பிறகும் கை விலங்கைக் கழற்ற மாட்டேங்கிறார். நீதிமன்றம் தீர்ப்பளிக்காம நான் இப்படி சித்தரவதைகளை அனுபவிக்கணுமா? கெட்ட வார்த்தைக்

கேட்கணுமா? கொஞ்சம் மரியாதை தெரிஞ்ச இரண்டு போலீஸ்காரங்ககூட என்னை அனுப்பி வைக்கும்படி கேட்டுக்குறேன்."

முறையீடு உண்மையாக இருக்குமென்றால் பெரும்பாலான நீதிமன்றங்களும் அனுமதித்து விடும். திரும்பிச் சென்றதும் போலீஸ்காரர்களுக்கு இரண்டு குட்டு விழும். கைதிகளை நீதிமன்றங்களுக்குக் கொண்டுபோகும் பொன்னான வாய்ப்புக் கிடைக்காமலும் போகலாம். சென்ட்ரி டியூட்டியோ பாரா டியூட்டியோ பார்த்துக்கொண்டு ஆயுத முகாமிலேயே இருந்துவிட வேண்டியதுதான். இதனால், புத்தி சாதுரியமுள்ள போலீஸ்காரர்கள் யாரும் திருடனுடன் மோத மாட்டார்கள்.

இப்படியான பயணங்களின்போது, கைதிகளை மக்கள் ஆச்சரியத்துடன் பார்ப்பார்கள். மிருகக்காட்சி சாலையிலிருக்கும் வனவிலங்கை வெளியுலகில் பார்ப்பதுபோல். இந்த ஆச்சரியத்துடன் நிறுத்திக்கொள்வார்களே தவிர அவர்களால் வேறு தொந்தரவிருக்காது.

ஆனால், கோழிக்கோட்டுக்குச் சென்ற ஒரு பயணத்தினிடையே அதுவும் நடந்தது. ஜெனரல் கம்பார்ட்மென்ட். ஓரளவிலான நெரிசலுமிருந்தது. இரண்டு போலீஸ்காரர்களும் நானும் கழுதை விளையாடிக் கொண்டிருந்தோம். இதை விடவும் நல்ல விளையாட்டு என்ன இருக்கிறது? கழுதை யார் என்பதை முடிவு செய்யும் விளையாட்டல்லவா? போலீஸ்காரரின் சூட்கேசின்மீதுதான் விளையாட்டு நடந்துகொண்டிருந்தது. ஓரத்திலுள்ள இருக்கைகள். யாருக்கும் தொந்தரவில்லாமல் விளையாடிக் கொண்டிருந்தோம். காயங்குளத்தில் ஒரு இளம் தம்பதியர் ஏறினார்கள். சீட்டில் நாங்கள் மூன்றுபேர் உட்கார்ந்திருந்தோம். இன்னொருவரும் நெருங்கி உட்காரலாம். கணவன் உட்கார்ந்தால் மனைவி நிற்க வேண்டியது தான். மனைவியை மற்றவர்களுடன் உட்கார வைக்கவும் அவருக்கு விருப்பமில்லை. ஒரு கையில்தான் விலங்கிடப்பட்டிருந்தது. சில போலீஸ்காரர்கள் இதுகூட தேவையில்லையென்று சொல்வார்கள். "அது கையில கிடந்துட்டுப் போகட்டும். எனக்கு வெட்கமொண்ணுமில்லை. செய்ற குற்றத்துக்கான தண்டனையை ஒளிவு மறைவில்லாம அனுபவிக்கணும்" என்பேன். கை விலங்கைக் கண்டதும் நான் கைதி என்பதை அந்தக் கணவன் புரிந்துகொண்டான். உட்கார்ந்திருக்கவும் யோக்கியதையில்லாத நான் எழுந்தால் அவனும் மனைவியும் உட்கார்ந்து சுகமாகப் பயணம் செய்வார்கள்.

அவன் கோபத்துடன் மனைவியிடம் இங்கிலீசில் என்னவோ சொன்னான்: 'நாட்டில் திருடனுக்கும் கொலைகாரனுக்கும் உட்கார்வதற்கு சீட் கிடைக்கும். நல்லவன் பெரியவனுக்கு சீட் கிடையாது.'

எனக்கு என்னுடைய நடுக்கம் தொற்றிக்கொண்டது. ஆறாம் வகுப்புவரை தான் படித்திருந்தேன் என்றாலும் ஓரளவு ஆங்கிலம் புரியும். நான் சூட்கேசைத் தூக்கி மேலே எறிந்துவிட்டுத் துள்ளியெழுந்து, 'அங்காடி' திரைப்படத்தில் பிஏ படித்த சுமட்டுத்தொழிலாளி ஜெயன் பேசுவதுபோல் உடைந்த இங்கிலீசில் சரமாரியாக டயலாக் விட்டேன்:

"ஹூ இஸ் ஜென்டில் மேன் ஹியர். ஹியர், யெஸ் யூ நோ ஜென்டில் மேன் யூ. கல்ச்சரல்லெஸ் ராஸ்கல். ஹூ டோல்ட் ஐ எம் தீஃப் ஆர் மர்டர். ஐ கில் யூ பாஸ்டர்ட்."

அந்த ஆள் வெலவெலத்து விட்டான். மிச்சம் போலீசின் வகை: "இவனை அரஸ்ட் பண்ணினது நீயா? கையில விலங்கு கிடந்தா அவன் திருடனும் கொலைகாரனுமா? விசாரணைக்குக் கொண்டுபோறதுக்காக அரசாங்கம் ரெயில்வேக்குப் பணம் கொடுக்குது. இவன் கோர்ட்டில போய்ச் சொன்னான்னா உன் கதையே குளோசாயிடும். சொல்லிட்டோம்."

மௌனம். கொஞ்ச நேரத்தில் அவர்களுக்கும் சீட் கிடைத்தது. ட்ரெயின் எரணாகுளத்தில் நின்றது. கொஞ்ச நேரம் இங்கே நிற்கும். நானும் போலீஸ்காரர்களும் வெளியே இறங்கி சாயா குடித்தோம். போலீஸ்காரர்கள் சிறிது விலகி நின்று பேசிக்கொண்டிருந்தார்கள். அந்த இளைஞன் கடையிலிருந்து ஒரு புத்தகமும் வாங்கிவிட்டு என்னிடம் வந்து கேட்டான்:

"பெயரென்ன?"

பெயரைச் சொன்னேன்.

"சாரி, திடீர்னு ஒரு கோபத்தில . . ."

அதுக்கென்ன என்பதுபோல் நான் ஆர்வமில்லாமல் பதில் சொன்னேன். அவன் மெதுவாகச் சொன்னான்: "நானும் ஜெயிலுக்குப் போயிருக்கேன். அரசியல் கைதியாக . . . எமெர்ஜென்சி பீரியடுல." பேச்சினிடையே மனைவி கவனிக்கிறாளா என்றும் பயத்துடன் பார்த்துக் கொண்டான். பிறகு, சோர்ந்தக் குரலில் சொன்னான்: "போகட்டும், விடுங்க, நான்

அப்படிப் பேசியிருக்கவே கூடாது."

என் தோளில் தட்டிவிட்டுப் போனான். திருச்சூரில் இறங்குவது வரைக்கும் அவன் நல்ல மூடில் இல்லை. என்னைப் பார்க்கவும் செய்யாமல் இறங்கி நடந்தான். ஜன்னல் கம்பிகளினூடே கவனித்தேன். மனைவி திரும்பி நின்று எதையோ சொல்கிறாள். வேகமாக நடக்கச் சொல்லி கோபப்படுகிறாள் போலிருக்கிறது. சூழ்நிலை உணர்வை மீட்டெடுத்த கணவன், கூலிங் கிளாசை எடுத்து அணிந்தான். என்னைத் திட்டிய அதே கௌரவத்துடன் கையை பாக்கெட்டில் திணித்துக்கொண்டு, வேகத்தை அதிகரித்து மனைவியைப் பின்தொடர்ந்தான். பாவம், மனிதர்கள்.

## **71** - அரை போலீஸ்

கொல்லம் ஈஸ்ட் ஸ்டேஷன் உதவியாளனாக நான் ஐந்து வருடம் வேலை பார்த்தபோதுள்ள சுவாரஸ்யமான சம்பவம். அப்போது நான் போலீஸ்காரர்களுக்குப் பிடித்தமான உதவியாளனாக இருந்தேன். என்னைப்போல், போலீசிடமிருந்து கணக்கில்லாத உதையும் அளவில்லாத வாத்சல்யமும் கிடைக்கப் பெற்ற ஒருவன் கேரள வரலாற்றில் இருக்கவே முடியாது. எல்லையற்ற சுதந்திரங்களுடன் நான் அதிகாரிகளின் வீட்டிற்குள்ளும் போய் வருவேன். சமையலறை வழியாக அல்ல, நுழைவாயில் வழியாகத்தான். நான் இதை ஒருபோதும் தவறாகப் பயன்படுத்தியதில்லை. மணியன்பிள்ளையின் பொற்காலமென்று இதைச் சொல்லலாம். அந்த அளவில் மன அமைதியுடன் வாழ்ந்து வந்தேன்.

எஸ்பி.கூட பல்வேறு பொறுப்புகளை என்னிடம் ஒப்படைத்திருக்கிறார். போலீஸ் அசோசியேசன் தொடர்பான ஃபைலுடன் நான் நிறைய அலைந்திருக்கிறேன். கொல்லம் மியூசியம் போலீஸ் ஸ்டேஷன் துவக்க விழாவிற்கு சந்தியா ஐஜிபி வந்தபோது நடந்த ஒரு சுவாரஸ்யம்: விழா நிகழ்வுக்கான பணிகளில் நான் தீவிரமாக ஈடுபட்டிருந்தேன். சாயா வினியோகம், செயர்களைச் சரிப்படுத்துவது, மேடையை ஒழுங்குபடுத்துவது என்று எல்லா வேலைகளும் . . . விழா முடிந்த பின், சிஐ சிஜி சுரேஷ் குமார் சார் சொன்னார்: "உன்னை, சந்தியா மேடம், தாடி வெச்ச அந்த போலீஸ்காரன் யார்னு கேட்டாங்க."

நான் சிரித்தேன். பக்கத்தில் நின்றிருந்த தலைமைக்காவலர் சொன்னார்: "நீ இப்ப அரை போலீஸ்காரன். அந்தத் தாடியை எடுத்துடு." மறுநாளும் இதைச் சொன்னார்.

நான் சொன்னேன்: "சார், காலாகாலமும் போலீஸ் போலீசும் திருடன் திருடனும் தான். எனக்கு இப்ப தாடி வெக்கிறதுக்கான உரிமையிருக்கு. குற்றவாளியா என்னைப் பிடிச்சா நீங்களே அதை எடுத்துடுவீங்க. அது உங்க உரிமை."

சொன்ன வாக்கு அப்படியே பலித்தது. கடைசியில், 15 வருடங்களுக்குப் பின்பொரு நாள், போலீஸ் என்னுடைய தாடியை மழித்தது. இதைக்

கடைசியில் சொல்கிறேன். திருடனை விதி தன்னுடைய வட்டப் பாதையில் வைத்துச் சுழற்றிக்கொண்டே இருக்கும். அவன் என்னதான் உருண்டுப் பார்த்தாலும் உருப்பட முடியாது. அதன் போக்கில் சுற்றி வர வேண்டியது தான். இந்த ஏதாவதொரு சுழற்சியில், எப்போது வேண்டுமானாலும் அவன் போலீசின் வலைக்குள் விழுந்து விடுவான்.

ஒருநாள், பறிமுதல் பொருட்கள் வைத்திருக்கும் அறை திறந்து கிடப்பதைப் பார்த்த போலீஸ்காரர் ஒருவர் திடீரென்று உள்ளே நுழைந்தார். அறைக்குள் சாராய நெடி. திருடன் மணியன்பிள்ளை தரையில் உட்கார்ந்து மக்கிலிருந்த சாராயத்தை பிளாஸ்டிக் கவரில் ஊற்றிக்கொண்டிருந்தான். அவர் ஒரு நிமிடம் ஸ்தம்பித்து நின்று விட்டு அலறினார்:

"திருட்டு . . . மவனே, போலீஸ் ஸ்டேஷனுக்குள்ளேயே சாராய வியாபாரம் பண்றியாடா . . ?"

மூலையிலிருந்து சோர்ந்தக் குரலில் தலைமைக் காவலரிடமிருந்து இதற்கானப் பதில் வந்தது.

"நான் இங்க இருக்கேண்டா . . ."

"ஐயோ சாரா?"

"துரோகிகளே, எல்லாவனும் சேர்ந்து, பறிமுதல் பண்ணின 150 கவர் சாராயத்தை பத்து கவர்கூட இல்லாம குடிச்சுத் தீர்த்திட்டீங்களேடா . . . கேசை சார்ஜ் பண்ண நான் சாராயம் தயாரிக்காம வேற என்னடா பண்றது?" மக்கிலிருந்த கொஞ்சம் சாராயத்தை வாயில் ஊற்றி விட்டு: "போய் கவர் போட்டுக் கொடு. அறையை நான் வெளியிலேருந்து பூட்டிக்கிறேன். இனி யாரும் பாக்க வேண்டாம்" என்று சொல்லிவிட்டுப் போனார். நான் சாராய உற்பத்தியைத் தொடர்ந்தேன்.

சம்பவம் இதுதான். கேசை சார்ஜ் செய்த தலைமைக்காவலர் 150 கவர் சாராயம் பறிமுதல் செய்திருந்தார். வழக்கை நீதிமன்றத்தில் தாக்கல் செய்ய வேண்டிய நாள் வந்தபோது பத்து கவர் சாராயம்கூட மிச்சமில்லை. தலைமை, சிஐயிடம்போய் அழுதார்:

"தொண்டியறைக்குள்ள நான் ஒருத்தன் மட்டுமா சார் போறேன்?"

சிஐ கை விரித்து விட்டார்: "அதெல்லாம் தெரியாது. நாளை பதினொரு

மணிக்கு கோர்ட்டில கூப்பிடும்போது பறிமுதல் சாதனம் இருக்கணும். இல்லேன்னா நீதான் அதுக்கான பொறுப்பேற்க வேண்டியது வரும்."

ராமன்குளங்கரையைச் சேர்ந்த இந்த போலீஸ்காரர், வேறு ஒன்றிரண்டு போலீஸ்காரர்களிடமும் விஷயத்தைச் சொன்னார். அவர்களுக்கும் என்ன செய்வதென்று தெரியவில்லை. நான் சொன்னேன்: "அது ஒரு பிரச்சினையே இல்லை. தொண்டி அறையில கேன் கணக்கில ஸ்பிரிட்டும், கவரும், ஒட்டக்கூடிய ஹேண்ட் மெஷினும், சீலும் இருக்கும்போது யோசிக்கிறதுக்கு என்ன சார் இருக்கு . . ?"

அவர் நிம்மதிப் பெருமூச்சு விட்டார். ரைட்டரிடம் போய் அழுது மன்றாடினார்: "அந்தச் சாவியை ஒரு ரெண்டு மணி நேரம் எங்கிட்டக் கொடுங்க, அதுக்கான பொறுப்பை நான் ஏத்துக்கறேன்." சாவி கிடைத்தது.

தலைமை சொன்னார்: "டேய் திருடா, உன்னை மலைபோல நம்பி இந்தப் பொறுப்பை ஒப்படைக்கிறேன். இன்னைக்கு முடிஞ்சுடுமாடா வேலை?"

36 லிட்டர்கொண்ட ஒரு கேன் ஸ்பிரிட்டை எடுத்து ஒரு பாத்திரத்தில் ஊற்றினேன். மோட்டாரை ஆன் பண்ணி பறிமுதல் பொருட்கள் இருக்கும் அறைக்குக் கொண்டு வந்தேன். மூன்று நான்கு மணி நேரத்தில் சாராயம் ரெடி. போலீஸ்காரர்களுக்கு நிம்மதி. மிச்சமிருந்த ஸ்பிரிட் எனக்குக் கைமாறு.

ஸ்பிரிட் விஷயத்தைச் சொல்லும்போது, புகழ்பெற்ற கல்லுவாதுக்கல் ஸ்பிரிட் வழக்கில் கைதான மணிச்சனையும் தாத்தா வையும் சந்தித்தது நினைவுக்கு வருகிறது. இவர்கள்மீதான விசாரணை, கொல்லம் பப்ளிக் லைப்ரரியின் எதிரிலுள்ள போலீஸ் கிளப்பில் நடந்தது. மேலிடங்களிலிருந்து அழுத்தம், தொலைபேசியை போலீஸ்காரர்கள் யாரும் எடுக்கவே இல்லை. மற்ற போலீஸ்காரர்களுக்கும் உள்ளே அனுமதியில்லை. அனுமதிக்கப்பட்ட ஒரே நபர் நான் மட்டும்தான். காரணம், கான்டீன் பொறுப்பை நான் ஏற்றுக்கொண்டிருந்ததுதான். விசாரணை என்னதான் ரகசியமாக நடந்தாலும் உணவை ஹெலிகாப்டர் மூலம் போட முடியாதல்லவா? ஆகவேதான் என்னுடைய அவதாரம். விசாரணை ஐந்து நாட்கள் தொடர்ந்தது. மூன்று நேரமும் உணவுகளுடன் நான் ஆஜராவேன். வெளியிடங்களிலுள்ள விசாரணை அதிகாரிகளும் இருந்ததால் முதல் நாள் என்னை அனுமதிக்க மறுத்தார்கள். இவன் போலீஸ் ஆள்தானென்று சொன்ன பிறகுதான் அனுமதித்தார்கள்.

நல்ல கூட்டுக்கறிகளுடன் ஸ்பெஷல் சாப்பாடு. தாத்தா ஒருவேளைகூட சாப்பிடவில்லை. விரல் நுழைத்து சாப்பிட வைப்பதற்கான முயற்சிகள் நடந்தன. அவ்வளவையும் திருப்பி எடுக்க வேண்டியதாயிற்று.

## **72 -** பிளேடு

நான் கொல்லம் கிழக்குக் காவல்நிலையத்தின் சர்வமுமாக இருந்த காலம். மனம்போல் மது சேவை. எப்போதாவது வீட்டுக்கு வரும்போதும் சுய உணர்வு கம்மியாகவே இருக்கும். மனிதன் வறுமையிலும் நோயிலும்தான் தன்னுள் பயணிக்கிறான். இதுகூட இல்லையென்றால் இயல்பாகவே அகம்பாவம் அதிகமாகி விடும்.

வீட்டின்முன் இறக்கி வைக்கப்பட்டிருந்த மணலில் பக்கத்திலுள்ள ஒரு பையன் ஏறி விளையாடினான். மணலில் விளையாடாதே; மணல் ரோட்டில் சிதறும் என்றேன். அவன் மீண்டும் ஏறினான். எனக்குக் கோபம் வந்தது. உள்ளில் உருண்டு கொண்டிருந்த சாத்தானின் தூண்டுதலில் பையனுக்கு ஒன்று கொடுத்தேன். அவன் அழுதுகொண்டே போனான். நான் பொருட்படுத்தவில்லை. கொஞ்ச நேரத்தில் நான்கைந்து இளைஞர்கள் அடிவாங்கிய பையனுடன் வந்தார்கள். பையன் அப்போதும் அழுதுகொண்டுதானிருந்தான். வந்தவர்களில் ஒருவன் என்னை அழைத்தான்:

"டேய் மணியண்ணா, கொஞ்சம் இங்கே வா." முகப் பரிச்சயமுள்ள இளைஞர்கள்தான். நான் போனதும் அவர்களது தொனி மாறியது:

"இவனை நீ எதுக்காக அடிச்சே?"

"மணல்லே ஏறாதேன்னு சொன்னேன். ஏறினான். அடிச்சேன்."

"மணல்லே ஏறினா, உடனே நீ அடிச்சிடுவியாமா?"

"இவங்கிட்ட எல்லாம் பேச்சு என்ன வேண்டிக்கிடக்கு, அடிங்கடா" என்றான் மற்றொருவன்.

அடி விழுந்தது. போதையில் எதிர்த்து நிற்கவும் முடியவில்லை. சரமாரியாக அடி விழுந்தது. தோற்கிறோம் என்று உணர்ந்ததும் மனதிற்குள் பழைய மணியன்பிள்ளை தலையெடுத்தான். தளர்வு

உடம்புக்கு மட்டும்தான். மனம் அப்படியேதான் இருந்தது. வேண்டுமென்றே தரையில் குப்புற விழுந்தேன். அடியும் உதையும் தொடர்ந்து விழுந்து கொண்டிருந்தது. நீண்ட காலமாகவே எனக்கு வாயில் பிளேடை வைத்துக்கொள்ளும் வழக்கமுண்டு. இரண்டு டோபாஸ் பிளேடுகளை வாங்கி நான்காக ஒடித்து இரண்டு ஈறுகளிலும் வைத்திருப்பேன். உண்ணும் போதும் குடிக்கும்போதும் பிளேடு அதிலேயே இருக்கும். இதுவும் பயிற்சிதான். பயிற்சியெடுக்காமல் வைத்தால் வாயும் ஈறுகளும் இரத்தக்களறியாகி விடும். எனக்கும் இப்படியாகி இருக்கிறது. குணமாகி விடும். சில நாட்களில் பிளேடின் கூர்மை குறையும் போது புதிதாக இரண்டை வாங்கி வைத்துக்கொள்வேன்.

வாயிலிருந்து பிளேடை எடுத்து விரல்களினிடையே வைத்தேன். குப்புற விழுந்த அதே வேகத்தில் திரும்பி, ஒருவனைப் பிடித்திழுத்தேன். அடுத்த நொடியில் அவன் அலறியபடியே ஓடினான். அடுத்த சில நொடிகளுக்குள் மற்றவர்களும் உடம்பு முழுவதும் பிளேடு காயங்களுடனும் உடுப்புகள் முழுவதும் கிழிந்தும் இரத்தக்களறியாக ஓடினார்கள்.

மறுநாள் ஸ்டேஷனுக்குப் புகார்கொடுக்க வந்தார்கள். அங்கே நான் சர்க்கிளின் அறைக்குப்போவதும் வருவதுமாக எதையாவது செய்து கொண்டிருக்கிறேன். திகைத்து நின்றிருந்த அவர்களிடம்போய்: "என்ன ஏதாவது கம்பிளெயின்டா?" என்றேன்.

"சே . . . சே . . . சும்மா வந்தோம்." என்றார்கள்.

இவர்களைப் பார்த்ததுமே நான் போலீஸ்காரர்களிடம் சொல்லி வைத்திருந்தேன். இரண்டு போலீஸ்காரர்கள் வந்து விரட்ட ஆரம்பித்தார்கள். பெட்டிஷனும் வேண்டாம், ஒரு மண்ணும் வேண்டாமென்று திரும்பி நடந்தார்கள். பிறகு, இவர்கள் என்னிடம் நல்ல மரியாதையாகவே நடந்துகொண்டார்கள். இந்தச் சம்பவத்தைத் தொடர்ந்து நான் யோசித்தேன். இனி, ஆயுதத்துடன் நடக்கக்கூடாது. ஆயுதமென்பது வெறும் அகம்பாவம். இது, தன்னம்பிக்கையை இல்லாமல் செய்வதுடன் திமிரும் உருவாகிவிடுகிறது. கடைசியில் அழிவில்தான் கொண்டுபோய்விடும். பலவீனத்தை உணரும்போதுதான் ஆயுதம் தேவைப்படுகிறது. இனி சண்டை அடிதடிகளின் மார்க்கம் தேவையில்லை. அன்று உருவி வைத்ததுதான் பிளேடு. இன்றுவரைக்கும் எந்த ஆயுதமுமில்லாமல்தான் நடக்கிறேன். அந்தக் காலமெல்லாம் மலையேறி விட்டது.

கிழக்கே கோட்டை: ஒருநாள், திருவனந்தபுரம் கிழக்கேகோட்டை பஸ் ஸ்டாண்டில் நின்றுகொண்டிருந்தேன். இந்தச் சம்பவம் நடந்து ஒரு சில வருடங்கள்தானிருக்கும். மகனுக்குத் தைப்பதற்கு பட்டன் வாங்க வந்திருந்தேன். பஸ் ஸ்டாண்டினுள் ஐஸ் கிரீம் கடையிருக்கிறது. இரண்டு மூன்று பையன்கள் வாங்கிச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். எனக்கும் ஆசை வந்தது. ஒரு கப் ஐஸ் கிரீம் வாங்கினேன். முதல் ஸ்பூனை வாயில் வைத்திருப்பேன். ஒரு போலீஸ்காரரையும் அழைத்துக்கொண்டு வேகமாக வந்த ஒருவன் அவரிடம் சொன்னான்:

"சார் இவன்தான் மணியன்பிள்ளை. பயங்கரமான திருடன். இங்க தலைமறைவானா பிறகு, எங்கே தலை தூக்குவான்னே தெரியாது. மோசமான ஆள். கேரளத்தையே நடுங்க வெச்சவன். விட்டுடாதீங்க."

இவன் யாருடா புதிய ஆள் என்று பார்த்தேன். நினைவு வந்தது. முன்பு அட்டகுளங்கரை ஜெயிலில் இருந்தவன். எரப்பாளி பப்பன் என்று பெயர். பெயரைப் போல்தான் ஆளும். எவன் காலையும் நக்குவான். எந்த எரப்பாளி வேலையையும் செய்வான். யாருக்காகவும் செய்வான். இவனுடைய குணம் இன்னும் மாறவில்லை போலிருக்கிறது. போலீஸ்காரர் உடனே ஒரு ஆட்டோவைக் கூப்பிட்டு நிறுத்திவிட்டு லத்தியையும் தூக்கிப் பிடித்துக்கொண்டு வந்தார்:

"தப்பிச்சுடலாம்னு நினைக்காதே. இது கிழக்கேகோட்டை. ஓடினா விசிலடிப்பேன். இங்கே நிறைய போலீஸ்காரங்க நிக்கிறாங்க. அடிச்சிப் பஞ்சராக்கிடுவாங்க." என்னை தனியொருவனாகப் பிடித்துப் பெயர் வாங்கும் தந்திரம் என்பது புரிந்தது.

நான் கேட்டேன்: "மிஸ்டர், என்னை எதுக்காகப் பிடிக்கிறீங்க?"

"மிஸ்டரா, என்னையாச் சொல்றே? ஸ்டேஷனுக்கு வாடா, சொல்றேன். ஏறுடா வண்டியில." ஒரு திருடன் மிஸ்டர் என்று அழைத்தது அவருக்குப் பிடிக்கவில்லை.

ஆட்டோ தயாராக நிற்கிறது. நான் சொன்னேன்: "வாங்கின ஐஸ்கிரீமை யாரு குடிக்கிறது? கொஞ்சம் பொறுங்க."

ரசித்து ஒவ்வொரு ஸ்பூனாக மெதுவாகக் குடித்து, காசையும் கொடுத்துவிட்டு ஆட்டோவில் ஏறினேன். எரப்பாளி பப்பனும் போலீஸ்காரரும் இருபுறம். நடுவில் நான். போலீஸ்காரர் இன்னமும்

லத்தியைத் தாழ்த்தவில்லை. பயந்திருப்பார் போலிருக்கிறது.

ஆட்டோ தம்பானூர் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றது. காலில் நான் ஹவாய் செருப்பு அணிந்திருந்தேன். போலீஸ்காரர் மிகுந்த குஷியிலிருந்தார். நான் எஸ்ஐயின் அறை வாசலில் செருப்பைக் கழற்றிவிட்டு நுழையும்போது, "சாரோட ரூம் முன்னாலதான் உன் செருப்பு கிடக்குமா?" என்று சொல்லி அதை எடுத்து வெளியே வீசியெறிந்தார்.

பதில் சொல்லாமல் எஸ்ஐயின் அறைக்குள் நுழைந்தேன். என்னுடைய வீரப் பராக்கிரமங்களை எஸ்ஐயிடம் பட்டியலிட்டான் எரப்பாளி.

எஸ்ஐ கேட்டார்: "அது சரி, இவ்வளவு நாளா நீ எங்கடா இருந்தே?"

"சார், இப்ப நான் என் மகன் கஸ்டடியில இருக்கேன். இதுக்கு முன்னால அஞ்சு வருஷம் கொல்லம் ஈஸ்ட் ஸ்டேஷன்ல வேலை பார்த்தேன்" என்று சொல்லிவிட்டு மகனின் முகவரியையும் போலீஸ் ஸ்டேஷன் தொலைபேசி எண்ணையும் கொடுத்தேன். எஸ்ஐ அழைத்துக்கேட்ட எல்லா இடங்களிலிருந்தும் எனக்கு அனுகூலமாக பதில் வந்தது.

நான் சொன்னேன்: "சார் எப்பவோ திருடினதுக்காக ஒரு மனுஷன் வாழ வேண்டாமா? அவன் வெளியில வரவே கூடாதா? சாயாக்கடைக்கோ சந்தைக்கோ போகக் கூடாதா? அவன் சாகுறதுவரை இப்படிக் கண்ட இடத்தில எல்லாம் பிடிச்சிட்டிருந்தா என்ன சார் பண்றது?"

"ஆங் . . . பிரசங்கமெல்லாம் தேவையில்லை" என்றார்.

என்னைக் கைது செய்த போலீஸ்காரர் வெளுத்துப்போய் நின்றிருந்தார். கூடவே, எரப்பாளியும்.

"இவன் இப்ப பிரச்சினைக்குரிய ஆளில்லை. அனுப்பி வெச்சிடு" என்றார்.

நான் வெளியே வந்து நின்று சொன்னேன்: "சார் இங்க விட்டுருந்த என் செருப்பைக் காணோம்."

"விட்ட இடத்தில தேடிப்பாரு" என்றார் எஸ்ஐ.

"இல்லை சார், இவர் அதை எடுத்து வெளியே வீசிட்டார். உங்களைப் பார்க்க வர்றவங்களை இப்படியா சார் நடத்துறது?"

எஸ்ஐ போலீஸ்காரரிடம் கோபப்பட்டார். "உங்கிட்ட யாரு சொன்னா செருப்பை எடுத்து வெளியே வீசுறதுக்கு? எடுத்துக்கொண்டு வந்து கொடுடா" என்றார்.

போலீஸ்காரரும் எரப்பாளியும் வெளியே ஓடி ஆளுக்கொன்றாக எடுத்துக் கொண்டு வந்தார்கள்.

வெளியே காத்து நின்றிருந்த ஆட்டோகாரனிடம்: "வேண்டாம் நான் நடந்து போய்க்கிறேன்." என்றேன்.

"தேவையில்லாம சிரமப்படுத்திட்டேன். ஆட்டோவிலேயே போயிடலாமே . . ." என்றார் போலீஸ்காரர்.

"அதெல்லாம் எதுக்குங்க?" என்று சொல்லிவிட்டு நடந்தேன்.

பின்னால் போலீஸ்காரரும் வந்தார்: "இல்லை ஆட்டோவுக்குக் காசு கொடுக்க வேண்டாமா?" என்றார்.

நான் கோபப்பட்டேன்: "அது சரி, நியாயமாப் பாத்தா, உங்க மேல மனித உரிமை கமிஷன்லே கம்பிளெயின்ட் பண்ணணும். வழியில நின்னவனைப் பிடிச்சுட்டு வந்துட்டு . . . சும்மா போ மிஸ்டர்."

இறங்கி நடக்க ஆரம்பித்தவன் திரும்பி எரப்பாளியைப் பார்த்துக் காறித் துப்பினேன். மீண்டும் கிழக்கேகோட்டைக்கு வந்து பழி தீர்ப்பதுபோல் இன்னொரு ஐஸ்கிரீம் சொன்னேன். "இப்ப யார் என்னைத் தடுக்குறான்னு பாக்குறனே."

சைக்கிள்: நான் புகழ்பெற்ற திருடனாக வாழ்ந்த காலம். இளம் வயது. பழைய போலீசாரின் காலம். ஒருநாள், போலீஸ் ஸ்டேஷனில் கையெழுத்துப் போடுவதற்காக வந்தேன். பறிமுதல் பொருட்கள் கிடந்து துருப்பிடிக்கும் இடத்தின் பக்கத்தில் சைக்கிளை ஸ்டான்ட் போட்டு நிறுத்திவிட்டு உள்ளே போனேன். திரும்பி வரும்போது சைக்கிள் இல்லை. பழைய சைக்கிள்தான். போலீஸ்காரர்களிடம் கேட்டபோது அவர்கள் கைவிரித்துவிட்டார்கள். அதில் ஒன்றிரண்டு பேர் சிரிக்கிறார்கள். ஏதோ விசாரணைக்காக வந்திருந்த ஒருவர் சொன்னார்:

"வயசான போலீஸ்காரர் ஒரு பழைய சைக்கிளோட சின்னக்கடைக்குப் போயிட்டுருக்கிறதைப் பாத்தேன்."

"சைக்கிளை நான் பூட்டி வெச்சிருந்தனே?"

"அவர் அதை தோள்ல தூக்கிட்டுப் போறார்."

நான் சின்னக்கடைக்கு ஓடினேன். எஸ்எம்பி பாலசின் அருகில் சற்று உள்ளொதுங்கி ஒரு சைக்கிள் கடை இருந்தது. அங்கே தொப்பியை உருவிக் கையில் வைத்தபடி போலீஸ்காரர் நிற்கிறார். நான் ஓடிச் சென்று பார்த்தேன். என்னுடைய சைக்கிள்தான். கடைக்காரன் அதன் பூட்டை உடைக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தான்.

"அய்யோ, இது என் சைக்கிள்."

போலீஸ்காரர் மேலும் கீழுமாக மூச்சு வாங்கிக்கொண்டிருந்தார். சுமந்து கொண்டுவந்ததல்லவா? இறந்துபோன சினிமா நடிகர் கிருஷ்ணன் குட்டிநாயர் போலீஸ் வேஷத்தில் வந்தால் எப்படியிருக்கும்? அந்த அளவுக்குப் பலவீனமாக இருந்தார்.

அவர் சொன்னார்: "உன் சைக்கிளா? தள்ளி நில்லுடா . . . யாருடா நீ?"

நான் பதில் சொல்லவில்லை.

"நீ என்னடா வேலை பாக்குறே?"

"திருடுறது . . ."

"அது வேலையாடா?"

"வேலை செய்யாம திருட முடியாதில்லையா சார் . . ."

"இந்த சைக்கிளை எங்கிருந்துடா திருடுனே?"

"அய்யோ, இது வீட்டுப் பக்கத்திலுள்ள ஒரு சைக்கிள் கடையிலிருந்து வாடகைக்கு எடுத்தது சார்."

"எங்களுக்குக் கம்பிளெயின்ட் வந்திருக்கு."

"அதெப்படி சார்?"

"வந்திருக்குடா, போடா. இனிமேல் இந்த ஏரியாவிலேயே உன்னைப் பாத்துடக் கூடாது" என்று சொல்லிவிட்டு கடைக்காரனிடம் சொன்னார்:

"ஒரு பத்து ரூபா இவனுக்குக் கொடுத்திட்டு பாக்கி நாற்பது ரூபாவை என்கிட்ட தா. பாவம் இங்க வரைக்கும் வந்துட்டானில்லையா?"

நான் சொன்னேன்: "சைக்கிள் என்னோடது சார் . . ."

அவர் லத்தியை வீசினார். நான் ஓடி ஸ்டேஷனுக்கு வந்து அங்கிருந்த போலீஸ்காரர்களிடம் சொன்னேன். அதிலொருவர்: "இந்த ஆளோட வேலையே இதுதான். நீ வா" என்று சொல்லி என்னை எஸ்ஐயிடம் அழைத்துச் சென்றார்.

"சார், இது கொஞ்சமும் சரியில்லை. அன்னைக்கு என்னடான்னா என்னோட சைக்கிளை எடுத்திட்டுப்போய் வித்துட்டார். பறிமுதல் செய்த சைக்கிளை எல்லாம் வித்துக் குடிக்கிறார். இப்ப இதோ திருடனோட சைக்கிளையே திருடிட்டார். அவமானமா இருக்கு சார் . . ."

எஸ்ஐ சொன்னார்: "என்னை என்ன பண்ணச் சொல்றீங்க? அவர் ரிட்டயர் ஆகுறதுக்கு இன்னும் நாலு மாசம்தானே இருக்கு? கொஞ்சம் பொறுத்துக்குங்க. நான் ஏதாவது செய்தா பிறகு நீங்களே சொல்வீங்க, வயசான காலத்தில அவருக்கு பென்ஷன் கிடைக்காமப் பண்ணிட்டேன்னு . . ."

அவர் ஒரு போலீஸ்காரரை அழைத்து: "அவர்கிட்டே மரியாதையா இவனோட சைக்கிளைக் கொடுத்திடச் சொல்லிட்டு அவசரமாக என்னை வந்து பாக்கச் சொல்லு." என்றார்.

"இப்ப அவர் சேவியர்ஸ் பார்ல இருப்பார் சார்."

"டேய், அந்த சைக்கிள் திருடினதாடா?"

"அய்யோ இல்லை சார்."

சைக்கிள் கிடைத்தது.

டி.கே. ஜோஸ்: மைசூரில் அரசாங்கம் கைப்பற்றிய என்னுடைய சொத்துக்களில் குறிப்பிட்ட பங்கினைத் திருப்பித் தரும்படி நீதிமன்றத்தில் முறையிட்டேன். அதெல்லாம் திருட்டு மூலதனத்தில் சம்பாதித்த சொத்துக்கள் என்பதை ஒப்புக்கொண்டதுடன் மூலதனம் பலமடங்காகப் பெருகியதில் பெருமளவும் என்னுடைய உழைப்புதான் என்றும் திருடியதுபோக மிச்சம் வருவதில் என்னுடைய உழைப்பின் பலனைத்

தரலாமே என்பதுதான் என்னுடைய வாதம். நீதிமன்றத்திற்கென்று சட்டங்களிருந்தன. மூலதனம் எது என்பது அதில் முக்கியமானது. விருட்சத்துக்கான காரணம் விதைதான். ஆகவே, இந்த வாதம் ஏற்புடையதல்ல என்றது நீதிமன்றம். தயவு செய்து முறையீட்டிலிருக்கும் மனிதாபிமானத்தைப் பரிசீலனை செய்ய வேண்டுமென்று நான். ஒரு குற்றவாளி, குற்றவாளியாகவே தொடர வேண்டுமென்பது சமூகத்தின் விருப்பமாக இருக்கலாம். நீதிமன்றமும் இதை விரும்பலாமா? பறிமுதல் செய்த தொகையில் நியாயமாக ஒரு பங்கினை எனக்குத் தந்து அதை முதலீடாக வைத்து உழைத்து நல்லவனாக வாழ என்னை அனுமதிக்க வேண்டுமென்று வாதித்தேன். இதிலிருக்கும் நியாயத்தை நீதிமன்றம் உணர்ந்தது.

இறுதியில், விசாரணை நீதிமன்ற சரகத்திற்குட்பட்ட டிரஷரியிலிருந்து பறிமுதல் செய்யப்பட்ட தொகையின் குறிப்பிட்ட சதவிகிதத்தினைப் பெற்றுக்கொள்ளும்படி நீதிமன்றம் தீர்ப்பளித்தது.

நான் பெருமளவும் எதிர்பார்த்திருந்த இந்தப் பணத்தை வாங்குவதற்காக சிரயின்கீழ் சப் டிரஷரிக்குச் சென்றபோதுதான் அது மறுக்கப்பட்ட தகவல் கிடைத்தது. இந்தப் பணத்தை கர்நாடகா உள்துறை அமைச்சகம் டிரஷரியில் செலுத்த வேண்டும். பிறகு, எஸ்பி டி.கே. ஜோஸ் சார் கொல்லம் டிஒய்எஸ்பியாக இருக்கும்போது நன்னடத்தையை நான் வெற்றிகரமாக பூர்த்தி செய்ததற்கான சான்றிதழை நீதிமன்றத்துக்கு அனுப்பி வைத்தார்.

டிரஷரியிலில் சொன்ன அறிவுரையின்படி அப்பீல் செய்வதற்கான படிவத்தை முதல் நிலை நீதிமன்றத்திலுள்ள ஒரு பெண்மணி தந்தார். இது நடந்தது 1998 பெப்ரவரியில். அதனுடன் மீண்டும் நான் ஜோஸ் சாரைப் போய்ப் பார்த்தேன். சார் விசாரித்துவிட்டுச் சொன்னார்:

"நீ சொன்ன விஷயங்கள் உண்மைதான்னு விஜிலன்ஸ் விசாரணையில தெரிய வந்திருக்கு. அப்புறம், இதெல்லாம் சிக்கல் பிடிச்ச சமாச்சாரங்கள். முடிஞ்ச அளவுக்கு நாம முயற்சி பண்ணுவோம்."

ஆனால், என்னுடைய போதாத காலம், ஜோஸ் சார் கோட்டயம் கிரைம் பிராஞ்ச் எஸ்பியாக இடம் மாறுதலாகிப் போனார். பிறகு இதுசம்பந்தமாக நான் பக்கத்து ஊரான, மய்யநாட்டைச் சேர்ந்த ராஜேந்திரன் எஸ்பியை அணுகினேன். இவர் புகழ்பெற்ற வழக்கறிஞர் வரிஞ்ஞும் ராமச்சந்திரநாயரைப் பார்க்கச் சொன்னார். எங்களுக்குள் ஏற்கனவே

அறிமுகமிருந்தது. அவரைப் போய்ப் பார்த்தேன். இரண்டு மாநிலங்களுக் கிடையிலான பிரச்சினை என்பதால் உச்சநீதி மன்றத்துக்குப் போக வேண்டுமென்றார். உச்சநீதிமன்ற வழக்கறிஞரான ஆந்திராவைச் சேர்ந்த ஜெயகிருஷ்ணனை ஏற்பாடு செய்து தந்ததுடன் வழக்கு எண்ணையும் தந்தார். ஏதேதோ பேப்பரில் நான் கையொப்பமிட்டுக் கொடுத்தேன். பிறகு, இதையெல்லாம் விசாரித்துக்கொண்டிருக்கவா நேரம்? உள்ளூர்த் திருடன் உச்சநீதிமன்றத்தில் வாதாடி வெற்றிபெற முடியுமா? அதை அப்படியே விட்டேன்.

சில நேரங்களில் இதை நினைத்து வருந்துவேன். மகன் சொல்வான்:

"டாடி, இன்னும் எதுக்காக சவக்குழியைத் தோண்டுறீங்க? போட்டுப் புதைச்ச எல்லாத்தையும் இழுத்து வெளியே போடாதீங்க. நமக்கு எதுவும் தேவையில்லை. உள்ளதைத் தின்னுட்டு இங்கேயே வாழ்ந்துடலாம். அந்தப் பணத்தை அரசாங்கமே சாப்பிடட்டும்."

விஜயகுமாரன்: எஸ்ஐகளில் ஒருவரை வேதனையுடன்தான் நினைவுகூர இயலும். என் நெஞ்சில் குழிதோண்டிய சார் இவர். சாஸ்தாம்கோட்டை தடாகம் உல்க்கு[6] விழுந்ததால் உருவானதாம். மல்லாந்துப் படுத்தால் என் நெஞ்சுக் குழியிலும் தண்ணீர் நிரப்பலாம். இது உல்க்க விழுந்தல்ல, விஜயகுமாரன் சாரின் உலக்கை விழுந்து உருவானது. இதற்கான வாய்ப்பு அவருக்குக் கிடைத்த சம்பவம் இது:

இன்றைய சீரியல் இயக்குனர் ஏ.எம். நஷீரின் வாப்பா வீட்டில் நானொரு முறை நுழைந்தேன். கொல்லம் நகரில் போளயத்தோடு ரெயில்வே ரோட்டில் தான் வீடு. குடும்பப்பெயர் குறும்பேலில். புகழ்பெற்ற குடும்பம். என்னுடைய தாத்தா, குறும்பேலில் கோயா முதலாளியின் கணக்குப் பிள்ளையாக இருந்தார். அன்று தாத்தாவுடன் போனதால் இந்த வீடுகளெல்லாம் எனக்கு நன்றாகத் தெரியும். இந்த வீடு அவர்களுடைய குடும்ப வீட்டிலிருந்து தொலைவிலிருந்தது. இது குறும்பேலில் குடும்பத்தாரின் வீடு என்று தெரியாது. தெரிந்திருந்தால் நான் நுழைந்திருக்கவே மாட்டேன். ஏனென்றால், செத்துப்போன அப்பாவுக்கும், அவரது முன்னோர்களுக்கும் இது பிடிக்காது. மட்டுமல்ல, தெரிந்தவர்கள் வீட்டில் நான் திருடவும் மாட்டேன்.

கொஞ்சம் நகைகளும் இரண்டு மூன்று சட்டைகளும் அங்கிருந்து கிடைத்தன. நானும் கிருஷ்ணன்குட்டி என்பவனும் பார்ட்னர்ஷிப்பில் ஒரு கார் வைத்திருந்தோம். என்னுடைய தேவையற்ற பயணங்களெல்லாம்

இந்த காரில்தான். கிருஷ்ணன் திறமையும் நம்பிக்கைக்குரியவனுமான டிரைவர். திருடிய சட்டையில் ஒன்றை நான் இவனுக்குக் கொடுத்தேன். எங்கிருந்துத் திருடியது என்று சொல்லவில்லை. இதனிடையில் கிருஷ்ணன் வீடு மாறினான். இதை அவன் என்னிடம் சொல்லவில்லை. சொன்னாலும் என்னுடைய வேலைப் பளுவில் இம்மாதிரி சிறு விஷயங்களில் நான் கவனம் செலுத்தியிருக்கவும் மாட்டேன். என்னுடைய போதாத காலம், திருட்டு நடந்த வீட்டின் பக்கத்தில் அவன் வாடகைக்கு வீடு எடுத்தான்.

குறும்பேலில் முதலாளி தன்னுடைய புதிய வீட்டின் மொட்டை மாடியில் நிற்கும்போது கீழே பக்கத்து வீட்டில் கிருஷ்ணன். முதலாளி, மகனுக்கோ மருமகனுக்கோ அன்பளித்த சட்டையை அணிந்துகொண்டு எவனோ ஒருவன் கீழே நிற்கிறான். முந்தைய நாள் திருட்டுப்போன சட்டை. முதலாளிக்குக் கோபம். நகைகள் திருட்டுப்போனதற்காக அவர் புகார்கூட கொடுக்கவில்லை. ஆனாலும் கிருஷ்ணனைப் பார்க்கும்தோறும் அவருக்குப் பற்றிக்கொண்டு வந்தது. அவன் அதைக் கழற்றி வைப்பதாகவுமில்லை. விலையுயர்ந்த சட்டையல்லவா? மூன்று நான்கு நாட்களாக அவன் அதையே அணிந்திருந்தான். அதை அவன் கழற்றி வைப்பதற்குள் ஈஸ்ட் ஸ்டேஷனிலிருந்து வந்து பிடித்துக்கொண்டு போனார்கள். ஸ்டேஷனில் ஏறியதுதான் தாமதம், முகத்தில் ஒரு அடி விழுந்தது. கிருஷ்ணனுக்கு ஒன்றும் புரியவில்லை.

முதல் கேள்வியே: "நகைகளை என்னடா பண்ணினே?" என்பதுதான்.

பாவம். அவனுக்கு என்ன தெரியும்? அவன் எந்த நகை . . . என்று முழித்தான்.

"உனக்குத் தெரியாதாடா?" கேள்வியைத் தொடர்ந்து மீண்டும் நான்கைந்து அடிகள். பிறகு, அடுத்தக் கேள்வி.

"சட்டை நல்லா இருக்கேடா . . . ரொம்ப விலை இருக்குமே . . ? எங்கிருந்து கிடைச்சது?" கிருஷ்ணனுக்குப் புரிந்துவிட்டது. மனதிற்குள் என்னை நினைத்த மறுநிமிடம் கிருஷ்ணன் கிளிப்பிள்ளையாக மாறி உள்ளதையெல்லாம் ஒப்புவித்தான்.

நான் புத்தன் சந்தையில் நிற்கிறேன். ஜீப் வந்தது. ஹரிஹரபுத்ரன், காரணவர், செல்லப்பன்பிள்ளை ஆகியவர்களுடன்.

"மவனே மணியா . . . வாடா ஸ்டேஷனுக்குப் போவோம்."

இடையிடையே என்னை இப்படி அழைத்துக்கொண்டு போவது வழக்கம்தான். அல்லது வரச் சொல்வார்கள். புதிய ஏமான்கள் வந்தால் முகம் காட்டுவதற்காக! இதுவும் அதுபோல்தான் என்று நினைத்தேன்.

ஸ்டேஷனுக்குப் போனதும் கிருஷ்ணனை மறைத்து நிறுத்திவிட்டு என்னிடம் கேட்டார்கள்:

"குறும்பேலில் வீட்டுல திருடுனியாடா . . ?"

"இல்லை. நான் அங்கெல்லாம் திருடமாட்டேன்."

"உண்மையாதான் சொல்றியா?"

"உண்மையாதான் சொல்றேன்."

"திருடனோட உண்மையில்லையாடா?"

"இல்லை. மணியனோட உண்மை."

கிருஷ்ணனைக் கூப்பிடுடா என்றார். கிருஷ்ணன் வந்தான்:

"மணியா, இனியும் என்னை அடி வாங்க வெச்சுடாதே மணியா . . ."

எஸ்ஐ விஜயகுமாரன் சார் கேட்டார்: "இப்ப என்ன சொல்றே?"

"இப்பவும் அதைத்தான் சொல்றேன்."

"சரி, இந்தச் சட்டை?"

"நான் கொடுத்தேன்."

"எங்கிருந்து கிடைச்சது?"

"ஒரு வீட்டிலேருந்து திருடினது."

"சரி, அங்கிருந்து வேற என்னவெல்லாம் திருடினே?"

கணக்குகளை மிகச் சரியாக ஒப்புவித்தேன்.

"குறும்பேலில் வீட்டில திருடமாட்டேன்னு சொன்னே?"

குறும்பேலில் குடும்பத்தினரின் வீடுகள் எனக்குத் தெரியும். அவர்கள் இந்த வீட்டை வாங்கியது எனக்குத் தெரியாது. விசாரணை அதிகாரிகள், மொய்தீன்குஞ்ஞு சிஐயும் விஜயகுமாரன் எஸ்ஐயும்.

விஜயகுமாரன் சார் சொன்னார்: "நீ கோர்ட்டில ஏறி விவாதிக்கிறவனில்லையா? இந்த கேசிலும் விவாதிச்சுப் பாரேன்." விஜயகுமாரன் சார் புதிய ஆள்.

வழக்கை விவாதிக்க வேண்டுமென்று தோன்றினால் அவனே விவாதிப்பான் என்பது போன்ற சில விஷயங்களை சார் கேள்விப்பட்டிருந்தார். இரண்டு மூன்று காரணங்களை முன்வைத்து என் தரப்பை நான் வாதிப்பேன். அன்றெல்லாம் சொந்தச் செலவில்தான் வழக்கறிஞரை நியமிக்க வேண்டும். திருட்டு வழக்கைப் பொறுத்தவரைக்கும் சீக்கிரமாக முடித்துக் கொள்ளவே போலீஸார் விரும்புவார்கள். பெரும்பாலான திருடன்களுக்கும் எதுவும் தெரியாது. போலீஸார் எழுதி வைத்திருப்பதை ஒப்புக்கொள்ளும்படி சொல்வார்கள். அவர்களும் நீதிமன்றத்தில் அப்படியே ஒப்புக்கொண்டு, கிடைக்கிற தண்டனையைப் பெற்றுக்கொள்வார்கள். இன்று, வழக்குக்கும் ஜாமீனில் வருவதற்கும் இலவச சட்ட உதவிகள் கிடைக்க ஏற்பாடுகள் உள்ளன. அன்றெல்லாம் பணமில்லையென்றால் ஜெயில்தான்.

சரி, பணம் கொடுத்து ஏற்பாடு செய்யும் வழக்கறிஞருக்கு என் வழக்கை நானே வாதிப்பதுபோன்ற அக்கறை இருக்குமா? சில வழக்கறிஞர்களின் அறியாமையைப் பார்க்கும்போது அந்தத் திசையில் நோக்கித் தலைவைத்துப் படுக்கவும் தோன்றாது. வீணாகப் பணம் செலவு செய்து எதற்கு உள்ளே போக வேண்டும். சொந்தமாக வாதிக்கும்போது வழக்குத் தொடர்பான பிரதிகள் கையில் கிடைக்கும். இதை வாசித்தாலே போதும். சாதாரண அறிவுள்ள யாருக்கும் வாதிப்பதற்கான விஷயங்கள் கிடைத்துவிடும்.

என்னைத் தெரியாத நீதிபதிகள் கேட்பார்கள்: "வழக்கை மறுக்குறியா? வக்கீல் யார்?"

நான் பணிவுடன் சொல்வேன்: "மாண்புமிகு நீதிபதி அவர்களே, வக்கீல் ஏற்பாடு பண்றதுக்கான பண வசதியில்லை. ஃபீஸ் கொடுக்கணும்னா அதுக்கும் சேத்துத் திருடணும். (நீதிமன்றத்தில் சிரிப்பலைகள் படரும்)

ஆகவே, மாண்புமிகு நீதிமன்றம், என்னோட வருத்தங்களை நானே சொல்லவும் சந்தேகங்களைக் கேட்டுத் தெரிஞ்சுக்கவும் அனுமதிக்கணும்."

விசாரணை ஆரம்பமாகும். எனக்குச் சட்ட நுணுக்கங்கள் தெரியாது. நீதிமன்றம், போலீஸ் நடவடிக்கைகள் குறித்து அனுபவம் சார்ந்து ஓரளவு தெரிந்து வைத்திருந்தேன். இதை வைத்து என்னுடைய வழக்கை நானே விவாதிப்பேன். சரஸ்வதி கடாட்சம் தேவையான அளவுக்கு இருப்பதாக பல வாதங்களின்போதும் எனக்குத் தோன்றியதுண்டு. தேவையான அனைத்தும் நாவில் வந்துவிடும். நாக்கிருந்தால் தூக்கில்லை என்றொரு சொலவடை இருக்கிறதல்லவா?

எழுபதுகளின் தொடக்கம். என்னுடைய வழக்குகளை நானே விவாதிக்க ஆரம்பித்திருந்த காலகட்டம். மனதிற்குள் பயமுமிருந்ததால், வாதத்தில் அபத்தங்களும் அறியாமைகளும் நிறைய இருக்கும். போலீஸ் அதிகாரிகள் என்றால் கடவுளுக்கு நிகரானவர்கள். அவ்வளவு பயபக்தி. விவாதிப்பான் என்று தெரிந்ததும் அவர்கள் மிரட்டி அனுப்புவார்கள்: "குற்றத்தை ஒப்புக்கொண்டுடு. அப்படியே விவாதிக்கிறதாக இருந்தாலும் அதிகாரிகள் யாரையும் அதில இழுக்கக்கூடாது. அப்படி ஏதாவது பண்ணினேன்னு வெச்சிக்கோ மவனே, அடிச்சுப் பருப்பை எடுத்துடுவோம். வழக்கையும் கொண்டு நீ நேரா சொர்க்கத்துக்கெல்லாம் போயிட முடியாது. திரும்பவும் இங்கதான் வருவே, ஞாபகமிருக்கட்டும்" என்பார்கள்.

ஒரு அதிகாரி சொன்னார்: "என்னை இழுத்து கூண்டில ஏத்துனேன்னா தா . . . ளீ உன்னை அடிச்சுக்கொன்னு கொச்சிலாமூடு கடக்கரையில கொண்டுபோய் போட்டுட்டுவேன்."

கொல்லத்தின் மிகப் பெரிய வழக்கறிஞர்களில் ஒருவரான வரிஞ்ஞும் ராமச்சந்திரன் நாயர்தான் இந்த விஷயத்தில் என்னுடைய குரு. என் வாதங்களைக் கேட்டதும் அவர் சொன்னார்: "உங்கிட்ட நல்ல வாக்கு சாதுரியமிருக்கு. பூ போல நீ வெளியே வந்துடலாம். அதுக்கு நீ புலனாய்வு அதிகாரிகளையும் குறுக்கு விசாரணை பண்ணணும்."

"அய்யோ அதெல்லாம் சரிப்படாது சார், அவங்கெல்லாம் பெரிய அதிகாரிங்க."

"கோர்ட்டுல உனக்கு எந்தப் பயமும் வேண்டாம். அவங்களால உன்னை எதுவும் செய்துட முடியாது. அதுக்கான தைரியமும் வராது. விசாரணை

செய்யும்போது போக்கிரித்தனமான எதைக் கேட்குறதா இருந்தாலும் முதல்லே அவர்கள் தாங்கள்னு மரியாதையா தொடங்கணும், அவ்வளவுதான்.

ஜெயில் அறையில் என்னுடைய வழக்குகள் தொடர்பான பேப்பர்கள் இருக்கும். கடைசியில் என்னுடைய அறையில் வழக்குகள் சம்பந்தமான பேப்பர் கட்டுக்கள் ஒன்றரையடி உயரத்தில் இருந்தன. வழக்கறிஞரின் அலுவலகம்போல். நான் கரைத்துக் குடித்திருந்த காகிதக்கட்டுகள். சக கைதிகளின் கேஸ் ஷீட்டுகளையும் பார்த்துக்கொடுப்பேன். ஆறாம் வகுப்பு வரை மட்டுமே படித்திருந்தாலும் எதையும் நுட்பமாகக் கையாளுவேன். பிரச்சினையின் ஒட்டுமொத்த சாராம்சத்தினைப் புரிந்துகொள்வதற்குத் தேவையான இங்கிலீசும் தேவியின் அருளால் வாய்த்திருந்தது.

குறும்பேலில் குடும்பத்தினரின் வழக்கில் என்னிடம் நீதிமன்றத்தில் விவாதிக்கச் சொன்ன எஸ்ஐயிடம் பணிவுடன் சொன்னேன்: "நான் விவாதிக்க மாட்டேன் சார். குற்றத்தை ஒப்புக்கொண்டு ஜெயிலுக்கே போயிடறேன்."

எஸ்ஐ விடுவதாக இல்லை. "இல்லை, வாதிச்சுதான் பாரேன். நீ ஜெயிச்சுட்டேன்னா, ஈஸ்ட் ஸ்டேஷன்ல நானிருக்குறவரைக்கும் உன்பேர்ல கேஸ் போட மாட்டேன்."

சவாலாக இருந்தாலும் நல்லதொரு வாக்குறுதி. அதெல்லாம் வேண்டாம் சார் என்பதுபோல் பணிவுடன் நின்றேன்.

திருட்டு நகைகள் மீட்கப்பட்டன. எனக்கெதிரான எல்லா ஆதாரங்களும் தெளிவாக இருக்கின்றன. இருந்தும் நீதிமன்றத்தில் நான் குற்றத்தை மறுத்தேன். புரிதலுள்ள ஒரு திருடன் உறுதியுடன் நின்றால் ஏதாவது ஓட்டைகள் கிடைக்காமலிருக்காது. போலீஸ்காரர்களின் அதீத நம்பிக்கைதான் பிரச்சினையே. சாட்சிகளை வரிசையாக நிறுத்தி விசாரணை செய்தேன். சாட்சிகளில் பெரும்பாலானவர்களும் போலீஸ் ஏற்பாடு செய்தவர்களாகவே இருப்பார்கள். இவர்களுடைய வேஷத்தைக் கலைப்பது சிரமமான காரியமெல்லாம் இல்லை. ஏனென்றால் பெரிய அளவிலான கருத்துப் பரிமாற்றங்கள் எதுவும் இவர்களுக்குள் நிகழ்ந்திருக்காது. போலீஸ்காரர்கள் எழுதி வைத்திருப்பதிலிருந்து இவர்களது சாட்சியங்கள் முரண்பட்டு விடவும் கூடாது. எதுவாயினும் எஸ்ஐ இந்த வழக்கை ஒரு சவாலாக எடுத்திருக்கிறார். வேறு எந்த

வழக்கிலும் இல்லாதபடி சாட்சிகளை ஸ்டேஷனில் உட்கார வைத்து காணாப்பாடமும் சொல்லிக் கொடுத்திருந்தார்கள்.

வாதம் தொடர்ந்துகொண்டிருந்தது. 11:30க்குத் தொடங்கிய விசாரணை மணி ஒன்றரையாகியும் முடியவில்லை. பதினைந்தே நிமிடத்தில் முடிந்திருக்க வேண்டியது. நீதிமன்றத்துக்குப் பசித்தது. நீதிபதி கேட்டார்:

"என்ன மணியன்பிள்ளை இது, இன்னுமா விசாரணை முடியலை?"

"மாண்புமிகு நீதிபதி அவர்கள் மன்னிக்கவும். சாட்சிகளோட வாக்குமூலத்தில் ஏதாவதொரு தொடர்பிருந்தால்தானே முடிவுக்கு வரும்?"

பதினொன்றாம் சாட்சிவரைக்கும் விசாரணை அறிக்கையும் சாட்சிகளின் வாக்குமூலமும் முரண்பட்டுக் கிடந்தன. பிறகு, புலனாய்வு அதிகாரி என்ற நிலையில் விஜயகுமார் சாரிடம் குறுக்கு விசாரணை ஆரம்பமானது. வழக்கிலுள்ள முரண்பாடுகளை நான் ஒவ்வொன்றாகக் கேட்க ஆரம்பித்தேன். சார் வேர்த்து விறுவிறுத்து நின்றார். பொறுமையை இழந்த நீதிபதி கோபத்தில் சொல்லிவிட்டார்:

"நிறுத்துங்க, மிஸ்டர் ஆஃபீஸர். நான் மணியன்பிள்ளையை விடுதலை செய்திடறேன். நீங்க தொப்பியைக் கழற்றிட்டு அவனுக்கு அசிஸ்டென்டா இருங்க."

முடிந்தது. நான் எல்லாவற்றையும் மறந்துவிடவும் செய்தேன். திருடன்கள் போலீஸ் அதிகாரிகளை அவ்வப்போது ஸ்டேஷனில் வந்து சந்தித்துச் செல்ல வேண்டுமென்பது எழுதப்படாத விதி. திருடன் ஒழுங்காக இருக்கிறானா என்று அறிந்துகொள்வதற்கான ஒரு ஏற்பாடு இது. அவன் அண்மைக் காலத்தில் வரவில்லை என்றால் ஏதாவது ஆபரேஷன் நடத்தியிருப்பான் என்ற முடிவுக்கு போலீஸ் வரும். அப்படியாக வழக்கு முடிந்த அன்றும் வழக்கம்போல் நான் எஸ்ஐயைப் பார்ப்பதற்காக ஸ்டேஷனுக்கு வந்தேன்.

"போ . . . போ . . . ஐயா உள்ளதான் இருக்கார் . . ." என்று தெரிந்த போலீஸ்காரர் உள்ளே அனுப்பி வைத்தார்.

என்னுடைய மனதில் அப்போதும் சவாலில் வெற்றிபெற்றுவிட்டதான எண்ணமே இல்லை. அவர் வாதித்துப்பார் என்று சொன்னதால் நான்

வாதித்து விட்டேன். அவ்வளவுதான். போலீஸ் அதிகாரிகள்மீது மனதிற்குள் நான் பகையோ கோபமோ வைத்திருப்பதில்லை. ஆகவே, எஸ்ஐயைத் தோற்கடிக்க வேண்டுமென்ற எண்ணமும் என்னிடமில்லை.

வழக்கில் விடுதலையானால் அப்படியே போய்விடலாம். எனக்கு சப் ஜெயிலிலிருந்து உடுப்புகளெல்லாம் எடுக்க வேண்டியதிருந்தது. சக கைதிகள் மதிய உணவு எடுத்து வைத்திருப்பார்கள். சாப்பிடவும் வேண்டும். தவறினால் அடுத்த வேளை சாப்பாடு இரவுதான். சாப்பிட்டுவிட்டு ஜெயில் அதிகாரிகளிடமும் சக கைதிகளிடமும் விடைபெற்றுவிட்டு, எஸ்ஐயைப் பார்த்துவிட்டுப் போகலாமென்று ஈஸ்ட் ஸ்டேஷனுக்கும் வந்தேன். இதெல்லாம் வழக்கமான சம்பிரதாயங்கள்தான். நான் உள்ளே போகும்போது விஜயகுமார் சார் என்னவோ எழுதிக்கொண்டிருந்தார். என்னைக் கண்டது தான் தாமதம், துள்ளியெழுந்து "திரும்பவும் வந்திருக்கிறியாடா தா . . ." என்று அலறியபடியே ஓடி வந்தார். நான் கையையும் கட்டிக்கொண்டு சுவர் பக்கமாக ஒதுங்கி நின்றேன். உருட்டு உலக்கை கீழே கிடந்தது. முன்பு என்மீது உருண்ட அதே உலக்கை. என்னுடைய வாழ்க்கையில் மூன்று தடவை நடந்த உலக்கைப் பிரயோகத்தில் மிகவும் மூர்க்கத்தனமாக நடந்துகொண்டவர் இந்த சார்தான். அதுவும் காரணமில்லாமல். உருட்டும்போது இவர் முகத்தில் குரூரமிருக்காது. ஏதோ ஒரு ஆனந்தம் தாண்டவமாடும்.

கொல்லத்தில் முன்பொரு கிரிமினல் இருந்தான். இவனது வாசஸ்தலமும் சின்னக்கடைதான். இவன் பிறந்ததும் வளர்ந்ததும் இங்கேதான். இவனுடைய அம்மா, சந்திரிகா. பென்சிகரின் எதிரிலுள்ள ஒரு பாலம் இவள் பெயரில் சந்திரிகாபாலம் என்றுதான் இன்றும் அறியப்படுகிறது. சின்னக்கடையில் இன்னுமொரு பாலமிருக்கிறது. அது, குஞ்ஞும்ம பாலம். இவளைப் பற்றி எனக்குத் தெரியாது. முந்தைய காலத்துக் கதை அது. அந்தக் காலகட்டத்தின் தனித்துவமுள்ள விலைமாதர்கள் குஞ்ஞும்மயும் சந்திரிகாவும். திருடனுக்கும் விபச்சாரிகளுக்கும்கூட தனித்துவமா? ஆமாம். நான் சின்னக்கடையில் வந்து வித்தைப் படிக்கத் தொடங்கிய காலம், சந்திரிகா கலக்கலின் கடைசிக் கட்டம். ஐந்தே முக்கால் அடி உயரமும் அதற்கேற்ற உடல்வாகுமுள்ளவள். அட்டகாசமாகக் குடிப்பாள். போலீசுக்குப் பயந்து இடைவழியில் ஒதுங்கிக்கொள்ளும் விலைமகளல்ல இவள். சின்னக்கடைக்கு வந்தாள் என்றால் இவளது முதல் போணி மனதுக்குப் பிடித்தமானதாக இருக்க வேண்டும். அது சின்னப் பையனாகவோ பெரிய ஆளாகவோ இருக்கலாம். சந்திரிகா வலைவீசிப்

பிடிக்கும் ரகத்தைச் சேர்ந்தவள். இவளுக்கு போலீசெல்லாம் பொருட்டே கிடையாது. ஒரு எஸ்ஐக்கு இவள் கன்னம் பழுக்க ஒன்று கொடுத்ததை நான் பார்த்தேன். அவர் நின்ற நிலையில் மூன்று சுற்றுச் சுற்றிக் கீழே விழுந்தார். சந்திரிகாவின் கையிலிருந்து அடி வாங்கிய பிறகு நான் எஸ்ஐ என்றெல்லாம் சொல்லித் திரிவதில் அர்த்தமில்லை. எல்லாக் கேடிகளும் கேலி செய்வார்கள். ஆகவே, அதிகாரிகள் யாரும் இவளுடனான நேரடி சந்திப்பைத் தவிர்த்துக்கொள்வார்கள். வயதானதும் இவள் சந்திரிகா பாலத்தின் அருகில் பெண்களை வைத்து செட்டப் நடத்தினாள்.

இப்படியான சந்திரிகாவின் புத்திர சந்தானம்தான் மேற்படி கேடி. சதைத் திரட்சிகளெல்லாம் புடைத்துப் பெரிதாக இருக்கும். இவனை விஜயகுமாரன் சார் எதற்காகவோ பிடித்துக்கொண்டு வந்து நிறுத்தி என்னன்னெவோ கேள்விகள் கேட்டார். குஸ்தி பிடிக்கும் போது எப்படிடா மசில் பிடிக்கிறது என்றும் கேட்டார். ஆசான் பெரிய கௌரவத்துடன் ஏமானின் முன் மசில் பிடித்து கைகளை முஷ்டிச் சுருட்டி நின்று கொண்டிருந்த நிலையில் ஏமான் அவனது இடுப்பின் ஏதோ சூட்சுமத்தில் ஒரு பிடி பிடித்தார். ஆசான் அப்படியே அலறிவிட்டான். அவனது வேதனையும் கதறலும் பென்சிகர் ஆஸ்பத்திரியில் சேர்த்த பிறகுதான் நின்றது. மூன்று நாட்களானது அவன் சிறுநீர் கழிப்பதற்கு. அந்த அளவு இரக்கமில்லாத ஒரு அதிகாரி இந்த சார்.

இவரைத்தான் நான் சந்தித்து விட்டுப் போகலாமென்று வந்திருந்தேன். துள்ளியெழுந்த சாரின் முகத்தில் கோபம் உறைந்தேறியது. திருட்டு ராஸ்கல் என்றபடி கீழே கிடந்த உலக்கையை எடுத்து நீயெல்லாம் சாகணும் என்றபடியே நெஞ்சைக் குறிவைத்து ஓங்கிக் குத்தினார். குத்து நெஞ்சுக்கூட்டின் சற்று மேற்பகுதியில் விழுந்ததால் நான் சாகவில்லை. குறி வைத்த இடத்தில் குத்து விழுந்திருந்தால் கதை அப்போதே முடிந்திருக்கும். நெஞ்சின் இடது மேற்பகுதியில் எதுவோ பட்டதாக நினைவு. பிறகு, மூன்று நான்கு வினாடிகள் எதுவும் நினைவில்லை. மீண்டும் அவர் உலக்கையை உயர்த்தும்போது உண்ணி என்ற ஒரு போலீஸ்காரர் பிடிங்கிக் கீழே எறிந்துவிட்டுக் கோபத்துடன் கேட்டார்:

"இது என்ன பு . . . தனமான வேலை சார் . . . நீங்க அண்ணன் தம்பிகளோட பிறக்கலையா?"

எதுவாயினும் விஜயகுமாரன் சார் சொன்ன வாக்கைக் காப்பாற்றினார். அவர் கொல்லம் கிழக்கு ஸ்டேஷனில் பணியாற்றும் காலம்வரைக்கும் என்மீது எந்த வழக்கும் போடவில்லை.

## 73 - உதவி ஆய்வாளருக்கு விருப்ப ஓய்வு

மைசூரில் மெல்லப் பற்றிப் பிடித்து முன்னேறிக் கொண்டிருந்தேன். கேரளத்துக்கு வந்து திருடவேண்டிய தேவைகள் எதுவுமில்லை. மட்டுமல்ல, மனைவி மைசூரிலிருக்கிறாள். பிடிபட்டால் தொலைந்தது. ஆனால், இதையெல்லாம் நான் யோசிப்பதில்லை. திருட்டின் திரில் அனுபவம் பிடித்திழுத்தது. கூடவே, போலீஸ் என்னைச் சந்தேகிப்பதற்கான வாய்ப்புகள் குறைவு என்ற எண்ணம். கொஞ்ச காலமாக நான் தலைமறைவாக இருக்கிறேன் அல்லவா? என்னைப் பற்றிய தகவல் சொல்பவர்களுக்கு ஐயாயிரம் ரூபாய் பரிசு தருவதாக அரசாங்கம் அறிவித்திருந்தது. கால் நூற்றாண்டுகளுக்கு முந்தைய ஐயாயிரம். குமாஸ்தாவுக்கு 750 ரூபாய்கூட சேர்த்துக் கையில் கிடைக்காத காலம். என்னைப் பார்த்த நபருக்கு லாட்டரி. இந்த நிலையில்தான் நான் ரிஸ்க் எடுக்கிறேன். வழியில் ஒரு உயிர் நண்பனைச் சந்தித்தேன். மிகுந்த கஷ்டத்திலிருந்தான். கைப்பணத்தைக் கொடுத்திருக்கலாம். அது எதற்கு? ஆகவே, மய்யநாட்டில் ஒரு வீட்டில் முயற்சி செய்தேன். வெற்றி பெறவில்லை. இந்தப் பணம் யாரிடம் போய்ச் சேர வேண்டுமோ அவனுக்கும் வேண்டும் அதிர்ஷ்டம். மற்றொரு வீட்டில் ஏறினேன். அதிர்ஷ்டமிருந்தது. இரண்டு வளையல்களும் ஒரு கம்மலும் ஹேன்ட் பேக்கிலிருந்து முன்னூறு ரூபாயும் மூன்று வாட்சுகளும் கிடைத்தன. எல்லாவற்றையும் சிறு பெட்டியில் வைத்துக்கொண்டு வந்தேன். முன்னூறு ரூபாயை மட்டும் வேலைக்கூலியாக எடுத்துவிட்டு பெட்டியை அவனிடமே கொடுத்தேன். இந்த ஊரிலிருந்து இத்தனை கிலோ மீட்டர் சுற்றளவில் இதையெல்லாம் விற்கக்கூடாதென்றும் எச்சரித்தேன். இவன் தெரியாத்தனமாக, திருட்டுப்போன வீட்டுக்காரர்களின் உறவினர்களிடமே கொண்டுபோய் விற்க முயற்சி செய்துவிடக்கூடாதே.

அப்படியே கொல்லத்திலிருந்து திருவனந்தபுரத்துக்குச் சென்றேன். மனைவியின் உறவினர்களுடைய பாதுகாப்பில், வள்ளக்கடவு ஸ்கூலில் மகன் இரண்டாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான். ஸ்கூலில் போய் அழைத்து வந்தேன். அன்றைய தினமே மைசூருக்குப் புறப்பட வேண்டும். மகனைப் பார்ப்பதற்காக நான் வருவேன் என்று போலீஸ் அவனையும் கண்காணித்து வந்தது.

மைசூருக்குச் செல்லும் பயணத்தின்போது கோழிக்கோடு ரெயில்வே ஸ்டேஷனில் வைத்து என் சகோதரியின் கணவனைச் சந்தித்தேன். இவர் போலீஸ் எஸ்ஐ. வயநாட்டில் புதூர்வெயில் ஏஆர் கேம்பில் பணியாற்றினார். மகன் பார்த்து விட்டுச் சொன்னான்:

"டாடீ, அதோ சிக்கு, சின்னுவோட அப்பா." சிக்குவும் சின்னுவும் என்னுடைய மருமக்கள். அதாவது, எஸ்ஐ அத்தானின் குழந்தைகள். நான் அந்தப் பக்கமாகச் சென்றேன். என்னைக் கண்டதும் அத்தான் கோபத்துடன் வேகமாக வந்து அக்கம் பக்கம் பார்த்துவிட்டுச் சொன்னார்:

"வந்தவன் ஒழுங்காத் திரும்பிப் போறதை விட்டுட்டு . . ."

"என்ன நடந்ததுன்னுச் சொல்லுங்க."

"இதுக்குள்ளால நீ எங்கடா ஏறினே?"

ஆச்சரியமாக இருந்தது. முந்தாநாள் நான் மய்யநாட்டில் திருடிய விஷயம் கோழிக்கோட்டிலிருக்கும் இவருக்கெப்படி தெரியும்?

"விஷயத்தைச் சொல்லுங்க" என்றேன்.

"வீடு நிறைய போலீஸ். திருட்டுப்போன வீட்டிலேருந்து உன்னோட ஃபிங்கர் பிரின்ட்ஸ் கிடைச்சிருக்கு."

விளங்காமப்போற ஃபோரன்சிக். ஒரு திருடன் கிடைத்துவிட்டால் போலீசாரின் முதல் வேலையே அவனது விரலடையாளத்தைப் பதிப்பதுதான். திருட்டு நடந்த பிறகு முதலில் பரிசோதிப்பதும் அதுதான். சாதாரணமாக, என் கையில் ஒரு டவலிருக்கும். எங்காவது கை பட்டால், பட்ட இடத்தை டவலால் துடைத்து விடுவேன். தெரியாமலும் எங்காவது படும். நான் எங்கெல்லாம் தொட்டிருப்பேன் என்று போலீசுக்குத் தெரியாது. நான் கிளவுஸ் அணிவதில்லை. காரணம் வேறொன்றுமில்லை. இருட்டில் அல்லது மங்கிய நிலவு வெளிச்சத்தில் தொடு உணர்வை வைத்துதான் பொருட்களைக் கிரகிக்க இயலும். தங்க நகைகளின் குளிர்ச்சியிலிருந்து அது அசலா போலியா என்பது தெரிந்துவிடும். கையுறை அணிந்தால் இதை உணர இயலாது.

அத்தான் திட்டினார். "குருத்துவம் கெட்டவனே, உன்னால வீட்டில யாரும் மானம் மரியாதையா வாழ முடியலைடா . . . உன் அம்மாவை மிதிச்சிக் கொல்லணும்னு ஒரு போலீஸ்காரன் காலைத் தூக்கிட்டு வர்றான் . . ."

"ஈஸ்ட் ஸ்டேஷன்ல இருக்குற யாரும் அப்படிப் பண்ணமாட்டாங்க. எல்லாவனுக்கும் என்னைத் தெரியும்."

"ஆமா, ஈஸ்டில உள்ளவன் எதைச் செய்யறதா இருந்தாலும் உன்னைக் கேட்டுதான் செய்வான்."

எனக்குக் கோபம் வந்தது: "அம்மாவுக்கு நேரா காலைத் தூக்குனவன் யாரு? அவனை அங்க விட்டு வைக்கக்கூடாது."

"வேற யாரு, அவன்தான். அந்த பப்படம் ராமகிருஷ்ணபிள்ளை."

நான் அப்போதே கருதி வைத்துக்கொண்டேன். தெரிந்த திருடனுடன் விளையாடக்கூடாது என்றொரு பழமொழி உண்டு. இதை அறியாத போலீஸ்காரர்கள் திருடனை வெறும் கோழைகள் என்று நினைத்துவிடுவார்கள். இதுதான் பப்படம் ராமகிருஷ்ணபிள்ளை எனும் எஸ்ஐக்கும் நிகழ்ந்தது. நான் அவரிடம் நேரடியாகவே சொல்லி விட்டேன்:

"நீங்க சர்வீஸ்ல தொடர நான் விடமாட்டேன்."

"நீ என்னடா பெரிய டிஜிபியா?" என்ற எள்ளலுடன் என்னைப் பார்த்தார். கதை இங்கிருந்துதான் ஆரம்பமானது.

மைசூரிலிருந்து நான் ஊருக்கு வந்த ஒரு நாள். மைசூரில் பிடித்து நின்றுவிட முடியுமென்ற நிலையில் மகனை அழைத்துக்கொண்டு போவதற்காக வந்திருந்தேன். அப்போது எனக்குப் பல உதவிகள் செய்த ஒரு நண்பனைச் சந்தித்தேன். அவன் மிகுந்தச் சிரமத்திலிருந்தான். பணச் சிக்கல்தான். வெறும் ஆறுதலுடன் நிற்காமல் இந்தச் சிக்கலான நிலைமையில் ஏதாவது உதவி செய்தேயாக வேண்டும்.

வருடங்களுக்குப் பிறகு ஒரு வீட்டில் நுழைந்தேன். அதில் கிடைத்த இரண்டு தங்கச் செயினுடன் பப்படம் ராமகிருஷ்ணபிள்ளையின் வீட்டைத் தேடிப்பிடித்தேன். இரவு நேரம். வீட்டின் சமையலறைப் பகுதியிலுள்ள ஓட்டைப் பிரித்து உள்ளே இறங்கினேன். ஒரு அம்மி இருந்தது. மெல்ல உயர்த்தி செயினை அதன்கீழ் வைத்தேன். கல்லை இருந்ததுபோல் வைத்துவிட்டுத் திரும்பினேன்.

போலீசில் பிடிபட வேண்டும். மூன்றாவது நாள், கொல்லம் முண்டைக்கல் அமிர்தாகுளத்தின் அருகிலுள்ள ஒரு வீட்டை நோட்டமிட்டேன். இந்த

வீட்டைத் தேர்வு செய்வதற்கான நோக்கம்: இந்தப் பகுதியில் போலீஸ் பதுங்கியிருக்கும் என்பதுதான். முன்பெல்லாம் இங்கே குறிப்பிட்ட நேரங்களில் புதர்மறைவிலோ பழைய வீடுகளிலோ கடைகளின் சாய்வுகளிலோ போலீசார் ஒளிந்திருப்பார்கள். இந்தப் பகுதியிலுள்ள ஒரு வீட்டில்தான் மதிலேறிக் குதித்தேன். போலீஸ்காரர்களின் காதில் விழும்படி சத்தமாகவே குதித்தேன். சாதாரணமாக, பூனைபோல் மெதுவாகக் குதிப்பவன். எதிர்பார்த்ததுபோல் அவர்களும் கவனித்து என் பின்னால் குதித்தார்கள். நான் ஓடுவதாகப் பாவித்துக் குப்புற விழுந்ததுபோல் நடித்தேன். பிடித்து நான்கைந்து தந்துவிட்டுத் தூக்கி வண்டியில் போட்டார்கள். அன்றைய அவர்களது பதுங்கியிருப்பு அர்த்தபூர்வமானதாக மாறியது. நான் லாக்கப்பில்.

வழக்கு நீதிமன்றத்துக்கு வந்தபோது குற்றத்தை மறுத்து, செய்யாத குற்றத்திற்காக என்னைத் தேவையில்லாமல் பிடித்திருக்கிறார்கள் என்றேன்.

நீதிபதி கேட்டார்: "தேவையில்லாம உன்னைப் பிடிக்கிறதுக்கான காரணம்?"

நான் சொன்னேன்: "ஏற்கனவே பண்ணின குற்றத்திலுள்ள பங்கு குறைஞ்சுப் போயிடுச்சுன்னு பிடிச்சிருக்காங்க மாண்புமிகு நீதிபதி அவர்களே. செய்யாத குற்றத்துக்காக என்னைப் பிடிச்சிருக்க வேண்டாம். செய்த குற்றத்துக்காகப் பிடிச்சிருக்கணும். வேறொரு திருட்டுல, தொண்டியை ரிக்கவர் செய்த இன்வெஸ்டிகேட்டிங் ஆஃபீசர் வழக்கை இல்லாமப் பண்ணிட்டார்."

நீதிபதி கேட்டார்: "மிஸ்டர் மணியன்பிள்ளை சொல்றது உண்மையா? கோர்ட் நடவடிக்கையைத் திசைத் திருப்பினா என்ன தண்டனைன்னு தெரியுமில்லையா?"

"மாண்புமிகு நீதிபதி அவர்களே, நான் சொல்றது உண்மை. நீதிமன்றத்தில எதைப் பேசலாங்கிற விஷயம் எனக்கும் தெரியும். திருடின ஒரு தங்கச் செயினை நான் இன்வெஸ்டிகேட்டிங் ஆஃபீசரான எஸ்ஐ ராமகிருஷ்ண பிள்ளையோட வீட்டில கொண்டுபோய்க் கொடுத்தேன். அவர் அதை வீட்டிலுள்ளவங்க பாத்துடுவாங்கன்னு சொல்லி அம்மிகீழ வெச்சார். அதை எடுத்து இன்னும் அவர் மாற்றலைன்னா இப்பவும் அது வெச்ச இடத்திலதான் இருக்கும். அந்த வழக்கு இன்னும் நிலுவையிலிருக்கு. திருடனை இன்னும் பிடிக்கலை. திருடியவன் நான்தான்."

நீதிபதிக்கு அதிர்ச்சி. அவர் அரசு வழக்கறிஞரைப் பார்த்துச் சொன்னார்: "இந்த மாவட்டத்திலுள்ள பெரிய போலீஸ் அதிகாரிதான் இதற்கான பதிலைச் சொல்லணும்."

அரசு வழக்கறிஞர், கண்காணிப்பாளரைத் தொடர்புகொண்டார். அவர் ஊரிலில்லை. உடனே அட்மினிஸ்ட்ரேசன் டிஒய்எஸ்பி, சர்க்கிள் இன்ஸ்பெக்டரை அழைத்துக் கொண்டுவந்து ஆஜர்படுத்தினார்.

நீதிபதி உத்தரவிட்டார்: "இவர் ஓப்பன் கோர்ட்டில உங்களோட ஒரு அதிகாரி மேல மிகப் பெரிய குற்றச்சாட்டைச் சொல்லியிருக்கார். பிரதி சொல்ற இடத்திலிருந்து அந்தப் பொருளைப் பறிமுதல் செய்து நடவடிக்கை எடுக்கப்படணும்."

என்னை ஜீப்பிலேற்றி நேராக ஈஸ்ட் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோய், எஸ்ஐ ராமகிருஷ்ணபிள்ளையிடம் ஜீப்பில் ஏறச்சொன்னார்.

ஜீப்பில் வைத்து சிஐ சொன்னார்: "நீ சொன்ன இடத்தில மட்டும் அது இல்லைன்னு வெச்சிக்கோ, கழுவேறிக்குப் பிறந்தவனே, உன்னைக் கொன்னு கொச்சிலாமூடு கடக்கரையில கொண்டுப் போட்டுடுவேன். மறுநாள் காலையில திருடன் செத்துக்கிடக்கிறதா எங்ககிட்டதான் புகார் வரும். கேசை நாங்களே விசாரிச்சு, கடக்கரையில உள்ளவங்க அடிச்சுக் கொன்னதா கேசை முடிப்போம்."

அப்போது அந்தப் பகுதியில் சண்டைகளும் ஓரிரு கொலைகளும் நடந்திருந்தன. இதனால், பீச்சிலுள்ள ஸெனித் சினிமா தியேட்டரே மூடப்பட்டது. போலீஸ் கொன்ற கணக்கும் இதில் சேர்ந்து விடும்.

நான் பதிலே சொல்லவில்லை. போலீஸ்காரர்கள் முஷ்டிச் சுருட்டிக் காட்டினார்கள்: "அங்க போன பிறகு பாக்கலாம்; போலீஸ்கிட்டயே நீ விளையாடுறியா?" இடையே எஸ்ஐ ராமகிருஷ்ணபிள்ளையும் முஷ்டிச் சுருட்டிக் குத்த வந்தார். உண்மையில் அவருக்குச் சம்பவம் என்னவென்றே தெரியாது.

நான் சொன்னேன்: "கொஞ்சம் இருங்க சார். கொஞ்ச நேரத்தில நாம ரெண்டு பேரும் சம அந்தஸ்துள்ளவங்களா மாறிடுவோம்." இருந்தும் அவருக்குப் பிடிபட வில்லை.

என் நெஞ்சு பதைபதைக்கொண்டிருந்தது. யாராவது, எதிர்பாராமல் அந்த

செயினை எடுத்து மாற்றியிருந்தால் . . ? என் கதையே குளோஸ். ஒப்பன் கோர்ட்டில் கொடுத்த வாக்குமூலம். அது நடந்து இரண்டு மூன்று மணி நேரமாகியிருக்கும். யாராவது ஃபோன் செய்து எஸ்ஐயிடமோ வீட்டிலுள்ளவர்களிடமோ சொல்லியிருக்கலாம். அவர்கள் அதை மறைத்திருக்கவும் அம்மி இளகியிருப்பதைப் பார்த்து யாராவது உயர்த்திப் பார்த்திருக்கவும் நிறையவே வாய்ப்புகள் இருந்தன.

நான் மிகுந்த பதற்றத்துடனிருந்தேன். ஜீப், ராமகிருஷ்ணபிள்ளையின் வீட்டின் முன் நின்றது. அவர் சிஐயிடம் ஆச்சரியமாகக் கேட்டார்: "இங்க எதுக்கு சார் நிறுத்துறீங்க?"

"திருடின பொருளை இவன் உங்ககிட்ட தந்ததாகவும், நீங்க அதை அம்மிகீழ வெச்சதாகவும் சொல்றான்." எஸ்ஐ முதலில் திடுக்கிட்டார். பிறகு, "இவனுக்கு இன்னும் சரியா வாங்காத குறை சார் . . ." என்று சொல்லிவிட்டு என்னைப் பார்த்துப் பல்லைக் கடித்தார்:

"உனக்கு நான் தனியா வெச்சிருக்கேண்டா."

வீட்டுக்குள் சென்றதும் சிஐ சொன்னார்: "தூக்குடா அம்மியை." அம்மியை உயர்த்தினேன். ராமகிருஷ்ணபிள்ளை அப்படியே திகைத்து நின்று விட்டார். அம்மியின்கீழ் இரண்டு தங்கச் செயின்கள். எஸ்ஐயின் மனைவியும் பெண்மக்களும் டிஒய்எஸ்பியின் காலைப் பிடித்துக்கொண்டுக் கதறினார்கள். அந்தக் குடும்பத்தின் பரிதாபமான நிலையைப் பார்த்து, எனக்கே ஒரு நிமிடம் சே . . . என்றாகி விட்டது. இப்போது மாடுபோல் அழுகிற இந்த மனிதன்தான் இயலாதவர்கள்மீது கருணையில்லாமல் அதிகாரத்தை ஏவியவன். இவரைப் போன்ற மனிதர்களின் சரியான அளவுகோலென்பது அதிகாரத்தை இவர்கள் பயன்படுத்துகிற விதம்தான்.

இவர், தனக்குத்தானே உருவாக்கிக்கொண்ட விதி இது. என் வீட்டினுள் யாரும் வந்து தொந்தரவு செய்வதை நான் அனுமதிப்பதில்லை. ஏதாவது பிரச்சினை இருந்தால் வந்து சொன்னாலே போதும். நான் ஸ்டேஷனில் ஆஜராகி விடுவேன். இப்படியிருக்கும்போது, என் காரணம் என் வீட்டிலுள்ளவர்களைத் தொந்தரவு செய்யக்கூடாது. இதில் நான் பிடிவாதமாக இருந்தேன். அவர்களுக்காக நான் திருடவில்லை. அவர்களது விருப்பத்தின் பேரில் திருடனாகவும் இல்லை. அந்தப் பாவங்களைச் சுமக்க வேண்டியவன் நான் மட்டும்தான். அங்கே ஏறி இந்த மனிதர் அட்டகாசம் செய்திருக்கிறார். உன் மகன் எங்கேடீ என்று கேட்டு

உதைப்பதற்காகக் காலை உயர்த்தியிருக்கிறார். என் அக்காவை அசிங்கமாகத் திட்டியிருக்கிறார். இவர் எதையோ கேட்க, அவள் பதில் சொல்லவில்லையாம். அக்காவுக்குக் காது கொஞ்சம் மந்தம். சிறுமியாக இருக்கும்போது அப்பா காதோடு சேர்த்து அடித்ததன் விளைவு. கடைத்திண்ணையில் படுத்திருப்பவர்களையும் கதியற்றவர்களையும் பிச்சைக்காரர்களையும் பிடித்துத் திருட்டு வழக்கில் சேர்ப்பதுதான் இவரது வழக்கம்.

நான் இவருக்கு நிறையவே கொடுத்திருக்கிறேன். நன்றி காட்ட வேண்டாம். ஆனால், இப்படித் தொந்தரவு செய்திருக்கக்கூடாது. என்னைப் பார்க்கும்போதெல்லாம் சொல்வார்: "நீ மட்டும் திருடி சுகம் அனுபவிச்சா போதுமாடா தா . . . எனக்கும் மூணுநாலு பெண்மக்கள் இருக்காங்க. கல்யாணம் பண்ணிக் கொடுக்கணும். எனக்கு நீ பங்கு தரலைன்னா உன்னை நான் தூங்கவிட மாட்டேன். உன்னை மட்டுமில்லை, உன் குடும்பத்தையும் சேர்த்துதான் . . ."

இவர் எதிர்பார்த்த அளவுக்குக் கிடைக்கவில்லையாம். நான் எதிர் பார்த்த அளவுக்கே எதுவும் கிடைக்காத காலகட்டம். இந்தச் சந்தர்ப்பத்தில் தான் வீட்டில் நுழைந்து அம்மாவை மிதிப்பதற்காகக் காலைத் தூக்கியிருக்கிறார். இவரைப்போல் இன்னும் சிலர் ஈஸ்ட் ஸ்டேஷனில் இருந்தார்கள். பணிக்கர், ஹமீது, ஹரிஹரன் என்று. சிஐயின் ஸ்பெஷல் ஸ்குவார்டில் பணிபுரிபவர்கள். சிஐயின் நம்பிக்கைக்குரியவர்கள்தான் ஸ்குவார்டில் வரமுடியும். ஊழலின் மொத்தக் குத்தகையும், மனித உரிமையின் கழுத்தை நெரிப்பதுவும்தான் ஸ்குவார்டின் பணிகள். அன்றுமின்றும் இது இப்படித்தான். தான்தோன்றித்தனத்திற்கான அனுமதிதான் ஸ்குவார்ட் உத்தியோகம்.

ஏதாவது கடைக்காரன்மீதோ நபர்கள்மீதோ இவருக்குக் கோபமிருந்தால் கடையின் பெயரை ஏதாவது திருடனிடம் சொல்லச் சொல்வார். மும்முரமாக வியாபாரம் நடக்கும் நேரம் பார்த்து, போலீஸ்காரர்களுடன் போய் மிரட்டி அவர்களை அவமானப்படுத்துவார். இதுபோன்ற வேலைகள்தான் பப்படத்தின் முக்கியமான பொழுதுபோக்குகள். மய்யநாட்டைச் சேர்ந்த அசோகன் சார் மட்டும்தான் விதிவிலக்கான, நியாயமான ஒரு போலீஸ் அதிகாரியாக இருந்தார். 48 பவுன் நகையை என்னிடமிருந்து மீட்க வேண்டிய ஒரு கட்டத்தில் என்னதான் முயற்சி செய்தும் மூன்று சவரன் பற்றாக்குறையாகவே இருந்தது.

கொல்லம், சரஸ்வதி ஜுவல்லரியில் விற்றதாகச் சொல். பாக்கியை

நாங்கள் பார்த்துக்கொள்கிறோம் என்று ஸ்குவார்ட் போலீசார். நன்கொடை கேட்டு அவர்கள் கொடுக்கவில்லைபோலும். அசோகன் சார் சொல்லிவிட்டார்: "எவ்வளவு இருக்குதோ அவ்வளவையும் காட்டினா போதும். இதற்காக யாரையும் பிழிய நினைக்க வேண்டாம்."

எஸ்ஐ ராமகிருஷ்ணபிள்ளை கேட்பதை என்னால் கொடுக்க இயலாத நிலையில் அவர் செய்யும் அட்டூழியங்களுக்கு அளவிருக்காது. திருட்டு முயற்சிக்கு 47 என்றொரு பிரிவிருக்கிறது. ஆறுமாதம்வரை தண்டனை கிடைக்கும். இரண்டு தடவை இவர் எனக்கு நான்கு மாதத்தண்டனை வாங்கித் தந்திருக்கிறார். இந்த இரண்டு தடவையும் என்னை இவர் வீட்டிலிருந்துதான் பிடித்துக்கொண்டுபோனார். இரவில் ஒரு கடையருகில் சந்தேகப்படும் விதத்தில் பதுங்கியிருந்தான். திருட முயற்சிக்கும்போது பிடிபட்டான் என்றெல்லாம்தான் இந்த வழக்கைப் போடுவார்கள். அப்போதே நான் கருதி வைத்திருந்தேன்: 'ராமகிருஷ்ணபிள்ளே, உனக்கு நான் வெச்சிருக்கேன் வேட்டு.' அம்மாவைப் பார்த்து காலை உயர்த்தியதாக அறிந்ததும் முடிவே செய்துவிட்டேன்.

எஸ்ஐயின் வீட்டிலிருந்து திருட்டுப்பொருள் கைப்பற்றப்பட்ட விவரத்தை டிஒய்எஸ்பி நீதிமன்றத்தில் தெரிவித்தார். கூடவே, இதில் என்னவோ சதி நடந்திருப்பதாகவும் திருடனை நம்பமுடியாதென்றும் சொன்னார்.

நீதிபதி சொன்னார்: "திருடன் சொன்ன இடத்திலிருந்து பொருள் கிடைச்சிருக்கிற நிலைமையில எஸ்ஐயைப் பிரதியாகச் சேர்க்காம இருக்கணும்னா திருடன் சொல்லணும்." இதில் ஏதோ ஒரு சூது நடந்திருப்பதை நீதிபதியும் யூகித்திருப்பார்.

டிஒய்எஸ்பியும் சிஐயும் என்னை ஜெயிலில் வந்து பார்த்துச் சொன்னார்கள்:

"டேய், அவரை இந்த ஈஸ்ட் ஸ்டேஷனை விட்டே மாற்றி வேற எதிலேயாவது போட்டுடலாம். நீ வாக்குமூலத்தை மாற்றிச் சொல்லு. பாவம் அந்த மனுஷன் பிழைச்சுப் போகட்டும்."

நான் சொன்னேன்: "ஏமான்கள் சொன்னபடியெல்லாம் நான் கேட்டிருக்கேன். ஆனா, இது மட்டும் முடியாது. இது என்னோட சபதம். என் அம்மாவை மிதிக்க அவர் காலைத் தூக்கினதுக்காக . . . அந்தாளுடைய மோசமான குணங்கள் உங்களுக்கும் தெரியும்தானே? சர்வீசில இருக்குறதுக்கான யோக்கியதை இருக்கா அவருக்கு? அவரை

நான் சர்வீசில இருந்து மாற்றுவேன்னு சபதம் செய்தேன். மாற்றுவேன்." பிறகு, அவருடைய குடும்பப் பொறுப்புகளைச் சொல்லி உபதேசத்தைத் தொடர்ந்தார்கள்.

நான் சொன்னேன்: "எங்களுடைய கர்மபலன்களை உடல்ரீதியாகவும் மனோரீதியாகவும் நாங்க அனுபவிக்கலையா? போலீஸ்காரங்களோட கர்மபலன்களை . . . ஓரளவாவது அவங்களும் அனுபவிக்க வேண்டாமா? அதிலேயும் அம்மாவை வேதனைப்படுத்தியதற்காகவாவது?"

"நீ பண்ணின தப்புக்கு உன் குடும்பம் எப்படிப் பொறுப்பாகாதோ, அதுபோல அவர் பண்ணின தப்புக்கு அவரோட குடும்பமும் பொறுப்பாயிடக் கூடாதில்லையா? கல்யாணம் செய்து கொடுக்க வேண்டிய வயசுல பெண்மக்கள் இருக்காங்க." வர்க்கமென்று வரும்போது மட்டும் போலீஸ்காரர்கள் எவ்வளவு உணர்வுபூர்வமாகவும் பரிவுடனும் அணுகுகிறார்கள்!

நான் சொன்னேன்: "சரிதான். இவர் செய்த மோசமான நடவடிக்கைகளுக்கான பலனை இவரோட குடும்பம் அனுபவிக்கவேண்டாம். பென்ஷன் கிடைக்காம அவரை அலையவிட வேண்டாம். அவராவே வேலையை விட்டு விலகிடட்டும். அதிகம்போனா இன்னும் ஒரு வருஷ சர்வீஸ்தானே? இதில இனி மாற்றமில்லை."

அப்படியாக உடல்நிலை சரியில்லை என்று வாலண்டரி ரிட்டயர்மென்டுக்கு விண்ணப்பிக்கும்படி சொல்லி அதை ஏற்றுக்கொண்டார்கள்.

ஒருநாள், கொல்லத்தின் முக்கியப் பகுதியான சின்னக்கடையில் நின்றிருந்த ஒருவர்மீது அழுகிய தக்காளியொன்று விழுந்தது. பார்த்தபோது பப்படம் ராமகிருஷ்ணபிள்ளை. அவர் திரும்பிப் பார்த்தார். யாருமில்லை. மீண்டுமொரு அழுகிய முட்டை வந்து விழுகிறது. இம்முறை அவர் திரும்பிப் பார்க்கவே இல்லை. வேகமாக நடந்தார். இதைச் செய்தவர்கள், அங்கே செருப்புத் தைத்துக்கொண்டிருந்த இரண்டு பையன்கள்தான். இதையும் நான் கவனித்தேன். பகையை மனதில் பாதுகாத்து வைத்திருக்கும் இவர்களைப்போல் இன்னும் சிலர் இருக்கக்கூடும். ஓய்வு பெற்ற பிறகு, சின்னக்கடைக்கு வராமல் வாழ்ந்துவிட முடியாதல்லவா? மோசமான பல போலீஸ்காரர்களுக்கும் இதுபோல் கிடைக்க வேண்டியதிருக்கிறது. சர்வீசில் இருக்கும்போது

செய்து வைத்த துரோகங்களின் கனபரிமாணங்களுக்கேற்ப பல இடங்களிலிருந்தும் வந்து விழும். அப்போது நான் ஈஸ்ட் ஸ்டேஷனில் வேலை பார்த்துக்கொண்டிருந்தேன். எஸ்ஐக்கு காபி கொண்டு போகும்போது வெள்ளை வேட்டியும் அரைக்கை சட்டையும் குடையும் அக்குளில் பையுமாக ராமகிருஷ்ணபிள்ளை நிற்கிறார். உடுப்பில் அழுகிய தக்காளியும் முட்டையும் பதிந்திருந்தது.

எஸ்ஐயிடம் நடந்ததைச் சொல்கிறார். எஸ்ஐ கை விரித்தார். "சின்னக்கடையில் போய் நான் யாரையென்று கைது செய்ய? நீங்களும் சர்வீசில் இருந்த ஆள்தானே?"

"எல்லா விஷயமும் உங்களுக்கும் தெரியும். எனக்கும் தெரியும். எல்லாமே செய்த கர்மத்தோட விளைவுகள்தான்."

ராமகிருஷ்ணபிள்ளை இறங்கி நடக்கும்போது எதிரில் நான். என் முகத்தைப் பத்து வினாடிகள் கூர்ந்து பார்த்தார். அவருடைய பாவமன்னிப்பைக் கேட்கவும் எனக்கு விதியிருந்திருக்கிறது. நான் கேட்டேன்: "சார், சாயா குடிங்க." வேண்டாமென்று சைகைக் காட்டிவிட்டு வெளியேறி, திரும்பிப் பார்க்காமல் நடந்தார். இவரை நான் கடைசியாக அப்போதுதான் பார்க்கிறேன். சர்வீசிலிருந்து வெளியேற்றிய திருடன் ஸ்டேஷனுக்குள். எஸ்ஐ வெளியே. விதியின் தலைகீழ் மாற்றங்களை ஆச்சரியத்துடன் நினைத்துப் பார்த்திருப்பார்.

## **74 -** திருடனும் போலீசும் ஒரே வீட்டில்

திருடன் மணியன்பிள்ளையின் அத்தான் ஒரு போலீஸ் அதிகாரி என்பது விதியின் மற்றொரு வினோதம். வேறு என்ன சொல்வது? அக்காவின் கணவன் தலைமைக் காவலராகப் பணியாற்றிப் பதவி உயர்வு பெற்று எஸ்ஐயாக இருக்கும்போது அதே வீட்டில் மைத்துனன் மணியன்பிள்ளை திருடனாக இருந்தான். அதிர்ஷ்டவசமாக என்னுடைய செயல்பாட்டுத் தளமாக இருந்த கொல்லம் ஈஸ்ட் ஸ்டேஷன் லிமிட்டில் அத்தான் பணியாற்றவில்லை. ஆகவே, அத்தானும் மச்சினனும் கள்ளனும் போலீசும் விளையாட வேண்டிய தேவை ஏற்படவில்லை. மட்டுமல்ல, ஒருவர் தொழிலில் மற்றவரது தலையீட்டைப் பரஸ்பரம் இருவருமே தவிர்த்து வந்தோம். விதி இப்படியெல்லாமா பார்த்துக்கொண்டிருக்கும்? வினோதத்திற்கான இடமில்லையென்றால் தேவையில்லாமல் எதற்காக ஒரே வீட்டில் திருடனையும் போலீசையும் ஒன்றிணைக்க வேண்டும். நான் நிறைய திருடன்களைப் பார்த்ததும் கேள்விப்பட்டதுமுண்டு. இந்த மலையாள பூமியில் ஒரு பெருந்திருடனும் போலீஸ் அதிகாரியும் ஒரே வீட்டில் படுத்துத் தூங்கியதை என் வீட்டிலும் சினிமாவிலும் தவிர எங்குமே பார்த்ததில்லை. இப்படியாக நாங்கள் வேற்றுமையிலும் ஒற்றுமையாகப் பரஸ்பரம் தலையீடில்லாமல் வாழ்ந்து கொண்டிருக்கும்போது நடந்தச் சம்பவம்.

என்னுடைய ஊரான வாழத்துங்கலில் பல 'முதல்முறை' மணியன்பிள்ளையின் சாதனைகளாகவே இருந்தன. முதல் ஆட்டோ, முதல் டிரான்சிஸ்டர் என்று. ஆனால், இவை திருடனின் முதல்முறைகள் என்பதால் வரலாற்றில் இடம் பெறவில்லை.

முதன்முதலாக நான் டிரான்சிஸ்டர் கொண்டுவரும்போது ஊரில் பெரும்பாலானவர்கள் அதைப் பார்த்ததே கிடையாது. அவர்களுக்கு பெரிய ஆர்மோனியப்பெட்டி போன்ற ரேடியோதான் பரிச்சயம். எங்கள் ஊரிலிருந்து நான்கைந்து கிலோமீட்டர் தொலைவில் காக்கோட்டு மூலையிலுள்ள ஒரு வீட்டிலிருந்து அடித்து மாற்றிய டிரான்சிஸ்டர். இந்தப் பகுதி முழுவதுமே லண்டன்காரர்களும் அமெரிக்காகாரர்களும்தான்.

டிரான்சிஸ்டரை வாழத்துங்கல் ஊரில் விளம்பரப்படுத்த வேண்டுமல்லவா? ஒரு சைக்கிளையும் ஒரு பையனையும் தினசரி வாடகைக்குப் பிடித்தேன். பையனின் வேலை, வாழத்துங்கல் முழுவதும் சைக்கிள் ஓட்ட வேண்டும். சாயங்காலம் வயிறு நிறைய கள்ளும் இதரச் செலவுகளும். ஊரிலுள்ள பெரிய வீட்டு நாயர்கள் தங்கள் வீடுகளிலிருந்து எமண்டன் ரேடியோவைத் திருகிக்கொண்டிருப்பார்கள். சிரமப்பட்டு ஸ்டேஷனைப் பிடித்தால் அதில் கர்புர்ரென்று சத்தம் வரும். அதே நேரம் திருடன் மணியன் ஒரு சிறு பெட்டியுமாக ஊர் முழுவதும் சுற்றி வருகிறான். அதில் சிலோன் ஸ்டேஷனிலிருந்து நல்ல தமிழ் பாட்டுகள் கேட்கின்றன. சிறுவர்கள் பாட்டு கேட்பதற்காக வெளியில் வந்து காத்திருப்பார்கள்.

"திருடனோட அகம்பாவத்தைப் பாரேன் . . ."

"எங்கிருந்து கிடைச்சிருக்கும் . . ?"

"திருடுனதுதான். வேற எங்கிருந்து . . ." பொறாமையுடன் சொல்லித் திரிந்தார்கள்.

ஆனால், இதற்கு ஆசைப்படக்கூடாத ஒருவர் பட்டுவிட்டார். எஸ்ஐ அத்தான்.

"கண்டிப்பா இது உங்களுக்கு வேணுமா அத்தான்? சிக்கலான சாதனம் . . ."

"போலீஸ்காரனுக்கு என்னடா சிக்கல். நீ அதைத் தா."

ரேடியோவை அத்தானுக்குக் கொடுத்தேன். அவரும் ஊருக்குள் இறங்கி பாட்டுக் கேட்டு நடந்தார்.

இப்படியான ஒரு நாள், காக்கோட்டுமூலை வழக்கில் போலீஸ் என்னைப் பிடித்தது. நான் கிளிப்பிள்ளைபோல் எல்லாவற்றையும் ஒப்புவித்தேன். டிரான்சிஸ்டரை மட்டும் விழுங்கினேன். பறிகொடுத்தவர்கள் விடுவார்களா? அவர்களுடைய அபிமானப் பொருள். டிரான்சிஸ்டர் இல்லாமல் பையன் தூங்கமாட்டேன் என்கிறான் என்று குறைபட்டுக்கொண்டார்கள். முதலில் சமாளித்து நிற்க முயற்சி செய்தேன். ஈஸ்ட் ஸ்டேஷனில் எனக்கென்று சில சலுகைகளுண்டு. அது இல்லாமல் போகிறது. இனி, உதைத் திருவிழாதான். பிரச்சினை சிக்கலாகி விடும். நான் சொன்னேன்: "திருட்டுப் பொருளைப் போய் திருப்பி வாங்க

முடியாது. அதை நானேதான் கொண்டுவந்து ஒப்படைப்பேன்." ஒப்புக்கொண்டார்கள்.

ஸ்டேஷனுக்கு வந்திருந்த ஒரு நண்பனின் மூலம் அத்தானுக்குத் தகவல் கொடுத்தேன். டிரான்சிஸ்டரை இந்த ஆள்கிட்டேயே கொடுத்து அனுப்பிடுங்க. போலீஸ்காரர்கள் அல்லவா? நண்பனின் பின்னால் ஒரு போலீஸ்காரரையும் அனுப்பிவிட்டார்கள். அந்த நண்பன் போய் ஏறியது என்னுடைய வீட்டில். அத்தான் ரேடியோவை எடுத்துக் கொடுக்கும்போது மஃப்டியில் நின்ற போலீஸ்காரருக்கு அதிர்ச்சி. இவர், இப்போதுதான் இடம் மாறுதலில் ஈஸ்ட் ஸ்டேஷனுக்கு வந்திருக்கிறார். டிரான்சிஸ்டரைக் கொடுத்தவர் இதற்கு முன் வேலை பார்த்த ஸ்டேஷனில் ஏமான். இவர் கண்ணைக் கசக்கிவிட்டு மீண்டும் பார்த்தார். ஏமானேதான். திருடனும் போலீசும் ஒரே வீட்டிலா? எதுவாயினும் என்னுடனான கொடுக்கல் வாங்கல்களை அத்தான் இத்துடன் நிறுத்திக்கொண்டார்.

கொல்லத்தில் ஒரு போலீஸ்காரரிருந்தார். பெயர் கோபாலபிள்ளை. திருடனுடைய எதையுமே இவர் விட்டுவைக்க மாட்டார். திருடனின் மனைவி சம்மதித்தால் பேருவகை. இல்லையென்றால் பணம் கொடுக்க வேண்டும். முண்டைக்கல்லிலுள்ள ஒரு திருடனின் மனைவியை இவர் பல நாட்களாகத் தூங்க விடாமல் பண்ணியிருக்கிறார். இன்னைக்கு உன் புருஷனை அடிச்சு எலும்பை உருவிடுவேன் என்று சொல்லியே சாதித்துவிடுவார். புருஷனின் உடல் ஆரோக்கியம் கருதி தன்னுடலை இவள் தானம் செய்வாள். திருடன் வெளியே வந்தால் ஏதாவது காரணம் கட்டி மீண்டும் அவனை உள்ளே போட்டு விடுவது இவரது வழக்கம். என்றால்தானே இவருடைய ரூட் கிளியராகும். ஒருநாள் சப்ஜெயிலில் வைத்து அவன் இதைச் சொல்லி என்னிடம் அழுதான். மிகவும் அப்பிராணியான ஒரு திருடன் இவன். எவனுடைய தென்னை மரத்திலாவது பற்றிப் பிடித்து ஏறுவான். அதில் சிறால் பிடித்திருக்கும். கொல்லத்தில் இதை சொட்டை என்று சொல்வார்கள். சாதாரணமாக பிளேடு துண்டைப் பயன்படுத்துவான். ஒவ்வொரு ஸ்டெப்பாக ஏறும்போது சிறால்கள் கால்களில் குத்தியேறும். இப்படி, கால் முழுவதுமே வடுவாக இருக்கும். போதாக்குறைக்கு ஊரிலுள்ளவர்கள் கையிலிருந்தும் வாங்கிக்கட்டுவான். தெரு நாய்கள்கூட இவனைத் துரத்திக் கடிக்கும். இந்த அளவுக்குக் கதியற்ற திருடனை நான் கண்டதே இல்லை. தைரியமுமில்லை. அதிர்ஷ்டமுமில்லை. அறிவும் போதாது. வெறுமொரு அப்பாவி. நல்லவன். அவனுடைய மனைவியும் இப்படித்தான். இல்லையென்றால் போலீஸ்காரனால் ஏறியிறங்க

முடியுமா? அவனது பட்டப்பெயர் கொஞ்சன்[7]—.விரால்மீன்போல் உள்ளுக்குள் வளைந்திருப்பான். ஊட்டச் சத்தில்லாத உடம்பு. உடம்பில் போஷாக்கு மட்டுமிருந்திருந்தால் போலீசின் உதைக்கு, கொஞ்சு சுமோ வீரன்போலாகி இருப்பான். அவ்வளவு உதை வாங்கியிருக்கிறான். பாவம்.

நான் சொன்னேன்: "முதல்லே நீ கொஞ்சம் சுரணைக் காட்டு. இல்லேன்னா இப்படியெல்லாம்தான் அனுபவிக்க வேண்டியதிருக்கும்."

"அவ்வளவுக்கு நெஞ்சுரமெல்லாம் எனக்கில்லை மணியன்பிள்ளை."

இப்படியான ஒரு பிரச்சினையில் கோபாலபிள்ளை என்ற பெயர் என் மனதில் எங்கோ பதிந்து கிடந்திருக்கிறது. இரண்டு வருடங்களுக்குப் பிறகு, ஒரு திருவிழா சீஸன். வாழத்துங்கலின் முக்கிய கோயில்களான களறிவாதுக்கலிலும் ஒட்டத்தில் தேவி கோயிலிலும் திருடன் மணியன் பிள்ளையின் உபயமாகக் கலைநிகழ்ச்சிகள் அரங்கேறும். ஹாஸ்யமேளா, மிமிக்ரி போன்ற நிகழ்ச்சிகள் எனக்குப் பிடிக்கும். என்னுடைய வாழ்க்கையும் இதுபோல் தானே? போரடிக்கவும் கூடாது. இதுவும் என்னுடைய வாழ்க்கைதான். மட்டுமல்ல, ஒலிபெருக்கியில் உரக்கச் சொல்வார்கள். இந்நிகழ்ச்சியின் உபயதாரர் சேரூர் வடக்கதில் மணியன்பிள்ளையவர்கள். இப்படியாக நான் தொடர்ந்து மூன்று வருடங்கள் மணியன்பிள்ளை அவர்களானேன். அதிகம் அவர்களாவதற்காக ஒலிபெருக்கியில் சொல்பவனுக்கு வேர்க்கடலையும் சர்பத்தும் வாங்கிக்கொடுப்பேன். திருடன் வகை கலைநிகழ்ச்சியைப் பார்த்து மக்கள் வாய் விட்டுச் சிரிக்கும்போது நான் சாமியைப் பார்ப்பேன்: "நிகழ்ச்சி எப்படியிருக்கு சாமி?" சாமி சொல்லும்: "மணியா, காசுதாண்டா சாமி. அதை இறக்கி விட்டேன்னா, சிரிக்கலாம்; சிரிக்க வைக்கலாம்; அழலாம்; அழ வைக்கலாம்."

கொல்லம் சசிகுமார், கொல்லம் சிராஜ் போன்றவர்களின் நிகழ்ச்சிகளுக்குத் தொடக்கக் காலத்தில் நான் மேடையமைத்துக் கொடுத்திருக்கிறேன். சிராஜை இரண்டுமுறை கூப்பிட்டிருக்கிறேன். அங்கே முக்கிய டான்சராக இருந்த தங்கப்பன் என்னுடைய வகுப்புத் தோழன்தான். இதை நாங்கள் அடிக்கடி நினைவுகூர்வதுமுண்டு. எங்கள் இரண்டுபேருடைய வாழ்க்கையும் ஒன்றுபோல்தான். இருவருமே கலைஞர்கள். இரண்டுக்குமே பிரதிபலன் அடிதான். தங்கப்பன் ஒவ்வொரு நிகழ்ச்சிக்குப் போகும்போதும் கோயிலுக்குப்போய் சாமி கும்பிடுவான்: "களரிவாதுக் கல் சிவனே . . . ஒரு புரோக்கிராமையாவது முழுமையாக்கித்

தரமாட்டியா . . . கிளைமாக்ஸ் எப்படியிருக்கும்னு நான் பார்க்கவேண்டாமா?" ஒத்திகை நடந்தபோதுள்ள நினைவுதான் இருக்கிறது. தங்கப்பனின் கலைநிகழ்ச்சி நிறைவுபெற்றதாக வரலாறே கிடையாது. மக்கள் அடிகொடுத்து முடித்து வைப்பார்கள். ஒரு திருவிழாவின்போது, கள்ளு ஷாப்பில் வைத்து சக குடிகாரன் சொன்னான்:

"டேய், மாப்ளே . . . நம்ம வடக்கேவிளை மணக்காட்டில ஒரு கதாபிரசங்கி இருக்கான். நானொரு தடவை அவனோட கதாப்பிரசங்கம் கேட்டேன். இவன் முன்னால சாம்பசிவனெல்லாம் எம்மாத்திரம் . . . ஆனா, தலையெழுத்து சரியில்லை."

நான் சொன்னேன்: "மேடை கிடைக்கிறதுதான் பிரச்சினைன்னா நமக்கு அதைத் தீத்து வைக்கலாம். கலக்கிடணும். மணியனும் அலம்பல், அவனோட நிகழ்ச்சியும் அலம்பல்னு ஊரிலுள்ளவன் எவனும் சொல்லிடக்கூடாது. ஏதாவது ஒண்ணு போதும். முதல்லே உள்ளதை இனி மாற்ற முடியாது. கலை, கையில இருக்கும்னா அவன் வாழணும்."

"அதுக்கு நான் கேரண்டி மாப்ளே" என்றான்.

"சரி, அப்படீன்னா வண்டியை எடு."

பக்கத்திலுள்ள சைக்கிள் கடையிலிருந்து ஒன்று முதல் நான்குவரை இலக்கமிட்ட சைக்கிள்களை வாடகைக்கெடுத்து நாங்கள் நான்கு குடியன்களாக மணக்காட்டிற்கு மிதித்தோம். கடையில் நான்காம் நம்பர் சைக்கிள் கிடையாது. அதை எங்கோ திருடுவதற்காகக் கொண்டுபோன இடத்தில் நான்தான் தொலைத்துவிட்டேன். சைக்கிள் முக்கியமா உயிர் முக்கியமா என்ற தவிர்க்க முடியாத கட்டம் வந்த ஒரு நடுச்சாமத்தில் சைக்கிள் தன்னைத் தியாகம் செய்தது. கடைக்கார அண்ணனுக்குப் புது சைக்கிளுக்கானப் பணத்தைக் கொடுத்த பிறகும் அண்ணன் என்னுடைய ஞாபகார்த்தமாக நான்காம் நம்பரின் இடத்தைக் காலியாகவே வைத்திருந்தான்.

குடியன்கள் வீடுதேடி வந்தபோது கலைஞன் பெரிய பந்தா காட்டினான். மூவாயிரம் ரூபாய் வேண்டும். கார் வாடகை தர வேண்டும். ஒரு நேர ஆகாரம் வேண்டும். கடைசி அயிட்டமே சரிவர இவனுக்குக் கிடைக்காது. அவ்வளவுக்குக் கோலம் கெட்டிருந்தான்.

நான் சொன்னேன்: "ஆயிரத்து ஐநூறு ரூபாய் தருவோம். கார்

வாடகையுட்பட. ஆகாரத்துக்கு பக்கத்திலுள்ள ஓட்டல்." ஐநூறு ரூபாய் அப்போதே முன் பணம்.

தான் காண்பது கனவா நிஜமா என்ற பிரமையில் அவன் அப்படியே ஸ்தம்பித்து நின்றுவிட்டான். பிறகு, எங்களைக் கிளப்பி விடுவதிலேயே குறியாக நின்றான். அரிசியும் இதர சாமான்களும் வாங்க வேண்டும். வீட்டுக்குள் என்னவோ கருகும் வாசம். யாருடைய வயிறோ கருகுகிறது.

சம்பவ தினம், கதாப்பிரசங்கி வந்தான். காரில் பெயர்ப்பலகை வைத்து ஜிப்பாவெல்லாம் அணிந்து அட்டகாசமாகவே வந்தான். கதாப் பிரசங்கம் ஆரம்பமானது. கதை எது, பாட்டு எது என்று ஒன்றுமே பிடிபடவில்லை. பாடியதையே திரும்பவும் பாடுகிறான். இடையிடையே மறந்து வேறு போகிறது. எழுதிவைத்திருப்பதை எடுத்து வாசித்துப் பார்க்கிறான். தண்ணீர் குடிக்கிறான். பரவாயில்லை. நான் ரொம்பவே பொறுமைசாலி. எத்தனையோ நாட்கள் நீண்ட பொறுமையுடன் காத்திருந்து களவு செய்திருக்கிறேனே. ஒவ்வொரு தொழிலுக்கும் அதற்கேயான கலைவடிவங்களிருக்கும். மேலும் ஐந்து நிமிடம் பொறுமை காத்தேன். இனி தாங்க முடியாது. மக்கள் பொறுமையிழந்து விடுவார்கள். மக்களைப் போரடிக்க வைத்துவிட்டதான அவப்பெயர் வந்துவிடக்கூடாது.

"டேய், மைக்கை ஆஃப் பண்ணு" என்றேன்.

ஒலிபெருக்கி அணைக்கப்பட்டது. மக்கள் நிம்மதிப் பெருமூச்சு விட்டார்கள். மனிதனின் குரல்கூட அழுகி நாறுமென்ற விஷயம் மக்களுக்கு அன்றுதான் தெரியும். நான் ஒரு ஐநூறு ரூபாயைக் கொடுத்துவிட்டு ஆபத்தில்லாத இடத்தைக் குறிவைத்து ஒரு குத்தும் விட்டேன். இடுப்பிலிருந்த கத்தியை உருவி கையில் வைத்துக்கொண்டு சத்தமாகச் சொன்னேன்:

"இனிமேல், நீ எங்கியாவது கதாப்பிரசங்கம் பண்ணப்போறதாக அறிஞ்சேன்னு வெச்சுக்க, உன்னோட பண்டத்தில கத்தியை நுழைச்சிடுவேன். ஒவ்வொருத்தனுக்கும் ஒவ்வொண்ணு விதிக்கப்பட்டிருக்கு. நீ திருடலாம்னு நினச்சா முடியுமாடா?"

"இல்லை, முடியாது."

"அதனால நீ இப்ப, இடத்தைக் காலி பண்றே."

"இன்னும் ஒருத்தனைப் பார்க்க வேண்டியதிருக்கு." நான் உருவிய கத்தியுடன் சேரூர் கள்ளுக்கடைக்கு நடந்தேன். யாரோ தகவல் சொல்லியிருக்க வேண்டும். சிபாரிசு செய்தவன் இறங்கி ஓடினான். பிறகு நானிருக்கும்போது அவன் இந்தக் கடைக்கே வருவதில்லை.

தொடர்ந்து, நான்கு வருடங்களாக நான் களறிவாதுக்கல் திருவிழாக் கடைகளின் தரைவாடகையைக் குத்தகை பிடித்தேன். இங்கும் ஒட்டத்தில் கோயிலிலும் மூன்று வருடங்கள் நிகழ்ச்சி நடத்தினேன். இது பல மானஸ்தர்களுக்கும் பிடிக்கவில்லை. அவர்கள் கோயில் விழாக் கமிட்டியில் மோதினார்கள். அவர்கள்: "ஏலம் பிடிக்கிறதை எல்லாம் எதுவும் பண்ண முடியாது" என்று சொல்லி விட்டார்கள். "கொடுக்குறதும் கொடுக்காம இருக்குறதும் ஏலம் பிடிக்கிற தொகையைப் பொறுத்திருக்கு. ஒண்ணு பண்ணலாம். யார் வேணும்னாலும் பிடிக்கலாம்தானே? அவன் கேட்கிறதிலிருந்து யாராவது அதிகமாகக் கேளுங்க. ஆனா ஒண்ணு, கடைபோட வர்றவங்ககிட்டே வாடகை கேட்டா அவங்க தரணும். அதை மட்டும் ஞாபகத்தில வெச்சுக்குங்க." வந்தவர்கள் கப்சிப். இதுபோல் திருடன் கலைநிகழ்ச்சி நடத்துவது குறித்தும் மோதிப்பார்த்தார்கள். கமிட்டியினர் சொல்லிவிட்டார்கள்: "களறிவாதுக்கல் சிவனுக்கு திருடன் போலீஸ்னு எல்லாம் பாகுபாடு கிடையாது. பாகுபாடு பாக்குறவங்க நிகழ்ச்சிக்கு வராதீங்க. ம் . . . பத்து நாள் நிகழ்ச்சியையும் ஏற்பாடு பண்றதுக்கு நாங்க படுற பாடு எங்களுக்குத்தான் தெரியும். ஒண்ணு பண்ணுங்க, ஒரு நாள் நிகழ்ச்சியை நீங்களே நடத்துங்க. அவனோட நிகழ்ச்சியை ரத்து பண்ணிடுவோம். பத்தாயிரம் ரூபாய் முடக்க வேண்டிய ஏற்பாடு. சும்மா ஒண்ணுமில்லை." இதிலும் அவர்களுடைய தலை தொங்கிப்போனது. இப்படியாக, திருடனின் கலை நிகழ்ச்சிக்கு எதிரானவர்களின் ஒரு கூட்டணி அமைந்தது. திருடன் அப்படியெல்லாம் மேடையில் ஏறி பெயர் வாங்க வேண்டாம்.

என்னுடைய நிகழ்ச்சியென்றால் நான் மேடையில் ஏற வேண்டியதிருக்கும். மிமிக்ரியும் ஹாஸ்யமேளாவும் நடக்கும்போது மேடையில்தான் நிற்பேன். சில நேரங்களில் நமது பொடியன்களில் யாராவது ஒரு செயரைக்கொண்டு வந்து போடுவார்கள். மூலையில் அனைவரும் பார்க்கும்படியாக உட்கார்ந்திருப்பேன். வேண்டுமென்றேதான். அவர்களைச் சீண்டுவதற்காக. முடிவே செய்துவிட்டார்கள். திருடனை இந்த வருடம் மேடையில் ஏறி ஷைன் பண்ண விடக்கூடாது. மேடையில் வைத்தே தூக்க வேண்டும். இந்த விஷயம் எனக்குத் தெரியாது. சாதாரணமாக அப்போதெல்லாம்

திருவிழாவின்போது போலீஸ் காவல் இருக்காது. மக்களும் விழாக் கமிட்டியும்தான் காவல். நான் அப்படியே சுற்றி வரும்போது எங்கேயோ பார்த்த, பரிச்சயமுள்ள ஒரு முகம். போலீஸ்காரன் அல்லவா? தாம்பூலம் தரித்துத் துப்புரச் சிவந்த வாய், கட்டையாக வெட்டிய தலைமுடி, திருட்டுப் பார்வை. நான் மெதுவாக விலகி நின்றுக்கவனித்தேன். போலீசேதான். ஹெட் கான்ஸ்டபிள் கோபாலபிள்ளை. தேவள்ளிக்காரன். ஏதோ வேலையாகத்தான் வந்திருக்கிறார். களறிவாதுக்கல் கோயில் திருவிழாவின்போதுதான் கடலூர் கோயிலிலும் திருவிழா நடக்கும். தேவள்ளியை அடுத்துதான் கடலூர் இருக்கிறது அவருடைய ஊர்த்திருவிழாவை விட்டுவிட்டு இவருக்கு இங்கென்ன வேலை? நான் சிப்பந்திகளிடம் சொல்லி வைத்தேன். அவர்கள் நிகழ்ச்சியைப் பார்ப்பதுபோல் அவரையே சுற்றி நின்றுக் கவனித்தார்கள். சாயங்காலமானதும் ஓடி வந்தார்கள்:

"அண்ணா, இன்னைக்கு ஸ்டேஜில ஏறிடாதே. மக்களோட எதிர்ல வெச்சு உன்னை உதைச்சிப் பிடிச்சிட்டுப் போறதுக்காகத்தான் அவர் வந்திருக்கார்."

"என்ன நடந்தாலும் நான் மேடையேறியே தீருவேன். தேவையில்லாம என்னை அடிச்சா நானும் திருப்பியடிப்பேன்." நண்பன் ரவி சொன்னான்: "நீ என்ன நினைப்புலடா பேசுறே, இனியும் நீ திருட வேண்டாமா? பிறகு, அங்கதானே போக வேண்டியது வரும். பத்தாயிரம் மக்கள் முன்னால வெச்சு போலீசை உன்னால அடிச்சிட முடியுமா?"

"சே, என்ன எளவுடா இது, பெரிய தொந்தரவாப்போச்சு. ஒரு கலைநிகழ்ச்சி நடத்தக் கூட திருடனை விடமாட்டேன்னா?"

நான் தலையில் கை வைத்து உட்கார்ந்தேன். அடுத்தத் தகவலுடன் இன்னொருவன் வந்தான்: "மாப்ளே, ஸ்டேஜில வெச்சு உன்னைப் பிடிச்சு, அந்த இடத்திலேயே இன்னைக்கு நடந்த ஒரு பயங்கரத் திருட்டுல நீயும் சம்பந்தப்பட்டிக்கறதா போலீஸ் சந்தேகப்படுதுன்னு சொல்றது அவங்களோட திட்டம். அதுவும் நீ பணம் கொடுத்து ஏற்பாடு செய்த மைக்கிலேயே! உடனடியாத் தகவல் கொடுப்பாங்க, போலீஸ் வேன் வரும்."

என்னுடைய கவலையெல்லாம் இதுவல்ல. மறுநாள், ஒட்டத்தில் கோயிலிலும் என்னுடைய கலைநிகழ்ச்சி இருக்கிறது. என் வீட்டின் அருகிலுள்ள கோயில் இது.

"சரி, இன்னைக்கு நான் ஸ்டேஜில ஏறப்போறதா இல்லை."

மேடையேறவில்லை என்பது மட்டுமல்ல, நிகழ்ச்சி நடக்கும் அந்தப் பகுதியிலேயே நானில்லை. இத்துனூண்டு கிளாமருக்காக பெரும் தொகை முதலீடு செய்திருக்கிறேன். அதை இல்லாமலாக்கி விட்டார் கோபாலபிள்ளை சார். சரி, பார்ப்போம். மறுநாள் காலையில் கோபாலபிள்ளையைத் தேடிச்சென்றேன். என்னுடைய நெருங்கிய நண்பன் வீட்டில்தான் முகாமிட்டிருந்தார். மடித்துக்கட்டிய வேட்டியைத் தாழ்த்தி, கால்களினிடையே திணித்து, கையதுகொண்டு மெய்யது பொத்தி புலனைந்தையும் அடக்கி வெளியில் நின்றிருந்தேன். பெரிய நாயின் முன்னால் மற்றொரு நாய் பயத்துடன் வாலை மூலத்தில் இடுக்கிக்கொண்டு நிற்பதுபோல். பிரேக் ஃபாஸ்டெல்லாம் முடிந்து வெளியே போவதற்காக வந்த ஏமான் என்னைக் கண்டதும்: "ஹா . . . மணியனா" என்று கை தட்டி வரவேற்றார்.

"ரெண்டு மூணு வாரம் ஆகுதேடா நீ ஸ்டேஷன் பக்கம் வந்து. திருட்டுலயே முழுகிட்டியோ? என்று கேட்டார்.

"அதெல்லாமில்ல சார். ஊர்ல திருவிழாங்கிறதால வெளிய வரலை." என்றேன்.

"ம் . . . ம் . . . கேள்விப்பட்டேன். அதுக்கெல்லாம் உங்கிட்ட ஏதுடா பணம்? திருடின முதலை வெச்சி திருவிழா நடத்துறியா? உன்னை இப்பவே ஸ்டேஷனுக்குக் கூட்டிட்டுப் போகணும்."

"அய்யோ சார், என் ரெண்டு சென்ட் நிலத்தை வித்து நான் செலவு பண்றேன்."

"இது பொய்யிங்கிற விஷயம் எனக்குத் தெரியும். உன் பொய்யை எல்லாம் கேக்கணும்னா போதை போட்டாதான் முடியும். கள்ளுக்கடை இங்க எங்கடா இருக்கு?" இருவருமாக சேரூர் கள்ளுக்கடையை நோக்கி நடந்தோம்.

"தொண்ணூறு சாதா போலீஸ்காரங்களுக்கு மேலதிகாரி" என்று கடையிலிருந்த சக குடியன்களிடம் ஏமானை அறிமுகம் செய்து வைத்தேன். ஏமான் மிதப்பின் அடியாழத்திற்கே சென்றார். "ஏமானுக்கு என்ன வேணுமோ எவ்வளவு வேணுமோ கொடுங்க. ராத்திரிவரைக்கும் இங்க இருக்குறதா இருந்தாலும் பரவாயில்லை." காலை பதினொரு

மணிக்குள் ஏமானுக்குத் தலைக்குப் பிடிக்க ஆரம்பித்து விட்டது.

நான் சொன்னேன்: "எனக்கு வெளிய கொஞ்சம் வேலையிருக்கு. ஏமான் இங்கியே உட்காந்துக்குங்க . . ."

"இல்லடா . . . எனக்கும் சாயங்காலம் ஒரு வேலை இருக்கு. அதை ஒத்துக்கிட வேண்டியதாகிப் போச்சுடா . . . எப்படியும் நைட் ஆயிடும்னு நினைக்கிறேன், கிளம்புறதுக்கு . . ."

"என்ன வேலை ஏமானே?"

"உங்கிட்ட மட்டும் அதைச் சொல்ல முடியாது."

மதியமானதும் சொன்னேன்: "நான் வரட்டா ஏமானே, நைட்ல ஒரு கலைநிகழ்ச்சி இருக்கு."

"ஓ . . . பேஷா! அடிக்கடி நீ ஸ்டேஷன் பக்கம் வரணும் . . . சந்திப்போம் . . ."

நான் போனதும் ஏமான் பிரசங்கத்தைத் தொடங்கி விட்டார்:

"சொல்லப்போனா நானும் அவனுமே நல்ல நாயருங்கதான். அதுக்காக . . ? பட்டராயிருந்தாலும்[8], திருடனாயிருந்தா போலீஸ் பிடிக்கத்தான் செய்யும். அவன் சேத்து வெச்சிருக்கிறதெல்லாம் பறி போகும். ராத்திரிவரைக்கும் என்னைக் குடிக்க வெச்சிக் கிடத்திட்டுத் திருடன், மக்கள் முன்னால பெரிய ஆளாயிடலாம்னு நினைக்கிறான். கழுவேறிக்குப் பொறந்தவன் . . ."

கடைக்காரனிடம் சொன்னார்: "நான் ரெண்டு மணிக்குச் சாப்பிடுவேன். பிறகு, ஒரு சொட்டுகூட எனக்கு வேண்டாம்; கேட்டாலும் தந்திடக்கூடாது. கோபாலபிள்ளை டியூட்டியில கரெக்டா இருப்பான். நேத்தைக்கு அவன் என் கையிலிருந்து தப்பிட்டான். திருடன் போலீசுக்கு டிமிக்கிக் கொடுத்துட முடியுமா . . ?"

பேசிக்கொண்டே இருந்த கோபாலபிள்ளை சார் புறப்படும்போது மணி ஆறு. உட்கார்ந்திருந்த பெஞ்சை பிருஷ்டத்தால் தள்ளிவிட்டு எந்தத் தள்ளாட்டமுமில்லாமல் எழுந்தார். பெஞ்சு, பின்னால் விழுந்தது. இறங்கி நடந்தார். முட்செடிகள் நிறைந்த வயல்வெளியோரம் நடந்துகொண்டிருந்தவரின் தோளில் எதிரே வந்த ஒருவன்

இடித்துவிட்டான்.

"போலீஸ்காரனையாடா இடிச்சிட்டுப் போறே?" கோபாலபிள்ளை சார் அதட்டினார். கைகலப்பேற்பட்டது. மூன்று நான்கு முஸ்லிம் பையன்களும் இரண்டு ஈழவப் பையன்களும். என்னுடைய நண்பர்கள்தான். புதர்க்காட்டில் தூக்கிப்போட்டு அடித்துப் பெருக்கிக் கட்டி வைத்தார்கள். இரண்டு குப்பிக் கள்ளையும் வாயில் ஊற்றிவிட்டு, கொல்லம் பிரஸ் கிளப்பிற்கு ஃபோன் செய்தார்கள்: 'குடிபோதையில் ஒரு வீட்டிற்குள் ஏற முயற்சி செய்த போலீஸ்காரரை ஊர்க்காரர்கள் பிடித்துக் கட்டி வைத்திருக்கிறார்கள்.' பத்திரிகைக்காரர்கள் வந்தார்கள். கோபாலபிள்ளையை அழைத்துக்கொண்டு வந்தவர்கள் ஒளிந்துகொண்டார்கள். ஈஸ்ட் ஸ்டேஷன் சிஐயாக இருந்த அப்துல் ரஹ்மான் சாரும் வந்தார். அன்றிரவு, நிகழ்ச்சி ஆரம்பமாகி நான் ஸ்டேஜில் ஏறத்தயாராக நிற்கும்போது கோபாலபிள்ளை ஏமானையும் கொண்டு போலீஸ் ஜீப் புறப்பட்டது. மழையில் நனைந்த கோழிபோல், ஏமான் ஜீப்பில் பின் இருக்கையில் சுருண்டுக் கிடந்தார்.

சில வருடங்களுக்குப் பின்பொருநாள் நான் சின்னக்கடை ரோட்டில் போய்க்கொண்டிருக்கும்போது என் கையைப் பிடித்து நிறுத்தினார் கோபாலபிள்ளை சார். எனக்குள் சிறு தயக்கம். சார் சொன்னார்:

"பொலயாடி மவனே, வயிறு நிறைய கள்ளும் வாங்கித் தந்திட்டு, அடியும் வாங்கித் தந்தவன்தானேடா நீ?"

"இல்லேன்னா சார் என்னை ஸ்டேஜில ஏற விட்டிருக்க மாட்டீங்களே?"

"தெரியும்டா, இது நீ செய்த வேலைதான்னு."

"அன்னைக்கு உடம்பில வேற பிரச்சினை ஒண்ணுமில்லையே?"

"சே . . . சே . . . அதெல்லாம் ஒண்ணுமில்லை."

"திருடனை நீங்க அடிக்கிறதுபோல திருடனுங்க அடிக்க மாட்டாங்க. அடியோட வேதனை எங்களுக்கு நல்லாவே தெரியும்."

கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்தோம். பரஸ்பரம் மனதிற்குள் எந்தப் பகையுமில்லை. உண்மையில் சொல்லப்போனால் திருடனுக்கும் போலீசுக்குமிடையிலானது விசித்திரமான உறவு. போலீஸ், திருடனை அடிப்பது, தாய் தன் குழந்தையை அடிப்பதுபோல் என்று பழைய ஆட்கள்

சொல்வார்கள். உடல்ரீதியான எதையும் தாங்கும் இதயத்தை உண்மையில் அவர்கள்தான் தருகிறார்கள். போலீஸ் உருட்டிய ஒருவனுக்கு வலிகளெல்லாம் ஒரு பிரச்சினையே கிடையாது. ஊரிலுள்ளவர்கள் அள்ளி வைத்துத் துவைத்தாலும் திருடும்போது உயரங்களிலிருந்து விழ நேர்ந்தாலும் பிரச்சினையில்லை. நான் எங்கெல்லாமோ விழுந்திருக்கிறேன். சாக்கடையில், கல் குழியில், சேற்றில், கிணற்றில் . . . அன்றெல்லாம் என்னுடம்பு ரப்பரில் செய்யப்பட்டதோ என்ற சந்தேகம் ஏற்படும். எதுவும் என்னை எதுவுமே செய்ததில்லை. தப்பியோடும்போது எதிர்ப்படும் மதில் சுவரில் ஆணிகளோ கண்ணாடிச் சில்லுகளோ பதிக்கப்பட்டிருக்கும். ஏறிக் குதிப்பதைத் தவிர வேறு வழி? ஆணிகளுக்கும் கண்ணாடிச் சில்லுகளுக்குமிடையில் மூன்று விரல்களைப் பதித்துக் குதிக்கும்போது உடம்பின் பாரத்தை விரல்கள்தான் தாங்க வேண்டும். சில நேரங்களில் கவனம் சிதறிவிடும். விரல்களின் இடையிலிருந்து ரத்தம் பீறிடும். வழியில் நிற்கும் கம்யூனிஸ்ட் பச்சையையோ[9] முறிகூடி மூலிகையையோ பறித்துப் பிழிந்து வைப்பேன். டெட்டெனஸ் ஊசி எல்லாம் தேவையில்லை. பிறகு, கையில் கர்சீஃப் வைக்க ஆரம்பித்தேன். விரல்களுக்கிடையில் கர்சீஃபை வைத்து கண்ணாடித் துண்டுகளையும் ஆணிகளையும் வேகமாகப் பிடுங்கியெடுத்து விடலாம். நிமிடங்களுக்குள் இதைச் செய்துவிட்டும் தப்பியோடி இருக்கிறேன். விரயம் செய்ய நேரமில்லை. இடது கை பிடுங்கும்போது வலது கையை ஊன்றிக் குதித்திருக்க வேண்டும். சினிமா நடிகர்களைப்போல்தான் திருடன்களும். நிறைய உடுப்புகள் தேவை. ஒரு தடவை அணிந்து அழுக்குப் படிந்ததைப் பிறகு அணிந்துகொள்ள இயலாது. இசகுபிசகான இடத்தில் வைத்து போலீஸ்காரன் பார்க்கும்போது உடைகள் நீட்டாக இருக்க வேண்டும். வேர்க்கவோ கிழியவோ செய்தால் கழற்றி உடம்பை நன்றாகத் துடைத்துவிட்டு ஏதாவது கொடியில் தொங்கும் சட்டையை எடுத்து அணிந்துகொள்ள வேண்டியதுதான். ஏதாவது வீட்டுக்குள் என்றால் வீட்டய்யாவின் சட்டைகளில் நல்லதை எடுத்து அணிந்துகொள்வேன். ஸ்பிரே இருந்தால் எடுத்து அடிப்பது உத்தமம். புதிய உடுப்பில் தேவையில்லை, பழைய உடுப்பில். ஸ்பிரே, மேட் இன் இத்தாலியாக இருந்தால், மோப்பம் பிடிக்க வருகை தரும் ஏமான் நாய் இத்தாலிவரை ஓட வேண்டியதுதான்.

கோபாலபிள்ளையும் நானும் சாயா குடித்துவிட்டு எழுந்தோம். எவ்வளவு வற்புறுத்திய பிறகும் காசு கொடுக்க விடாமல் அவரே கொடுத்தார்.

"கணியாபுரம் போலீஸ் ஸ்டேஷன் கட்டும்போது சித்தாள் வேலை

செய்திட்டிருந்த உன்னை போலீஸ் பிடித்தக் கதை உனக்கு நினைவிருக்கா?"

"இருக்கு. அன்னைக்கு போலீஸ் என்னைப் பிடிக்கிறதுக்குக் காரணம் சார்தானே? இதுக்கு உடந்தை அந்தக் கூத்தச்சி"

"அந்தப் பிரச்சினையில போலீஸ்காரங்க உன்னை அடிச்சாங்களா?"

"இல்லை."

"ஏன்னு யோசிச்சியா?"

"இல்லை."

"நான்தான் சொன்னேன்."

"அது ஏன்?"

"உன்கிட்ட இருந்து நான் நிறைய வாங்கிச் சாப்பிட்ட நன்றிக்கடன் அடி வாங்கிக்கொடுத்ததா ஆயிடக் கூடாதேன்னுதான். சர்வீசிலிருக்கும்போது நான் ரொம்பவே ஆடித் தீர்த்துட்டேன். அபூர்வமா சில நேரங்களாவது நான் போலீஸ் வாழ்க்கை வாழாம இருந்திருக்கேன். எனக்கு உன்மேல எந்தக் கோபமும் இல்லை. நீ எங்காவது போய் தப்பிச்சுக்க. இங்க இருந்தா எப்ப வேணும்னாலும் போலீஸ் உன்னைப் பிடிக்கலாம். காலாகாலமும் நீ திருடன்தான். திருந்தி வாழவே முடியாது."

மனு: காவல்துறை அதிகாரிகளில் நான் முதல்முறையாகப் பார்த்த மனிதாபிமானி, டி.கே. மனோகரன் சார். காக்கிக்குள் சிக்கிய கலைஞன். குற்றவாளிகளையும் மனிதனாக பார்க்கத் தெரிந்தவர். திருடன்களை மனோபாவத்தில் சிடுக்குகள் விழுந்தவர்களாவும் அவர்கள் வெறுக்கத் தக்கவர்களில்லை என்றும் கருதுபவர். சார் வாங்கித் தந்த நகரசபை வசூல் வேலையை இல்லாமலாக்கி விட்டு நான் மீண்டும் வழி தவறி அலைந்துகொண்டிருந்த காலம். ஒருநாள் சார் என்னைக் கூப்பிட்டார். அப்போது அவர் சிஐயாக இருந்தார். நான் வேட்டியைத் தாழ்த்தி கால்களுக்கிடையில் இடுக்கியபடி நின்றிருந்தேன். செய்து கொண்டிருந்த அவசர வேலையைச் சீக்கிரமாக முடித்துவிட்டு: "இங்க வாடா" என்றார். அருகில் சென்றதும் "உட்கார்" என்றார்.

"வேண்டாம்."

அந்த வீக்லியை எடுத்துப் புரட்டிப்பாரு என்றார். அது ஜனயுகம் வார இதழ். நான் புரட்டிக்கொண்டே வந்தபோது என்னுடைய புகைப்படம் இருந்தது. நான் ஆச்சரியத்துடன் சாரிடம் காட்டினேன். ஒரு திருடனின் படத்தைப் பத்திரிகைகளில் போடுவதென்பது அப்போதெல்லாம் சாதாரணமான விஷயமில்லை. முதன்முதலாக ஒரு வாரப்பத்திரிகையில் நான் . . .

சார் கேட்டார்: "அந்த ஆளைத் தெரியுமா?"

"நான்தான் . . ."

"அதைப் படிச்சுப்பாரு" என்றார்.

அதன் தொடக்கமே இப்படியிருந்தது: நல்ல மனிதர்களான குட்டன் பிள்ளை - மீனாட்சி தம்பதியரின் மகனான மணியன்பிள்ளை கொல்லம் நகரின் பிரபலமான குற்றவாளி . . .

'வழி தவறிய வாழ்க்கைகள்' எனும் தலைப்பில் சார் எழுதிக்கொண்டிருந்த ஒரு தொடர் இது. போலீஸ் வாழ்க்கையில் அவர் சந்திக்க நேர்ந்த தனித்துவமுள்ள திருடர்களைப் பற்றிய தொடர். அந்தக் காலகட்டத்தில் இது மிகப் பெரிய புதுமை. கட்டுரையாளரின் பெயர் மனு என்றிருந்தது.

நான் கேட்டேன்: "சார் மனு . . ?"

"அது வேற யாருமில்லடா . . . மனோகரன் மனுவாகியிருக்கு."

பிறகு, இது புத்தகமாக வெளிவந்ததாகவும் அறிந்தேன். நான் பிசியாகிவிட்டதால் புத்தகத்தைப் பார்க்க முடியவில்லை. எங்கள் ஊரில் பழமையான கெஜிஎம் நூலகத்தில் அந்தப் புத்தகம் இருக்கிறதா என்று ஒருமுறை விசாரித்துப் பார்த்தேன். இல்லை. அங்கே நான் உதவி நூலகராக கொஞ்ச காலம் இருந்திருக்கிறேன். எழுதுவதில் ஆர்வம் ஏற்படுவதற்கான காரணம் அப்போதைய வாசிப்புப் பழக்கம்தான். துர்கா பிரசாத் கத்ரியின் நாவல்கள் என்றால் எனக்கு மிகவும் பிடிக்கும். புதிய புத்தகங்கள் வாங்கப் போகும்போது இவருடைய புத்தகங்களைத் தான் அதிகமாக வாங்குவேன். பிறகு, கோட்டயம் புஷ்பநாத் போன்றவர்களுடைய துப்பறியும் நாவல்கள். அப்போதே இதில் ஆர்வமிருந்தது. விதி என்னையும் துப்பறிபவனாக்கியது. குற்றங்களைத் துப்பறிந்து செய்பவன்.

பின்பு, பல முறை நான் பத்திரிகைகளில் வந்திருக்கிறேன். போலீஸ் பிடிக்கும்போது நல்லவனாக வாழவேண்டுமென்ற ஆசையில் பத்திரிகைகளின் சிறப்புச் செய்தியாக வந்தேன். என்னுடைய வாழ்க்கையைக் கதைக்கருவாகக் கொண்டு ஒரு நாவலும் எழுதப்பட்டது. எஸ்எஃப்ஐ மாநிலத் தலைவராக இருந்த எங்கள் ஊர்க்காரரான தோழர் சுகுமாரன் எழுதிய இந்நாவல், 'காவல் கோபுரங்களின்கீழ்' என்ற பெயரில் வெளிவந்தது. திருடன் ஒரு பெண்ணைப் பலவந்தமாகப் புணர்கிறான். அதிலொரு குழந்தைப் பிறக்கிறது எனும் அத்தியாயம் இந்நாவலில் பெண்கள் என்ற தலைப்பில் சேர்க்கப்பட்டிருந்தது.

செல்லப்பன்பிள்ளை: கை விட்டுப் போன தல்லும்[10] கல்லும் ஒன்றுதான். பிறகு திருப்பியெடுக்க முடியாது. அநியாயமாக உதைத்து விட்டோம் என்பதற்காக போலீஸ்காரர்கள் ஸாரி எல்லாம் சொல்லமாட்டார்கள். பெரும்பான்மை போலீஸ்காரர்களும் இதையெல்லாம் ஒரு பொருட்டாகவே எடுப்பதில்லை. தங்களுடைய பணியின் ஒரு பகுதியாகவே உதையையும் அவர்கள் கருதுகிறார்கள். மறைத்துவிட நினைக்கும் குற்றங்களைச் சொல்ல வைப்பதற்கான முயற்சியில் உதையின் தேவை முக்கியத்தும் பெறுகிறது. இதில், வித்தியாசமான ஒருவர் இருந்தார். செல்லப்பன்பிள்ளை சார். நெடும்பனைக்காரர். ஒருநாள் நான் சின்னக்கடை வழியாகப் போகும்போது என் கையைப் பிடித்தார். நான் பார்த்து விட்டுத்தான் பார்க்காததுபோல் நடந்தேன்.

"என்னைத் தெரியுதாடா?"

"தெரியும்."

"பாத்துட்டுதான் பாக்காததுபோல போறியா?"

"மரம் ஏறுற வேலைங்குறதுக்காக, முள்ளு முருக்கைக் கண்டாகூட போய் ஏறிடுவாங்களா என்ன?"

"புரியலை."

"தெரியுமுங்கிறதுக்காக போலீஸ்காரங்களைக் கண்டதும் யாராவது போய் ஒட்டிக்குங்குவாங்களா?"

"அதென்னடா அப்பிடிச் சொல்லிட்டே?"

"அதெல்லாம் சரி வராது சார். ஒருவேளை, பிடிச்சி பார்ல கொண்டு போய் உட்கார வெச்சி பாக்கெட் அடிச்சிடுவாங்க. அப்பப்ப ஏதாவது உத்தரவு போடுவாங்க. அப்புறம் அவங்க முன்னால கூனிக்குறுகி நிக்கணும். தொந்தரவான விஷயம்... ஸ்டேஷனாக இருந்தா, அது அவங்களோடவோ திருடனோடவோ பணி நிமித்தம்னு ஆறுதல்பட்டுக்கலாம்."

இவரும் கடைக்கு அழைத்துச்சென்றார். ஆனால், பாக்கெட் அடிக்கவில்லை. சிறப்பு சேவைக்கான ஜனாதிபதி விருது வாங்கி ஓய்வு பெற்றவர். குடும்பப் பெருமையைக் குலைக்காமல் கௌரவமாக வாழ்ந்தவர். வழக்கு எழுதுவதில் நிபுணர். குற்றவாளிக்கு நிச்சயம் தண்டனை கிடைத்தே ஆக வேண்டுமென்று நினைத்தால் கிடைத்திருக்கும். ஓட்டைகளே இல்லாமல் கிடுக்கிப்பிடி போட்டு எழுதுவார். உதைக்க நினைத்தால் உதைத் திருவிழாவே நடத்திவிடுவார். நல்ல உதை விழவும் அதிர்ஷ்டம் வேண்டும். சில வகை உதைகளுண்டு. ஜெயிலில் நுழையும்போதும் போலீஸ் பிடிக்கும்போதும் கிடைக்கிற காரணங்களில்லாத சில்லறை உதைகள். சில உதைகளுக்கு வலுவான காரணங்களிருக்கும். ஏற்கனவே இந்த வழக்கில் நீ இதைச் சொன்னாய்; இன்று வேறுமாதிரி சொல்கிறாய். இனி பொய் சொல்வியா . . ? என்று கேட்டுக் கொடுக்கும் உதைக்கு ஒரு காரணமிருக்கிறது. கௌரவமான போலீஸ்காரர்களிடமிருந்து உதை வாங்குவதும் உவகைக்குரிய விஷயம்தான். சாயாவும் பருப்பு வடையும் வந்தது.

செல்லப்பன்பிள்ளை சார் சொன்னார்: "உன்பேரிலுள்ள பிரத்தியேக அன்பால் ஒண்ணும் உனக்கு நான் சாயா வாங்கித் தரலே. சர்வீசிலிருக்கும் போது எங்கிட்டே இருந்து அடி வாங்கின எந்தப் பிரதியைக் கண்டாலும் கூப்பிட்டு நான் சாயா வாங்கிக்கொடுப்பதுண்டு. ஒரு பிராயச்சித்தம்னு நினைச்சுக்கயேன்."

"ஏன்?"

"காரணமெல்லாம் கிடையாது. அன்னைக்கு அடிக்கிறதுக்கான காரணம் இருந்தாலும் பாவத்தோட அம்சமும் அதில இருக்கும் . . . மனசுக்கொரு ஆறுதல் . . ."

சார் மரணமடைந்தபோது நானும் போயிருந்தேன். பாவத்தை எல்லாம் இங்கேயே தீர்த்துவிட்டு சார் சொர்க்கத்திற்குப் போயிருப்பார்.

நந்தகுமாரன்: என்னுடைய மைசூர் சாம்ராஜ்யத்தைத் தகர்த்தெறிந்த நந்தகுமாரன் சார், திருவனந்தபுரம் மியூசியம் ஸ்டேஷனில் சிஐயாக இருந்தபோது ஒருமுறை போயிருந்தேன். என்னை மேலும் கீழுமாகப் பார்த்துவிட்டு: "இப்ப என்ன பண்ணிட்டிருக்கே" என்று கேட்டார்.

"சும்மாதான் இருக்கேன்" என்றேன்.

"ஏதாவது சாப்பிட்டியா?"

நான் பதில் சொல்லவில்லை. சாரின் மனதில் பல காட்சிகள் கடந்து போயிருக்க வேண்டும்.

சார் சொன்னார்: "எல்லாமே நடந்துபோச்சி."

நான் சிரித்துக்கொண்டேன். இரண்டு சாயா கொண்டுவரச் சொன்னார்:

"ஒவ்வொரு உத்தியோகத்துக்கும் அதற்கேயான வேலைகளைச் செய்ய வேண்டியதிருக்கு . . ."

நான் சொன்னேன்: "என்னுடைய மன உணர்வு ஏமாற்றம் மட்டும்தான். ஆனா, சார்மேல எனக்கு மரியாதையிருக்கு. சார் என்னை நல்லவிதமாத்தான் நடத்துனீங்க. அதை என்னால மறக்கவே முடியாது."

சாயா வந்தது. ஆளுக்கொன்றை எடுத்தோம்.

"பழைய வேலைகள் இப்பவும் நடக்குதா?"

"தாங்க முடியாத கட்டத்தில செய்தாலும் செய்திடுவேன். இப்ப அந்தக் கட்டத்தை நோக்கிதான் போயிட்டிருக்கிறதாவும் தோணுது. பிடிச்சு நிக்க முயற்சி பண்றேன். உறுதியாக என்னால சொல்ல முடியலை . . ."

"முன்னாள் கைதிகளோட மறுவாழ்வுக்காக வங்கிகள்லே சில லோன் ஏற்பாடுகள் இருக்கு. அவங்க ரொம்பவே சிக்கல்லே இருப்பாங்க என்கிறதும் திருப்பிக் கட்ட மாட்டாங்க என்கிறதும் வங்கிக்காரங்களுக்குத் தெரியும். இருந்தாலும் நான் முயற்சி செய்து பாக்குறேன்."

"கிடைச்சுதுன்னா ரொம்ப உதவியா இருக்கும் சார்."

"உனக்கு நான் பண்ணின மிகப்பெரிய 'உதவி'க்குக் கைமாறாக

இதையாவது செய்ய வேண்டாமா . . ?"

கொல்லத்திலுள்ள தேசியமயமாக்கப்பட்ட ஒரு பெரிய வங்கியின் மானேஜரை தொலைபேசியில் அழைத்து சார் சொன்னார். இருந்தபோதும் பெரும் சிரமம்தான். என்னைத் திசைதிருப்பும் முயற்சியில் வங்கிக்காரர்களும் அவர்களை ஊக்கப்படுத்தும் முயற்சியில் நானும் தீவிரமாக இருந்தோம். கூடவே, நந்தகுமாரன் சாரின் வற்புறுத்தலும். ஒருவழியாக லோன் கிடைத்தது. இருபதாயிரம் ரூபாய் என்று நினைவு. முதலில் பத்தாயிரம். நேரில் வந்துப் பார்த்துவிட்டு மிச்சத் தொகையைத் தருவதாகச் சொன்னார்கள். அது போதும்.

கையில் பத்தாயிரம் ரூபாய் கிடைத்ததும் பெரிய மகிழ்ச்சி. சரியாகச் சாப்பிட்டே பல நாட்களாகின்றன. கொஞ்சம் தண்ணிபோட வேண்டும். மிச்சப் பணத்தை எதுவும் செய்யக் கூடாது. வியாபாரத்துக்கான முதலீடு.

கடைக்குள் ஏறியதும் தோளிலொரு கை பதிந்தது. இடிவெட்டு மைதீன். என்னுள் மரியாதையைத் தோற்றுவித்த திருடன். நீயும் ஒரு இடிவெட்டு மைதீன்தான்டா என்று பலர் என்னை புகழ்ந்துச் சொல்வதுண்டு. ஆனால், சாட்சாத் இடிவெட்டு, மைதீன்தான். மழைக்காலத் திருடன் என்று உலகத்தில் யாருமே கேள்விப்பட்டிருக்க முடியாது.

மாப்பிளா பாட்டுகளின் களஞ்சியம். அருமையாகப் பாடுவான். நினைத்த மாத்திரத்தில் புனைந்து பாடி விடும் திறமை இயல்பாகவே பெற்றவன். நிமிட கவி. இவனுடைய தொழில் கடலுக்குப் போய் மீன் பிடிப்பது.

முதன்முதலாக, சப் ஜெயிலில் சந்தித்தோம். முதல் சந்திப்பிலேயே மனங்கள் கலந்து விட்டன. இவன் பாடுவதைக் கேட்டுக்கொண்டிருந்தால் அன்ன ஆகாரம் எதுவுமே தேவையில்லை. தன்னை மறந்து ஆழ்ந்து விடுவேன். மற்றவர்கள் யாருமில்லை என்றால் தாளத்திற்கேற்ப சிறு சுவடுகளும் வைப்பேன். சில சமயங்களில் கூப்பாடுபோட்டுக் கொண்டாடுவேன். இப்படியாக, மைதீன் இருக்கும்போது நான் எல்லாவற்றையுமே மறந்துபோய் விடுவேன். அவனைப் பார்ப்பதுகூட மகிழ்ச்சி தரும் விஷயமாக இருந்தது.

இரவு நேரங்களில் மின்னல் வெட்டினால் மைதீனின் மனதில் சிறு சஞ்சலம் உருவாகும். கூடவே, மழையும் பெய்தால் வெளியில் வந்து ஏதாவது வீட்டிற்குள் நுழைந்திருப்பான்.

"நான் திருடுறதுக்கான காரணம் மீன் கிடைக்காமல் அல்ல. பணம் சம்பாதிக்க வேற என்னென்ன வழிகளெல்லாம் இருக்கு? இதுக்கான காரணத்தை எப்படிச் சொல்லிப் புரிய வைக்கிறதுன்னும் எனக்குத் தெரியல. அது . . . அதை ஒரு ரசனைன்னு சொல்லலாம் . . . பயங்கரமான இடியும் மின்னலுமுள்ள மழைக்காலத்தில எந்தக் கவலையுமில்லாம மூடிப் போர்த்திட்டுத் தூங்குறவங்களைப் பாக்கவே அழகாக இருக்கும். மனப்பொருத்தமில்லாத கணவன் மனைவிகூட கட்டிப்பிடிச்சித் தூங்கு வாங்க. மழைக் காலமுங்குறது அன்பின் ஒரு மாத காலம். இதையெல்லாம் நான் உன்கிட்ட சொல்றதுக்கான காரணம். உன்னால இதைப் புரிஞ்சுக்க முடியுங்குறதுதான். போலீசுக்குக் கலாரசனையே கிடையாது."

'கடலுக்குப் போய் தொழில் செய்யிற நீ மழைக்காலம் வந்திட்டா மட்டும் ஏண்டா திருடுறே?' என்று போலீஸ்காரங்க கேட்பாங்க. வேற வழியில்லாமதான் சார். மழைக்காலத்தில கடல் கொந்தளிப்பா இருக்கும்; மரம் இறக்க முடியாது; மீனும் கிடைக்காதுன்னு சொல்லிடுவேன். இந்தப் பதிலில அவங்க திருப்தியடைஞ்சுடுவாங்க. உண்மையைச் சொல்லி இவங்களை நம்ப வைக்கவா முடியும்?" என்பான்.

எங்காவது நல்ல இடி மின்னலுடன் மழை பெய்யும்போது திருட்டு நடந்ததா? போலீஸ் வேன் கடற்கரைக்குப் போகும். கார்காலத் திருடன் கடலில் கட்டு மரத்திலிருப்பான். போலீஸ்காரர்கள் கரையில். தொலைவிலிருந்து இதைப் பார்த்துவிட்டால் பிறகு அவன் கரைக்கே வராமல் அங்கேயே சுற்றிக்கொண்டிருப்பான். சில நேரங்களில் கட்டு மரம் வேறு துறைகளில் அணையும். மைதீனைப் பிடிப்பதென்பது மிகப்பெரிய சவால்.

திருடுவதற்காகவே மழைக்காலத்தை எதிர்பார்க்கும் ஒருவன் உலகத்தில் இருக்கவே முடியாது. இடி குறைவாக இடிப்பதுவும் மைதீனுக்குப் பிடிக்காது: "இதெல்லாம் ஒரு மழைக் காலமா? பத்து இடி இடிக்காமல் என்ன மழை வேண்டிக்கிடக்கு" என்பான்.

அந்த மைதீனைதான் நான் பல வருடங்களுக்குப் பிறகு பார்க்கிறேன். இனி பாரில் உட்கார்ந்து பயனில்லை. இரண்டு ஃபுல்லும் அதற்கான துணைகளுடனும் கடற்கரைக்குப் பயணித்தோம். அங்கிருந்து வடக்கே நடந்து இரண்டு படகுகளின் மறைவில் உட்கார்ந்தோம்.

பிறகென்ன? மாப்பிளா பாட்டுகளின் பிரவாகம். "மாப்ளே இப்ப என்ன

பண்றே பழைய தொழில்தானா இப்போதும்?" என்பதுபோன்ற அபத்த விசாரணைகள் எதையும் நாங்கள் பகிர்ந்துகொள்வதில்லை. அருகே கடல் இருப்பதைக்கூட மறந்து போனோம். இரவு மணி ஒன்றிருக்கும். மைதீனை உசுப்பினேன். எழுந்திருக்கவில்லை. மலைபோல் உடலும் அதில் நிறைந்த அன்புமுள்ள மைதீன், குறட்டை விட்டுத் தூங்கிக்கொண்டிருந்தான். அசைத்தால் அசைய வேண்டுமே. நான் எழுந்து நடந்தேன். ஆட்டோவோ காரோ கிடைத்தால் போய்விடலாம். வேற பிரச்சினையொண்ணுமில்லையே என்று என்னிடமே கேட்டுக்கொண்டேன். ஒண்ணும் பிரச்சினையில்லை.

ஆட்டோவோ டாக்சியோ எதுவும் கிடைக்கவில்லை. ரெயில்வே ஸ்டேஷனில் டாக்சி கிடைக்கும். நடந்து எஸ்பி ஆஃபீஸ் அருகிலுள்ள கேட்டைக் கடந்தேன். பிறகு, நடந்தது எதுவும் நினைவில் இல்லை. நினைவு திரும்பும்போது நேரம் விடிந்திருந்தது. பாதசாரிகள் என்னைப் பார்த்துவிட்டு நடக்கிறார்கள். சட்டென்று எழுந்து கண்களைக் கசக்கி விட்டுப் பார்த்தேன். கண்டோன்மென்ட் மைதானத்தின் ஒரு மூலையில் எஸ்என் காலேஜ் மதிலையொட்டிய ரோட்டோரம் அய்யன்காளி சிலையின்கீழ் உட்கார்ந்திருக்கிறேன். திடீரென்று மனதில் மின்னல். பான்ட் பாக்கெட்டைத் தடவினேன். பேப்பரில் பொதிந்து பிளாஸ்டிக் கவரில் வைத்திருந்தப் பணம் எங்கே?

வெத்து பாக்கெட். கொஞ்ச நேரம் எழுந்திருக்கவே தோன்றவில்லை. எவ்வளவு கொடூரமான விதி. அசிங்கம் பிடித்த மனிதப் பிறவி. உலகமே இருண்டுவிட்டது போலிருந்தது. அப்படியே மல்லாந்து படுத்துவிட்டேன். மனதிலெங்கோ கண்ணீர் நரம்புகள் துண்டாகிக் கொண்டிருந்தன. எவ்வளவுதான், பார்த்தும் அனுபவித்தும் திருந்தாத ஜென்மம். திருடனிடமிருந்ததை எவனோ திருடிக்கொண்டான்.

---

7. விரால் குஞ்சு.
8. பட்டர் - தமிழ்ப் பிராமணர்.
9. கம்யூனிஸ்ட் பச்சை - காயம்பட்ட இடத்தில் வைக்கும் பச்சிலை.
10. தல்லு - அடி.

## 75 - பின்தொடரும் போலீஸ்

திருடன் என்பவன் மனதளவில் பலவீனமானவன். அவனிடம் உறுதி கிடையாது. சஞ்சல மனோபாவம் உடலை தவறாகவே வழி நடத்தும். ஜெயிலில் இருக்கும்போது தோன்றும். இனிமேல் திருடக்கூடாது. ஒழுங்காக வாழ வேண்டும். ஜெயிலில் அனைவருடைய எண்ணமும் இதுவாகத்தானிருக்கும். பரஸ்பரம் அன்பு மேலோங்கி நிற்கும். நல்லிணக்க சிந்தனைகள் உருவாகும். மரியாதை தோன்றும். அங்குள்ள அமைப்புடன் இணங்கிவிடுவோம். மோசமான எண்ணங்கள் அதிகம் உருவாகாது. எண்ணங்கள் தொட்டியில் வளர்த்தும் செடிகள் போன்றவை. போற்றுவார் வேண்டும். நீரும் உரமும்தேவை. இல்லையென்றால் வாடிப்போகும். ஜெயிலுக்குள் தோன்றுகிற சபல எண்ணங்கள் பெரும்பாலும் கருகிப்போகும். பெண்ணுடலின் தேவையை மனம் உணர்கிறது என்றால் நடக்கிற விஷயமா? ஆகவே, எண்ணம் முளையிலேயே கருகி விடும். மதில் சுவரை விட்டு வெளியே வந்ததும் அடங்கிக்கிடந்த குற்றவாசனைகள் தலை தூக்கும். இருந்தாலும் அடித்து அதனை ஆற்றுப்படுத்தவே நினைப்போம். "கழுவேறிக்குப் பிறந்தவனே, அடங்கிக்கிடடா" என்று.

ஜெயிலிருந்து வெளியே வரும்போது கையில் கொஞ்சம் பணமிருக்கும். உழைப்பின் கூலி. நீண்ட கால சிறை வாசத்திற்குப் பிறகு கிடைத்த சுதந்திரம். கொண்டாட வேண்டாமா? நேராக கடைக்குச் செல்வேன். அவர்களுக்கு நானொரு சாகச வீரன்.

"மணியா எப்படா வந்தே? எப்படிடா வீட்டுக்குள்ளால எல்லாம் நுழையிறே? கடைசியாக எங்கடா திருடினே? ஜெயில் எப்படிடா இருந்தது."

கொஞ்சம் பெருமையாகவே இருக்கும். வீரதீரப் பராக்கிரமங்களை வர்ணிக்க ஆரம்பிப்பேன். இதனிடையே அதீதமான மகிழ்ச்சியுடன் "அங்க ஒரு குப்பிக்கள்ளு; அண்ணனுக்கு ஒரு கிழங்கு கொடு; தெக்கே மாமனுக்கு ஒரு மீன் கொடு என்றெல்லாம் சொல்லிக்கொண்டிருப்பேன். ஜெயிலில் கிடைத்த பணத்தில் முக்கால்வாசியும் அன்றே தீரும். மறுநாள்

கையில் அதிகமாகப் பணமிருக்காது. பரிச்சயமில்லாத கடைக்குப் போவேன். அங்கே புலியென்றால் இங்கே எலி. புலியாகத் தொடர வேண்டுமென்றால் மடிச்சீலையின் அகங்காரமும் துணை நிற்க வேண்டும். இப்போது அது இல்லை. கொஞ்சம் குடித்துவிட்டு நேராகச் சின்னக்கடைக்குப் போவேன். எங்காவது சுற்றித் திரிந்து, இரவுக் காட்சிக்கு ஏதாவது தியேட்டரில் ஏறுவேன். டிக்கெட் எடுக்க நின்றிருக்கும் போதும் உள்ளே இருக்கும்போதும் யோசனைதான். எங்காவது நுழைந்தால் என்ன? கையில் பணமில்லாமல் எப்படி வாழ்வது? தியேட்டரிலிருந்து இறங்கும்போது என்னை இயக்குபவன் நானல்ல, திருடன் இயக்குகிறான். ஏதாவதொரு வீட்டின்முன் சட்டென்று நிற்பேன். கொஞ்ச நாள் உள்ளே கிடந்தவன் என்பதால் கடவுள் இதைக் கண்டுகொள்ள மாட்டார். தேவைக்கான ஆபரணங்களும் பணமுமாக திருடன் மதில் சுவரில் ஏறி வெளியே குதிப்பான். மறுநாள் பகல், கொண்டாட்டங்களில் கழியும். பிற்பகலில் குடிக்கப்போவதற்கு முன் சிறு இடைவேளை உண்டு. மணி இரண்டோ மூன்றோ இருக்கும். ஊரார் உண்ட மயக்கத்தில் ஆழ்ந்திருப்பார்கள். சலிப்பு தோன்றும். சரி, சியாமளாவைப் பார்த்துவிட்டு வருவோமா அல்லது பார்கவியைப் பார்ப்போமா என்று யோசித்துவிட்டு, கடைசியில் பொன்னம்மாவே போதுமென்று முடிவு செய்வேன். உடலின் தேவைகள் பூர்த்தியாகும். மனதில் உருவான தெம்பும் உடலின் சிறு அசதியும் கலந்து புதிய உற்சாகம் பிறக்கும். இதெல்லாம்தான் திருடனின் வாழ்க்கை.

பழைய போலீஸ்காரர்களில் பலர் சீர்கெட்டுப் போய்விட்டதற்கான காரணம், திருடனின் வாழ்க்கையை அவர்களும் வாழ்ந்ததுதான். திருடனைப் போலீஸ்காரன் பின்தொடர்ந்தே தீர வேண்டும். ராமன்பிள்ளை போலீஸ், மணியன் பிள்ளையைத் தேடுவதாக வையுங்கள். அவனுடைய முதல் பணி, திருடனைக் கண்காணிப்பதுதான். அவன் பின்னாலேயே அலைவார். இரவில் எங்கெல்லாம் தங்குகிறான் என்று சந்தேகிக்கிறார்களோ அங்கெல்லாம் போய்த் தேடுவார். திருடன் அங்கிருந்தால் ஏதாவது கொடுப்பான். அல்லது, யாராவது தகவல் சொல்வார்கள்: "சார் இப்ப அவன் கோடியாட்டு வயல் கள்ளுக்கடையில் இருப்பான். இப்ப போனா பிடிக்கலாம். எட்டு மணிவரைக்கும் அங்குதானிருப்பான்." ஆனால் ஏமான் அப்போது போக மாட்டார். அவன் போயிருப்பான் என்ற முடிவுடன் எட்டு பத்துக்கு போவார். பகல் நேரங்களில் திருடனிடம் ஏதாவது வாங்கியும் இருக்கலாம். எதுவாயினும் வழியில் அவனைப் பார்த்தால், பார்க்காததுபோல் திரும்பி நின்று சிறுநீர் கழிப்பார். திருடன் கடந்து போனதும் அவன் வந்த மார்க்கத்தில் நடந்து

கள்ளுக்கடையில் ஏறுவார்.

உட்கார்ந்திருப்பவர்களில் பலர் மரியாதை கொடுத்து எழுந்து நிற்பார்கள். மரியாதை தெரியாதவர்களில் பலவீனனைப் பார்த்து முறைப்பார்; அழுத்தமாக முனகி வைப்பார். மீசையை முறுக்கிக்காட்டுவார். தன்னையறியாமல் அவனும் எழுந்துவிடுவான். ஊர்ச் சண்டியர்கள் அசைய மாட்டார்கள். கண்டதாகவே பாவிக்க மாட்டார்கள்.

"கடையில கண்ட்ராக்கு யாருடா?" என்பார். மானேஜர் ஓடி வருவார்.

"நான்தான் ஏமானே . . ."

"திருடன் மணியனோட பற்று வரவெல்லாம் இங்கதானாடா?"

"அய்யோ, பற்று வரவெல்லாம் கிடையாது ஏமானே, ரொக்கம்தான்."

"ரொக்கமா தர்றதுக்குத் திருடன் கையில ஏதுடா காசு?"

மானேஜர் பிடரியைச் சொறிவார்.

"அவன் திருடறதை எல்லாம் நீ கல்லா கட்டுறே இல்லையா . . ? ஸ்டேஷனுக்கு நீயும் வரவேண்டியதாயிடும். சாட்சி சொல்றதுக்கு." இதற்குள் ஏமானின் முன்னால் குப்பியும் தம்ளரும் மரச்சீனியும் மீனும் முட்டையுமெல்லாம் வந்துவிடும். தின்றுகொண்டிருக்கும்போது பிரச்சினைகளைப் பேச வாய்ப்பில்லை. முடிந்து கல்லாவின் முன் வந்து நின்று கலாய்ப்பார்.

"அவன் என் கண்ல பட்டான்னு வெச்சிக்க, அதான் அவனுக்குக் கடைசி காலம்னு சொல்லிப் போடு. ஒரு ரெண்டு குப்பி பார்சல் பண்ணி எடு."

ஏமான் புறப்படும்போது, திருடனின் பந்தாவில் வெறுத்துப்போன எவனாது பின்னாலிருந்து: "ஏமானே, அவன் இப்ப பொன்னம்மாவோட குடிசையிலோ சியாமளா வீட்டிலோ தாட்சாயிணி வீட்டிலோ இருப்பான்" என்று ரூட் சகிதம் தகவல் சொல்லி விடுவான்.

ஏமானுக்குத் தோதுவான ஏதாவது வழியில் நடந்து, திருடன் இல்லை என்று ஊர்ஜிதமாகத் தெரிந்த ஏதாவது குடிசையில் ஏறி, விட்டேனா பாரென்று நிற்பார். அவள் உடுத்திருக்கும் கைலியை லத்தியால் தட்டி: "இங்க எங்கியாவது அவனை மறைச்சி வெச்சிருக்கிறியாடீ . . ? அவுருடீ

பாக்கலாம் . . ." என்பார். பிறகு என்னைத் தேடி அங்கேயே படுத்துக்கொள்வார். மறுநாள் பகலில் இன்னொருத்தியின் வீட்டுக்குப் போயும் என்னைத் தேடி விட்டுத்தான் ஸ்டேஷனுக்குப் போவார். திருடனைப் பின்தொடரும் போலீசும் சீர் கெட்டுவிடுவதற்கான காரணம் இதெல்லாம்தான்.

காரணவர்: செய்த திருட்டுகளைச் சரியாகப் பட்டியலிட்டுக் கொடுத்து உதையிலிருந்து தப்பிப்பது என் பாணி. இப்போதுள்ள போலீஸ்காரர்களின் உதை போல் அல்ல, பழைய போலீஸ்காரர்களின் உதை. இப்போது சர்வீசிலிருப்பவர்கள் படித்தவர்கள். மெனக்கெட்டுப் படித்து, உடற்பயிற்சிகளில் தேறி, தேர்வின் முதல் வாரம் கடினப் பிரயத்தினம் செய்து எப்படியாவது உள்ளே நுழைகிறார்கள். பிறகு, உடல் அசையாமல் பணியாற்றுவார்கள். இது இப்போதைய போலீஸ். முன்பெல்லாம் இப்படியல்ல. பெரும்பாலும் கால்நடையும் சைக்கிளும்தான். திருடன் போகுமிடங்களுக்கெல்லாம் போவார்கள். சைடு பிசினெஸ் இல்லாமல் உயிர்வாழ முடியாது. பெரும்பாலும் விவசாயமோ வேறு ஏதாவது தொழிலோ கை வசமிருக்கும். நல்ல உறுதியான உடலிலிருந்து விழும் உதையில் வீரியமிருக்கும். மட்டுமல்ல, பல போலீஸ்காரர்களுக்கும் வர்மம் தெரியும். என்னைக் கவனிக்கும் பொறுப்பை எஸ்ஐ விஜயகுமாரன், காரணவர் என்ற போலீஸ்காரரிடம் ஒப்படைத்திருந்தார். கவனிப்பு என்றால் அதுதான் கவனிப்பு. காரணவரின் விசாரணை முறை, சுதந்திரப் போராட்ட நியூஸ் ரீல் பார்ப்பது போலிருக்கும். கமென்ட்ரி குறைவாக இருக்கும். எல்லாமே சைலன்ட். எட்டிப் பார்த்தால்தான் ஆக்ஷன் தெரியும். திருடனிடமிருந்துமா சத்தம் வராது? முதலில் கழுத்தில் ஒரு பிடி பிடிப்பார். இதை, நாங்கள் காரணவரின் கிளிப் என்று சொல்வோம். கிளிப் விழுந்த மூன்று நான்கு மணி நேரம் குரல் வெளியே கேட்காது. அப்படியே அணைத்துப் பிடித்து, கை முட்டை விலா எலும்பில் அழுத்திப் பதிப்பார். உடலில் ஒரு குலுக்கமும் கூடவே, ஒரு நடுக்கமும் ஏற்படும். பேச்சு வராமல் அப்படியே சுருண்டு விடுவோம்.

வெற்றிலை போட்டுவிட்டுத் திரும்ப வந்து கழுத்தில் மறு கிளிப் போடுவார். சத்தம் மெல்ல வெளி வரும். அலறலும் மெல்லவே வெளிவரும். முதலில் குத்து விழுந்த விலா எலும்பின் மற்றொரு பகுதியில் தடவிவிடுவார். ஹா . . . எவ்வளவு சுகமாக இருக்கும் தெரியுமா? வலிகளெல்லாம் போயே போய்விடும். இதனிடையே உள்ளதை உள்ளபடியே சொல்லிவிடுவோம். காரணவரிடமிருந்து எது

கிடைத்தாலும் யாரும் வருத்தப்படுவதில்லை. ஏனென்றால் இவர் கொடுமைக்காரர் அல்ல என்பது தான். தன் கர்மத்தைச் செய்து முடித்த பிறகு திருடன்மீது இவருக்குக் கோபமோ வைராக்கியமோ இருக்காது. என்னுடைய பணியை நான் செய்தேன் என்பது போலிருப்பார். சில போலீஸ்காரர்களின் தர வரிசை, திருடினாயா, பங்கைக் கொடு என்பதுதான். இதற்காக வீடு தேடி வந்து தொந்தரவு செய்யவும் தயங்க மாட்டார்கள்.

காரணவரிடம் சொன்னேன்: "சார், பூக்குஞ்ஞுங்கிற ஒருத்தன்தான் நான் திருடுறதில அதிகமான பொருட்களை வாங்குவான். அவனுக்கு மூணுநாலு பொஞ்சாதிங்க. நிறைய பிள்ளைகளுமிருக்காங்க. ஒவ்வொருத்தனுக்கும் ஒவ்வொரு பெட்டிக்கடையாவது வெச்சி கொடுத்திருக்கான். எல்லாமே என்னைப்போல் உள்ளவங்களை ஏமாத்தி சம்பாதிச்சது."

இப்படியான ஒருவன் கிடைத்தால் அவர்களைப் பிடிப்பதில் போலீஸ்காரர்களுக்குள் போட்டியிருக்கும். பங்கு கிடைக்கும். தகவல் அறிந்து பூக்குஞ்ஞு தலைமறைவானான். வாமனபுரத்தில் சம்பந்தி வீட்டில் ஒளிந்திருந்த அவனை இரவு இரண்டு மணிக்கு போலீஸ் பிடித்தது. நான் ஜீப்பிலிருந்தேன்.

அதிகாலையில் ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தோம். நான் லாக்கெப்பிலும் பூக்குஞ்ஞு வெளியே தூணிலும். பரஸ்பரம் பார்க்க முடியாது. பகல் முழுவதும் எங்களை இப்படியே வைத்துவிட்டு போலீஸ்காரர்கள் போய்விட்டார்கள். மறுநாள், அதிகாலையில் பாரா மாறியது. பூக்குஞ்ஞு ஒரு வேலை செய்தான். ஸ்டேசனை சுத்தம் செய்கிற செல்லம்மாவைக் கூப்பிட்டு ஒரு ஐம்பது ரூபாய் நோட்டைக் கொடுத்து: "ரெண்டு சாயா. ஒண்ணு லாக்கெப்பில இருக்குறவனுக்கு, ஒண்ணு எனக்கு. மிச்சம் ரூபாயை நீயே வெச்சுக்க." என்றான். ஐம்பது ரூபாய் நோட்டைப் பார்த்ததும் செல்லம்மா தலைகால் மறந்தாள். சுத்தம் செய்வதை நிறுத்திவிட்டு சாயா வாங்கப் போனாள். போலீஸ்காரர்களுக்குத் தெரியாமல் லாக்கெப்பில் இருப்பவர்களுக்கு சாப்பிட எதுவும் கொடுக்கக்கூடாது. அந்தப் பெரியம்மா இதையெல்லாம் கண்டுகொள்ளவே இல்லை.

சாயாவைத் தந்துவிட்டு செல்லம்மா: "என்னவெல்லாம் கொடுத்திருக்கிறதா சொன்னேன்னு தூண்ல கிடக்கிற சார் கேட்டார்" என்றாள். சாயாவை ஒரே மூச்சில் குடித்து முடித்துவிட்டு, ஒரு மிரட்டலும்

நான்கு ஏச்சும்: "யார்கிட்ட கேட்டுட்டு பொம்பளே நீ எனக்கு சாயா வாங்கித் தந்தே? நீ அதில விஷத்தைக் கலக்கலேன்னு நான் எப்படி நம்புறது?" செல்லம்மா பயந்து விட்டாள். உண்மையிலேயே ஒரு சாயா கிடைத்ததில் எனக்குப் பெரும் திருப்தி.

மூன்று வழக்குகளில் பூக்குஞ்ஞுவையும் சேர்த்தேன். அவனது அளவு கடந்த ஆசை, திருடுகிற இடம்வரைக்கும் என்னை சைக்கிளில் கொண்டு போய் விடுமளவுக்குச் சென்றிருந்தது. என்னை ஏமாற்றி அவ்வளவு நகைகளை அவன் வாங்கியிருக்கிறான். எனக்கு எடை பார்க்கத் தெரியாத காலம் அது. வரிஞ்ஞும்தான் பூக்குஞ்ஞுவின் வழக்கறிஞர். வழக்கில் வெற்றி பெற்றுவிடலாமென்று பூக்குஞ்ஞு முடிவே செய்துவிட்டான். ஆனால், அவர் சொன்னார்: "மணியன் கடிச்சான்னா பட்ட இடத்தைப் பறிச்சுடுவான். அவன் சொல்லணும், நான் இவர்கிட்ட கொடுக்கலைன்னு."

ஜாமீன் கிடைத்த பிறகு, பூக்குஞ்ஞு, சில பிரமுகர்களுடன் என்னைப் பார்க்க வந்தான். நான் சொன்னேன்:

"வழக்கு நடக்கும்போது பாத்துக்கலாம். ஆனா, பூக்குஞ்ஞு, வியாபாரத்தில சில நயங்கள் இருக்கணும். தாராளம் லாபம் சம்பாதிச்சிக்க, வேண்டாங்கல. ஆனா, எதுக்குமே ஒரு அளவு வேணும். வியாபாரம்னு சொல்லி, மற்றவங்களை ஏமாத்திப் பணம் சேத்துப் பெரிய மனுசன் ஆயிடலாம்னு நினைக்காதே."

வழக்கு ஆறுமாதம் நீண்டது. ஒவ்வொரு தடவை கோர்ட்டுக்கு வரும்போதும், பத்து கட்டு காஜா பீடி, ஒரு சோப்பு, டவல், ஆகாரம் எல்லாம் பூக்குஞ்ஞுவின் அன்பளிப்புகளாகக் கிடைத்து வந்தன.

விசாரணையின்போது, "இந்த ஆள் யார்னே எனக்குத் தெரியாது. நான் இவரைப் பாத்தது கிடையாது" என்று சொல்லிவிட்டேன். போலீஸ் அதிகாரியும் அரசு வழக்கறிஞரும் மறுத்தார்கள். நடக்கவில்லை. பூக்குஞ்ஞுவுக்கு விடுதலை. பிறகு, எப்போதாவது பார்த்தால் சிரிப்பான். சில நேரங்களில் தீயில் மிதித்து நிற்பதுபோல் சுகக்ஷேமம் விசாரிப்பான். அப்படியே நகர்ந்து விடுவான்.

மின்சார இலாகாவில் வேலைபார்க்கும் என் ஊர்க்காரர், ஒரு வகையில் உறவினரும்கூட. என்மீது அவருக்கு என்ன வாஞ்சையென்று நினைக்கிறீர்கள்? என்னுடன்தான் சாப்பிடுவார். "நீ வராம நான் எப்படிடா சாப்பிடுவேன்" என்று பலதடவை உருகியிருக்கிறார். வெளுத்ததெல்லாம்

பால் என்றுதான் நானும் நினைத்திருந்தேன். எனக்கு, நக்குவதற்கு ஏதாவது தந்துவிட்டு அவர் முழுவதுமாகத் தின்று கொண்டிருந்தார். நிறையவே ஏமாற்றியிருக்கிறார். கடைசில் கை விரித்து விட்டார்.

ஒரு வழக்கில் கரண்டையும் இழுத்து விட்டேன். போலீஸ், இவரைத் தேடி கொட்டியம் மின்சார அலுவலகத்துக்குச் சென்றது, மனிதர் அங்கேயே கதற ஆரம்பித்து விட்டார். "அய்யோ, என்னைக் கொண்டுபோக வேண்டாம்னு சொல்லுங்க. நான் செத்துடுவேன் . . ." உண்மையாகவே செத்து விடுவாரா இல்லையா என்று யாருக்குத் தெரியும்? எனக்குப் பயம். இவர் தூக்குப் போட்டுச் செத்தால் ஊர்க்காரர்கள் நான்தான் காரணம் என்பார்கள்.

அஸி. எஞ்சினியர் எஸ்ஐயிடம் சொன்னார்: "அவர் வக்கீலையும் அழைச்சிட்டு நேரா ஸ்டேஷனுக்கு வந்துடுவார். இப்பக் கொண்டு போக வேண்டாம். பயந்தே செத்துடுவார்போலிருக்கு." போலீஸ் திரும்பிச் சென்றது.

ஸ்டேஷனுக்கு வந்து ஒருமூலையில் நின்று நடுங்கிக்கொண்டிருந்தார். நான் லாக்கெப்பில் இருக்கிறேன். வக்கீல் சொன்னார்: "சார், சம்பவங்கள் உண்மைதான். இவன்கிட்ட இருந்து இவர் குறைஞ்ச விலைக்குப் பலதடவை சாமான்கள் வாங்கியிருக்கார். வழக்குல இவரைச் சேக்க வேண்டாம். தனிப்பட்ட முறையில் வந்து உங்களைப் பாக்கச் சொல்றேன். இவரை . . ."

அவரைக் கண்டதுமே நான் சொல்லிவிட்டேன்: "போ . . . போ . . . நான் உன் பேரைச் சொல்ல விரும்பல. இனியும் ஏதாவது திருடன்களை ஏமாத்திப் பிழைச்சுக்க . . . உனக்காக இல்லை, இதோ இவருக்காக . . ." ஸ்டேஷனில் நின்றிருந்த ஒரு போலீஸ்காரரைச் சுட்டிக்காட்டிச் சொன்னேன். இவரது சித்தி மகன்தான் இந்த போலீஸ்காரர். இவர்களுக்குள் பகையும் இருந்தது. கரண்டின் அகம்பாவம் இத்துடன் தீர்ந்தது.

ஜெயராம் படிக்கல்: என் மனைவியின் முன்னால் வைத்து நான் முதன்முறையாகப் பிடிபடுகிறேன். அவசர நிலைகாலச் சித்தரவதைகளின் தலைமைப்பொறுப்பை ஏற்றிருந்த ஜெயராம் படிக்கலை நான் முதல் தடவையாகப் பார்த்ததும் இந்த வழக்கில்தான். ஒரு திருடன் பிடிபட்டதும் போலீசாரின் முதல் வேலை, அவனை அடித்துப் பழுக்க வைப்பதுதான். வேறு எங்கெல்லாம் திருடியிருக்கிறான் என்பதை அறிவதற்கான ஒரு

ஏற்பாடு இது. துப்புக் கிடைக்காத திருட்டுகளை எல்லாம் கிடைத்தவன் தலையில் ஏற்றுவார்கள். இந்த வழக்கிலும் இதுதான் நடந்தது. திருவனந்தபுரத்தில் ஜெயராம் படிக்கல், ஜான், ஹரிஹரன் எனும் போலீஸ் அதிகாரிகள் முன்னிலையில் காட்சிப்படுத்தப்பட்டேன்.

கடைசி இருவரும் இரவுக்காட்சி சினிமா பார்த்துவிட்டு வந்தார்கள். பிடிபட்ட மது வகைகள் ஸ்டேஷனில் இருக்கும். போலீஸ்காரர்களுக்கு இதற்கெல்லாம் பஞ்சமிருக்காது. வாயில் துணி திணிக்கப்பட்டு, கைகள் பின்புறமாகக் கட்டப்பட்டு நிற்கிறேன். அப்போதும் இதை வழக்கமானதென்று தான் நினைத்திருந்தேன். கண்களைக் கட்டிய பிறகுதான் பின்னணியில் ஜெயராம் படிக்கலிருப்பதை உணர்ந்தேன். கண்களைக் கட்டி வைத்து உதைத்தால் உதை எப்போது, எங்கிருந்து, எந்த இடத்தில் விழுமென்றெல்லாம் யூகிக்க இயலாது. விழும்போதுதான் தெரிய வரும். ஆகவே, தம்பிடித்து நிற்க முடியாது. உடம்பில் நன்றாக ஏற்கவும் செய்யும். உதையின்போது இரண்டு மூன்று திருட்டுகளைச் சொன்னேன். பிறகு படிக்கல் வந்தார். ஒரு கெட்ட வார்த்தையை முன்னொட்டாகச் சொல்லிவிட்டு: "போதும். ரெண்டு திருட்டை முழுங்கியிருக்கான். இனி அதை சொல்லவும் மாட்டான்." பின்பொரு முறை சென்ட்ரல் ஜெயிலில் ஒரு பொது நிகழ்ச்சிக்குப் படிக்கல் வந்தபோது இளநீர் வெட்டிக் கொண்டுபோய்க் கொடுத்தேன். "இங்கேயும் நீதான் லீடரா?" என்று கேட்டார்.

## **76 -** அமானுஷ்யங்கள்

இரவு ஜீவிகளான திருடன்கள் பொதுப் பாதைகளிலோ நேரான மார்க்கங்களிலோ சஞ்சரிப்பதில்லை. துரத்துபவர்கள் கையில் பிடிபடாமலிருக்க யாருக்கும் தெரியாத குறுக்கு வழிகளினூடே உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு ஓடுபவர்கள். மனித வாசமில்லாத மார்க்கங்களில் நடமாடுவதுதான் அவர்களுக்குப் பாதுகாப்பு. மனிதர்களைத் தவிர்த்த எந்த அமானுஷ்யங்களுக்கும் பயப்படுவது திருட்டின் தொழில் தர்மமில்லை. இருப்பினும் சில அமானுஷ்ய அனுபவங்கள் எனக்கு ஏற்பட்டதுண்டு.

நாங்கள் இரண்டு களவாணிகள் ஆலப்புழையில் களர்கோடு எனுமிடத்தில் திருடிவிட்டு வந்துகொண்டிருந்தோம். அப்போது எனக்கு இருபது வயதிருக்கும். 1970 - '71 காலகட்டம். திருட்டில் சிறகு முளைக்கும் காலம். எண்ணாயிரம் என்ற பெயரில் அறியப்படும் பிரசித்திபெற்ற திருடன்தான் இதில் என்னுடைய தொழில் கூட்டாளி. நிஜப்பெயர், அப்துல் ரஹீம். ஜெயிலில் உருவான தோழமை. இதைத் திட்டமிட்டவனும் எண்ணாயிரம்தான். அங்கே ஒரு வீட்டில் நுழைந்து ஆபரேஷன் செய்தோம். ஓரளவு சாமான்கள் கிடைத்தன. வாகனம் கிடையாது. கொல்லத்தை நோக்கி, தேசிய நெடுஞ்சாலை வழியாக நடந்துகொண்டிருந்தோம். களர்கோட்டிலிருந்து சுமார் பத்து கிலோமீட்டர் வந்திருப்போம். ஆள் சஞ்சாரமற்ற ஒரு ஏகாந்தப் பெருவழி. இன்றும் இந்தப் பகுதியில் ஓரளவு அப்படியேதான் இருக்கிறது.

வலதுபுறம், கண்ணுக்கெட்டிய தொலைவுவரைக்கும் வெள்ளை மணற்பரப்பு. இடது புறம், வயல்வெளிகள். ரோட்டோரங்களில் தேவையற்ற நாயின்கணகள்[11] வளர்ந்து கிடந்தன. சுற்றுப்புறமெங்கும் இருட்டிலாழ்ந்து கிடந்தது. மிகத் தொலைவில் தெருவிளக்குகள்.

நாங்கள் பேசியபடியே நடந்துகொண்டிருந்தோம். வழியில் சில டாங்கர் லாரிகள். கை காட்டினோம். நிறுத்தவில்லை. சூழல் சலனமற்றுக் கிடந்தது. மணி மூன்று தாண்டிவிட்டது. திடீரென்று என் கையைப் பிடித்து நிறுத்திய

எண்ணாயிரம் சொன்னான்: "இனி பேசாதே! எதைப் பாத்தாலும், காதில எது கேட்டாலும் திரும்பியே பாத்துடாதே! அப்படியே வேகமா நடந்திட்டிரு."

கொஞ்ச தூரம் நடந்து ஒரு காட்டுப்பகுதிக்கு வந்து சேர்ந்தோம். திடீரென்று பின்னால் குரவைச் சத்தம் கேட்டது. கூட்டக்குரவை. எண்ணாயிரம், நொடிக்குப் பத்தாயிரம் தடவை நடுங்கியபடி நடக்கவோ ஓடவோ செய்துகொண்டிருந்தான். என் கையைப் பலமாகப் பிடித்துமிருந்தான்.

நடுரோட்டில் நடைப்பயணம் செய்துகொண்டிருந்தோம். பெருவெளியில் குரவைச் சத்தமும் பின்தொடர்ந்துகொண்டிருந்தது. எனக்குத் திரும்பிப் பார்க்க வேண்டும்போலிருந்தது. நான் இரண்டிலொன்று என்ற முடிவிலிருப்பவன். பிறகு பயப்படுவதற்கு என்ன இருக்கிறது? எண்ணாயிரம் கையை விடாமல் பிடித்திருக்கிறான். கொஞ்சதூரம் நடந்திருப்போம். திடீரென்று கதறியழுவதுபோன்ற சத்தத்துடன் குரவைச்சத்தம் மறைந்தது. "சத்தம் ஏன் நின்னுட்டது தெரியுமா? இந்தக் கோயில்ல கையில கம்பும் வெச்சிட்டு ஒரு பெரியவர் உட்காந்திருக்கார். அவர்தான் அதை அடிச்சு விரட்டியிருக்கார்." பாவம், கோயிலில் இருக்கும் அந்த மனிதரை யோகி என்று சொல்லவும்கூட எண்ணாயிரத்துக்குத் தெரியவில்லை.

இன்னொரு சம்பவம் நிகழ்ந்த இடம், கொல்லத்தின் அருகிலுள்ள பரவூர். நிறைய காயல்களும் சதுப்பு நிலங்களும்கொண்ட பகுதி. அங்கே சரோஜா தியேட்டரில் செகண்ட் ஷோ முடிந்து அப்படியே நடந்து கொண்டிருந்தேன். பக்குவமாக வீடுகள் எதுவும் கண்ணில் படவில்லை. காயல் பாலத்தில் தண்டவாளங்களின் நடுவே நடந்துகொண்டிருந்தேன். இப்போது டிரெயின் வந்தால் கதை தீரும். திடீரென்று பார்க்கும்போது தண்டவாளத்தின் ஒருபுறம் வெள்ளிபோல் தகதகக்கும் பிரகாசத்துடன் இரண்டு மனிதர்கள்.

என் கையில் இரண்டு செல் டார்ச்சும் ஒரு பேனாக் கத்தியும் இருந்தன. எதிரில் அறிவால் யூகித்துவிட முடியாத சம்பவம் நிகழ்கிறது. என்ன அமானுஷ்யங்களாக இருந்தாலும் மீண்டுமொரு முறை நுட்பமாகக் கவனித்தால் விளங்கிக்கொள்ள முடியும். நின்று கவனிப்பதற்குத் தைரியம் வேண்டும். நான் அசையாமல் நின்று கூர்ந்து கவனித்தேன். உருவங்கள் இப்போது அசையவில்லை. உருவங்கள்தானா என்றொரு சந்தேகம் வந்தது. கத்தியை உருவிக்கொண்டு இரண்டடிகள் முன்னால் வைத்தேன்.

உருவங்கள் நெட்டி முறித்து எழுந்து பளீரென்று பெருவெளியில் கலந்தன.

நான் நினைத்துக்கொண்டேன். விடக்கூடாது. எது நடந்தாலும் சரி, போய்ப் பார்த்துவிட வேண்டியதுதான். தொடர்ந்து நடந்தேன். விஷயம் பிடிபட்டதும் சிரிப்புதான் வந்தது. ரெயில்வே ஓரத்தில் வைக்கப்பட்ட அலுமினியக் கூண்டின்மீது பக்கத்து விளக்குத் தூணிலிருந்து வெளிச்சம் பதிந்திருக்கிறது. என்னுடைய அசைவுக்கேற்ப அதுவும் பிரகாசத்துடன் அசைந்திருக்கிறது. அமானுஷ்யங்களைப் பின்தொடர்ந்தால் அவை, கேலிக்கூத்தாக மாறி விடும். அன்று நடந்த ஆலப்புழை அமானுஷ்யத்தின் குட்டும் நான் தனியாகப் போயிருந்தால் வெளிப்பட்டிருக்கும். ஆனால், இதுபோன்ற நிகழ்வுகளின் பின்னணியில் பெரும்பாலும் சமூக விரோதிகள் இருப்பார்கள். ஆகவே, எச்சரிக்கையும் தேவை.

மற்றவர்களது அருகாமையை அவர்களுக்குத் தவிர்த்தாக வேண்டும். என்னவென்று அறிந்துகொள்ளும் ஆர்வத்தில் சென்றால் எதுவும் நடக்கலாம். பின்னணியில் சமூக விரோதிகளின் செயல்பாடு பற்றி சொல்லும்போது என்னை மட்டும் தவிர்த்துவிடவா முடியும்? நாங்கள் சிலர் சேர்ந்தும் இப்படியான சேட்டைகளில் ஈடுபட்டதுண்டு.

மணியன் மாடன்: வலியவிளை ஏலா அன்று கொல்லம் மாவட்டத்திலுள்ள மிகப் பெரிய நெல்வயல்களில் ஒன்று. ஆயிரக்கணக்கான ஏக்கர்கள் வருமளவுக்குப் படர்ந்து கிடந்த பகுதி. இன்று அது பெயரளவிலாகி விட்டது.

அன்றெல்லாம் மக்களுக்குக் குறுக்கு வழிகளாகப் பயன்படுவது வயல்வெளிகள்தான். இரவு நேரங்களிலும்கூட பலர் இப்படி நடப்பதுண்டு. மனதிற்குள் சிறு பய உணர்ச்சியுடன் நடக்கும்போது தொலைவிலெங்கோ ஒரு வெளிச்சம் தோன்றும். திடீரென்று அது படர்ந்துயர்ந்துப் பெருவெளியில் எரிந்தடங்கும். மறுநொடியில் வெளிச்சம் அங்கிருந்து இரு நூறடி தூரத்தில் மேட்டுப் பகுதியில் தோன்றும். மீண்டும், அடுத்தத் தொலைவில் உருவாகி உயர்ந்து பெருவெளியில் மறையும். இப்படித் தொடர்ச்சியாக நிகழுமென்றால் உறுதியாகச் சொல்லிவிடலாம். மாடன்தான். மாடனின் காலடிகள் ஒவ்வொன்றும் தொலைவுகளின் இடைவெளி கொண்டவை. இதைப் பார்ப்பவர்கள், எண்ணிக்கையில் எத்தனை பேரிருந்தாலும், என்னதான் அவிசுவாசிகளாக இருந்தாலும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு ஓடவே செய்வார்கள். அறிவுள்ள யாருமே அங்கு நிற்கமாட்டார்கள். எந்தப் பகுத்தறிவாலும் இதைப் புரிந்துகொண்டு விளக்கிவிடவும்

முடியாது. இதுபோன்ற அமானுஷ்யங்கள் புரிதலுக்கு அப்பாற்பட்டவையாகவோ கேலிக்குரியவையாகவோ மாறும். விசுவாசிகள் தங்கள் பக்திக்கு மேலும் வலுவேற்றுவார்கள். அவிசுவாசிகள் நாளை ஏதாவதொரு மாடன் கோயிலில் கை கூப்பி நின்றாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. மாடன் இப்படியான பயத்திலிருந்து உருவாகி ஆராதனைக்குரியவராக மாறிய ஆள்தான். மாடன் சாமி மட்டுமல்ல, எல்லா மதங்களின் ஆச்சாரங்களும் கடவுளர்களும் இப்படியான மனித பலவீனங்களில் பற்ற வைத்தெடுத்தவைதான். உண்மையில் இது எப்படி நிகழ்கிறது? இப்படியான ஒரு ஆச்சரியத்தின் பின்னணியில் செயல்படுவது என்ன?

20 - 22 வயதிலான மூன்று சமூக விரோதிகள். திருட்டு மணியனும் அவனுடைய இரண்டு சகாக்களும் திட்டம் போட்டார்கள். இன்று ஏதாவது வேடிக்கை செய்து பார்க்க வேண்டும். இரண்டு மூன்று கோழிகளும், கொஞ்சம் மரச்சீனிக்கிழங்கை மூட்டோடும் பிடுங்கிக்கொண்டு வந்தார்கள். மசாலா தேவை. சின்னக்கடைக்குப்போய் சைக்கிளில் ஒரு பெண்ணையும் கூடவே அழைத்துக்கொண்டு வந்தார்கள். எல்லாமே தயார். கோழி பக்குவமாகி வரும்போது தொலைவில் இரண்டு மூன்றுபேர் கையில் சூட்டுக்கொள்ளியுடன் நடந்துகொண்டிருந்தார்கள். அவர்களும் எங்களைப் போல் இளவயதினராகவும் பயமற்றவர்களாகவும் இருந்துவிடக்கூடாது. இதில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். வெளிச்சத்தைக் கண்டதும் என்னவென்றுப் போய்ப் பார்த்து விடுவோமே என்று வந்துவிடக்கூடும். வேலையைத் தொடங்கினோம். மூன்று நான்கு சட்டிகளும் தூபப்பொடியும். பந்தத்தை எண்ணெயில் முக்கி சட்டியில் வைத்திருந்தோம். தீப்பெட்டியையும் சட்டியையும் எடுத்துக்கொண்டு ஓடினோம். வரப்பில் நிற்கும் ஒருவன் பந்தத்தைக் பற்ற வைத்து உயர்த்திப் பிடித்து அதில் தெற்றிப்பொடியைத் தூவினான். அது படர்ந்து உயர்ந்தெரிந்தது. நனைந்த துணியை வைத்து தீயை அணைத்தான்.

இருநூறு மீட்டர் தூரத்தில் மேட்டுப் பகுதியில் நின்றவனும் இதைச் செய்தான். மூன்றாவதாக ஒரு திண்டின்மீது நின்றவனும் செய்தான். முதலில், வயலுக்குள் பிறகு, மேட்டுப்பகுதியில் கடைசியில் திண்டில். இப்படி, படிப்படியாக தீ உயர்ந்தெரியும். கடைசியாக நிற்பவன் தீயை அணைத்துவிட்டு சத்தமாகக் குதித்து நிகழ்ச்சியை முடித்து வைப்பான். சாமான்ய அறிவால் விளங்கிக்கொள்ள முடியாத இந்தச் சம்பவத்தைப் பார்த்ததும் சூட்டுக்கொள்ளியும் வெளிச்சமும் பயந்தோடுவது தெரியும்.

சூட்டுக்கொள்ளியும் வெளிச்சமும் வரப்பினூடே போவதைப்

பார்க்கும்போதெல்லாம் இதை நாங்கள் செய்தோம். மறுநாள், வலியவிளை மாடன் கோயிலில் பக்தர்கள் கூடுவார்கள். வருமானம் அதிகரிக்கும். பல புண்ணிய மலைகளில் மண்டல காலங்களில் இதுபோன்ற புனித வெளிச்சங்கள் காட்டப்படுகின்றன. பிடிபட்டால் எங்களை அடித்துக் கொன்றுவிட நினைக்கும் அதே சமூகம், அரசாங்க அனுமதியுடன் நடக்கும் விளக்குக்கு அனுமதியளித்திருக்கிறது. மனித குலத்தின் பல்வேறு நகைமுரண்களில் இதுவுமொன்று.

டிராக்: அசாதாரணமான மற்றொரு நிகழ்வு காக்கோட்டுமூலை எனுமிடத்தில் நடந்தது. நடுச்சாமத்திற்குப் பிறகு, ரெயில்வே பாலத்தின் அருகினூடே நடந்துகொண்டிருந்தேன். தோதுவாகக் கிடைத்த வீட்டில் திருடிவிட்டு நடந்து நடந்து இந்த அத்துவானப் பகுதிக்கு வந்து சேர்ந்தேன். வாட்சைப் பார்த்தேன். மணி ஒன்றரை. திடீரென்று, பயந்த குரலில் ஒரு பெண் அழுகிற சத்தம்.

ஒரு பக்கம் காயல். இருட்டில் எதுவுமே தெரியவில்லை. படகோட்டிகள் படகிலோ பாலத்தின் அடியிலோ காயல் அருகிலோ ஏதாவது பெண்ணைப் பயன்படுத்துகிறார்களாக இருக்கும். சரி அப்படியென்றாலும் உரக்க அழுகிற இந்தக் குரல்? நான் நினைத்தைப் புரிந்துகொண்டதுபோல் திடீரென்று அந்தக் குரல் சிணுக்கமாக மாறியது. பாலத்தில் ஏறி நின்று குரல் கேட்ட திசையை நோக்கி டார்ச் அடித்தேன். மின்னிய டார்ச் பிறகு எரியவில்லை. திடீரென்று அசாதாரண அளவிலான ஒரு கரும் பூனை. மங்கலான நிலா வெளிச்சத்தில், தண்டவாளத்தின் நடுவில் என்னை வழிமறிப்பதுபோல் உட்கார்ந்திக்கிறது. உடல் முழுவதும் சிலிர்க்க பயம் தலைக்கேறியது. அது என்னையே பார்க்கிறது. திரும்பி ஓடினால் வீடுபோய்ச் சேர முடியாது. மட்டுமல்ல, கையில் திருட்டுப் பொருட்கள் வேறு இருக்கின்றன. பிடிபட்டு விடுவேன். முன்னால்தான் நடந்தாக வேண்டும். நேரம் விடிவதற்குள் வீடுபோய்ச் சேர்ந்துவிட வேண்டும். ஒன்றரை மணி முதல் கிட்டத்தட்ட மூன்று மணிவரை பூனை அசையவே இல்லை. பயத்தில் உறைந்துபோய் நானும் அப்படியே நின்றிருந்தேன். கல்லெடுத்து எறிவதற்கான துணிச்சல்கூட வரவில்லை. ஏதோ மந்திரசக்திக்குக் கட்டுப்பட்டவன்போல் நின்றிருந்தேன். தொலைவில் அப்போது ஒரு படகின் அசைவும் வெளிச்சமும் வந்தது. பூனையைக் காணோம். நான் டிராக்கின் வெளியில் நிற்கிறேன். அங்கேயே சிறுநீர் கழித்து அந்த மண்ணை அள்ளிக் கையில் எடுத்துத் தூவிக்கொண்டே நடந்தேன். யாரோ சொல்லக் கேட்ட வித்தை. ஒருவழியாக பாலத்தில் மறுகரையை அடைந்ததும் ஓட்டம் பிடித்தேன்.

பயம் உருவாகிவிட்டால் பிறகு தப்பிக்கவே இயலாது. மூளை உணர்வு நிலையை இழந்துவிடும். இங்கேயும் இதுதான் நடந்தது. இன்று நினைத்துப் பார்க்கும்போது பயத்தில் உறைந்து நின்றிருக்கிறேன் என்பதைப் புரிந்துகொள்ள முடிகிறது. கல் எடுக்கக் குனிந்தால்கூட பூனை ஓடியிருக்கும். அப்புறம், பெண்ணின் அழுகைக் குரல். பூனை நாற்பது விதமாகக் குரல் கொடுக்கும் திறன்பெற்ற ஒரு உயிரினம். சூழ்நிலைக்கேற்ப அதன் குரல்களும் மாறும். அப்படியான ஒரு விசித்திரக் குரல்தான் அதுவும். அல்லது வேறு ஏதாவது இரவுக்கிளியாகவும்[12] இருக்கலாம்.

இன்னொரு அனுபவம், கொல்லம் காலேஜ் ஜங்ஷன், சாரதா மடத்தில் வைத்து நடந்தது. கொட்டாரக்கரையின் அருகில் ஒரு வீட்டில் திருடிவிட்டுக் கொல்லத்துக்கு வருவதற்காக பஸ்சை எதிர்பார்த்து நின்றேன். நடுச்சாமம் கடந்திருந்தது. திருட்டுப் பொருட்களை ஒரு பிளாஸ்டிக் கவரில் வைத்திருந்தேன். அதில் நகைகளும் பணமுமிருந்தன. தொலைவில் ஒரு பஸ் வந்துகொண்டிருந்தது. ஆறுதலாகவும் ஆச்சரியமாகவும் இருந்தது. இந்த நேரத்தில் பஸ் கிடையாதே? கையைக் காட்டியதும் வாகனம் நின்றது. எனது சப்த நாடிகளும் நிச்சலனமாகி விட்டன. போலீஸ் உதை வண்டி! ஏறச் சொல்லி உள்ளேயிருந்து ஒரு குரல் வந்தது. நான் பதற்றத்திலிருந்தேன். "ஏறச்சொன்னது காதில விழலையாடா?" என்றார் முன் இருக்கையில் அமர்ந்திருந்த எஸ்ஐ. மனதிற்குள் நினைத்துக்கொண்டேன். அவ்வளவுதான். எல்லாமே போச்சு. நாளை மறுநாள் புகைப்படத்துடன் பத்திரிகையில் செய்தி வரும். ஏறி உட்கார்ந்தேன். உள்ளே நான்கு ஏஆர் போலீஸ்காரர்கள். முன்புறமிருந்த எஸ்ஐ கேட்டார்:

"எங்க போயிட்டு வர்றே?"

"ஒரு துஷ்டி சொல்ல வந்தேன். திரும்பிக் கொல்லத்துக்குப் போகணும்."

"ஆங் . . . இனி வண்டி, வள்ளமெல்லாம் கிடையாது."

செங்கோட்டை வழியாகச் செல்லும் மீட்டர் கேஜ் டிரெயினில் அரிசி கடத்தலைப் பிடிக்கச் சென்ற ஸ்பெஷல் ஸ்குவார்டு என்பதைப் புரிந்துகொண்டேன். கொல்லம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு முன்னாலுள்ள சிறு ஸ்டேஷன்களில்தான் தமிழ்நாட்டிலிருந்து கடத்தி வரும் அரிசியை இறக்குவார்கள். தமிழ்நாட்டிலிருந்து சிறு சிறு பார்சல்களாக கூடையிலோ வேறு வகையிலோ அரிசியைக் கடத்திக் கொண்டுவந்து டிரெயினில்

வைத்து எல்லாவற்றையும் மூடையில் ஒன்று சேர்ப்பார்கள். இதை வழியில் மடக்கிப் பிடிப்பதற்காக வந்திருக்கிறார்கள். என்னை கொல்லத்தில் இறக்கி விட்டுவிட்டு, கொல்லத்தில் எந்த இடமென்று கேட்டார்கள். இரவிபுரம் என்றேன். இறங்கும்போது நகைகளும் பணமும் இருக்கிற பிளாஸ்டிக் கவரை மட்டும் கையில் எடுத்துக்கொண்டேன். மற்ற எலெக்ட்ரானிக் பொருட்களை சீட்டின் அடியிலேயே வைத்து விட்டேன். இதையும் கையில் எடுத்துக்கொண்டு இறங்குவது ஆபத்தானது. சந்தேகப்பட்டு பார்த்துவிட்டால் . . . அப்படியான ஒரு வாய்ப்பை நாமாக உருவாக்க வேண்டாம். போலீஸ்காரர்களுக்கு அதிர்ஷ்டம்தான். திருட்டுப் பொருளை போலீஸ் வண்டியில் தவற விட்டேன் என்று திருடன் புகார் கொடுக்கவா போகிறான். இதையெல்லாம் விட பெரிய வேடிக்கை, இறங்கியதும் அந்த எஸ்ஐ என்னிடம் வண்டிக் கூலிக் கேட்டதுதான்.

"காசு கொடுக்காம நீ இங்கே எப்படிடா வருவே? இறங்கி அப்படியே போயிட்டிருக்கே?"

ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்துக்கொடுத்தேன். எந்தத் தயக்கமுமில்லாமல் வாங்கி பாக்கெட்டில் வைத்துக்கொண்டார்.

அப்படியே ரெயில்வே டிராக் நடைபாதையில் நடந்தேன். சின்னக் கடையிலிருந்து கர்பலா ஜங்ஷன் கடந்து நீலா ஓட்டல் முன்புறவழியாக காலேஜ் ஜங்ஷனுக்குப் போய்விடலாம். தேசிய நெடுஞ்சாலைக்கு இருநூறு மீட்டர் முன்பாக, ஒரு முக்கோண மூலையில் சாரதா மந்திரம் இருந்தது. அக்கம் பக்கங்களில் வீடுகள் கிடையாது. சில டியூட்டோரியல்கள் மட்டும். ஆண்களுக்கான எஸ்என் காலேஜின் பின்பக்கம் இந்தக் கட்டடமிருக்கிறது. முன்புறம், அழகான வெள்ளை மணல் விரிக்கப்பட்டிருக்கும். மந்திரத்தின் எதிரில் மிகப் புராதனமான ஒரு ஆங்கிலப் பள்ளி. சுற்றிலும் நூற்றாண்டுகளைக் கடந்த மரங்கள். நூற்றுக்கணக்கான மாணவ - மாணவிகள் தினம் வந்து போகும் இடமாக இருந்தாலும் பகலில்கூட பயத்தை ஏற்படுத்தும். வாரத்திற்கொரு தடவை இங்கே பிரார்த்தனை நடக்கும். இரவு நேரங்களில் பயங்கரமான பயத்தை உருவாக்கும். இங்கே போலீஸ் ரோந்து வராது. ஒரு கிலோமீட்டர் தொலைவில் செம்மான் முக்கு வரைக்கும்தான் ரோந்து. நடந்துகொண்டிருந்த என் பார்வை சாரதா மந்திரத்தில் பதிந்தது. அங்கே வெளிச்சமான ஒரு பகுதியில் மடத்தின் எதிரில் நிற்கும் இலஞ்சி மரத்தில் வெள்ளை ஆடைகளுடுத்த ஒருவர் ஏறுகிறார். மைதானம் ராஜேந்திரன் என்று நினைத்தேன். ஏனோ அப்படித் தோன்றியது. இவன் கொல்லத்தில் புகழ்பெற்ற ஒரு ரவுடி. இவனுக்கு விருப்பமான இடம் சாரதா

மந்திரம்தான். பெரும்பாலும் மடத்தின் முன்னாலுள்ள வெள்ளை மணல்பரப்பில்தான் ஓய்வெடுப்பான். பெண்களையும் இங்கே அழைத்துக்கொண்டு வருவான். புனிதமான இடங்களில் இரவு நேரங்களில் என்னவெல்லாமோ நடக்கும்.

நகரிலுள்ள பாலியல் தொழிலாளர்கள் அனைவரும் மைதானத்திற்கு மாமூல் கொடுக்க வேண்டும். கொல்லம் ரிசர்வ் கேம்பிலுள்ள பையன்களுடனும் மைதானத்துக்குத் தொடர்பிருந்தது. காய்ந்துக் கிடக்கும் பையன்கள் அல்லவா? இரவில் மதிலேறிக் குதித்து வெளியில் வருபவர்களுக்கு தாகசாந்திக்கான ஏற்பாடுகள் செய்து கொடுப்பான். என்னிடமும் பலதடவைச் சொல்லியிருக்கிறான். மைதானத்தில் சந்திப்போம் என்று. அந்நேரத்தில் ஏனோ தெரியாது, அது மைதானம்தான் என்ற முடிவுடன் மதிலேறிக் குதித்தேன். உள்ளே நின்று மரத்தில் அவன் இருப்பதைப் பார்த்துவிட்டது போல் ராஜேந்திரா . . . ராஜேந்திரா . . . என்று கூப்பிட்டேன். யாருமே இல்லை. கீழே நின்றால் மரத்தின் மேற்பகுதி நன்றாகத் தெரியும். யாருமில்லை. நான் திரும்பி நடக்க ஆரம்பித்தேன். பின்னால் ஒரு சத்தம் வந்தது. திரும்பிப் பார்த்தேன். மரம் நின்று குலுங்குகிறது. பயந்துபோய், மதிலேறிக் குதித்து ஒரே ஓட்டமாகப் பறந்து விட்டேன்.

பயம் வந்துவிட்ட பிறகு நடப்பதெல்லாமே அமானுஷ்ய நிகழ்வுகள்தான். மேஜிக்போல், குட்டு வெளிப்பட்டால் சே . . . என்றாகி விடும். அதுவரைக்கும் அதிசயங்களாகவே நீடிக்கும்.

ஒருநாளிரவு, மய்யநாட்டிலிருந்து ரெயில்வே பாதை வழியாக, காக்கோட்டு மூலைக்கு வந்துகொண்டிருந்தேன். ஒரு ஆலமரத்தின் பக்கத்தில் வந்ததும் மணிக்கிலுக்கம் கேட்டது. மரத்தடியில் ஒரு மாடன் கோயிலும். போச்சு. மாடனேதான். கூடவே பூனையின் பரிதாபமான அழுகைக்குரலும் கேட்டது. பயமற்றவனுக்கும் இதில் பயம் வந்துவிடும். மணிக்கிலுக்கம் இப்போது வேறு மாதிரிக் கேட்டது. பயந்து போனேன். எதுவாயினும் பார்த்துவிட வேண்டியதுதான். டார்ச் வெளிச்சத்தில் மணிக்கிலுக்கம் வந்த இடத்திற்குச் சென்றேன். அங்கே தென்பட்ட காட்சி பரிதாபமானது. கழுத்தில் மணி கட்டப்பட்ட ஒரு பூனை. அதன் கழுத்தில் கிடந்த மணியின் அவிழ்ந்த நாடா வேலிக்கம்பில் சிக்கி பூனையால் நடக்க முடியாமலிருந்தது. அதைக் கையிலெடுத்து மணியை அவிழ்த்து விட்டேன். இல்லையென்றால் பூனையின் ஆவி என்று சொல்லி பக்கத்தில் எங்காவது ஒரு பூனைச் சிலையை பிரதிஷ்டை செய்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. இப்படியொரு கதையையும் நான்

கேள்விப்பட்டிருக்கிறேன்.

ஒரு நல்ல வீடும் தோப்பும் விற்பனைக்கு இருந்தது. வாங்குவதற்கு யாரும் முன் வரவில்லை. அதை வாங்கியவர்கள் நிம்மதியாக வாழ முடியாது. பூதப்பிரேதாதிகளின் வசிப்பிடம். முன்பு இங்கே இருந்தவர்கள் காலி செய்துவிட்டுப் போவதற்கான காரணமும் இதுதான். நடுச்சாமத்தில் சங்கிலி இழுக்கும் சத்தம் கேட்கும். ஜன்னல் வழியாகப் பார்த்தால் எதுவுமிருக்காது. முதலில் கேட்கும் சத்தம், கொஞ்ச நேரத்தில் மற்றொரு இடத்தில் கேட்கும். இப்படியிருக்கும்போது அந்த இடத்தை தைரியமாக ஒருவர் வாங்கினார். முடிந்த வரைக்கும் மற்றவர்கள் அவரைப் பயமுறுத்திப் பார்த்தும் அதை அவர் வாங்கியே விட்டார். அவருக்கு இவ்வளவு தைரியம் வரக் காரணமே கையில் துப்பாக்கி இருந்ததுதான். மற்றவர்கள் சொன்னது உண்மை. முதல் நாளிரவே சங்கிலிச் சத்தம் கேட்டது. பார்த்தபோது எதுவுமே இல்லை. சங்கிலி இழுக்கும் சத்தம் ஒரு இடத்தில் என்று மட்டுமல்ல. ஓடியோடிக் கேட்கிறது. அவர் துப்பாக்கியுடன் இரவு முழுவதும் காவலிருந்தார். பிறகு, கொஞ்ச நாட்கள் தொந்தரவில்லை. அவரும் விடவில்லை. ஒருநாளிரவு துப்பாக்கியால் சுடுகிற சத்தம் கேட்டது. விளக்குகள் எரிந்தன. ஆட்கள் கூடினார்கள். ஒரு நாய் செத்துக் கிடந்தது. நாயின் உடலில் மணிச் சங்கிலிக் கட்டப்பட்டிருந்தது. அதன் ஒரு முனை தரையில் கிடந்தது. தன்மீது எதுவோ இருக்கிறது என்ற நினைப்பில் அது மதில் கட்டினுள் கிடந்து ஓடும். மதிலைத் தாண்டி வெளியில் ஓடுவதற்கு ஒரே ஒரு வழிதானிருந்தது. ஆனால், இதன் சூத்திரதாரிகள் விட மாட்டார்கள். நாய் கொஞ்ச நேரம் அப்படியே ஓடிக்கொண்டிருக்கும். கடைசியில் வெளியேற விட்டு விடுவார்கள். இந்த நிலத்தையும் சேர்த்துக் கை வசப்படுத்துவதற்காக அக்கம் பக்கத்தினர் செய்த பூதப்பிரேதாதி ஏற்பாடு. இதுபோன்ற குயுக்திகள்தான் அமானுஷ்ய சக்திகளின் பின்னணிகள்.

அற்புதம்: இப்படியான சில அமானுஷ்யங்களை நானும் உருவாக்கியிருக்கிறேன். ஊரில் கொடும்பட்டினியில் வாழும் சில வீடுகளைக் கவனித்து வைத்திருப்பேன். அவர்கள் நல்லவர்களாகவும், படிக்கிற மாணவர்களுள்ள வீடுகளாகவும் இருக்க வேண்டும். பணமில்லை என்றாலும் நல்ல குணமுண்டு என்று சிலரைச் சொல்வார்கள் அல்லவா, அப்படிப்பட்டவர்களாக இருக்க வேண்டும்.

ஒருநாள் காலையில் வீட்டின் முன்னால் அரை மூடை அரிசியும் எண்ணெய், சீனி போன்ற வேறு சில பொருட்களும் இருக்கும். பணமும் அரிசியும் கிடைக்காத, கொடும்பட்டினியுடன் வாழ்பவர்கள் ஏராளமாக

உள்ள பஞ்ச காலம் அது. ஒரு வீட்டுக்காரர் என்னைக் கூப்பிட்டுச் சொன்னார்: "டேய், ஒரு விஷயம் சொல்வேன். நீ அதை யாரிட்டயும் சொல்லிடாதே. நேற்றைக்கு யாரோ ஒருத்தன் சைக்கிள்ல கொஞ்சம் அரிசியும் சாமான்களும் கொண்டுவந்து இது இங்க இருக்கட்டும், காலையில வந்து எடுத்துக்குறேன்னு சொல்லிட்டுப் போனான்."

"நேற்றைக்கா? நேற்றைக்கு சாயங்காலத்துக்குப் பிறகு நான் இங்கதானே இருந்தேன்?"

"சாயங்காலத்துக்குப் பிறகு இல்லேடா. அதுக்கு முன்னால."

"அப்படியா . . ?" நான் தெரியாததுபோல் கேட்டேன்.

"ஆங் . . ."

"அதுக்கு இப்ப என்ன?"

"இல்லே, அதில கொஞ்சம் துணியுமிருந்தது..."

"அதனால?"

"இல்லை, தேவைக்கான அரிசி இங்கே இருக்கு. எப்ப வேணும்னாலும் திருப்பிக் கொடுத்துடலாம். பையனுக்கு துணி தேவைப்படுது. அதை எடுத்துப் பையனுக்கு சட்டையும் நிக்கரும் தைச்சுக்கொடுத்தா ஏதாவது பிரச்சினை வருமாடா?"

"அது அவனோட அளவுதானா?"

"ஆமா."

"அப்புறம் என்ன பிரச்சினை?"

"பிரச்சினை ஒண்ணுமில்லை இல்லையா?"

"சே . . . ஒரு பிரச்சினையுமில்லை."

இப்படி பணமும் கொண்டுபோய் வைத்திருக்கிறேன். மறுநாள் அவர்கள் சந்தையில் சாமான்கள் வாங்க நிற்கும்போது சிகரெட் புகைத்தபடி நானும் பக்கத்தில் நிற்பேன். பத்து கிலோ அரிசி என்று கேட்டால் உடனே நான்:

"என்ன பெருநாளா? சேந்தாப்லே பத்து கிலோ வாங்கிறீங்க?" என்று கேட்பேன். அரை கிலோதான் வாங்குவார்கள். அதுவும் பெரும்பாலும் கடனுக்கு. உடனே அவர்களுக்குப் பதற்றம் தொற்றிக்கொள்ளும். நான் இரவு சஞ்சாரி அல்லவா? இரவு நேரங்களில் எனக்குத் தெரியாமல் எதுவுமே நடக்காது என்பது இவர்களது நம்பிக்கை.

மெல்ல என்னை ஓரம் கட்டி அழைத்துச் சொல்வார்கள்: "டேய் மணியா, நேற்றைக்கு ஒரு கள்ளுக்குடியன் . . ."

"நேற்றைக்கு ஒரு கள்ளுக்குடியனா . . ?"

"விஷயத்தைக் கேளுடா. ரோட்டில சைக்கிள்ல போயிட்டிருந்த ஒரு குடிகாரன் தெறிச்சு எங்க தோப்பில வந்து விழுந்தான். லேசாக அடியும் பட்டது. அப்படியே எந்திரிச்சுப் போயிட்டான். போன பிறகு பார்த்தா அவன் விழுந்த இடத்தில கொஞ்சம் பணம் கிடந்தது."

அப்படியே சந்தேகத்துடன் நோட்டமிட்டு விட்டு: "ஆங்... இனி அவன் வரப் போறதில்லை. அப்படியே வந்தாலும் பைசா செலவாகிப் போச்சுன்னு சொல்லிடுங்க. கிடைக்கும்போது கொடுத்துக்கலாம்."

"அது ஒண்ணும் பிரச்சினையில்லை. வேற பணம் வீட்டிலிருக்கு."

"அப்புறமென்ன . . ."

"பிரச்சினையில்லை, இல்லையா?"

"ஒரு பிரச்சினையுமில்லை."

---


11. ஒருவகை நீர்த்தாவரம்.
12. நைட்டிங்கல்.

## 77 - ஆபரேஷன் கிழவன்

எனக்குள் நீண்ட காலம் கழிவிரக்கமாகக் கிடந்த அந்த முயற்சி மட்டும் திருவினையாகி இருந்தால் நான் ஒருவேளை இந்த அளவுக்குச் சீரழிந்திருக்க மாட்டேன். வரலாற்றின் தொடக்கக் கால நிகழ்ச்சி இது. இத்தகைய அரியதொரு வாய்ப்பு அறவே கிடைக்காது.

சம்பவம் நடந்த இடம் மய்யநாடு. ஒரு பெரிய அரசு வங்கியின் பக்கத்தில் இன்னொரு தனியார் வங்கி. தனியார் என்றால் நிதி காக்கும் பூதம்போன்ற தனியொரு கிழவன். கொள்ளை வட்டிக்கு நகைகள் அடகுப் பிடிப்பவர். நண்பனொருவன் சொன்னான்: "மய்யநாடுவரைக்கும் போகணும். அங்க ஒரு நகையை அடகு வெச்சிருக்கேன். திருப்பியெடுக்கப் பணமில்லை. அதை அங்கேயே வித்துடணும். வட்டி நிறைய ஆகியிருக்கும். காசு ஏதாவது மிச்சம் வந்தா தண்ணியடிக்கலாம்." அப்படியாக மய்யநாட்டுக்கு விரைந்தோம்.

அங்கே, இரண்டு மூன்று வாடிக்கையாளர்கள் நின்றிருந்தார்கள். கிழவனுக்கு ஆமை வேகம். தலை முழுவதும் நரைத்துப் போயிருந்தது. சட்டை கிடையாது. அழுக்குப் பிடித்த வேட்டியும் தோளிலொரு துண்டும். சோடாப்புட்டிக் கண்ணாடியினூடே நகைகளை சாவகாசமாக உரைத்துப் பார்த்து மதிப்பிட்டுக் கொண்டிருந்தார். காத்து நின்றே சோர்ந்து போனேன். கிழவன் பணம் எடுப்பதற்காக உள்ளே போனார். உள்ளே இன்னொரு அறை. நான் யூகித்துக்கொண்டேன். பொருட்கள் எல்லாம் இந்த அறைக்குள்தான் இருக்க வேண்டும். நான் இங்கிருந்தே எட்டியெட்டிப் பார்த்தேன். ஒன்றுமே தெரியவில்லை. நாங்கள் நான்கடி உயரமுள்ள ஒரு மேஜையின் பின்புறம் நிற்கிறோம். இதைத் தாண்டி உள்ளே போக முடியாது. இரண்டு அறைகளுக்கும் இடையிலுள்ள சுவர் விசேஷக் கோணத்திலிருந்தது. நாங்கள் நிற்கும் மேஜையின் கீழ்ப்பகுதி பலகையால் மறைக்கப்பட்டிருந்தது. அதன் இடைவெளியினூடே பார்த்தால், சுவரில் வைக்கப்பட்டிருந்த கண்ணாடி வழியாக உள்ளே நடப்பதை எல்லாம் பார்க்கலாம். கண்ணாடியும் ஒரு விசேஷக் கோணத்தில் கீழ்ப்பக்கம் வைக்கப்பட்டிருந்தது. மேஜையின் பின்னால் நிற்பவர்களது அசைவுகளை அறைக்குள் நிற்கும் கிழவனால் கண்காணிக்க முடியும். எனக்குள்ளிருந்த

குயுக்தி சுறுசுறுப்படைந்ததும் பொறுமை கை கூடியது. இந்த எண்ணத்துடன் என்னால் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் பொறுமையாக நிற்க முடியும். மற்ற வாடிக்கையாளர்கள் போய்விட்டார்கள். எங்களுடைய நகையை எடுப்பதற்காக கிழவன் உள்ளே போனார். ஆனால், என்னை ஏமாற்றுவதுபோல் கிழவன் இப்போது அறைக்கதவை மூடித் தாளிட்டு விட்டார். மேற்பகுதியில் ஓரடியில் இடைவெளி இருந்தது. ஆனால், அந்த வழியாக அவராலும் கண்ணாடியைப் பார்க்க முடியும். நான் குனிந்து பலகையின் இடைவெளிகளினூடே பார்த்தேன். அதன் ஒரு கோணத்தில் கிழவன் அறைக்குள் நிற்பது தெரிந்தது. அப்போதுதான் மற்றொரு வேடிக்கையையும் உணர்ந்தேன். கிழவன் நம்மையெல்லாம்விட வலுவான உருப்படிதான். அவருக்கும் இங்கிருப்பவர்களது எல்லா அசைவுகளையும் கண்காணிக்க முடிகிறது. இது அதிபுத்திசாலித்தனம். அதிபுத்திக்கு எதிர்புத்தியைப் பிரயோகிக்க வேண்டும். ஆட்கள் அதிகமாக நிற்கும்போது கிழவன் அறைக்கதவை மூடுவதில்லை. அதற்கானத் தேவையில்லை அல்லவா? ஒரு டீம் மட்டுமென்றால் அறைக்கதவை மூடிவிட்டு கண்ணாடி வழியாகக் கண்காணிக்கிறார். காய்ந்த வித்துதான்.

திடீரென்று வெளியே நின்றிருந்தவர்களில் ஒருவனைக் காணவில்லை என்றதும் கிழவன் கதவைத் திறந்தார். நான் எழுந்து நின்றேன். வெளியில் வந்து பார்க்கும்போது இரண்டு பேரும் நிற்கிறோம். கிழவனுக்கு மூச்சு சீரானது. "இப்ப நீங்க எங்காவது போனீங்களா?" என்று கேட்டார்:

"ஆமா, சிகரெட் வாங்கப்போனேன்" என்று சொல்லிவிட்டு கூட நின்றிருந்தவனிடம்: "அய்யோ பாக்கி வாங்க மறந்திட்டேன். நான் பாக்கியை வாங்கிட்டு நிக்கிறேன். சீக்கிரமா முடிச்சுட்டு வந்து சேர்" என்றேன்.

தந்திரம் பலித்தது. நான் அவசரமாக வெளியேறுவதுபோல் பாவித்து, கிழவன் உள்ளே போனதும் திரும்பி வந்து, பலகையின் இடைவெளியினூடே கிழவனைக் கவனித்தேன். அவரும் இடையிடையே கண்காணிக்கிறார். நண்பன் எதுவுமறியாதவன்போல் நின்றான். கிழவன் தலையணையின் கீழிலிருந்து சாவியை எடுத்தார். தரையில் கிழிந்தக் கோணிப்பைகள் விரிக்கப்பட்டிருந்தன. அதுவும் நனைந்து அழுக்கடைந் திருந்தன. அதை மிகக் கவனமாக நீக்கினார்.

உள்ளே ஒரு பெரிய லிவர். அதைத் திருகித் திறந்ததும் என் கண்கள் ஆச்சரியத்தால் விரிந்தன. இவ்வளவு நகைகளையும் பணத்தையும் நான்

பார்த்ததே கிடையாது. தலைமுறைகள் தின்றாலும் தீராத அளவுக்கு. நான் ஆச்சரியம் மேலிட துள்ளியெழுந்து விட்டேன். நல்ல வேளை, கிழவன் கவனிக்கவில்லை. எழுந்து வேகமாக வெளியே சென்று விட்டேன். தலைக்குப் பிடித்த கிறுகிறுப்பு இன்னும் அடங்கவில்லை.

கிழவன் நிறையவே வட்டி போட்டிருந்தார். கொஞ்சம் பணம்தான் கையில் கிடைத்தது. சரியாகக் குடிக்கவும் போதாது. நான் இரவு வருவதை எதிர்பார்த்திருந்து செகண்ட் ஷோ சினிமாவுக்குப் போய்விட்டு ரெயில்வே பாதையினூடே மய்யநாட்டுக்கு நடந்தேன்.

மெதுவாக, ஓட்டுக்கட்டிடத்தின்மீது ஏறினேன். அப்போதுதான் தெரிந்தது. அது, இரண்டு அறைகள் மட்டுமே உள்ள கட்டிடமல்ல. பின்புறம் பெரிய வீடுமிருந்தது. கடை மட்டும்தான் இந்தப் பகுதியில். கிழவன் படுக்கிற அறையைத் திறந்தால் வீடு. கயிறு தேவைப்பட்டது. கீழே பார்த்தேன். ஒரு பசு கிடந்து அசைபோட்டுக் கொண்டிருந்தது. மனுஸ்மிருதியில் 'ந ஸ்திரீ சுவாதந்த்யமர்ஹதி' என்று சொல்வதுபோல் பாவம், பசுவைக் குச்சியோடு சேர்த்துக் கட்டியிருந்தார்கள். முதுகில் அமரும் கொசுவைத் தலையசைத்து விரட்டக்கூட முடியாமல். ஒரே தோட்டாவில் இரண்டு பறவைகள். பசுவைக் கட்டியிருந்த கயிறை அவிழ்த்தெடுத்து அதை விடுவித்துவிட்டு திரும்பவும் ஏறினேன்.

இரண்டு ஓடுகளைக் கழற்றி நீக்கிவிட்டுப் பார்த்தால் கீழ்ப்பகுதியில் உறுதியான பலகைத் தட்டும் இருக்கிறது. கொஞ்சம் வேலையிருக்கிறது. வேர்த்துக் கொட்டிவிடும். சட்டையைக் கழற்றி மடிப்புக் குலையாதபடி இடுப்பில் கட்டினேன். இப்படியான வேலைகளின்போது பெருமழை பெய்தாலும் வேர்த்துக்கொட்டத்தான் செய்யும். திரும்பிப் போகும்போது வேர்வையுடனிருப்பதை ரோந்து போலீசார் பார்த்தால் உடனே தூக்கி உள்ளே போட்டு விடுவார்கள்.

பலகையை மெல்லத் தட்டிப் பார்த்துவிட்டு அதில் காது பதித்தேன். உளுத்துப்போன பலகையா என்பதை அறிய வேண்டும். பல வருடங்களாக யாருடைய கைகளும் படாமலிருக்கும் பலகைகள் திருடனின் ஸ்பரிசமேற்றதும் சாபவிமோசனம் பெற்று தன்னுள்ளிலிருக்கும் சகல தூள்களையும் உதிர்த்துவிடும். உறங்கிக்கிடக்கும் கிழவனின் நாசித்துவாரங்களிலும் வாயிலும் காதுகளில் விழுந்து அவரை உசுப்பிவிட்டு விடும். நல்ல பலகைகள்தான். உளுத்திருந்தால் சர் . . . என்று நூல்போல் எதுவோ உதிர்ந்து விழுகிற ஓசையைக் காதுகள் உணரும். பலகையைத் தொடும்போதும் இதை உணர

முடியும். நல்ல உறுதியான பலகைகள். அப்படி இருப்பதுதான் சவாலான திருட்டாகவும் இருக்க முடியும். இவ்வளவு பணத்துக்கும் இந்தக் குறைந்த பட்சப் பாதுகாப்புகூட இல்லாமல் இருப்பது சரியா? திருடுவதிலும் ஒரு திரில் வேண்டாமா? திரும்பவும் கீழே வந்தேன். கையில் பேனாக்கத்தி மட்டும்தானிருந்தது. போதாது. ஒரு நெம்புகோல் கிடைத்தது. பலகையை மெதுவாக நெம்ப ஆரம்பித்தேன். அரை மணி நேர உழைப்புதான். யாரும் குறை சொல்ல முடியாதபடி கனக்கச்சிதமாக எடுத்து அகற்றினேன். பார்க்க அழகான துவாரம். ஒரு கம்பைத் தேடிக் கண்டுபிடித்து அதில் கயிற்றைக் கட்டினேன். சாணகக் கோமியங்களின் நாற்றம். பரவாயில்லை. புனிதக் கழிவுகள்தான். குப்புறக் கிடந்து கைகளால் கயிற்றின் உறுதியைப் பரிசோதித்தேன். பரவாயில்லை. கீழே பார்த்தேன். வாயைத் திறந்து வைத்தபடி கிழவன் நல்ல தூக்கம். இடையிடையே வாய் நிறைய காற்று நிரப்பி சத்தமாக வெளியேற்றியபடியே தூங்குகிறார். இதுபோன்ற நித்திரைகள் நன்மை பயக்க வல்லது. நாம் எழுப்புகிற சிறு சிறு ஓசைகள் இதில் கலந்துவிடும். எல்லாமே சரியாக அமைந்திருக்கிறது. இனி 'ஆபரேஷன் கிழவ'னைத் தொடங்கிவிட வேண்டியதுதான்.

காலை எடுத்து வைத்து மெல்ல இறங்க ஆரம்பித்தேன். கஷ்டகாலம். ஓரமாக வைத்திருந்த ஓடுகளில் ஒன்று, கை தட்டி ஓட்டையினூடே கிழவனின் காலில் விழுந்தது. கஷ்டகாலம் எவ்வளவு நேர்த்தியாக வினை புரிந்திருக்கிறது என்றால், தட்டியெழுப்புவது என்றெல்லாம் சொல்வோம் அல்லவா? அப்படி, கிழவனை அது மிகச் சரியாக தட்டியெழுப்பியிருக்கிறது. கிழவனின் ஓடல்லவா . . .

சுவிட்ச் போட்டதுபோல் துள்ளியெழுந்த கிழவன் ஒரு சுவிட்சில் கை வைத்தார். கீ . . . என்று அலாரச் சத்தம் வந்தது. வீட்டிற்குள் பட்பட்டென்று லைட்டுகள் எரிந்தன. சத்தக் கோலாகலம். திருடன் அதற்குள் ரெயில்வே பாதை வழியாக இன்னொரு மெட்ராஸ் மெயில்போல் கூவாமல் பாய்ந்துகொண்டிருந்தான்.

இதுதான் தலையெழுத்து என்று சொல்வது. எவ்வளவு உழைப்பு பாருங்கள். பலன் கிடைத்ததா? கைக்கெட்டியது வாய்க்கெட்டவில்லை. இதற்கெல்லாம் யோகம் வேண்டும். இன்று எங்காவது இதுபோல் ஒரு கிழவன் இருந்தால் கும்பல் சேர்ந்து பட்டப் பகலில் வெட்டிக்கொன்று விட்டு பணத்துடன் தப்பித்திருப்பார்கள்.

## **78 -** கள்ள நோட்டு குட்டன்பிள்ளையும் மணிராவும்

கள்ள நோட்டு வேலப்பனைப்போல் நானொரு கள்ள நோட்டுக் கும்பலின் தலைவனாக இருந்தால்? அப்படியும் ஒரு வாய்ப்புக் கிடைத்தது. ஆனால், விதி சொன்னது: மகனே மணியா, இந்த மார்க்கம் உனக்கானதில்லை. உனக்கென்று ஒரு கர்மம் விதிக்கப்பட்டிருக்கிறது. நீ அதன் வழியே உன் பயணத்தை மேற்கொள்.

கள்ள நோட்டு வேலப்பனைப் பற்றி தென்கேரளத்திலுள்ள வயதான ஆட்களுக்கு நன்றாகவே தெரியும். வேலப்பன் அடித்தது கள்ள நோட்டல்ல, உண்மையான நோட்டுதான். ஏனென்றால் ரிசர்வ் வங்கியின் நோட்டிலிருந்து ஒரு அம்சமாவது மாறுபட்டிருந்தால்தானே அதைக் கள்ள நோட்டென்று சொல்ல முடியும்? வாட்டர் லைன் வரை மிகச் சரியாகவே அமைந்திருக்கும். இதை வேலப்பன் அடித்துவிட்டான் என்ற ஒரே காரணத்திற்காக மட்டுமே அது கள்ள நோட்டாக மாறியது. அன்றெல்லாம் இதுபோல் நோட்டுகளில் ஹாலோ கிராம், வெளிச்சத்தில் பார்த்தால் தெரிகிற காந்தி தலை என்றெல்லாம் தொழில் நுட்பங்கள் கிடையாதல்லவா? ரிசர்வ் வங்கி வெளியிடும் புதிய சீரியல் எண்களின் எஞ்சிய பகுதிகளை வேலப்பன் வெளியிடுவான். இப்படியாக தென்கேரளத்தில் ரிசர்வ் வங்கி நோட்டுகளுடன் வேலப்பன் நோட்டுகளும் கலந்து புளங்கின. இப்படி ஒன்று கலந்த நிலையில் அந்த நோட்டுகளுக்குக்கூட தெரியாது, நாம் வேலப்பனின் பிள்ளைகளா, ரிசர்வ் வங்கியின் பிள்ளைகளா என்று. இந்த அடையாளச் சிக்கல் ரிசர்வ் வங்கியின் நோட்டுகளுக்குமிருந்தன. எங்களுடைய தகப்பன் ரிசர்வ் வங்கியா, வேலப்பனா என்று கேட்டு தெருக்கள் தோறும் அவை அலைந்து திரிந்தன. சரி, வேலப்பனின் நோட்டுகளை இனம் கண்டுபிடிக்கவே முடியாதா என்றால் அதற்கு ஒரே வழிதான். நிறைய நோட்டுகளை எடுத்து அதை சீரியல்படி அடுக்கிப் பார்த்தால் ஓரத்தில் வி என்ற ஆங்கில எழுத்து தென்படும். அதாவது வேலப்பன் என்று. இப்படியான ஒரு படைப்புத் திறனையாவது மிச்சம் வைக்காமலிருந்தால் அப்புறம் வேலப்பனுக்கும் ரிசர்வ் வங்கிக்கும் என்ன வித்தியாசமிருக்கப் போகிறது!

நானொரு தடவை நாகர்கோயிலில் வேலப்பனைப் பார்த்தேன். முப்பத்தைந்து வருடங்களுக்கு முன்பு. கேரளத்திலும் நாகர்கோயிலிலும் இருக்கும் ஒரு பெரிய ஓட்டல் நிறுவனத்தின் கிளையில் வைத்து. நல்ல உயரமான முதியவர். ஜிப்பாவும் வேட்டியும் அணிந்திருந்தார். சாப்பிட்டுவிட்டு பணம் கொடுக்காமல் போனார். என்னுடனிருந்த ஒருவன் சொன்னான்: "இவரை உனக்குத் தெரியுமா? இவர்தான் வேலப்பன்."

இந்த ஓட்டல் முதலாளி, மறுநாள் காலையில் புட்டு அவிப்பதற்கான மாவுக்குக்கூட வழியில்லாத பாவப்பட்ட ஒரு சாயாக் கடைக்காரனாக மட்டுமே இருந்த காலத்தில் வேலப்பன் அறிமுகமாகிறார். அவர்களுக்குள் கொடுக்கல் வாங்கல் ஏற்படுகிறது. நோட்டுகள் வருவதும் போவதுமாக இருந்தன. அப்படி சம்பாதித்ததுதான் இந்த ஓட்டல்கள் அனைத்தும். திருவனந்தபுரத்தில் மட்டுமே இவர்களுக்கு நான்கைந்து ஓட்டல்கள் உள்ளன. முதலாளியும் நன்றியுள்ள மனிதர்தான். நாகர்கோயில்[13] ஓட்டலின் வருமானம் முழுவதையும் இவர் வேலப்பனுக்குக் கொடுத்ததாகச் சொல்லக்கேள்வி. இப்படித்தான் வேலப்பன் பணம் கொடுக்காமல் போவதை நான் பார்க்கிறேன்.

இந்த ஓட்டல் முதலாளியைப்போல் பணக்காரர்களான நிறைய பேரிருக்கிறார்கள். திருவனந்தபுரம் ஸ்ரீகார்யத்தைச் சேர்ந்த செட்டியார் ஒருவர், இரவு நேரத்தில் ரோட்டோரமிருந்த புதர்க்காட்டில் இயற்கை உபாதையைத் தணிப்பதற்காக உட்கார்ந்திருந்தார். மஹாலக்ஷ்மி சில சுபமுகூர்த்தங்களில் சிலருக்கு இப்படியான உபாதைகளை ஏற்படுத்துவது வழக்கம்தான். வேகமாகப் பாய்ந்து வந்த ஒரு கார், செட்டியார் உட்கார்ந்திருக்கும் பக்கம் நின்றது. காருக்குள்ளிருந்தவர்கள் ஒரு மூட்டையைத் தூக்கி புதர்க்காட்டுக்குள் தள்ளினார்கள். கார் மீண்டும் அதே வேகத்தில் புறப்பட்டது. இதைத் துரத்திக்கொண்டு பின்னால் ஒரு போலீஸ் ஜீப்பும் போகிறது. அது அவர்களுடைய பாடு என்று வைப்போம்.

செட்டியார் நினைத்துக்கொண்டார். ஏதாவது பிணத்தைக் கொண்டு வந்து எறிந்துவிட்டுப் போகிறார்களோ? எதற்கும் சீக்கிரமாக இடத்தைக் காலி செய்து விடுவோம். ஆனால், அப்படிப் போய் விடுவதற்கு மஹாலக்ஷ்மி அனுமதிப்பாளா? இந்த இரவு நேரத்தில் இதற்காகவா உபாதையை உருவாக்கி இங்கே கொண்டுவந்து இவரை உட்கார வைத்திருக்கிறாள். எழுந்து நடந்த செட்டியாருக்குள் ஒரு அகத்தூண்டுதல். என்னவென்று பார்த்து விடுவோமே . . . மூடையை அவிழ்த்தார். அவ்வளவும் நோட்டுக்

கட்டுகள். வேலப்பன் நோட்டுகள் என்பதால் பரிவர்த்தனை செய்வதில் சிரமமேற்படவில்லை. இன்று அந்தச் செட்டியாரின் வமிசாவளியினர் பெரிய செல்வந்தர்கள்.

வேலப்பனைப் பற்றி அதிகமாக ஒன்றும் எனக்குத் தெரியாது. குமரி மாவட்டத்தில் தக்கலையை அடுத்துள்ள ஏதோ ஊரைச் சேர்ந்தவர் என்றும் ஓரிரு தடவை மட்டுமே ஜெயிலுக்குப் போயிருக்கிறார் என்றும் பிறகு நன்னடத்தைக்காக விடுதலை செய்யப்பட்டார் என்றும் பிறகு இந்தத் தொழிலை விட்டுவிட்டாரென்றும் தகவல். வேலப்பனின் தொடர்புக் கண்ணிகள் பிறகு, சின்னாபின்னமாகச் சிதைந்து போயின. இவர்களில் யாருமே தேறவில்லை. காரணம் வேறொன்றுமில்லை. வேலப்பனை வேலப்பனாக்கிய மகாவேலப்பன் ஒருவனின் துணை இவர்களில் யாருக்குமே கிடைக்கவில்லை. வேலப்பனின் வலது கையாக இருந்த மகாவேலப்பன் மணிராவ்தான்.

ஜெயிலில் வைத்துதான் இவர் எனக்கு அறிமுகமாகிறார். பதினெட்டு வயதுப் பையனான நான் திருட்டு வழக்கில் பிடிபட்டு திருவனந்தபுரம் அட்டக்குளங்கரை சப் ஜெயிலில் கிடந்த காலம். அப்போது நான் மணிராவுவின் அறைத்தோழனாக உள்ளே நுழைந்தேன். இவர்தான் வேலப்பனின் மூளை. அதாவது பிளாக் மேக்கர். மணிராவ் தயாரிக்கும் பிளாக்கைப் பார்த்தால் ரிசர்வ் வங்கியின் அச்சாபீஸ் வெட்கத்தில் தலைகுனிந்து நிற்கும். ஒரே அச்சில் வார்க்கப்பட்ட இரட்டையர் போலிருக்கும். இன்றுபோல் பணப்புழக்கம் அதிகமாக உள்ள காலமல்ல அது. இன்று துணிச்சலுடன் இறங்கும் ஒருவனுக்கு விருப்பம்போல் பணம் சம்பாதிப்பதற்கான வாய்ப்புகள் ஏராளம். அப்போதெல்லாம் நூறு ரூபாய் நோட்டைப் பார்ப்பதென்பதே ஓணம் திருவிழா வருவதுபோல் அபூர்வமான விஷயம்.

மணிராவ், சாந்த கம்பீரமான மனிதர். அன்று அவருக்கு அறுபத்தைந்து வயதிருக்கும். தமிழும் மலையாளமும் கலந்த மொழியில் பேசுவார். அப்பா தமிழ்நாட்டுக்காரர். அவரும் எங்கிருந்தோ வந்து தமிழ்நாட்டில் வாழ்பவர்தான். மணிராவ் என்ற பெயரைக் கேட்டதும் ஏதோ கோடீஸ்வரர் என்று நினைத்துவிட வேண்டாம். பல அதிர்ஷ்டசாலிகளுக்குப் பணம் செய்து கொடுக்கும் துரதிர்ஷ்டசாலிகள்தான் கள்ளநோட்டு அடிப்பவர்கள்.

சிலர் இப்படித்தான். மற்றவர்கள் பணம் சம்பாதிப்பதற்கான கருவியாக இருப்பார்கள். சல்லிக்காசுகூட சொந்தமாகச் சம்பாதிக்க லாயக்கற்றவர்கள்.

அப்புறம், திருடன்களைப் போல் அங்கே சுகம் அனுபவித்தேன்; இங்கே சுகம் அனுபவித்தேன் என்றெல்லாம் சொல்லிக்கொள்ளலாம். அவ்வளவுதான். இப்படியான ஒரு பாவப்பட்ட மனிதர்தான் மணிராவுவும்.

எந்த ஊர் என்றெல்லாம் கேட்டார். நான் கொல்லம் பக்கத்தில் இரவிபுரம் என்று சொன்னேன். குட்டன்பிள்ளையைத் தெரியுமா என்று கேட்டார். குட்டன் அண்ணனை ஊரில் கள்ள நோட்டு குட்டன்பிள்ளையென்று சொல்வார்கள். பலரை பணக்காரர்களாக்கியவர். கடைசியில் வறுமையிலாழ்ந்து செத்துப்போனவர்.

வேலப்பனின் கொல்லம் பகுதி வினியோகஸ்தர் பொறுப்பை குட்டன் பிள்ளைதான் நிர்வகித்து வந்தார். நாங்கள் வாழத்துங்கலில் உள்ள நாயர்கள் அனைவரும் ஏதாவதொரு முறையில் உறவினர்களாகவே இருப்போம் என்று சொன்னதும் மணிராவுவுக்கு மகிழ்ச்சி.

ஜெயிலிருந்து போனதும் வீட்டுக்கு வா. என்னுடைய வீடு பருத்திக்குழியிலிருக்கிறது. யாரிடம் கேட்டாலும் சொல்வார்கள். உன்னை நான் பெரிய ஆளாக்குகிறேன் என்றெல்லாம் சொன்னார்.

ஜெயிலில் பெரும்பாலும் அமைதியாகவே இருப்பார். ஏராளம் வாழ்க்கை அனுபவங்களுள்ள பலரும் இப்படியான நிலைக்கு வந்து சேர்வதை நான் கவனித்திருக்கிறேன். எல்லாமே இவ்வளவுதான் என்று உணரும்போது ஏற்படுகிற சாந்தம்.

ஒருவகை துறவு மனோபாவம். பல்வேறு போராட்டங்களைக் கடந்து வந்த வாழ்க்கை. சித்தரவதைகள், இயல்புக்கு மாறாக அமைந்த வாழ்க்கைச் சூழல், சமூக உதாசீனம், எள்ளல்கள், தனிமைப்படுதல், கடைசியில் வறுமை . . . மனம் மரத்துப்போன நிலையில், எல்லா சமூகக் கட்டுமானங்களுமே போலிதான் என்ற நிஜத்தில் முகிழ்த்த புன்னகை.

சில மாதங்களில் மணிராவ் விடுதலையானார். நானும் விடுதலையானேன். மணிராவுவின் விஷயத்தை மறந்தே போனேன். ஏழெட்டு மாதங்களுக்குப் பிறகு, ஒருநாள் திருவனந்தபுரத்தில் நிற்கும்போது வேறு வாய்ப்புகள் எதுவும் சிக்காத நிலையில் மணிராவுவின் நினைவு வந்தது.

பருத்திக்குழியில் போய் விசாரித்தேன். சரியான இடத்தை அடைந்து

ஒருவரிடம் கேட்டேன். கொஞ்ச நாட்களுக்கு முன்னால்தான் இங்கிருந்துப் போனார் என்றார். எங்கே என்று கேட்டபோது தமிழ்நாட்டுக்குத்தான் போயிருப்பாராக இருக்கும் என்றார்.

நினைத்துப்பார்த்தேன். ஒருவேளை நாம் முன்னமே வந்து சந்தித்து, நம்பிக்கைக்குரியவன் என்று நம்மை அவர் முடிவு செய்திருந்தால் இன்னும் கொஞ்ச காலம் இங்கேயே இருந்திருப்பார். எதிர்பார்த்திருக்க யாருமில்லாமல் எல்லாமே அஸ்தமித்து விட்டதான மனோபாவம்தான் அவர் தமிழ்நாட்டுக்குத் திரும்பி விடுவதற்குக் காரணமாக இருக்க வேண்டும். இப்படியான மணிராவுகளின் திருப்தி, தான் பணக்காரனாக வேண்டும் என்பதில் அல்ல. மற்றவர்களை அப்படி ஆக்கிப் பார்ப்பதுதான். தான் நிரப்பிய எரிபொருளில் ஒருவன் ராக்கெட்போல் பறந்துபோவதைக் காண்பதிலுள்ள சுவாரஸ்யம். அதுதான் மணிராவ். அந்த சுவாரஸ்யம் இல்லாமலாகி விட்டது. தோதுவான ராக்கெட்டுகள் எதுவும் கைவசமில்லை என்பதால் மணிராவ் இடம்பெயர்ந்து விட்டார்.

கொஞ்ச நாட்களுக்குப் பிறகு எதிர்பாராமல் ஒருநாள் குட்டன் அண்ணனைச் சந்தித்தேன். தன்னுடைய ஊர்க்காரன் ஒருவன் தன்னைப் போல் நியதிகளின் எதிர் திசையில் பயணம் செய்கிறான். வெறுமொரு சுவாரஸ்யத்திற் காகவும் குறுக்கு வழியின் சுகத்திற்காகவும் அதிகார வர்க்கத்தின், சமூக அமைப்பின் எல்லா சித்தரவதைகளையும் ஏளனத்தையும் தாங்கி வாழ்ந்துகொண்டிருக்கிறான்.

தனது இன்னொரு வடிவம், அல்லது சகபயணியெனும் எல்லா அனுதாபங்களையும் முகத்தில் தேக்கியபடி குட்டன் அண்ணன் என்னைப் பார்த்தார். அன்றுவரை, எனக்கும் குட்டன் அண்ணனுக்கும் நேரடியான எந்தப் பரிச்சயமும் கிடையாது. அவரது கண்களில் வருத்தம் தொனித்து நின்றது.

என்னைப் பக்கத்தில் அழைத்து மடியில் மறைத்து வைத்திருந்த நோட்டுக் கட்டுகளை எடுத்து கையில் தந்தார். அதை மறைத்துக்கொள்ளவும் செய்யாமல் நான் குட்டன் அண்ணனின் முகத்தையே பார்த்தேன். அவர் சொன்னார்:

"டேய், மருமவனே, இதை வெச்சிக்க. கொண்டுபோய் நல்லாயிரு."

இந்தப் பரிவில் என் மனம் உருகியது. ஒரு நல்வாக்கு சொல்லவோ பரிவுடன் பார்க்கவோகூட நாதியில்லை. இதை உருவாக்கியவனும்

நான்தான். என்றாலும் சில நேரங்களில் மனம் இதை விரும்பியது.

மனதிலிருந்து கண்ணீர் ஊற்றுப் பிரவாகித்தது. அழுதுவிடாமலிருக்க முயற்சி செய்தேன். சரிதான். இந்தப் பணமிருந்தால் திருட வேண்டிய தேவையில்லைதான். ஆனால், ஏனோ தெரியாது, இது எனக்குப் பயன்படாது என்ற எண்ணம் தோன்றியது. கள்ளப்பணம் பயன்படுமாக இருந்தால் மணிராவுவை அவர் ஊரைவிட்டுப் போவதற்குள் போய்ப் பார்த்திருப்பேனே.

பணத்தைத் திரும்பவும் குட்டன் அண்ணனிடம் கொடுத்துவிட்டு அவரது கைகளைப் பற்றிக்கொண்டேன். நிறைய பேர்களை செல்வந்தர்களாக்கிய, நீண்டு மெலிந்து நரம்போடிய கைகளை. எத்தனையோ பேர்களின் மஹாலக்ஷ்மி குடிகொண்டிருந்த கைகள்.

நான் சொன்னேன்: "குட்டண்ணா, எனக்கு அதிர்ஷ்டமில்லை. நான் திருடியே வாழ்ந்துடறேன்."

அவர் ஒரு நிமிடம் என்னைக் கூர்ந்து பார்த்தார். எனக்குத் தெரியும், அவர் உள்ளன்போடு அளித்தப் பணமென்று. அவருக்கும் வருத்தமாக இருந்திருக்கும்.

"திருடப் போகவேண்டாமேடா?" அண்ணன் திரும்பவும் கேட்டார்.

"சரியண்ணா." என்று சொல்லி, பணத்தை மீண்டும் வாங்கினேன். அவருக்கு வருத்தம் வேண்டாம் என்பதற்காக.

நீங்கள் ஒரு திருடனின் அல்லது கள்ள நோட்டடிப்பவனின் குரல் வளையை நெரிக்கலாம். ஆனால், அதில் நிறைந்திருக்கும் அன்பை நெரித்துவிடாதீர்கள். அவ்வளவு ஆத்மார்த்தமான அன்பு அது.

மணிராவுவின் விஷயத்தை அண்ணனிடம் சொல்லவில்லை. எனக்கு விதிக்கப்படாத விஷயம் கள்ள நோட்டு என்று மனம் அப்போதே முடிவு செய்துவிட்டது. ஆனாலும், அதே நோட்டுகள் மீண்டும் . . .

அதை நான் ஒரு நெருங்கிய நண்பனுக்குக் கொடுத்துவிட்டேன். சில நோட்டுகளைத்தான் அவன் செலவு செய்திருப்பான். அதற்குள் குட்டன் அண்ணனை போலீஸ் பிடித்துவிட்டது. நண்பன் ஓடோடி வந்தான். "மாப்ளே. சிக்கலாகிப் போச்சிதேடா? குட்டன் பிள்ளை காட்டிக்கொடுத்துடுவாரா?" எனக்குக் கோபம் வந்தது. மனதிற்குள்

சொல்லிக்கொண்டேன். குட்டன்பிள்ளை காட்டிக்கொடுக்க மாட்டார். ஆனால், யாராவது வந்து கேட்டால் அந்த நிமிடமே நீ காட்டிக் கொடுத்துடுவே. எதுவானாலும் அந்தப் பணத்தை நீ அனுபவிக்கக் கூடாது.

"அந்த நோட்டுகளையெல்லாம் தீ வெச்சு எரிச்சிடு. சாம்பல் காற்றுல வெளியே பறந்துடாம கவனிச்சுக்க. போலீஸ் வந்து கேட்டால் தெரியாம வாங்கி ஏமாந்துட்டேன். உடனே அதை எரிக்கவும் செய்துட்டேன்னு சொல்லிடு. சாம்பல் புழக்கடையிலதான் கிடக்குதுன்னு சொல்லு. போலீஸ் வந்து பாக்கும்போது எரிஞ்சு கிடக்குற காகிதம் ரூபாய் நோட்டுதான்னுப் புரிஞ்சுக்குவாங்க."

"தாங்ஸ்டா மாப்ளே." அவன் உற்சாகத்துடன் திரும்பினான்.

அவன் போவதைப் பார்த்துக்கொண்டே நின்றிருந்தேன். குட்டன் அண்ணனின் நோட்டை விற்றுத் தின்றுவிட்டு போலீஸ் வரும்போது என்னை ஏமாத்திட்டான் என்று சொல்லி அவனைக் காட்டிக்கொடுக்கத் தயங்காத நாய்கள். இவர்கள்தான் சமூகத்தில் பெரிய மனிதர்கள். திருடனுடன் சேர்ந்து சேற்றையள்ளித் தின்றுவிட்டு போலீஸ் பிடிக்க வரும்போது இன்னும் கொஞ்சம் சேற்றை அவன்மீது அள்ளிப் பூசுபவர்கள். இன்று, இவர்கள் அல்லது இவர்களுடைய வமிசாவளிகள்தான் ஊர் முக்கியஸ்தர்கள்.

கொஞ்சநாட்களுக்குப் பிறகு வழியில் வைத்து என்னைப் பார்த்தான். "குட்டன்பிள்ளை மாட்டிவிடலை மாப்ளே, ஏமாந்துட்டோம். அதையெல்லாம் எரிச்சிருக்கவே வேண்டாமாக இருந்தது. கொஞ்சம் நோட்டு கிடைக்குமா மாப்ளே?"

நான் அவனை ஏளனத்துடன் பார்த்தேன்.

---

13. மொ.பெ.: திருவனந்தபுரம் ஓட்டலின் வருமானம் முழுவதையும் வேலப்பன் நாயருக்குக் கொடுத்ததாக இங்குள்ள பெரியவர்கள் சொல்வார்கள்.

## 79 - ஆச்சரியம்

திருவனந்தபுரம், கரமனை டிவிஎஸ் கம்பெனியின் பக்கத்தில் இருளடர்ந்த பகுதியில், மெயின் ரோட்டினருகிலுள்ள ஒரு வீடு. ரோட்டில் சில வாகனங்கள் மட்டும் போய்க்கொண்டிருந்தன. வீட்டின் இரண்டாவது மாடியின் அரைச்சுவரில் உட்கார்ந்து, கைக்குள் மறைத்து வைத்து சிகரெட் இழுத்துக் கொண்டிருந்தேன். இருட்டில் தீக்கனல் தெரிந்தால் யாரும் கவனித்து விடுவார்கள். திருடும்போது சிகரெட் குடிக்க வேண்டும் போலிருந்தால் எப்போதுமே ஃபில்டரை எடுத்து சிகரெட்டின் கால் பங்கு நீளத்தைக் குறைந்து விடுவதுடன் அதையும் இரண்டாக ஒடிப்பேன். சிகரெட் கையடக்கமாக இருந்துக் கனன்றுகொண்டிருக்கும். சில ஏமான்கள் வண்டியில் ரோந்து போய்க்கொண்டிருக்கிறார்கள். ஆசானே . . . ஊய் . . . இதோ இங்க ஒருத்தன் . . . என்றெல்லாம் மனதிற்குள் சொல்லி ரசித்தேன். அகம்பாவத்தின் இந்த இரவில் நிகழ்ந்ததுதான் எதிர்பாராத அந்தச் சம்பவம். இன்றுகூட ஒரு அதிசய நிகழ்வாக, என் வாழ்க்கையில் நடந்த முக்கியச் சம்பவமாக இதைக் கருதுகிறேன். இந்த சுய வரலாற்றின் முதல் பகுதியில் நேர்மையான பணம் கையைச் சுடுமென்று சொல்லியிருந்தேன். அதனுடன் சேர்ப்பதற்கான இன்னொரு நிகழ்வு.

லைட் போடப்படாத கேட்டில் பூட்டு தொங்குவதைப் பார்த்து, காலிங் பெல்லில் விரலமர்த்தினேன். டிங்டாங் சத்தம் கேட்டது. யாருமில்லை என்பது உறுதி. மதிலேறிக் குதித்து உள்ளே வந்தேன். மதிலின் பின்னால் நின்றால் இந்தப் பகுதி தெரியும். உள்ளே வெளிச்சமிருந்தது. முட்டுப்போட்டு நகர்ந்து சென்று வீட்டின் வாசல் கதவை முதுகால் இரண்டு முறை முட்டிப்பார்த்தேன். நடுவில் மட்டும்தான் பிடியிருந்தது. பிறகுதான் அரைச் சுவரில் உட்கார்ந்தேன். மணி ஒன்று கழிந்திருக்கும். இனி வருவதற்கான வாய்ப்பில்லை. செகண்ட் ஷோ சினிமாவுக்குப் போயிருந்தால் பன்னிரெண்டரைக்குள் வந்திருப்பார்கள். தாமதமாவதற்கான வாய்ப்பையும் சேர்த்து மேலும் அரை மணி நேரம் காத்திருந்தேன். சரி, இனி வரப் போவதில்லை என்று முடிவு செய்து ஜன்னல் கம்பியை உருவியெடுத்துவிட்டு கைலியைக் கட்டி உள்ளே இறங்கினேன்.

வீட்டுக்குள் ஆளில்லை என்றால் பயப்படத் தேவையில்லை. விருப்பம் போல் மேயலாம். விலை உயர்ந்த பொருட்களை எல்லாம் முதலில் முடிந்த அளவுக்கு எடுக்க வேண்டும். சமையல் கட்டில் போய்ப் பார்த்தேன். நல்ல சூரை மீன் வறுவலிருந்தது. இரண்டு துண்டுகளை வாயில் போட்டுவிட்டு கையையும் வாயையும் கழுவினேன். வேலையெல்லாம் முடிந்து, குளித்துவிட்டு நிதானமாகச் சாப்பிடலாம்.

எல்லா அறைகளையும் மேற்பார்வையிட்டேன். கண்ணில்படுகிற விலையுயர்ந்த பொருட்களை முதலில் எடுக்க வேண்டும். படுக்கையறையைத் தவிர மற்ற அறைகளெல்லாம் திறந்தே கிடந்தன. பூட்டைத் திறப்பதில் சிரமமிருக்கவில்லை. சமையல் கட்டிலிருந்து வெட்டுக்கத்தியைக் கொண்டு வந்து ஒரு பிடி. பலகையோடு பிடுங்கிக்கொண்டு வந்தது பூட்டு. அலமாரா பூட்டியிருந்தது. அதையும் திறந்தேன். கால் மணி நேரமாகத் தேடியும் கால் பவுன் தங்கம்கூட கிடைக்கவில்லை. ஏமாற்றமாகி விட்டது. டேப் ரிக்கார்டர், விசிஆர் போன்றவற்றை எடுக்கலாம். அப்போதுதான் துணிகளினிடையே இருந்த மற்றொரு பெரிய துணிப்பை கண்ணில் பட்டது. கீழ்ப்பக்கம் ஷிப் வைத்து பெரிதாக்கும் வசதியுள்ள ஒரு சிவப்பு நிற பேக். எடுத்து வெளியே வைத்தேன். எங்கோ ஒரு சத்தம் கேட்பதுபோல் தோன்றியது. நெஞ்சு அடிக்க ஆரம்பித்தது. காதுகளைக் கூர்மையாக்கினேன். ஒன்றுமில்லை. நான் மட்டும்தான் இருக்கிறேன். ஆனால், ஷிப்பைத் திறக்கும்போது வாசல் முன் யாருடைய நிழலோ கடந்துபோவதைத் தெளிவாகப் பார்த்தேன். உடம்பில் நடுக்கம் தோன்றியது. எல்லா அறைகளிலும் போய்ப் பார்த்துவிட்டேன். ஒரு கிளிக்குஞ்சு கூட இல்லையே? ஒருவேளை ரோட்டில் போகிற யாருடைய நிழலாவது ஜன்னலில் விழுந்திருக்குமோ? சுவரில் ஜன்னலும் இல்லை. ஷிப்பை முழுவதுமாகத் திறந்தேன். நிறைய நூறு ரூபாய் கட்டுகள். கண்ணை உயர்த்தினேன். திடீரென்று வாசல் முன் மற்றொருவன். முதலாமவன் சென்ற திசை நோக்கி இவனும் நடக்கிறான். இந்த முறை வெறும் நிழலாக அல்ல, மிகத் தெளிவாகப் பார்த்தேன். பிறகு, நான் என்ன செய்தேன் என்று எனக்கே தெரியாது. நினைவு வரும்போது மதிலுக்கு வெளியில் நிற்கிறேன். எனக்கே தெரியவில்லை, நான் எப்படி வெளியே வந்தேன் என்று. யாரோ தூக்கியெறிந்ததுபோல்.

அன்றிரவு தூக்கமே வரவில்லை. மறுநாள் காலை எட்டு மணிக்குத் திரும்பவும் அந்தப் பகுதிக்குச் சென்றேன். யாருமில்லை. கேட் பூட்டியேதான் கிடக்கிறது. உள்ளே போய் அந்தப் பணத்தை

எடுக்கலாமென்றும் தோன்றவில்லை. கொஞ்ச நேரம் கழிந்ததும் போய் ஒரு நூன் ஷோ பார்த்துவிட்டுத் திரும்ப வரும்போது கேட் திறந்து கிடந்தது. போர்ச்சில் ஒரு காரும் நின்றிருந்தது.

இதை எப்படித்தான் புரிந்துகொள்ள முயன்ற பிறகும் பிடிபடவில்லை. நான் பார்த்த அந்த ஆட்கள் யார்? திருடன்களாக இருக்க முடியாது. அவர்களால் இப்படி கௌரவத்துடன் தலை நிமிர்ந்து நடக்க முடியாது. மட்டுமல்ல, அந்த வீட்டில் திருட்டு நடந்ததாக பிறகு எந்தப் பத்திரிகையிலும் செய்தி வரவில்லை. இரண்டே விஷயங்கள்தான்: அந்தப் பணம் அவர்களிடமிருந்து போக விதியில்லை. அல்லது, மணியன்பிள்ளையிடம் இந்தப் பணம் போகக்கூடாது என்று விதியிருந்திருக்கிறது.

## **80 -** கஞ்சா ஆயில்

கோவளம் பகுதியிலுள்ள பத்மினியைத் திருமணம் செய்து அவளுடைய வீட்டில் தங்கியிருந்த காலம். சாயங் காலமானதும் கள்ளுக்கடைக்குப் போய்விடுவேன். ஒருநாள், இப்படிக் குடித்துக்கொண்டிருக்கும்போது பக்கத்தில் ஒருவன் கஞ்சா இழுத்துக்கொண்டிருந்தான். ஒரு தம் கேட்டேன். கள்ளுக்கடையில் தைரியமாகக் கேட்கலாம். குடியன்கள் பரஸ்பரம் கொடைமனம் படைத்தவர்கள். அவன் மகிழ்ச்சியுடன் தந்தான். நான் ஒரு இழுப்பு இழுத்துவிட்டுக் கொடுத்தேன். ஒரு தம்கூட அடிக்கச் சொன்னான். இப்படியாக நாங்கள் அறிமுகமானோம். பிறகு, பல தடவை சந்தித்தோம். கையில் பணம் வந்ததும் கொஞ்சம் கஞ்சா வாங்க வேண்டுமென்று அவனுடன் புறப்பட்டேன். நடந்து நடந்து ஒரு மொட்டைக் குன்று வழியாக விழிஞ்ஞத்துக்குப் போகும் ஒரு கிராமப்புறத்தினூடே நடந்து ஒரு நீளமான வீட்டுக்கு வந்துசேர்ந்தோம். வந்த பிறகுதான் தெரிந்தது, அது ஒரு லாட்ஜ். கூட வந்திருந்த நண்பன் இங்கே நல்ல பரிச்சயமுள்ளவன். அவன் சொன்னான்.

"இங்க எல்லாமே கிடைக்கும். பெண்ணும் கிடைக்கும். பிரவுண் சுகரும் கிடைக்கும்."

ஒரு வெள்ளைக்காரனும் காரியும் அங்கே நின்றிருந்தார்கள்.

நான் கேட்டேன்: "வெள்ளைத்தோலும் விற்பனைக்கா?"

அதுக்கும் இங்க பஞ்சமில்லை. ரப்பர் அச்சாயன்மாருக்கு[14] வெள்ளைத்தோலுன்னா ரொம்பப் பிடிக்கும். இங்க ஏற்பாடு செய்து கொடுப்பாங்க. வெள்ளைக்காரிக்கு ரெண்டு நாளைய இஞ்செக்ஷனுக்குத் தேவையானது கிடைச்சா போதும்."

பேசிக்கொண்டிருக்கும்போது ஒருவன் வந்தான். நண்பன் அறிமுகம் செய்து வைத்தான்: "இவர்தான் இங்க எல்லாமே."

நான்: "பெயரென்ன?" என்று கேட்டேன்.

அவன் நண்பனைப் பார்த்தான். "நாங்க இவரை பட்டாளம்னு கூப்பிடுவோம். நீயும் அப்படிக் கூப்பிட்டா போதும்." நிஜப்பெயரைவிடவும் நல்ல பட்டப்பெயர்.

பட்டாளத்துக்கு என்னை அறிமுகம் செய்து வைத்தான்: "இங்க பக்கத்து ஊரிலேதான் கல்யாணம் பண்ணியிருக்கார். எனக்குத் தெரிஞ்ச வீடுதான். பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர்."

இது பொய் என்கிற விஷயம் எங்கள் இருவருக்குமே தெரியும். கள்ளுக்கடையில் வைத்து அறிமுகமாகி கொஞ்சம் பேசினோம் என்பதைத் தவிர பரஸ்பரம் வேறெதுவும் தெரியாது. என் மனைவியின் வீடு எங்கே என்று நான் இவனிடம் சொல்லவுமில்லை.

அவன் தொடர்ந்து சொன்னான்: "கொஞ்சகாலம் ஜெயிலில கிடந்திருக்கார்."

பட்டாளம் உடனே கேட்டான்: "எதுக்காக ஜெயிலுக்குப் போனே?"

"கஞ்சா வியாபாரம் பண்றேன். அது சம்பந்தமாக." என்றேன்.

"அரை கிராம் கேசா?"

"கோர்ட்டுக்கு வரும்போது அவ்வளவுதான் இருக்கும். எனக்குக் கிலோ கணக்கில பிசினெஸ்." இடைவெளியைக் குறைப்பதற்காக அடித்து விட்டேன்.

பட்டாளம் ஆர்வமாகி விட்டான்: "கஞ்சா ஆயில் கிடைக்குமா? என்ன விலை இருக்கு?"

"இங்க கோவளத்தில ரெண்டு லட்சமோ என்னவோ விலையிருக்குதாமே?" நான் திருப்பிக் கேட்டேன். ஜெயிலில் கிடைத்தத் தகவல்தான். எனக்கு விஷயம் தெரியுமென்ற விஷயம் அவனுக்கும் தெரிய வேண்டுமென்பதுதான் நோக்கம்.

அவன் சொன்னான்: "இங்க ரிஸ்க் அதிகம். கவனமா இருக்கணும். அதுக்கான டைம் இங்க சாயங்காலம் அஞ்சு முதல் ஏழுமணிவரைதான். இதுதான் பாதுகாப்பான டைம். டிப்பார்ட்மெண்ட் தகவல்படி, சில இடங்களில கிலோ பதினைஞ்சுக்குக் கிடைக்குமாமே?"

"அதெல்லாம் இல்லை. ஆனா, 20-25க்கு இடுக்கியில கிடைக்கும். தெரிஞ்சவங்களாக இருந்தால் . . ."

"கிடைக்குமா?"

"கிடைக்கும்."

"உறுதியாவா?"

"உறுதியாக."

"தம்பி உட்காருங்க." பட்டாளத்துக்கு நான் நின்றுகொண்டிருப்பது அப்போதுதான் தெரிந்தது. கூட இருந்தவன் கேட்டான்:

"வெயிட்டான தம் எதுவுமில்லையா?"

மூன்று நான்கு பீடி வந்தது. ஒன்றை நான் வாங்கிப் பற்ற வைத்தேன்.

"கூட வந்தா வாங்கித் தர முடியுமா?" பட்டாளம் கேட்டான்.

"இடுக்கிவரைக்கும் போகணும்."

"எந்த இடுக்குவரைக்கும் வேணாலும் போகலாம்."

எப்போது போகலாம் என்பதைப் பிறகு சொல்வதாகச் சொல்லிவிட்டு பட்டாளம் சிறிது நேரத்தில் போய்விட்டான். நாங்கள் லாட்ஜைச் சுற்றிப் பார்க்கலாம் என்று புறப்பட்டோம். ஆச்சரியப்படும்படியான செட்டப். ஒவ்வொரு அறைக்குள்ளும் ஒன்றிரண்டு பெண்கள். இரண்டாவது மாடியில் நீளமான வராந்தாவில் நடக்கும்போது திடுக்கிட்டு விட்டேன். ஃபோர்ட் போலீஸ் ஸ்டேஷன் எஸ்ஐ. சரி, இன்னைக்குப் பிரச்சினைதான் என்று நினைத்துக்கொண்டேன். அவர் தலை உயர்த்தி என்னையும் அவனையும் முறைத்துப் பார்த்துவிட்டுக் கடந்துபோய்விட்டார்.

நான் தெரியாதவன்போல் கேட்டேன்: "ஆள் யாரு?"

"தெரியாது. பட்டாளத்தோட ஸ்பெஷல் கெஸ்ட். நாங்க உப்புன்னு சொல்வோம்."

"அது ஏன் உப்பு?"

"வந்தால் பத்து நிமிடம்கூட தங்கியிருக்கமாட்டார். புதுசா ஏதாவது வந்தா உடனே உப்புப் பாக்க வந்துடுவார். உடனடியாப் போயிடவும் செய்வார். அவர் எப்பவுமே பிசிதான்."

நான் ஒவ்வொரு அறைகளாகத் திறந்துப் பார்த்தேன். கேரளத்திலும் இப்படியான ஒரு செட்டப் இருக்கிறதென்று நான் நினைத்ததே இல்லை. கதவுகளைத் தள்ளிப் பார்த்தபடியே நடந்தேன். ஒரு அறையில் மட்டும்தான் துணைக்கு ஆள் இருந்தது. அதிலிருந்து புளித்தக் கெட்ட வார்த்தைகள் வந்தன. அறைகளுக்கு உள்தாழ்ப்பாள் இல்லை.

"ஏன் உள்தாழ்ப்பாள் இல்லை?" என்று கேட்டேன்.

"தாழ்ப்பாள் எதுக்கு? இவளுகளுக்கு எப்ப என்ன தோணும்னு யாருக்குத் தெரியும்? பல செட்டப்கள்ல இருந்து வர்றவளுங்க. எல்லாவளும் விருப்பப்பட்டுதான் இதில ஈடுபடுறாளுங்கனு சொல்ல முடியாது. ஒருத்தி இப்படித்தான் திடீர்னு ஒருநாள் தூக்குப் போட்டுச் செத்துட்டா. அதுக்குப் பிறகு தாழ்ப்பாளை எல்லாம் கழற்றிட்டாங்க. மற்ற இஞ்செக்ஷனுக்கு வர்றவங்களுக்கு மட்டும் கீழே சாவி கொடுப்பாங்க. உள்ளே இருந்துப் பூட்டிக்கலாம்."

ஒரு அறையைத் திறந்துப் பார்த்தேன். ஒருத்தி தூங்கிக்கிடந்தாள். மற்றொரு அறைக்குள் ஒருத்தி ஏராளமான மேக்கப் சாமான்களிடையே உட்கார்ந்து முகத்தை என்னமோ செய்துகொண்டிருந்தாள். முக்கால்வாசி தீர்ந்த மது பாட்டில், கூஜா, தம்ளர், முந்திரிப் பருப்புபோன்ற நேற்றைய எச்சங்கள். நான் உள்ளே நுழைந்து பாட்டிலில் மிச்சமிருந்ததை எடுத்து வாயில் கவிழ்த்தேன். அவள் தலையுயர்த்தி ஏளனமாகப் பார்த்தாள். மற்றொரு அறையில் ஒருத்தி தூங்கிக்கிடந்தாள். நேற்றைய நிகழ்ச்சியின் போதுள்ள அதே தோற்றத்தில். வெந்த முழுக்கோழிபோல். ஒருத்தியின் அறையின் பாதி தின்ற ஆப்பிள். அதில் ஒரு கத்தி நிறுத்தப்பட்டிருந்தது.

பின்னால் நின்றிருந்த நண்பன் ஏதோ கெட்ட வார்த்தைச் சொல்லிவிட்டு உள்ளே போய் கத்தியை எடுத்துக்கொண்டு வந்தான். திரும்ப இறங்கும்போது பட்டாளம்.

"நான் அங்கெல்லாம் தேடினேன்" என்றான்.

"நான் அப்படியே சும்மா சுத்திப் பாத்தேன்."

நண்பன் கத்தியைக் காட்டி ஆவேசப்பட்டான்: "நான் அப்படியே வரும்போது ஒரு கத்தி. எவளாவது எடுத்து வயித்தில குத்திக்கிட்டாள்னா?" என்றான்.

பட்டாளம் இதைக் கண்டுகொள்ளாமல் என்னிடம் சொன்னான்:

"வேணும்னா கொஞ்சம் சோர்வு தீத்துக்கலாமே?"

வேண்டாம் என்றேன்.

"சும்மா அப்பா அம்மா விளையாடிட்டு வரலாம் . . ?"

"நான் அதுக்காக வரலை."

"இல்லை, பலகாரப் பொதிகளைத் திரும்பத் திரும்பப் பாக்குறதை வெச்சி . . . அப்படி நினைச்சேன்."

"சே . . . கண்ணாடி வழியா வெறுமனே டிஸ்பிளே பாத்தேன்."

நண்பன் மீண்டும் குறுக்கிட்டான்: "இப்படிக் கத்திகளைக் கொடுத்தால் . . ."

பட்டாளத்துக்கு இது பிடிக்கவில்லை: "ஆங் . . . குத்திக்கிட்டா என்ன? தூக்கிப் போடணும்." நண்பன் இத்துடன் நிறுத்திக்கொண்டான்.

"எனக்கு சனிக்கிழமைதான் இங்கிருந்து விலக முடியும். நாளைக்கு சனிக்கிழமை" என்றான் பட்டாளம்.

எவ்வளவு அவசரம்? நான் சொன்னேன்: "நான் இனி அடுத்த வாரம்தான் வருவேன். அடுத்த சனிக்கிழமை புறப்பட்டு, ஞாயிற்றுக்கிழமை அங்க தங்குறோம். திங்கக்கிழமை சரக்கையும் வாங்கிட்டு அங்கிருந்துப் புறப்படுறோம் . . . சரியா?" என்றேன்.

"ஏமாற்று ஒண்ணுமில்லையே?" பட்டாளத்துக்கு சந்தேகம்.

"யார், நானா?" என்று கேட்டுவிட்டு: "இப்படியான பிசினெஸ்லே ஒருத்தரை ஒருத்தர் நம்பியே ஆகணும். சில நேரங்களில ஏமாறவும் செய்யலாம். உங்களுக்கு எத்தனை கிலோ சரக்கு வேணும்?" என்று கேட்டேன்.

"ஒரு அஞ்சு கிலோ. அடிக்கடி போக முடியாதில்லையா? சரி, உங்களை இனி எப்படித் தொடர்பு கொள்றது?"

"அதையெல்லாம் உறுதியாச் சொல்ல முடியாது. ஒரு விஷயத்தை மட்டும் ஞாபகத்தில வெச்சுக்குங்க. அஞ்சு கிலோ சரக்கை நீங்க இங்கக் கொண்டுவந்து கொடுத்தா, உங்களுக்குக் கிடைக்கிற லாபம் ஏழெட்டு லட்சம்."

"அவ்வளவெல்லாம் கிடைக்காது. இதில ஒரு பகுதி பல வழிகள்லே செலவாயிடும். போலீசுக்கும் வேற வழிகளிலேயும் . . . இருந்தாலும் ஒரு பயம்தான்."

"ஒண்ணு பண்ணுங்க, அவ்வளவுக்கு நம்பிக்கை இல்லைன்னா என்கூட ஏதாவதொரு பையனை அனுப்பி வையுங்க."

அவன் கொஞ்ச நேரம் யோசித்தபடியே நின்றிருந்தான்.

நண்பன் சொன்னான்: "வேணும்னா நான் கூட போறனே?"

பட்டாளம் அவனைப் பார்த்தபடியே யோசனையுடன் சொன்னான்:

"நான் கோவளம் பீச்சில கடலை வியாபாரம் பண்ணிட்டிருந்தவன். அங்கிருந்து இவ்வளவு தூரத்துக்கு வந்திருக்கேன்னா ரிஸ்க் எடுத்துதான். ஏமாற்றியிருக்கேன்; ஏமாந்துமிருக்கேன். இருந்தாலும் ஒரு விஷயத்தை மட்டும் சொல்லிடறேன். ஏதாவது நடந்து என்னை நீங்க ஏமாற்றுறதா இருந்தா, தயவு செய்துக் கொன்னுடாதீங்க. சம்பாதிக்கிற ஆர்வத்தில, வாழ்க்கையில நான் எதையுமே அனுபவிக்கலை. பணத்தை மட்டும் எடுத்துட்டு என்னை விட்டுடணும்."

கையை நீட்டிக் கேட்டுக்கொண்டான்: "சத்தியம் பண்ணுங்க."

நான் சொன்னேன்: "எந்த நியாய உணர்வுகளுமில்லாம, நம்மப்போல திருட்டும் கொலையும் செய்து வாழுறவங்க சத்தியத்தைக் காப்பாத்துவாங்கன்னு நம்புறீங்களா? உங்க கையில அடிச்ச ஒரே காரணத்துக்காக கொல்ல மாட்டேன்னு நம்புறீங்களா? கொல்லணும்னு தோணிச்சுன்னா கொல்லாம இருப்பனா?"

"இருந்தாலும் என்னுடைய ஒரு நம்பிக்கைக்காக . . ."

நான் அவனது கையை மடக்கி வைத்துவிட்டுச் சொன்னேன்: "ஒரு இருபது நொடி என் கண்ணையே பாருங்க. கருவிழி அசையவே செய்யாது. யார்கிட்டயாவது சத்தியம் பண்ணும்போது இதைக் கவனிங்க. இந்த டெஸ்டை தொண்ணூறு சதவிகிதம் நாம நம்பலாம். மிச்சமுள்ள பத்து சதவிகிதத்தை நம்ம தலைவிதிதான் தீர்மானிக்கணும். பொய் சத்தியம் பண்றவனோட கருவிழி தானாகவே மூடிடும் . . ."

நான் அவனது கண்களையே கூர்ந்துப் பார்த்தேன். பத்து நொடிகளானதும் அவனாகவே பார்வையை விலக்கிக்கொண்டான்: "போதும்."

என் கண்களையே பார்த்துகொண்டிருந்த அவனது கண்களில் நீர் ததும்பியது. அதைத் துடைத்து விட்டுக்கொண்டு சொன்னான்:

"நான் உங்களை நம்பறேன்."

டிரெயினில் நாங்கள் கோட்டயம் சென்று அங்கிருந்து இடுக்கிக்கு காரில் புறப்பட்டோம். மிகாயேல் என்பவரைச் சந்திக்க வேண்டியதிருந்ததால் பஸ் ஸ்டான்டில் இறங்கி, ஓரிரு மணி நேரங்கள் காத்து நின்றோம். மிகாயேல் பஸ்சில் வந்திறங்கினார். இங்குள்ள கஞ்சா வியாபாரத்தின் சகல நுட்பங்களும் அறிந்த இவர் ஒரு இறுக்கமான மார்க்ஸியவாதி. மற்றவர்களால் மதிக்கப்படுபவர். எங்களிடையிலான நட்பு, அரசியல் கொலை வழக்கொன்றில் சிக்கி இவர் சென்ட்ரல் ஜெயிலிலிருக்கும்போது உருவானது. நான் பரோலில் இறங்கும்போதெல்லாம் இவர் ரகசியமாக சில கடிதங்களை என்னிடம் தருவார். அவரால் நேரடியாக அனுப்பி வைக்க முடியாத, யார் கையிலும் நம்பிக் கொடுக்கவும் இயலாத ஏதாவது ரகசியங்கள் அதில் இருந்திருக்கலாம். மிகாயேல் என்னை நம்பினார். இதற்காக நான் மூன்று நான்கு முறை மிகாயேலின் வீட்டுக்குச் சென்றிருக்கிறேன். சில வருடங்களுக்குப் பிறகு, ஒரு திருட்டை நடத்திவிட்டு மனைவியுடனும் குழந்தையுடனும் இடுக்கியில் தங்கமணி என்ற இடத்தில் மூன்று மாதங்கள் தலைமறைவாக இருந்தேன். இங்கே வாடகைக்கு வீடு பிடித்துத் தந்தவரும் பிற வசதிகளையும் ஏற்படுத்தித் தந்தவரும் மிகாயேல்தான். அங்கேயே ஏதாவது வேலை பார்க்கும் திட்டத்திலிருந்தேன். சலிம் என்ற பெயரில் என்னை அறிமுகம் செய்து வைத்தார் மிகாயேல். ஒருநாள், கையில் கிடந்த வாட்சின் பின் உருவிவிட்டது. அதைச் சரி செய்வதற்காக ஜங்ஷனிலுள்ள ஒரு வாட்சுக் கடைக்குச் சென்றேன். அப்படியே கட்டப்பனைக்கு வந்து ஒரு பைன்ட் வாங்கிவிட்டுத் திரும்பவும் தங்கமணிக்கு வந்து இரண்டு பனங்கள்ளும் ஒரு கிழங்கும் ஃபென்னியும் வாங்கிக் குடித்தேன். கள்ளுக்

கடையிலிருந்து நேராக வாட்சுக் கடைக்கு வந்தேன். வாட்சைச் சரியாக்கி வைத்திருப்பான். அதை கிளீன் செய்ய வேண்டுமென்றும் சொல்லியிருந்தான்.

கடையில் ஏறியதும் தோளிலொரு கை விழுந்தது. எனக்குக் கோபம் வந்தது. முதல் விஷயம், திருடன். இரண்டாவது, தலைமறைவாக இருக்கிறேன். போலீஸ்காரர்கள்தான் இப்படி பின்னாலிருந்து தோளில் கை போடுவார்கள். இல்லையென்றாலும் இப்படி பின்னால் நின்று தோளில் கை வைப்பது எனக்குப் பிடிக்காது. திரும்பிப் பார்த்தபோது, உதுப்பான்.

சிறு அளவிலான ஒரு திருடன்தான். இவன் ஜெயிலுக்கு வரும்போது நான் அதே பிளாக்கின் மேஸ்திரியாக இருந்தேன். இவனை நான் கள்ளுக் கடையில் வைத்தே பார்த்தேன். ஆனாலும், ஒரு சந்தேகம். அவனாக இருக்க முடியாது என்று. இங்கே எதற்காக அவன் வரப்போகிறான். ஆனால், இப்போது தெரிந்துபோய் விட்டது.

"ஆளைத் தெரியுமா? நம்ம மிகாயேல் அச்சாயனோட ஃபிரண்டு. இங்கதான் இப்ப தங்கியிருக்கார்." என்றான் கடைக்காரன்.

உதுப்பான் எள்ளலாகச் சிரித்துவிட்டு என்னைத் தனியாக விலக்கி நிறுத்திச் சொன்னான்: "வா, நாம இன்னொரு தடவைகூட கள்ளுக்கடைக்குப் போவோம்."

"வேண்டாம், நான் இப்பதான் குடிச்சேன்."

"தண்டனை காலம் முடிய இன்னும் நாளாகலை. நீ தப்பிச்சு வரவும் மாட்டே. அப்படின்னா பரோல்ல தலைமறைவாகியிருப்பே . . . நான் காட்டிக்கொடுக்க மாட்டேன். அதை நினைச்சு நீ பயப்பட வேண்டாம். இது சத்தியம்." ஏதோ ஒரு புனிதரின் பெயரில் அவன் சத்தியம் செய்தான். திருடனின் சத்தியம்.

மறுநாளே நான் எல்லாவற்றையும் அள்ளி மூட்டைக்கட்டி விட்டு தங்கமணியிலிருந்து புறப்பட்டேன்.

அந்த மிகாயேல்தான் இவர். நாங்கள் பல பழைய விஷயங்களைப் பேசிக்கொண்டோம். பிறகு, நான் வந்த நோக்கத்தைச் சொன்னேன். மிகாயேலின் முகத்தில் மாற்றம் தெரிந்தது. அவர் சொன்னார்: "வந்திட்டேங்குறதால இந்த ஒரு தடவை மட்டும். இது ஏமாற்று

வியாபாரம். உன்னால இது முடியாது. இந்த ஒரு தடவை மட்டும். இனி நீ வரக்கூடாது."

மிகாயேல், வேணு என்ற ஒருவனைத் துணைக்கு அனுப்பி வைத்தார். வேணு விளம்பரக் காட்சியில் பார்ப்பதுபோல் ஒரு ஊசியில் ஆயிலைத் தொட்டு சிகரெட்டில் வைத்தான். பிறகு, ஆயில் டப்பியை பாக்கெட்டில் வைத்துவிட்டு எங்களிடம் அலட்சியத் தொனியில் பேசினான்.

கட்டப்பனையிலிருந்து ராஜகுமாரிக்கு காரில் புறப்பட்டோம். மீண்டும் முப்பத்தாறு கிலோ மீட்டர் பயணம். வேணு சொன்னதுபோல், சில குறுகலான இடைவழிகளினூடே கார் எங்கெல்லாமோ சென்றது. சாயங் காலம் ஒரு இடத்தில் இறங்கினோம். சாப்பிட எதுவுமே கிடைக்கவில்லை. கையில் வைத்திருந்த பிஸ்கட்டைத் தின்றுவிட்டு இரவானதும் படுத்துக்கொண்டோம். அதிகாலையில் யாரோ தட்டியெழுப்பினார்கள். முன்னால் பாலில்லாத காப்பி, வேக வைத்தக் கிழங்கு, வெறும் காந்தாரி[15] மிளகில் துவையல். பொழுது விடிந்திருந்தது. ஆனால், பயங்கரமான குளிர். நாங்கள் படுத்திருந்த பாறையின் அருகில் ஒரு பெண் அடுப்பிலிருந்த தீயைக் குத்தி அணைக்கிறாள். இவள்தான் எங்களுக்கான காலை உணவை சமைத்திருக்க வேண்டும். பாத்திரங்களை ஒரு பாறையினிடையில் வைத்தாள். வேணு பணம் கொடுத்தான். பயணச் செலவுகள் உட்பட கொடுத்திருப்பானாக இருக்கும். கஞ்சா எண்ணெயின் விலையில்.

"இனி மத்தியானம்வரை எதுவும் சாப்பிடக் கிடைக்காது" என்றான் வேணு.

"நாங்க காலையில சாப்பிட்டா பிறகு, மத்தியானம்தான் சாப்பிடுவோம்" என்று யாரோ தமாஷாகச் சொன்னார்கள். வேணு முறைத்தான். அவன் சாப்பிடவே இல்லை. ஒரு சிகரெட் பிடித்தான். எண்ணெய் தொட்ட சிகரெட்டாக இருக்கலாம். பிறகு, ஒரு மணி நேரம் செங்குத்தான பாறையில் ஏறும்போது முதலில் சொன்ன தமாஷை நினைத்து வருத்தம் தோன்றியது. கிழங்கும் காப்பியும் ஆவியாகப் போய்விட்டன. காந்தாரி மிளகு மட்டும் அப்படியே கிடப்பதுபோலிருந்தது. இல்லையென்றால் வயிறு இந்த அளவுக்கு எரியாதல்லவா? எண்ணெய் தொட்ட ஒரு சிகரெட்டை காலமாடன் எங்களுக்கும் தந்திருக்கலாமில்லையா?

நான் அதிலொரு சிகரெட் கேட்டேன்.

"உண்மையாகவே சரக்கு வாங்கத்தான் வந்திருக்கீங்களா?"

"அதென்ன அப்பிடிக் கேட்டீங்க?"

"வேண்டாம், இங்கயே விழுந்து தூங்கிடுவீங்க."

பிறகு நான் எதுவுமே கேட்கவில்லை. ஏற்றம் என்றால் ஏற்றம்தான். வேணுவின் மீது கோபத்தைக் காட்டுவதுபோல் மலையேறினேன். எதிரியாக ஒருவனை உருவகப்படுத்திக் கொண்டால் சவால் உருவாகி விடுகிறது.

மதியமானது. வேறு சில பாறைக்கூட்டங்கள். கீழே அடர்த்தியான மரங்கள். பாறையின் ஒரு புறம் இறைச்சி காய வைக்கப்பட்டிருந்தது. அதைப் பார்த்துக்கொண்டிருக்கும்போது எங்கோ துப்பாக்கிச் சத்தம் கேட்டது. புரிந்துவிட்டது. இதுதான் சுட்ட இறைச்சி.

வேணு குரல் கொடுத்ததும் ஒரு மீசைக்காரன் துப்பாக்கியுடன் வந்தான். அவனும் ஹோ . . . என்றொரு குரலெழுப்பினான். சற்றுத் தொலைவில் பாறையிலிருந்து ஒரு குறும்பன் பையன் எழுந்தான். ஆதிவாசியாக இருக்கலாம். அவன் தரையிலிருந்து எதையோ அள்ளி எடுத்தான். வந்த பிறகுதான் புரிந்தது, குறுணை அரிசி. மதிய உணவு அரை மணி நேரத்தில் தயாரானது. பசியுடன் இதை எதிர்பார்த்திருப்பது வேதனைக்குரிய விஷயம். வயிறு, கொதிக்கும் அரிசியில் பாய்ந்துவிடச் சொன்னது. குறுணைச் சோறு, வடிநீர், இடித்தத் துவையல், சுட்ட இறைச்சி . . . கஞ்சாவின் விலை பயணச்செலவு உட்பட அல்ல என்பதைப் புரிந்துகொண்டோம். இருநூறு ரூபாய் கேட்டான். இது என்ன ஃபைவ் ஸ்டார் உணவா? நூறு ரூபாய் உணவுக்காகக் கொடுத்தோம். சில்லறை கிடைத்தது. வேணு அதை பாக்கெட்டில் வைத்துக் கொண்டான். அவனுக்கான டிப்ஸாக இருக்கலாம் என்று நினைத்துக்கொண்டேன்.

அடுத்தச் சாப்பாடு இனி இரவில்தான் என்று சொல்வானோ? ஆனால், சொல்லவில்லை. நடந்தோம், நடந்துகொண்டே இருந்தோம். வாட்சைப் பார்த்தேன். மணி நான்கு. புல் வேயப்பட்ட ஒரு குடில் தெரிந்தது. பக்கத்தில் ஒரு மர பெஞ்சும் இரண்டு மரத்தடிகளும் ஐந்தாறு குரங்குகளும்.

வேணு, சேனன் என்றோ காச்சில் என்றோ ஏதோ ஒரு பெயரைச் சொல்லி அழைத்தான். சரியாக நினைவில்லை. பாறையின் ஒருபுறமிருந்து மற்றொரு மீசைக்காரன் தலையுயர்த்தினான்.

"நல்லதொரு வியாபாரம்."

சிறிது நேரத்துக்குப் பிறகுதான் அவர்கள் விஷயத்திற்கு வந்தார்கள். எவ்வளவு வேண்டுமென்றும் ரொக்கப்பணம் இருக்கிறதல்லவா என்றும் கேட்டான்.

அவன் கீழே இறங்கிக் கூவினான். ஐந்து நிமிடம் கழிந்ததும் ஒரு பெண் வந்தாள். இவனுடைய மனைவியாக இருக்கலாம். இல்லாமலும் இருக்கலாம். அவளிடம் எதையோ சொன்னான். அவள் போனதும் மீசைக்காரத் தடியன் ஒரு அலுமினியப் பாத்திரத்தை எடுத்து காப்பிப்பொடியும் நீரும் சேர்த்து கட்டன் சாயா போட ஆரம்பித்தான்.

"சாப்பிட ஏதாவது கிடைக்குமா?"

"தேவைப்படாதுன்னு நினைக்கிறேன்." என்றான்.

அதை நீயா முடிவு பண்றது என்று மனதிற்குள் நினைத்துக்கொண்டேன்.

அவன் ஏதோ ஒரு பொருளை ஊசியில் தொட்டு காப்பி இருந்த ஒவ்வொரு தம்ளரிலும் வைத்தான். குடித்த இரண்டு நிமிடங்களில் கண்முன் ஒரு மாமலை அப்படியே பறந்துகொண்டிருந்தது. அப்போதுதான் புரிந்தது. காப்பியில் தொட்டு வைக்கப்பட்டது கஞ்சா எண்ணெய். பட்டாளத்திடம் நான் விஷயத்தைச் சொன்னேன். அப்போதும் அவனுக்கு சந்தேகம் தீரவில்லை.

அவன் கேட்டான்: "ஏமாற்று வேலையாக ஒண்ணும் இருக்காதே?"

"அப்படியிருந்தா, ஏற்கனவே பாத்தோமில்லையா, சுட்ட இறைச்சி, அதில நீயும் கிடந்திருப்பே."

அவன் புரியாததுபோல் பார்த்தான்.

"ஏமாற்றுறதா இருந்தா . . . அந்தக் கட்டமெல்லாம் தாண்டிடுச்சு."

அவன் கையிலிருந்த பேக்கை இறுக்கமாகப் பிடித்திருந்தான். நான் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அது அவனது பிடியிலிருந்துத் தளர்ந்தது. பிறகு, அப்படியே சொரிய ஆரம்பித்தது. எனக்கு அந்தப் பணத்தை எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும்போல் தோன்றியது. அதைப் பாதுகாக்க வேண்டியது என்னுடைய பொறுப்பல்லவா?

தோன்றியது மட்டும்தான். அதற்காக கையை நீட்டுகிறேன். எடுக்கிறேன். எல்லாமே மனதிற்குள்தான் நிகழ்கிறது. உண்மையில் எதுவுமே நிகழவில்லை. தலை ஒரு சுற்று சுற்றி நிற்கும்போதும் பேக் அதே இடத்தில்தான் கிடக்கும். எத்தனை தடவைதான் சொல்றது மணியா, அந்தப் பணத்தைக் கையில எடு என்று மனம் கோபப்படுகிறது. பிறகு அதுவும் இல்லை. அவ்வளவுதான். திட்டவுமில்லை, மனமுமில்லை, மண்ணாங்கட்டியுமில்லை.

மறுநாள் காலை பத்து மணிக்கு வெட்டிப் போட்டவர்கள்போல் நாங்களாக எழுந்தோமா, அல்லது யாராவது உதைத்து எழுப்பினார்களா தெரியவில்லை. எழுந்ததுதான் தாமதம் பட்டாளம் அய்யோ என் பணம் அய்யோ என் பணம் என்று அலறினான்.

"பணத்தை எடுத்திட்டோம். மிச்சப் பணம் அதிலேயே இருக்கிறது. ஆயிரம் ரூபாய் நான் எடுத்திருக்கிறேன். திரும்பி மலையிறங்கி ஒரு இடத்தில் வரும்போது நான் காணாமப் போயிடுவேன். அப்புறம் யார் தர்ற தண்ணியையும் வாங்கிக் குடிச்சுடக்கூடாது" என்றான் வேணு.

ஒரு காயப் பையைக் கையில் தந்தான். அதில் பாட்டில்களிருந்தன. பட்டாளம் கேட்டான்: "மணியா, சரக்கை நம்பலாமா?"

இதைக் கேட்டதும் எனக்கு ஒன்று வைக்கத்தான் தோன்றியது.

திரும்பி மலையிறங்க ஆரம்பித்தோம். மறுநாள் கோவளத்துக்கு வந்து சேர்ந்தோம். அன்றிரவு, பட்டாளத்தின் அடியாட்களும் பணியாட்களும் பெண்களுமெல்லாம் சேர்ந்து பெரும் கொண்டாட்டம். நிகழ்ச்சி ரகசியமாக ஒரு வீட்டில் நிகழ்ந்தது. எல்லோருமே தலைகால் புரியாமல் குடித்தோம். இரவு இரண்டு மணியிருக்கும். நிகழ்ச்சிகள் முடிவடைந்தன. ஒவ்வொருவரும் சிதறி விழுந்து கிடந்தார்கள்.

நான் சொன்னேன்: "நான் காலையில போயிடுவேன்."

பட்டாளம் ஒருவனை அழைத்துச் சொன்னான்: "இவரை காரில கொண்டு போய் எங்க இறங்கச் சொல்றாரோ அங்க இறக்கி விட்டுடு."

நான் கேட்டேன்: "என்னோட பங்கு?"

"அதை நான் அப்போதே எடுத்து வெச்சுட்டேன்" என்று சொல்லிவிட்டு இன்னொருவனை அழைத்தான்: "ஒரு ஆயிரம் ரூபாய் எடுத்துட்டு வா."

நான் கேட்டேன்: "ஆயிரம் ரூபாய் எதுக்கு, புடுங்கறதுக்கா?"

பட்டாளத்தின் பாவம் உடனே மாறியது: "கிடைச்ச அளவுக்குப் புடுங்கினா போதும். மூணுநாலு நாளா கொட்டிக்கிட்டது பத்தாதா . . ? துணைக்கு வந்தே, இடத்தைக் காட்டித் தந்தே, சரக்கை வாங்கித் தந்தே. இனி அவனுகளே நேரடியாகச் சரக்கை அனுப்பி வெச்சுடுவானுங்க. அதுதான் பிசினெஸ். எல்லாத்தையும் பேசி நாங்களே முடிவு பண்ணிட்டோம். ஒரு ஐநூறு ரூபாய் வழிச் செலவுக்கு மட்டும் கொடுத்தா போதும். புரியுதா?"

அதுவரையிலும் நான்தான் பெரிய ஆளாக இருந்தேன். ஹூம், விசித்திரமான மனிதர்கள்தான். சரக்கு கை மாறுவதற்குள் பணத்தைக் கைப்பற்றியிருக்க வேண்டும்.

நான் சொன்னேன்: "என்னைப் பற்றி உங்களுக்குத் தெரியாது . . ." இதை நான் சொல்லி முடிப்பதற்குள் பட்டாளம் சட்டையைக் கொத்தாகப் பிடித்தான்.

"என்னடா பண்ணிடுவே? போலீசில கம்பிளெயின்ட் பண்ணுவியா? பண்ணுடா. எனக்குத் தெரியும், என்ன பண்ணணும்னு . . ."

மீண்டும் உள்ளே பார்த்துக் குரல் கொடுத்தான்: "டேய், ஒரு ஐநூறு ரூபாய் கூட எடு." ஆயிரத்து ஐநூறு ரூபாயை வாங்கி, கையைப் பிடித்துத் தந்துவிட்டு எதுவுமே நடக்காததுபோல் சொன்னான்: "சரி, நமக்குள்ள சச்சரவு வேண்டாம். டேய், இவரை காரில கொண்டுபோய் விட்டுடு."

பட்டாளம் மறைந்தான். நான் கோபத்துடன் அவன் போன திசையைப் பார்த்தபடியே சிலைபோல் நின்றேன். பிறகு, நாங்கள் சந்திக்கவே இல்லை.

இதே நினைவில் நானொருமுறை கலப்புக் கஞ்சா ஆயில் தயாரிக்க முயற்சி செய்தேன். ஸ்டேஷனிலிருந்து நான் ஸ்பிரிட் கொண்டு வருவதுண்டு. ஸ்பிரிட்டில் கொக்கோ கோலாவும் கொஞ்சம் கஞ்சாவும் கலந்து வென்னீரூற்றி குளிர வைத்தக் கலவையில் கொஞ்சம் தேயிலை நீரையும் கலந்தேன். நண்பர்களைக் கூப்பிட்டுக் குடிக்கக் கொடுத்தேன். இடுக்கியின் பழைய நினைவில் நான் மட்டும் குறைவாகக் குடித்தேன். வினைப்பயனை அறிய வேண்டுமல்லவா?

"குடிச்ச பிறகு எப்படியிருக்கு?" என்று கேட்டேன்.

ரஷீது என்ற நண்பன் கேட்டான்: "என்ன எப்படியிருக்கு?"

"ஸ்காட்ச் குடிச்சதுபோலிருக்கு" என்றான் இன்னொருவன்.

"அது உண்மைதான். ஆனா, இதெல்லாம் நம்மள தொட்டுக்கூட பார்த்துட முடியாது. எனக்கு எந்த மாற்றமும் தெரியலை." உட்கார்ந்திருந்த ஒருவன் திடீரென்று எழுந்து பக்கத்திலிருந்தப் புதர்க்காட்டுக்கு ஓடினான். அங்கே என்னவோ களேபரம். ஐந்து நிமிடம் கழிந்ததும் ரஷீதும் எழுந்து அங்கே போனான். பத்து நிமிடம் கழிந்ததும் பக்கத்திலுள்ள ஒரு பையன் ஓடி வந்தான்:

"அய்யோ மணியண்ணா, நம்ம ரஷீதண்ணன் டிரெயின்ல அடி பட்டுட்டார்."

மனதில் தீ படர்ந்தது. கடவுளே விளையாட்டு வினையாகி விட்டதே. கொன்னுட்டனே. நான் ரெயில்வே ரோட்டில் ஓடினேன். பையன் பின்னால் ஓடி வந்தான். நான்கைந்துபேர் அங்கே கூடி நின்றிருந்தார்கள். வெட்டியிட்ட தடிபோல் ரஷீது விழுந்துக் கிடந்தான். பக்கத்தில் சென்றபோதுதான் புரிந்தது, சாகவில்லை. டிரெயினில் அடிபட்டவன் புலம்ப மாட்டான் அல்லவா? தூக்கி அருகிலுள்ள ஒரு திண்ணையில் படுக்க வைத்தோம். பையன் சொன்னது உண்மைதான். ரஷீது கீழ்ப் பக்கமாகத்தான் நடந்து கொண்டிருந்தான். ஆனால், டிரெயின் போய்க்கொண்டிருக்கும்போது மயக்கம்போட்டு தண்டவாளத்தின் கல்லில் விழுந்து விட்டான். தலையில் காயம் பட்டிருந்தது. அதிர்ஷ்டவசமாக டிரெயினின் இரண்டடி தள்ளியே விழுந்திருக்கிறான். சம்பவம் நடந்து முடியவும் பையன் பார்த்திருக்கிறான். அவன் கண்களுக்கு டிரெயினில் அடிபட்டு விழுந்ததைப்போல் தெரிந்திருக்கிறது.

இத்துடன் கள்ளைக் குறுக்கிப் போதையேற்றும் அந்த வக்கிர புத்தியும் நின்றது.

திருடனும் குழந்தைகளும்: சில காலம், இரவிபுரம் பிரபாத் தியேட்டரில் டிக்கெட் கிழிக்கும் வேலை பார்த்திருக்கிறேன். அப்பாவும் அங்குதான் வேலை பார்த்தார் என்பதால் நானும் இதைத் தொடர்ந்திருக்க முடியும். நூறு சுவரொட்டிகள் ஒட்டினால் ஒன்றரை ரூபாய் கிடைக்கும். இரவில்தான் ஒட்ட வேண்டும். வாழ்க்கைக்கு இதுவெல்லாம் போதுமானதாக இருந்தது. என்ன செய்ய முடியும்? கோணல் புத்தி. பாதைத் தவறியதும் வேலையை

விட்டேன். தியேட்டரில் வேலை பார்க்கும்போது நான் அந்தப் பகுதியிலுள்ள சிறுவர்களுக்கு நன்கு அறிமுகமானவன். விளம்பர நோட்டீஸ் வினியோகிக்கவும் போவதுண்டு. மாட்டு வண்டியில் விளம்பர பேனர் கட்டி செண்டை மேளத்துடன் நோட்டீஸ் வினியோகம் நடக்கும். ஆறேழு கிலோ மீட்டர் சுற்றளவுக்கு அலைவோம். சிறுவர்களினிடையே நான் பெரிய சீமைத் தம்புரான். பொறாமையுடன் பார்ப்பார்கள். எந்த ஊருக்குப் போனாலும் ஐம்பது சிறுவர்களாவது கை நீட்டியபடி நோட்டீஸ் கேட்டு வண்டியின் பின்னால் வருவார்கள். அபூர்வமாக ஒரு நோட்டீஸ் வந்து விழும். கையில் கிடைத்தவன் அன்று பெரிய ஆள். எல்லாமே போச்சு. முதல் முறையாக போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் வந்து ஏமாற்றத்தின் படுகுழியில் விழுந்து கிடந்த காலம் அது. பெரும்பாலும் ஏதாவது வயல்வரப்பில் கிடப்பேன். பள்ளிக்கூடத்திற்குப்போகும் மாணவர்கள்தான் நண்பர்கள். நான் இங்கேதான் இருப்பேன் என்ற நம்பிக்கையுடன் வருவார்கள். ஜெயிலுக்குப் போனவன் என்றெல்லாம் சொல்வார்கள். தைரியமாக எதையேனும் கேட்கவும் செய்வார்கள். சில மாணவர்களுக்கு என்மீது பயமுமிருந்தது. ஒருநாள் மதியம், மணியண்ணா . . . மணியண்ணா என்று அலறியபடியே ஒரு பையன் ஓடி வந்தான். இரண்டாம் வகுப்பிலோ மூன்றாம் வகுப்பிலோ படிக்கிறவன். அமைதியான பையன். விலகி நின்றுதான் என்னைப் பார்ப்பான். நான் ஓடிச்சென்று என்னப்பா என்று தூக்கிக்கொண்டேன்.

தூரத்தில் இரண்டுமூன்று ஆசிரியர்களும் பியூன் தங்கப்பன் அண்ணனும் வந்துகொண்டிருந்தார்கள். பையன் என் கையிலிருந்து மூச்சு வாங்கிக்கொண்டிருந்தான். ரொம்பவே பயந்துபோயிருந்தான். நான் என்ன விஷயமென்று கேட்டபோது அவனால் சொல்ல முடியவில்லை. "போலீஸ் . . . போலீஸ் . . ." என்று மட்டும் சொன்னான்.

களரிவாதுக்கல் கோயிலில் உட்கார்ந்திருந்தவர்களும் ஓடி வந்தார்கள். தங்கப்பன் அண்ணன் சொன்னார்: "ஸ்கூல் முன்னால ரெண்டு போலீஸ்காரங்க போனாங்க. அவ்வளவுதான். உன்னைத்தான் பிடிக்க வந்திருக்காங்கன்னு நினைச்சு, இவன் இறங்கி ஒரே ஓட்டம்."

பையன் என் கழுத்தை இறுக்கமாகக் கட்டிப் பிடித்திருந்தான். சிரமப்பட்டுதான் பிடியை விலக்கிக்கொள்ள வேண்டியதாயிற்று. நானே அழைத்துக்கொண்டு போய் வகுப்பில் உட்கார வைத்த பிறகுதான் அமைதியானான்.

ஈஞ்சையைச் சிதைப்பதுபோல்: அரசியல்வாதி உண்ணித்தானுடனும் ஒரு

மோதல் நிகழ்ந்தது. கொல்லம் பிரியா தியேட்டரில் செகண்ட் ஷோ பார்த்துவிட்டு வந்துகொண்டிருந்தேன். புளியத்து முக்கு பவர் ஹவுஸ் அருகில் வைத்து மூன்று நான்கு இளைஞர்கள் என்னைத் தடுத்து நிறுத்தினார்கள், பக்கத்தில்தான் உண்ணித்தானின் வீடு. அண்மையில் இங்கே சில திருட்டுகள் நடந்தனவாம். இதைச் சொல்லி என்னைப் பயங்கரமாகத் தாக்கினார்கள். உண்ணித்தான் அப்போது சேவாதளத்தில் இருந்ததாக நினைவு. என்னை நன்றாக சேவித்து ஒரு வழியாக்கி, ஈஸ்ட் ஸ்டேஷனில் ஒப்படைத்தார்கள். வழக்கு, ஒரு வீட்டினருகில் பதுங்கியிருந்தான்; கம்பியை வளைக்க முயற்சி செய்தான் என்றெல்லாம் பதிவானது. உண்ணித்தானின் அப்பா நல்ல மனிதர். அப்படியெதுவும் நடக்கவில்லை என்று அவர் சொன்னதன் பேரில் வழக்கு தள்ளுபடியானது. வழிப்போக்கர்களைப் பிடித்து வழக்குப் போடுவதாகச் சொல்லி நீதிமன்றம் போலீசைக் கண்டித்தது. வழக்கின்போது ஈஸ்ட் ஸ்டேஷனின் அருகில் ஒரு பெட்ரோல் பம்பின் பக்கத்தில் வைத்து நான் உண்ணித்தானை மிரட்டி வைக்க நினைத்துப் பக்கத்தில் போகவும் வண்டி போய்விட்டது. வாழத்துங்கலில் ஒருமுறை அவர் சொற்பொழிவாற்ற வந்தபோது மேடையின் அருகில் இன்னொரு மேடை போட்டு ஒலிபெருக்கி வைத்து கோபம் தீருமளவுக்கு நானும் சொற்பொழிவாற்றினேன். தீராக் கோபம் திருடனுக்கேது? அதற்காக கோபம் வராமலிருக்குமா? அரசியல்வாதிகளை நாட்டின் பொதுச்சொத்து என்றெல்லாம் சொல்வார்கள் இல்லையா? திருடன்களும் அப்படித்தான். ஆனால், ஒரு வித்தியாசம், திருடன் நாட்டின் பொதுப்பொத்து. யார் வேண்டுமானாலும் கை போடுவார்கள். உதைப்பார்கள். பிடித்ததும் நான்கு கொடுப்பார்கள். நீதிபீடம்கூட திருடனை நம்பாது. பகல் நேரமாக இருந்தாலும் ஆட்கள் நடமாட்டம் குறைந்த இடத்தில் அவனைப் பார்த்தால் பிடித்து நிறுத்தலாம். நான்கு தந்தால் வேண்டாமென்று சொல்ல முடியாது. இப்படியான தலையெழுத்து உலகத்தில் எங்களைப் போன்றவர்களுக்கு மட்டும்தானிருக்க முடியும். சுருக்கமாகச் சொல்வதானால், எங்களைப் பொறுத்தவரைக்கும் ஜெயிலும் வெளி உலகமும் ஒன்றுதான். ஆனால், ஜெயில்தான் பாதுகாப்பு. பொய் வழக்குப் போட முடியாது. அடக்கத்துடன் வாழ்ந்தால் அடி விழாது; பட்டினியுமில்லை; பரிவட்டமுமில்லை; பேரமைதி. ஆபத்தான வாழ்க்கை. ஜெயிலுக்குப் போய் வந்த அரசியல்வாதியால் தன் இமேஜை மீட்டெடுக்க முடியும். திருடனுக்குக் கிடைத்த இமேஜ் காடுவரை கூட வரும்.

14. [கோட்டயம் பகுதி கிறிஸ்துவர்களைக் குறிப்பிடும் சொல்.]
15. [காரம் மிகுந்த ஒருவகை மிளகு.]

## 81 - தோளில் விழுந்த கை

வாழ்க்கையின் மொத்த சாரமும் இதுபோன்ற அனுபவங்கள்தான். வெடி மருந்தின் நெடி வீசும் அனுபவங்கள். இன்று அவை, வெடித்துச் சிதறிய பட்டாஸ் காகிதங்கள் போல் நிறைந்து கிடக்கின்றன. மருந்தின் அந்த கந்தக நெடியை மட்டும் இப்போது உணர முடிகிறது. கந்தக நெடியிலும் மனம் மயக்கும் ஒரு மணமிருக்கிறது. வேதனையும், வீச்சமும், வீரியமுமுள்ள கந்தக நெடியின் அனுபவ வெளிச்சத்தில், குழந்தைப் பருவத்தில் என்னைச் சுற்றிலும் சிதறி விழுந்த மாமிசப் பிண்டங்கள் நினைவுக்கு வருகின்றன.

வலியவிளை கோயில்விழா அந்தப் பகுதியில் மிகவும் புகழ்பெற்றது. சில கிலோ மீட்டர்கள் சுற்றளவுள்ள வயல் வெளிகளின் நடுவில் ஒரு சிறு மாடன்கோயில். திருவிழா வெகுவிமரிசையுடன் நிகழும். ஐம்பதுக்கும் மேற்பட்ட யானைகள் வரும். கொல்லம் மாவட்டத்தில் அதிகமாக யானைகள் அணிவகுக்கும் முக்கியமான கோயில் விசேஷங்களில் இதுவுமொன்று. இங்கு நடக்கும் சப்தா வர்ணம் மிக விசேஷமானது. என்னுடைய சிறு வயதில் நடந்த சம்பவம் இது. நாங்கள் வாணவேடிக்கை பார்த்தபடியே நின்றிருந்தோம். திடீரென்று கண்களில் ஏதோ ஒளிப்பிரவாகம். நினைவு திரும்பும்போது எனக்கு இன்னொரு கை முளைத்திருந்தது. ஈர்க்கில்போல் வேகமாகப் பறந்து வந்த ஒரு கை என் தோளில் ஒட்டிக்கொண்டது. நான் நிலைகுலைந்து நிற்கும்போதே அந்தக் கை மெல்ல நகர்ந்து என் காலடியில் விழுந்தது. உடுப்புகளில் ரத்தம். தோளில் பயங்கரமாக வலி. கீழே பார்த்தேன். தரையில் ஒரு கை கிடக்கிறது. அலறினேன். அந்த வாணவேடிக்கை விபத்தில் ஆறுபேர் இறந்தார்கள். இரண்டு பேர் அடையாளம் தெரியாமல் உருகிச் சின்னா பின்னமாகச் சிதறியிருந்தார்கள். கண்களைப் பறிகொடுத்தவர்கள், உடலுறுப்புகளைப் பறி கொடுத்தவர்கள். இதில் யாருடைய கையோதான் என் தோளில் வந்து விழுந்திருக்கிறது. இறந்துபோனவர்களில் ஒருவரின் கையாக இருக்கலாம். இப்போதும், சில கெட்ட கனவுகள் கண்டு திடுக்கிட்டு விழிக்கும்போது தோளில் சிறு வேதனை ஏற்படுவதை என்னால் உணர முடியும். கண்களைத் திறக்கவே பயமாக இருக்கும். ஏதாவதொரு கை என்மீது விழுந்து நகர்கிறதோ . . ?

அவசரநிலை காலகட்டம்: அவசரநிலை காலகட்டத்தில்தான் ஜெயிலில் சிறு மாற்றங்கள் ஏற்பட்டன. அன்றுவரை நாங்கள் சில விவரமில்லாத திருடன்கள்தான் ஜெயிலில் ஆட்சி செலுத்தி வந்தோம். தற்செயல் கொலைக் கைதிகள் அழுகையும் கழிவிரக்கமுமாக ஒரு மூலையில் ஒதுங்கிக்கொள்வார்கள். நாங்கள்தான் எல்லாமும். திடீரென்று அவசர நிலை அமலாக்கம் செய்யப்பட்டதும் அரசியல் கைதிகளை அள்ளிக்கொண்டு வந்து சிறையை நிரப்பினார்கள். கோஷமும் களேபரமுமானது ஜெயில். நாங்கள் ஒதுங்கிக்கொண்டோம். வருபவர்கள் எல்லாருமே பெரிய பெரிய ஆட்கள். எங்களுக்குத் தரமானவர்களிடம் மட்டுமே நாங்கள் கை போடுவோம். பிரபல நக்சலைட் ஓமனக்குட்டன்பிள்ளை எங்கள் ஊர்க்காரர்தான். எங்கள் வீட்டின் அருகில் தான் அவரது வீடுமிருந்தது. நல்ல அறிவும் அரசியல் தெளிவுமுள்ளவர். நான் கொல்லம் சப் ஜெயிலில் இருக்கும்போது அவசரநிலை கைதிகள் பலரைக் கொண்டுவந்து அவமானப்படுத்தும் நோக்கத்துடன் நிர்வாணமாக அடைத்து வைத்தார்கள். அவர்கள் கோஷம் முழக்கியபடியே அவமானத்தை மறந்தார்கள். வெளியே தரையில் சாக்குத்துணியை விரித்துத் படுத்திருந்த நான் சாக்கையும் துணியையும் எறிந்து கொடுத்தேன். நாடே கொந்தளித்துக் கிடக்கும்போது ஒருவர் மட்டும் அதை உடுத்துவாரா என்ன?

காது கிழிந்தது: அப்பாவின் குறைந்தபட்சக் கோட்டா தினசரி ஒரு கோப்பைக் கள்ளு. இது கிட்டத்தட்ட ஒரு குப்பியளவு இருக்கும். அப்பாவைக் கறுத்தக் குட்டன்பிள்ளை என்று அழைத்தவர்கள் கள்ளுக் குட்டன் பிள்ளையென்று அழைக்க ஆரம்பித்தார்கள். அப்பா ஆறடி உயரமிருப்பார். மூன்றுநான்கு பேர்கள் பிடித்துத் தொங்குமளவிலான மிகப் பெரிய மீசையும் வைத்திருந்தார். அசாமில் ஐந்து ரூபாய் போலீசாக இருந்தவர். பிரமாண்டமான ஆகிருதி. அப்பா இறந்தபோது கொல்லத்திலிருந்து கொண்டு வந்த சவப்பெட்டி போதாததால் அதை உடைத்துதான் அப்பாவை வைத்தார்கள். கைகளும் காலின் ஒரு பகுதியும் பெட்டியின் வெளியே நீண்டிருந்தன. அப்பாவின் சகோதரியின் கணவர் பார்வத்யக்காரராக இருந்தார். கிட்டத்தட்ட இன்றைய டெபுடி தாசில்தார் உத்தியோகம். இவருடைய யோசனையும் அப்பாவின் சித்தி பிள்ளைகளும் சேர்ந்துதான் எங்களுக்கும் சேர வேண்டிய சொத்துக்களை ஏமாற்றினார்கள். கிடைத்ததையெல்லாம் அப்பா குடித்து இல்லாமலாக்கினார். அம்மாவும் அக்காவும் முந்திரி ஆலையில் வேலைக்குப் போக வேண்டியதாயிற்று. வாழ வழியில்லாத நிலை ஏற்பட்டால்தான் முந்திரி ஆலையில் வேலைக்குப் போவார்கள்.

அவமானம் பிடிங்கித் தின்றது. சனிக்கிழமை தோறும் சம்பளம் கிடைக்கும். அதையும் வாங்கி அப்பாவிடம்தான் கொடுக்க வேண்டும். இல்லையென்றால் அடிப்பார். இப்படியான ஒரு அடிதான் அக்காவைச் செவிடியாக்கியது.

திருடனும் திருடனும்: திருடன் திருடனைப் பிடிக்கப் புறப்பட்ட தகவல் இது. ஒன்றிரண்டு வருடங்களுக்கு முன்பு நடந்த சம்பவம். ஊரிலுள்ள ஒரு நல்ல நாயர் வீட்டுப் பெண் என் வீட்டின் முன்பாக நடந்துபோனாள். பக்கத்தில் இப்போது ஒரு சிபிஎஸ்இ ஸ்கூல் இருக்கிறது. பெரிய அளவிலான ஒரு பள்ளிக்கூடம். அங்கே தன்னுடைய குழந்தைக்கு ஃபீஸ் கட்டுவதற்காக போய்க்கொண்டிருந்தாள். நான் முற்றத்தில் நகம் வெட்டிக்கொண்டிருந்தேன். திடீரென்று ஒரு அலறல் சத்தம். திருடன் . . . திருடன் . . . செயினைத் திருடிட்டு ஓடுறான் என்று. முன்னால் நடந்து கொண்டிருந்த சிறுமியின் குரல். நான் ஒருகணம் என்னைப் பார்த்துக்கொண்டேன். நான் இங்கேதான் உட்கார்ந்திருக்கிறேன். உடல், மனம், உணர்வு எல்லாமே இங்கேதானிருக்கிறது. நகம் வெட்டுவதற்கான பிளேடும் கையிலிருக்கிறது. ஆகவே அது நானல்ல. இறங்கிப் பார்க்கலாம்போலிருந்தது. வேண்டாம் என்று வைத்தேன். தேவையில்லாமல் ஊரிலுள்ளவர்களை சிந்தனைத் தடுமாற்றத்திற்குள்ளாக்க வேண்டாம். திடீரென்று ஒரு பைக் சீறிப் பாய்ந்துப் போய்க் கொண்டிருந்தது. ரெயில்வே கேட் மூடப்பட்டிருந்தது. தப்பிக்க முடியாது. வண்டியை அங்கேயே போட்டுவிட்டு அவர்கள் தப்பித்துவிட முயற்சி செய்தார்கள். ஊரிலுள்ளவர்கள் விரட்டிப் பிடித்தார்கள். அறிவில்லாத திருடன்கள். திருடன்கள் பிடிபட்டதும் நான் மெதுவாகக் களமிறங்கினேன். அன்று நான் அரை போலீஸ் அல்லவா? ஈஸ்ட் ஸ்டேஷனில் வேலை பார்த்துகொண்டிருந்த காலம். அவர்கள் வந்த பைக்கை வேறு யாரும் எடுத்துக்கொண்டு போய் விடாமலிருப்பதற்கான முன்னேற்பாடுகளைச் செய்தேன். புளியற வயலில் குஞ்ஞிராமன் அண்ணனின் வீட்டில்போய் ஃபோன் செய்தேன். மொபைல் ஸ்குவார்டும் குந்தமும் குடைச் சக்கரமும் வந்தது. முதன் முதலாக எங்கள் ஊரில் நடந்த ஒரு நகைப்பறிப்பு வழக்கிற்கும் நானே சாட்சி. "ஸ்டேஷனுக்குத்தானே போகப்போறே, நீயும் கூட வா" என்று போலீஸ்காரர்கள் சொல்ல நானும் ஜீப்பில் ஏறினேன்.

வழியனுப்பு நிகழ்ச்சி: திருடனுக்கு ஏதாவது ஸ்டேஷனில் வழியனுப்பு நிகழ்ச்சி நடந்திருப்பதாக யாரேனும் அறிந்ததுண்டா? அந்தப் பாக்கியமும் அடியேனுக்குச் சித்தித்தது. கொடுவள்ளி வழக்கில் சிறுமியைக் குறுக்கு

விசாரணை செய்து வேதனைக்குள்ளாக்க வேண்டாமென்று நான் விட்டுக் கொடுத்தது போலீஸ்காரர்களுக்கு என்மீது மிகுந்தப் பரிவை ஏற்படுத்தியது. அப்போது நான் தாமரைச்சேரி போலீஸ் லாக்கெப்பிலிருந்தேன். முதல் நாள் தாமரைச்சேரி நீதிமன்றத்தில் நான் பிரதியாகவும் வக்கீலாகவும் நின்றிருந்தேன். வழக்கு முடிந்து, மீண்டும் ஸ்டேஷனுக்கு வந்தேன். கைதியாக இருந்த காலத்தைத் தண்டனையாகக் கருதிய நீதிமன்றம் என்னைக் கருணையுடன் விடுதலை செய்திருந்தது. மீண்டும் திருவனந்தபுரத்திற்கு வர வேண்டும். என்னுடைய நடவடிக்கை, வழக்கை அணுகிய முறை, அதிகாரிகளிடம் நடந்துகொண்ட விதம் எல்லாவற்றையும் பார்த்த ஸ்டேஷன் எஸ்ஐ உண்ணிராஜா சொன்னார்:

"மணியன்பிள்ளை போகப்போறே, இனி நாம சந்திக்கறதுக்கான வாய்ப்பில்லை. ஒரு வழியனுப்பு ஏற்பாடு பண்ணணும். எல்லாருக்கும் எலுமிச்சம்பழ ஜூசும் வாழைப்பழமும் வாங்கிட்டு வா." இப்படியாக மகிழ்ச்சியுடன் என்னை வழியனுப்பி வைத்தார்கள். சார் இப்போது ஸ்பெஷல் பிராஞ்ச் டிஒய்எஸ்பியாக இருப்பதாகக் கேள்விப்பட்டேன். காலம் ஓடிக்கொண்டிருக்கிறது.

சில நேரங்களில் சில போலீஸ்காரர்கள்: என்னதான் தண்டித்தாலும் திருடனுக்கு போலீஸ்காரர்கள்மீது உள்மனதிலொரு சாஃப்ட் கார்னர் இருக்கும். சில நேரங்களில் சில போலீஸ்காரர்கள் நடந்துகொள்கிற முறையைப் பார்த்தால் கோபமும் வருத்தமும் தோன்றும்; வேடிக்கையாகவுமிருக்கும். சாதாரண போலீஸ்காரர்கள் முதல் டிஜிபிவரையுள்ள பெரும்பான்மை போலீஸ்காரர்களின் எண்ணமும் நாங்கள் அதிபுத்திசாலிகள், யாரும் எங்களை ஏமாற்ற முடியாது என்பதுதான். தங்களது துப்பறியும் திறமைமீதும் இவர்களுக்கு அடங்காத காதலுண்டு. உலகமே தலைமீது விழுந்தாலும், பணியிலிருந்து ஓய்வு பெறும்வரைக்கும் இவர்களது இந்த மனோபாவத்தில் மாற்றம் வராது. நான் நெடுமங்காட்டில் ஒரு வருடம் கேஸ் கம்பெனியில் வேலை பார்த்திருக்கிறேன். வீடுகளுக்குச் சென்று தவணை முறையில் கேஸ் இணைப்பு கொடுக்கும் வேலை. பட்டர்ஃப்ளை அடுப்பு, லைட்டர், டியூப் எல்லாம் சேர்ந்து 3500 ரூபாய். ஆயிரம் ரூபாய் முன்பணம். மீதியை 25 தவணைகளாக அடைத்துக் கொள்ளலாம். இதன் ஃபீல்ட் ஒர்க்கராக இருந்த நண்பன் பிரசன்னன் மூலமாகக் கிடைத்த வேலை. ஒரு இணைப்பின் மொத்தத் தொகையில் பகுதியை முதலாளிக்கு ரொக்கமாகக் கொடுத்துவிட வேண்டும். மீதியை வசூல் செய்து எடுத்துக்கொள்ளலாம். நல்ல லாபம் வருகிற வியாபாரம்.

கிராமப்புறங்களிலுள்ள ஏழைப் பெண்களிடம் இது அரசுத் திட்டம் என்பதுபோல் சொல்லி விற்பனை செய்வோம். முதலில் ரேஷன் கார்டை வாங்கிப் பார்த்துவிட்டு உங்களுக்கு கேஸ் இணைப்புப் பெறுவதற்கான அருகதை இருக்கிறது என்போம். அப்போதெல்லாம் கேஸ் இணைப்புப் பெறுவதற்கு விண்ணப்பமளித்துவிட்டு மூன்று நான்கு வருடங்கள் காத்திருக்க வேண்டும். இன்று மத்திய ஆயில் அன்ட் கேஸ் டிப்பார்ட்மென்ட் வறுமைக் கோட்டுக்குக் கீழுள்ள அனைவருக்கும் கேஸ் இணைப்பு வழங்கி வருகிறது. ஆண்டுக்கொருமுறை மட்டும்தான் இந்தத் திட்டம். பிறகு, இந்த ஏரியாவுக்கே வரத் தேவையில்லை.

இதில் வேறு ஏமாற்றுகள் எதுவுமில்லை. முதல் தவணையாக ஆயிரம் ரூபாய் வாங்கிவிட்டு இணைப்புக் கொடுத்து விடுவோம். பெண்கள் நகையை வைத்து பணம் ஏற்பாடு செய்து தருவார்கள். நாங்கள் பக்கத்திலுள்ள ஏதாவதொரு லாட்ஜில் தாங்கியிருப்போம். பெண்களை நம்ப வைப்பதென்பது பொதுவாகவே சிரமமான விஷயம். ஏதாவது ஏமாற்று வேலையா என்று அறிவதற்காக ஆஃபீசில் ஃபோன் செய்து விசாரிப்பார்கள். ஆனால், நான்கைந்து போலீஸ்காரர்களின் வீடுகளுக்கு நாங்கள் இணைப்புக் கொடுத்ததுடன் அவர்களது பயம் விலகியது.

"இதில ஏமாற்று ஒண்ணுமில்லையே? நான் போலீஸ்காரங்கிறது ஞாபகமிருக்கட்டும்" என்பார்கள்.

"அது எங்களுக்குத் தெரியாதா சார்? சந்தேகமிருந்தா கூப்பிட்டு விசாரிச்சுக்குங்க."

"அதெல்லாம் தேவையில்லை. ஏமாற்று வேலையாக இருந்தா உன்னை உங்க ஆஃபீஸ்ல வந்துத் தூக்குறதுக்கும் எனக்குத் தெரியும்."

நாங்கள் என்ன திருடன்போலவா இருப்போம். அப்படியிருந்தால் உடனே தூக்கவும் செய்வார்கள்.

"சரி, சரி . . . அதையெடுத்து உள்ள வைங்க. அடியே, காசைக் கொடுடீ." என்பார்கள். இவ்வளவுதான். கொஞ்சம் தற்பெருமையுள்ளவர்களை எளிதாக வீழ்த்தி விடலாம்.

கேஸ் தட்டுப்பாடு ஏற்பட்டதும் எங்கள் வியாபாரமும் நின்றது.

## **82 -** நடிகர் மணியன்பிள்ளை

என்னுள் ஒரு நடிகனும் இருந்திருக்க வேண்டும். திருடனை விட பெரிய நடிகன் இருக்கவா முடியும்? எதிர் காலத்தில் நாம் என்னவாகப் போகிறோம் என்பதற்கான சில அறிகுறிகள் சிறுவயதிலேயே தென்படுமென்று தோன்றுகிறது. என்னுடைய உறவினரும் கவிஞரும் பாடலாசிரியருமான வாழத்துங்கல் ஸ்ரீதரன் நாயரின் நேஷனல் தியேட்டர் குரூப்பில் நானுமொரு நடிகனாக இருந்தேன். காலடி கோபியின் 'ஏழு ராத்திரிகள்' என்ற அமெச்சூர் நாடகம் அருகிலுள்ள சில கோயில்களில் அரங்கேற்றப்பட்டது. அதில் கள்ளன் குஞ்ஞுச்சன் என்ற குழந்தைக் கதாபாத்திரத்தில் நான் நடித்தேன். பார்த்தவர்கள் மிகவும் சிறப்பான நடிப்பு என்று பாராட்டினார்கள். பிறகு, நான் அந்தக் கதாபாத்திரமாகவே வாழ ஆரம்பித்தேன். சி.எல். ஜோஸின் ஒரு நாடகத்திற்கான ஒத்திகை நடந்துகொண்டிருந்த கட்டத்தில் என்னுடைய கவனமும் சிதற ஆரம்பித்திருந்தது. இதில் ஆச்சரியமான விஷயம், நாடகத்தின் பெயர்: 'மேலுமொருவன் திருடனானான்.' அதில் பசியில் வாடும் ஒரு சிறுவனின் கதாபாத்திரத்தில் நான் நடித்தேன். மற்றவர்கள் சாப்பிடும் உணவுப் பொருட்களின் எச்சிலைப் பொறுக்கித் தின்னும் கதாபாத்திரம். சாப்பிட்டுக் கொண்டிருப்பவன் பூட்ஸ் காலால் உதைப்பான். இந்த நாடகத்தை அரங்கேற்றம் செய்ய முடியவில்லை என்றாலும் வாழ்க்கையில் இதை நான் அனுபவித்திருக்கிறேன். சின்னக்கடையில் பத்மா கஃபேயில் நடந்த இந்தச் சம்பவத்தை இந்தப் புத்தகத்தில் குறிப்பிட்டிருக்கிறேன்.

இவ்வளவு வேஷங்களையும் போட வைத்த விதி இத்துடன் அடங்கிவிட்டதா என்றால் இல்லை. என்னை ஒரு தொலைக் காட்சி நடிகனாகவும் ஆக்கியது. என்னுடைய சகோதரியின் மகள் சில டெலிஃபிலிம்களிலும் சீரியல்களிலும் நடித்திருக்கிறாள். அவளது பாதுகாவலனாக நான் போய்க்கொண்டிருந்தேன். இப்படியாக ஒரு கட்டத்தில்தான் ஷாஜி எம். இயக்குனராக இருந்த 'கருணாலயம்' எனும் டெலிஃபிலிமில் கம்பவுண்டராக நடித்தேன். நான்கைந்து காட்சிகளில் வருவேன். 'வாலன்டைன் டே' எனும் மற்றொரு டெலிஃபிலிமிலும் நடித்திருக்கிறேன்.

கண் பார்வை: என்னுடைய கண்பார்வையில் சிறு கோளாறு இருந்தது. கண்ணாடி அணிந்துதான் வாசிக்க இயலும். சில நேரங்களில் வேதனையும் இருக்கும். திருட்டின் தொடக்கக் காலத்தில் ஒரு தடவை, தப்பித்து ஓடும்போது ஒருவனைக் கத்தியால் குத்திய வழக்கில் பிடிபட்டேன். இந்த வழக்கில் என்னை அடித்துப் பிழிந்தெடுத்த சம்பவத்தை ஏற்கனவே சொல்லியிருந்தேன். செத்துப் போகட்டுமென்ற எண்ணத்தில் கண் மூக்கு பார்க்காமல் உதைத்தார்கள். கண்ணுக்குள் ரத்தம் உறைந்துக் கெட்டியாகி, கடைசியில் கருவிழியில் வெள்ளையாகப் படர்ந்தது. ஜெயிலிலிருந்து வந்த பிறகு, கண்களைத் திறந்து வைத்தபடியே நீருக்கடியில் மூழ்கிக்கிடந்து அப்போதைய வேதனையைப் போக்குவேன். கண்களுக்கு இதமாக இருக்கும்.

கொஞ்ச நாட்களுக்குப் பிறகு, கண்களில் திடீரென்று வலியேற்பட்டு சீழ்க்கட்டிக் கொண்டது. டாக்டர் கேட்டார்: "கண்ணுக்குள்ளே நிறைய புழுவும் கிருமியும் செத்துக் கிடக்கு. கண்ணைத் திறந்து வெச்சிட்டு குளத்தில மூழ்கிக் குளிக்கிற பழக்கமுண்டா?" ஆமாம் என்றதும் அதுதான் பிரச்சினை என்றார். திருவனந்தபுரத்தில் ஒரு கண் மருத்துவமனையில் காட்டினேன். குணமாவதற்கு நாட்கள் பிடித்தன. கடைசியில் சிறு வேதனை மட்டும் மிச்சமானது.

பந்தோபஸ்து: 1995இல்தான் என்மீதுள்ள எல்லா வழக்குகளும் முடிவுக்கு வந்தன. பிறகு, நன்னடத்தை ஜாமீனில், டிஒய்எஸ்பி ராங்கில் குறையாத அதிகாரி ஒருவரின் பரிந்துரையிலும் கண்காணிப்பிலும் மூன்று வருடம் புரொபேஷனலில் இருக்க வேண்டுமென்று ஆற்றிங்கல் நீதிமன்றம் உத்தரவுப் பிறப்பித்திருந்தது. அபூர்வமாக சில சமயங்களில் வழக்கு முடிந்த பிறகு பிரதியை போலீஸ் வேனில் ஏற்றி வீட்டில் கொண்டுவந்து விடுவதுண்டு. நன்னடத்தை விடுதலையின்போது பழைய திருடன் என்ற பேரில் போலீசார் என்மீது பொய் வழக்குப் போடுவதற்கான வாய்ப்பிருப்பதாகவும் ஆகவே, எனக்கு போலீஸ் பாதுகாப்பு வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டேன். வீட்டுக்குப்போகும் வழியில்கூட போலீசார் என்னைக் கைது செய்ய வாய்ப்பிருக்கிறது என்று நான் சொன்னதும் இவரை வீட்டில் கொண்டு போய் விடுங்கள் என்று நீதிபதி உத்தரவிட்டார். இப்படியொரு அபூர்வ நிகழ்ச்சியாக, போலீஸ் பந்தோபஸ்துடன் திருடன் வீட்டுக்கு வந்து சேர்ந்த ஒரு விஷயமும் நீதிமன்ற உத்தரவால் நிகழ்ந்தது.

## 83 - சேரூர் சி.பி.

வாழத்துங்கலில் எங்கள் இல்லப்பெயர் சரஸ்வதி மந்திரம். ஆனால், சேரூர் வடக்கதில் என்று சொன்னால்தான் தெரியும். சேரூர் வீடு இன்றுமிருக்கிறது. ஒரு வரலாற்று சின்னம் போல். அன்று எட்டுக்கட்டு வீடாக இருந்த காலமும் எனக்கு நினைவிருக்கிறது.

இடப்புறமும் வலப்புறமும் பரந்து விரிந்த பெரிய வயல்களும் கிழக்கே மதில்கூடமும். வயலில் எள்ளும் மரச்சீனியும் பயிராயின. ஒரு குளமும் இருந்தது. அதிலிருந்து நான் நிறைய மீன்கள் பிடித்திருக்கிறேன். வழிப்போக்கர்கள் வடக்குப் பக்கமாக வந்து ஏதாவது வாங்கிச் சாப்பிடலாம். மதில்கூடம் வழியாக உறவினர்களும் பிற நாயர்களும் உயர்ந்த ஜாதியினரும் மட்டும் வரலாம்.

சேரூர் சி.பி. என்று அறியப்பட்ட சி. பரமேஸ்வரன்பிள்ளை தான் சேரூர் இல்லத்தின் கடைசிப் பிரமுகர். பாரிஸ்டர் பட்டம் பெற்றவர். பிரம்மச்சாரி

கேரளத்தில் ஏராளம் நான்கு கட்டு வீடுகள் இதுபோல் சிதைந்தும் சிதையாமலும் மிச்சமிருக்கின்றன. இப்படியான வெறுமொரு நான்கு கட்டு வீடல்ல இது. சி.பியின் உயில்படி, பிரசித்திப்பெற்ற இந்தக் குடும்ப இல்லத்தையும் இதன் கீழுள்ள சொத்துக்களையும் யாரும் விற்க முடியாது. குடும்பத்திலுள்ள பெண்களுக்கும் அவர்களுக்குப் பிறக்கும் பெண் வாரிசுகளுக்கும் இது எக்காலமும் உரிமைப்பட்டதாகும். அதாவது இந்தக் குடும்பத்திலுள்ள யாரும் இயலாத கட்டத்தில் வந்து இங்கே தலைசாய்க்க முடியும் என்று பொருள். இன்று இதன் ஒவ்வொரு மண்துகளுக்குமே உரிமையாளர்கள் இருக்கிறார்கள், அந்த அளவுக்குக் குடும்பம் பல தலைமுறைகளாகப் பல்கிப் பெருகிவிட்டது. இருந்தாலும் இப்போது இரண்டு மூன்று குடும்பங்கள் தான் இங்கே வசித்து வருகின்றன.

குறிப்பாக ஒருவருக்கென்று இல்லாமல் பொதுவிலுள்ள சொத்தைப் பராமரிக்கவும் பாதுகாக்கவுமானப் பொறுப்பு யாருக்கும் இருக்காதல்லவா? அந்த ஆபத்துதான் இதிலும் நேர்ந்தது. குடும்பத்திலுள்ள பொறுப்பற்ற ஆண்வாரிசுகள் குடிக்கப் பணமில்லாதபோது வீட்டிலிருந்த கதவுகளையும் தூண்களையும்

பெயர்த்தும் தோட்டத்தில் நின்ற மரங்களை வெட்டியும் விலைக்குப் போட்டார்கள். வீட்டு முற்றத்தில் நின்றிருந்த இரண்டு புளிய மரங்கள் எனக்கு இப்போதும் நினைவிருக்கிறது. சில அபூர்வ சகோதரர்கள்போல் மாறுபட்ட குணமுடையவை அந்த மரங்கள் இரண்டும். ஒரு மரத்துப் புளி தேன்போல் சுவைக்கும். மற்றொன்றின் காய்கள் காஞ்சிரக்காய்போல் கசக்கும். தோட்டம் நிறைய பற்பல இனங்களைச் சேர்ந்த மாமரங்களும் நின்றன. குடும்பத்தில் பிறந்த சில துஷ்டத் தலைமுறையினர் எல்லாவற்றையும் விற்றுவிட்டார்கள். பிறகு, விற்பதில் போட்டி ஏற்பட்டது. சிறுவயதில் வேறு வழியில்லாத நிலையில் நானும் சில தேங்காய்கள் பறித்திருக்கிறேன். மற்றவர்களுடைய மாபெரும் கொள்ளையுடன் இதைப் பொருத்திப் பார்த்தால், திருட்டு என்று சொல்வதற்கான அருகதை கூட இதற்குக் கிடையாது. ஒரு திருடனின் வரலாற்றில் எல்லா விதமான திருட்டும் இடம்பெற வேண்டும் என்பதற்காக இதைச் சொல்கிறேன்.

சேரூர் குடும்ப இல்லத்திற்கென்று கருவூலமும் இருந்தது. ஏதாவது பொக்கிஷங்கள் இருக்கின்றனவா என்று பார்ப்பதற்காக இது பல தடவை உடைபட்டது. யாரோ ஒருவருக்கு இதிலிருந்து ஒரு குழந்தையின் மண்டையோடு கிடைத்ததாகவும் கேள்வி. வீடு முழுக்க, ஈட்டி மற்றும் தேக்கு மரங்களால் செய்யப்பட்டு களிம்பு பிடிக்காத பித்தளை ஆணிகளால் பிணைக்கப்பட்டிருந்தன. அனைத்தையும் கழற்றி விற்றுவிட்டார்கள். முகட்டுப் பலகைகள்வரை கழற்றப்பட்டு விட்டன. இரவு நேரங்களில் நான் தூக்கம் வராமல் யார் வீட்டுச் சுவரைத் துளைப்பதென்று யோசித்துக் கொண்டிருக்கும்போது அக்கம் பக்கத்திலுள்ள சிலர் இங்குள்ள பொருட்களை வண்டியில் ஏற்றிக்கொண்டு போவதை பலதடவைப் பார்த்திருக்கிறேன். திருடன் மற்றவர்கள் திருடுவதைச் சுட்டிக்காட்டுவதா? வேண்டுமென்றால் பங்கு கேட்கலாம். ஆனால், அதற்கும் ஒரு தகுதி வேண்டும். மெல்ல மெல்ல வீடு எலும்பும் தோலுமானது. பிறகு ஒரு டிரஸ்ட் அமைக்கப்பட்டது. சி.பியின் மரண சாசனப்படி பார்க்கும்போது இதற்குச் சட்ட அனுமதியுண்டா என்பதில் சந்தேகமிருந்தாலும் நல்ல விஷயம்தான். மிச்சமிருப்பதாவது திருட்டுப் போகாமலிருக்கும். சி.பியின் ஆத்மாவுக்கு குறைந்தபட்ச ஆறுதலாவது கிடைக்குமல்லவா?

கடைசியில்: திருடனாக மாறிவிட்ட பிறகு, அவன் ஒரு சமூக ஜீவியல்ல. நரி. பகுதிகளிலெங்கும் சுற்றித் திரியலாம். என்ன? பகலில் வர முடியாது அவ்வளவுதான். தப்பித் தவறி யார் கண்ணிலாவது பட்டுவிட்டால்

தலைகுனிந்து ஓரம் சார்ந்து போய்விட வேண்டும். மானஸ்தர்கள் நிறைந்த ஊரல்லவா? "இப்படியெல்லாம் வாழக்கூடாது தெரியுமா? திருடக்கூடாது; நானெல்லாம் எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கேன் தெரியுமா? உழைக்கணும்" என்பார்கள். ஜார்ஜ் புஷ் உகாண்டாவுக்கு உபதேசம் செய்வதுபோல்தான். இன்னும் சிலர்: "எல்லாத்தையும் நிறுத்திட்டு இனிமேலாவது கௌரவமாக வாழ முயற்சி பண்ணுடா" என்பார்கள். எனக்கோ இவர்களுடைய வாழ்க்கை, திரையில் தெரிவதுபோல் அப்படியே கண்முன் விரியும். இவர்கள் வெளிப்படுத்த விரும்புகிற வாழ்க்கையல்ல, மறைத்து வைக்க விரும்புகிற வாழ்க்கை. இரவின் சாயல் படிந்த வாழ்க்கை. எனக்கு இதெல்லாம் தெரியாது என்று நினைக்கிறார்கள். திருடன் எழுதுவது அவனது ஊரின் கதைதான். அதில் பொய் முகங்களின் முகமூடிகள் நீக்கம் செய்யப்படும்.

உறவினர்களின் வீடுகளுக்கெல்லாம் நான் போவதில்லை. போனாலும் அங்கிருக்கும் எதையுமே பார்க்காமல் தலைகுனிந்து அமர்ந்திருப்பேன். முதல் திருட்டு நடந்த காலம். பதினேழு வயது. பெரியம்மாவின் வீட்டில் என்னைக் கொண்டுபோய் விட்டார்கள். இப்படியொரு போக்கிரித்தனம் செய்தேனே தவிர மரியாதைக் குறைவான பேச்சோ நடத்தையோ என்னிடம் அப்போது கிடையாது. பெரியம்மாவின் மகளின் குழந்தைக்கு அப்போது ஒரு வயதிருக்கும். நாங்கள் சாப்பிட்டுக்கொண்டிருந்தோம். பயறுக்கஞ்சியும் மசியல் கூட்டும். தவழ்ந்து என் பக்கத்தில் வந்த குழந்தைக்கு நான் கொஞ்சம் சோற்றை எடுத்து ஊட்டி விட்டேன். குழந்தையும் அதைத் தின்றுவிட்டது. அக்காவுக்குப் பெருங்கோபம். கையிலிருந்த அகப்பையால் என் கையில் ஓங்கியடித்து விட்டு அழுதாள்:

"அய்யோ, கஞ்சிக்கு வக்கத்துப்போய் வந்த இந்தப் பிச்சைக்காரப்பயல் என் குழந்தைக்கு சோறு கொடுத்துட்டானே, இனி அவனோட தலையெழுத்து என்னவாகப் போகுதோ?" என்று சொல்லி அழுதாள்.

அவன் இப்போது அரசு ஊழியன். நன்றாகவே இருக்கிறான். ஆனால், நான் அன்று குழந்தையாக இருக்கும்போது பார்த்ததுதான். பிறகு, பார்க்கவே இல்லை. திருடன் சோறூட்டியதற்காக குழந்தையும் திருடனாகி விடாது. நடிகன் சோறூட்டினால் குழந்தையும் நடிகனாகி விடுமா? விபச்சாரி சோறூட்டினால்? ஐஏஎஸ்காரன் ஊட்டியதற்காக மட்டுமே குழந்தையும் ஐஏஎஸ்சாகி விடுமா? வெறும் நம்பிக்கைகள். இப்படியான சில நம்பிக்கைகளும் தேவைதான். எதையாவது நம்பி நம்பி சாவதுவரைக்கும் வாழ்ந்துத் தொலைக்க வேண்டாமா?

திருடனைப்போன்ற துயரம் நிரம்பிய வாழ்க்கை வேறு யாருக்குமே கிடையாது. திருட்டை நிறுத்தினாலும் பெயர் மாறாது. உறவினர்கள் வீட்டுக்கோ தெரிந்தவர்கள் வீட்டுக்கோ போக முடியாது. கண்கள் நம்மையறியாமல் எங்காவது தட்டுப்பட்டு விட்டால் வீட்டுக்காரர்களுக்கு நோட்டமிடுகிறானோ என்ற சந்தேகம் வந்துவிடும். வாழ்க்கை முழுவதுமே குனிந்தத் தலைதான். இப்போதெல்லாம் நான் திருடுவதில்லை என்றால் யாரும் நம்பமாட்டார்கள். திருடனுடைய பச்சாதாபத்தில் யாருக்குமே நம்பிக்கை வராது. பீடி வாங்கவும்கூட இரவு நேரங்களில் திருடன் வெளியே வரப்பயப்படுவான். போலீஸ் வேன் பக்கத்தில் வந்து பிரேக் போட்டு நிறுத்தப்படலாம். இப்படியான இரண்டு சம்பவங்கள் அண்மையில் நிகழ்ந்தன.

நான்கு வருடங்களுக்கு முன்: திருவனந்தபுரத்தில் சேங்கோட்டுக் கோணம் என்ற இடத்தில் ஒரு உறவினர் வீட்டுக்குப் போயிருந்தேன். உறவினருடன் சேர்ந்து கொஞ்சம் குடித்தேன். இரவு நீண்ட நேரமாகிவிட்டது. அவர் தங்குவதற்கு வற்புறுத்தினார். அது சரியாக இருக்காது. என்ன இருந்தாலும் பழைய திருடன் அல்லவா? வீட்டுக்காரர்களுக்கு மனத் தொந்தரவாக இருக்கும். வேண்டாம் என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டேன். கொல்லத்துக்குப் போக வேண்டும். கார்யவட்டம் வரை நடந்து ஹைவே ரோட்டுக்கு வந்தேன். ஜங்ஷனில் ஆள் நடமாட்டமில்லை. ஏதாவது நைட் டியூட்டி போலீஸ் வேன் வந்தால் பிரச்சினை. நான் திருடுவதை நிறுத்தி விட்டேன் என்பதை நிரூபித்தாக வேண்டும். திருடனைப் பொறுத்தவரைக்கும் இது எளிதான விஷயமுமல்ல. வெளிச்சமும் ஆட்கள் நடமாட்டமுமுள்ள இடத்தில் போய் நிற்கலாமென்று நினைத்து நேராகக் கழக்கூட்டம் ஜங்ஷனுக்கு நடந்தேன். கொஞ்ச நேரம் காத்து நின்றிருந்தேன். பஸ்சுக்குப் பதிலாகத் தூக்கம்தான் வந்தது. முன்பு, தூக்கமற்று வாழ்ந்த உடம்பல்லவா? அதையெல்லாம் சேர்த்துத் தூங்க வேண்டுமென்று இப்போது அடம் பிடிக்கிறது உடம்பு. என்ன செய்வது? இடம் எதுவாக இருந்தாலும் பரவாயில்லை. படுத்தால் போதும். ரெயில்வே ஸ்டேஷனுக்குப் போகலாம் என்று முடிவு செய்தேன். காலை பாஸஞ்சரில் கொல்லம் போய் விடலாம். ஸ்டேஷன் மாஸ்டரிடம் சொல்லிவிட்டுப் படுத்துக்கொள்ளலாம். போலீஸ் வந்தாலும் இதைச் சொன்னால் போதும். இதுதான் என்னுடைய வழக்கமும். குறுக்கு வழிகளினூடே ரெயில்வே ஸ்டேஷனுக்கு நடந்தேன். வழியில், ஒரு போலீஸ் வேன் வந்து நின்றது. எங்கே போகிறாய் என்று கேட்டார்கள். உண்மையைச் சொன்னேன். ஆனால், சந்தேகத்துக்குரிய உண்மை இது. ரெயில்வே ஸ்டேஷன் பகுதியில் நாடோடிகளின் திருட்டுத் தொல்லைகள்

இருப்பதாகக் கிடைத்தப் புகாரின்பேரில் வந்த போலீஸ்காரர்கள். "கூரையைப் பிரிக்க வந்தேன்னா உண்மையைச் சொல்லிடு, விட்டுடறோம்" என்றார்கள். இல்லை என்றேன். "வண்டியில ஏறு" என்றார்கள். ஏறினேன். தும்பா போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோனார்கள், அங்கேயே படுத்துக்கொண்டேன். முன்னாள் திருடன் என்று நான் சொல்லவில்லை. சொன்னால் உதைக்க ஆரம்பித்து விடுவார்கள். காலையில் எஸ்ஐ வந்தார். நைட் ஸ்குவாடு கொண்டு வந்தவன் என்று சொன்னார்கள். கழக்கூட்டத்திலிருந்து ரெயில்வே ஸ்டேஷனில் போய் படுக்கப்போவதாகச் சொன்னதுதான் சிக்கலாகி விட்டது. கடைசியில் முகவரியை வாங்கி என் மகனை வரவழைத்தார்கள். இதுதான் மிகவும் வருத்தமாகப் போய்விட்டது. தேவையில்லாமல் அவனை வேதனைக்குள்ளாக்கவும் சிரமப்படுத்தவும் செய்துவிட்டேன். ஒருவழியாக வெளியே வந்தேன்.

## 84 - சென்னை

நண்பன் ரவிபிள்ளை ஒருமுறை சொன்னான்: "இப்படியே திருடிட்டிருந்தா, ஒரு ஜெயில்லே இருந்து இன்னொரு ஜெயிலுக்கு மாறிட்டிருப்பே. கடைசிவரைக்கும் இப்படியே வாழ்ந்துடலாம்னு நினைக்கிறியா?"

"இப்படியான உபதேசங்கள் நான் நிறைய கேட்டுட்டேன். நீ உண்மையிலேயே வருத்தப்படுறதா இருந்தா எனக்கொரு வேலை ஏற்பாடு பண்ணிக்கொடு" என்றேன்.

"அதையெல்லாம் அவனவன் தேடிக்க வேண்டியதுதான்... எல்லாவனுக்கும் அடுத்தவனா வேலை தேடிக்கொடுக்குறான்? திருடியே வாழ்ந்திட்டிருந்தா அதிலேதான் ஆர்வமிருக்கும். அதை மறைக்குறதுக்கு இப்படி ஏதாவது நியாயங்கள் . . ." என்றான்.

"சரி சரி, நிறுத்திக்க. வேற எதையாவது பேசுவோம்" என்று சொல்லிவிட்டு கள்ளில் தலை தாழ்த்தினேன்.

ரவிபிள்ளை ராணுவத்தில் வேலை பார்ப்பவன். அவனுடைய யூனிட் அப்போது சென்னையில் இருந்தது. தெரிந்த ஏதாவது கன்ஸ்ட்ரக்ஷன் கம்பெனியில் வேலை கிடைக்குமா என்று பார்க்கிறேன் என்றான். நான் இதை அப்போதே மறந்துவிட்டேன்.

ஒருநாள் குற்றவுணர்வும் ஏமாற்றமும் நிறைந்த மனதுடன் கொல்லம் ரெயில்வே ஸ்டேஷனில் நின்றுகொண்டிருந்தேன். சென்னை மெயில் பற்றிய அறிவிப்பு கேட்டது. கையில் கொஞ்சம் பணமிருந்தது. ரவிபிள்ளை எப்போதோ தந்த முகவரி பர்சில் வைத்த இடத்தில் இருந்தது. சென்னையில் மணலியிலுள்ள ஒரு முகவரி. சென்னைக்குப் புறப்பட்டேன்.

முகவரியில் குறிப்பிட்டிருந்த இடத்தில் விசாரித்தேன். அந்த யூனிட் இப்போது டெல்லிக்குப் போய்விட்டதாகப் பதில் கிடைத்தது. இனி என்ன செய்வது? அண்டகடாகம் போன்ற பெரு நகரம். நமக்கு நம்முடைய சிறு

கேரளமே போதும். குருவாயூர் எக்ஸ்பிரசில் திரும்பினேன். அப்போது ஒரு ஆசை. குருவாயூரில் இறங்கி காலையில் நிர்மால்யம் தொழ வேண்டும்.

இரவில் குருவாயூரில் இறங்கி அங்குள்ள ஒரு ஆடிட்டோரியத்தின் முன்னால் ஆலமரத்தின்கீழ், கையிலிருந்த பையைத் தலையணையாக வைத்துப் படுத்தேன். இலேசாக கண்ணயர்ந்திருப்பேன். திருடன் அல்லவா? மனம் எப்போதும் எச்சரிக்கையுடன்தானிருக்கும். சிறு அசைவேற்பட்டாலும் துணுக்குற்று விடும். தலையில் சிறு அசைவு. பின்பக்கமாகத் திரும்பிப் பார்க்கும்போது ஒரு பையன். பையின் நாடாவிலிருந்து அவன் பிடியை விலக்கிக்கொண்டான். புத்திசாலிதான். என் தலைமாட்டில் தலைவைத்து எதிர்ப்புறமாகப் படுத்திருக்கிறான். எனக்குக் கோபம் வந்தது. துள்ளியெழுந்து ஒன்று வைத்துவிட்டு நடந்தேன். அடித்த கை வலித்தது. வருத்தமாகவும் இருந்தது. திரும்பிப் பார்த்தேன். அவனைக் காணோம். அடிப்பதற்கான அருகதை எனக்கு இருக்கிறதா? தன்னுடைய பொருளை அடுத்தவன் திருட நினைக்கும்போது ஏற்படுகிற கோபமும் இச்சாபங்கமும் எல்லாருக்கும் பொதுவானதுதானே? நான் திருடிய வீட்டிலுள்ளவர்கள் என்னைப் பிடித்தால் தந்திருக்க வேண்டியதில் ஒன்றை அவனுக்குக் கொடுத்திருக்கிறேன்.

திரும்பி வந்து அவனை அங்கெல்லாம் தேடிப் பார்த்தேன்; காணோம். கண்டுபிடித்து நானுமொரு திருடன்தான் என்று சொல்லி இருபது ரூபாயும் ஒரு டீயும் வாங்கிக் கொடுக்கலாம் என்றுதான் தேடினேன். சரி அவமானத்துடன் உயிரைக் கையில் பிடித்தபடி அவன் வேறெங்காவது போயிருப்பான். ஒரு சுயவிமர்சனம் செய்வதற்கான வாய்ப்பை குருவாயூரப்பன் தந்திருப்பதாக நினைத்தபோது மனம் பழைய நிலையிலானது. இருந்தாலும் பறிகொடுப்பவனுக்கும் வலியிருக்குமென்ற எண்ணம் மனதினுள் சரடாக ஓடியது.

இந்த எண்ணம், மகனுக்கேற்பட்ட ஒரு நிகழ்வின்போதுதான் என்னை மிகப் பயங்கரமாக வதைத்தது, அவன் சீரியல்களில் உடையலங்காரம் செய்துகொண்டிருந்தான். ஓரளவில் தைக்கவும் செய்வான். சீரியல்களில் நடிக்கும் நடிக நடிகைகள்தான் துணிகள் கொண்டு வருவார்கள். பெரிய அளவிலான வருமானங்கள் கிடைக்காது. இப்படியிருக்கும்போது சினிமாவில் அவனுக்கொரு வாய்ப்பு வந்தது. ஜகதி ஸ்ரீகுமார் முக்கிய வேடத்தில் நடிக்கும் ஒரு திரைப்படம். தவமாய்த் தவமிருந்துக் கிடைத்த வாய்ப்பு. தயாரிப்பாளர் நம்பிக்கையுடன் கொடுத்த ஐம்பதாயிரம்

ரூபாயுடன் துணி வாங்குவதற்காக சென்னைக்குப் புறப்பட்டான். கூடவே, புரொடக்ஷனிலுள்ள இரண்டு பேரும். இரவில் ஒரு லாட்ஜில் படுத்துத் தூங்கினார்கள். காலையில் சாயா குடிக்கச் சென்று, திரும்ப வந்துக் குளித்துவிட்டு துணி வாங்கப் போவதற்காக பையைப் பார்த்தார்கள். பணத்தைக் காணோம். பையின் வலதுபுற பாக்கெட்டில் வைத்திருந்த பணத்தைக் காணவில்லை. பாக்கெட் திறந்து கிடந்தது. அவன் திடுக்கிட்டு விட்டான். கூட இருந்தவர்கள் தெரியாதென்று கைவிரித்து விட்டார்கள்.

தயாரிப்பாளருக்கு பணம் கொடுத்தாக வேண்டும். மருமகளின் கழுத்திலும் காதுகளிலும் கிடந்த பொட்டு நகைவரைக்கும் கழற்றியெடுத்தும் தெரிந்தவர்களிடமிருந்து கடன் வாங்கியும் எப்படியோ பணத்தை ரெடி பண்ணினோம்.

இத்துடன் பொருளாதார ரீதியான சிரமங்கள் அதிகரித்தன. கடந்த நான்கைந்து வருடங்களாக மிகுந்த சிரமத்துடன் வாழ்ந்துகொண்டிருக்கிறோம். இதற்கான முக்கிய காரணம் இந்த இழப்புதான். இதிலிருந்து அவனாலும் கரையேற இயலவில்லை. பிறகு, திரைப்பட வாய்ப்பும் கிடைக்கவில்லை. சில சீரியல்கள் செய்தான். காலம் விரயமானதுதான் மிச்சம். மிகக் குறைந்த அளவிலான பலன். இப்போது வீட்டிலிருந்து தையல் வேலை பார்க்கிறான்.

என்னை இது பெரும் மன வேதனைக்குள்ளாக்கி விட்டது. என் கை வழியாக பலகோடி ரூபாய் வந்து போயிருக்கிறது. அதற்கெல்லாம் நான் வருத்தப்படவில்லை. இறை நியதியென்றே கருதினேன். இப்போது என் மகன் உழைத்துச் சம்பாதித்த காசும் போய்விட்டது. எங்காவது ஒரு சென்ட் நிலம் வாங்க வேண்டுமென்றிருந்த ஆசையும் கருகிப் போய்விட்டது.

இதைப் பற்றி யோசிக்கும்போது மனதில் இடியேற்றதுபோலொரு சிந்தனை. சொந்தமாக உழைத்துச் சம்பாதித்தக் கொஞ்சம் காசு போனதுமே உனக்கு வலிக்கிறது. நீ இதுவரை மகிழ்ச்சியுடன் திருடிய பணத்தையெல்லாம் பறிகொடுத்தவர்கள் எவ்வளவு வேதனையை அனுபவித்திருப்பார்கள். அதன் காரணமாக நீ சம்பாதித்து வைத்திருக்கும் பாவங்கள் கொஞ்ச நஞ்சமா?

இதற்காக தெய்வம் என்னையல்லவா தண்டிக்க வேண்டும்? உண்மைதான். ஆனால், நீ யார்மீது அதிகம் அன்பு செலுத்துகிறாயோ அவன் தண்டனைக்குள்ளாகும் போதுதான் வலியை நீ அதிகமாக உணர்கிறாய். செய்து குவித்தப் பாவங்களுக்கான தண்டனையை இந்த

ஜென்மத்திலேயே நீ நூறு மடங்கு அதிகம் அனுபவித்தாக வேண்டும். கதியற்ற நிலையில் ஏற்பட்ட அந்தப் பேரிழப்பின் தாக்கத்திலிருந்து விடுபட இயலாமல் இன்றும் நான் கையறு நிலையில் உழல்கிறேன். செய்த பாவங்கள் எல்லாம் என்னைச் சுற்றி நின்றுப் பரிகசிக்கின்றன. தன்னுடைய கர்மத்தை நிறைவு செய்த விதியும் கை கொட்டிச் சிரிக்கிறது. குனிந்தத் தலையுடன் இதையெல்லாம் ஏற்கிறேன்; ஏற்றாக வேண்டும். வேறு வழியில்லை. ஆனால், என்னைப் பிடித்து நிறுத்தும் என் மகன், அவனுடைய களங்கமில்லாத மனைவி, அவர்களது கைக்குழந்தை . . .

## 85 - மதம்

என்னுடைய மதமேது? எனக்கே தெரியாது. கேரளத்தின் மூன்று முக்கியமான மதங்களையும் சேர்ந்தவன் நான். என்னுடைய பிறப்புக்குக் காரணமான தாயும் தந்தையும் இந்துக்கள் என்பதால் நானும் இந்து. மனைவி மக்களின் பாதுகாப்பை முன்னிறுத்தி என்னை இஸ்லாத்திற்கு மாறச் சொன்னார்கள். சரி, அப்படியே செய்வோம். கேடுகெட்ட வாழ்க்கையிலிருந்து விடுதலைபெற வேண்டுமென்றால் கிறிஸ்தவத்தில் சேர வேண்டும் என்றார்கள். பெந்தெகொஸ்தேவில் சேர்ந்தேன். பைபிள் படித்து சகோ. ஆனேன். உண்மையில், வாழ்க்கையில் மதங்களுக்கு என்ன முக்கியத்துவம் இருக்கிறது? மதங்கள் அனைத்தும் மரணத்தை முன்னிறுத்தி நம்மை அவர்களுடன் பிணைத்து நிறுத்துகின்றன. எங்களை மறுத்தால் எதிர்காலத்தில் மய்யவாடியில் உனக்கு இடம் கிடைக்காது. உனக்கு மட்டுமல்ல, உன்னுடைய சந்ததியினருக்கும் கிடைக்காது. நீயோ உன்னுடைய தாய் தகப்பன்களோ செத்தால் கரயோகத்திலிருந்து ஆட்கள் வரமாட்டார்கள். பொது மய்யவாடிக்குப் பிந்தைய இவர்களது வாதங்கள் பொருளற்றவையாகப் போய்விட்டன.

கொல்லத்தில் பெந்தெகொஸ்தேவினருக்கு தனி மய்யவாடி வேண்டுமென்ற கோரிக்கையை முன்வைத்து பொது மயானத்தில் அவர்களுக்கென்று கொஞ்சம் இடம் ஒதுக்கீடு செய்து கொடுக்கப்பட்டது. அவர்களை மட்டும்தான் அங்கே அடக்கம் செய்வார்கள். அந்த இடத்தை வெட்டித் திருத்திச் சரியாக்கி எடுத்தவர்களில் நானுமொருவன். எனக்கு வேண்டுமென்றால் அங்கே இடமிருக்கிறது.

என்னுடைய மரணம் எப்படி நிகழ வேண்டும்? எனக்குள் எதிர்பார்ப்புகளோ தயக்கங்களோ இல்லை. சாக்கடையில் விழுந்துச் செத்தாலும் சந்தனத்தில் எரியூட்டினாலும் கடைசியில் மண்தான். இயல்பான முறையில் இறந்தால்? என்னுடைய மனைவி தூங்கும் மய்யவாடியாக இருந்தால் நல்லது. நிர்ப்பந்தமில்லை. அவளுடனான என் கடமையை நிறைவு செய்வதற்காக அல்ல. தன்னுடைய வாழ்க்கையை எனக்காக அர்ப்பணித்தவள் அவள். மனைவியை அனுசரிக்காத ஒவ்வொரு கணவனுக்கும் என்னுடைய அனுபவங்கள்

முன்னறிவிப்புகள். அனுசரணை மனதிற்குள்ளிருக்கிறது. இன்றில்லாவிட்டால் நாளை நான் அனுசரணையாக நடந்துகொள்வேன் என்று சொல்லும் ஒவ்வொரு கணவனுக்கும்.

அவளுக்குச் சிறு அளவிலான நிம்மதியைக்கூட என்னால் கொடுக்க முடியவில்லை. அவள் தூங்கும் பள்ளித்தோட்டத்தில் அடையாளத்திற்காக ஒரு கல்கூட வைக்கவில்லை. கூடாதென்று சொல்லிவிட்டார்கள். இருந்தாலும் நான் அவளது சமாதிக்கு அடிக்கடிச் செல்வேன். ஏதாவதொரு நோக்கத்தை முன் வைத்து பிரார்த்தனை செய்வேன். அடக்கம் செய்யப்பட்ட இடத்தில்தான் ஆன்மா இருக்குமா? இல்லாமலும் இருக்கலாம். ஆனால், அந்த நினைவுகளில் உருவாகும் வலிதான் அன்பு. அமைதி. அதற்காகவே நான் அங்கே போனேன். முகம்மது நபியை அடக்கம் செய்த இடத்தில் அடையாளங்கள் எதுவும் வைக்கப்படவில்லையாம். வாழ்ந்த மண்ணில் எந்த அடையாளமும் கூடாது. இன்று நான் பிரார்த்திக்கும் கடவுளுக்கும் அடையாளமில்லை. என்னுடைய இறையியலின் பிரார்த்தனையை நான் பெந்தெகொஸ்தே முறையில் கை கொண்டிருக்கிறேன். மனதிற்கு அமைதி கைவர வேண்டும். அவ்வளவுதான். மிக மோசமான அனுபவங்களின் பின்னணியில் இது அவ்வளவு எளிதாகக் கிடைத்து விடுமா? நினைவுப் போராட்டத்தின் தொடர் பிணைப்புகளில் மனம் சிக்கிக்கொள்கிறது. மறுபிறவியில் எனக்கு நம்பிக்கைக் கிடையாது. ஒரு பிறவியில் செய்ததை மறு பிறவியில் அனுபவிப்போம் என்றிருக்கவும் வழியில்லை. இந்தப் பிறவி மட்டும்தான். ஜனனமும் மரணமும் ஒரே பிறவியில் நிகழ்ந்து முடிந்து விடுகிறது. மனதிற்குள்ளும் இது தினமும் நிகழ்ந்துகொண்டுதான் இருக்கிறது. மனம்தான் அனைத்துக்கும் உறைவிடம். நாம் அழும்போது மனச் சாட்சியும் சேர்ந்து அழுகிறது. மனம்தான் கடவுள். ஆகவேதான் அது பச்சாதாபம் கொள்கிறது. செய்த பாவங்களை இந்த ஜென்மத்தில் அனுபவித்துதான் தீர வேண்டும். ஒரு எறும்பைக் கொன்றால் அதற்கிணையான சில உயிர்கள் என்னையும் தின்றிருக்கும். என்னை அக்னிக்கிரையாக்கினால் என்னுடலின் சிறு அம்சமாவது அவற்றின் வயிற்றுக்குள் போகும். இப்படி, வடிவமைக்கப்பட்டதால்தான் உலகம் நிலைபெற்று வருகிறது. இதுதான் விதியின் சுழற்சி. அனுபங்கள்தான் என்னுடைய கடவுள். அனுபவங்களிலிருந்து எதையும் கற்றுக்கொள்ளாத நான் கடவுள் மறுப்பாளனாக ஆனேன். எனக்கு நியாய உணர்வு கைவந்தபோது ஒரு எறும்பைக் கூட வேதனைப்படுத்தாமல் வாழ்ந்துவிட வேண்டுமென்று ஆசைப்பட்டேன்; நடக்கவில்லை. எப்போதுமே என்னையும் மீறிய ஏதோவொன்று செயல்பட்டது. முன்பே

தீர்மானிக்கப்பட்ட ஒன்றுதான் வாழ்க்கை. ஏற்கனவே ஒருவர் எழுதி வைத்த என் கதை. உண்மையிலேயே விதியின் கையில்தான் அதன் தலையெழுத்துப் பிரதி. ஏதோ இதை நானே எழுதுவதாக நினைத்திருக்கிறேன்.

முன்பு கேள்விப்பட்ட கதையொன்று. ஒரு ஞானி நடந்துபோய்க் கொண்டிருக்கும்போது ஒரு மண்டையோட்டை சிறுவர்கள் கால்களால் தட்டி விளையாடிக்கொண்டிருப்பதைக் காண்கிறார். மரணித்துப்போன மனிதரை இழிவுபடுத்துவதைப் போன்ற விஷயம். ஞானி அந்த மண்டையோட்டை கையில் எடுத்துக்கொள்கிறார். தன்னுடைய ஞானதிருஷ்டியால் அவர் அதில் எழுதியிருந்ததை வாசித்துப் பார்க்கிறார். இதுவரை பட்டதல்ல பாடு, இனியும் படவேண்டியதிருக்கிறது. இவனைத் தொட்டவர்களும் அனுபவிப்பார்கள் என்று எழுதியிருந்தது. ஞானிக்குப் பயமேற்பட்டு விட்டது. அவர் அதை கடலில் வீசியெறிந்தார். அது, கடலை வேடிக்கைப் பார்க்க வந்திருந்த ஒரு மந்திரவாதியின் காலடியில் விழுந்தது. அவன் அதை எடுத்துக்கொண்டு போய் தன்னுடைய மந்திரவாதத்திற்குப் பயன்படுத்துவதற்காக உரலில் போட்டுப் பொடித்து அந்த ஞானியின் மனைவிக்கே கொடுத்தான். தன்னுடைய கணவன் தேசாந்திரியாக அலையாமல் குடும்ப வாழ்க்கையில் ஈடுபடுவதற்கான மாயப்பஸ்பம் என்று சொல்லி. மண்டை யோட்டுத் தூளை அவள் பாலில் கலந்து தன்னுடைய கணவனுக்குக் கொடுத்தாள். ஞானியல்லவா? உள்ளே போனதும் அவருக்குப் புரிந்துவிட்டது. அவர் அதை வாந்தியெடுத்து வெளியேற்றினார். இதுதான் விதி. ஞானிக்கும் விழுந்தது அடி. மண்டையோடும் தன்னுடைய விதியை அனுபவித்தது.

போலீஸ் பாதுகாப்பு: மதம் மாறி இஸ்லாத்திற்குப் போனதால் என்னுடைய உறுப்புகளில் எதுவும் அதிகரிக்கவுமில்லை; குறையவுமில்லை. இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டது தொடர்பாக, ஜமாஅத் கத்தீபும் முல்லாவும் உறுப்புப் பரிசோதனை செய்ய வந்தார்கள். இந்துவோ முஸ்லிமோ அல்லாத கபீர்தாசின் இறுதிச் சடங்கை எந்த முறைப்படி செய்ய வேண்டுமென்ற விஷயத்தில் விவாதம் எழுந்த ஒரு கதையைக் கேள்விப்பட்டிருக்கிறேன். கடைசியில் உடலின்மீது அணிவிக்கப்பட்டிருந்த அங்கியை நீக்கியதும் அந்த இடம் சூன்யமாக இருந்ததாம். மனிதம்தான் முக்கியம். மதத்திற்கு அதற்குரிய இடத்தை மட்டுமே அளித்தால் போதும்.

உறுப்புப் பரிசோதனை நடத்தியதில் என்னுடைய உறுப்பு சுன்னத் செய்தது போலிருந்தது. சுன்னத் செய்யவில்லை என்றால் உறுப்பின் தலைபாகம்

தோலால் மூடப்பட்டிருக்கும். என்னுடையது அப்படியில்லை.

"எங்க போய் பண்ணிக்கிட்டே?" என்று கேட்டார் முல்லா.

"மெடிக்கல் காலேஜ் ஆஸ்பத்திரியில" என்று பொய் சொன்னேன்.

அதிகமான பாலியல் தொடர்புகளின் காரணமாக இப்படியாகும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். சிறுவயதிலேயே ஆரம்பித்த தொடர்புகள். நிறைய சேச்சிமார் இதை வைத்துதான் வித்தைக் கற்றுக்கொண்டார்கள். இப்படி, ஏற்கனவே 'எல்' போர்டு வைத்திருந்ததால் தவிர்க்க முடியாத கட்டத்தில் சேதாரமில்லாமல் தப்பித்தேன்.

பொன்னானியில் போய் தொழவும் மற்ற விஷயங்களும் படிக்க வேண்டும்.

"எனக்குத் தொழத் தெரியும். எல்லா மதங்களைப் பற்றியும் ஓரளவு தெரியும். ஜெயிலில் படித்தேன். இஸ்லாத்தைப் பற்றியும் தெரியும். இதைப் பற்றி இன்னும் அதிகம் தெரிந்துகொள்வேன்." (இதற்கான ஓய்வு நேரங்கள் ஜெயிலில் நிறையவே கிடைக்கும் என்றும் மனதிற்குள் நினைக்கொண்டேன்.)

இப்படியாக நான் முஸ்லிம் ஆனேன். எதிலும் அதைப் பற்றிய விதிகளைப் படித்து, பிறகு அதை வியாக்கியானம் செய்து பார்ப்பது என்பது என்னுடைய வழக்கம். அது, மதமாக இருந்தாலும்.

கலப்புத் திருமணத்தில் பிறக்கும் குழந்தைகளுக்குப் பெரிய அளவில் சலுகைகள் கிடைக்கும். எல்லாவற்றிற்கும் மேலாக, தம்பதிகளுக்கு போலீஸ் பாதுகாப்பிருக்கிறது என்ற செய்திதான் என்னை மிகவும் கவர்ந்தது. இப்படியொரு தகவல் கிடைத்த சுவாரஸ்யத்தில் இருக்கும்போதுதான் மனைவி வீட்டார்களின் நிர்பந்தம். மகனைப் பள்ளியில் சேர்க்க வேண்டும். தொடர்ந்து தொந்தரவு செய்ய ஆரம்பித்தார்கள்.

"இனி என்னைத் தொந்தரவு செய்தால் பிரச்சினையாயிடும்" என்றேன். மறுநாள் தைக்காடு வழியாகப் போகும்போது கமிஷனர் ஆஃபீசைப் பார்த்ததும் உற்சாகம் தோன்றியது. அந்த இடத்தில் வைத்தே ஒரு புகார் மனு எழுதினேன்:

"நான் வசித்து வருவது சுலைமான் தெருவில். கலப்புத் திருமணம்

செய்துகொண்ட என்னை வாழவிட மறுக்கிறார்கள். பயங்கரமான மிரட்டல்கள் இருக்கிறது. நான் கொலை செய்யப்படலாம்."

கமிஷனர், போலீசாரை அனுப்பி விசாரணை செய்தார். "சுலைமான் தெருவின் அக்கம்பக்கங்கள் பிரச்சினைக்குரிய பகுதிகள்தான் சார்."

கமிஷனர், என்ன வேலை பார்க்கிறீர்கள் என்று கேட்டார். எல்லா வேலையும் செய்வேன் சார் என்றேன். சரி, இரண்டு போலீஸ்காரர்களை உங்கள் பாதுகாப்புக்கு அனுப்பி வைக்கிறேன் என்றார். மனைவி பார்க்கும்போது வீட்டின் முன்னால் இரண்டு போலீஸ்காரர்கள் நிற்கிறார்கள். "என்ன ஏதாவது பிரச்சினையா?" என்று கேட்டாள்.

"சும்மா. இது என்னோட பாதுகாப்புக்காக . . . இனிமேல் யாரும் மகனை பள்ளியில் சேர்க்கச் சொல்லி என்னை உபதேசிக்க வரமாட்டாங்க. அதுக்காகத்தான் போலீஸ் பாதுகாப்பு. அவங்க சும்மா அங்கயே நிக்கட்டும்டீ. சுவாரஸ்யமாக இருக்கும்" என்றேன்.

மைத்துனனும் பக்கத்து வீடுகளிலுள்ள ஒன்றிரண்டு பேரும் சேர்ந்து மகனுடைய விஷயத்தைப் பேச வந்ததும் நான் போலீஸ்காரர்களைக் கை காட்டி அழைத்தேன்.

"இதோ, இவங்க என்னை வலுக்கட்டாயமாக இஸ்லாத்தில் சேர்க்க வந்திருக்காங்க." வேடிக்கையாகவே சொன்னேன். போலீஸ்காரர்கள் சீரியஸாக எடுத்துக்கொண்டார்கள்.

"இது எங்க பிடியில நிக்கிற விஷயமில்லை. அதனால, நீங்க எல்லாரும் நாளைக்கு கமிஷனர் ஆஃபீசுக்கு வந்து கமிஷனரைப் பாத்து பதில் சொல்லணும்" என்று சொல்லி பெயரையும் முகவரியையும் குறித்துக்கொண்டார்கள்.

மனைவி கதற ஆரம்பித்தாள். வந்தவர்கள்: "ஐயோ எங்களை போலீசை வெச்சிப் பிடிக்கிறானே" என்றார்கள். மச்சினன்களும் அண்டை அயலார்களும் வேலியின் பின் வந்து நின்றார்கள்.

நான் சொன்னேன்: "சரி, நாளைக்கு நீங்க யாரும் போகவேண்டாம். ஒரு ஐம்பது ரூபாயும் ரெண்டு எலுமிச்சம்பழ ஜூசும் சிகரெட்டும் வாங்கிக்கொடுத்து அவங்களைப் போகச்சொல்லிடுங்க."

"சொன்ன உடனே போயிடுவாங்களா?"

என் பின்னால் போலீஸ்காரர்களும் வந்துகொண்டிருக்கிறார்கள். பாதுகாப்பு அல்லவா? நான் சொன்னேன்: "கமிஷனர் ஆ◌ஃபீசில போய் நான் புகாரை வாபஸ் வாங்கப் போறேன். நீங்க போகலாம்."

"அது சரி! முதல்ல நீ போய் புகாரை வாபஸ் வாங்கிட்டு வா. பிறகு, பாத்துக்கலாம். அதுவரைக்கும் நாங்க உங்கூடதான் இருப்போம்."

நான் புகாரை வாபஸ் பெற்றேன். போலீஸ்காரர்கள் போய்விட்டார்கள். யோசித்துப் பார்க்கும்போது மதம் மாறுவதுதான் நல்லதென்று பட்டது. திருடனாக இருந்தும் என்மீது சிறு அளவிலாவது கருணையுடன் நடந்துகொள்வது மனைவியின் உறவினர்கள்தான். நான் ஜெயிலில் கிடக்கும்போது மகனையும் மனைவியையும் நல்லபடியாகக் கவனித்துக்கொள்வதும் அவர்கள்தான். நாங்கள் இப்படி எதிலும் ஒட்டாமல் இருந்தால் குடும்பத்தை ஊரிலிருந்து விலக்கி வைத்து விடுவார்கள். இந்தப் பயம்தான் தொடர்ந்து இவர்கள் தொந்தரவு செய்வதற்கான காரணம்.

மட்டுமல்ல, என் மனைவியின் வாப்பா முடியாத நிலையிலிருப்பவர். அன்றெல்லாம் ஜமாஅத்திலிருந்து விலக்கினால் விலக்கியதுதான். பணமிருந்தால் எந்த ஜமாஅத்தாக இருந்தாலும் விலக்கை ரத்து செய்துவிடலாம். இவர்களிடம் அதற்கான பண வசதியில்லை. இவர்கள் தனிமைப்பட்டு விடக்கூடாது. இப்படியாக நான் முஸ்லிமாக முடிவு செய்தேன்.

ஜமாஅத்தார்களும் மனைவியின் எல்லா உறவினர்களும் வந்தார்கள். சான்றிதழ் தந்தார்கள். கொல்லம்காரன் எம். அப்துல் சலிம். போலீஸ் குறிப்புகளில் மணியன்பிள்ளை என்ற சலிம் என்றானது. ஆனால், எந்த மத நிறுவனங்களின் சட்ட திட்டங்களுக்குள்ளும் நான் ஒடுங்கிவிடவில்லை. மதத்திற்குள் ஒடுங்கிவிட்ட ஒருவன் மனிதனாக இருப்பது எப்படி? நான் இந்துவாகப் பிறந்தேன். இன்றும் நான் கோயிலுக்குப் போவதுண்டு. முஸ்லிமாக மாறி தொழ ஆரம்பித்தேன். பெந்தெ கொஸ்தேவாகி கிறிஸ்தவ ஆலயத்துக்குப் போனேன். மதமும் சமூக விலக்குகளும் யேசுதாஸ்போன்ற பெரிய மனிதர்களுக்கு மட்டுமே பிரச்சினையாக இருக்க முடியும். என்னைப் போலுள்ள விஷக்கிருமிகள் எங்கிருந்து எங்கே போனால் யாருக்கு என்ன? இப்படி எவ்வளவோ மக்கள் இருக்கிறார்கள். அந்தந்த சூழ்நிலைக்குள் பொருந்தி, மனதின் அவ்வப்போதைய தூண்டுதல்களுக்கேற்ப நம்பிக்கை

வைத்திருப்பவர்கள். சாவதுவரைக்கும் வாழ வேண்டும். இதுதான் தலையாயப் பிரச்சினை. இதற்கான போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும் ஏழைகளுக்கேது மதம்? பணக்காரர்களுக்கு கையிருப்பு எலும்பில் குத்தும்போது ஏற்படுகிற அவஸ்தையும் ஒருவருக்கொருவர் அடித்துக்கொள்ளவும்தான் மதம்.

## 86 - பெந்தெகொஸ்தே

நான் பெந்தெகொஸ்தே சபையில் சேருவதற்கான காரணம் என்னுடைய நெருங்கிய நண்பனான பிரசன்னன்தான். எனது எல்லாத் துயரங்களையும் பலவீனங்களையும் குற்ற வாசனைகளையும் அறிந்தவன். முன்பு, என்னால் எதுவுமே செய்ய முடியாத ஒரு சூழ்நிலையில் மகனை தன் மகன்போல் கொஞ்சநாட்கள் இவன்தான் கவனித்துக்கொண்டான். ஒரு தடவை நான் ஜெயிலிலிருந்து வந்த காலம். மனைவியும் குழந்தையும் இருக்கிறார்கள். குடும்பச் சொத்தில் கிடைத்தப் பங்கில் குடிசைக் கட்டித் தங்கியிருந்தேன். பங்கில் கிடைத்த ஒரு ஷெட்டை பாம்பளியன் என்பவனுக்கு சாயாக்கடை நடத்துவதற்காகக் கொடுத்திருந்தேன். இதுதான் அப்போதுள்ள ஒரே வருமானம்.

திருடப் போகாத காலகட்டம். இரவில் தூங்குவதால் பகலில் தூக்கமில்லை. பிரசன்னன், ரமேசன் போன்ற நண்பர்கள் வருவார்கள். குலாம் பரிசு விளையாடுவோம். கொல்லம் ஈஸ்ட் போலீஸ் ஸ்டேஷனில் உதவியாளனாகவும் போவதுண்டு. சாயங்காலம் பெரும்பாலும் நல்ல போதையில் வருவேன். ஸ்டேஷனில் இது தாராளம் கிடைக்கும். இரண்டு சொட்டு போதைக்காக ஏங்கி நிற்கும்போது அன்பார்ந்த சில போலீஸ்காரர்கள்: "என்னடா சோர்ந்துபோய் நிக்கிறே?" என்று கேட்பார்கள்: "சே, ஒண்ணுமில்லை சார்" என்பேன். "காலையில இன்னும் போதை போடலைபோலிருக்கு. சரி, இந்தா சாவி, அயிட்டம் தொண்டி அறைக்குள்ளே இருக்கு" என்பார்கள்.

தொண்டி அறைக்குள், பிடிபட்ட பொருட்களுடன் நிறைய ஸ்பிரிட்டும் இருக்கும். அளவெல்லாம் கிடையாது. ஒரு மொந்தையும் இருந்தது. அப்படியே மொண்டுக் குடிப்பேன். சில நேரங்களில் குப்பியில் அடைத்துக்கொண்டு வந்து நண்பர்களுக்கும் கொடுப்பேன்.

இரவில் சேரூர் தோப்பில் உட்கார்ந்து குடித்துக் கொண்டிருக்கும்போது சில நேரங்களில் போலீஸ் வேன் வரும். திருடனாக இருக்கும்போதும் ஸ்டேஷன் ஆளாக இருக்கும்போதும் தெரிந்த போலீஸ்காரர்கள் இந்த வழியாக வரும்போது வண்டியை நிறுத்துவார்கள். "மணியன்

இல்லையாடா அங்கே?" என்று கேட்பார்கள். வேன் சத்தம் கேட்டதும் கூட இருக்கும் நண்பர்கள் ஓட முயற்சி செய்வார்கள். பரந்து விரிந்து கிடக்கும் பகுதி. போலீஸ்காரர்கள் தொலைவிலிருந்தே கவனித்து விடுவார்கள். நான் முதலிலேயே சொல்லி வைத்திருப்பேன். போலீஸ் வந்தால் ஓடக்கூடாது. ஏனென்றால் உங்களுடன் ஒரு திருடனுமிருக்கிறான். திருடினாலும் திருட்டை நிறுத்தியதாகச் சொன்னாலும் திருடன் என்றும் திருடன்தான். பங்கு பெற்றதாகச் சொல்லி உங்களையும் உள்ளே தள்ளி விடுவார்கள்.

வண்டியை பிரேக் போட்டு நிறுத்தும்போது என்னைத் தெரிந்த ஒரு போலீசாவது இல்லாமலிருக்க மாட்டார்கள். "யாருடா அவன்?"

நான் பக்கத்தில் செல்வேன்: "நான்தான் சார், மணியன்பிள்ளை."

"தண்ணியடி நடக்குதா?"

"ஆங் . . . கொஞ்சம் . . ."

"நாளைக் காலையில ஸ்டேஷனுக்கு வா. தூங்கிடாதே" என்று சொல்லிவிட்டுப் புறப்படுவார்கள்.

இப்படியாக போலீசார் தருவதும் பிற வழிகளில் கிடைப்பதுமாக இரவு பகல் என்றில்லாமல் குடியில் மூழ்கிக்கிடந்த காலம்.

உடல் மிகவும் மெலிந்துபோனது. ஒருநாள் ஸ்பிரிட் ஊற்றிக்கொண்டிருக்கும்போது பிரசன்னன்: "ஒரு கிளாஸ் குறைவா ஊற்றினால் போதும்" என்றான்.

"ஏண்டா?"

"நான் தண்ணியடிக்கிறதை நிறுத்திட்டேன்."

"அய்யய்யோ, இப்படியான ஒரு விபத்தில போய் எப்படிடா சிக்கிட்டே?" என்று கேலி செய்தோம். அன்று கம்பெனிக்கு பிரசன்னன் இல்லாததால் சுவாரஸ்யமுமில்லை.

"பொண்டாட்டி சொன்னாள்னு தண்ணியடிக்கிறதை நிறுத்த உனக்கு வெட்கமா இல்லையாடா?" என்றெல்லாம் கேலி செய்தோம்.

ஒருநாள் தனியாகச் சந்தித்தபோது பிரசன்னன் சொன்னான்: "இனி, நல்லவனாக வாழணும். அதுக்காக நான் பெந்தகொஸ்தேவில சேர்ந்துட்டேன்."

"எனக்கும் தண்ணியடிக்கிறதை நிறுத்தணுமேடா" என்றேன்.

இப்படியாக இரவிபுரம் பாலத்தைத் தாண்டி, கடற்கரையிலுள்ள ஒரு சிஸ்டரின் வீட்டுக்கு பிரசன்னன் என்னை அழைத்துச் சென்றான். சிஸ்டரின் பெயர் டயானா. ஒரு வீட்டையே கடவுளுக்கென்று காலி செய்து வைத்திருந்தார்கள். ஞாயிற்றுக்கிழமைகள் தோறும் அங்கே ஒரு பாஸ்டர் வருவார்.

அவர் என்னிடம் கேட்டார்: "விசுவாசம் இருக்கா?"

"அப்படி நினைச்ச உடனே விசுவாசம் வர்றதில சிக்கலிருக்கு. நான் ஞாயிற்றுக்கிழமைதோறும் வர்றேன். மற்ற நாட்களில போலீஸ் ஸ்டேஷன்ல வேலையிருக்கு."

அப்படியாக ஞாயிற்றுக்கிழமை காலை முதல் இரவுவரைக்கும் நானும் பிரசன்னனும் அங்கேயே இருந்தோம். மற்றவர்கள் பிரார்த்தனை முடிந்து போய் விடுவார்கள். நாங்கள் ஆத்மார்த்தமாகவே அணுகினோம். மிச்ச நேரங்களில் வீட்டின் அருகிலுள்ள இடங்களை சுத்தம் செய்கிற வேலையில் ஈடுபட்டோம். மதில் சுவரினுள் விசாலமான இடமென்பதாலும் டயானா சிஸ்டருக்கு கடவுளைத் தவிர வேறெதிலும் ஆர்வமில்லை என்பதாலும் வேலைகள் நிறையவே இருந்தன.

கொஞ்ச நாட்களில் என்னையறியாமலேயே குடிப்பது குறைந்துபோய் விட்டது. விசுவாசத்தின் பலன். மதம் எதுவாயினும் மனம்தான் கடவுள். ஒருநாள் நான் டயானா சிஸ்டரிடம் சொன்னேன்: "சிஸ்டர், எனக்கு இதோடு முழுமையாக உடன்பட முடியும். என்னை முழுமையாக நான் கடவுளுக்கு அர்ப்பணிக்க நினைக்கிறேன்."

சிஸ்டர் சொன்னார்: "சரி, அதுக்காக போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகாமலிருக்க வேண்டாம். பிழைக்கவும் வேணுமில்லையா? நம்பிக்கையோட பிரார்த்தனை செய்தால் போதும். நீங்களாக மாற வேண்டாம். கடவுள் உங்களை மாற்றியெடுப்பார்."

ஆக, இது நடக்காத விஷயமென்று தெரிந்துபோய் விட்டது. கடவுளாலும்

மாற்ற முடியாத, சாத்தானின் சர்வாதிகாரத்திற்கு உட்பட்ட இடம் போலீஸ் ஸ்டேஷன். இரவில், போலீஸ் கிளப்பில் பாட்டில்களைத் திறந்து வைத்ததுமே அவர்கள் எனக்கான ஒதுக்கீட்டை எடுத்து வைத்து விடுவார்கள். போலீஸ்காரன், அதிகாரி, திருடன், கொள்ளைக்காரன் என்பதுபோன்ற பாகுபாடுகள் போதையின் முன் கிடையாதல்லவா? கூட உட்கார்ந்து குடிக்கச் சொல்வார்கள். நான் ஒருபோதும் இதற்கு உடன்பட்டதில்லை. நின்றபடியே குடித்து விடுவேன்.

அன்று நான் சொன்னேன்: "வேண்டாம் சார், நான் குடிக்கிறதை நிறுத்திட்டேன். பெந்தகொஸ்தேவில சேர்ந்துட்டேன்."

உடனே ஒரு கெட்ட வார்த்தை: "போ . . . பட்டித்தா . . . திருடனும் கொள்ளைக்காரனும் திருந்தி என்ன பண்ணப்போறீங்க? எங்க வேலையை இல்லாமலாக்கவா? குடிடா எடுத்து . . ."

குடிடா என்ற சொல் ஒரு உத்தரவுபோல் தொனிக்கும். கையில் வாங்கிவிடவே தோன்றும். இல்லையென்றால் அங்கிருந்து அடித்து விரட்டுவார்கள்.

சிஸ்டர் சொன்னார்: "நாங்க சகோதரனுக்காகப் பிரார்த்திக்கிறோம்."

"பலனில்லை சிஸ்டர். அது கடவுளைப் போய் எட்டாத இடம்."

நான் வெளியே வந்துவிடலாம். கடவுளா சாத்தானா என்பதை நானே முடிவு செய்துவிடலாம்தான். ஆனால், அதிகப்படியான பரீட்சைகளுக்காக சாத்தானிடம் என்னை ஒப்புக்கொடுப்பதில் பிரச்சினைகள் இருக்கின்றன. சில குறிப்பிட்ட வளாகங்களினுள் கடவுளை விடவும் நான்கு மடங்கு சக்தி சாத்தானிடம் இருக்கிறது. அதிலொன்று போலீஸ் ஸ்டேஷன். தங்களை ஒரு மனிதனாக உணர வேண்டுமென்றால் சுற்றுச் சுவரை விட்டு வெளியே வந்து நிற்பதுதான் போலீஸ்காரர்களின் வழக்கம். போலீஸ் ஸ்டேஷனில் எனக்குச் சில மன முரண்கள் தோன்ற ஆரம்பித்திருந்த காலம் அது. அதற்கான காரணத்தையும் சொல்லிவிடுகிறேன். ஈஸ்ட் ஸ்டேஷன் போலீஸ்காரர்களுக்காக நான் செய்யாத வேலைகள் கிடையாது. கூட்டிக் கொடுப்பதையும் போட்டுக் கொடுப்பதையும் தவிர எல்லாமே செய்திருக்கிறேன். கண்களை மூடிக்கொண்டு எல்லாமே செய்திருக்கிறேன். மனிதர்களில் பல தரப்பட்டவர்கள் இருப்பதுபோல் போலீஸ்காரர்களிலும் இருக்கிறார்கள். லாக்கப்பில் இருக்கும் கணவன்களைப் பார்க்க வரும் மனைவிகளை வளைத்துப் பிடிக்கும் ஒரு

பிரிவினரும் உண்டு. சிறு திருட்டுகள், வழிப்பறி போன்ற வழக்கமான தலைவேதனைப் பிடித்த வழக்குகளில் சிக்கிய கணவன்கள்தான் அதிகமும். "வீட்டுக்காரன் உள்ளே இருக்கானே, மற்ற விஷயங்களெல்லாம் எப்படிடீ நடக்கும்?" என்று நேரடியாகவே ஆரம்பிப்பார்கள். கேட்பவன் போலீஸ்காரன். போதாக்குறைக்கு கணவன் வேறு உள்ளே இருக்கிறான். என்னதான் உதை விழுந்தாலும் போலீஸ்காரர்களுடன் கொஞ்சம் நெருக்கமாகி விடவே கிரிமினல்கள் விரும்புவார்கள். ஆகவே, மனைவி போலீஸ்காரனுடன் நெருக்கமாகி விட்டாள் என்பதை அறிந்தும் பெரிய பிரச்சினைகளாக்காத கணவன்களும் இருக்கிறார்கள். போலீஸ்காரர்களை வரச்சொல்லி தேவைக்குக் கொடுத்தனுப்பிய சம்பவங்களும் பல இடங்களில் நடந்திருக்கின்றன. யூனிஃபாமுடன் வரச் சொல்லுவார்கள். ஊரிலுள்ளவர்களைப் பயமுறுத்துவதற்காக. ஒரு எஸ்ஐயைக் கற்பனை செய்துகொள்ளுங்கள். அவள் சொல்வாள்:

"சார் எனக்கொரு ஆசை. அதை உங்களால்தான் நிறைவேற்றி வைக்க முடியும்."

"என்னன்னுதான் சொல்லித்தொலையேண்டி."

"இந்த யூனிஃபாமை எனக்கொரு தடவைப் போட்டுப்பாக்கணும்."

"அதுக்கென்ன."

அவள் சீருடையிலும், சார் திகம்பர கோலத்திலுமிருக்கும் நேரம் பார்த்து வெளியே ஆட்கள் வந்து கூடி விடுவார்கள். ஏற்கனவே எழுதப்பட்ட திரைக்கதைதான். மகளிர் எஸ்ஐ கதவைத் திறப்பார். பிறகு, நடக்கிற விஷயங்களைச் சொல்லாமலிருப்பது நல்லது.

ஒருமுறை போலீஸ் கிளப்பில் வேலை பார்த்துக்கொண்டிருக்கும்போது ஒரு சர்க்கிள் சொன்னார்: "மணியன்பிள்ளை, ராத்திரி பத்துமணிக்கு கையிலொரு மஞ்சள் பேக்கும் சுரிதாருமிட்ட ஒருத்தி சின்னக்கடையில பஸ்சில வந்து இறங்குவா. நீ போய் அவளை அழைச்சிட்டு வரணும்."

நான் அழைத்து வரச் சென்றேன். இவளை நான் பார்த்திருக்கிறேன். முதல் நாள் வழக்கில் பிடிபட்டவனின் மனைவி.

ஊர்க்காடுகளில் மட்டுமல்ல, காவல் நிலையங்களிலும் யட்சிகளுண்டு.

ஒரு மகளிர் எஸ்ஐயின் குவாட்டர்சை நான் சுத்தம் செய்வதற்காகப் போயிருந்தேன். குவாட்டர்சிலுள்ள சின்னச்சின்ன ரிப்பேர்களை நான்தான் ஆள்வைத்துச் செய்து கொடுப்பேன். யாராவது என்னைப் பற்றி நல்ல வார்த்தைச் சொன்னால் உடனே சொல்வார்: "திருடனாக இல்லாமலிருந்தால் பரவாயில்லை."

இதற்குமுன் இப்படியில்லை. எப்போது எங்கே வைத்துப் பார்த்தாலும் கேலி செய்வார். "திருடனுக்கு ஏன் இவ்வளவு கௌரவம்?"

"திருடனுங்கள நீங்க காமெடியன்னு நினைச்சுட்டீங்களா?"

"ஒரு திருடனுக்கு ஆனாலும் இவ்வளவு கௌரவம் கூடாது."

"போலீஸ்காரங்களுக்கு ஏன் இவ்வளவு கௌரவம்?"

"நாங்க செய்யிற வேலைக்கு கௌரவம் தேவைதானே?"

"நாங்க செய்யிற வேலைக்கும் அது தேவைப்படுது. உங்களைப்போல பொறுப்பான வேலைதான் நாங்களும் பாக்குறோம்."

"போடா திருடா, அப்படியே போட்டுடுவேன் ஒண்ணு . . ." என்று சொல்லி கன்னத்தில் மெல்லத் தட்டுவார். ஏற்கனவே சொன்ன மனோபாவம்தான். திருடனோ அவனது ஆகிருதியோ அல்ல, அவனது ரகசியக் குணத்தையே பெண்கள் விரும்புகிறார்கள்.

இந்த விஷயங்களில் மேலும் விரிவாகச் சொல்ல வேண்டியதிருக்கிறது. ஆனால், வாசகர்களுக்கு நம்புவதா வேண்டாமா என்ற தடுமாற்றம் வந்துவிடும். உலகத்தில் நடக்கும் பற்பல ஆச்சரியங்களின் உண்மைத்தன்மையும் ஊசலாட்டத்திற்குரியதுதான். நல்ல போலீஸ்காரர்கள்மீது எப்போதுமே நான் மிகுந்த மரியாதை வைத்திருக்கிறேன். மனிதர்களிலுள்ள எல்லாப் பிரிவினரும்போல் இதிலும் நல்லவர்களும் மோசமானவர்களும் இருக்கிறார்கள். அதிகாரம் கையிலிருக்கும்போதுதான் அதைப் பயன்படுத்துகிற அவனது உண்மையான குணமும் வெளிப்படுகிறது. தன்கீழ் வேலை பார்ப்பவர்களையும் கீழ்த்தட்டிலுள்ள மக்களையும் ஒருவன் எப்படி அணுகுகிறான் என்பதை வைத்துதான் அவனை மதிப்பிட முடியும். இப்படியான பல நல்ல போலீஸ்காரர்களையும் நான் பார்த்திருக்கிறேன். இந்தப் புத்தகத்தில் போலீஸ்காரர்களைப் பற்றி நல்லதும் அல்லாததுமாக

நிறைய சொல்லியிருக்கிறேன். எல்லாமே நான் பார்த்த, கேள்விப்பட்ட சம்பவங்கள்தான். மோசமானவர்களைப் பற்றி சொல்லும்போதும் நல்லவர்களைப் பற்றிய எனது நினைவுகளில் சிறிதளவு களங்கமுமில்லை.

புதிதாக வருகிற எஸ்ஐகளும் சிஐகளும் என்னிடம் நல்லபடியாகவே நடந்திருக்கிறார்கள். மாறாக நிகழுவதற்கான எந்த சந்தர்ப்பத்தையும் நானாக ஏற்படுத்தியதுமில்லை. எப்போதுமே இப்படித்தான் நிகழும் என்ற கட்டாயமெதுவும் இல்லையல்லவா? என்றாவது ஒருநாள் வேறு மாதிரி நிகழவும் கூடும்.

புதிதாக ஒரு எஸ்ஐ வந்தார். வந்ததும் அவர் என்னிடம் கௌரவத்துடன் சொன்னார்: "நீ இப்படி இங்கே ஏடிசி விளையாடிட்டு நடந்தால் போதாது. திருடன்களைப் பற்றி தகவல்களைத் தரணும். அவங்க எங்கெல்லாம் போறாங்க, என்ன செய்யிறாங்க என்கிறதையெல்லாம் நீ ரகசியமாக கண்காணிக்கணும். முடியும்னா அவங்களோட நண்பனாகவும் நடிக்கணும். எல்லா விவரங்களையும் இங்க வந்து சொல்லணும்."

நான் மரியாதையுடன் சொன்னேன்: "மன்னிக்கணும் சார், அது என்னால முடியாத விஷயம்."

அவருடைய முகம் மாறியது. ஒரு திருடனைப் பொறுத்தவரைக்கும் எஸ்ஐ கடவுள் அல்லவா? கடவுளிடமா மறுத்துப் பேசுவது? அப்போதைக்குத் தகர்ந்து விழுந்த அவரது ஈகோ, இரு மடங்காக எழுந்தது. நான் தெளிவாகச் சொன்னேன்:

"போலீஸ்காரங்களோடும் திருடன்களோடும் ஒரே மாதிரி என்னால பாலன்ஸ் பண்ண முடியாது சார். ரெண்டு பக்கத்தில இருந்தும் குட்டு விழும். மட்டுமல்ல, எனக்கு உளவு பார்க்கிறதில விருப்பம் கிடையாது. அது போலீஸ்காரங்களோட வேலையே தவிர திருடனோட வேலையில்லை . . ."

அவருக்குக் கோபம் வந்தது.

"அதிகம் பேசுனேன்னா 110லே உள்ள தள்ளிடுவேன்."

"அதைச் செய்யுங்க சார்" என்றேன்.

"இனிமேல் என் கண் முன்னாலயோ இந்த ஸ்டேஷன்லேயோ உன்னை நான் பாத்துடக்கூடாது" என்றார்.

"வரமாட்டேன் சார்" என்றேன்.

கொஞ்ச நாட்கள் விலகியே இருந்தேன். என்றும்போல் காலையில் வருவேன். ஸ்டேஷன் காம்பவுண்டுக்கு வெளியே நின்றிருப்பேன். எனக்குத்தான் வேறு வேலை ஏது? இங்கிருந்து முழுக்க விலகி நின்றால் தேவையில்லாத சிந்தனைகள் மனதில் உருவாகும். இப்படியாக சில நாட்கள் போயின. ஒருநாள் போலீஸ் அசோசியேசன் ஆட்கள் வந்து சொன்னார்கள்: "நீ எங்க ஸ்டாஃபாக வரலாமில்லையா? கான்டீன் பொறுப்பை எடுத்துக்க. கான்ட்ராக்ட்காரருக்கும் இதுல சம்மதம்தான்."

இப்படியாக ஏடிசி வேலையிலிருந்து கான்டீன் பொறுப்பாளரானேன். ஆனால், அந்த எஸ்ஐ இருக்கும்போது ஸ்டேஷனுக்குள் நுழையமாட்டேன். வெளியே நின்று எல்லோருக்கும் சாயா வினியோகிப்பேன். கைதிகளுக்கும் இப்படித்தான். எஸ்ஐயும் ஒருமுறை கூப்பிட்டார். நான் போகவில்லை.

"வேண்டாம். சார் 110லே என்னைப் பிடிச்சு உள்ள தள்ளினா மூணு வருஷம் கிடக்க வேண்டியதாயிடும். நான் இப்ப நன்னடத்தை ஜாமீன்ல வேற இருக்கேன்" என்றேன்.

இந்த எஸ்ஐ என்னுடைய தூரத்து உறவினரும்கூட. இது அவருக்கும் தெரியும். ஸ்டேஷனுக்குள் நான் உறவுமுறையைப் பாராட்டிவிடக்கூடாது என்ற தாக்கீதாகவும் இதை எடுத்துக்கொள்ள முடியும். உதவி ஆய்வாளருக்கும் பெருந்திருடனுக்கும் இடையே என்ன உறவுமுறை வேண்டிக்கிடக்கிறது. இவையெல்லாம் பெரிய குடும்பத்தில் நாயராகப் பிறந்து விட்டதால் ஏற்பட்ட பிரச்சினைகள். ஏராளம் உறவினர்கள். எதிர்பாராத இடங்களில், ஏதாவதொரு பிராஞ்சில் என்று யாராவது இருப்பார்கள். என்னுடைய இந்த உறவுமுறை அவர்களுக்கெல்லாம் பெரிய அலர்ஜியாக இருந்தது.

ஆனால், இதில் வித்தியாசமான ஒருவர், டிவி. பிள்ளை எனும் விக்கிரமன் பிள்ளை. நான் பூஜப்புரை சென்ட்ரல் ஜெயிலில் இருக்கும்போது விக்கிரமன் அண்ணன் இங்கே வெல்ஃபேர் அதிகாரியாக பணியிலிருந்தார். பிறகு, கேரளத்திலுள்ள எல்லா ஜெயில்களுக்குமான ஒரே சீஃப் வெல்ஃபேர் அதிகாரியாக பதவி உயர்வு பெற்றார். நிறைய அதிகாரங்களுள்ள ஒரு ஸ்டேட் ஆஃபீசர். கிரிமினாலஜியில் பிஎச்.டியும் பல முதுநிலை படிப்புகளும் சட்டமும் பயின்றவர். இவர் ஒருமுறை.

இரண்டாயிரம் கைதிகளினிடையே வைத்துச் சொன்னார்:

"மணியன். என்னை அண்ணன்னு கூப்பிடுறான். முறைப்படி பார்க்கிறதா இருந்தால் நான் இவனை சித்தப்பான்னு கூப்பிடணும்."

அப்படியே அதிர்ந்துபோய் விட்டேன். வெறுமொரு திருடன் நான். அவருக்கு இதையெல்லாம் வெளிப்படையாகச் சொல்ல வேண்டுமென்ற எந்தத் தேவையுமில்லை. என்னுடைய நிலையையும் செயல்பாட்டையும் பற்றி நான் வெறுப்புடன் நினைத்துப் பார்த்தேன். பெரியவர்கள் முன்னிலையில் தான் உண்மையில் நம்மை சிறியவனாக உணர்கிறோம். அதிகாரத்தின் முன் அல்ல.

எங்களுக்கிடையிலான உறவு முன்னிலைப் பெறுமோ என்று எஸ்ஐ பயப்படுகிறார். மற்றொருவர் இதை வெளிப்படையாக அறிவித்துக்கொள்கிறார். பணி ஓய்வு பெற்ற விக்கிரமன் அண்ணன் பிறகு வஞ்சியூர் நீதிமன்றத்தில் வழக்கறிஞராகப் பணியாற்றினார். தன்னுடைய வாழ்க்கை சார்ந்து, குற்ற நடைமுறைச் சட்டங்கள் வழக்குகள் பற்றியெல்லாம் போதுமான அறிவு பெற்றிருந்த ஒருவன் இவரது குமாஸ்தாவாக சில காலம் பணியாற்றினான். பெயர், கே. மணியன்பிள்ளை. அது வேறு யாருமில்லை நானேதான். ஜெயில் அறிமுகத்தை வைத்து நிறைய கட்சிக்காரர்கள் இவரைத் தேடி வந்தார்கள். இதில், பெருமளவும் ஏழைகள்தான். அவருக்கு இதெல்லாம் ஒரு பிரச்சினையே இல்லை. அப்படியாக மாண்புமிகு நீதிமன்றத்தில் தஸ்தாவேஜுகளுடன் ஒரு திருடன் நுழையவும் வாய்ப்புக் கிடைத்தது. விதியின் வினோதங்கள்.

ஸ்டேஷனின் உள்ளேயும் வெளியேயும் இல்லாமல் கான்டீன் பொறுப்பாளனாக இருந்தேன். இந்தப் பொறுப்பை ஏற்பதுவரைக்கும் ஸ்டேஷனில் நான் சுதந்திரமாகவே திரிந்தேன். மூன்று வருடங்களாக போலீசாரின் எல்லாத் தேவைகளுக்கும் மணியன்பிள்ளை வேண்டும். சிஐ குவாட்டர்ஸ்முதல் கீழ் மட்டம் வரை. இதை நான் விருப்பத்துடன்தான் செய்தும் வந்தேன். திருடன்களைப் பொறுத்தவரைக்கும் இது மனநிறைவும் மகிழ்ச்சியும் தருகிற விஷயம். அதிகாரத்தின் எதிரில் குற்றவாளியாக இல்லாமல் நின்று கொண்டிருப்பதிலுள்ள மனஉவகை. நாம் நல்லவனாக வாழ்ந்துகொண்டிருக்கிறோம் என்ற திருப்தி. நேற்றைப் பற்றிய ஆறுதலும் மறுநாளைப் பற்றிய நிச்சயமுமிருந்தது.

எனக்குக் கிடைத்த அதிக உரிமையை எல்லா போலீஸ்காரர்களும்

அனுமதித்தார்கள் என்று சொல்ல முடியாது. சமூகம் என்றால் அதில் எதிர்கருத்துகள் இருக்கும், இருக்க வேண்டும். குறிப்பாக போலீசில். இதில் சில மனங்கள் சிக்கலை வார்க்கும் உலையாக இருந்தது. இதிலும் எனக்கு மிகுந்தச் சிக்கலை உருவாக்கியவர் ஒரு நாயர். முதலில் எனக்குத் தெரியாது. விசாரித்தபோது சகோதரியின் கணவரின் . . . என்று ஒரு உறவுத் தொடர்பிருப்பது தெரியவந்தது. இவர்தான் இதைக் குறிப்பிட்டு எஸ்ஐயிடம் என்னைப் போட்டுக்கொடுத்தவர். இவ்வளவு காலமும் ஒரு திருடன் போலீஸ் ஸ்டேஷனில் எந்த தகுதிகளுமில்லாமல் அதிகாரத்தையும் அனுகூலங்களையும் அனுபவித்திருக்கிறான் என்றால் ஏற்கனவே சொன்னதுபோல் விதியின் விளையாட்டுகளில் ஒன்றுதான். கீழ்மட்ட ஊழியர்களுடன் முரண்பாடு ஏற்படக் காரணங்களிருந்தன. நானும் கோள் மூட்ட வேண்டும். அலுவலகங்களில் பியூன்களாக வேலை பார்ப்பவர்களும் என்னைப்போல் பேசா மடந்தையாக இருப்பவர்களும் எதிர்கொண்டாக வேண்டிய பிரச்சினைகள்தான். இவர்களுக்கென்று தனித்துவமிருப்பதாக யாருமே நினைப்பதில்லை. ஒரு உதாரணம்:

ஈஸ்ட் ஸ்டேஷனிலுள்ள ஒரு போலீஸ்காரர். ரொம்ப அன்பானவர்தான். குடிப்பதற்கெல்லாம் தாராளமாக வாங்கித் தருவார். ஆனால், அவர் சொல்கிற கோள்களுக்குச் செவி சாய்க்க வேண்டும். "டேய், மற்றவனோட குவாட்டர்சில நீ போயிருக்கிறே இல்லையா? அவனுக்கும் பொண்டாட்டிக்கும் ஏதோ பிரச்சினையாமே?" அன்னைக்கு நீ இன்னார்கூட தண்ணியடிச்சேல்லே, அப்ப அவன் என்னைப் பற்றி ஏதாவது சொல்லியிருப்பானே?" "மற்றவன் மற்ற கேசில எவ்வளவு பணம் கையூட்டு வாங்கினான்? அவனோட லஞ்சப் பணத்தை நீதானே வாங்குவே?"

"உங்களுக்கான பணத்தையும் நான்தான் வாங்குறேன்" என்றேன். இன்னாரிடமிருந்து இவ்வளவு பணம் வாங்கி அதை இன்னாரிடம் கொடு என்று எந்தப் போலீஸ்காரன் சொன்னாலும் நான் செய்வேன்.

பதில் அவருக்குப் பிடிக்கவில்லை. "குதர்க்கம் பேசாதடா, நீ பெரிய புண்ணியவாளன்தான் தெரியும்." நாங்கள் குடித்துக்கொண்டிருந்தோம். சமதர்மம் உலாவுமிடம் என்பதெல்லாம் சரிதான். ஆனால், திருடன் பதில் சொன்னதும் சமதர்மம் உலாவப் போய்விட்டது, திருடனும் போலீசும் மிச்சம். போலீசாரின் மொத்த சமதர்மமும் இவ்வளவுதான். அதனால் என்ன? அவர் போலீசாக மாறினால் நான் திருடனாக மாறுவேன்.

நான் கோபத்துடன் சொன்னேன்: "சார், வேசியாக இருந்தால் நக்கவும்

முக்கவுமெல்லாம் வேணும். வேதனைப் படுத்துறவனையும் சேவகம் பண்ணணும். அதுதான் அவளோட தொழில். அப்படியொரு வேலையைத்தான் நானும் இப்ப செய்திட்டிருக்கேன். தேவை முடிஞ்சதும் ரெண்டுபேரும் ரெண்டு வழியில. கறி தின்னுட்டோம்னு சொல்லி யாராவது எலும்பைக் கையில கொண்டுட்டா திரிவாங்க? அதை அங்கேயே போட்டுட வேண்டியதுதான். நான் அதையெல்லாம் தூக்கிட்டுத் திரியறவனில்லை. நான் ஏதாவது செய்யணும்னா சொல்லுங்க, எனக்கு விருப்பமுள்ள விஷயமாக இருந்தால் செய்து தர்றேன், அவ்வளவுதான்." நான் எழுந்து நடந்தேன்.

மறுநாள் வந்தபோது: "சரி, விடுடா" என்றார்.

நான் சொன்னேன்: "நானும் அப்படிப் பேசியிருக்கக்கூடாது. பேசின அந்தத் தொனி சரியில்லை."

"ஆமா, பெரிய தொனி. போலீஸ்காரனோடவும் திருடனோடவும் தொனி ஒண்ணுதாண்டா. போலீஸ்காரன் சத்தமாச் சொல்றதை, திருடன் மெதுவாச் சொல்லுவான். இதுதான் வித்தியாசம்."

ஆள் நல்ல புரிதலுள்ள போலீஸ்காரர்தான் என்று தோன்றியது. சிலருக்கு இப்படித்தான், உள்ளில் சிறு மமதைகள் படிந்து கிடக்கும். அடி விழுந்ததும் இந்த மமதைகள் இளகிக்கொள்ளும். புரிந்துகொள்வார்கள். சிலரிடம் இளகிய மமதை மீண்டும் மூடிக்கொள்ளும். சிலர் வீழ்ச்சிகளில் தன்னைப் புடமிட்டுக்கொள்ள முயற்சிப்பார்கள். கர்ணனின் கவசகுண்டலம் போல், சிலருக்கு மமதையென்பது பிறவிக்குணம். அறியாமையின் உருக்கில் வார்த்தது. இவர்கள் பிறந்ததுபோல் அறியாமையுடனேயே மரணித்தும் விடுவார்கள்.

சில அரசு நிறுவனங்களில் வேலை பார்ப்பவர்கள் பாவப்பட்ட மக்களிடம் மிக மோசமாக நடந்துகொள்வார்கள். தன்கீழ் வேலை செய்பவர்களிடம் மோசமாக நடந்து கொள்ளும் மேலதிகாரிகளும் இந்தக் கேடுகெட்ட குணத்தின் உதாரணங்கள்தான். இதை விடவும் மிக மோசமான சில பிறவிகளுண்டு. பேராசைப் பிடித்த மருத்துவர்கள். இவர்களுக்கு இன்மையிலும் மறுமையிலும் கதி மோட்சம் கிடையாது. நோயால் துன்பப்பட்டு வருகிறவர்களிடம் இவர்கள் தங்களது கௌரவத்தையும் திமிரையும் அகங்காரத்தையும் காட்டுவார்கள். வேதனையின் துன்பத்தின் சாபத்தின் பலனையே இவர்கள் பணமாகச் சேர்த்து வைக்கிறார்கள். இதயமுள்ள எந்த மருத்துவராலும் பணம் சம்பாதிக்க இயலாது.

பைல்ஸ் ஆபரேசனுக்காக நான் மாவட்ட மருத்துவமனையில் இருக்கும்போதுள்ள ஒரு அனுபவம்: இரண்டு மூன்று நாட்களாக நான் அங்கேயே இருக்கிறேன். ஆபரேஷன் செய்வதற்கான எந்த அறிகுறிகளும் தென்படவில்லை. பாலும் பிரட்டும்கூடக் கிடைக்கவில்லை. அனஸ்தீஸியா டாக்டருக்கு நேரமில்லையாம். மகன் போய் அவரை தேடிக் கண்டுபிடித்து இருநூறு ரூபாய் கொடுத்தான். அவர் படுக்கை எண்ணையும் பெயரையும் குறித்து எடுத்துக்கொண்டார். மறுநாள் ஆபரேஷன் லிஸ்டில் சேர்த்துக்கொள்ளப்பட்டதாகத் தெரிய வந்தது. தரையில் கிடந்த எனக்குப் படுக்கையும் கிடைத்தது. இருநூறு ரூபாயும் இப்படியெல்லாம் செய்யுமென்ற விவரம் எனக்கு அன்றுதான் தெரியும். சில டாக்டர்களைப் பொறுத்தவரைக்கும் பணமும் மருந்துபோல்தான். தொடர்ந்து கொடுக்க வேண்டும். மறுநாளே டாக்டர் உதாசீனனாகி விட்டார். "நோயாளியின் ஆரோக்கியம் சரியில்லை. அனஸ்தீஸியா கொடுக்க முடியாது. மற்றொரு மருந்து தேவைப்படுது. விலை அதிகமாக இருக்கும். அதைக் கொடுத்துப் பார்த்த பிறகுதான் ஆபரேஷன் பண்ண முடியும். எழுதவா?" என்று கேட்டார்.

"எத்தனை ரூபாய் தேவைப்படும்?"

"முன்னூறு ரூபாய்."

மகனுக்கு அழுகை வந்தது. முப்பது ரூபாய்கூட கையில் இல்லை. எனக்கு அனஸ்தீஸியா வேண்டாம் என்றேன். சாயங்காலம் ஒரு நர்ஸ் வந்து கேட்டாள்:

"நீங்க டாக்டரை இன்னும் வீட்டில போய்ப் பாக்கலையா?"

நான் சொன்னேன்: "வேண்டாம். வலிதான் பிரச்சினைன்னா என்னால தாங்கிக்க முடியும்." இதையே டாக்டரிடமும் சொன்னேன்.

டாக்டரின் முகத்தில் எந்தப் பாவபேதமுமில்லை. மறுநாள் நான் தலையணையைக் கடித்துப் பிடித்தபடி குப்புறப் படுத்திருந்தேன். ஆபரேஷன் நடந்தது. கண்களிலிருந்து வெளியானது கண்ணீரா, தண்ணீரா என்பதில் எனக்கு சந்தேகமிருந்தது. வெறுமொரு இருநூறு ரூபாய் இல்லை என்பதற்காக வேதனையின் கொடுங்காற்றை அனுபவிக்கிறான் ஒரு மனிதன். அதைக் கொடுத்தவர்களுக்கு பிருஷ்டத்தை மரக்க வைத்து வலிக்காமல் ஆபரேஷன் நடக்கிறது. இதையெல்லாம் நினைக்கும்போதுதான் வலி மேலும் அதிகமாக இருந்தது. கேரளா

போலீஸ் உலக்கையால் உருட்டி, அடித்துச் சிதைத்த இந்த உடலிலிருந்து ஒரு சிறுதுண்டை வெட்டி எடுப்பதால் மட்டும் மணியன்பிள்ளைக்கு என்ன பெரிய வேதனை வந்துவிடப்போகிறது?

இந்த டாக்டரின் வீட்டில் நுழைந்து ஒரு ஆபரேஷன் நடத்த வேண்டுமென்று நினைத்துக்கொண்டேன். ஆனால், மகனின் கட்டுப்பாட்டில் வாழ்வதால் அடக்கிக்கொண்டேன். இவர்களுக்காகவாவது திருட்டுகள் இங்கே பாதுகாக்கப்பட வேண்டும்.

இப்படி, மற்றவர்களைத் தரம் தாழ்த்தி மதிப்பிடுகிற, தன்னை மகானாகக் கருதுகிற என்னுடைய தரத்தைப் பற்றியும் பலதடவை யோசித்திருக்கிறேன். புரிதலிலுள்ள பிரச்சினையில்லை. சொல்லிப் புரியவைக்கவில்லை என்பதுதான் பிரச்சினை. தூண்டுதல்களைத் தடுக்க மனதால் இயலாமல் போகிறது. இனிமேல் உழைத்து வாழவேண்டுமென்று நினைக்கும் அதே நேரத்தில் வேறு ஏதாவதொன்று மனதினுள் ஆதிக்கம் செலுத்துகிறது. எத்தனையோ பேர் தங்களது தேவைகளுக்கும் மிக அதிகமானப் பொன்னையும் பணத்தையும் பிற உடமைகளையும் வைத்துக் கொண்டு தூங்குகிறார்கள். அவர்களது அகம்பாவத்திலும் அடி விழ வேண்டும். அந்தப் பணத்தை முதலீடாக வைத்து ஒரு வியாபாரம் தொடங்கி நான் பிழைத்துக்கொள்வேன். சந்தர்ப்பத்திற்கேற்ப உருவாகும் இந்த அதிபுத்திகள் ஏதாவது லாக்கெப்பில் தான் கொண்டுவந்து சேர்க்கும். உபதேசியார்களிடம் எப்போதும் நான் சொல்வதுண்டு. "இதை எத்தனையோ வருஷங்களாக எனக்கு நான் உபதேசம் பண்ணிட்டுதான் இருக்கேன். ஒரு பயனுமில்லை." பிறக்கும்போதுள்ள நல்ல குணங்களினுள் பிடிபடாத ஏதோ கொஞ்சம் விஷக் கிருமிகளும் எப்படியோ உள்ளே நுழைந்துவிட்டன. அதை இல்லாமல் செய்வதற்கு நானும் முயற்சி செய்துகொண்டுதானிருந்தேன். முயற்சியில் தோற்கிற நேரங்களில் குற்றச்செயல்களில் ஈடுபடுகிறேன். உணர்வுகளைக் கட்டுப்படுத்துவதற்கான மனத்திடம் மட்டும் இருந்திருந்தால் நான் எப்போதோ தப்பித்திருப்பேன். என்னுடைய குற்றம் குறைகளை மறைத்துவிட்டு எதையாவது சொல்கிறேன் என்பதுதான் இதில் உண்மை. கடவுளின் கையில்தான் நம்முடைய ஒவ்வொரு அசைவுமிருக்கிறது. அவனுடைய லீலாவினோதங்களை நாம் வாழ்க்கையாக வாழ்ந்து தீர்க்கிறோம்.

தத்துவ வியாக்கியானத்தை நிறுத்திவிட்டு, திருடன் போலீசைப் பிடித்த ஒரு கதையையும் சொல்லிவிடுகிறேன். திருடனுக்கு இதெல்லாம் தேவையில்லாத வேலைகள்தான். இருந்தாலும் சில நேரங்களில் சில

நீதியுணர்வுகள் தலைகாட்டி விடுகின்றனவே?

ஒரு திருடன் பிடிபட்டான். நான் ஈஸ்ட் ஸ்டேஷன் ஏடிசியாக இருக்கிறேன். திருட்டுப் பொருட்களைப் பறிமுதல் செய்யப்போகும்போது நானும் போவதுண்டு. சின்னச் சின்ன வேலைகளுக்கு ஆள் வேண்டுமல்லவா? பறிமுதல் பொருட்களில் ஆட்டோ ஸ்பேர் பார்ட்ஸ், டேப் ரிக்கார்டர் என்று ஒரு ஜீப் நிறைய பொருட்களிருந்தன. நல்லவனாகிக் கொண்டிருந்த எனக்கே என்னைப் பற்றிய சந்தேகம் வந்தது. கூட வந்த போலீஸ்காரர்கள் வழியில் இறங்கிக்கொண்டார்கள். போலீஸ் டிரைவரும் நானும் மட்டும். அவர், ஜீப்பை அவரது வீட்டுக்கு ஓட்டிச் சென்றார். நிறைய பொருட்களை வீட்டில் இறக்கி வைத்தார். பொருட்களின் மிச்சம் மீதிகள் வீட்டு முற்றத்திலும் கிடந்தன.

பாதியளவு பொருட்கள்தான் ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தன. எனக்குள் பெரும் குற்றவுணர்ச்சி தோன்றியது. நானொரு திருடன் என்பது உண்மைதான். பழைய காலமாக இருந்திருந்தால் பங்கு கேட்டிருப்பேன். அதற்கான நியாயங்களும் இருந்தன. ஆனால், இன்று ஸ்டேஷனில் வேலை பார்ப்பவன் என்ற நிலையில் பேண வேண்டிய சில மரியாதைகள் இருக்கின்றன. நானொரு திருடன்தான். இருந்தாலும் இதற்குக் கூட்டு நிற்பது சரியல்ல.

எஸ்ஐயைத் தேடிப் பார்த்தேன். அவர் ஜோனகப்புரம் கடற்கரையில் ஏதோ பணி நிமித்தம் முகாமிட்டிருக்கிறார். நான் போய் விஷயத்தைச் சொன்னேன். அவரும் அறிந்திருக்கட்டும் என்றுதான் சொன்னேன். இரண்டு பேரையும் ஒன்றாக நிறுத்தி இதை விசாரிக்கவெல்லாம் வேண்டாம். ஆனால், இதைச் சொன்னவன் நான் என்பதை அவர் அறிய வேண்டும். இல்லையென்றால் வேறு யாரையாவது சந்தேகித்து விடுவார். இப்போது குவாட்டர்சில் போனாலும் அந்தப் பொருட்கள் இருக்கும் என்றேன்.

எஸ்ஐ சொன்னார்: "இனிமேல் இப்படிச் செய்யக்கூடாதுன்னு நான் சொல்லிக்கிறேன். நீ இதை யார்கிட்டேயும் சொல்லவேண்டாம். அவரோட சர்வீசிலயும் ஸ்டேஷன்லயும் இது அவமானத்துக்கு இடமாயிடும். தாக்கீது பண்ணிட்டா போதும். அவர் இனி இப்படி நடந்துக்கமாட்டார்."

இது சரியான அணுகுமுறை என்றுதான் எனக்கும் தோன்றியது. திருடன்களையும் இப்படி அணுகலாமே? கோடிகள் திருடினாலும்

கோமணத்தைத் திருடினாலும் திருட்டு திருட்டுதானே? அது, போலீசாக இருந்தாலும் திருடனாக இருந்தாலும். முதன்முதல் திருட்டு என்பதற்காகவாவது திருந்துவதற்கான வாய்ப்பைக் கொடுக்கிறோமா? திருடன் என்ற முத்திரையை முதலிலேயே அவன்மீது பதித்து விடுகிறோமே? இதன் மூலம் நாம் நன்மைகளை விதைப்பதற்குப் பதிலாக குற்றவாளிகளை உற்பத்தி செய்யும் ஃபாக்டரி அல்லவா நடத்துகிறோம்? சிறு குற்றங்களில் குற்றவாளிகளின் வயதையும் அறிவையும் அதிகாரிகள் கணக்கில் கொள்ள வேண்டும். கண்களைக் கட்டியிருக்கும் நீதிபீடத்தில் அவனை நிறுத்துவதற்கு முன்.

தொடங்கிய பெந்தகொஸ்தேவுக்கே மீண்டும் வருவோம். ஸ்டேஷன் ஊழியம் செய்வதை விட்டு நான் தேவ ஊழியம் செய்வதற்காக வெளியேறினேன். டயானா சிஸ்டர் என்னை ஒரு பாஸ்டரிடம் ஒப்படைத்தார். அவரது மனைவியை அம்மாம்மா என்று அழைத்தார்கள். களங்கமற்ற அழகான ஒரு நல்ல பெண்மணி - குஞ்ஞுமோள்.

என்னை சுத்திகரிக்க வேண்டுமென்று பெந்தகொஸ்தே சபையினரிடம் இவர் சிபாரிசு செய்தார். சர்ச்சிலோ ஏதாவது ஓடுகிற தண்ணீரிலோ மூழ்க வைத்து சுத்தம் செய்வார்கள். இவன் நேற்றுவரை பாவியாக இருந்தான். பாவங்களை எல்லாம் போக்கிவிட்டு புதியதொரு ஆத்மாவாக உயிர்த்தெழுந்திருக்கிறான். இன்று முதல் நான் ஒன்றரை இரண்டு வயதிலான களங்கமில்லாத, கடவுளின் ஒரு மைந்தன். இனிமேல் நானொரு புதிய மனிதன். இதுதான் உறுதிப்பாடு.

கொல்லத்தில் இத்திக்கரை ஆற்றின் கிளையான கும்மல்லூர் ஆற்றில் என்னை மூழ்க வைத்தெடுத்தார்கள். தண்ணீரில் நின்றபடியே மேலே பார்த்துப் பிரார்த்தனை செய்யச் சொன்னார்கள். குளித்துவிட்டு கரையேறியதும் புதிய ஆடைகள் தந்தார்கள். இதன் பிறகு களங்கமான எந்த சிந்தனைகளும் கூடாது. நானும் ஓரளவு முயற்சி செய்து பார்த்தேன். அவர்களுக்கு என்மீது நல்ல மதிப்பிருந்தது. தினமும் ஐம்பது ரூபாய் தந்தார்கள். ஞாயிற்றுக் கிழமை தோறும் பாஸ்டர் தம்பதிகள் வற்புறுத்திச் சாப்பிட வைத்தார்கள்.

கடவுளின் அழைப்பை மனமுவந்து ஏற்றவர் என்ற நிலையில் பிள்ளையை நாங்கள் பைபிள் கல்லூரிக்குப் படிக்க அனுப்பப் போகிறோம் என்றார் பாஸ்டர்.

நான் மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டேன். பிள்ளை, சகோவாகி தேவ

ஊழியத்தில் ஈடுபட்டால் இதுபோன்ற கெட்ட மார்க்கத்தில் சஞ்சரித்த நிறைய பாவிகளைத் தூய்மைப் படுத்த முடியும்.

"தாராளமாக. எனக்கு இதில ரொம்ப மகிழ்ச்சி" என்றேன். எனக்கு வேறு வேலையுமில்லை. மோசமான எண்ணங்களிலிருந்து விடுதலை பெறவும் முடியும். குண்டறையிலுள்ள பெந்தகொஸ்தே சென்டரிலிருந்து திருவல்லா இந்திய பைபிள் பள்ளிக்கு இப்படியாக நான் பயணம் செய்தேன்.

அங்குள்ள செட்டப்புகள் எனக்குப் பிடித்துப்போயின. நாங்கள் மூன்று பேர்கள் ஒரு அறையில் தங்கியிருந்தோம். மாணவர்களில் மூத்தவனும் விஐபியும் நான்தான். நான் சகோவாகி சாட்சியம் பகர்ந்தால் ஏராளம் பாவிகள் என்மூலம் தூய்மை பெறுவார்களென்று சபை நம்பியது. பிரபல திருடன் மணியன்பிள்ளை தேவ சாட்சியம் சொல்கிறார். பழைய காலத்திலுள்ள திரில் நிகழ்வுகள் ஒன்றிரண்டைப் போட்டுவிட்டால் சாட்சியத்திலொரு சுவாரஸ்யமுமிருக்கும்.

சகோதரிகள் சமையல் செய்வதற்காக முறை வைத்து வருவார்கள். ஒரு குழுவில் நாங்கள் முப்பத்தாறு பேர்களிருந்தோம். இதில் புலையன், ஈழவன், ஆசாரியெல்லாம் இருந்தார்கள். நாயராக நான் ஒருத்தன்தான். கிறிஸ்தவர்களுமிருந்தார்கள். நானும் ஆழ்ந்த ஈடுபாட்டுடன்தான் படித்து வந்தேன். இதனிடையே ஹாஸ்டலின் பக்கத்து வீடுகளிலுள்ள இளவயதுப் பெண்களை மாணவர்களில் யாரோ கேலி செய்வதாக ஒரு குற்றச்சாட்டு எழுந்தது. புகாரைக் குறித்து விசாரணை செய்யும்படி ஹாஸ்டல் டீனிடம், சென்ட்ரல் பாஸ்டர் கேட்டுக்கொண்டார். ஏதோ சைடு பிசினெஸ் செய்துகொண்டிருக்கும் டீன், மாணவர்களை அழைத்து விசாரித்தார். யாருமே ஒப்புக்கொள்ளவில்லை. அவர் சொன்னார்: சென்ட்ரல் பாஸ்டர் கேட்டால் நான் சம்பவத்தில் உண்மையில்லை என்று சொல்லிவிடுவேன். நீங்கள் யாரும் இதை மாற்றிச் சொல்லிவிட வேண்டாம் என்றார்.

நான் எழுந்து: "தேவமார்க்கத்தின் முதல் பாடமே பொய் சொல்லக் கூடாது என்பதுதான். நாம் அதைப் படிக்க வந்திருக்கிறோம்" என்று சொல்லிவிட்டு மூன்று நான்கு பேர்களுடைய பெயரைக் குறிப்பிட்டு: "ஒண்ணுல இவங்களை இனிமேல் இப்படிச் செய்யக் கூடாதுன்னு சொல்லுங்க. அல்லது இவங்ககிட்டே படிப்பை நிறுத்தச் சொல்லுங்க" என்றேன்.

"போகட்டும் விடுங்க. நீங்க இதை யார்கிட்டேயும் சொல்ல வேண்டாம்"

என்றார்.

"யாராவது கேட்டால் நான் சொல்லத்தான் செய்வேன்" என்றேன்.

என்னுடைய வரலாறு இவருக்குத் தெரியும். ஆகவே மறுத்து எதுவும் பேசாமல் விட்டுவிட்டார். ஆனால், மாணவர்களுக்கு தெரியாது. அவர்கள் என்னை அப்படிப் பண்ணி விடுவோம்; இப்படிப் பண்ணி விடுவோம் என்றெல்லாம் மிரட்டினார்கள். நான் 'வடக்கன் வீரகதா' மம்முட்டி ஸ்டைலில்: "மக்களே அந்த அளவுக்கொண்ணும் நீங்க வளந்திடலை. போங்க, அதையெல்லாம் விட்டுடுங்க" என்றேன். அவர்கள் ஏதோ திட்டம் தீட்டினார்கள். நான் கண்டுகொள்ளவில்லை.

மறுநாள், கொல்லத்திலுள்ள லோக்கல் சானல்கள், சிஎன்டபிள்யூ எல்லாம் நான் சகோவாக, பைபிள் படிப்பதைக் கேள்விப்பட்டு நேர்முகம் காண வந்தார்கள். திருடன் சகோவாவது சுவாரஸ்யமான செய்தியல்லவா? பையன்களுக்கு அப்போதுதான் நான் எவ்வளவு பெரிய 'உண்மை விளம்பி' என்பது தெரிய வந்தது. பிறகு, என்னைக் கண்டாலே அவர்களுக்கு உதறல் வந்தது. ஆனால், டீன் இதை தனக்குச் சாதகமாக்கிக்கொண்டார். இவன் பெந்தகொஸ்தேவில் நுழைந்து துப்பறிய வந்திருக்கும் ஆர்எஸ்எஸ் உளவாளியாக இருக்கலாமென்று தான் சந்தேகப்படுவதாக பாஸ்டரிடம் சொன்னார். மேல்ஜாதிக்காரன் அல்லவா? ஒருவேளை, உண்மையாகவும் இருக்கலாம். ஆனால், முதலில் நடந்த ஒன்பது பரீட்சையிலும் எனக்கு எண்பது மார்க். பாஸ்டர் டீனிடம் சொன்னார்: "தேவனைப் புரிந்துகொள்ள ஒருவருக்காவது ஆர்வமிருந்தால் அவரையாவது தயவுசெய்து வெளியே அனுப்பி விடாதீர்கள்." காட்சி இத்துடன் முடிவுக்கு வந்தது.

தேவனின் குழந்தைகளான எங்களுக்கு பத்து நாட்கள் ஓண விடுமுறை. சிலேட்டையும் பலப்பத்தையும் அங்கேயே வைத்துவிட்டு நான் விடுமுறையில் வந்தேன். இதனிடையில் என்னை ஒரு பைக் மோதித் தள்ளிவிட்டது. கொஞ்ச நாட்கள் மெடிக்கல் காலேஜில் கிடந்தேன். பாஸ்டரைத் தவிர பைபிள் சென்டரிலிருந்து யாருமே என்னைப் பார்க்க வரவில்லை. பிள்ளைக்கு என்ன தேவை ஏற்பட்டாலும் சொல்லவேண்டுமென்று சொன்னவர்கள். திருவனந்தபுரம் மெடிக்கல் காலேஜில் கிடைக்கும் பிரட்டிலும் பாலிலும் உயிர் பிழைத்துக் கிடந்தேன். கவனித்துக்கொள்ள மகனுமிருந்தான். ஆனால், கொடும் வறுமை. சென்டருக்குக் கடிதமெழுதினேன். எனக்கு தேவஅழைப்பு வந்தது. ஆனால், துரதிருஷ்டவசமாக என்னால் போக முடியவில்லை.

காலொடிந்து ஆஸ்பத்திரியில் கிடக்கிறேன். பொது நியாயப்படி அங்கே படித்துக்கொண்டிருந்த ஒருவனுக்கு விபத்து நேர்ந்தால் கவனிக்க வேண்டுமல்லவா? ஆனால், யாரையுமே பார்க்க முடியவில்லையே?

கேள்விக்குறியுடன் முடித்த கடிதத்தை அனுப்பிய நான்காவது நாள் சென்டரிலிருந்து ஆள் வந்தது. அப்போது நான் மெடிக்கல் காலேஜிலிருந்து வீட்டுக்கு வந்து ஓய்வெடுத்துக்கொண்டிருந்தேன்.

பாவியான இந்த ஆத்மாவிற்கு ஐநூறு ரூபாய் கொண்டுவந்து தந்தார்கள். கால் மெதுவாகக் குணமடைந்தது. படித்து ஒரு வருடம் பூர்த்தி செய்தவர்களுக்கு சகோதரர் பட்டம் கிடைக்கும். வெற்றிபெற்ற 35 குழந்தைகளுக்கு ஒரு கவரும் பான்ட்ஸ் சர்ட்டும் கிடைத்தது. எனக்கு விருது மட்டும். டீனின் கலைநிகழ்ச்சியாக இருக்கலாம். நான் பாஸ்டரிடம் விஷயத்தைச் சொன்னேன். அவர் பிரியாணி பொட்டலத்துக்கும் இருநூறு ரூபாய்க்கும் ஏற்பாடு செய்தார். இதை வைத்து ஓரளவு மனவருத்தத்தைப் போக்கினேன். கும்பநாடு பாஸ்டர்ஸ் கன்வென்ஷனில் நானும் கலந்துகொண்டேன். பாரம்பரிய பெந்தகொஸ்தேகாரர்களுடனான சிறு பொருத்தமின்மையை உணர முடிந்தது. சபைக்கு இது இல்லாமலிருக்கலாம். ஆனால், பலருக்கு இப்படியான மனோபாவம் இருக்கிறது.

கடைசியில் அவர்கள் விரும்புகிற அந்த நாளும் வந்தது. நான் சாட்சியம் சொல்வதற்காக ஏறி நின்றேன். ஆயிரக்கணக்கில் மக்கள் கூட்டம். நான் சொன்னேன்: "மிகச் சரியாக தேவ மார்க்கத்தை பின்பற்றுகிற ஒரு மனிதன் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட்டால்தான் என்னால் சாட்சியம் சொல்ல இயலும். முதலில் என்னுடைய மனச்சாட்சிக்கு நான் நீதமுடன் நடந்துகொள்ள வேண்டும். சாட்சியம் என்பது தேவனின் ஆத்மா என்னுள் நிறைந்து சொல்கிற ஒன்றாக இருக்க வேண்டும். நான் அந்த இடத்திற்கு இன்னும் வந்து சேரவில்லை. நான் கடந்து வந்த பாதையைப் பற்றி சொன்னால் நீங்கள் ஒருவேளை என்னைக் கல்லெறிந்து கொல்வீர்கள்."

திரும்பவும் கொல்லத்துக்கே வந்தேன். நல்ல மனிதரான பாஸ்டருடனும் குடும்பத்தினருடனும் அப்போதும் நெருக்கமான உறவுதான். எதுவாயினும் இனி போலீஸ் ஸ்டேஷனுக்குப் போவதாக இல்லை. அடுத்து என்ன செய்வது? சாவதுவரைக்கும் வாழ வேண்டுமே? பசியைப் போக்க வேண்டும். என்ன செய்வது? வறுமை ஒரு பாம்புபோல் தலை தூக்கி நிற்கிறது. மீண்டும் பழைய வழிக்குத் திரும்பி விடுவேனோ என்ற சந்தேகமும் உருவானது. இதை நான் பாஸ்டரிடம் சொல்லவும் செய்தேன்.

அவர் சொன்னார்:

"பிள்ளை கொஞ்சம் விலகி நில்லுங்க. மனசு கொஞ்சம் சாந்தமாகட்டும்."

விலகி எங்கே நிற்பது?

## 87 - மீண்டும் மைசூருக்கு

என்னுடைய கதைகளைக் கேட்ட பாஸ்டர் சொன்னார்: "முன்பு நீங்க ராஜாவாக வாழ்ந்த இடம்தானே மைசூர்? அங்கே நிறைய விசுவாசிகள் கிடைப்பாங்களா? அப்படின்னா நானும் வர்றேன்."

அங்குள்ள விவசாயிகளில் அதிகமும் விசுவாசிகள்தான். என்னை போலீஸ் பிடித்த பிறகு அவர்கள் அவிசுவாசிகளாகி இருப்பார்கள். இந்நிலையில், பாஸ்டருக்கும் ஒரு வாய்ப்புக் கிடைக்கலாம். ஆனால், எனக்குத்தான் சிறு சந்தேகம். என்னை அவர்கள் கல்லெறிய மாட்டார்களா? இருந்தாலும் போவதாக முடிவு செய்தோம். நான் தமாஷாகச் சொன்னேன்:

"அங்கே ஏதாவது பிரச்சினை ஆயிடுச்சின்னா பாஸ்டர் ஓடித் தப்பிச்சிடுங்க."

இப்படியாக 2004இல் நாங்கள் கர்நாடகாவின் குண்டல் பேட்டைக்குச் சென்றோம். என்னுடைய வளர்ச்சிக்குக் காரணமாக இருந்த அந்த நல்ல இளைஞன் யூஸஃப் இப்போது குண்டல் பேட்டையில் வசித்து வருவதாகக் கேள்விப்பட்டேன். அவனது மனைவியின் வீடு இங்கேதான். பாவம், போலீசிடம் வாங்கிய உதையின் வடுக்கள் இப்போதும் அவனுடைய உடம்பில் இருக்கும். அவனை எதிர்கொள்வதற்கான மனநிலையில் நானில்லை. அங்கேயே ரூம் எடுத்துத் தங்கினோம். காலையில், எடயாளம் வழி எச்டி கோட்டைக்குச் செல்லும் எட்டேகால் மணி பஸ்சில் ஏறினோம். மீண்டும் அதே பழைய ரோடுகள். பல்வேறு நினைவுகள் மனதில் நெருக்கியடித்துக் கொண்டு வந்தன.

பத்து மணிக்கெல்லாம் எடயாளத்துக்கு வந்து சேர்ந்தோம். பெரிய அளவிலான மாற்றங்களில்லை. என்னுடைய அதே பழைய கடைகள், எலெக்ட்ரானிக்ஸ் கடை, ஒயின் ஷாப், ஆடு, மாடு, தோல் வியாபாரம். நான் எடயாளத்தில் கால் பதித்தேன். கால்கள் நடுங்கின. ஒரு காலத்தில் இதே ஊரில் ராஜபோகத்துடன் வாழ்ந்தவன். இன்று அனைத்தையும் இழந்து, பிச்சைக்காரனாக மீண்டும் வந்திருக்கிறேன்.

ஒருவேளை அவர்கள் என்னைத் தாக்கவும் முயற்சி செய்யலாம்.

பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும். அப்படி ஏதாவது நடந்தால் அதுவும் விதி தான். நான் இப்போது புது மனிதன். அமைதியாக நின்று எல்லாவற்றையும் தாங்கிக் கொள்ளத்தான் வேண்டும்.

இவ்வளவுதான் நினைத்திருப்பேன். தெரிந்த சில ஆட்கள் ஓடி வந்தார்கள். கடை முதலாளிகள் வெளியில் இறங்கி நின்று வேடிக்கைப் பார்த்தார்கள். மக்கள் திரண்டார்கள். மலையாளி ஹனீஃபாவின் மகன் ரஹீம் ஓடி வந்து தைரியமாகக் கட்டிப்பிடித்தான். எல்லா முகங்களிலும் பரிவு தென்பட்டது. கூடவே சிறு தயக்கமும். எல்லோரும் விசாரித்தார்கள். ஒரு நிமிடம் என்னுடைய கண்கள் நிறைந்து விட்டன. எதுவுமே பேச முடியவில்லை. அன்வர் என்பவன் - அன்று இவன் சிறு பையனாக இருந்தான் - உருதுவில் சொன்னான்: "ஒரு திருடன்கூட இன்னொரு பெரிய திருடனும் வந்திருக்கான்."

இந்த நிலையிலும்கூட உண்மையில் எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. அவன் சொன்ன பெரிய அதாவது உயரமான பாஸ்டர் எதுவும் விளங்காமல் நின்றுகொண்டிருக்கிறார். ஆனால், என்னை ஆச்சரியப்படுத்துவதுபோல் பக்கத்தில் நின்றிருந்த இன்னொருவன் அன்வரை அடிப்பதற்காக கை ஓங்கினான். அன்வர்: "இல்லை, ஒரு முதலாளிகூட இன்னொரு பெரிய முதலாளியும் வந்திருக்கிறார்" என்று திருத்திச் சொல்லிவிட்டு மெல்ல நகர்ந்துவிட்டான்.

மனைவியும் குழந்தையும் எங்கே? எல்லோரும் அறிந்துகொள்ள விரும்பியது இதுதான். நான் மெதுவாகச் சொன்னேன்: "அவ போய்ச் சேர்ந்துட்டா . . ." கலகலப்பாக இருந்த இடம் திடீரென்று நிசப்தமானது. நானே அதைக் கலைத்து: "பையன் வளர்ந்துட்டான். இப்ப வாழ்க்கையை நடத்துறதுக்குப் படாதபாடு படுறான்" என்றேன்.

"ஏதாவது மிச்சம் இருக்கா?" யாரோ கேட்டார்கள்.

"இருக்கு, இந்த உடம்பும் ரெண்டு மூணு ஜோடி சட்டையும் பாண்டும்."

அவர்களிடம் மிச்சமிருந்த வெறுப்பும் இப்போதும் இல்லாமலானது. கள்ளங்கபடமற்ற மனிதர்கள். இன்னும் நன்றாக நான்கு முறை ஏமாற்றுமளவுக்கு நல்ல மனிதர்கள்.

ஹனீஃபா சத்தமாகவும் ஆவேசத்துடனும் சொன்னான்: "இங்க கடைகளிருக்கு. புதுசாகக் கட்டித் தரவும் ஆட்கள் இருக்காங்க. இங்கேயே

இருந்துடுங்க. நீங்க எதுவுமே கொண்டு வரவேண்டாம். இனி போலீஸ்காரங்க வரமாட்டாங்க." நான் சிரித்துக்கொண்டேன்.

"இங்கே இருக்குறது உங்களுக்கு சிரமம்னா படகர்புரத்துக்கு வந்துடுங்க" என்று வேறு சிலர் சொன்னார்கள்.

"இல்லை, இன்னைக்கே நான் திரும்பிடுவேன்."

இன்றிரவு இங்கே தங்கக்கூடாது என்ற முடிவுடன்தான் நானிருந்தேன். சலிம்பாஷா ஒரு திருடன் என்ற விஷயம் இங்கு எல்லோருக்கும் தெரியும். இந்த நினைவுடன் என்னுடைய அண்மையை அவர்கள் அனுபவிக்க வேண்டாம். தங்களினிடையே ஒரு திருடனும் தூங்குகிறான் என்ற மனத் தொந்தரவை ஏற்படுத்துவதன் மூலம் அவர்களது தூக்கத்திற்கு இடையூறு செய்யக் கூடாது. இதையும் செய்தால் நானொரு மகாபாவி.

சாயா வாங்கித் தரவும் சிகரெட் வாங்கித் தரவும் போட்டி போட்டார்கள். அரை மணி நேரம்தான் இங்கிருந்திருப்பேன். நான் வந்திருப்பதை அறிந்து, குஞ்ஞு முகம்மது அண்ணனும் அவரது மனைவியும் வந்தார்கள்.

"எங்க வீட்டுக்கு வர்றதுக்கு உனக்கு வழி தெரியலையா?" என்று கேட்டார்கள்.

நான் பதில் சொல்லவில்லை. தலை குனிந்து உட்கார்ந்திருந்தேன். என்னை இங்கே அழைத்துக்கொண்டு வந்து, நான் வேர் பிடிக்க உதவிய மனிதர். நான் அந்தக் கண்களைக் கூர்ந்துப் பார்த்தேன். வெளிப்படையான அன்பு. ஆனாலும் . . . சிறு மாற்றம் தென்பட்டது. பழைய உற்சாகமில்லை. நாம் ஒருவனை அழைத்துக்கொண்டு வந்து எல்லாம் செய்து கொடுத்தோம். ஆனால், அவன் திருடனாக இருந்திருக்கிறான் . . . இந்த உணர்வை என்னால் புரிந்துகொள்ள முடிந்தது. அதிக நேரம் நின்றிருக்க என் மனநிலை அனுமதிக்கவில்லை. குற்றவுணர்ச்சி உந்தித்தள்ளியது. அனைவரிடமும் விடைபெற்றுப் புறப்பட்டு. படகர்புரத்தில் வந்திறங்கினோம். இரண்டரை கிலோ மீட்டர்வரை நீளமுள்ள ஒரு ரோடு. பஸ்சிலிருந்து இறங்கி நடக்கும்போது தூரத்தில் லிங்கராஜ் நடந்து வந்துகொண்டிருந்தான் படகர்புரம் சௌக்காரின் மகன். செல்வந்தன். என்னுடைய உற்ற நண்பன். ஓடி வந்து கட்டிப் பிடித்தான்.

"நான் ஒவ்வொரு நிமிடமும் உங்களைப் பற்றி நினைப்பேன். இப்படி எதிர்ல வருவீங்க, எப்பவாவது ஒருநாள் இங்க வந்து இறங்குவீங்க

என்றெல்லாம் நினைப்பேன். சொல்லுங்க, எப்படி இருக்கீங்க, என்னென்ன விசேஷங்கள் . . ?"

நான் சொன்னேன்: "நஞ்சன்கோட்டில எங்காவது ஒரு கடையும் வீடும் வேணும். இங்க எங்கேயும் வேண்டாம். இந்த பெந்தகொஸ்தே பாஸ்டர் பணம் முதலீடு செய்வார்."

அவன் நஞ்சன்கோட்டிலுள்ள ஒரு முகவரியை எழுதித் தந்துவிட்டு, வற்புறுத்தி எங்களை ஃபார்ம் ஹவுசுக்கு அழைத்துச் சென்றான். எனக்கோ உடனடியாகத் திரும்பிவிட வேண்டும்போலிருந்தது. திரும்ப பஸ்சேற்றி விட வந்தபோது லிங்கராஜ் சொன்னான்:

"எனக்குத் தெரியும், நான் பார்க்காம இருந்திருந்தா, திரும்பிப் போயிருப்பீங்க இல்லையா? மற்ற நண்பர்களை எல்லாம் சந்திக்க வேண்டாமா? நாளைக்குப் போகலாமே?"

"வேண்டாம் லிங்கராஜ், நான் புறப்படுறேனே?"

பஸ்சில் ஏறி உட்கார்ந்தேன். ஐந்து நிமிடமாகியும் பஸ் கிளம்பவில்லை. லிங்கராஜ் வெளியில் நின்றுகொண்டிருந்தான். நான் சொன்னேன்: "நீங்க நின்னுட்டிருக்க வேண்டாம். புறப்படுங்க . . . உங்களைப் பார்க்கும்போது . . . மனசுக்குள்ள பழைய சிந்தனைகள் . . ." எனது கைகளிலும் உதட்டுகளிலும் லேசான நடுக்கம் தென்பட்டது.

சரி என்று சொல்லிவிட்டு லிங்கராஜ் சொன்னான்: "எடயாளத்தில நிறைய திருடன்கள் வந்திருக்கலாம். இப்பவும் வந்திட்டுதான் இருப்பாங்க. ஆனா, உங்களைப்போல ஒரு ஆளை . . ." என்று சொல்லிவிட்டு: "இப்பவும் என்னால நம்ப முடியலை." என்றான்.

பஸ் புறப்பட்டது. இருபுறமும் புகையிலைத் தோட்டங்கள். எடயாளத்துக்கு வந்த மூன்றாவது வருடம், இங்கிருந்து அதிகமாக புகையிலை ஏற்றுமதி செய்த முதலாளி இதோ, உடுத்திய துணியுடன் வறுமையின் எல்லா அர்த்தங்களுடனும் பஸ்சில் அமர்ந்திருக்கிறான்.

சட்டமன்றத் தேர்தலில் வேட்புமனுத் தாக்கல் செய்வதற்கு முன்பாக நான் சொற்பொழிவாற்றிய இடத்தைப் பார்த்ததும் நினைவு வந்தது. அந்த வருடம் ஆந்திராவிலிருந்து அறுபத்தைந்து வேலையாட்களை புதிதாக வரவழைத்திருந்தேன். புகையிலை பயிராகி, கிரேடிங்

நடந்துகொண்டிருந்தது. என்னைப் பார்க்க, ஜமாஅத் தலைவர் ஸத்தார்பாயும் மணிச்செட்டியும் வந்தார்கள். கூடவே, காங்கிரஸ் கட்சியின் நஞ்சன்கோடு தலைவரும்.

மணி எந்தக் கட்சியையும் சாராதவன். அங்குள்ள மக்களுக்கும் கட்சி சார்புகள் கிடையாது. எந்தக் கட்சிக்கு ஓட்டுப் போடவேண்டுமென்பதை கிராமத்தலைவனும் மக்களும் சேர்ந்து முடிவு செய்வார்கள்.

மணி சொன்னான்: "உங்ககிட்ட கொஞ்சம் பர்சனலாகப் பேசணும் சலிம்."

என்னுடைய கொடவுன் ஆஃபீசுக்குப் போனோம்.

"நீங்க தேர்தல்ல நிக்கணும்."

என்னைப் பற்றி எனக்கல்லவா தெரியும். நான் சொன்னேன்:

"அதெல்லாம் நடக்காத விஷயம் மணி."

"யோசிக்கிறதுக்கான டைம் இருக்கு." என்றான் மணி.

மணியும் என்னைப்போல் ஒரு புகையிலை வியாபாரிதான். நான் வந்ததால் இவனுக்கு சிறு பாதிப்பும் ஏற்பட்டிருந்தது. ஆனால், அன்றுவரை தன்னுடைய வார்த்தையிலோ செய்கையிலோ இதை அவன் வெளிப்படுத்தியதில்லை. எனக்குள் சிறு சந்தேகம். அன்புதான். எல்லாம்தான். ஆனால், என்னால் சில இழப்புகள் ஏற்பட்டது உண்மை அல்லவா? ஆகவே, இதெல்லாம், என்னுடைய முன்னேற்றத்தைத் தடுக்கும் முயற்சிகளாக இருக்குமோ? என்ன இருந்தாலும் வியாபாரிகள் அல்லவா?

நான் கேட்டேன்: "மணி நீங்க இங்கேயே பிறந்து வளர்ந்தவர்தானே?"

"இல்லை. இருந்தாலும் நான் இங்கே தேர்தல்ல நிற்கலாம். இந்தியாவில் எங்கே வேணும்னாலும் நான் நிற்கலாம். நீங்களும் இந்தியன்தானே? ஊரில இருந்து உங்களோட சான்றிதழ்களைக் கொண்டு வாங்க."

நடக்காத விஷயங்களென்பதால் நான் சொன்னேன்: "ஊர்ல அப்படியெல்லாம் எந்தச் சான்றிதழ்களும் எனக்குக் கிடையாது. ரேஷன்கார்டிலும் கூட . . ."

"இப்படியெல்லாம் சொல்லி சலிம் தவிர்க்க நினைக்க வேண்டாம். நீங்க இங்கேயே பிறந்து வளர்ந்ததான சான்றிதழ்களுக்கு நான் ஏற்பாடு பண்றேன்."

யோசிக்கலாம் என்று சொல்லிவிட்டு வந்தேன்.

சீஸன் முடிந்துவிட்டது. ஒரு ஜவுளிக்கடை தொடங்கும்படி யூஸஃப் சொன்னான்.

"அதுக்கெல்லாம் பணம் வேண்டாமா?"

"அதெல்லாம் பெரிய சிரமங்களில்லை. இந்த ஒரு சீஸன்ல கிடைக்கிற லாபமே போதும். கடை தொடங்கிடலாம். இன்னொரு விஷயம், நீங்க இந்த எலெக்ஷன்ல நிக்கணும். நின்னா நிச்சயமா ஜெயிச்சுடலாம்."

யூஸஃப் சொன்னதும் எனக்குத் திருப்தியானது. இவன் ஏமாற்ற மாட்டான்.

யூஸஃபும் மணியும், நான் அங்கேயே பிறந்து வளர்ந்ததாக சான்றிதழ்களுக்கு ஏற்பாடு செய்தார்கள். ஒருநாள் வந்து பிரச்சாரத்தை ஆரம்பிக்க வேண்டுமென்று சொன்னார்கள். மறுநாள் காலையில் இரண்டு மூன்றிடங்களில் பேச வேண்டும். எடயாளத்திலிருந்து மூன்று கிலோ மீட்டர் தொலைவிலுள்ள கணேஷ்புரத்தில்தான் முதல் பொதுக்கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. கர்நாடகாக்காரர்களும் தமிழர்களும் அடர்த்தியாக வாழ்கிற இடம். ஒரு கோயிலிலுள்ள பஜனை மடம் கல்மண்டபத்தில் சொற்பொழிவுக்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. கிராமத் தலைவர், மக்களை எல்லாம் இந்த இடத்திற்கு அழைத்திருந்தார். கணேஷ் புரத்திலேயே மைக்செட் கடையுமிருந்தது. நீங்கள் அனைவரும் எனக்கு ஒத்துழைப்பதாக இருந்தால் நான் தேர்தலில் நிற்கிறேன். உங்களுடைய அனுமதியுடன்தான் நான் வேட்புமனுத்தாக்கல் செய்வேன். இவ்வளவுதான் சொல்ல வேண்டும். நான் சொற்பொழிந்தேன். மக்கள் மிகுந்த கரகோசத்துடன் வரவேற்றார்கள். படகர்புரத்தில் நான் சொற்பொழிவாற்றிய இடத்தையும் தாண்டி பஸ் போய்க்கொண்டிருந்தது. இங்கு 1300 குடும்பங்கள் லிங்கராஜ் சொல்வதை அப்படியே ஏற்றுக்கொள்ளும். லிங்கராஜ்மீது அவர்களுக்கு ஒரு பயம் கலந்த மரியாதையிருந்தது.

வேட்பாளருக்கான மனுவை என்னிடமிருந்து எழுதி வாங்கிய யூஸஃபும் மணியும் அதைத் தாக்கல் செய்தார்களா என்பது தெரியவில்லை. அல்லது

மனுவை வாபஸ் வாங்குவதற்கு நான்கு நாட்களுக்கு முன் என்னைக் கைது செய்தார்களா என்பதும் நினைவில்லை. நான் மைசூரில் பிறந்து வளர்ந்ததற்கான சான்றிதழ்ப் பிரதி, நினைவுகளின் எச்சங்களாக இன்றும் என் கையிலிருக்கிறது.

பாஸ்டரின் ஆர்வம் இல்லாமலானது. நாங்கள் திரும்பி வந்தோம். எல்லா நினைவுகளையும் மடித்து வைத்துவிட்டு.

## **88** - விதி எழுதும் சுயசரிதை

இரவு, எட்டு மணியிருக்கும். வாழத்துங்கல் தோட்டுவாகா அருகில் வந்துகொண்டிருந்தேன். ஈஸ்ட் ஸ்டேஷன் கான்டீன் பொறுப்பாளராக இருந்த காலம். கான்டீனை மூடுவதும் திறப்பதும் நான்தான். குத்தகைக்காரன், பொறுப்புகள் அனைத்தையும் திருடனிடம் ஒப்படைத்து விட்டான். ஆகவே, எல்லாம் நன்றாகப் போய்க்கொண்டிருந்தது. இரவு ஏழு ஏழரைக்கு கான்டீனை மூடுவேன். ஞாயிற்றுக்கிழமை விடுமுறை. ரவிபிள்ளை என்ற ஒரு நண்பனும் கூடவே இருந்தான். அன்று நன்றாகக் குடித்திருந்தேன். தோட்டுவாகாவின் அருகில் ஐந்தாறு இளைஞர்கள் இருந்தது மட்டும் நினைவிருக்கிறது. "எவண்டா அவன் ரோட்டை அகலப்படுத்துறவன்?" என்று அவர்கள் கேட்டதாக நினைக்கிறேன். "ரோடு எவன் அப்பனோடவும் சொத்தில்லேடா" என்று நான் சொன்னேன். இதற்கு அவர்கள் என்ன பதிலைச் சொன்னார்கள் என்றோ பிறகு, என்ன நடந்தது என்றோ எதுவுமே எனக்குத் தெரியாது. மறுநாள் காலையில் எழுந்திருக்கும்போது உடம்பெல்லாம் வலி. முகம் வீங்கியிருந்தது. யாரோ கை போட்டு விட்டார்கள் என்பது மட்டும் உறுதி. இரண்டு குப்பி ஹனிபீ பிராண்டியை நாங்கள் இரண்டு பேர் சேர்ந்து தீர்த்திருந்தோம். போதாக் குறைக்கு கடையிலும் போய்க் குடித்தோம். ஆகவே, அடி வாங்கியது மணியன்பிள்ளையல்ல, ஹனிபீ.

மனைவி என்று இறந்தாளோ அன்றுமுதல் மனதிலிருந்த தன்னம்பிக்கையும் இல்லாமல் போனது. தன்னம்பிக்கையை இழந்துவிட்டதுடன் மனமும் கை விட்டுப் போய்விடும். அன்று கஷ்டகாலமும் ஆரம்பமாகும். இந்தச் சம்பவமும் அதிலொன்றுதான். 1995க்குப் பிறகு, என் வாழ்க்கையில் இரண்டாம் பகுதி ஆரம்பமாகிறது. மற்றொரு மணியன்பிள்ளை. முன்பு தோல்வியென்ற ஒன்று கிடையாது. திருடப்போன இடங்களில் வெற்றி பெற்றேனா, சண்டைகளில் வெற்றி பெற்றேனா என்பதல்ல பிரச்சினை. மனம் ஒருபோதும் தோற்றது கிடையாது. பத்து பேர் வந்தாலும் எதிர்த்து நிற்பேன்; நின்றிருக்கிறேன். கீழே விழும்போதும் உதைப்பேன். கால்களை அசைய விடாமல் பிடித்திருந்தால் துப்பவாவது செய்வேன். பிறகுதான், என் பொருட்டு

வீட்டிலுள்ளவர்கள் தேவையில்லாத விமர்சனங்களைக் கேட்க வேண்டாமென்று முடிவு செய்தேன். இந்த எண்ணம் மகன் வளர்ந்த பிறகு மேலும் வலுவடைந்தது. அவனும் ஒரு மனிதன்தான். என்னுடையது போன்ற சுதந்திரம் அவனுக்கும் வேண்டும். என் செயல்பாடுகள் அவனுடைய சுதந்திரத்திற்கு இடையூறாக அமைந்துவிடக் கூடாது.

இத்துடன் நானொரு இயல்பு மனிதனாக மாறினேன். ஆறாவது புலன் அடங்கிக் கொண்டது. மட்டுமல்ல, இருந்த புலன்களின் பயன்பாடும் இல்லாமல் போனது. எல்லா மனிதர்களையும்போல் எனக்கும் இருட்டுகிறது, விடிகிறது என்ற நிலைக்கு வந்து சேர்ந்தேன். நம்மைப் பயந்து விலகி நின்ற விதி, மனம் பதறும்போது மெல்லப் பக்கத்தில் வரும். கஷ்டகாலமென்பது கழுதைப்புலி. சிங்கமாக சீறி நிற்கும்போது கிட்ட வராது. பிடரி மயிர் தளரும்போது கூட்டமாக வந்து தாக்கும். அதனால்தான் கஷ்ட காலத்தில் எல்லாமே சேர்ந்துதான் வரும் என்று சொல்கிறார்கள். மனோ பலமுள்ள உடல்மீது விதியின் நகக்கீறல்கள் கூட விழாது. என்னுடைய அனுபவம் இது.

முன்பு, நான் ஒரு இடத்தில் திருடப் போனேன். தோல்விதான். இதனிடையே வீட்டுக்காரர்கள் எழுந்து கூப்பாடுப் போடத் தொடங்கினார்கள். நல்ல ஒற்றுமையும் தைரியசாலிகளுமுள்ள ஊர் அது. அக்கம்பக்கத்து வீடுகளின் விளக்குகள் எரிந்தன. எந்தப் பயமுமில்லாத திடகாத்திர மேனியர்கள் வெளியே வந்தார்கள். நாலாபுறமும் ஆட்களும் வெளிச்சமும். வாழ்க்கையில் முதல் தடவையாக என்னை விரட்டிப் பிடிக்கப் போகிறார்கள். அப்படியெதுவும் ஆகிவிடக்கூடாது. எப்படி ஓடினேன் என்றே தெரியாது. எதிரில் உயரமான ஒரு மதில் சுவர். மனம் எம்பிக் குதிக்க, உடும்பு போல் பற்றிப் பிடித்து ஏறினேன். அங்கிருந்து குதித்து அண்டசராசரங்களும் நடுங்குவதுபோலொரு சத்தத்துடன் ஒரு படுகுழியில்போய் விழுந்தேன். ஏதோ மைக் செட் கடைக்காரனின் வீடாக இருக்கலாம். குழிக்குள் பழைய டியூப்களும் பல்புகளும் நிறைந்து கிடந்தன. காலிடறி மேலுமொரு தடவை அதில் குப்புற விழுந்தேன். மீண்டும் உலகமே அதிர்வதுபோலொரு சத்தம் வந்தது. நான் முடிவே செய்துவிட்டேன். இனி இதிலிருந்து மீட்சி இல்லை. சிக்கிக்கொள்ள வேண்டியதுதான். விடவில்லை. திரும்பவும் குதித்தெழுந்துப் பாய்ந்தேன்.

திரும்பிப் பார்க்கும்போது பின்னால் ஒரு படையே திரண்டு வருகிறது. சத்தம் கேட்டதை வைத்து, திருடனிருக்கும் இடத்தை அவர்கள் சரியாக யூகித்திருந்தார்கள். இனி முன்னால் ஓடுவது விவேகமில்லை. பக்கத்திலிருந்த இடுப்பளவு மறைவில் குனிந்துகொண்டேன். கடைசியாக

ஒரு அடவெடுத்தேன். குள்ளன் ஓட்டம். நாலு கால் பாய்ச்சல். சாதாரணமாக ஒரு மனிதன் ஓடுவதன் முக்கால் பகுதி வேகத்திலாவது இப்படி பாலன்சில் ஓட முடியும். பயிற்சி வேண்டும். பத்து வயதிற்குக் குறைவான பையனின் உயரத்திற்கும் மேலாக மற்றவர்களால் பார்க்க முடியாது. அல்லது குனிந்துப் பார்க்க வேண்டும். மறைவைத் தாண்டினால் பரந்து விரிந்த ஒரு பகுதி. மக்கள் ஓடிவரும் வழியின் எதிர்புறம், ஒதுக்குப் புறமாக ஓடிக்கொண்டிருந்தேன். எதிரில் வருபவர்கள் எட்டிப் பிடித்து உதைத்துவிடக் கூடாது என்ற பிரார்த்தனை மட்டும்தான் மனதிலிருந்தது. அவ்வளவு பக்கத்தில் அவர்களுக்கு எதிராக ஓடிக்கொண்டிருந்தேன். இதற்குள் மக்களில் பெரும்பாலானவர்களும் ஒரே இடத்தில் கூடிவிட்டார்கள். மிச்சமிருப்பவர்களிடமிருந்து ஏதாவது தாக்குதல்களை எதிர்கொள்ள வேண்டியது வந்தாலும் எதிர்த்து நின்று தப்பித்துவிட முடியும். ஆகவே, வெகு இயல்பாக நடந்து சென்றேன். பாதுகாப்பான தூரத்தை அடைந்ததும் நின்று நிதானமாக என்னைப் பார்த்துக்கொண்டேன். உடம்பின் சில பகுதிகளில் எரிச்சல். ஆக்ஷனில் வலி தெரியவில்லை. எரிவதை வைத்துப் பார்த்தால் நிச்சயமாக இரத்தத்தில் மூழ்கியிருப்பேன் என்று நினைத்திருந்தேன். ஆனால், ஆச்சரியமாக அப்படியெதுவும் இல்லை. வேர்வை மட்டும்தான் வடிந்து கொண்டிருந்தது. தொட்டால் சுருங்கி முட்கள் கிழித்ததுபோல் ஆங்காங்கே சில்லறை வடுக்கள் மட்டும்.

விஷம்கூட சில சமயங்களில் வேலை செய்யாது என்பது எவ்வளவு சரியாக இருக்கிறது? திருடுவதற்கான தொழில் கருவிகள் அந்தந்த வீடுகளிலிருந்தே கிடைத்து விடுமென்பதை ஏற்கனவே சொல்லி இருந்தேன். பொதுவாக, வீடுகளில் ஒரு விறகுப் புரை இருக்கும். தேவைக்கேற்ற நல்ல தடிகளும் வரிக்கம்புகளும் கிடைக்குமிடம். ஆனால், இதிலொரு போதாமை என்னவென்றால் ஊரிலுள்ள எல்லா ஊர்வனகளுடைய வாசஸ்தலமும் இதுதான். காலையில் தத்தம் பணிகள் நிமித்தம் வெளியே போகும் இவை, இரவு நேரங்களில் கம்பும் தடிகளுக்குமிடையில் தங்களைச் சுருட்டிக்கொள்ளும். இந்த நேரத்தில் வந்திறங்கும் திருடன் கம்பு தடிகளுக்கிடையே தங்களுக்கான கருவிகளைக் கண்டடைய வேண்டும்.

ஒரு வீட்டில் திருடுவதற்காகப் போயிருந்தேன். ஜன்னல் திறந்தே கிடந்தது. திருட்டின் ஆரம்பக் காலம். கம்பி வளைக்கும் பயிற்சி ஏதோ நடந்து வருகிறது. ஜன்னல் வழியாகக் குச்சியைவிட்டு வீட்டுக்காரனின் சட்டையை எடுத்து விடலாம். கதர்ச்சட்டை. ஏதாவது அரசியல்வாதியாக

இருக்கலாம். எளிமையைப் பேணுபவர்கள் என்பதால் சட்டைப் பை கிழிவதுபோன்ற ஒரு பெரிய பர்சும் நல்லதொரு பேனாவும் உறுதி. வரிக்கம்பைத் தேடியெடுத்து, ஜன்னல் வழியாக விட்டு சட்டையைக் குத்தியெடுத்தேன். கம்பை மெல்ல இழுத்துப் சட்டையை அருகில் கொண்டு வந்தேன். ஹா . . . ஒரு வார கால ஜாலிக்கான பணம் இதோ கைக்கெட்டும் தூரத்தில். என் கவனம் முழுவதும் சட்டையில். சட்டையின் பக்கத்தில் கம்பைப் பிடிக்கும்போது ஒரு வழுவழுப்பு. பார்த்ததும் திடுக்கிட்டேன். ஒரு பாம்புக் குஞ்சு. எதுக்குத் தொந்தரவு பண்றே என்பதுபோல் அது தலையை உயர்த்தியது. சிறு வாலும் தலையுமாக மலைப்பாம்பின் போன்சாய் வடிவம். நான் திடுக்கிட்டு, கம்பைக் கீழே போட்டுவிட்டு ஓடினேன். ஏதோ நல்ல காரியத்துக்காக அரசியல்வாதியிடம் ஒப்படைக்கப்பட்ட பணமாக இருக்கலாம். நான் தொட்டதும் பணம் சுட்டு விட்டது. நேர்மையான பணம் தொட்டால் சுடுமென்று சொல்வார்கள் அல்லவா?

திருட்டில் பட்டமெல்லாம் வாங்கிய பிறகு ஒருநாள் நிஜமான சர்ப்பதரிசனம் நடந்தது. இப்படித்தான் தொழில் நிமித்தம் எதையோ தேட, வேறெதுவோ கடித்தது போலிருந்தது. இரண்டு ஊசிகளால் குத்தியது போலொரு வடு. ரத்தம் துளிர்த்தது. அப்போது எதுவுமே தோன்றவில்லை. முழுமனமும் திருட்டில் கரிசனம் கொண்டிருந்தது. ஜன்னல் கம்பியை வளைத்து உள்ளே இறங்கி திருடிவிட்டு வீட்டில் வந்து படுத்துக்கொண்டேன். இலேசாகத் தலைசுற்றுவதுபோலிருந்தது. பாம்பைப் பற்றிய எண்ணமே மனதில் ஏற்படவில்லை. அப்படியே தூங்கி விட்டேன். காலையில் எழுந்தபோது கடிபட்ட இடம் முழுவதும் நீலம் பாரித்திருந்தது. சிறு வயதிலேயே கடிவாளம் இல்லாத பயணமல்லவா? இதையெல்லாம் யார் கவனிக்கப் போகிறார்கள்? செத்தால் சாகட்டும் என்பதுபோல்தான். விஷமும் வேலைக்காகவில்லை. அன்றிருந்த மனோபாவம் இதுதான். இந்தச் சம்பவம் இப்போது நடந்திருந்தால் செத்திருப்பேன் என்று தோன்றுகிறது. வாகன விபத்துகளும் இதற்குப் பிறகு நடந்தவைதான். நான் நினைக்கிறேன்: மனம் சிதைவுறும்போது கவனமும் சிதைந்து விடுகிறது. முதல் விபத்து, 1996 - '97 காலகட்டத்தில் நடந்தது. கொல்லம், பரணிக்காவு கோயிலிலிருந்து மாடன்நடை என்ற இடத்திற்குப் போய்ச் சேருமிடம். சாரம் மழை பெய்துகொண்டிருந்தது. ஸ்டேஷனில் வேலை பார்க்கும் காலம். வாடகை சைக்கிளில் போய்க்கொண்டிருந்தேன். நேஷனல் ஹைவே திருப்பில் வேகமாகத் திரும்பினேன். பிரேக் பிடிக்கவில்லை. வேகமாக வந்த ஒரு காரில் மோதி உச்சி மண்டை உடைவதுபோல் ரோட்டில் விழுந்தேன். காரில் வந்தவனே

ஆஸ்பத்திரியில் சேர்த்தான். தவறு என்மீது என்பதால் புகார் கொடுக்கவில்லை. தலையில் ஐந்தாறு தையல்கள். தலை தூக்க முடியாமல் ஆஸ்பத்திரியில் ஐந்தாறு நாட்கள் கிடந்தேன்.

விபத்து எண் இரண்டு: நான் பெந்தெகொஸ்தேவில் சேர்ந்த ஒரு ஓண விடுமுறையின்போது நடந்தது. ஒருநாள், நண்பன் பிரசன்னன் வந்து இன்னொரு நண்பனான நஸீரின் உடலில் ஒரு பகுதி தளர்ந்துபோன தகவலைச் சொன்னான். நஸீருக்கு முப்பத்தைந்து வயதுதானிருக்கும். இரத்த அழுத்தம் தலையில் ஏறி, உடலின் ஒரு பகுதி செயலிழந்து விட்டது. போய்ப் பார்க்க வேண்டும் என்றிருந்தபோது இன்னொரு நண்பன் பைக்கில் வந்தான். நான் கொண்டுபோய் விடுகிறேன் என்றான். ஆள் கொஞ்சம் குடித்துமிருந்தான். வண்டியை நான் ஓட்டுகிறேன் என்றான் பிரசன்னன். போதையிலிருப்பவன் ஒருபோதும் இதற்கு சம்மதிக்கமாட்டான். மூன்று பேரும் ஒரே பைக்கில் புறப்பட்டோம். தட்டாமலை நேஷனல் ஹைவேயில் ராங் சைடில் வண்டியை ஏற்றி, அதுபாட்டுக்கு வந்துகொண்டிருந்த ரெஜிஸ்ட்ரேஷன் நம்பர் ஜெ. ஐந்து காரில் மோதிக் கொடுத்தான். விழுந்தெழுந்துப் பார்க்கும் போது பைக்கை ஓட்டியவனின் கால் ஒடிந்து தொங்குகிறது. எனக்கொன்றும் ஆகவில்லை என்றுதான் நினைத்தேன். கால் கொஞ்சம் மரத்ததுபோல் மட்டுமிருந்தது. ஆனால், காலைத் தரையில் ஊன்ற முடியவில்லை.

காலில் கம்பியெல்லாம் பிணைக்கப்பட்டு நான்கு மாதங்கள் திருவனந்தபுரம் மெடிக்கல் காலேஜில் கிடந்தேன். மகன் தொழிலையும் விட்டு விட்டு இந்த நான்கு மாதங்களும் என்னுடனேயே இருந்தான். ஒன்றுக்கும் இரண்டுக்குமே எழ முடியாத நிலைமை. எல்லாமே பாத்திரத்தில்தான். மகன் அந்தப் பகுதிகளை டெட்டால் ஊற்றித் துடைத்து விடுவான். இதற்காக, சில சீரியல் பணிகளையும் அவன் இழந்தான். ஆஸ்பத்திரியில் கிடைக்கும் பாலும் பிரட்டுதான் உயிராதாரம். அவ்வளவு வறுமை. நான்கு மாதங்கள். என் மகன் பாசக்கயிற்றால் என்னைக் கட்டி வைத்திருந்தான். பாவங்களின் எலும்புக் குவியலை மட்டும் சம்பாதித்து வைத்திருந்த என்னை. அவப்பெயரைத் தவிர, அவனுக்கென்று எதையும் நான் சேர்த்து வைக்கவில்லை. என் மனைவி இறந்த பிறகு, உம்மாவின் உறவினர்களுடன் அவன் திருவனந்தபுரத்தில் வளர்ந்தான். நான் கொல்லம் போலீஸ் ஸ்டேஷனில் உதவியாளன். எங்களுக்கிடையே பெரிய அளவில் நெருக்கம் கிடையாது. உண்மையில், அவனுடைய முகத்தை ஏறிட்டுப் பார்க்கவும்கூட எனக்கு அருகதை கிடையாது. ஆனால், அவன் செய்வதை எல்லாம் பார்த்தால் தப்பித்தவறி நான்

ஏதாவது நல்லது செய்துவிட்டேனா என்று தோன்றும். அப்பாவும் மகனும் அதிகமாகப் பேசியதுகூட கிடையாது. உனக்கு ஏதாவது தேவைப்பட்டால் மம்மியிடம் கேள் என்றுதான் சொல்லியிருக்கிறேன்.

அவன் சொன்னான்: "டாடி, இனி நல்லதோ கெட்டதோ நீங்க என்கூட இருந்தா போதும். பட்டினி கிடக்குறதா இருந்தால் சேர்ந்துக் கிடப்போம். ஏதாவது இருந்தால் சேர்ந்து சாப்பிடுவோம்."

வாழ்க்கையில் முதன்முதலாக நான் மற்றவர் கட்டுப்பாட்டின்கீழ் இருக்கிறேன் என்றால் அது என் மகனுடன்தான். இதுகூட ஒரு சுகம்தான். அவனுக்கு மனைவியும் மூன்றரை வயதில் குழந்தையும் இருக்கிறார்கள்.

வாழ்க்கையில் மூன்றாவது விபத்து, திருவனந்தபுரத்தில் வைத்து நடந்தது. இவ்வளவு காலமும் தலைநகரில் திருடித் திரிந்த பிறகும் எதுவும் நேரவில்லை என்றால் கேட்க நன்றாகவா இருக்கும்? பாளையத்தில் ஒரு பெரிய நாண்வெஜிட்டேரியன் ஓட்டல் இருக்கிறது. என்னுடைய உறவினரின் ஓட்டல்தான். அழகான பெயர். அதைச் சொல்ல வேண்டாமே. திருடனின் உறவினர் ஓட்டல் என்ற அபகீர்த்தி அதற்கு வேண்டாம். என் மைத்துனரின் மைத்துனர்தான் முதலாளி. தேவைக்கு ஏதாவது பணம் கேட்டால் தருவார். பதிலுக்கு நான் அங்கே சர்வராக வேலை பார்த்தேன்.

முதல் மாடியிலிருந்து கீழே வந்தால் ஒரு சிறு பகுதியில் சமையலறை. இங்கே பாத்திரங்களும் இறைச்சி வெட்டும் மரக்குற்றியும் இருக்கும். நான் கொஞ்சம் குடித்திருந்தேன். நான்தான் அன்றைய சமையல் சூப்பர்வைஸர். இரண்டு பெண்களும் உதவிக்கு வருவார்கள். அவர்கள் ஒரு குழம்பு வைத்து குழப்பி வைத்திருந்தார்கள். படியேறிக் கொண்டிருந்த நான் இதைப் பற்றி எதையோ சொல்வதற்காகத் திரும்பினேன். அப்படியே நெஞ்சடிக்க வந்து மரக்குற்றியின்மீது விழுந்து, கொஞ்ச நேரத்திற்கு மூச்சு பேச்சில்லாமல் கிடந்தேன். ஆட்டோவில் மெடிக்கல் காலேஜிக்குக் கொண்டு போனார்கள். கேஷுவாலிட்டியில் சொன்னார்கள்: ஐந்து நிமிடம் லேட்டாகியிருந்தால் ஆள் குளோசாகி இருப்பார். மெதுவாகப் போகும்படி ஆட்டோகாரனிடம் நான் சொன்னேன். வார்த்தைகள் வெளியில் கேட்கவில்லை. துரதிருஷ்டவசமாக, வழியில் போக்குவரத்து இடைஞ்சல்கூட இல்லாமல் போயிற்று.

விலா எலும்பில் ஒன்றிரண்டு மடிந்து சுவாசகோசத்தை அழுத்திப் பிடித்திருந்தது. மூச்சுப்போக இயலாமல் அது அலறியது. அதற்குள்

அவர்கள் விலாப்புறத்தைக் குடைந்து டியூபை நுழைத்திருந்தார்கள். ஆக்ஸிஜன் தந்தார்கள். அவசரமாக ஆபரேஷன் செய்ய வேண்டும். ஏ பாஸிட்டிவ் ரத்தம் தேவை. மகன் கிடந்து ஓடிக்கொண்டிருந்தான். நண்பர்கள் உதவி செய்தார்கள். மெடிக்கல் காலேஜில் செல்வாக்கிருந்தால் வேலைகள் எளிதாக முடிந்து விடும். எனக்கேது செல்வாக்கு? விலையுயர்ந்த மருந்துகளை வெளியில் வாங்க எழுதித் தந்தார்கள். மகனால் என்ன செய்ய முடியும்? கடன் வாங்கி அவன் கஷ்டப்படும்போது என்னுடைய வக்கிரப் புத்தி வேலை செய்தது. பழைய காலமாக இருந்தால் ஹனுமார்போல், மெடிசன் பெயர் தெரியாதென்று, மெடிக்கல் ஷாப்பையே அடித்து மாற்றியிருப்பேன். மகன் பாவம், நண்பர்களிடம் கையேந்தி, கொஞ்சம் ரத்தம் ஏற்பாடு செய்தான். என்னுடைய கோபமெல்லாம் அந்த ஆட்டோகாரன்மீதுதான். எதற்காக அவன் இவ்வளவு சிரத்தை எடுத்து என்னைக் காப்பாற்றினான்? மற்றவர்களை வேதனைப்படுத்தியதும் ஏமாற்றியதும் அனுபவித்ததும் போதாதா? விலா எலும்பினிடையில் உறைந்த ரத்தத்தை டியூப் போட்டு, தொடர்ந்து ஐந்து நாட்களாக எடுத்தார்கள். வேதனையா? ஆகா, என்ன சுகம்? எனக்கு, கருத்த அந்தரின் நினைவு வந்தது. வேதனைக்கு மாற்று மருந்து. வேதனை என்றால் என்ன? கண்களை மூடிக்கொண்டு மனதை வேறு ஏதோ ஒரு உலகத்திற்குச் செலுத்தினேன். போதை மருந்து உட்கொண்டதுபோல்.

என்னைக் கவனித்துக்கொள்வதற்காக, மனைவியின் உறவினர்கள் ஆஸ்பத்திரிக்கு வந்தார்கள். எனக்குக் கோபம் வந்தது. சும்மாவேனும் கோபப்பட்டேன். மருந்து சாப்பிடவும் விருப்பமில்லை. உயிர் பிழைத்துக்கொண்டதில் ஏமாற்றமிருந்தது. மனைவியின் பெரிய அண்ணி, சுபைதா அக்கா பொறுமையுடன் சொன்னாள்: "மருந்தைக் குடி."

"வாழ்றதுக்கு எனக்கு விருப்பமில்லை" என்றேன்.

அக்கா சொன்னாள்: "அதை படைச்சவன் முடிவு பண்ணுவான். நீ யாரு அதை முடிவு பண்றதுக்கு?"

வாங்கிக் குடித்தேன். என்மீது அன்பு காட்டிய அனைவரும் முடிந்த அளவிலான வேதனைகளை அனுபவித்திருக்கிறார்கள். இந்த சுபைதா அக்கா உட்பட. என்மீதான நம்பிக்கையில் நான் கொடுத்த நகையை விற்றதற்காக இந்தப் பெண்மணி போலீஸ் ஸ்டேஷனுக்கும் வரவேண்டியதாயிற்று. களங்கமே இல்லாத இவர்கள் என்மீதும் எதற்காக அன்பு வைத்திருக்கிறார்கள். சுபைதா அக்காவிற்கு நான்கு பிள்ளைகள். அவர்களிலொருவனாகவே என்னையும் கருதுகிறாள். ஏன்? எனக்குக்

கோபம்தான் வருகிறது.

இன்றும் என்னுடைய ஏமாற்றம் தீரவில்லை. அப்போதே செத்திருக்கலாம். விசித்திரமான எவ்வளவு மரணங்கள் என்னைத் தீண்டிச் சென்றிருக்கின்றன. நான் விபத்தில் சிக்கிய என்னுடைய உறவினரான ஓட்டல் முதலாளி இறந்துபோனார். அம்மா, மெடிக்கல் காலேஜ் ஆஸ்பத்திரியில் கிடந்து புற்று நோயால் அவஸ்தைப்பட்டபோது நிறைய உதவிகள் செய்தவர். யாரும் கேட்டு இதைச் செய்யவில்லை. இவராகவே செய்தார். இவருக்கு நாகர்கோயிலிலும் ஒரு மனைவி இருந்தார். இது, வெளிப்படையான ரகசியம். சனிக்கிழமை தோறும் நாகர்கோயிலுக்குப் போய் திங்கட்கிழமை காலையில் திரும்பி வருவார். அவருடைய பிள்ளைகளுக்கு இது பிடிக்கவில்லை. மனிதனின் ஏதாவதொரு பலவீனத்தை முன் வைத்து அவனை வெறுக்கக்கூடாது. இதன் பின்னணியில் பெரும்பாலும் சுயநலம்தான் செயல்படும். பிள்ளைகள் ஓரளவுக்கு வளர்ந்ததும் தாய் தகப்பன்கள் சுயதேவைகளுக்காகப் பணம் செலவிடுவதுகூட அவர்களைத் தொந்தரவு செய்கிறது. தங்களுக்குச் சேர வேண்டிய பணமல்லவா?

இறப்பதற்கு நான்கு நாட்களுக்கு முன் இவர் தன்னுடைய நாகர்கோயில் மனைவியுடன் திருவனந்தபுரத்திற்கு வந்தார். அன்றுதான் தன்னுடைய முதல் மனைவிக்கு இரண்டாவது மனைவியை அறிமுகம் செய்து வைத்தார். முதல் மனைவி எதுவுமே சொல்லவில்லை. பரஸ்பரம் பார்க்க வேண்டுமென்ற ஆசை இருவருக்குள்ளும் இருந்திருக்கும். ஒருவருக்கொருவர் வெறுப்பும் கோபமும் கொண்டிருந்தாலும் மெல்ல இருவரும் ஐக்கியமாகி விட்டனர். இரண்டாவது மனைவியுடன் உறவினர் வீடுகளுக்கெல்லாம் போய் வந்தார். திரும்பவும் மனைவியை நாகர்கோயிலில் கொண்டுபோய் விட்டுவிட்டு வந்துப் படுத்தார்; இறந்தார். விசித்திரமான நிகழ்வு.

என் மனைவியின் அண்ணன் விளிஞ்ஞத்தில் வசித்து வந்தார். வழக்கமாக, வீட்டினருகிலுள்ள ஒரு குளத்தில் குளிப்பார். ஒருநாள், குளித்துக் கரையேறி தலை துவட்டிக்கொண்டிருந்தார். பக்கத்தில் நின்றிருந்த ஒரு தென்னை மரம் ஒடிந்து தலையில் விழுந்து, அந்த இடத்திலேயே இறந்தும் விட்டார். தலைவிதிகள் எவ்வளவு நுட்பமாக செயல்படுகின்றன.

பிறகு நடந்த ஒரு விபத்தில் என்னுடைய அக்கா இறந்துபோனாள். பாவம், சிறு வயதிலிருந்தே வேதனைகளைச் சுமந்து வாழ்ந்தவள். தான் அழைத்தது காதில் விழவில்லை என்பதற்காக அப்பா செவி மடலில்

அறைந்து சிறுவயதிலேயே அவளைச் செவிடாக்கினார். நன்றாகக் குடித்திருந்த, ஆஜானுபாகுவான அப்பா, தன்னுடைய பலத்தையெல்லாம் திரட்டி அடித்ததில் அக்காவின் ஒரு காது கிழிந்து விட்டது. இந்த அக்காவின் கணவர்தான் ஏட்டாக இருந்து எஸ்ஐயாக பதவி உயர்வு பெற்றவர். வாழ்க்கை முழுவதையும் பூஜையிலும் புனஸ்காரத்திலும் கழித்தவள். அத்தானுடன் கொஞ்ச நாட்கள் இவளுக்குப் பிணக்கமும் ஏற்பட்டிருந்தது. அத்தானுக்குக் குடிப்பழக்கமிருந்தது. இதன் காரணமாக பிள்ளைகளுடனும் பிணக்கம் ஏற்பட்டது. கொஞ்ச நாட்கள் வீட்டுக்கே வராமலிருந்தார்.

என்னுடைய வாழ்க்கை இப்படியாகி விட்டதால்தானோ என்னமோ, மற்றவர்கள் பரஸ்பரம் வெறுத்து வாழ்வதைக் கண்டால் மனம் பொறுப்பதில்லை. இதுவல்ல வாழ்க்கை. பிணக்கம் என்பது இழுத்துப் பிடித்து வைத்திருக்கும் ஒரு ரப்பர் வளையம். நாளுக்கு நாள் இலகுத்தன்மை அதிகரிப்பதுடன் கடைசியில் அறுந்தும் விடலாம். பிடியை ஒருவர் விட்டுவிட்டால் முன்பிருந்ததுபோலாகி விடும். சில நேரங்களில் நடுநிலையாளரின் தேவையும் ஏற்படும்.

நான் ஜெயிலிலிருந்து வெளிவந்ததும் சின்னக்கடையில் வைத்து இதை அறிகிறேன். 1995 ஏப்ரல் மாதம். அத்தானுக்கு திருவனந்தபுரம் நந்தவனம் ஏஆர் கேம்பில் பணி. அன்று அவர் எஸ்ஐயாக இருந்தார். நான் ஏஆர் கேம்புக்குச் சென்றேன். நமக்கு ஏது கேம்ப். என்னைக் கையாளாத போலீஸ் கேம்ப்களா? யூனிஃபாமிலிருந்த அத்தானைக் கூப்பிட்டுப் பேசினேன். எங்களுக்குள் எதையும் பேசுவதற்கான உரிமை இருந்தது.

நான் கேட்டேன்: "நாய்க்குட்டி போடுறதைப்போலதான் மனுஷனுமா?"

"விஷயத்தைச் சொல்லுடா" என்றார்.

"விஷயம், மண்ணாங்கட்டி. நீங்க வீட்டுக்குப் போறதில்லையாம்?"

"அது வந்துடா . . . மணியா . . ."

"அது வந்து எதுவாகவும் இருக்கட்டும்."

அத்தான் வந்தார். பிறகு, அவர்களுடைய வாழ்க்கையின் எந்தப் பிணக்கங்களுமில்லை. அத்தான் ஓய்வு பெற்றார். குடி அதிகமாகி இறந்தார். பென்ஷன் பணமும் நிறைய சொத்துக்களும் இருந்தன.

பத்திரங்களை பிள்ளைகளின் பெயருக்கு மாற்றுவது, பென்ஷன் சம்பந்தமான வேலைகள் என்று எல்லாவற்றையும் செய்து கொடுத்தேன். பிள்ளைகளுக்கு சிறு வயது. லட்சக்கணக்கில் பணமிருந்தது. அதில் ஒரு லட்சம் ரூபாயை நான் கடனாகக் கேட்டேன். வியாபாரம் செய்வதற்காகவென்று. அக்கா தரமறுத்து விட்டாள். எந்த உத்தரவாதத்தில் திருடனுக்குக் கடன் கொடுப்பது? எங்களுக்குள் பிணக்கம் ஏற்பட்டது. பிறகு, இங்கே வரும்போதெல்லாம் நான் இருந்தால் ஏதாவது தராமல் போக மாட்டாள். ஐம்பதோ நூறோ எடுத்து என் பக்கத்தில் எங்காவது வைத்துவிட்டுப் போவாள். பிள்ளைகள் எல்லாம் இன்று நல்ல நிலையில் இருக்கிறார்கள். சமீபத்தில், குண்டறையில் திருமணம் செய்து கொடுத்த மகளின் வீட்டுக்கு அக்கா போயிருந்தாள். மகனுடன் ஸ்கூட்டரில். அம்மா ஏறி உட்கார்ந்து விட்டாள் என்று நினைத்த மகன், ஏறிட்டியா என்று கேட்டிருக்கிறான். தெளிவாகக் காதில் விழாமலேயே ஆமா என்றிருக்கிறாள். ஆனால், ஏறி உட்கார்ந்து அவள் பிடிப்பதற்குள் வண்டியை அவன் முன்னால் எடுத்தான். பதற்றத்துடன் அக்கா பின்னால் சாய்ந்து, தலைக்குப்புற விழுந்தாள். போய்ச் சேர்ந்தாள். விதியின் விபரீதங்கள். அக்காவின் சாவு இப்படி நிகழ வேண்டுமென்பதற்காக என்றோ அவளுக்குக் காது கேட்காமல் செய்திருக்கிறது விதி. இதற்கான ஒரு கருவியாக அப்பாவைப் பயன்படுத்தியிருக்கிறது. வாழ்க்கையின் ஒவ்வொரு கணமும் ஏற்கனவே எழுதிய நியதிகளின் வழியே பயணம் செய்கிறது என்பது எவ்வளவு யதார்த்தம்.

ஒவ்வொன்றும் அதற்கே உரிய காலகட்டங்களில் மிகச்சரியாக நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. இதோ இந்தத் தன்வரலாறு எழுதப்படுவதற்காகக் கருதி வைத்த காலம், இதில் சேர்க்கப்படுவதற்கான என்னவெல்லாம் சம்பவங்களை நிகழ்த்தியிருக்கிறது. இதிலொரு கதாபாத்திரமாக வரும் மயக்க மருந்து சுகுவின் வாழ்க்கையைப் பற்றி நான் சொல்லிவிட்டுத் திரும்பி வரும்போது ரெயில்வே ஸ்டேஷனில் காலிழந்த சுகு நின்றுகொண்டிருந்தான்.

சிறுவயதில் ஊரை விட்டோடிய எங்களில் ஒருவன், என்னுடைய பால்ய நண்பன் பெயிண்டர் ராஜன் இந்தப் புத்தகத்தை எழுதி முடிப்பதற்குள் தூக்குப் போட்டு இறந்து போனான். நானும் இதன் ஆசிரியரும் நண்பர்கள் சந்துவும் கிருஷ்ணனுமாக ராஜனைப் பார்க்கப் போயிருந்தோம். கண்ணுக்கெட்டாத தூரம்வரை பரந்து விரிந்துக் கிடந்த வயல்வெளி. நெல் விவசாயத்தை ஒதுக்கிவிட்டு பயிர் செய்த தென்னை மரங்களும் வண்டுப் பிடித்து நசித்து நாரணக்கல்லாகிக்[16] கிடந்தன. சிலரது வாழ்க்கை போல்.

அதன் நடுவில் சாய்ந்து நின்றிருக்கும் ஒரு ஓலைக்குடிசை. ராஜன் இங்குதான் வசித்து வந்தான். சமீபத்தில் அவன் தூக்குப்போட்டுச் செத்ததாகக் கேள்விப்பட்டேன். பிறகு, ரவிபிள்ளை. இந்த வரலாற்றை எழுதிக்கொண்டிருந்த ஒருநாள், ஆசிரியரின் வீட்டுக்குச் சென்றபோது, ரவிபிள்ளை டிரெயினில் அடிபட்டு இறந்துபோய்விட்டதாகச் சொன்னார். விதி என்னைக் கத்தியால் குத்தச் செய்த அந்த உறவினரும் இறந்துபோய் விட்டார். பரஸ்பரக் காரணங்களற்ற பகைவர்கள். மரணத்தின்முன் எல்லாமே அஸ்தமனமாகி விடுகின்றன.

இதெல்லாம் போதாதென்று கடந்த நவம்பர்[17] மாதத்தில் நடந்த ஒரு சம்பவம்: பதினெட்டு வருடங்களுக்குப் பிறகு, மீண்டும் என்னை போலீஸ் பிடித்தது. கடைசியாக, 1988இல் பிடிபடும்போது மணியன்பிள்ளை முப்பத்தெட்டு வயதான ஒரு இளைஞன். இன்று உடல் ரீதியான இயலாமைகளும் வறுமையில் மேலும் முதுமையடைந்த ஐம்பத்தாறு வயதுக்காரன். இரண்டு போலீஸ்காரர்களாக வந்து என்னை வீட்டிலிருந்து அழைத்துச் சென்றார்கள். ஆற்றிங்கல் போலீஸ் சரகத்திற்குட்பட்ட ஒரு பகுதியில் நடந்த சில கோயில் திருட்டுகளில் எனக்கும் பங்கிருப்பதாகச் சொல்லி. ஒரு வருடத்திற்கு முன்பு நடந்த கோயில் திருட்டில் எனது விரலடையாளம் இருந்ததாம். ஆற்றிங்கல் எஸ்ஐ அனில்குமார், என் உள்ளங்காலில் அடித்தார். நான் சொன்னேன்: "அதான் இருக்குற வழக்குகளை தலையில வெச்சிக் கட்டப் போறீங்களே? அப்புறம் தேவையில்லாம எதுக்காக அடிக்கிறீங்க?" ஒன்பது வழக்குகள் தலையில் விழுந்தன. என்னை வீட்டிலிருந்து அழைத்துச் சென்றதற்கு ஊர்க்காரர்கள் சாட்சி. தகவல் அறிக்கையில் நான் ஒரு வீட்டின் அருகில் பதுங்கியிருந்தபோது பிடிபட்டதாகச் சொல்லப்பட்டிருந்தது. ஏதோ ஒரு ஸ்கூட்டரிலிருந்து ஐம்பது ரூபாய் திருடினான்; ஒரு காரிலிருந்த வெள்ளி ஜெபமாலையைத் திருடினான்; ஒரு கோயிலில் தங்கப் பொட்டுகளைத் திருடினான்; இந்த இடத்தில் திருட முயன்றான்; அந்த இடத்தில் திருட முயன்றான் என்றெல்லாம் வழக்குகள் சுமத்தப்பட்டிருந்தன.

திருடன் என்ற அடையாளத்திலிருந்து நானும் குடும்பமும் மெல்ல விடுபட்டுக் கொண்டிருக்கும்போது மீண்டும் உறுதிப்படுத்தப்படுகிறது. திருடன், திருடன், திருடன். இந்த சுயசரிதைக்கும் இப்போது நான் பிடிபட்டதற்கும் ஏதோ ஒரு தொடர்பு . . . சுயசரிதையின் சில பகுதிகள் இரண்டு பிரபல மலையாள வெளியீடுகளில் பிரசுரமானது. ஒன்றில் தொடராக வந்து கொண்டிருக்கும்போதுதான் இந்தக் கைது நடவடிக்கை. இதில் எந்த உள்நோக்கமும் கிடையாதென்று எப்படி நம்புவது?

என்னுடைய நண்பர்களுக்கும் இந்த சந்தேகமிருக்கிறது. திருட்டை நிறுத்திவிட்டதாக சொன்னானே . . ? இவன் இப்படித்தான். எல்லோரும் அறிய விரும்புவது நான் செய்தேனா இல்லையா என்பதுதான். எதுவாயினும் இந்த சுயசரிதையை எழுதிக்கொண்டிருக்கும்போது திருட்டில் ஈடுபட்டான் என்று சொல்லாதது அதிர்ஷ்டம். ஒரு வருடத்துக்கு முன் என்றல்லவா சொல்கிறார்கள். திருடனை யார் நம்புவார்கள்? எப்படி நம்ப முடியும்? சாகும்வரைக்கும் சந்தேகத்துக்குரிய ஜென்மம். ஊடகங்களுக்கு போலீஸ் சொல்வதுதான் செய்தி. இனி, என்னைத் தூக்கில் போட்டால் அது செய்தி. விடுதலை செய்தால் கொட்டி முழக்குவதற்கு எதுவுமில்லை. ஒருவேளை அது பிரசுரத் தகுதியற்ற விஷயமாகவும் இருக்கலாம். மக்களின் மனங்கள் திருடனைக் குறித்த நினைவுகளை அப்படியே பாதுகாக்க விரும்புகின்றன. வெகுஜன ஆர்வங்களைப் பாதுகாக்கும் வணிகப் பொறுப்பு ஊடகங்களுக்கு.

இந்தப் புத்தகத்தின் மறுபதிப்பு வெளிவருமென்று நினைக்கிறேன். என் மனப் புழுக்கத்திலிருந்து ஒழுகிய ரத்தம் இது. இதில் நிரவிக்கிடப்பவை, குரல்வளையைக் கீறி வெளிவந்த கொடிய வேதனைகள். நீங்கள் இதில், சிலவற்றைப் படித்துச் சிரிக்கும் அதே நேரத்தில் இப்படியெல்லாம் நிகழ்ந்துபோனதன் வேதனைகளையே நான் அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். ஒரு ஜென்மம் முழுவதும் இது தொடருமா? அடுத்தவன் பொருளைப் பறிப்பதில் ஆர்வமுள்ள அனைவரும் இதைப் படித்திருக்க வேண்டும். வழி தவறிப்போக இருக்கும் இளைஞர்கள் என்னுடைய இந்தத் தோல்விகளின் குமுறல்களைப் புரிந்துகொள்ள வேண்டும். களவென்பது கற்று மறக்கும் விஷயமல்ல, முதல் வீழ்ச்சியே மிகப் பெரிய பாதாளத்தில்தான் முடியும். கரையேற முயற்சிக்கும்போதெல்லாம் போலீசும் சமூகமும் மேலும் உதைத்துத் தள்ளும். இதற்கான அருகதைதான் எங்களைப் போன்றவர்களுக்கு. ஏதாவதொரு காலத்தில் நான் வீரியத்துடன் திரும்பி வருவேன் என்றெல்லாம் சொல்வதற்கில்லை. அதைச் சொல்வதற்கு நான் யார்? சமூகத்தின் சகலப் பிரிவினருடையவும் பொதுக் கருத்து, திருடன் என்றால் ஜெயிலில் கிடக்க வேண்டிய ஜென்மம் என்பதுதான். உலகில் எந்த நாயும் அவனுக்காகக் குரைக்காது.

சில வழக்குகளில் நான் விடுதலை செய்யப்பட்டேன். இப்போது, வேறு சில வழக்குகளில் மாண்புமிகு நீதிமன்றத்தின் கண்காணிப்பில், வெளியிலிருந்து விசாரணையை எதிர்கொண்டு வருகிறேன். இதில் நான் தண்டிக்கப்பட்டாலும் விடுவிக்கப்பட்டாலும் மறுபதிப்பில் இந்த வழக்கு

சம்பந்தமான உண்மைகளைச் சொல்வேன். இப்போதைய வழக்குகளுக்கும் இந்த சுயசரிதைக்கும் தொடர்பிருக்கிறது. அதுவரைக்கும் இந்தப் பாவி ஜென்மம் விடைபெறுகிறது.

---


16. ஒரு உதாரணச் சொல்.
17. நவம்பர்: 2006.

